எட்டாவது ஒன்பதாவது பத்துக்களும், பத்தாம் பத்தில் 389- முதல் 478முடிய பக்கங்களும் ஸ்ரீகோமளாம்பா அச்சுக்கூடத்திலும், 317முதல் 388 (பி) முடிய பக்கங்கள் யதார்த்தவசனீ அச்சுக்கூடத்திலும், அநுபந்தங்களில் 38முடிய பக்கங்கள் ஸ்ரீகோமளாம்பா அச்சுக்கூடத்திலும், 39வது பக்கம் முதல் ஜுனார்த்தன பிரிண்டிங் ஓர்க்ஸ் லிமிடெட் கம்பெனியிலும் அச்சிடப்பட்டன.

# முகவுரை.

ஸ்ரீரங்கம் ஆண்டவன் என்கிற ப்ரஸித்தியுள்ள அடியேனுடைய ஆசார்யரான ஸ்ரீமத் வேதாந்தராமாநுஜமஹாதேசிகன் திருக்குடந்தையில் எழுந்தருளியிருந்தபோது, ஸ்ரீ தேசிகன் அருளிச்செய்த ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தின் முதல் பாகத்துக்குத் தமிழில் சுருக்கமும், ஸ்ரீ கீதாபாஷ்யத்துக்குத் தமிழ்வ்யாக்கியானமும், எளிதான நடையில் எழுதப்பட்டு அச்சிடப்பட்டன. பிறகு, அந்த ஸ்வாமியின் அநுக்ரஹத்தாலே அதே தமிழ்நடையில் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்திலிருக்கும் அதிகார ஸங்க்ரஹப் பாட்டுக்களுக்கும், ச்லோகங்களுக்கும், அதில் உதாஹரிக்கப்பட்ட ப்ரமாண வசனங்களுக்கும் உரை எழுதப்பட்டு அச்சிடப்பட்டது. நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழிக்கு எல்லாருக்கும் உபயோகப்படும்படியான உரை இல்லாமலிருந்தது ஒரு குறையாயிருந்தது. திருக்குடந்தை ஸ்ரீமான் உ. வே. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸபாட்டாசாரியரையும், அடியேனையும் கொண்டு ஆசார்யர்கள் ஒரு வ்யாக்யானத்தை எழுதி அந்தக் குறையையும் தீர்த்தார்கள்.

2. கங்காதரபுரத்திலிருக்கும் அட்வகேட் ஸ்ரீமான், என். ராஜகோபாலாசாரியர் இதை அச்சிட, பவ-ஹ ஆவணி மாதத்தில் ஆரம்பித்தார். ஐந்தரைப் பக்கங்கள் ஸ்ரீ கோமளாம்பா அச்சுக்கூடத்திலும், நாலரைப்பக்கங்கள் யதார்த்தபோதினி அச்சுக்கூடத்திலும், அவதாரிகையும், அநுபந்தங்களும் வேறு இரண்டு அச்சுக்கூடங்களிலும் அச்சிடப்பட்டன. இதுவும் ஆசார்யர்களின் அநுக்ரஹத்தால் இந்த வருஷம் கார்த்திகை மாதத்தில் நிறைவேறியது.

3. இதை அச்சிடுவதற்கு உபகாரம் செய்த மஹான்கள்:—
(1) ஸ்ரீநிவாஸபாட்டாசாரியர் உரையை அச்சுக்கூடங்களில் கொடுத்து வாங்கிப் பலதடவை ப்ரூபுகளைத் திருத்தி இன்னும் இதைச்சேர்ந்த வியாபாரங்களைச் செய்து, எல்லா ப்ரயாஸங்களையும் எடுத்துக் கொண்டார்.

(2) ஒப்பிலியப்பன் ஸந்நிதி வித்வான் ஸ்ரீ- உ-வே- நவநீதம் கிருஷ்ணமாசாரியர், பூர்வாசாரியர்களின் வ்யாக்யானத்துடன் புரூபை ஒத்துப் பார்த்து வேண்டிய திருத்தங்களைச் செய்தார்,

கும்பகோணம் விளக்குடி, ஸ்ரீமான். உ. வே. ஸாரநாதாசார், இதே வியாபாரத்தைச்செய்து அகராதிகளையும், பிழைதிருத்தங்களையும் எழுதினார். நேடிவ்ஹைஸ்கூல் தமிழ்பண்டிதர் மகா-ா-ஸ்ரீ ஸ்ரீநிவாஸய்யர் அவர்கள் பாட்டுக்களின் சீர்பிரித்ததையும், இலக்கணக் குறிப்புகளையும் பார்த்தார்.

(3) மஹாபாரதத்தைத் தமிழ் செய்து 'பாஷாபாரத துரந்தர' என்கிற பிருதைப்பெற்ற தமிழ்ப் பண்டிதரான ஸ்ரீமான் உ. வே எம்.வி. ராமாநுஜாசாரியர் சில திருவாய்மொழிகள் தவிர மற்றவைகளை முழுவதும் படித்து, கவர்ன்மெண்டாரால் பிரஸித்தப்படுத்தப்பட்ட லெக்ஸிகனுக்கும் தமிழிலக்கணத்துக்கும் விரோதமில்லாமலிருக்கும்படியும், வசனங்கள் ஸந்தேஹங்களில்லாமல் எளிதாய் பொருள் விளங்கும்படியும் இருப்பதற்கு வேண்டிய திருத்தங்களைச் செய்தார். இதைத் தம்முடைய கிருஹத்திலிருந்துசெய்யாமல் அடியேனிடம் வந்து ஒவ்வொரு திருத்தத்துக்கும் காரணத்தைக் காட்டி அடியேனுக்கும், ஸ்ரீநிவாஸபாட்டராசாரியருக்கும் தமிழில் நல்ல அறிவை உண்டுபண்ணினார்.

இந்த மஹான்கள் செய்த உபகாரத்தை இந்த முகவுரை மூலமாய் எல்லாருக்கும் தெரிவிப்பதைத் தவிர, பதில் உபகாரம் என்ன செய்வது என்பது தோன்றவில்லை.

(4) இந்த மஹான்கள் இவ்வளவு ப்ரயாசைப்பட்டும், சில குற்றங்கள் இந்தப் புஸ்தகத்திலிருக்கலாம். எதையும் செய்யச்சக்தியுள்ள எம்பெருமான்தான் ஒரு தோஷமுமில்லாமல் எழுதத்தகுந்தவன். பெரியமனதையுடையவர்கள் குற்றங்களைத் தள்ளி இதை அங்கீகாரம் பண்ணுவர்கள் என்று நம்புகிறேன். லாபம் ஸம்பாதிக்க இந்த வியாபாரம் செய்யவில்லை. இதை எல்லாரும் படித்து ஆழ்வார் எம்பெருமானை அனுபவித்ததை உள்ளபடி அறிந்து தாங்களும் அவனை அனுபவிக்க வேண்டிய ப்ரயத்னங்களைச்செய்வார்களென்பது அடியேனுடையவும் சொன்னமஹான்களுடையவும் மனோரதம். இதை ஆசாரியர்கள் தலைக் காட்டி வைக்கவேண்டும்.

திருக்குடந்தை
யுவஹுகார்த்திகைமீ 28உ

**வி. கே. ராமாநுஜதாஸன்.**

# கடைசி ஸம்புடத்தின் விஷயஸூசிகை.



எட்டாம்பத்து. பக்கம்.



ஒன்பதாம்பத்து



பத்தாம்பத்து

அநுபந்தங்களின்விஷயஸூசிகை.

பக்கம்

# 3-வது ஸம்புடத்தின் பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 6 | சொல்லுகிறுயே | சொல்லுகிறுயோ |
| ,, | 21 | ஒசை | ஓசை |
| 9 | 13 | கூப்பிடிகிறீரே | கூப்பிடுகிறீரே |
| 29 | 1 | போனன் | போனேன் |
| 33 | 12 | பிரிந்து | பிரித்து |
| 59 | 5 | முடியாதவனுமான | முடியாதவனுமானவன் |
| 86 | 24 | மகழ்வார் | மகிழ்வார் |
| 102 | 17 | அடிக்கமுடியாத | அடக்கமுடியாத |
| 111 | 9 | விடுகிறவள் | விடுறகிவன் |
| 124 | ,, | குறையில் | குறையில்லை |
| 132 | 15 | மனதையுடையவர்களாக | மனதையுடையவளாக |
| 134 | 30 | களானுண்டான | களாலுண்டான |
| 150 | 1 | வியன்ழு | வியன்மூ |
| 163 | 24 | (8-பாட்டு) | (9-பாட்டு |
| 168 | 21 | பெண்டீர் | பெண்டிர் |
| 172 | 28 | தருந்தவர்களாவை | தருந்தவர்களாகவை |
| 202 | 22 | கூட்டட்கள் | கூட்டங்கள் |
| 204 | 5 | சொரேல் | சோரேல் |
| ,, | 17 | பேர்களே | போர்களே |
| ,, | 28 | யள்ளவனு | யுள்ளவனு |
| 207 | 20 | தோல் | தொல் |
| 210 | 11 | ஸ்ரீஹருதகரோ | ஸ்ரீஹருதாகரோ |
| 211 | 16 | சடர் | சுடர் |
| 214 | 29 | பேஸதயேன் | பேஸதயேன் |
| 221 | 13,14 | மதஸதயுடைய | மதத்தையுடைய |
| 229 | 7 | துன்பப்டுகின்றன | துன்பப்படுகின்றன |
| 229 | 30 | நான் ன என்ன | நான் என்ன |
| 235 | 12 | வெளிபப்டுவதை | வெளிப்படுவதை |
| 237 | 20 | என்பதுக் பத்து | என்பது பத்து |
| 253 | 5 | திருமூழிகளத்து | திருமூழிக்களத்து |
| 258 | 16 | காந்தியையடையவரும் | காந்தியையுடையவரும் |
| 282 | 32 | பாவியென் | பாவியேன் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 284 | 11, 12 | கண்க்கு | கண்ணுக்கு |
| ,, | 31 | பதைப்பதை | பதை |
| 288 | 13 | மாடுகள் | மாடுகள் |
| 292 | 2 | காரியங்களையும் | காரியங்களையும் |
| 294 | 10 | கொண்டிக்கிற | கொண்டிருக்கிற |
| 300 | 3 | கோபிகலைகள் | கோபிகைகள் |
| 324 | 9 | வம்மினஞ் | விம்மின்னஞ் |
| 340 | 33 | ஸம்ஸாரத்தையையும் | ஸம்ஸாரத்தையும் |
| 359 | 17, 18 | கெட்டிக்கிறது | கெட்டிருக்கிறது |
| 369 | 20 | உபதேசத்தை | உபதேசத்தை முடிக்கிறார் |
| 372 | 13 | மடப்பதையுடைய | மடப்பத்தையுடைய |
| 376 | 13 | மதுஸூதனன் | மதுஸூதனன் |
| 401 | 20 | பொடவருகிற | போடவருகிற |
| 420 | 8 | ஸம்பந்த்ததால் | ஸம்பந்தத்தால் |
| 432 | 10, 11 | சூழப்ப்பட்ட | சூழப்பட்ட |
| 435 | 27 | பிரகாஷிக்கிற | பிரகாசிக்கிற |
| 446 | 4 | ஸூரியளும் | ஸூரிகளும் |
| 452 | 14 | பாராராமல் | பாராமல் |
| 458 | 18 | யுண்டிட | யுண்டிட் |

## அநுபந்தங்கள்.

| | | | |
| --- | --- | --- | --- |
| 3 | 30 | மாற்றி | பாற்றி |
| 7 | 8 | மேற்ச் | மேற் |
| ,, | 23 | வது, உயிர் | வது, தனிக்குற்றெழுத்தல்லாத உயிர் |
| 9 | 1 | உயிராயும் | உயிராய் |
| 10 | 5 | இரட்டித்தது | இரட்டித்தன. |
| ,, | 9 | மகரம் போய் | மகரம் பெரும்பாலும் போய் |
| 12 | 2 | வருகிற | கிற்கிற |
| 13 | 3 | உடமை | உடைமை |
| ,, | 24 | புணர்ச்சிவிதி | புணர்ச்சி முதலியவை |
| 15 | 8 | மல் ண | மல் ன் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 18 | 4 | மருல், | மருல். |
| ,, | 6 | யாய் பிரா | யாய்ப்பிரா |
| ,, | 11 | மறைவிகுதி ஆ | மறை இடை நிலை ஆ |
| 19 | 10 | மை, மே, | மை, மே, து |
| ,, | 11 | உண்ணுமே | உண்ணுமே, உண்ணுது. |
| 20 | 11 | எழுந்திருக்கிறன் | எழுந்திருந்தான் |
| 20 | 15 | வைபார் | வைப்பார் |
| 21 | 15 | படிக்கவல்லை | படிக்கவரவில்லை |
| 22 | 24 | செம்மையுடைய | செம்மையாகிய |
| 25 | 20 | இறு, உறு. | உறு. |
| 65 | 28 | பெல்லா | பொல்லா |
| 67 | 15 | மற்று | முற்று |
| 71 | 10 | பெயரெச்ச | பெயரெச்சம் |
| 75 | 29 | வந்த | வந்து |
| 78 | 6 | கடந்த | கடைந்த |
| 83 | 25 | வளர்ந்தவறும் | வளர்ந்தவாறும் |

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேஸிகாய நம: ||
ஜ்ஞாநவைராக்யநிதயே ஸேவதயே
ஸ்ரீமதே வேதாந்த ராமாநுஜமஹாதேஸிகாய நம: ||
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.
திருக்குருகைப் பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# எட்டாம் பத்து.



ஸ்வாநிஷ்டம் ப்ராந்தம் ஸ்வயமபிஜிஹீர்ஷுர் ஜநவதி விஹா
ஸக்தம் பாஹ்யே ப்ரஸமயிதுகாம: க்ரமவஸாத் |
நிஜேச்சாஸம்ஸித்தஸ்திதிவிதிவிகல்பஸ்திதிமத:
ஸ்ரீதேவாதேவீம் வஸத்ருஷ்டமஸேத ||௧௭||

ஸர்வேசுவரனை எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவர்களுடைய அநிஷ்டங்களைத் தானாகவே போக்க ஆசையுள்ளவனாயிருக்கிறான் என்று சொல்லப்பட்டது. ஆனபோதிலும் தன்னைத்தவிர வேறுவிஷயங்களில் அவர்களுக்கு இருக்கும் ஆசையை காலக்கிரமமாக போக்கஆசையுள்ளவனாய், மூன்றுவிதமான சேதநர்களுடையவும், மூன்றுவிதமான அசேதனங்களுடையவும் ஸ்வரூப ஸ்திதி பிரவிருத்திகள் தன்னுடைய ஸங்கல்பத்தினால் ஏற்பட்டவைகளாயிருந்தாலும், ஆச்ரிதர்களுடைய இச்சாபேதத்திற்கு வசப்பட்டவனாய் இருக்கிறானென்று ஆழ்வார் எட்டாம்பத்தில் சொல்லுகிறார். (17)

திதீக்ஷாயாம் தீப்த்யா ப்ரணமணி நிஸர்க்காஸ்ஸம:
ஸ்விஷ்டே காம்ய: ஸ்ரீதவிஹிதவஸ்த்ராவிஹஸ்வ: |
ஸ்வாபேக்ஷாஸாபேக்ஷ: ஸ்விதரணஸக்ஞா ஹ்ருதிர தம:
ஸ்வாதாஸ்யம் தநிஷ்டாம் தவயிமேஹி க்ஷபயது || ||௧௮||

இந்தப் பத்தில் எம்பெருமான் தன் பக்தர்களுடைய மனதுக்கு ஒத்துநடக்கிறவன் என்பதுபத்துக்காரணங்களாலேசொல்லப்படுகிறது. அவைகளாவன:— (1) பார்க்க வேண்டுமென்று ஆசையுண்டானால், பார்க்கத் தகுந்தவனாயிருப்பது; (2) தன்

னைத் தவிர வேறு விஷயங்களில் பற்றில்லாதவர்களுக்கு ஸுலப ஞயிருப்பது; (3) தன்னைச் சேர்ந்தவர்கள் தன்னைவிட்டுப் பிரிந்திருக்கும்போது இனியவனுயிருப்பது; (4) தன்னைச் சேர்ந்தவர்களிடத்தில் பூர்ணமான விவபத்தை வைப்பது; (5) ஆச்ரிதர்கள் தன்னைக் கேட்பதை எதிர்பார்த்துக்கொண்டிருப்பது; (6) தன்னையே கொடுப்பதற்கு ஸந்நத்தனுயிருப்பது; (7) ஆச்ரிதர்களுடைய மனதில் இருப்பதில் பிரீதியுள்ளவனுயிருப்பது; (8) ஜீவன்கள் தனக்குக் கைங்கரியம் பண்ணத் தகுந்தவர்கள் என்பதைக் காட்டுவது. (9) ஜீவன் தனக்கே சேஷம் வேறொருவருக்கும் அன்று என்பதை நன்றுயறியும்படிச் செய்வது; (10) தனக்குச்சேஷமாயிருப்பதின் எல்லை நிலம் பாகவதர்களுக்குச் சேஷமாயிருப்பது என்பதைக் காட்டுவது. (18)

## முதல் திருவாய்மொழி.

அவ— கீழ்த் திருவாய்மொழியில் திருவாறன்விளையைப்பார்க்க வேணுமென்று ஆழ்வார் ஆசைப்பட்டார். அதுஉடனே கிடைக்காமையால் எம்பெருமானுக்கு இருக்கிறதாகச் சொல்லப்பட்ட வாத்ஸல்யம் முதலிய குணங்களுமில்லையோ என்று ஸந்தேஹப்படும்படி மனது கலங்கி, அவனை இந்தத் திருவாய்மொழியில் கூப்பிடுகிருர். இப்படியே அசோக வநத்திலிருந்த ஸீதையும், சக்கிரவர்த்தித் திருமகனுடைய குணங்கள் போயினவோ என்று ஸந்தேஹப்பட்டாள். அவள் சொன்னதாவது— அவன் எல்லாம் தெரிந்தவன் என்றும், செய்ததை மறக்காதவன் என்றும், இரக்கமுள்ளவன் என்றும், நல்ல நடக்கையுள்ளவனென்றும் பிரஸித்தமானவன். இப்போது என் பாக்கியக் குறைவினுல் இரக்கமில்லாதவனுக ஆனுன்— என்பது.

(எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.)

தேவிமா ராவார் திருமகள் பூமி
　　யேவமற் றமரராட் செய்வார்
மேவிய வுலக மூன்றவை யாட்சி
　　வேண்டுவேண் டுருவ நின்னுருவம்

பாவியேன் றன்னை யடுகின்ற கமலக்
கண்ணதோர் பவளவாய் மணியே
ஆவியே யமுதே யலைகடல் கடைந்த
வப்பனே காணுமா றருளாய். (க)

(ப - ரை) தேவிமார் ஆவார் - உனக்குத் தகுந்த தேவிகளாயிருக்கிறவர்கள், திருமகள் பூமி - லக்ஷ்மியும் பூமிதேவியும்; ஏவ-"நீ இதைச்செய்" என்று சொல்ல (அந்த காரியத்தை,) ஆள் செய்வார் - வேலைக்காரர்களாயிருந்து செய்கிறவர்கள், மற்று அமரர் - இவர்களைக்காட்டிலும் வேறான நித்தியஸூரிகள்; மேவிய-உன்னிடத்தில்பொருந்தின, உலகம்மூன்று அவை-அந்த மூன்று உலகங்கள், ஆட்சி-ஆளப்படுமவைகள்; வேண்டுவேண்டு-(அந்தந்த காலங்களில் உலகத்தை ரக்ஷிப்பதற்கு) வேண்டின, உருவம் - ரூபங்கள், நின் உருவம் - உன்னுடைய திவ்விய திருமேனிகள், பாவியேன் தன்னை - (உன் அழகுகளை அநுபவிக்கப்பெறாத) பாபத்தைப்பண்ணின என்னை, அடுகின்ற - சுடுகிற (துன்பப் படுத்துகிற) கமலக்கண்ணது - தாமரைப்பூ போன்ற திருக்கண்களையுடையதாயும், ஓர் பவளவாய் - ஒப்பில்லாத பவளம் போன்ற திருப்பவளத்தையுடையதாயுமிருக்கிற, மணியே - நீலரத்நமே! ஆவியே - என் பிராணனே! அமுதே - அமிருதம் போலினியவனே! அலை கடல் - அலைகள் நிறைந்த திருப்பாற் கடலைக் கடைந்த, அப்பனே - உபகாரகனே, காணும் ஆறு அருளாய்-நான் உன்னைக் கண்டு (அநுபவிக்கும்) விதத்தை கிருபை செய்ய வேண்டும்.

(கருத்து) உனக்கு அநுரூபமான தேவிகளாயிருக்கத் தகுந்தவர்கள் பிராட்டியும் பூமிதேவியும். அவர்களின் இங்கிதத்தையறிந்து அதையொத்து நீ வேலைசெய்கிறவன். அவர்கள் 'குற்றம் செய்யாதவன் ஒருவன் இருப்பனோ' என்று சிபார்சு செய்யும் ஸ்வபாவமுள்ளவர்களல்லவா? அவர்கள் உன் கிட்ட இருக்கும்போது நான் வருந்தப்படலாமா? உனக்குக் கைங்கரியம் செய்கிறவர்கள் கருடன் முதலான நித்தியஸூரிகள். கைங்கர்யம் செய்வதே அவர்களுக்குப் பிரியமாயிருந்தபோதிலும் "நீ இதைச் செய்" என்று ஏவினால் அதை அதிக பிரீதியுடன் செய்கிறார்கள். அவர்கள் எனக்குப் புருஷகாரமாக

இருக்க நான் வருத்தப்படலாமா? "எனக்கு ஐசுவரியத்தில் குறைவால் வேண்டினதைச் செய்யமுடியவில்லை" என்று சொல்லுகிறாயோ? மூன்று விதமான சேதநர்களையும் அசேதநங்களையும் உன் வசமாக்கிக்கொண்டு அவைகளை நியமனம் பண்ணவில்லையா"? "நான் வெகு தூரத்தில் வைகுந்தத்திலிருக்கிறேனே. உம்மிடம் எப்படி வரக்கூடும்" என்று சொல்லுகிறாயோ? நீ ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காக அந்தந்தக்காலங்களில் வேண்டின ரூபங்களை எடுத்துக்கொண்டு அவதாரம் செய்யவில்லையா? ஒரு நீல ரத்நத்தில் இரண்டு தாமரைப்பூபோன்ற கண்களும் பவழத்துண்டைப்போன்ற திருப்பவளமும் இருந்தால் எப்படி அழகாயிருக்குமோ அப்படி உன் திருமேனியின் அழகு இருக்கிறது. அதைக்காணப்பெறுதபடி பாபம் பண்ணின என்னை அது நினைவுக்குவந்து வருத்தப்படுகிறது. பிராணனை விட்டுப் பிரிந்த உடம்பு இருக்கமுடியாததுபோல், உன்னைவிட்டுப் பிரிந்திருக்க எனக்கு முடியவில்லை. உடம்பைத் தரித்துக்கொண்டிருக்கிற பிராணன் அமிருதம்போலிருக்குமேயானால், அதுபோல் நீ எனக்குத் தாரகனும் போக்யனுமாக இருக்கிறாய். தேவர்களும் அஸுரர்களும் திருப்பாற்கடலைக் கடையமுடியாதபடி கடல் அலைந்துக்கொண்டிருக்கும்போது, அதைக் கடைந்தாயே. வேறு பிரயோஜநத்தைத் தேடுகிறவர்களுக்காக முடியாத வேலையைச்செய்கிற நீ உன்னையே பிராப்பமாயும் உபாயமாகவும் எண்ணிக்கொண்டிருக்கிற எனக்கு நான் வேண்டினதைச்செய்யவேண்டாமோ? தேவதைகளுக்குப்போல் எனக்காக ஸமுத்திரத்தைக் கடைய வேண்டாம், உன் திருமேனியைக்காட்டினால் போதும். ஆகையால் நான் உன்னைக் கண்டு அநுபவிக்கும்படி கிருபை செய்யவேணும்.

குறிப்பு— (1) தேவிகளுக்கு எம்பெருமானுடைய ஆலிங்கநத்தாலே எப்படி ஆநந்தமுண்டாகிறதோ, அப்படியே நித்யஸூரிகளுக்கு எம்பெருமானுக்கும் தேவிமார்களுக்கும் கைங்கரியம் செய்வதால் ஆநந்தமுண்டாகிறது என்றும், இந்த விஷயத்தில் தேவிமார்களுக்கும் நித்யஸூரிகளுக்கும் வாசியில்லை என்றும் நினைத்து, நித்யஸூரிகளைத் தேவிமார்களைக்காட்டிலும் வேறுண வகுப்பாக்கி "மற்ற மரர்" என்று சொல்லுகிறார்.

(2) ஆழ்வாருக்கு பிராணன் சரீரத்திலிருக்கும் வாயுவன்று. தேவிகளோடும் விபூதிகளோடும் கூடின அவனுடைய அழகிய கண்ணும் வாயும் வடிவும் அவருக்குப் பிராணன். (1)

---

காணுமா றருளா யென்றென்றே கலங்கிக்
கண்ணநீ ரலமர வினையேன்
பேணுமா றெல்லாம் பேணிநின் பெயரே
பிதற்றுமா றருளெனக் கந்தோ
காணுமா றருளாய் காகுத்தா கண்ணா
தொண்டனேன் கற்பகக் கனியே
பேணுவா ரமுதே பெரியதண் புனல்சூழ்
பெருநில மெடுத்த பேராளா. (உ)

(ப-ரை) காணுமாறு அருளாய்-உன்னை (நான்) பார்க்கும்படி கிருபை செய்யவேணும், என்று என்றே - என்று அலற்றிக் கொண்டே, கலங்கி - கலக்கம் அடைந்து, கண்ணநீர்கள் - கண்களுடைய நீர்கள், அலமர - கலங்கிப் பெருக, வினையேன் - பாபம் பண்ணின நான், பேணும் ஆறு எல்லாம் பேணி-ஆசைப் படும்படியெல்லாம் ஆசைப்பட்டு, நின் பெயரே-உன் திருநாமங்களையே, பிதற்றுமாறு-முன்னும்பின்னுமாய் சொல்லும்படியே, எனக்கு அருள் - எனக்கு நீ பண்ணும் கிருபை - அந்தோ, ஐயோ! காகுத்தா-ககுத்ஸ்த வம்சத்தில் பிறந்தவனே, கண்ணா-கண்ணனே! தொண்டனேன் கற்பக - சபலனான எனக்குக் கற்பக விருக்ஷம்போலிருப்பவனே! கனியே - பழம்போல் இனியவனே! பேணுவார் அமுதே - உன்னையாசைப்பட்டவர்களுக்கு அளவில்லாமல் இனியவனே! தண்புனல் சூழ் - குளிர்ந்த ஜலத்தால் சூழப்பட்ட, பெருநிலம் - பெரிய பூமியை, எடுத்த - மேலே கொண்டுவந்த, பேர் ஆளா - மஹாபுருஷனே, காணும் ஆறு அருளாய்.

(கருத்து) உன்னைக்காணும் வழியைக் கிருபை செய்யவேணும் என்று பலதடவை சொல்லி, கண்ணீர் பெருகும்படியிருந்து, உன்னைக் காணப்பெறாதபடி பாபம் பண்ணின நான் எத்தனை விதமாய் ஆசைப்படக் கூடுமோ அத்தனைவிதமாயும்

ஆசைப்பட்டேன்; வருத்தப்பட்டேன்; தூதுவிட்டேன்; சரணாகதி பண்ணினேன்; மோஹம் அடைந்து கிடந்தேன், இவ்வளவு செய்தும் உன்னைப் பார்க்கமுடியவில்லை. உன் திருநாமங்களை முன்னும் பின்னுமாகச் சொல்லிக்கொண்டிருப்பது தானே நீ எனக்குசெய்த கிருபை. 'என்னை நீ பார்க்கமுடியுமோ' என்று சொல்லுகிறாயோ, நீ எல்லாரும் பார்க்கும்படி வேண்டினவர்களுக்கு வேண்டியதை கொடுக்கத்தகுந்த சுத்ஸத்வ வம்சத்தில் பிறக்கவில்லையா? எல்லாருக்கும் ஸுலபனாயிருக்கும்படி கண்ணனாகப்பிறக்கவில்லையா? சப்தம் முதலான விஷயங்களில் அலைந்துகொண்டிருந்த எனக்கும் உன்னை மனதால் அநுபவிக்கும்படி கொடுத்தவனே! எனக்கு மிகவும் போக்கியமானவனே! உன்னை ஆசைப்பட்ட எல்லாருக்கும் போக்கியமாயிருக்கும்படி உன்னை கொடுக்கவில்லையா? குளிர்ந்த ஜலத்தால் சூழப்பட்ட பெரிய பூமியைப் பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்த மஹாபுருஷனல்லவா? இதனால் உன்னுடைய கருணைக்கு அளவில்லை என்று காட்டப்படவில்லையா? ஆகையால் நான் உன்னைக் காணுமாறு அருளாய்.

இ—ம். பாட்டில் "கற்பகக்கனியே" என்பது ஆறும் வேற்றுமைத் தொகை அன்று. 'கற்பக' 'கனி' என்பவைகள் தனித்தனி விளிவேற்றுமையாக வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள். ஆனாலும் ஓசைநயத்தைக் கொண்டு 'கற்பகக்கனியே' என்று ககரம் இரட்டித்திருக்கிறது. (2)

---

எடுத்த பேராள னந்தகோ பன்றனின்
　　னுயிர்ச் சிறுவனே யசோதைக்
கடுத்த பேரின்பக் குலவிளங் களிறே
　　யடியனேன் பெரிய வம்மானே
கடுத்த போரவுண னுடலிரு பிளவாகக்
　　கையுகி ராண்ட வேங்கடலே
அடுத்த தோருரு வாயின்று நீவாரா
　　யெங்ஙனந் தேறுவ ருமரே. (௩)

(ப-ரை) எடுத்த-(பிரயத்நமில்லாமல்) அடைந்த, பேராளன்-மஹாபுருஷனை (மஹாபாக்யம் பண்ணினவனை) நந்தகோபன்

தன் - நந்தகோபனுடைய, இன் - இனிய, உயிர் - பிராணனான, சிறுவனே - குழந்தையே! யசோதைக்கு, அடுத்த - பிரயத்ன மில்லாமல் வந்த, பேரின்பம் - மிகுந்த ஆநந்தத்தைக் கொடுக்கிற, குலம் இளம் களிறே - குலத்துக்கு யானைக்குட்டி போலிருந்தவனே! அடுத்து - தகுந்ததான, ஓர் உருவாய் - உலக விலக்ஷணமான ரூபத்தை எடுத்துக்கொண்டு, போர்-சண்டையில், கடுத்த - தினைவையுடைய, அவுணன் - ஹிரண்யகசிபுவினுடைய உடல் - உடம்பு, இரு பிளவு ஆ-இரண்டு பாகங்களாக, கை உகிர்-கை நகங்களை, ஆண்ட - ஏவின, எம் கடலே - நமக்கு ஸமுத்திரமே, அடியனேன் - தாஸனான எனக்கு, பெரிய-எட்டமுடியாத, அம்மானே - ஸ்வாமியே! இன்று நீ வாராய் - இப்போது நீ கிறதில்லை, உமர் - உன்னுடையவர்கள், எங்ஙனம் - எப்படி, தேறுவர் - நம்பிக்கையுள்ளவர்களாயிருப்பார்கள்!

(கருத்து) மஹாபாக்யம் பண்ணின நந்தகோபனுக்கு பிரயத்நம் பண்ணாமல் கிடைத்த நிதிபோல் கிடைத்து, அவனுக்குப் பிராணனைப் போல் இனியவனாக இருந்த குழந்தையே! ஒரு பிரயத்நமும் செய்யாதிருந்த யசோதையினிடம் தானாகவே வந்த யானைக்குட்டிபோல் விளையாடிக்கொண்டிருந்து அவளுக்கு மிகுந்த ஆநந்தத்தைக் கொடுத்தவனே! கோடி வஜ்ராயுதங்களைப் போல் கடினமான ஹிரண்யகசிபுவினுடைய மார்பைப்பிளப்பதற்குத் தகுந்ததாய் உலக விலக்ஷணமாய் இருந்த ஒரு நரசிங்கரூபத்தை எடுத்துக்கொண்டு சண்டையில் தினவு எடுத்திருந்த அவனுடைய உடம்பை கை நகங்களாலேயே இரண்டு பாகங்களாகப் பிளந்து இதனால் ஆச்ரிதர்களிடத்தில் அளவில்லாதவாத்ஸல்யமுள்ளவனென்று உன்னைக் காட்டினவனே! நீ இப்படி வாத்ஸல்யமுள்ளவனாயிருந்தும், நான் எவ்வளவு ஆசைப்பட்டும், உன்னைக்கிட்ட முடியாதபடி இருக்கிறாய். நான் இப்படி வருத்தப்பட்டுக்கொண்டிருக்கும்போதும் நீ வருகிறதில்லை. இப்படி நீ இருந்தால், உன்னுடைய குணங்களையே நினைத்துக்கொண்டு பிழைத்திருப்பவர்கள் 'அந்த குணங்கள் உனக்கு இருக்கின்றனவோவென்று ஸந்தேஹப்படுவார்களே. ஆகையால் இப்படி அவர்கள் ஸந்தேஹப்படாமலிருப்பதற்காக நீ என்னிடம் வந்தருளவேணும்.

இ—ம். பிளவுஆ - ஆக. (3)

உமருகந் துகந்த வுருவ நின்னுருவ
மாகி யுன்றனக் கன்பரானார்
அவருகந் தமர்ந்த செய்கை யுன்மாயை
யறிவொன்றுஞ் சங்கிப்பன் வினையேன்
அமரது பண்ணி யகலிடம் புடைசூ
ழடுபடை யவித்த வம்மானே
அமரர்த மமுதே யசுரர்க ணஞ்சே
யென்னுடை யாருயி ரேயோ. (௬)

(ப-ரை) அது அமர்-பிரஸித்தமான (பாரதச்) சண்டையை, பண்ணி - உண்டாக்கி, அகல் இடம் - விஸ்தாரமான, பூமியினுடைய, புடை சூழ் - எல்லா பக்கங்களிலும் சூழ்ந்திருந்த. அடு - துன்பம் செய்யும் தன்மையுள்ள, படை - சேனையை, அவித்த - நாசம் செய்த, அம்மானே, ஸ்வாமியே! அமரர் தம் - தெய்வப்ரக்ருதியான ஆச்ரிதர்களுக்கு, அமுதே - இனியவனே! அசுரர்கள் - அஸுரப்ரக்ருதிகளுக்கு, நஞ்சே - விஷம்போல் கெடுதியைச் செய்கிறவனே! என்னுடை - என்னுடைய, ஆர் உயிரே - நிறைந்த பிராணனே! (எப்போதும் தரித்திருக்கும்படி செய்கிறவனே) உமர் - உன்னைச் சேர்ந்தவர்கள், உகந்து உகந்து-ஆசைப்பட்ட ஆசைப்பட்ட, உருவம் - ரூபமே, நின் உருவம் ஆகி, (இருக்கும்) உன் தனக்கு அன்பரானார்-உன் விஷயத்தில் உள்ள ஆசைக்கு உட்பட்டவர்களாயிருக்கிறவர்கள், உகந்து - ஸந்தோஷப்பட்டு, அமர்ந்த செய்கை - நிலையாயிருந்த உன் ஸந்தோஷத்துக்காகச் செய்யப்பட்ட வியாபாரங்கள், உன் மாயை - உன்னுடைய ஆச்சரியமான வேலைகள், அறிவு ஒன்றும் - (நீ இப்படி ஆச்ரிதர்களிடத்தில் வாத்ஸல்யமுடையவனாயிருப்பதாகிய) அறிவொன்றையும், வினையேன் - பாபம் பண்ணின நான், சங்கிப்பன் - ஸந்தேஹப்படுவேன்.

(கருத்து) பாண்டவர்களுக்காகத் தூதுபோய், அவர்களுள் ஒருவனான அர்ஜுநனுக்கு ஸாரத்யம் பண்ணி, பிரஸித்தமான பாரதச் சண்டையை உண்டாக்கி, விசாலமான பூமியின் பக்கங்களிலெல்லாம் சூழ்ந்திருந்த சேனையை நாசம் செய்த ஸ்வாமியே! இதனால், தெய்வப்ரக்ருதிகளுக்கு ஆநந்தத்தைக்கொடுக்கிறவன் என்றும், ஆஸுரப்ரக்ருதிகளுக்குக் கெடுதலைச்செய்கிறவன்

என்றும், உன்னுடைய ஆகாரங்களை எனக்குக் காட்டி, என்னை எப்போதும் தூக்குகிறவனே, உன்னை ஆச்ரயித்தவர்கள் எந்த ரூபம் தங்களுக்கு போக்கியம் என்று எண்ணுகிறார்களோ, அந்த ரூபத்துடன் உன்னை அவர்களுக்குக் காட்டுகிறாய். நீ செய்கிற ஆச்சர்யமான வேலைகள் உன் விஷயத்தில் ஆசையுள்ளவர்களாய் இருக்கிறவர்கள் உன்னைத் தவிரவேறு பிரயோஜநத்தைத் தேடாமல் இருக்கும்படி செய்கின்றன. நீ இப்படி ஆச்ரிதர்களிடத்தில் வாத்ஸல்யமுள்ளவனாயிருக்கிற இந்த ஒரு குணத்தையே நான் நினைத்துக்கொண்டு தரித்திருக்கிறேன். நீ வராவிட்டால் இந்தக் குணமில்லையோ என்று நான் என் பாபத்தாலே ஸந்தேஹப்படும்படியாகும். (4)

---

அவ:— எம்பெருமான் உடனே வாராமையால் ஆழ்வார் மனது கலங்கிற்று. "காணுமாறு அருளாய் என்றுகூப்பிடுகிறீரே, இதற்கு நீர் பக்தி ப்ரபத்தி என்கிற உபாயங்களில் ஒன்றைச் செய்யவேண்டாமா ? நீர் முன்னாலே செய்த பிரபத்தி, உம்மை வியாஜமாக வைத்துக்கொண்டு நான் செய்தது. இப்போது என் ஸம்பந்தமில்லாமல் நீர் ஓர் உபாயத்தைச் செய்யும்" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் இதில் அருளிச் செய்கிறார்:—

ஆருயி ரேயோ வகலிட முழுதும்
படைத்திடந் துண்டுமிழ்ந் தளந்த
பேருயி ரேயோ பெரியநீர் படைத்தங்
குறைந்தது கடைந்தடைத் துடைத்த
சீருயி ரேயோ மனிசர்க்குத் தேவர்
போலத் தேவர்க்கும் தேவாவோ
ஓருயி ரேயோ வுலகங்கட் கெல்லா
முன்னைநா னெங்கு வந்துறுகோ. (௫)

(ப-ரை) ஆர் - பூர்ணமான, உயிரே - பிராணனே ! அகல் - விசாலமான, இடம் முழுதும் - பூமி முழுவதையும், படைத்து - உண்டுபண்ணி, இடந்து - பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்து, உண்டு, உமிழ்ந்து, அளந்த, பேர்

உயிரே-மஹாத்மாவே (மிகுந்த கருணையுடையவனே!) பெரிய நீர் ஒன்றாயிருந்த ஸமுத்ரத்தை, படைத்து-உண்டுபண்ணி, அங்கு - அதில், உறைந்து-படுத்திருந்து, அது அதை (திருப்பாற்கடலாகச்செய்து அதிலிருந்து பிராட்டியை அடைவதற்காக) அதை கடைந்து, அடைத்து - (ஸீதையை அடைவதற்காக) அதில் அணை கட்டி, உடைத்த - (வில் நுனியாலே) உடைத்த, சீர் உயிரே - (ஆச்ரிதர்களிடத்தில் ஆசையுள்ளவன் என்கிற) நல்ல குணத்தை உடைய ஆத்மாவே, மனிசர்க்கு - மனிதருக்கு. தேவர்போல - தேவர்கள் எப்படி உயர்ந்தவர்களோ, அப்படியே தேவர்க்கும் தேவா - தேவர்களுக்கும் உயர்ந்தவனே! உலகங்கட்கு எல்லாம் - எல்லா உலகங்களுக்கும், ஓர் உயிரே - ஒப்பில்லாத ஆத்மாவே ? உன்னை நான், எங்கு வந்து உறுகோ - எங்கேவந்து கிட்டுவேன்.

(கருத்து) என்னைத் தரிக்கிற பிராணனையும் தரிக்கும்படி செய்கிறபடியால் எனக்குப் பூர்ணமான பிராணனாயிருக்கிறவனே ! உன்னாலேயே தூக்கப்படுகிற நான் எதை உன்னை விட்டுச் செய்யமுடியும். விசாலமான பூமியை உண்டுபண்ணி பிரளய ஜலத்திலிருந்து அதை மேலே கொண்டுவந்து, பிரளய காலத்தில் அதை வயிற்றில் வைத்துக்கொண்டு, ஸிருஷ்டி காலத்தில் அதை வெளிப்படுத்தி மஹாபலியிடமிருந்து அளந்து அதை எடுத்துக்கொண்டு, இப்படிப் பலவிதமாய் உன் கருணையைக் காட்டினவனே! இப்படி பூமியை எல்லாம் ஆபத்திலிருந்து ரக்ஷித்த நீயே என்னையும் ரக்ஷிக்கவேண்டாவோ? உலகத்தை உண்டுபண்ணுவதற்காக ஒரே ஸமுத்திரத்தை உண்டுபண்ணி, அதில் படுத்திருந்து, அதைத் திருப்பாற்கடலாகச் செய்து அதைப் பிராட்டியை அடைவதற்காகக் கடைந்து, ஸீதையை அடைவதற்காக அதில் அணை கட்டி, ஸம்ஸாரிகள் தங்கள் பாபங்கள் போக ஸ்நாநம் செய்யத்தகுந்த தீர்த்தமாக அதைப் பண்ணுவதற்காக உன் வில்லின் நுனியால் அந்த அணையை உடைத்தாய். இப்படி ஆச்ரிதர்களை ரக்ஷிக்கும்போது, ஒருவன் தன்னை ரக்ஷிப்பதில் எவ்வளவு ஆசையுள்ளவனாயிருப்பனோ அப்படியே அவர்களை ரக்ஷிப்பதிலும் ஆசையுள்ளவனாயிருப்பதை நீ காட்டவில்லையோ ? பிராட்டியினிடமிருப்பதுபோல் உலகத்தாரிடத்திலும் ஆசை யுள்ள நீ என் தலையில் சுமையை வைக்கலாமோ? தேவர்கள் மனிதர்களைக்காட்டிலும் எப்படி உயர்ந்தவர்களோ,

அவர்களுக்கும் உயர்ந்தவனுயிருக்கிறவனே! இப்படி உயர்ந்த உன்னை என் பிரயத்நத்தாலே கிட்டமுடியுமோ? எல்லா உலகங்களுக்கும், ஒரே ஆத்மாவாயிருக்கிறவனே! ஆத்மாவன்றோ உடம்புக்கு வேலை செய்யவேண்டியது. உடம்பாயிருக்கிற நான் உன்னையல்லாமல் எதைச்செய்ய முடியும். ஆகையால் என் பிரயத்நத்தாலேயே நான் உன்னை எங்கேவந்து சேருவது?

இ—ம். உறுகு - கு - காலம் காட்டும் விகுதி. உறுவேன் - அடைவேன். (5)

---

எங்குவந் துறுகோ வென்னையாள் வானே
யேழுல கங்களு நீயே
அங்கவர்க் கமைத்த தெய்வமு நீயே
யவற்றவை கருமமு நீயே
பொங்கிய புறம்பால் பொருளுள வேலு
மவையுமே நீயின்னே யானல்
மங்கிய வருவாம் நேர்ப்பமு நீயே
வான்புல னிறந்தது நீயே. (சா)

(ப-ரை) ஏழு உலகங்களும்-(அவைகளிலிருக்கிறவர்களும்), நீயே; அங்கு அவர்க்கு - அங்கங்கே இருக்கிறவர்களுக்கு, அமைத்த - ஏற்படுத்தப்பட்ட, தெய்வமும் - தேவதைகளும்- நீயே; அவற்று அவை - அந்த தேவர்களுடைய, கருமமும், ஸிருஷ்டிபண்ணுவது முதலான கர்மங்களும், நீயே, பொங்கிய - வளர்ந்திருக்கிற - (முன்னுவிருப்பதைக்காட்டிலும் பத்துமடங்கு பெரியவைகளான)புறம்பால் பொருள் - (அண்டத்துக்கு)வெளியிடத்திலிருக்கும் வஸ்துக்கள், உளவேலும் - உண்டாயிருந்தாலும், அவையும் நீ; மங்கிய - நஷ்டமான, (பிரகிருதியில்சேர்ந்து அதில் மறைந்திருக்கிற) அருவாம் - ரூபமில்லாதவைகளான, நேர்ப்பமும் - ஸூக்ஷ்மமான ஆத்மவஸ்துக்களும், நீயே, வான் - வானில் - (வைகுந்தத்திலிருக்கும்) புலன் இறந்ததும் - இந்திரியங்கள் இல்லாதவர்களான முக்தர்களும்) நீயே, இன்னேயானல் - இப்படியானல், எங்கு வந்து உறுகோ - என் யத்நத்தாலேயே நான் எங்கே வந்து சேர்வேன். என்னை ஆள்வானே - என்னை ரக்ஷிக்கிறவனே.

(கருத்து) ஏழு உலகங்களிலிருக்கிறவர்களும், அந்தந்த இடங்களிலிருக்கிறவர்கள் செய்கிற ஆராதனத்தைப் பெற்றுக்கொண்டு அவர்கள் வேண்டும் பலன்களைக் கொடுப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட தேவர்களும், அந்தந்தத் தேவதைகள் செய்யும் ஸ்ருஷ்டி முதலான வேலைகளும், இந்த அண்டத்தில் வெளியிலிருக்கிற ஆவரணங்களும், அண்டத்துக்கு வெளியில் ஸூக்ஷ்மமான பிரகிருதியுடன் ஒன்றாகச் சேர்ந்து ரூபங்களில்லாமல் ஜ்ஞாநம் என்கிற ஒரே ஆகாரமுள்ளஸூக்ஷ்மமான ஆத்மவஸ்துக்களும், உடம்பும் இந்திரியங்களுமில்லாமல் வைகுந்தத்திலிருக்கும் முக்தர்களான ஆத்மவஸ்துக்களும் - ஆகிய இவைகளெல்லாம் நீயே. உனக்கு அதீனங்கள். இப்படி எல்லாவற்றைக் காட்டிலும் மிகவுமுயர்ந்தவனாயிருக்கிற உன்னை என் பிரயத்நத்தாலே நான் எங்கு வந்து கிட்டுவது ? இதுவரையில் என்னை ரக்ஷித்த நீயே உன் கிருபையாலே ஒரு வியாஜத்தைக்கொண்டு மேலும் ரக்ஷிக்கவேண்டும்.

குறிப்பு— (1) பாட்டில் எம்பெருமானையும் மற்றவைகளையும் ஒன்றாகச் சொன்னது அவனுக்கும் மற்றவைகளுக்குமுள்ள ஸம்பந்தத்தை நினைத்து. அந்த ஸம்பந்தமாவது— அவன் அவைகளுக்கு ஆத்மாவாகவும் அவைகள் அவனுக்கு உடம்புகளாகவுமிருப்பது.

(2) 'ஏழு உலகங்களும்' என்றது பெயர்களும் ரூபங்களும் உள்ள பத்த ஜீவன்கள். "மங்கியவருவாம் நேர்ப்பமும்" என்பது பெயர்களும் ரூபங்களுமில்லாமல் பிரகிருதியுடன் சேர்ந்த பத்த ஜீவன்கள். முன்னாலே சொல்லப்பட்டவர்களுக்கு வியஷ்டி ஜீவன்களென்றும், பின்னால் சொல்லப்பட்டவர்களுக்கு ஸமஷ்டி ஜீவன்களென்றும் பெயர்.

(3) ஸ்ரீரங்கத்தில் பெரிய பெருமாளைச் சுற்றி ஏழு பிராகாரங்கள் இருப்பதுபோல், இந்த அண்டத்துக்கு வெளியில் ஏழு ஆவரணங்கள் இருக்கின்றன. அவைகள்— ஜலம், நெருப்பு, வாயு ஆகாசம் அஹங்காரம், மஹத், பிரகிருதி, என்பன. இவைகளில் ஒவ்வொன்றும் முன் சொன்னதைக் காட்டிலும் பத்துமடங்கு பெரிது. இதை "பொங்கிய" என்று பாட்டு சொல்லுகிறது.

(4) பாட்டில் சொன்ன அமைத்த தெய்வமும் வியஷ்டி ஜீவன்கள்தான். மற்றவர்களைக்காட்டிலும் அவர்களுக்கு கொஞ்சம் அதிகாரத்தை எம்பெருமான் கொடுத்திருக்கிறான்.

(5) ஸாங்கிய மதக்காரர்கள் - பிரகிருதி, மஹாத், அஹங்காரம் முதலான தத்துவங்களிருப்பதாகச் சொல்லுகிறார்கள். அதை நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனால் அவர்கள் பிரம்மம் என்பது ஒன்றில்லை. சொன்ன தத்துவங்கள் ஸ்வதந்திரங்கள் என்று சொல்லுகிறார்கள். நாம் அப்படிச் சொல்லவில்லை. "எல்லாம் எம்பெருமானுக்கு உட்பட்டவைகள். ஸ்வதந்திரமானது ஒன்றுமில்லை, அவனொருவனே ஸ்வதந்திரன்" என்று சொல்லுகிறோம். இந்த அர்த்தம் "உளவேலும்" என்பதால் காட்டப்படுகிறது.

(6) எம்பெருமானுக்கும் மற்றவைகளுக்கும் உறவானது கீழ்ப்பாட்டிலும் சொல்லப்பட்டது. ஆத்மாவான எம்பெருமான் உடம்பானமற்றவைகளை ரக்ஷிக்கும் பொறுப்பையுடையவனென்று காட்டுவதற்காக இந்தப்பாட்டிலும் அதையே சொன்னது அவன் எல்லாரைக்காட்டிலும் உயர்ந்தவன் என்று காட்டுகைக்காக.

இ—ம். ஏழு உலகங்களும்-ஆகுபெயராய் அவற்றிலிருக்கிறவர்களைச் சொல்லுகிறது. உளவேல் - உண்டானால், வினையெச்சம். உம் என்பதற்கு ஐயப்பொருள். ஸாங்கியர்கள் இவைகள் ஸ்வதந்திரம் என்று சொல்லுகிறார்கள். நாம் எம்பெருமானுக்கு உட்பட்டவைகள் என்று சொல்லுகிறோம். இந்த அபிப்பிராயபேதத்தைக் காட்டுகிறது. (6)

---

இறந்ததும் நீயே யெதிர்ந்தது நீயே
 நிகழ்வதோ நீயின்னே யானாற்
சிறந்தநின் றன்மை யதுவிது வதுவென்
 றறிவொன்றுஞ் சங்கிப்பன் வினையேன்
கறந்தபால் நெய்யே நெய்யினின் சுவையே
 கடலினு ளமுதமே யமுதிற்
பிறந்தவின் சுவையே சுவையது பயனே
 பின்னைதோண் மணந்தபே ராயா. (எ)

(ப-ரை) கறந்த பால் - அப்போது கறந்தபாலே! நெய்யே - (அந்தப் பாலின் ஸாரமான) நெய்யே! நெய்யின் இன் சுவையே -

நெய்யினுடைய இனியதான ருசியே! கடலின் உள் அமுதமே- திருப்பாற்கடலிலிருந்து உண்டான அமிருதமே! அமுதில் பிறந்த - அந்த அமுதத்திலுண்டான ! - இனிய ருசியே! சுவையது பயனே - அந்த ருசியின் பயனான ஸுகமே (இவைகள் போல் இனியவனாயிருப்பவனே!) பின்னை தோள் மணந்த - நப்பின்னையினுடைய தோள்களை அணைந்த, பேர் ஆயா- யிருந்த பெருமையுடைய கோபாலனே! இறந்ததும் - முன் காலத்திலிருந்த வஸ்துக்களும், நீயே, எதிர்ந்ததும் - வருங் காலத்திலிருப்பவைகளும், நீயே, நிகழ்வதும் - நடக்கிறகாலத்தி லிருக்கிறவைகளும், நீ, இன்னேயானல் - இப்படியானல், அது- தூர இருப்பது, இது - கிட்ட இருப்பது, உது - நடுவிலிருப்பது (ஆகிய இவைகள்), சிறந்த - எல்லாருக்கும் மேற்பட்ட, நின் தன்மை-உன்னுடைய ஸ்வபாவம் (உன் அதீநங்கள்), என்று, அறிவு ஒன்றும் சங்கிப்பன் - ஓர் அறிவையும் ஸந்தேஹப்படு கிறேன். வினையேன் - பாபம் செய்த நான்.

(கருத்து) மூன்று காலங்களிலும் எல்லாவிடங்களிலுமிருக் கும் வஸ்துக்கள் உனக்கு அதீநங்கள். அவைகளுக்கு ஆத்மா வாயிருந்து அளவில்லாத கருணையினலே அவைகளை ரக்ஷிக்கிறாய். இந்த உன்னுடைய காருண்யமாகிய குணம் பொய்யோ என்று ஸந்தேஹப்படுகிறேன். ஸந்தேஹமுண்டாகுமோ என்றால், சொல் லுகிறேன். உலகத்தாருக்கு இனியதான கறந்த பாலையும் அதிலுண்டான நெய்யையும் அதின் ருசியையும் ஸ்வர்க்கத்திலி ருக்கிறவர்களுக்கு இனியவைகளான அமிருதத்தையும் அதின் ருசியையும் அதினுலுண்டாகும் ஸுகத்தையும் போல எனக்கு இனியவனாய், நப்பின்னையும் நீயும் சேர்ந்திருக்கும் அழகாலே அவைகளைக்காட்டிலும் அதிகம் இனியவனுயான உன்னைக்காணப் பெறுவிட்டால் ஸந்தேஹமுண்டாகாதோ? உன் கருணை பொய் ஆகுமோ. அது பொய்யோ என்று எண்ணும்படி செய்கிறது என் கர்மம்.

குறிப்பு:— (1) எம்பெருமான் முக்தனுக்கு எப்படி போக் கியமோ, அப்படியே நப்பின்னைக்கும் அவன் போக்கியனாயிருந் தான். அவ்விருவருடைய சேர்க்கை ஆழ்வாருக்குப் போக்கிய மாயிருந்தது என்பது "பின்னை தோள் மணந்த" என்பதின் கருத்து.

(2) அறிவோன்றும் - அது இது உது என்று சொல்லப்பட்ட எல்லா பதார்த்தங்களும் சேஷியாய் எல்லாருக்கும்மேற்பட்ட உனக்கு பிரகாரங்கள். அவைகளின் வருத்தங்களை உன்னுடையவைகளாக எண்ணி அவைகளைக் கருணையாலே நீ போக்குகிறாய் என்று அறிந்திருந்தேன். அதினாலே நான் தரித்தேன். மிகுந்த போக்கியனான உன்னை இப்போது காணப்பெறாமையினாலே, அப்படி நான் அறிந்ததும் பொய்யோ என்று ஸந்தேஹப்படுகிறேன். (7)

---

அவ:— நீராக பிரபத்திபண்ணமுடியாதென்று ஐந்தாம் பாட்டில் சொன்னீர். நீராக ஓர் அஞ்ஜலி மாத்திரம் பண்ணலாகாதோ என்று எம்பெருமான் கேட்பதாக நினைத்து இதில் பதில் சொல்லுகிறார்.

மணந்தபே ராயா மாயத்தால் முழுதும்
வல்வினை யேனையீர் கின்ற
குணங்களை யுடையா யசுரர்வன் கையர்
கூற்றமே கொடியபுள் ளுயர்த்தாய்
பணங்களா யிரமு முடையபைந் நாகப்
பள்ளியாய் பாற்கடற் சேர்ப்பா
வணங்குமா றறியேன் மனமும் வாசகமுஞ்
செய்கையும் யானுநீ தானே. (அ)

(ப - ரை) மாயத்தால் - ஆச்சரியமான வேலைகளாலே, மணந்த - (ஆச்ரிதர்களுடன் பிரீதியோடு) சேர்ந்து (அவர்களுக்கு) ஆநந்தத்தை உண்டுபண்ணுகிற, பேர் ஆயா - பெரிய கோபாலா! முழுதும், வல்வினையேனை - பலமான பாபங்களைச் செய்த என்னை, ஈர்கின்ற - பிளக்கிற, குணங்களை, உடையாய் - உடையவனே! வன் கையர் - பலமுள்ள கையை உடையவர்களான, அசுரர் கூற்றமே - அசுரர்களுக்கு யமனாயிருப்பவனே- கொடிய - (அவர்களுக்கு) கொடியவனான, புள் - கெருடனால், உயர்த்தாய் - தூக்கப்படுகிறவனே! ஆயிரம் பணங்களுமுடைய, பைநாகம் பள்ளியாய் - விசாலமான ஆதிசேஷனைப் படுக்கையாக

உடையவனே! பாற்கடல் சேர்ப்பா - திருப்பாற்கடலில் படுத்திருப்பவனே! யானும் - நானும் மனமும், வாசகமும் - வாக்கும், செய்கையும் - செய்கைக்கு இடமான உடம்பும், நீ தானே - உனக்கு அதீநங்கள்; வணங்கும் ஆறு அறியேன்.

(கருத்து) ஆச்ரிதர்களுக்குள்ளே இவன் உயர்ந்தவன் இவன் தாழ்ந்தவன் என்று பார்க்காமல் எல்லாருடனும் பிரீதியுடன் சேர்ந்து உன்னுடைய ஆச்சரியமானவேலைகளாலே அவர்களுக்கு ஆநந்தத்தை உண்டு பண்ணுகிறாய். என்னை மாத்திரம் உன்னுடைய ஸௌசீல்யத்தாலும் அழகாலும் பிளக்கிறாய்; மற்றவர்களுக்குச் சில குணங்கள் துன்பப்படுத்தினாலும், மற்றக்குணங்கள் அவர்களைத் தரிக்கும்படி செய்கின்றன. எனக்கு அப்படி இல்லாமல் எல்லாம் துன்பத்தையுண்டுபண்ணுகின்றன. அப்படிப்பட்ட பாபத்தை நான் செய்திருக்கிறேன். ஆச்ரிதர்களிடத்தில் நீ ஆசையுள்ளவனாயிருப்பது மாத்திரமன்று. அவர்களுக்கு விரோதியான பலமுள்ள அஸுரர்களுக்கு யமனாயிருந்து அவர்களை நாசம் செய்கிறாய். ஆச்ரிதர்களுக்கு ஆபத்காலத்தில் உதவி செய்ய வேகமாகப் போகக்கூடிய கருடன் என்கிற வாஹநமும் உனக்கு இருக்கிறது. வைகுந்தத்திலிருந்து வந்து ரக்ஷிப்பதினாலுண்டாகும் தாமதத்தையும் பொறுக்க முடியாமல் திருப்பாற்கடலில் உனக்கும் பிராட்டிக்கும் இடம் கொடுக்கிற ஆதிசேஷன் மேல் படுத்துக்கொண்டிருக்கிறாய். இப்படி என்னை ரக்ஷிப்பதற்கு எந்தவிதமாயும் தகுந்தவனாயும் பொறுப்பையுடையவனாயும் இருக்கிறாய். மனதுவாக்கு உடம்பு - என்கிற மூன்று காரணங்களும், அவைகளுக்கு ஸ்வாமியான நானும் உனக்கு அதீநங்கள். ஆகையால், என் ப்ரயத்நத்தாலே அஞ்ஜலியும் செய்ய முடியுமோ? ஆகையால், நான் உன்னை வணங்கும் வழியை நீயே செய்தருளவேணும். (8)

---

அவ:— "உம்முடைய ஸ்வரூபமும் மற்ற எல்லாமும், நானே என்று சொல்லுகிறீரே. அப்போது நீர் அடையாதது என்ன?" என்று எம்பெருமான் கேட்டதாக நினைத்து, அதற்கு இதில் பதில் சொல்லுகிறார்:—

யானுநீ தானே யாவதோ மெய்யே
யருநர கவையுநீ யானால்
வானுய ரின்ப மெய்திலென் மற்றை
நரகமே யெய்திலே னெனினும்
யானுநீ தானாய்த் தெளிதோறும் நன்றும்
அஞ்சுவன் நரகம் நானடைதல்
வானுய ரின்பம் மன்னி வீற்றிருந்தா
யருளு நின்தாள்களை யெனக்கே. (௯)

(ப-ரை) யானும்-நானும், நீதான் ஆவதோ - நீ தானாயிருப்பது, மெய்யே - உண்மையே, அரு - அருமையான (எனக்குப் பொறுக்க முடியாத) நரகு, நரகம்போலிருக்கும், அவையும் - ஸம்ஸாரமண்டலத்திலிருக்கிறவைகளும், நீ ஆனால், வான் - வைகுந்தத்தில், உயர் - உயர்ந்த, இன்பம் - ஆனந்தத்தை, எய்தில் - அடைந்தால், என் - என்ன அதிகமாய் அடையப்பட்டது? மற்றை - அதுக்கு எதிர்த்தட்டான, நரகமே - நரகம்போலிருக்கிற ஸம்ஸாரமண்டலத்தையே, எய்தில் - அடைந்தால், என் - என்ன குறையிருக்கும்? எனினும் - இப்படி நிரூபணம் பண்ணி அறிந்தாலும், யானும் - நானும், நீதானாய் தெளிதொறும் - தெளிந்தபோதிலும், நான், நரகம் - நரகம்போலிருக்கிற ஸம்ஸாரத்தை, அடைதல் - அடைந்திருப்பதை, நன்றும் அஞ்சுவன் - மிகவும் பயப்படுகிறேன், வான் - வைகுந்தத்தில், உயர் - உயர்ந்த, இன்பம் - ஆநந்தம், மன்னி - நிலையாய், வீற்றிருந்தாய் - உன் பெருமை தோன்றும்படியிருக்கிறவனே! நின் தாள்களை - உன் திருவடிகளை, எனக்கு அருளு - கிருபை பண்ணு.

(கருத்து) நானும் நீயேயாயிருப்பது உண்மையே. இப்படியே பிரமாணம் சொல்லுகிறது. ஆகையால், பொறுக்க முடியாத ஸம்ஸாரமண்டலத்திலிருக்கிறவைகளும், நீதான், இப்படி உண்மையிருந்தால், வைகுந்தத்திற்கும் இந்த பிரகிருதிமண்டலத்திற்கும் என்ன வாசியிருக்கிறது. அங்கே போய் உயர்ந்த ஆநந்தத்தை அடைந்தாலும் இப்போதில்லாத என்ன அதிசயமுண்டாகும். ஸுகத்துக்கு விரோதியான இவ்விடத்திலிருந்தால் என்ன குறைவு உண்டு. உனக்கு நான் சேஷம் என்கிற அறிவு நிலையாயிருக்குமானால், இவ்விடத்துக்கும் வேறுபாட்டை நான்

அறியவில்லை. அவ்விடத்து ஆனந்தமும் வேண்டியதில்லை. இவ்விடத்து துக்கத்துக்கும் பயப்படவில்லை. நான் வேண்டுவது உனக்கே நான் சேஷம் என்பதை மறக்காமல் உனக்குக் கைங்கரியம் செய்வது. இதற்கு இவ்விடம் விரோதியாயிருப்பதாலே ஸாம்ஸாரிக வஸ்துக்கள் பிரகாரமாயிருக்கிற இந்த ஆகாரம் கலக்காமல் எல்லா வஸ்துக்களும் பிரகாரமாயிருக்கிற ஆகாரம் தோன்றுகிற வைகுந்தத்திற்கு நான் வரவேண்டும். ஆகையால், ஸம்ஸாரத்திலிருப்பதைக்கண்டு நான் மிகவும் பயப்படுகிறேன். வைகுந்தத்தில் அழிவில்லாத ஆநந்தத்துடன் எல்லாருக்கும் சேஷி என்று தோன்றும்படியிருக்கிறவனே ! உன் திருவடிகளை எனக்குக் கிருபை பண்ணவேணும்.

இ—ம். தெளி-பகுதியே தொழிற் பெயர். தெளிவு என்று பொருள். (9)

---

அவ— இப்படி வருந்தப்பட்ட ஆழ்வாரை ஸமாதாநம் பண்ண, ஸம்ஸாரிகளைப்போலில்லாமல் எம்பெருமான் தன்னுடைய திருவடிகளையே தாரகமும் போஷகமும் போக்கியமுமாகச் செய்திருப்பதை அவருக்குக் காட்டினன். இதைக் கண்டு ஸந்தோஷப்பட்டு அவர் பேசுகிறார்—

தாள்களை யெனக்கே தலைத்தலைச் சிறப்பத்
தந்தபே ருதவிக் கைம்மாறுத்
தோள்களை யாரத் தழுவி யென்னுயிரை
யறவிலை செய்தனன் சோதீ
தோள்க ளாயிரத்தாய் முடிக ளாயிரத்தாய்
துணைமலர்க் கண்க ளாயிரத்தாய்
தாள்களா யிரத்தாய் பேர்களா யிரத்தாய்
தமியனேன் பெரிய வப்பனே. (க0)

(ப - ரை) எனக்கே - (மற்றவர்களுக்கில்லாமல்) எனக்கே, தாள்களை - உன் திருவடிகளை, தலைத்தலைச் சிறப்ப - மேல் மேல் பரிபூர்ணமாம்படி, தந்த - கொடுத்த, பேர் உதவி - பெரிய உபகாரத்துக்கு, கைம்மாறு ஆ - பதில் உபகாரமாக, என் உயிரை - என் ஆத்மாவை, தோள்களை ஆர - என் இரண்டு தோள்களும்

நிரம்பும்படி (கெட்டியாக) தழுவி - கட்டிக்கொண்டு, அற - (வேறு ஒருவருக்கும்) ஸம்பந்தமில்லாதபடி, விலை செய்தனன் - கிரயமாகக் கொடுத்தேன், சோதீ - (ஆசைப்படும்படியான) காந்தியையுடையவனே! தோள்கள் ஆயிரத்தாய் - ஆயிரம் தோள்களை உடையவனே ! துணை மலர் - ஒன்றுக்கொன்று ஒத்திருக்கிற தாமரைப்பூ போன்ற, கண்கள் ஆயிரத்தாய் - ஆயிரம் திருக்கண்களை உடையவனே! தாள்கள் ஆயிரத்தாய் - ஆயிரம் திருவடிகளை உடையவனே ! பேர்கள் ஆயிரத்தாய் - ஆயிரம் திருநாமங்களை உடையவனே ! தமியனேன் - வேறு ஸஹாயமில்லாத எனக்கு, பெரிய அப்பனே - பெரிய உபகாரம் செய்தவனே !

(கருத்து) ஸம்ஸாரிகளைப்போலில்லாமல் நான் உன் திருவடிகளையே தாரகமென்றும், அதின்மேலே அவைகளே போஷகமென்றும், அதின்மேலே அவைகளே போக்யம் என்றும் எண்ணும்படியான உபகாரத்தை நீ செய்திருக்கிறாய். அதற்குப் பதில் உபகாரமாக எனக்கு மிகுந்த ப்ரீதிக்கு விஷயமான என் ஆத்ம ஸ்வரூபத்தை எனக்கும் மற்றவர்களுக்கும் ஸம்பந்தமில்லாதபடி உனக்கு விலைக்குக் கொடுத்துவிட்டேன். ஆசைப்படும்படியான காந்தியுள்ளவனே! உன்னை ஒருதடவை எனக்குக்காட்டவேண்டும். "இப்படிச் செய்வது எளிதோ" என சொல்கிறாயோ? உன்னைக் காணவேணுமென்று ஆசைப்படுகிற ஆச்ரிதர்களுக்காகவன்றோ நீ கணக்கில்லாத திருத்தோள்களையும் திருமுடிகளையும் திருக்கண்களையும் திருவடிகளையும் திருநாமங்களால் காட்டப்பட்ட குணங்களையும் உடையவனாயிருப்பது. உன்னை விட்டு ஒரு க்ஷணமுமிருக்கமுடியாத ஸ்வபாவமுடைய எனக்கு மாத்திரமோ அருமையாயிருப்பது. மஹோபகாரகனே.

குறிப்பு— (1) ஆழ்வாருக்கு உண்டான ஸந்தோஷத்தாலே தாமும் எம்பெருமானுடைய ஸொத்து; தமக்கு என்று ஒன்றும் கிடையாது என்று முன்னால் சொன்னதை மறந்து என் ஸ்வரூபத்தைக் கொடுத்தேன் என்கிறார்.

(2) ஜநக ராஜன் ஸீதையை மிகுந்த ப்ரீதியினாலே அணைத்துக்கொண்டு சக்ரவர்த்தித் திருமகனுக்குக் கொடுத்தது போல, ஆழ்வாரும் தம்முடைய ஸ்வரூபத்தைக் கட்டிக்கொண்டு கொடுத்ததாகச் சொல்லுகிறார். அது கட்டிக்கொள்

ளும் வஸ்துவல்லாமையால், அதை மிகுந்த பிரீதியுடன் கொடுத்தாரென்பது கருத்து. பிரீதிக்குக் காரணம் எம்பெருமானுக்குக் கொடுப்பது.

(3) விலையில்லாத ரத்நத்தை ஸ்வல்ப விலைக்கு வாங்கினவன் அதனிடத்தில் மிகுந்த கௌரவம் பண்ணுவன். அந்த ரத்நம்போல் ஆழ்வாருடைய ஸ்வரூபம், அல்பமான விலை போல் எம்பெருமான் தன்னுடைய ஸ்வரூபம் முதலானவைகள் என்று எண்ணி, அவர் ஸ்வரூபத்தில் கௌரவம் பண்ணுவன் என்று கருத்து. எம்பெருமான் "ஜ்ஞாநீ எனக்கு ஆத்மாவே" என்றும் "அந்த மஹாத்மா தனக்குக் கிடைப்பது அரிது" என்றும் கீதையில் கொண்டாடியிருக்கிறான். ஜ்ஞாநீ என்பவன் அவனுடன் சேர்ந்திருக்க வேணுமென்று ஆசைப்பட்டு அவனையே பிராப்யமாயும் உபாயமாயும் எண்ணுகிறவன்.

இ—ம். 'எனக்கே' - என்கிறவிடத்தில் ஏகாரத்திற்குப் பிரிநிலைப்பொருள். கைம்மாறு ஆ - ஆக, கடைக்குறை. (10)

---

பெரிய வப்பனைப் பிரம னப்பனை
யுருத்திர னப்பனை முனிவர்க்
குரிய வப்பனை யமர ரப்பனை
யுலகுக்கோர் தனியப்பன் றன்னைப்
பெரிய வண்குருகூர் வண்சட கோபன்
பேணின வாயிரத் துள்ளும்
உரிய சொன்மாலை யிவையும்பத் திவற்று
லுய்யலாந் தொண்டீர் நங்கட்கே (கக)

(ப - ரை) பெரிய அப்பனை - எல்லாருக்கும் மேற்பட்ட ஸ்வாமியாய், பிரமன் அப்பனை - பிரம்மாவுக்கு ஸ்வாமியாய், ருத்திரன் அப்பனை - ருத்திரனுக்கு ஸ்வாமியாய், முனிவர்க்கு - ஸநகர் முதலான யோகிகளுக்கு, உரிய அப்பனை - விசேஷ கடாக்ஷம் செய்கிற ஸ்வாமியாய், அமரர் அப்பனை - தேவர்களுக்கு ஸ்வாமியாய், உலகுக்கு - உலகத்தார்க்கு, ஓர் தனி அப்பன் தன்னை - முக்கியமான ஸ்வாமியாயிருக்கிற எம்பெருமானை, பெரிய வண் - ஸம்பத்து நிறைந்த, குருகூர் - குருகூரில் எழுந்தருளி

யிருந்த, வண் - உதாரரான சடகோபன், பேணி-(காணவேணும் என்று) ஆசைப்பட்டுச் சொன்ன, இவை பத்தும் - இந்தப் பத்துப்பாட்டுக்களும், ஆயிரத்துள்ளும், உரியசொல்மாலை - எம்பெருமானுடைய குணங்களை நன்றாய்ச் சொல்லுகிறவைகளாய் மாலைபோல் சேர்க்கப்பட்டிருக்கிற பாட்டுக்கள், தொண்டீர் - விஷயங்களில் சபலமுள்ளவர்களே! நங்கட்கு - நமக்கு, இவற்றால் - இந்தப் பத்துப் பாட்டுக்களால், உய்யலாம் - பிழைக்கலாம்.

(கருத்து) பிரம்மாவுக்கும் ருத்திரனுக்கும், ஸநகர் முதலான யோகிகளுக்கும், தேவர்களுக்கும், உலகத்தாருக்கும், ஸ்வாமியாய் தனக்கு ஒருவன் ஸ்வாமி என்பதில்லாதவனாய் இருக்கிற எம்பெருமானைக் காணவேணுமென்று ஆசைப்பட்டு ஆழ்வார் அருளிச்செய்த இந்த பத்துப் பாட்டுக்கள் அவனுடைய குணங்களை நன்றாய்ப் பிரகாசிப்பிக்கின்றன. இவைகளை அடிக்கடி படித்தால் நீங்கள் எம்பெருமானைப் பெறலாம். நான் பட்டபாடு படவேண்டாம். நீர் ஏன் இப்பாடு படுகிறீர் என்றால் இப்போதே அவனை இந்தக் கண்களாலே பார்க்கவேணும் என்று ஆசைப்பட்டுப் பாடுகிறேன். அவனைப் பெறமுடியாது என்று வருத்தப்படவில்லை.

குறிப்பு:— 1. ஸநகர் முதலானவர்களுக்கு விசேஷ கடாக்ஷம் செய்தது அவர்கள் பிரம்ம பாவநர்களாகையால். பிரம்ம பாவநர்களாவது - எப்போதும் பிரம்மத்தையே தியாநம் பண்ணிக்கொண்டிருப்பவர்கள்.

2. ஆழ்வாருக்கு வண்மையாவது - இந்தப் பிரபந்தத்தைப் பண்ணி உபகாரம் செய்தது.

3. உலகத்தாரை தன்னுடையவர்களாக நினைத்து, அவர்களிடத்தில் ஸ்நேஹத்தால் 'நங்கட்கு' என்று சொன்னபடி (11)

𑌶𑍍𑌰𑍀𑌦𑍇𑌵𑍍𑌯𑌾𑌃 𑌪𑌤𑍍𑌨𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾𑌥𑍋 𑌰𑌘𑍁𑌯𑌦𑍁𑌕𑍁𑌲𑌯𑍋𑌰𑍍𑌜𑌾𑌤𑌵𑌾𑌨𑍍
𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍇𑌚𑍍𑌛𑌾𑌯𑌤𑍇𑌹𑌾 𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑌕𑌲𑌚𑌿𑌦𑌚𑌿𑌤𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌾
𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 । 𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌵𑌿𑌦𑍁𑌗𑍁𑌣𑌤𑌯𑌾
𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌮𑍇𑌵 𑌦𑍁𑌃𑌖𑌸𑍍𑌥𑌾𑌨𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌦𑍇𑌵𑍍𑌯𑌹𑌰𑌿𑌪𑌰𑌿𑌕𑌮𑍍𑌪𑌿
𑌪𑌰𑌂 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨𑍋𑌪𑌲𑍍𑌦𑌷𑍍𑌟𑍇𑌃 ॥ ॥௯௨॥

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானைக் காணவேணு மென்று ஆசைப்படுகிறவர்களுக்கு, அவன் மிகவும்வருத்தமில்லாமல் பார்க்கத்தகுந்தவன் என்பது பத்துக்காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) பிராட்டி முதலான தேவி முதலானவர்களையுடையவனாயிருப்பது; (2) ரகுகுலத்தில் அவதாரம் செய்தது; (3) யதுகுலத்தில் அவதாரம் செய்தது; (4) தன்னையாச்ரயித்தவர்கள் ஆசைக்குத்தகுந்தபடி ரூபத்தையெடுத்துக் கொள்ளுவது; (5, 6) எல்லாச் சேதனர்களுக்கும் அசேதநங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பது; (7) எல்லாருக்கும் ஸ்வாமியாயிருப்பது; (8) ஆச்ரிதர்களுடைய மனத்தைத் துளைக்கும் எல்லாக் குணங்களையுமுடையவனாயிருப்பது; (9) எம்பெருமானுக்குத் தாம் சேஷம் என்று அறிந்தவர்களுக்கும் துக்கமில்லாத ஸ்தாநமாகிய வைகுந்தத்தை ஆசைப்படும்படி செய்வது; (10) அளவில்லாத காந்தியுள்ளவனாயிருப்பது. (92)

---

## இரண்டாம் திருவாய்மொழி.

அவ:— எம்பெருமானைக் காணப்பெறாத துக்கமானது முற்றினபடியால் இந்தத் திருவாய்மொழியில் அவனைக் காணவேணும் என்று நாயகனைவிட்டுப் பிரிந்த நாயகியின் பேச்சாக ஆழ்வார் கூப்பிடுகிறார்.

(2) ஆழ்வாருக்கு அவனைக் காணுவதிலேயே ஆசை; வளைகளைப் பெறவேணும் காந்தியைப் பெறவேணும் என்றும் அவைகள் வேண்டுமென்றும் அவர் கருத்தன்று. பிரிவினாலுண்டான வருத்தத்தைக்காட்டுவதற்காக அப்படிச்சொன்னது. இப்படியே அசோகவநத்திலிருந்தபோது ஸீதை சொல்லியிருக்கிறாள்— "ராமனை விட்டு ராக்ஷஸிகளின் நடுவிலிருக்கிற எனக்கு பிழைத்திருப்பதாலேயாவது, நகைகளாலேயாவது, பணம் காசுகளாலேயாவது என்ன பிரயோஜநம்" என்று.

3. "ஸ்ரீ வைகுந்தத்துக்கு ஸ்வாமியானவனும் உன்னுடைய கடாக்ஷத்தை ஆசைப்படும்படியான வடிவழகையுடையவள் நீ. நீ ஆசைப்படுவதற்குத் தகுந்த விஷயமுண்டோ? நீ ஆசைப்படுவது எது? எதற்காக உனக்கு வருத்தமுண்டாயிருக்கிறது." என்று தோழிகள் கேட்க, இதில் பதில் சொல்லுகிறாள்:—

(எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்)

நங்கள் வரிவளை யாயங் காளோ
 நம்முடை யேதலர் முன்பு நாணி
நுங்கட்கி யானொன் றுரைக்கும் மாற்றம்
 நோக்குகின்றே னெங்குங் காண மாட்டேன்
சங்கஞ் சரிந்தன சாயிழந் தேன்
 தடமுலை பொன்னிற மாய்த்த ளர்ந்தேன்
வெங்கண் பறவையின் பாக னெங்கோன்
 வேங்கட வாணனை வேண்டிச் சென்றே (௧)

(ப - ரை) நங்கள் - நம்முடைய, வரி வளை - கோடுகளையுடைய வளைகளையுடையவர்களான, ஆயங்காள் ஓ - தோழிகளே! நம்முடை - நம்முடைய, ஏதலர் முன்பு - சத்துருக்கள் முன்னால்,

நாணி - வெட்கப்பட்டு, நுங்கட்கு - உங்களுக்கு, உரைக்கும், மாற்றம் ஒன்று - சொல்லத்தகுந்த வார்த்தை ஒன்றை, யான் - நான், நோக்குகின்றேன் - யோசித்து பார்க்கிறேன், எங்கும் காணமாட்டேன் - ஒருவழியிலுமிதைப்பார்க்கமாட்டேன்; வெம் கண் - கொடுமையான கண்களையுடைய, பறவையின் பாகன் - கருட பக்ஷியை நடத்துகிறவனான, வேங்கடவாணனை - திருவேங்கடமலையின் ஸ்வாமியை, வேண்டி - ஆசைப்பட்டு, சென்று - போய், (அடைந்து), சங்கம் - வளைகள், சரிந்தன - கைகளைவிட்டு நழுவின, சாய் - உடம்பின் காந்தியை. இழந்தேன், தட முலை - விசாலமான ஸ்தநங்கள், பொன் நிறமாய் - கெட்ட நிறமுள்ளவைகளாய், தளர்ந்தேன் - தளர்ச்சியை அடைந்தேன்,

(கருத்து) என்னுடைய தோழிகளே! நான் வருத்தப்படும் போதுவரிவளைகளுள்ளவர்களாய் ஸந்தோஷமாயிருக்கிறவர்களே! நாயகனிடம் போக ஆரம்பித்த என்னை, சத்துருக்கள் போல் தடுக்கிற தாய்மார்கள்முன்னால் வெட்கத்தினால் பதில் சொல்ல முடியவில்லை, அப்படியே உங்களுக்கும் எந்தச் சொல்லைக்கொண்டுச் சொல்லுகிறதென்று யோசித்துப் பார்க்கிறேன். என் வருத்தத்துக்கு அளவில்லாமையால் அதைச் சொல்லுகிற சொல் எனக்குத் தோன்றவில்லை. இதை நான் சொல்லுவானேன், என் உடம்பைப் பார்த்தால் உங்களுக்குத் தோன்றுதோ. பிரதிகூலர்களைக் கொடுமையாய்ப் பார்க்கும் கருடன்மேல் ஏறிக்கொண்டுவருகிறவனாய் எல்லாரும் தன்னை வந்து அடையும்படி வேங்கடமலைக்கு ஸ்வாமியாயிருக்கிற எம்பெருமானை ஒரு க்ஷணம் விடாமல் ஆசைப்படுகிறேன். அவனைக் காணப் பெறாமையால் என் கைகளிலிருந்து வளைகள் நழுவிவிட்டன. என் உடம்பின் காந்தி போய்விட்டது. என் ஸ்தநங்களின் நிறம் மாறிவிட்டது. என் உடம்பும் தளர்ந்துபோயிருக்கிறது.

குறிப்பு:-(1) தன்னைப்போலே வருத்தப்படுகிற தோழிகள் தங்கள் வருத்தத்தைக் காண்பித்தால் இந்த நாயகி அதிகமாய் வருத்தப்படுவள் என்று நினைத்து ஸந்தோஷப்படுகிறவர்கள் போல், தங்களைக் காட்டினார்கள். இது நாயகிக்குத் தெரியும். ஆனபோதிலும் தெரியாதவள்போல் பேசுகிறாள். இப்படி பேசுவதற்குக் காரணம் - இவர்கள் தன்னைத் தடுக்க எண்ணுகிறார்கள் என்று சில அடையாளங்களாலே பார்த்து அவர்களை வெறுத்துச்சொல்வது.

2. 'நம்முடைய' என்று தோழிகளைச் சேர்த்துக்கொண்டு சொல்லுவதின் கருத்து- நாயகனோடு தாம் சேரும்போது அவர்கள் ஸந்தோஷப்படுகிறவர்கள்-என்று.

இ—ம். சாய் - சாயை, கடைக்குறை. (1)

---

வேண்டிச் சென்றொன்று பெறுகிற் பாரி
　　லென்னுடைத் தோழியர் நுங்கட் கேலும்
ஈண்டி துரைக்கும் படியை யந்தோ
　　காண்கின்றி லேனிட ராட்டி யேன்நான்
காண்டகு தாமரைக் கண்ணன் கள்வன்
　　விண்ணவர் கோன்நங்கள் கோனைக் கண்டால்
ஈண்டிய சங்கும் நிறைவுங் கொள்வா
　　னெத்தனை கால மிளைக்கின் றேனே. (உ)

(ப- ரை) சென்று - (அவனிடத்திலே) போய், ஒன்று - ஒரு பிரயோஜநத்தை வேண்டி, பெறுகிற் பாரில் - அடையச் சக்தியுள்ளவர்களுக்கு (தலைவியாயிருக்கிற), என்னுடை தோழியர் - என்னுடைய தோழிகளே! நுங்கட்கேலும் - உங்களுக்காகிலும், ஈண்டு - இப்போது, இது - இந்த என் வருத்தத்தை, உரைக்கும்படியை - சொல்லும் விதத்தை, இடர் ஆட்டியேன் - துக்கமுடைய நான், காண்கின்றிலேன் - பார்க்கசக்தியில்லாதவளாயிருக்கிறேன், அந்தோ- ஐயோ! காண் தகு - (ஒவ்வொரு க்ஷணமும்) பார்க்கத்தகுந்தவைகளான, தாமரைக் கண்ணன், கள்வன் - (தன் அழகைக்காட்டி, எல்லாருடைய கண்களையும்) அபஹரிக்கிறவனும்; விண்ணவர்கோன் - நித்தியஸூரிகளின் தலைவனுமான, நங்கள் கோனை - நம்முடைய ஸ்வாமியைக் கண்டால் ஈண்டிய - (என்னை விட்டு அவனிடம் போய்) குவிந்திருக்கிற, சங்கு- வளைகளையும். நிறைவும் - அடக்கத்தையும், கொள்வான் வாங்கிக் கொள்ள, எத்தனை காலம் இளைக்கின்றேன்.

(கருத்து) "நீ ஆசைப்படுகிறவன் திருவேங்கடமுடையான். அவனை ஆசைப்படுவது தகுந்ததுதான். வைகுண்டநாதனையாசைப்படுவது அப்படியன்று. அவன்கிட்ட இருக்கவில்லை. நீ ஆசைப்பட்டால் உன்னால் கிடைக்கமுடியாதது உண்டோ?" என்று

சொல்லுகிறீர்களோ; அது ஸரிதான். நான் ஆசைப்பட்டால் எனக்குக் கிடைக்காததில்லை. ஆனாலும், திருவேங்கடமுடையானை ஆசைப்பட்டு அவனைக் காணப்பெறுமையால் வருத்தப்படுவது உங்களுக்குத் தெரியவில்லை. எனக்குப் பிரியத்தையே செய்கிற உங்களுக்கு இதைச் சொல்லி ஆகவேண்டிய நான் அதை எப்படிச் சொல்லுகிறதென்று பார்க்கிறேன். ஆனால் அதைச் சொல்லும் சொற்களை துக்கப்படுகிற நான் காணவில்லை. "அவனை ஆசைப்பட்டு உடனே பெறுமல் இப்படித் தளர்ந்துகொண்டிருக்கலாமா?" என்று சொல்லுகிறீர்களோ. என்னை விட்டுவிட்டு அவனிடம் போய்க் குவிந்திருக்கிற வளைகளையும் ஆத்மகுணங்களையும் திரும்பி நான் பெறுவதற்காக ஆசைப்பட்டு அது கிடைக்காமல் நான் இளைத்துப்போய் எத்தனை காலமாயிற்று. அவன் அழகு உங்களுக்குத் தெரியுமா? அவனை எவ்வளவுகாலம் அநுபவித்தாலும் ஒவ்வொரு க்ஷணமும் புதிது புதிதாய் தோன்றுகிறான். அவன் நித்தியஸூரிகளின் தலைவனாயிருந்து தாமரைப்பூக்கள்போன்ற தன்னுடைய திருக்கண்களின் அழகாலே எல்லாருடைய மனதையும் கண்களையும் அபஹரிக்கிறவன். இந்த என் வருத்தத்துக்கு முடிவு காணவில்லை. அவன் என்னோடு சேர்ந்து அவனே என் கைகளில் வளைகளைப்போட்டு என்னை ஸமாதானம் செய்யவேண்டும்.

குறிப்பு:—(1) நாயகி தன்னைப்போலத் தன் வளைகளும் குணங்களும் அறிவுள்ளவைகளாய் எம்பெருமானை ஆசைப்பட்டு அவனிடம் போய்ச் சேர்ந்திருக்கின்றன என்று எண்ணுகிறாள் என்பது "ஈண்டிய" என்பதின் கருத்து.

(2) முடிவு காணவில்லை என்பது "இளைக்கின்றேன்" என்ற நிகழ்காலச் சொல்லின் கருத்து.

(3) 'கொள்வான்' என்பதற்கு கைகளை விட்டு நழுவின வளைகளை அவன் தன்னுடன் சேர்ந்து தன் கைகளால் என் கையில் போடவேணுமென்று ஆசைப்படுகிறாள். இதனால் வளை வேணுமென்று ஆசைப்படவில்லை. இப்படி வளைகள் கையில் ஏறும்படி அவன் வரவேண்டுமென்பது கருத்து.

இ—ம். இடர் - துன்பம், இது ஆகுபெயராய் அதின் காரியமான துக்கத்தைச் சொல்லுகிறது. கொள்வான் - கொள்ள, வினையெச்சம்.

(2)

கால மிளைக்கி லல்லால் வினையேன்
நானிளைக் கின்றிலன் கண்டு கொண்மின்
ஞால மறியப் பழிசு மந்தேன்
நன்னுத லீரினி நாணித் தானென்
நீல மலர்நெடுஞ் சோதி சூழ்ந்த
நீண்ட முகில்வண்ணன் கண்ணன் கொண்ட
கோல வளையோடு மாமை கொள்வா
னெத்தனை காலமுங் கூடச் சென்றே. (௩)

(ப-ரை) நீல - நீலமான, மலர் - (நாலு பக்கமும்) பரவுகிற, நெடும் - பெரிதான (அளக்க முடியாத) சோதி - பிரபையாலே சூழ்ந்த - சூழப்பட்ட, நீல முகில் வண்ணன்-நீலமேகத்தினுடைய வர்ணமுள்ளவனான கண்ணன், கொண்ட - அபஹரித்த, கோல வளையோடு - அழகான வளைகளோடு, மாமை - என் காந்தியை, கொள்வான் - வாங்கிக்கொள்ள, எத்தனை காலம், கூடசென்றும்-போனாலும், (அவனிடமிருந்து வாங்கிக்கொள்ளுவேன்). காலம் இளைக்கில் - (நானிதைச் செய்து முடிப்பதற்கு முன்னால்,) காலம் என்கிற தத்துவம் முடிந்துபோனாலும் போகும், அல்லால் - அல்லது, வினையேன் - பாபம் செய்த நான், இளைக்கின்றிலன் - ஒழிகிறதில்லை, கண்டுகொண்மின் - இதை நீங்களே பார்க்கலாம். ஞாலம் அறிய - உலகத்தார் அறியும்படி, பழி சுமந்தேன், நல் நுதலீர் - நல்ல நெற்றியையுடையவர்களே! இனிமேல், நாணி தான் - வெட்கப்பட்டுத்தான். என் - என்ன பிரயோஜநம் ?

(கருத்து) எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெறாமல், உனக்கு உள்ளவைகளையும் இழந்தாயே, அவைகளைக் கொள்வதற்காக நீ பிரயத்தினம் பண்ணி வெகுகாலமாயிற்றே, அவைகள் கிடைக்கவில்லையே ! அவைகளை விட்டுவிடு என்று சொல்லுகிறீர்களோ, ஒரு நீலமேகத்தைச் சூழ்ந்து நீலமான நான்கு பக்கங்களிலும் பரவுகிற அளக்கமுடியாத பிரபையிருந்தால் எப்படி அழகாயிருக்குமோ, அதுபோல நீல பிரபையின் நடுவிலிருக்கிற கண்ணன் அபஹரித்துக்கொண்டுபோன என்னுடைய அழகிய வளைகளையும் காந்தியையும் எவ்வளவு காலமானாலும் திருப்பிக்கொண்டு வருவேன். இப்படி செய்வதற்கு முன்னாலே

காலம் முடிந்தாலும் முடியும். அவன் எட்டமுடியாதவன் என்று அவனைவிட முடியாதபடி பாபம்பண்ணின நானோ இதைத் திருப்பி வாங்காமல் ஒழிகிறதில்லை. "இதை வாயாலே சொல்லு கிறாய்; உன்னால் செய்யமுடியுமோ" என்று சொல்லுகிறீர் களோ? இதை நீங்களே கண்களாலே பார்க்கப்போகிறீர்கள். அவன் உன்னை ஆசைப்படவும் நீ அவனுக்கு அருமையாயும் இருக்கவேண்டியவள். நீ மேல்விழுந்து அவனை ஆசைப்பட்டால் உலகத்தார் பழி சொல்லுவார்களே. நீ அதற்கு வெட்கப்படவேண்டாமா? என்று சொல்லுகிறீர்களோ? உலகத்தார் அறிய நான் பழி சுமந்து எவ்வளவு காலம் ஆயிற்று. இனி நான் வெட்கப்பட்டு என்ன பிரயோஜநமுண்டாகும்?

இ—ம். கொள்வான்— கொள்ள; வினையெச்சம். (3)

அவ:— "அவனை ஆசைப்பட்டு முன்னாலேயே உன்னுடைய நகைகளை இழந்தாயே, இனி பாக்கியிருக்கிறவைகளையும் இழந்துபோகாமல், அவனை ஆசைப்படுவதை விட்டுவிடு" என்று தோழிமார் சொல்ல, அதற்கு இதில் பதில் சொல்லுகிறாள்—

கூடச் சென்றே னினியென் கொடுக்கேன்
கோல்வளை நெஞ்சத் தொடக்க மெல்லாம்
பாடற் றொழிய விழந்து வைகல்
பல்வளை யார்முன் பரிச ழிந்தேன்
மாடக் கொடிமதிள் தென்கு ளந்தை
வண்குட பால்நின்ற மாயக் கூத்தன்
ஆடற் பறவை யுயர்த்த வெல்போர்
ஆழி வலவனை யாத ரித்தே. (ச)

(ப-ரை) மாடம் - வீடுகளையும், கொடி மதிள் - கொடியோடு கூடிய மதிள்களையுமுடைய, தென் - தென்தேசத்திலிருக்கிற, குளந்தை - திருக்குளந்தைஎன்கிற ஊரினுடைய, வண்குட பால்- அழகிய மேல்பாகத்தில், நின்ற - நிற்கிறவனாய், ஆடல் பறவை- நர்த்தநத்தையுடைய கருடனால், உயர்த்த - தூக்கப்பட்டவனாய், போர் - சண்டையில், வெல் - ஜயிக்கிற, ஆழி - திருவாழியை, வலவனை - வலது கையிலுடையவனாயிருக்கிற, மாயக்கூத்தன் - மாயக்கூத்தனை, ஆதரித்து - ஆசைப்பட்டு, கூடச்சென்றேன் -

அவனுடன் ஸம்ச்லேஷிப்பதற்காகப் போனேன், கோல்வளை-அழகான வளைகளும், நெஞ்சம் தொடக்கம்-மனது முதலான எல்லாவற்றையும், பாடு - என் பக்கத்தில், அற்று - சிறிதும்இல்லாமல், ஒழிய் - போம்படி, இழந்து - போக்கிவிட்டு, வைகல் - எப்போதும், பல்-பல, வளையார்முன் - கைகளில் வளைகளையுடையவர்கள் முன்பு, பரிசு - வெட்கமாகிய என் ஸ்வபாவத்தை, அழிந்தேன் - இழந்தவளானேன், இனி என் கொடுக்கேன் - இனிமேல் எதை கொடுப்பேன்.

(கருத்து) மேருமலையின் சிகரங்கள்போலிருக்கிற வீடுகளையும் கொடிகளோடு கூடிய மதில்களையுமுடைய தென்குளந்தையில் எல்லாருக்காகவும் மேல் பாகத்தில் நிற்கிறவனாய், அவனுக்கு வாஹநமாயிருப்பதால் ஸந்தோஷப்பட்டு கூத்தாடுகிற கருடனால் தூக்கப்பட்டவனாய், சண்டையில் ஜயிக்கும் தன்மையுள்ள திருவாழியை வலது திருக்கையிலுடையவனாய் இருக்கிற மாயக்கூத்தனை ஆசைப்பட்டு அவனிடம் சேருவதற்குப் போனேன்; என்னுடைய அழகான வளைகளையும் மனதையும் இன்னமும் எனக்குள்ள எல்லாவற்றையும் இழந்துவிட்டேன். மற்ற ஸ்திரீகள் ஒருவேளை போட்டுக்கொண்டும் ஒருவேளை போட்டுக்கொள்ளாமலுமிருக்கக்கூடிய வளைகளை எப்போதும் கைகளில் உள்ளவர்களாயிருக்கிறார்கள். அவர்களுக்கு முன்னாலே என்னை விட்டு ஒருபோதும் பிரியக்கூடாத வெட்கத்தையும் இழந்துவிட்டேன். இனி நான் இழக்காமல் வைத்துக்கொண்டிருக்க என்னிடம் என்ன இருக்கிறது?

குறிப்பு— 'மாயக்கூத்தன்' என்பது அவ்வூரிலுள்ள எம்பெருமானின் திருநாமம். ஆச்சரியமாய்க் கூத்தாடுகிறவன் என்பது அதற்குப் பொருள். அவன் திருமேனியைப் பார்த்தால் நர்த்தனம் பண்ணுவதுபோல் அழகாய் இருக்கிறது.

இ—ம். கோல்—கோலம்; கடைக்குறை. (4)

---

அவ:— 'எம்பெருமானை ஆசைப்பட்டால் அவனை அடைய முடியாது. அவன் துர்லபன்; அவனை ஆசைப்படவேண்டாம்' என்று தோழிகள் சொல்ல, அதற்கு இதில் பதில் சொல்லுகிறாள்—

ஆழி வலவனை யாத ரிப்பு
மாங்கவன் நம்மில் வரவு மெல்லாம்
தோழி யர்காண் நம்முடை யமேதான்
சொல்லு வதோவிங் கரிய துதான்
ஊழிதோ றூழி யொருவ னாக
நன்குணர் வார்க்கு முணர லாகா
சூழ லுடைய சுடர்கொ ளாதித்
தொல்லை யஞ்சோதி நினைக்குங் காலே. (௫)

(ப - ரை) தொல்லை - பழைய (அநாதியான), அம் - அழகான, சோதி - காந்தியோடு கூடிய திருமேனியையுடையவனாய், ஆதி - உலகத்துக்குக் காரணமாயிருக்கிறவனை, நினைக்குங்கால் - நிரூபணம் பண்ணிப்பார்க்கும்போது, நன்கு - நன்றாக, உணர்வார்க்கும் - அறியத்தகுந்தவர்களுக்கும், ஊழிதோறு ஊழி - ஒவ்வொரு கல்பத்திலும் (எல்லாக் காலத்திலும்), ஒருவனாக - இன்ன ஸ்வபாவமுள்ளவன் என்று, உணரல் ஆகா - அறியமுடியாதபடி, சூழல் உடைய - (ஆச்ரிதர்களைத் தன் வசப்படுத்திக் கொள்ளும்) உபாயங்களை (வேலைகளை) உடைய, சுடர் கொள் - காந்தி முதலான நல்ல குணங்களைக்கொண்ட, ஆழி வலவனை - திருவாழியை வலதுகையிலுடையவனை, ஆதரிப்பும் - ஆசைப்படுவதும், ஆங்கு - அப்படி அவனை ஆசைப்படும்போது, அவன், நம்மில் - நம்மிடத்தில், வரவும் - வருகையும், எல்லாம் - இவையெல்லாம், தோழியர்காள் - தோழிகளே! நம்முடையமேதான் - நம்முதாக உடையோமோ, (நமக்குத்தானு இவைகள் முதலில் நேருகின்றன, அநாதியாக நடக்கவில்லையா?) தோழியர்காள்! சொல்லுவதோ-(அவனை அடையமுடியாதென்று) சொல்லுவது, இங்கு அரியதுதான் - இவ்விடத்தில் அரியதோ ?

(கருத்து) அநாதியாய் அழகான காந்தியுள்ள திருமேனியை உடையவனாய், உலகத்துக்குக் காரணமாயிருக்கிற எம்பெருமானை நிரூபணம் செய்துபார்த்தால், தத்துவங்களையுள்ளபடி அறிந்த ஜனகர் முதலான யோகிகளுக்கும், அவன் ஸ்வபாவமின்னதென்று அறியமுடியாது. ஆச்ரிதர்களைத் தனக்கு வசப்படுத்திக்கொள்ளும்படியான பல விதமான வேலைகளைச் செய்கிறான், அவனுக்குக் காந்தி முதலான பல நல்ல குணங்களும் இருக்கின்றன. ஆனபோதிலும் அவன் எல்லாருக்கும்

மேற்பட்டவனாக இருப்பதுபோல தாழ்ந்தவர்களுடன் சேரும் படியான ஸ்வபாவமும் அவனுக்கிருக்கிறதே. நாம்தானா முத வில் அவனை ஆசைப்படுகிறோம்; அவன் நம்மிடம்தானா முத வில் வருகிறான். இவைகள் வெகுகாலமாய் அநேகம்பேர்களுக்கு நேரவில்லையா? தோழிகளே! எனக்கு ஸமானமான ஸ்வபாவ முள்ளவர்களாக இருக்கவேண்டாமா? நீங்கள். நான் அவனை ஆசைப்படும்போது அவனை ஆசைப்படாதே என்று சொல் லுவது உங்களுக்குத்தகுமா? அவனை அடையமுடியாது என்று நீங்கள் சொல்லுவது இவ்விடத்தில் அருமையோ? உங்களைத் தடுப்பாரில்லை. ஆதலால், இப்படி பொய்யானதைச் சொல்லு கிறீர்கள்.

இ—ம். உணரல் ஆகா— ஆகாத; ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (5)

---

அவ-எம்பெருமான் நாங்கள் சொல்லுகிறபடி அடையமுடியா தவனல்லவா? நாங்கள் பொய்யைச் சொல்லுகிறோமா? என்று தோழிகள் சொல்ல,அதிற்கு பதில் இதில் அருளிச்செய்கிறார்—

தொல்லை யஞ்சோதி நினைக்குங் காலென்
சொல்லள வன்றிமை யோர்த மக்கும்
எல்லை யிலாதன கூழ்ப்புச் செய்யு
மத்திறம் நிற்கவெம் மாமை கொண்டான்
அல்லி மலர்த்தண் டுழாயுந் தாரான்
ஆர்க்கிடு கோவினிப் பூசல் சொல்லீர்
வல்லி வளவயல் சூழ்கு டந்தை
மாமலர்க் கண்வளர் கின்ற மாலே. (௬)

(ப - ரை) நினைக்கும் கால் - நினைத்துப் பார்க்கும்போது, தொல்லை அம் சோதி, என் சொல் அளவன்று - என்னுடைய சொற்களுக்குள் அடங்குகிறவனில்லை, இமையோர் தமக்கும் - (அதிக ஜ்ஞானமுடைய பிரம்மா முதலான) தேவர்களுக்கும், எல்லை இலாதன - எல்லையில்லாதவைகளான, கூழ்ப்பு செய்யும்- ஸம்சயங்களைப் பண்ணுகிறான். அத்திறம் - அந்தப் பெருமை, நிற்க - இருக்கட்டும், வல்லி - (புஷ்பக்)கொடிகளாலும், வளவ யல் - அழகிய வயல்களாலும், சூழ் - சூழப்பட்ட, குடந்தை - திருக்குடந்தையிலே, மா மலர் கண் - சிலாக்கியமான தாமரைப்பூப்போன்ற திருக்கண்கள், வளர்கின்ற - தூங்குகிற,

மால் - ஆச்ரிதரிடத்தில் ஆசையுள்ளவன், எம்மாமை - என் உடம்பின் காந்தியை, கொண்டான் - அபஹரித்துவிட்டான், அல்லி மலர் தண் துழாயும் - கேஸரங்கள் நிறைந்த புஷ்பங்களை உடைய குளிர்ந்த துளஸியையும், தாரான் - தருகிறானில்லை, இனி - இப்படி அவன் நம்மைப் படுத்தினபின்பு, ஆர்க்கு-எவரிடம், பூசல்இடுகோ - கத்தவேண்டியது, சொல்லீர்-சொல்லுங்கள்.

(கருத்து) நினைத்துப்பார்க்கும்போது தொல்லை அம் சோதி என் சொல்லில் அடங்குகிறவனில்லை. அதிக ஜ்ஞாநமுடைய பிரம்மா முதலான தேவர்களுக்கும் எல்லையில்லாத ஸங்கேதஹங்களைச் செய்கிறான். இப்படி அவன் மிகவுமுயர்ந்தவன்தான். ஆனபோதிலும் அவனுக்கு ஸௌலப்யம் என்கிற குணமும் ஆச்ரிதர்களிடத்தில் ஆசையுமிருக்கின்றன. என்னை விஷயீகரிப்பதற்காகவும்,நான் கூப்பிட்டால் கேட்கும்படியாகவும் வல்லிவயல் சூழ் திருக்குடந்தையில்படுத்துக்கொண்டிருக்கிறான்.என்னுடைய காந்திமுதலிய குணங்களையபஹரித்துக்கொண்டு கண்வளர்கிறான். என்னை வருத்தப்படுத்தி என்னுடன் சேராமலிருந்தபோதிலும் தன்னுடைய ஸ்பர்சமுள்ள அல்லிமலர்த்துழாயையாவது கொடுக்கலாமே. அதையும் கொடுக்கிறதில்லை. இப்படி நம்மிடத்தில் உறவு பண்ணி வருத்தப்படுத்துகிறவனைத்தானே கூப்பிடவேணும். உறவில்லாத வேறு எவரிடத்தில் போய்க் கதறுகிறது. அது பிரயோஜநப்படுமோ ? (6)

---

அவ:— 'நீ இப்படி ஆசைப்படும்போதும் வராதவனை ஆசைப்படுகிறவர்களுண்டோ' என்று தாய்மார்களும் தோழிகளும் சொல்ல, அதற்குப் பதில் சொல்லுகிறார்—

மாலரி கேசவ ஞர ணன்சீ
மாதவன் கோவிந்தன் வைகுந்த னேன்றேன்று
ஓலமிட வென்னைப் பண்ணி விட்டிட்
டோன்று முருவுஞ் சுவடுங் காட்டான்
ஏல மலர்க்குழ லன்னை மீர்காள்
என்னுடைத் தோழியர் காளேன் செய்கேன்
காலம் பலசென்றுங் காண்ப தானை
யுங்க ளோடெங்க ளிடை யில்லையே. (எ)

(ப-ரை) மால் - ஆச்ரிதரிடத்தில் ஆசையே ஒரு ரூபத்தை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறதோ! என்று சொல்லும்படியிருக்கிறவன், அரி-அவர்களுடைய பாபங்களைப் போக்குகிறவன், கேசவன்-கேசி என்கிற அஸுரனைக்கொன்றதுபோல் அவர்களுடைய விரோதிகளை நாசம் பண்ணும் ஸ்வபாவமுள்ளவன், நாரணன் - எல்லா நல்ல குணங்களுக்குமிருப்பிடமானவன், சீ மாதவன் - இந்தக்குணங்களுக்கு ஒரு பெருமையைச் செய்யும் பிராட்டிக்குக் கணவன், கோவிந்தன் - பசுக்களும் கிட்டும்படியான ஸுலபன், வைகுந்தன்-ஆச்ரிதர்களுக்குக் கொடுப்பதற்காக உயர்ந்த வைகுந்தம் என்கிற விபூதியையுடையவன், என்று என்று - இப்படி இடைவிடாமல் சொல்லி, ஓலமிட - கூப்பிட, என்னை பண்ணி, விட்டு-என்னைத் தன்னிடமிருந்து பிரித்து, இட்டு - திருணத்தை விடுவதுபோல் விட்டுவிட்டு, ஒன்றும்-கொஞ்சமும், உருவும்-தன்னுடையரூபத்தையும்,சுவடும் - அடையாளத்தையும்,காட்டான் - இனி காட்டுகிறதில்லை, ஏலமலர் குழல் - ஏலம்போல் குளிர்ந்து வாஸனையுடைய புஷ்பங்களை அணிந்த கூந்தலையுடையவர்களான, அன்னை மீர்காள்! என்னுடைய தோழிமீர்காள் - எனக்குப் பிரியம் செய்யவேண்டிய தோழிகளே! என் செய்கேன்-என்னத்தைச் செய்வேன், காலம் பல சென்றும் - வெகுகாலமானாலும், காண்பது - அவனை நான் பார்ப்பது (நிச்சயம்). ஆணை - நான் ஆணையிடுகிறேன், உங்களோடு - (எனக்கு இடைஞ்சல் பண்ணும்) உங்களோடு, எங்கள் இடை இல்லை - எங்களுக்கு (எனக்கு) ஸம்பந்தம் இல்லை.

(கருத்து) மால், ஹரி, கேசவன் நாராயணன், ஸ்ரீமாதவன் கோவிந்தன் வைகுந்தன் என்று இடைவிடாமல் சொல்லும்படி என்னைப் பண்ணி, தன்னைவிட்டுஎன்னைப் பிரித்து திருணத்தைப் போல் தள்ளிவிட்டுப் போய்விட்டான். கோபிகளுக்கு கண்ணன் வந்து ஸேவை ஸாதித்ததுபோல் தன் ரூபத்தைக் காண்பிக்கிறதில்லை. சக்ரவர்த்திதிருமகன் தன்னைப் பார்க்க வந்த பரதனுக்குத் தான் இருந்த இடத்தைக் காட்டும் புகை முதலான சில அடையாளங்களைக் காட்டினதுபோல் எனக்கு ஓர் அடையாளத்தையும் காண்பிக்கிறானில்லை. ஏலமலர்க்குழல் அன்னைமீர்காள்! என்னுடைய தோழியர்காள்! நான் என்ன செய்வேன். ஆனால் நீங்கள் சொல்லுகிறபடி அவனை விடமுடியாது. எவ்

வளவு காலமானாலும் அவனைக் கட்டாயம் பார்ப்பேன். இந்த விஷயத்தில் சபதம் பண்ணுகிறேன். அவனை விட்டுவிடு விட்டுவிடு என்று நிர்ப்பந்தம் பண்ணுகிற உங்களோடு எனக்குள்ள உறவை விட்டுவிட்டேன்.

குறிப்பு— ஏலமலர்க்குழல் — ஏலத்தையும் மலரையும் அணிந்த கூந்தல் என்றும் பொருள் கொள்ளலாம். ஏலம் என்பது ஓர் வகை மயிர்ச்சாந்து. (7)

---

அவ:— கீழ்ப்பாட்டில் தம்மைத் தடுத்தவர்களுடன் தமக்கு உறவில்லையென்று ஆழ்வார் சொன்னார். இதில் தான் வளர்த்த கிளி முதலானவைகளுடன் உள்ள உறவை விடுகிறார்—

இடையில் லையான் வளர்த்த கிளிகாள்
பூவை கள்காள் குயில்காள் மயில்காள்
உடைய நம்மாமையுஞ் சங்கும் நெஞ்சு
மொன்று மொழிய வொட்டாது கொண்டான்
அடையும் வைகுந்த மும்பாற் கடலு
மஞ்சன வெற்பு மவை நணியக்
கடையறப் பாசங்கள் விட்ட பின்னை
யன்றி யவனவை காண்கொ டானே. (அ)

(ப-ரை) யான் வளர்த்த, கிளிகாள்! - கிளிகளே! பூவை கள் காள் - பூவைகளே! குயில்காள்! மயில்காள்! நம்முடைய - என்னுடைய, மாமையும் - நிறத்தையும், (சோலையையும்) சங்கும் - வளைகளையும், நெஞ்சும் - மனதையும், ஒன்றும் ஒழிய ஒட்டாது - ஒன்றும் என்னிடத்தில் மீதியிராதபடி, கொண்டான் - எடுத்துக்கொண்டான். (ஆனாலும்) அடையும் - அடையவேண்டியவைகளான, வைகுந்தமும், பாற்கடலும், அஞ்சன வெற்பும் - திருவேங்கடமலையும், அவை - ஆகிய அவைகள், நணிய - கிட்டினவைகள்; கடை - மீதி (வாஸனை) யும், அற - போகும்படி, பாசங்கள் - பற்றுக்கள், விட்ட பின்னை யன்றி - (நம்மை விட்டுப்) போனபின்பு அல்லது, அவன், அவை - அவை களை; காண் கொடான் - காண கொடான், இடை இல்லை - உங்களுக்கு என்னிடம் இடமில்லை.

(கருத்து) நான்வளர்த்த கிளிகளே! பூவைகளே! குயில்களே! மயில்களே! எம்பெருமான் என்னுடைய சோலையையும் வளைகளையும் மனதையும் ஒன்றும் என்னிடம் இராதபடி தான் வந்து என்னுடன் சேராமல் தாமதித்து எடுத்துக்கொண்டான். ஆனாலும், அடைய வேண்டிய வைகுந்தமும் திருப்பாற்கடலும் அஞ்சநமலை என்கிற திருவேங்கடமலையும் எல்லா விஷயங்களிலுமுள்ள பற்றை வாஸனையோடு விட்டவர்களுக்குத்தான் கிட்டினவைகள். எல்லாப் பற்றுக்களையும் விட்டபிறகுதான் அவைகளை எனக்குக் கொடுப்பன்; முன்னால் கொடுக்கமாட்டான். உங்களோடு கூட உறவும் அவைகளை அடைவதற்குத் தடையாயிருக்கிறது. ஆகையால், அந்த உறவையும் விட்டுவிட்டேன்.

குறிப்பு— (1) ஆதி பரதனுக்கு மானிடத்திலிருந்த பற்று ஸம்ஸாரத்தை விடுவதற்குத் தடையாயிருந்ததுபோல், தமக்கும் கிளிகள் முதலானவைகளுடன் உறவு எம்பெருமானை அடைவதற்குத் தடையாயிருக்கிறது என்பது ஆழ்வார் திருவுள்ளம்.

(2) 'வளர்த்த' என்று இறந்த காலத்தாலே சொல்லியது ஆழ்வார் அவைகளோடு பற்றை விட்டுவிட்டார் என்பதைக் காட்டுகிறது.

(3) அர்ச்சையாய் அவதாரம் பண்ணின இடங்களில் வேங்கடம் வைகுந்தம்போல் இருக்கிறது என்பது கருத்து.

(4) "ரத்நங்கள் நிறைந்த பூமியை ஒருவன் கொடுத்தாலும் அவனுக்குக் கிருஷ்ணன் ஸுலபன் அன்று; எவன் அவனைத் தவிர வேறொன்றில் மனதை வைக்கிறதில்லையோ அவனால்தான் அவனை அடையமுடியும்" என்கிற இது எம்பெருமானுடைய ஸ்வபாவம் என்பது விளங்குகிறது.

இ—ம். காண் கொடான்- காண் - காண, ஈறு கெட்ட வினையெச்சம். (8)

---

அவ:— தோழிகளைக் காட்டிலும் வேறு சிலர் "எம்பெருமான் தன்னை உனக்குக் காட்டானோ" என்று சொல்ல, விஷயங்களிலுள்ள எல்லாப்பற்றையும் விடாதவர்களுக்குத் தன்னைக் காட்டான் என்று பதில் சொன்னாள். அவர்கள் மறுபடியும் அவனை

ஆசைப்பட்டுப் பெருமல் எவ்வளவோ ஏற்கெனவே இழந்து விட்டாயே, மீதியிருப்பதையும் இழக்கவேண்டாம்'' என்று சொல்லி அவர்கள் தடுக்க, அவர்களைப்பார்த்துச் சொல்லுகிருள்-

காண்கொடுப்பா னல்ல ஞார்க்குந் தன்னைக்
கைசெயப் பாலதோர் மாயந் தன்னுல்
மாண்குறள் கோல வடிவு காட்டி
மண்ணும் விண்ணும் நிறைய மலர்ந்த
சேண்சுடர்த் தோள்கள் பலத ழைத்த
தேவ பிராற்கென் நிறைவி னேடு
நாண்கொடுத் தேனினி யென்கொ டுக்கே
னென்னுடை நன்னுதல் நங்கை மீர்காள். (௩)

(ப-ரை) ஆர்க்கும் - எவர்களுக்கும், தன்னை, காண்கொடுப் பான் அல்லன் -பார்ப்பதைக் கொடுக்கிறவன் அல்லன், தன்னுல், கைசெய் - கையாலே செய்வதற்கு, அப்பாலது - வெகு தூரத் திலிருப்பதான, (முடியாததான), ஓர் - ஒப்பில்லாத, மாயம் - ஆச்சரியமான, மாண் குறள் கோலம் - வாமந பிரம்மசாரியின் வேஷமான, வடிவு காட்டி - திருமேனியைக் காட்டி, மண்ணும் - பூமியும், விண்ணும் - மேல் உலகங்களும், நிறைய - நிறையும் படி, மலர்ந்த - வளர்ந்தவனுய், சேண் சுடர் - அளவில்லாத காந் தியை உடைய, பல தோள்கள், தழைத்த - தழைத்தவனுய் இருந்த, தேவபிராற்கு- தேவர்களுக்கு உபகாரம் செய்தவனுக்கு, என் - என்னுடைய, நிறைவினேடு - அடக்கத்தோடு, நாண் - வெட்கத்தை, கொடுத்தேன். நல் நுதல்-நல்ல நெற்றியை உடைய, என்னுடை - என்னுடைய, நங்கைமீர்காள் - குணங்கள் நிறைந்த ஸ்திரீகளே! இனி, என் கொடுக்கேன் - எதைக் கொடுப்பேன்.

(கருத்து) எம்பெருமான் தனக்கு எவ்வளவு வேண்டிய வர்களாயிருந்தாலும் அவர்களுக்கு வேறு விஷயங்களில் மனதிருந் தால் தன்னைக் காட்டுகிறதில்லை. எல்லாம் அறிந்து எதையும் செய்ய சக்தியுள்ள தன்னுலும் செய்யமுடியாதது என்று தோன் றும் படியான ஒப்பில்லாத ஆச்சரியமான வாமந பிரம்மசாரி யின் ரூபத்தை எடுத்துக்கொண்டு, அதின் அழகாலே மஹா பலியை மயக்கி, பூமியும் மேல் உலகங்களும் நிறையும்படி வளர்ந் தவனுய் அளவில்லாத காந்தியை உடைய பலதோள்கள் கற்பக

மரத்தின் கிளைகள் போல் தழைத்தவனும், தான் எடுத்துக் கொண்ட பூமி முதலான உலகங்களைத் தேவர்களுக்குக்கொடுத்து உபகாரம் செய்தவனுமிருக்கிறவனுக்கு என்னுடைய ஆழமான ஸ்வபாவத்தையும் வெட்கத்தையும் கொடுத்துவிட்டேன். மேலும், எல்லாம் இழந்தபிறகு, என்னிடத்தில் வேறு இழப்பதற்கு ஒன்றுமில்லை நல் நுதல் நங்கைமீர்காள்.

குறிப்பு— (1) தன்னைப்போல் அவர்கள் வருத்தப்படாமையால் அவர்கள் முகங்கள் பிரகாசிக்கின்றன என்பதும், தங்களுடைய குணங்களைத் தம்மைப்போல் அவர்கள் இழக்கவில்லை என்பதும், "நன்னுதல் நங்கைமீர்காள்" என்பதின் கருத்து.

(2) 'மலர்ந்த' என்பதற்குக் கருநெய்தல் பூவானது மலர்ந்து, நீலமாயும் மிருதுவாயும் வாஸனையுள்ளதாயும் மனதை இழுப்பதாயும் இருப்பதுபோல் எம்பெருமானுடைய திருமேனி நீலகாந்தியுள்ளதாயும், மிருதுவாயும், வாஸனையுள்ளதாயும், பார்த்தவர்களின் கண்ணையும் மனதையும் இழுப்பதாயும் இருந்தது என்பது கருத்து. (9)

---

அவ:— அவர்கள் மறுபடியும் "ஆகிலும் அவனை ஆசைப்படுவது உனக்குத் தகுந்தது அன்று" என்று சொல்ல, நாயகி அதற்கு இதில் பதில் சொல்லுகிறாள்—

என்னுடை நன்னுத னங்கை மீர்காள்
யானினிச் செய்வதெ னென்னெஞ் சென்னை
நின்னிடை யேனல்லே னென்று நீங்கி
நேமியுஞ் சங்கு மிருகைக் கொண்டு
பன்னெடுஞ் சூழ்சுடர் ஞாயிற் றோடு
பான்மதி யேந்தியோர் கோல நீல
நன்னெடுங் குன்றம் வருவ தொப்பான்
நாண்மலர்ப் பாத மடைந்த துவ்வே. (௧௦)

(ப-ரை) என் நெஞ்சு-என் மனது, "நின் இடையேன் அல்லேன் - நான் உனக்கு இடமுள்ளவன் அல்லேன்" என்று, என்னை நீங்கி - என்னை விட்டுப் பிரிந்துபோய், நேமியும் - சக்ரத்தையும், சங்கும்- சங்கத்தையும், இரு கை கொண்டு- இரண்டு

திருக்கைகளில் வைத்துக்கொண்டு, பல, நெடும் சூழ் - வெகு தூரத்திலும் நாலுபக்கத்திலும் பரவுகிற, சுடர் - பிரபையை உடைய, ஞாயிற்றோடு - ஸூர்யனோடு, பால் மதி - பாலைப் போன்ற சந்திரனையும், ஏந்தி - ஏந்திக்கொண்டு, ஓர் கோலம் - ஒப்பில்லாமல் அழகான, நீல - இந்திரநீலவர்ணமுள்ள, நல்- நல்ல, நெடும் குன்றம் - உயர்ந்த மலை, வருவது ஒப்பான் . நடந்து வருவது போலிருக்கிறவனுடைய, பாதம் - திருவடிகளை, அடைந்தது - சேர்ந்து விட்டது; நல் நுதல் நங்கைமீர்காள்! யான் இனி செய்வது, என் - என்ன இருக்கிறது.

(கருத்து) நான் என் தோழிகளைப் பார்த்து "உங்களோடெங்களிடை இல்லை" என்று சொன்னது போல் என் மனதும் "உனக்கு இடம்கொடுத்து, நீ சொல்வதைச் செய்யும் காரணமாக இருக்கமாட்டேன்" என்றுசொல்லி, என்னைவிட்டுப்பிரிந்து போய் சக்ரத்தையும் சங்கையும் இரண்டு திருக்கைகளில் ஏந்திக் கொண்டு, ஓர் இந்திரநீலமலை, பலவிதமான எல்லாத் திக்குக்களிலும் வியாபித்த தேஜஸை உடைய ஸூர்யனையும், பால் போன்ற சந்திரனையும் ஏந்திக்கொண்டு நடந்து வருவதுபோல்அழகாய் நடந்துவருகிற எம்பெருமானுடைய திருவடிகளைச் சேர்ந்து விட்டது. நல் நுதல் நங்கை மீர்காள்! மனது எனக்கு அடங்காமல் என்னை விட்டுப்போன பிறகு நான் நீங்கள்சொல்லுகிற ஹிதத்தை எப்படிச் செய்யக் கூடும்?

குறிப்பு- 'பால் மதி' என்பதற்குப் பால்போல் வெளுப்பாயும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதாயும் இருக்கும் சந்திரன் என்பது பொருள்.

(10)

---

பாத மடைவதன் பாசத் தாலே
மற்றவன் பாசங்கள்மு ற்ற விட்டுக்
கோதில் புகழ்க்கண் ணன்றன் னடிமேல்
வண்குரு கூர்ச்சட கோபன் சொன்ன
தீதிலந் தாதியோ ராயி ரத்துள்
ளிவையுமோர் பத்திசை யோடும் வல்லார்
ஆதுமோர் தீதில ராகி யிங்கு
மங்குமேல் லாமமை வார்கள் தாமே. (கக)

(ப-ரை) பாதம் அடைவதன் பாசத்தால் - எம்பெருமானுடைய திருவடிகளை அடைவதிலுள்ள ஆசையாலே, மற்ற- வேறு விஷயங்களிலுள்ள, வண் - திருடமான, பாசங்கள் - ஆசைகளை, முற்ற விட்டு - முழுவதையும் விட்டு விட்டு, கோது இல் - குற்றமில்லாத, புகழ் - நல்ல குணங்களை உடைய, கண்ணன் தன் அடி மேல் - கண்ணனுடைய திருவடிகள் மேல், வண் குருகூர் சடகோபன் சொன்ன, தீது இல் - குற்றமில்லாதவைகளான, அந்தாதி - அந்தாதியான, ஓர் ஆயிரத்துள், ஓர் இவை பத்தும் - ஒப்பில்லாத இந்தப் பத்துப் பாட்டுக்களையும், இசையொடும் - கானத்தோடும், வல்லார் - சொல்லச் சக்தியுள்ளவர்கள், ஆதும் ஓர் தீது - எந்த குற்றமும், இலர் ஆகி - இல்லாதவர்களாய், தாமே, இங்கும் அங்கும் - இந்த உலகத்திலும் பரலோகத்திலும், எல்லாம் அமைவார்கள் - எல்லா அநுபவத்தையும் பூர்ணமாக அடைவார்கள்.

(கருத்து) எம்பெருமானுடைய திருவடிகளை அடைவதில் ஆசையுள்ளவரும்,வேறு எல்லாவிஷயங்களிலும் உள்ள ஆசைகளை விட்டவருமான வண் குருகூர் சடகோபன் குற்றமில்லாத கண்ணன் திருவடிகள் மேல் சொன்ன, குற்றமில்லாத இந்தப் பத்துப்பாட்டுக்களையும் அவசமாய்ப் பாடும்படியான ஆசையுள்ளவர்கள் ஒரு குற்றமும் இல்லாதவர்களாகி எம்பெருமானுடையகையைப் பார்க்காமல் தாங்களே இந்த உலகத்திலும் மேல் உலகத்திலும் எல்லா அநுபவங்களையும் அடைவர்கள்.

குறிப்பு— (1) 'தீதில் புகழ்' என்பதற்கு, தன்னை அநுபவிப்பவர்களுக்கு வேறு விஷயங்களில் பற்றில்லாதபடி செய்யும் மிகவும் ரஸமுள்ள புகழ் என்பது பொருள்.

(2) மூன்றும் அடியில் 'தீதில்' என்பதற்கு வேறு கதைகளைச் சொல்லுவதாகிய குற்றமில்லாமல் எம்பெருமானுடைய குணங்களையே சொல்லுகிற என்பது பொருள். வேறு விஷயங்களிலுள்ள பிடிப்புக்களைப் போக்கும்படியான என்றும் பொருள் கொள்ளலாம்.

(3) நான்காமடியில் "தீதிலர்" என்பதற்கு அவித்யை, கர்மம், வாஸனை இவை முதலானவைகள் என்பது பொருள்.

(4) "ஆதும் ஓர்" என்கிற இடத்தில் ஆழ்வாருக்குத் திருவாய்மொழியை முடிப்பதாகிய ஒரு தடை யிருக்கிறது. இவ்விதமான தடையும் அவர்களுக்கு இருக்காது என்று கருத்து.

(5) இந்த உலகத்தில் அநுபவம்— தாங்கள் கிருதகிருத்தியர்கள் என்று ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருப்பது. பரலோகத்தில் அநுபவம்- எம்பெருமானை அநுபவிப்பதும், அவனுக்குக் கைங்கரியம் செய்வதும். (11)

---

தார்க்ஷ்யாரூட்யா ஸஹஜஸுத்ருஶா நீலமேகா-
க்ருதித்வாத் ஆஶ்சர்யேஹாசரிததயா யோகிபி-
ர்துர்ஜ்ஞேயத்வாத் । ஶ்லேஷவ்யாமோஹாத் ப்ரதிஹதிவிர-
ஹாத் துர்ஜநாத்ருஶ்யபாவாத் ஸ்வாஸக்தாநாம் ஜநாநாம் ஸுலப-
த்வம் இதி ப்ராஹ நாத: ஶடாரி: ॥ (93)

இந்தத் திருவாய்மொழியில் தன்னைத் தவிர வேறுவிஷயங்களில் பற்று இல்லாதவர்களுக்கு எம்பெருமான மிகவும் ஸுலபன் என்று பத்துக் காரணங்களாலே அருளிச்செய்கிறார். அவைகளாவன:- (1) விரோதிகளை நாசம் பண்ணுவதில் முயற்சி உள்ள கருடனை வாஹநமாக வைத்துக் கொண்டிருப்பது; (2) எப்போதும் பார்க்கத் தகுந்த அழகுள்ள திருக்கண்களை உடையவனாயிருப்பது; (3) நீலமேகம் போன்ற திருமேனியை உடையவனாயிருப்பது; (4) ஆச்சரியங்களான உயர்ந்த வேலையைச் செய்வது; (5) ஸநகர் முதலான யோகிகளாலும் தேவதைகளாலும் இன்ன ஸ்வபாவமுள்ளவன் என்று அறிய முடியாதிருப்பது; (6) தன்னைச் சேர்ந்தவர்களிடத்தில் மிகுந்த ஆசை உள்ளவனாயிருப்பது; (7) ஆச்ரிதர்கள் தன்னைப் பார்ப்பதில் தடையில்லாதவனாயிருப்பது; (8, 9) துர்ஜநங்களாலே பார்க்க முடியாதிருப்பது; (10) தன்னிடத்திலேயே பற்றுள்ளவர்களுக்கு ஸுலபனாயிருப்பது. (93)

---

## மூன்றாம் திருவாய்மொழி.

அவ:— இப்படி ஆழ்வார் வருத்தப்பட்டும், எம்பெருமான் வரவில்லை. இந்தத் தசையில் எம்பெருமானைச் சேருவதே ஸுகமாயும், அவனைப் பிரிவதே துக்கமாயும் எண்ணுகிறவர்களுடன் பேசிக்கொண்டு ஆறுதலையடையலாம் என்று நினைத்து, எங்கும் பார்த்தார். ஒருவரையும் காணவில்லை. தாம் இப்படித் துணையில்லாதிருப்பதை இந்தத் திருவாய்மொழியில் அருளிச்செய்கிறார்:—

(கலித்துறை)

அங்கு மிங்கும் வானவர் தானவர் யாவரும்
எங்கு மினையை யென்றுன்னை யறிய கிலாதலற்றி
அங்கஞ் சேரும் பூமகள் மண்மக ளாய்மகள்
சங்கு சக்கரக் கையவ னென்பர் சரணமே. (க)

(ப-ரை) அங்கும் - மேல் உலகங்களிலும், இங்கும் - இந்த உலகத்திலும், எங்கும் - வேறு- கீழ் உலகங்களிலும் இருக்கும், வானவர் - தேவர்களும், தானவர் - அஸுரர்களும், யாவரும் - (அவர்களைக் காட்டிலும் வேறான) எல்லாரும், உன்னை, இனையை என்று - இப்படிப்பட்டவன் என்று, அறியகிலாது - அறியச் சக்தியில்லாதவர்களாகி, அலற்றி - உன்னுடைய குணங்களைச் சொல்லி, பூமகள் - தாமரைப் பூவிலிருக்கிற பிராட்டி, மண்மகள் - பூமிப்பிராட்டி, ஆய்மகள் - ஆயர் குலத்தில் பிறந்த நப்பின்னை, அங்கம் சேரும் - (அவர்கள்) தன்னுடைய திருமேனியில் சேருமவனும், சங்கு சக்கரம் கையவன் - சங்கத்தையும் சக்ரத்தையும் திருக்கைகளில் வைத்துக் கொண்டிருக்கிறவனுமான, சரணம் - (தாங்கள் வேண்டுவதற்கு) உபாயம், என்பர் - என்று சொல்லுவார்கள்.

(கருத்து) மேல் உலகங்களிலும் பூமியிலும் கீழ் உலகங்களிலும் இருக்கும் தேவர்களையும், அஸுரர்களையும், மனிதர்களையும் பார்த்தேன். அவர்கள் நீ இன்னபடியிருக்கிறாயென்று உன்னை அறியவில்லை. உனக்கு அநுகூலரல்லாத அஸுரர்களுக்கும், அநுகூலர்கள் என்று பேர் பெற்ற மற்றவர்களுக்கும்,

இந்த விஷயத்தில் வித்தியாஸமில்லை. பிராட்டியும், பூமியும், நப்பின்னையும் உன் திருமேனி அழகைப் பார்த்து அதை விட்டுப் பிரிய முடியாமல் அதனுடன் சேர்ந்திருக்கிறார்கள். இப்படி அவர்களுடன் சேர்ந்திருக்கிற அழகையும், திருவாழியையும், திருச்சங்கையும் திருக்கைகளில் ஏந்திக்கொண்டிருக்கிற அழகையும் அறிந்து பெரியாழ்வாரைப் போல் பல்லாண்டு பாடாமல், தாங்கள் வேண்டுகிற வேறு பிரயோஜநங்களுக்கு வேண்டியதான உன்னுடைய ஜ்ஞாநத்தையும் சக்தியையும் சொல்லிக்கொண்டு அந்தப் பிரயோஜநங்களுக்காக உன்னை உபாயமாக வேண்டுகிறார்கள். ஐயோ! என்ன பாக்கியக் குறைவுள்ளவர்கள். ஆகையால் அவர்கள் எனக்கு துணையில்லை.

குறிப்பு— (1) இந்த உலகங்களிலுள்ள ஐசுவரியங்களையே எல்லாரும் தேடுகிறார்கள் என்றும் அதனால் தமக்கு ஓர் இடத்திலும் துணையில்லை என்றும் காட்டுவதற்காக, பாட்டில் "அங்கும் இங்கும் எங்கும்" என்று சொல்லுகிறார்.

(2) "சரணம் என்பர்" என்கிற பயனிலைக்கு எழுவாய் வானவரும் தானவரும். ஸௌர்யத்திலிருக்கும் ஹேதிப்ரஹேதி என்கிற பெயர்களுள்ள அஸுரர்களைப்போலத் தங்களுக்கு வேண்டியதற்கு உபாயமாக எம்பெருமானைச் சில அஸுரர்கள் ஆச்ரயிக்கக்கூடும் என்பது கருத்து. (1)

இ—ம். இனையை - முன்னிலைக் குறிப்பு வினைமுற்று. அறியகிலாது - எதிர்மறை வினையெச்சம். கில் - சக்தியைக்காட்டும் இடைச்சொல்.

---

அவ:— கீழ்ப் பாட்டில் ஐசுவரியத்தைத் தேடுகிறவர்கள் தமக்குத் துணையன்று என்று சொன்னார்; தங்கள் ஆத்மாவை மாத்திரம் அநுபவிப்பதற்காக பாடுபடுகிறவர்களும் தமக்குத் துணை யன்று என்று இதில் சொல்லுகிறார்:—

சரண மாகிய நான்மறை நூல்களுஞ் சாராதே
மரணந் தோற்றம் வான்பிணி மூப்பென் றிவைமாய்த்தோம்
கரணப் பல்படை பற்றற வோடுங் கனலாழி
அரணத் திண்படை யேந்திய வீசற் காளாயே. (உ)

(ப-ரை) சரணம் ஆகிய - உபாயமாயிருக்கிற, நான் மறை நூல்களும் - நான்கு மறைகளாகிய சாஸ்திரங்களையும், சாரா தே - ஆச்ரயிக்காமல், கரணம் பல் படை - இந்திரியங்களாகிய பலஸேனை களை, பற்று அற-(ப்ராகிருத விஷயங்களில் இருக்கும்) பற்று முழு வதும் போவதற்காக, ஓடும் - ஓடுகிற, கனல் - ஜ்வலிக்கிற, ஆழி - திருவாழியாகிற, அரண் - (ஆச்ரிதருக்கு) க்ஷேமத்தைச் செய்கிற அ- பிரஸித்தமான, திண்- திருடமான, படை - ஆயுதத்தை, ஏந் திய, ஈசற்கு - ஸர்வேசுவரனுக்கு, ஆளாய் - தாஸர்களாய், மர ணம் - ஸ்தூலமான உடம்பை விடுவது, தோற்றம் - பிறப்பது, வான் பிணி - பெரிய (தீர்க்கமுடியாத) வியாதிகள், மூப்பு-கிழத் தனம், என்று இவை - இவைகளை, மாய்த்தோம் - நாசம் செய்தோம்.

(கருத்து) ஐசுவரியத்தை அடைவதற்கு உபாயங்களைக் காட்டுகிற வேதத்தின் பாகங்களை நீங்கள் விட்டு, மோக்ஷத் தைச் சொல்லுகிற பாகத்தை ஆச்ரயித்து, அப்ராகிருதமான தனக்கேயுள்ள திருமேனியையும், ஆச்ரிதர்களை ரக்ஷிக்கிற பிர ஸித்தமான திருடமான ஜ்வலிக்கிற திருவாழியாகிய ஆயுதத்தை யுமுடைய எம்பெருமானை நீங்கள் ஆச்ரயித்தீர்கள். உங்களுடைய இந்திரியங்களின் கூட்டமாகிய ஸேனையானது விஷயங்களிலுள்ள பற்றுக்களை விட்டுவிட்டு ஓடும்படியாகவும், பிறப்பு, தீர்க்கமுடியாத வியாதிகள், கிழத்தனம், ஸ்தூலமான உடம்பை விட்டுப் பிரிவ தாகிய மரணம்- ஆகிய இவைகள் சுற்றிச் சுற்றி வருகிற ஸம்ஸா ரம் போகும்படியாகவும் இதைச் செய்தீர்கள். அந்த எம்பெரு மானுடைய திருவடிகளையே பிராப்யமாக எண்ணவில்லையே. ஆதலால், நீங்களும் எனக்குத் துணையில்லை.

குறிப்பு— (1) தம்மைப்போல இவர்களும், விஷயங்களில் வைராக்கியம் உள்ளவர்களாகையாலே, அவர்களைச் சேர்த்துக் கொண்டு பன்மைச் சொல்லாலே "மாய்த்தோம்" என்று சொல் லுகிறார்.

(2) இந்தப் பாட்டில் சொன்ன அதிகாரிகள், இந்திரியங் களை ஜயித்து ஸம்ஸாரத்தைப் போக்கித் தங்கள் ஆத்மாவை மாத் திரம் அநுபவிக்கிறவர்கள். இந்த அநுபவத்திற்குக் கைவல்வி யம் என்று பெயர். இதற்கு உபாயமாக மாத்திரம் எம்பெரு மானை அவர்கள் ஆச்ரயிக்கிறார்கள். அந்தப் பலம் கிடைத்ததும் உடனே அவனை விட்டு விடுகிறார்கள்,

(3) இவர்களுக்கு ஸ்தூலமான உடம்பு போய்விடுகிறது. ஆனால், ஸூக்ஷ்மமான உடம்பு கூடவே இருக்கிறது. ஆகையால், அவர்கள் மோக்ஷத்தை அடைந்தவர்கள் அல்லர். (3)

---

அவ:— ஆழ்வார் தாம் துணையின்றியிருப்பதைப் பேசும்போது, எம்பெருமானும் ஆச்ரிதர்களை விட்டுப் பிரிந்து தனியாயிருந்தது அவர் நினைவுக்கு வந்தது. அதைக் கண்டு துக்கப்பட்டு அந்தக் காலத்தில் அவனுக்குத் தாம் உதவவில்லையே என்று இதில் வருந்தப்படுகிறார்:—

ஆளு மாளா ராழியுஞ் சங்குஞ் சுமப்பார்தாம்
வாளும் வில்லுங் கொண்டு பின்செல்வார் மற்றில்லை
தாளுந் தோளுங் கைகளை யாரத் தொழக்காணேன்
நாளும் நாளும் நாடுவ னடியேன் ஞாலத்தே. (ரு)

(ப-ரை) ஆளும் - ஏவப்பட்டு வேலை செய்கிறவர்களையும், ஆளார் - ஏவுகிறானில்லை, ஆழியும் - திருவாழியையும், சங்கும் - சங்கத்தையும், தாம் - தானே, சுமப்பார் - சுமந்து கொண்டு போனான். வாளும் - கத்தியையும், வில்லும் - வில்லையும், கொண்டு - (கையில் எடுத்துக்) கொண்டு, பின் செல்வார் - (அவன்) பின்னே போகிறவர்கள், மற்று இல்லை - வேறு ஒருவருமில்லை. தாளும் - திருவடிகளையும், தோளும் - திருத்தோள்களையும், கைகள் ஆர - (என்னுடைய) கைகள் திருப்தியடையும்படி, தொழ - ஸேவிக்கைக்கு, காணேன் - (என் கண்களாலே) காணப்பெறவில்லை. அடியேன் :- தாஸனான நான், நாளும் நாளும்- ஒவ்வொரு நாளும், ஞாலத்து-பூமியிலே, நாடுவன்-தேடுகிறேன்.

(கருத்து) சக்கிரவர்த்தித் திருமகனாய் அவதாரம் செய்து மாரீசனோடு சண்டை போடும்போதும், கரன், தூஷணன் முதலான ராக்ஷஸர்களை நாசம் செய்யப்போனபோதும், தான் சொன்னதைக் கேட்கும் லக்ஷ்மணனை ஏவித் துணையாகச் செய்து கொள்ளவில்லை. தானே மிகவும் மிருதுவான திருக்கைகளில் திருவாழியையும் சங்கத்தையும் ஏந்திக்கொண்டு போனானே. அவைகளை எப்படிச் சுமந்தானோ ? அவைகளை அவனைத் தவிர வேறு ஒருவரும் தொடக்கூடாது என்று நிர்பந்தமிருந்தால் கத்

தியையும் வில்லையும் எடுத்துக்கொண்டு அவன் பின்னாலே ஒருவன் போகக்கூடாதோ? இப்படி ஒருவரும் செய்யவில்லையே? மாயாவிகளும் இரக்கமில்லாதவர்களுமான ராக்ஷஸர்கள் நிறைந்திருந்த தண்டகாரணியத்தில் அவன் தனியாகப் போகவேணுமோ. ஐயோ! அந்தக் காலத்தில் நான் அவனுக்கு உதவியாயிருந்து, மிகவும் அழகாய் மிருதுவாய் நடக்கிற அவன் திருவடிகளையும் ஆச்ரிதர்களுக்கு ஆச்ரயமாயிருந்து கொண்டு நடக்கும்போது அசைந்து கொண்டிருந்த திருக்தோள்களையும் என் கைகளின் விடாய் தீரும்படி நான் ஸேவித்துக்கொண்டு, அவன் பின்னாலே போகும்படியான பாக்கியத்தைப் பண்ணவில்லையே; ஸீதை அவனை விட்டுப் பிரிந்து கதறினதுபோல் அவனைக் காணப் பெறுமல் இந்த பூமியாகிய காட்டிலிருந்துகொண்டு தனியே இருந்து தேடிக் கூப்பிடுகிறேன்.

குறிப்பு— ராமனுக அவதாரம் செய்த காலத்தில் அவனுக்குத் திருவாழியும் திருச்சங்குமில்லை. ஆகையால், இந்த இடத்துக்கு அப்போது அவன் ஒண்டியாகப் போனுன் என்றும், கிருஷ்ணுவதாரத்தில் அவைகளைச் சுமந்துகொண்டு போனுன் என்றும் பொருள் கொள்ளவேண்டும்.

இ—ம். ஆளார் - எதிர்மறைவினைமுற்று. செல்வார்— வினையாலணையும் பெயர். (3)

---

அவ:— கீழ்ப்பாட்டில் எம்பெருமான் தனியாயிருந்ததைச் சொன்னார்; இதைக் காட்டிலும் அதிகமான தனிமையாயிருப்பதை நினைத்து இதில் வருத்தப்படுகிருர்:—

ஞாலம் போனகம் பற்றி யோர்முற்ரு வுருவாகி
ஆலம் பேரிலை யன்ன வசஞ்செய்யு மம்மானே
காலம் போவதோர் காரிரு ளூழியோத் துளதாலுன்
கோலங் காரெழில் காணலுற் ருழுங் கொடியேற்கே. (ச)

(ப-ரை) ஓர் - வாயால் சொல்லமுடியாதபடி, முற்ரு - முற்ருத, (குழந்தைப் பருவமுள்ள) உருவாய் - ரூபத்தை உடையவனுய், ஞாலம் - உலகத்தை, போனகம் பற்றி - ஆஹாரமாகச் செய்துகொண்டு, ஆலம் - ஆலமரத்தினுடைய, பேர் இலை - பேர்

கிற (முகிழ் விரிகிற) இலையில்- (தளிரில்) அன்னம் வசம் செய்யும்- இடமும் வலமுமாகப்புரளும், அம்மானே - ஸ்வாமியே ! கார் எழில் - நீலக்காந்தியுள்ள, உன் கோலம் - உன் அழகான திருமே னியை, காணல் உற்று - காணுதலைப் பார்க்க ஆசையை அடைந்து, ஆழும் - (துக்கஸமுத்திரத்தில்) மூழ்கியிருக்கிற, கொடியேற்கு - கொடிய பாபத்தைப் பண்ணின எனக்கு, காலம் போவது- ஒரு க்ஷணகாலம் போவது, ஓர் - ஒப்பில்லாத, கார் - கருமையான, இருள்- இருட்டை உடைய, ஊழி - கல்பத்துக்கு, ஒத்து உளது- ஒத்திருக்கிறது.

(கருத்து) ஒரு சிறு குழந்தையின் ரூபத்தை எடுத்துக் கொண்டு, குழந்தைகள் எதையும் வாயில் போட்டுக் கொள்ளு வதுபோல், இந்த உலகத்தை சாப்பிட்டாய், இது போதாதோ ? உயர்ந்த அலைகள் கூத்தாடுவதினால் பயங்கரமான பிரளயஸமுத் திரத்தில் ஓர் ஆலமரத்தின் சிறு இலையில் படுத்திருக்கிறாயே. அதுக்கு இலை என்று மாத்திரம் பெயர். தளிராய் மிகவும் சிறி யதாயிருக்கிறது. உனக்குப் படுக்கத் தொட்டில் கிடையாதா? ஜலத்தில் விழாமல் பார்த்துக்கொள்ள யசோதைபோல் ஒரு தாயாருமில்லையே. இது போதாதோ? படுத்தபடியே யிருக்கக் கூடாதா ? இடமும் வலமுமாகப் புரளுகிறாயே. ஸ்வாமி ! இந்த உன்னுடைய வேலைகளைப் பார்த்து, உனக்கு என்ன வருகிறதோ என்று பயந்தும், உன் அழகான திருமேனியைக் காண ஆசைப் பட்டு, அதைப் பெறுமலும் நான் துக்க ஸமுத்திரத்தில் மூழ்கி யிருக்கிறேன். இப்படி போன விஷயங்களை இப்போது நடப் பதாக நினைத்துப் பயப்பட்டு வருத்தப்படும்படியான பாபத் தைப் பண்ணியிருக்கிறேன். எனக்கு ஒரு க்ஷணம் போவது பக லில்லாமல் கருமையான இருள் நிறைந்த ஒரு கல்பமிருக்குமே யானால் அந்த கல்பம்போலிருக்கிறது.

குறிப்பு- (1) ''அன்ன வசம்''—வயிறார உண்டதால் வரும் தூக்கம். இங்கு அதைச்செய்வது தூங்கி இடமும் வலமுமாய்ப் புரளுவது.

(2) எம்பெருமானுக்குச் சேராதவைகளைச் சேர்க்கும் சக்தியிருப்பது ஆழ்வார் மனதுக்குத் தோன்றுமல் அவன் மிரு துவாயிருப்பதை மாத்திரம் நினைத்து வருத்தப்படுகிறார்.

(5) "பேரிலை" என்பதற்குப் பெரிய இலை என்பது பொருள். இங்கே சிறிய இலை என்று சொல்லுவதில் கருத்து.

இ—ம். முற்று - முற்றுத; ஈறு கெட்ட பெயரெச்சம். (4)

---

கொடியார் மாடக் கோளூர கத்தும் புளிங்குடியும்
மடியா தின்னே நீதுயில் மேவி மகிழ்ந்ததுதான்
அடியா ரல்லல் தவிர்த்த வசைவோ வன்றேலிப்
படிதா னீண்டு தாவிய வசைவோ பணியாயே. (ரு)

(ப-ரை) கொடி ஆர் - கொடிகள் நிறைந்த, மாடம் - மதிள்களோடு கூடிய, கோளூர் அகத்தும் - திருக்கோளூரிலும், புளிங்குடியும் - திருப்புளிங்குடியிலும், மடியாது - இடம் வலமாகத் திரும்பாதே, இன்னே - இப்படியே, (எப்போதும் ஒரேவிதமாக) துயில் மேவி - தூக்கத்தை ஆசைப்பட்டு, நீ மகிழ்ந்தது தான் - நீ ஸந்தோஷப்படுகிறது, அடியார் - ஆச்ரிதர்களுடைய, அல்லல்- துக்கங்களை, தவிர்த்த அசைவோ - போக்கின சோர்வே (சிரமமோ), அன்றேல் - இல்லாவிட்டால், இ படி தான் - இந்தப் பூமியை, ஈண்டு - சீக்கிரமாக, தாவிய அசைவோ - அளந்த சிரமமோ? பணியாய் - சொல்.

(கருத்து) நான் உனக்குத் துணையாக இல்லாமல் இருந்ததாலும், உன்னைக் காணப்பெறுமலிருந்ததாலும் உண்டான என் துக்கம் போவதற்காக, நீ ஆச்ரிதர்களுக்கு உன்னைக் கொடுப்பதற்காக த்வஜங்களைக் கட்டிக்கொண்டிருக்கிற திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் போய்ப் புகுந்தேன். நீ என்னைக் கண்களால் பார்க்காமலும், ஒரு பேச்சுப் பேசாமலும், ஒரு வேலையையும் செய்யாமலும் நீ அந்த இடங்களில் இடமும் வலமும் திரும்பாமல் எப்போதும் ஒரேவிதமாய்ப் படுத்திருக்கிறாயே. உன் முகமலர்ச்சியைப் பார்த்தால், இது உனக்கு ஸுகமாக இருப்பதாகத் தோன்றுகிறதே. இப்படிப்படுத்திருப்பதற்குக் காரணம் என்ன? ஆச்ரிதர்களுடைய துக்கங்களைப் போக்குவதற்காக ராவணன் முதலானவர்களுடன் சண்டை போடுங்காலத்தில் வில்லின் நாணை இழுத்ததனுல் தோள்களுக்கு உண்டான சிரமமோ, அல்லது நீ வாமநனய் அவதரித்த உடனே

உன்னுடைய மிருதுவான திருவடியால் காடுகளும் மலைகளும் நிறைந்த இந்த பூமியை நீ அளந்ததினால் உண்டான சிரமமோ? சொல்லியருளவேணும். திருத்தோள்களுக்குச் சிரமமிருந்தால் அவைகளைப் பிடிக்கிறேன். திருவடிகளுக்குச் சிரமமிருந்தால் அவைகளைப் பிடிக்கிறேன். (5)

---

அவ:— 'நீ சொல்' என்று ஆழ்வார் கேட்க, அவன் ஒரு பேச்சும் பேசவில்லை. அதினால் துக்கப்பட்டு மனது கலங்கி, கடினமான ஸ்வபாவத்தையுடையவன் விஷயத்தில் நான் ஆசைப்பட்டு வீணாகக் கலங்குகிறேனே என்று ஸந்தேஹித்து அவர் நிரூபணம் பண்ணினார். தாம் ஆசைப்பட்டது முன் நினைத்தபடி கடினஸ்வபாவமுள்ளவனை அன்று என்று இதில் சொல்லுகிறார்.—

பணியா வமரர் பணிவும் பண்புந் தாமேயாம்
அணியா ராழியுஞ் சங்கமு மேந்து மவர்காண்மின்
தணியா வெந்நோ யுலகில் தவிர்ப்பான் திருநீல
மணியார் மேனியோ டென்மனஞ் சூழ வருவாரே. (சு)

(ப-ரை) பணியா - (ஒருவருக்கும்) வணங்காத, அமரர் - (பிரம்மா முதலான) தேவர்களுக்கு, (மற்றவர்கள்) பணிவும் - வணங்குவதும், பண்பும் - ஸ்வபாவமும், (ஐசுவரியமும்) தாமேயாம் - தாமே ஆனவனும், உலகில், தணியா - (ஒருகாலும்) முடியாதவைகளான, வெம் நோய் - கொடுமையான வியாதிகளை, (துக்கங்களை) தவிர்ப்பான் - தவிர்க்க (போக்க), ஆர் அணி - நிறைந்த அலங்காரங்களையுடைய, ஆழியும் - திருவாழியையும், சங்கும் - திருச்சங்கத்தையும், ஏந்துமவர் காண்மின் - ஏந்துகிறவனுமானவன் தான், திருநீல மணி - அழகான நீல ரத்நம்போலேயிருக்கிற, ஆர் - நிறைந்த, (சிரமத்தைப் போக்கும்படியான) மேனியோடு - திருமேனியுடன், என் மனம் சூழ - என் மனது தன்னைச் சூழும்படி, (ஆசைப்படும்படி) வருவான்.

(கருத்து) நான் ஆசைப்பட்டு இந்தப் பாடு படுகிறது கடினமான ஸ்வபாவமுடையவன் விஷயமன்று; அவன் ஒருவரையும் வணங்காத பிரம்மா முதலான தேவர்களை மற்றவர்கள் வந்து வணங்கும்படி செய்து, அவர்களுக்கு அளவில்லாத ஐசுவரியத்தைக் கொடுத்தவன்; எல்லா உலகங்களுடைய தீர்க்கமுடியாத

கொடுமையான துக்கங்களையும் போக்கக் கடமைப் பட்டவன்; இதற்காகத் தனக்கு ஆபரணங்களாகவும் ஆயுதங்களாகவுமிருக்கிற திருவாழியையும் திருச்சங்கையும் திருக்கைகளில் ஏந்திக் கொண்டிருக்கிறவன்; அளவில்லாமல் அழகான நீலரத்நம் போன்ற திருமேனியையுடையவன். இப்படிப்பட்டவனையன்றோ என் மனது ஆசைப்படுகிறது. அவன் எனக்காக இந்த ஸம்ஸாரமண்டலத்தில் வரக்கூடிய நல்ல ஸ்வபாவமுள்ளவனாயிருந்தும், என்னுடைய பாக்கியக் குறைவினால் வரவில்லை; நான் கஷ்டப்படுகிறேன்.

இ—ம். தவிர்ப்பான்— தவிர்க்க; வினையெச்சம். பணியா— பணியாத; ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம். (6)

---

அவ:— மிகவும் மிருதுவான ஸ்வபாவமுள்ள எம்பெருமான் தாம் இவ்வளவு வருத்தப்படும்போதும் வராமலிருப்பதற்குக் காரணம் தம்முடைய வியஸநத்தை அவன் அறியாமையே என்று நிச்சயம் செய்து, இதை அவனிடம் சொல்லுகிறவர்கள் இல்லையே என்று துக்கப்படுகிறார்—

வருவார் செல்வார் வண்பரி சாரத் திருந்தவென்
திருவாழ் மார்வற் கென்திறஞ் சொல்லார் செய்வதென்
உருவார் சக்கரஞ் சங்கு சுமந்திங் கும்மோடு
ஒருபாடு ழல்வா னோரடி யானு முளனென்றே. (எ)

(ப-ரை) வருவார்- (திருவண் பரிசாரத்திலிருந்து இந்த திருநகரிக்கு) வருகிறவர்களும், செல்வார் - (இங்கிருந்து அங்கு) போகிறவர்களுமான ஜனங்கள், வண் பரிசாரத்து - அழகான பரிசாரம் என்கிற ஊரில், இருந்த, என் - என்னுடைய, திருவாழ்மார்வற்கு- பிராட்டி நித்தியவாஸம் செய்கிற திருமார்பையுடைய ஸ்வாமிக்கு, உரு ஆர் - நல்ல அழகு பொருந்தின, சக்கரம் சங்கு- திருவாழி திருச்சங்குகளை, சுமந்து - தலையில் வைத்துக்கொண்டு, இங்கு, உம்மோடு, ஒருபாடு - ஒரு பக்கத்திலே, உழல்வான் - திரியக்கூடிய, ஓர் - ஒருவனான, அடியானும் - தாஸனும், உளன் என்று - இருக்கிறான் என்று, என் திறம்-என் விஷயமான வார்த்தையை, சொல்லார் - சொல்லுகிறார்கள் இல்லை, என் செய்வது- இனி நான் என்ன செய்வது?

(கருத்து) ஜநங்கள் இங்கிருந்து திருவண்பரிசாரத்துக்குப் போகிறார்கள். அங்கிருந்தும் இங்கு வருகிறார்கள். அவர்கள் தங்கள் ப்ரயோஜநத்தையே நினைத்துக் கொண்டிருக்கிறார்களே. அந்த அழகான ஊரில் தாயும் தகப்பனும்போல் என்னைத்தேடிக் கொண்டு பிராட்டி நித்தியவாஸம் செய்கிற திருமார்பை உடையவனாய் எம்பெருமான் எழுந்தருளியிருக்கிறான். அவனிடத்தில் என் விஷயமாக ஒரு வார்த்தையும் அவர்கள் சொல்லுகிறதில்லையே. சொல்லவேண்டிய வார்த்தை—"நீ எப்போதாவது தனியாகப் போகும்போது உன்னுடைய அழகு நிறைந்த திருவாழியையும் திருச்சங்கையும் தலையில் சுமந்துகொண்டு உன்பக்கத்தில் உன் நிழலைப்போல் இருந்து திரியத் தகுந்தவனை ஒரு தாஸன் இருக்கிறான்" என்பது. இப்படி ஒருவரும் சொல்லாவிட்டால் இறகு ஒடிந்த பக்ஷிபோலிருக்கிற நான் என்ன செய்வேன் ?

குறிப்பு— 'அடியானும்' என்கிற இடத்தில் உம்மையால், 'உன்னையே ஆசைப்படுகிற மஹாத்மா மிகவும் துர்லபன்' என்று கீதையில் நீ சொல்லியிருக்கிறாயே; அப்படிப்பட்ட ஒருவன் இங்கு இருக்கிறான் என்பது காட்டப்படுகிறது. (7)

---

அவ:- கீழ்ப்பாட்டில்தானிருப்பதை எம்பெருமானறியவில்லை என்று சொன்னது பிசகு; "அவன் எல்லாம் தெரிந்தவன், ஆதலால் அவன் வாராததற்குக் காரணம் அறியாமையன்று" என்று தீர்மானம் செய்து, "எப்போது என்னை உன் திருவடிகளின் கீழ் வைப்பாய்" என்று கூப்பிட்டார். அவன் உடனே வரவில்லை. நீர் ஓர் உபாயத்தைச் செய்யவேண்டுமென்று அவன் சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் அருளிச் செய்கிறார்-

என்றே லென்னை யுன்னேரார் கோலத் திருந்தடிக்கீழ்
நின்றே யாட்செய்ய நீகொண் டருள நினைப்பதுதான்
குன்றேழ் பாரேழ் சூழ்கடல் ஞாலம் முழுவேழும்
நின்றே தாவிய நீள்கழ லாழித் திருமாலே. (அ)

(ப-ரை) என்னை, உன் - உன்னுடைய, ஏர் ஆர் கோலம் - அழகு நிறைந்த அலங்காரங்கள், திருந்து-திருந்தியிருக்கிற, (நன்றாய் சாத்தப்பட்டிருக்கிற,) அடி கீழ் - திருவடிகளின் கீழே, நின்றே - நிலையாகவேயிருந்து, ஆள் செய்ய - நான் கைங்கரியம்

செய்யும்படி, நீ கொண்டு அருள - நீ கிருபையுடன் எடுத்துக் கொள்ள, நினைப்பதுதான், என்று - எப்போது? குன்று ஏழ் - ஏழுமலைகளையும், பார் ஏழு - ஏழு பூமியையும் (த்வீபங்களையும்), சூழ் - அவைகளைச் சூழ்ந்திருக்கிற, கடல் ஏழு - ஏழுஸமுத்திரங்களையும், முழு ஞாலம் - பூமி முழுவதையும், நின்றே தாவிய - இருந்தவிடத்திலேயேயிருந்து அளந்த, நீள் கழல் - நீளுகிற திருவடிகளையுடைய, ஆழி திருமாலே - திருவாழிபோடு கூடின ஸ்வாமியே!

(கருத்து) அழகு நிறைந்த நூபுரம் முதலான ஆபரணங்களாலே அலங்காரம் செய்யப்பட்ட உன் திருவடிகளின் கீழே நான் நிலையாயிருந்து உனக்குக் கைங்கரியம் செய்யவேணுமென்று வருத்தப்படுகிற என்னை இப்போதே எடுத்துக்கொள்ள வேணும்; அப்படிச் செய்யாவிட்டால் எப்போது என்னை எடுத்துக்கொள்ளுவதாக நினைக்கிறாய்? 'கர்மயோகம் முதலான உபாயங்களைச் செய்யவேணும்' என்று நினைக்கிறாயோ; அது என்னால் முடியாது. ஏழுமலைகளும் ஏழு த்வீபங்களும் அவைகளால் சூழப்பட்ட ஏழு ஸமுத்திரங்களும் நிறைந்த இந்த பூமி முழுவதையும் நின்றவிடத்திலேயேயிருந்து ஆச்ரிதர்கள் இருக்குமிடத்துக்கு நீண்டு போகும்படியான உன் திருவடியாலே நிர்ஹேதுகமாக அளக்கவில்லையா? அப்படியே நான் வேண்டுகிறதையும் செய்யவேண்டும். திருவாழியும் கையுமான அழகையுடைய என் ஸ்வாமியே!

குறிப்பு — இரண்டாமடியில் 'நின்றே' என்பதற்கு, சிலர் அல்ப ப்ரயோஜனத்தை ஆசைப்பட்டு, 'எனக்குக் கொடு' என்று கேட்க, 'நான் கொடுக்கிறேன்' என்று நீ சொல்ல, நீ கொடுப்பதை வாங்கிக்கொண்டு உன்னை விட்டுப் போய் விடுகிறார்கள். அவர்களைப்போலில்லாமல் உன்னுடனேகூட எப்போதுமிருந்து கைங்கரியம் செய்யவேண்டுமென்பது கருத்து.

இ—ம் நின்றே - ஏகாரத்திற்குப் பிரிநிலைப் பொருள்; போகிறவர்களிலிருந்து பிரிக்கிறது. நாலாம் அடியில் 'நின்றே' என்பதற்கும் இதுவே பொருள். வேறு இடத்திலிருந்து போகாமல் ஒரே இடத்திலிருந்து என்பதுபொருள். ஏல் அசைநிலை.

அவ:— "நீர் ஓர் உபாயம் செய்பவேண்டாம். என் பெருமையை நன்ருக அறிந்து என்னை ஸ்தோத்ரம்பண்ணினால் உம்முடைய இஷ்டப்படி செய்கிறோம்." என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்கு இதில் பதில் சொல்லுகிருர்—

திருமால் நான்முகன் செஞ்சடை யானென் றிவர்களெம்
பெருமான் தன்மையை யாரறி கிற்பார் பேசியென்
ஒருமா முதல்வா வூழிப்பிரா னென்னை யாளுடைக்
கருமா மேனிய னென்ப னென்காதல் கலக்கவே. (கூ)

(ப-ரை) திருமால் - பிராட்டியினிடத்தில் ஆசையுடையவனே! எம்பெருமான் தன்மையை - ஸர்வேசுவரனை உன் பெருமைகளை, நான்முகன் (நாலு வேதங்களையும் ஒரே காலத்தில் சொல்லுவதற்காக) நான்கு முகமுள்ள பிரம்மாவும், செஞ்சடையான் - சிவந்த ஜடையுள்ள ருத்திரனும், என்று இவர்கள் - என்று சொல்லப்பட்ட பெரியோர்களில், யார் - எவர், அறிகிற்பார் - அறிய சக்தியுள்ளவர், பேசி என் - (இந்த விஷயத்தைப்) பேசியென்ன பயன்? என் காதல் - என்னுடைய ஆசையானது, கலக்க - என் மனதைக் கலக்கையாலே, ஒரு - ஒப்பில்லாத, மா முதல்வா - உலகத்திற்கு உயர்ந்த காரணமாயிருப்பவனே! ஊழி பிரான்-கல்பங்களைச் சுற்றிச்சுற்றிவரும்படி செய்கிற உபகாரகனே! என்னை ஆளுடை - என்னை ஆளாக உடைய (என்னை உனக்கு அடிமையாக்கிக்கொண்ட), கரு மா மேனியன் - நீலமாய்க் கொண்டாடத் தகுந்ததான திருமேனியையுடையவனே! என்பன் - என்று சொல்லுகிறேன்.

(கருத்து) பிராட்டிக்கு ஸ்வாமியாயிருக்கிற பெருமையை உடையவனே! ஸர்வேசுவரனை உன் பெருமையை மிகவும் உயர்ந்தவர்களான பிரம்மாவாவது ருத்திரனாவது அறியமுடியுமோ? இந்த விஷயத்தை நான் எடுத்துக் காட்டவேண்டுமோ? ஆகையால், மிகவும் தாழ்ந்த நான் உன்னை ஸ்தோத்திரம்பண்ணுவது எப்படி? "ஒரு மாமுதல்வா ஊழிப்பிரான் என்னையாளுடைக்கருமாமேனியன் என்று ஏன் சொல்லுகிறீர்" என்று கேட்கிருயோ, நான் உள்ளபடி அறிந்தா சொல்லுகிறேன். என் ஆசை என்மனதை அப்படிக் கலக்குகிறது.

இ—ம், திருமால் - விளிவேற்றுமை. (9)

அவ:— "நீர் அறிந்தா சொன்னேன் என்கிறீரே, என்னை அறிந்து தான் ஸ்தோத்ரம்பண்ணுமே" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்கு இதில் பதில் சொல்லுகிறார்-

கலக்க மில்லா நற்றவ முனிவர் கரைகண்டோர்
துளக்க மில்லா வானவ ரெல்லாந் தொழுவார்கள்
மலக்க மெய்த மாகடல் தன்னைக் கடைந்தானை
உலக்க நாம்புகழ் கிற்ப தென்செய்வ துரையீரே. (க0)

(ப-ரை) கலக்கம் இல்லா-(ஒருபோதும் ஜ்ஞாநத்துக்கு) கலக்கமில்லாதவர்களான, நல் தவம்-நல்ல தபஸை (பக்தியை) உடையவர்களான முனிவர் - (உன் குணத்தையே அநுபவித்துக் கொண்டிருக்கிற) நித்யஸூரிகள், கரை கண்டோர்-(உன் குணங்களாகிய ஸமுத்திரத்தின் இந்தக்) கரையையே கண்டார்கள். துளக்கம் இல்லா - (ஒருபோதும்) அசைவில்லாமல் (எப்போதுமிருக்கிற), வானவர் எல்லாம் - நித்யஸூரிகள் எல்லாம், தொழுவார்கள் - கைங்கரியம் செய்துகொண்டிருக்கிறார்கள். மலக்கம் - கலக்கத்தை, எய்த - அடையும்படி, மா கடல் - பெரிய திருப்பாற்கடலை, கடைந்தான் தன்னை-கடைந்தவனான உன்னை, உலக்க - முடிய, நாம்,புகழ்கிற்பது - ஸ்தோத்ரம்பண்ணச் சக்தியுள்ளவனாயிருப்பது, என் - எப்படி? செய்வது உரையீர் - நான் செய்ய வேண்டியதைச் சொல்லும்.

(கருத்து) ஒருபோதும் ஞானத்தில் கலக்கமில்லாமல் உன்னிடத்தில் அளவில்லாத பக்தியுள்ளவர்களான உன் குணங்களை அநுபவித்துக்கொண்டிருக்கிற நித்யஸூரிகளும் உன்னுடைய குணங்களாகிய அளவில்லாத ஸமுத்திரத்தின் இந்தக் கரையையே பார்க்கிறார்கள். அக்கரையைக் கண்டவர்கள் அல்ல. எப்போதுமிருக்கிற நித்யஸூரிகளோ உனக்குக் கைங்கரியம் செய்கிறவர்கள். அந்தக் கைங்கரியத்தைப் பெற்றுக்கொண்டிருக்கிற நீயோ, கலக்கமுடியாத திருப்பாற்கடலை கலங்கும்படி கடைந்து அளவில்லாத உன் சக்தியைக் காட்டினாய். இப்படிப்பட்ட உன்னை உன் குணங்களை அறியாதவர்களில் மிகவும் தாழ்ந்த நான் முடிய ஸ்தோத்ரம் பண்ணுவது எப்படி? நான் ஸ்தோத்ரம் பண்ணுவதற்குக் காரணம் முன்பே சொன்னேன். ஆகையால், நிர்ஹேதுக கிருபையினால் என்னை அடிமைகொண்டருள வேணும்.

குறிப்பு— நித்யஸூரிகளில் சிலர் எம்பெருமானுடைய குணங்களையே அநுபவிக்கிறார்கள். சிலர் அவனுக்குக் கைங்கரியம் செய்கிறார்கள். இந்தப் பிரிவைப் பாட்டு காட்டுகிறது. (10)

இ—ம். உலக்க— வினையெச்சம். உல-பகுதி.

---

உரையா வெந்நோய் தவிர வருள்நீண் முடியானை
வரையார் மாட மன்னு குருகூர்ச் சடகோபன்
உரையேய் சொல்தொடை யோரா யிரத்து ளிப்பத்தும்
நிரையே வல்லார் நீடு லகத்துப் பிறவாரே. (கக)

(ப-ரை) உரையா - (இவ்வளவு என்று) சொல்லமுடியாத, வெம் - உக்கிரமான, நோய் - (பிரிவதாகிய) வியாதி, தவிர - போகும்படி, அருள் - கிருபை செய்தவனான, நீள் முடியானை - நீண்ட கிரீடத்தையுடைய எம்பெருமானைக்குறித்து, வரை ஆர் - மலைகள் போல் பெருமை பொருந்தின, மாடம் மன்னு - வீடுகள் நிலையாயிருக்கும், குருகூர் சடகோபன், உரை - சொன்ன, ஏய் ஒன்றோடொன்று(அழகாய்) பொருந்தியிருக்கிற, சொல் தொடை- சொற்களின் மாலையாகிய, ஓர் ஆயிரத்துள், இபத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், நிரையே - அடைவிலே, வல்லார் - சொல்லச் சக்தியுள்ளவர்கள், நீடு உலகில் - நீண்ட இந்த உலகத்தில், பிறவார் - பிறக்கமாட்டார்கள்.

(கருத்து) இவ்வளவென்று சொல்ல முடியாத, காலாக்னி போல் பொறுக்க முடியாததாயிருந்த தம்முடைய விரஹதாபத்தை நீண்ட கிரீடத்தையுடைய திருமுடியின் ஆட்டுதலாலே போக்கின எம்பெருமானைப்பற்றி, வரையார்மாட மன்னுகுருகூர்ச்சடகோபன் அருளிச் செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களையும் முறையே படிக்கச் சக்தியுடையவர்கள், அவனுடைய குணங்களை ஆசையுடன் அநுபவிக்கிறவர்களில்லாமையாலே தண்ணீர் இல்லாக்காடுபோலிருக்கும் விசாலமான ஸம்ஸார மண்டலத்தில் மறுபடியும் பிறக்கமாட்டார்கள். வைகுந்தத்தில் நிலையாயிருப்பார்கள்.

குறிப்பு— 'நிரையே' என்கிற சொல்லுக்கு ஆழ்வாருடைய விரஹவியஸநத்தை அறிந்து இந்தப் பாட்டுக்களைப் படிப்பவர்க

ளுக்கு, அவைகளை முழுவதையும் முறையே படிப்பது அருமை யானது என்பது கருத்து.

இ—ம். உரையா— உரையாத, பெயரெச்சம். (11)

---

ஸ்ரீஸம்ஹ்ருஷ்டநாயகத்வா ஹரிஸாகரதயா கல்ப்ய ஸம்ஸ்தாநயோக்ய ஸ்ரீபும்ஸ்த்வா ஸ்வஸாரேண ஸம்பந்நாநாத்ஸாரஸ்ரீ மத்பரிதாநாஸ்ரீ மத்வா ஸத்வயோமாநக்ஷ । விஷ்ணுஸ்த்ரா விஷ்டுவா நாம் வியதஶரமயி மஜாக்ஷ ஶ்லோகே ஸௌலப்யம் ஸ்ரீத்த்ருஷ்ட்ரா ஷெகாகீ ஸ்வாஸ்ரிதாநாம் விஹரணஸதயே ஸ்ரீயப: ஸ்பஷ்டிவாதீ ॥ ॥கூச॥

இந்தத் திருவாய்மொழியில், எம்பெருமான் லீலா ரஸத்தை அநுபவிப்பதற்காக எழுந்தருளும்போது அவன் தனியாய் இருப்பதை ஆச்ரிதர்கள் கண்டு வருத்தப்படும்படி அவன் அழகு இருக்கிறதென்பதைப் பல காரணங்களால் அருளிச் செய்கிறார். அவைகளாவன— (1) பிராட்டிக்கும் பூமிக்கும் நீளைக்கும் நாயகனுயிருப்பது, (2) திருவாழியாலே அழகிய திருக்கையையுடையவனுயிருப்பது, (3) பிரளயஸமுத்திரத்தில் குழந்தையாய் படுத்திருந்தது; (4) செல்வம் நிறைந்த திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் எழுந்தருளியிருப்பது, (5) தேவர்களுக்கு ஹிதத்தைச் செய்வது (6) பிராட்டிக்கு இருப்பிடமாயிருப்பது; (7) உலகங்களை அளந்தது, (8) பிரம்மா முதலானவர்களால் அறிய முடியாமலிருப்பது; (9) தன்னைச்சேர்ந்தவர்களுக்கு மிகவும்ஸுலபனுயிருப்பது. (94)

---

## நான்காம் திருவாய்மொழி

அவ— ஆழ்வார் திருவாறன்விளைக்குப் போகவேண்டும் என்று ஆசைப்பட்டு, அது முடியாமல் மூன்று திருவாய்மொழி களில் வருத்தப்பட்டார். அந்த வருத்தம் போவதற்காக எம்பெ ருமான் திருச்செங்குன்றூரில் முன்னேலேயெழுந்தருளியிருந்த தன் அழகைக்காட்டினான். அதைப் பார்த்து, பிரீதியாலே திரு வாறன்விளையை மறந்து விரஹதாபமெல்லாம் போய் ஆநந்த ஸமுத்திரத்தில் மூழ்கி, அவனுடைய அழகு ஸௌலப்யம் ஐசுவ ரியம் முதலியவைகளை வர்ணித்து, அந்த ஊருக்குப்போகவேணு மென்று இதில் சொல்லுகிறார்.

(எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்)

வார்கடா வருவி யானை மாமலையின்
மருப்பிணைக் குவடிறுத் துருட்டி
ஊர்கோள் திண்பாக னுயிர்செகுத் தரங்கின்
மல்லரைக் கொன்று சூழ்பரண்மேல்
போர்கடா வரசர் புறக்கிட மாட
மீமிசைக் கஞ்சனைத் தகர்த்த
சீர்கோள் சிற்றாயன் திருச்செங் குன்றூரில்
திருச்சிற்றா றெங்கள் செல்சார்வே (க)

(ப-ரை) வார்கடா-பெருகிற மதஜலமாகிற, அருவி-அருவி யையுடைய, யானை மாமலையின் - யானையாகிற பெரிய மலையினு டைய, மருப்பு - தந்தங்களாகிற, இணை குவடு-ஒன்றோடொன்று ஒத்திருந்த சிகரங்களை, இறுத்து - முறித்து, உருட்டி - அந்த யானையை (கரிப்பானையை உருட்டினதுபோல) உருட்டி, ஊர் கொள் - ஊர்தலைக்கொண்ட (யானையைநடந்து வரும்படி செய்த) திண் - திடமான, பாகன் - பாகனுடைய, உயிர் - பிராணனை, செகுத்து - அழித்து, அரங்கில் - ரங்கத்தில், மல்லரை - மல்லர் களை, கொன்று, சூழ் - (ரங்கத்தைச்) சூழ்ந்திருந்த, பரண்மேல் - மஞ்சங்களின்மேலேயிருந்த, போர் - சண்டையை, கடா - நடத் தின, அரசர் - ராஜாக்கள், புறக்கிட - முதுகைக்காட்டி ஓடிப் போகும்படி, மாட மீமிசை-வீடுபோல் உயர்ந்த ஸிம்மாஸனத்தின் மேலேயிருந்த, கஞ்சனை-கம்ஸனை, தகர்த்த - (பானையை உடைத்

ததுபோல்) உடைத்த, சீர் கொள் - விஜயஸ்ரீயைக்கொண்ட, சிறு ஆயன் - பாலகோபாலன் (எழுந்தருளியிருக்கும்,) திருச்செங்குன்றூரில், திரு சிறு ஆறு - திருச்சிற்றாற்றின் கரையானது, எங்கள் செல் சார்வு - நாங்கள் சென்று அடையவேண்டிய இடம்.

(கருத்து) ஒரு பெரிய மலையிலிருந்து ஓர் அருவி, தானாய்ப் பெருகுவதுபோல் மதஜலத்தைச் சொரிகிற குவலயாபீடம் என்கிற யானையினுடைய இரட்டைச் சிகரம்போலிருந்த தந்தங்களை முறித்து, கறுப்பான பானையை உருட்டுவதுபோல் அந்த யானையை உருட்டி, தந்தம் போன அந்த யானையை நடத்திக் கொண்டுவந்த திடமான பாகன் உயிரை நாசம் செய்து, யானையின் தந்தங்களோடு பலராமனுடன் ரங்கத்திற்குள் புகுந்து, அங்கேயிருந்து தன்னைச் சண்டைக்குக் கூப்பிட்ட சாணூரன் முதலான மல்லர்களைக்கொன்று, ரங்கத்தைச் சுற்றி மஞ்சங்களின் மேலிருந்தவர்களும், முன்னாலே சண்டையில் தோல்வியை அடையாதவர்களுமான கம்ஸனைச்சேர்ந்த ராஜாக்கள் பயந்து பின்புறம் காட்டி ஓடும்படிபண்ணி, உயர்ந்த ஸிம்மாஸநத்திலிருந்த கம்ஸனை, வெண்ணெயைச் சாப்பிட்டு வெறும் பானையை பாறையில் அடித்து விளையாடினதுபோல், கொன்ற விஜயஸ்ரீ நிறைந்த பாலகோபாலன் எழுந்தருளியிருக்கும் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையே நாம் போய்ச் சேரவேண்டிய இடம்.

குறிப்பு—(1)ரங்கம் என்பது மல்லர்களுடன் சண்டை செய்வதற்கு ஏற்பட்ட இடம். அதற்கு நாலுபக்கங்களிலும் சண்டையைப் பார்க்க வந்தவர்கள் இருப்பதற்கு மஞ்சங்கள் போட்டு இருக்கும்.

(2) கம்ஸன், "ஐயோ! மோசம் போய் இந்தக் கண்ணன் பிறக்காதிருக்கும்படி செய்யாமல் போனேனே" என்று துக்கப்பட்டு கண்ணனைக் கொல்லுவதற்காக யானையை ரங்கத்வாரத்தில் வைத்து மதத்தை உண்டுபண்ணும்படியானவைகளைக்கொடுத்து அதற்கு மதத்தை உண்டுபண்ணியிருந்தானென்பது "வார்கடா வருவி" என்பதின் கருத்து.

(3) ஆழ்வாருக்கு முன்னாலே உண்டாயிருந்த துக்கமானது வாயால் சொல்ல முடியாததாயிருந்தது; இப்போது அவர்க்குண்

டான ஸந்தோஷமும் அப்படியேயிருக்கிறது. அதினால்தான் விஸ்தாரமாய் அந்த ஊரையும் அதிலிருந்த எம்பெருமானையும் வர்ணிக்கிறார்.

இ—ம். கடா அரசர் - கடாவு அரசர். வினைத்தொகை.

எங்கள் செல்சார்வு யாமுடை யமுத
மிமையவ ரப்ப னென்னப்பன்
பொங்கு மூவுலகும் படைத்தளித் தழிக்கும்
பொருந்து மூவுருவ னெம்மருவன்
செங்கய லுகளுந் தேம்பணை புடைசூழ்
திருச்செங் குன்றூர்த் திருச்சிற்றாறு
அங்க மர்கின்ற ஆதியா னல்லால்
யாவர் மற்றென் னமர்துணையே. (உ)

(ப-ரை) எங்கள் செல் சார்வு-நாங்கள் சென்று அடையவேண்டியவன், யாமுடை அமுதம் - நம்முடைய போக்கியன், இமையவர் அப்பன் - நித்தியஸூரிகள் ஸ்வாமி, என் அப்பன் - என்னுடைய ஸ்வாமி, பொங்கு-(மேன்மேல்) விருத்தியை அடைகிற, மூவுலகம் - மூன்று உலகங்களையும், படைத்து - உண்டுபண்ணி, அளித்து - ரக்ஷித்து, அழிக்கும் - நாசம் செய்கிற, பொருந்து, (ஸிருஷ்டி முதலான வேலைகளுக்குத்) தகுந்த, மூ உருவன்-மூன்று ரூபங்களையுடையவன், எம் அருவன்-எம்முடைய, (எங்களுக்குத் தன்னைக்காட்டி விரோதிகளுக்குப் பார்க்கமுடியாத) ரூபமில்லாதவன், செம் கயல் உகளும் - சிவந்தகயல் என்கிற மீன்கள் துள்ளும்படியான, தேன் பணை - (மரங்களிலிருந்து சொட்டுகிற) தேனையுடைய நீர் நிலங்களால்,புடைசூழ்-பக்கம் எல்லாம் சூழப்பட்ட, திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறு அங்கு - திருச்செற்றாறாகிய அந்த இடத்தில், அமர்கின்ற - நிலையாய் இருக்கிற, ஆதியான் அல்லால் - ஸர்வகாரணமான அவனைத் தவிர, மற்று - வேறு, என் அமர் துணை - எனக்கு நிலையாயிருக்கும் துணை, யாவர் - எவர்.

(கருத்து) நாம் போய் அடையவேண்டியவன் யாரென்றால், நமக்கு அமிருதம்போல் இனியவனும், நித்யஸூரிகளுக்கு நாயகனும், எனக்கும் நாயகனும், மேன்மேல் விருத்தியை அடைகிற

மூன்று உலகங்களை உண்டுபண்ணி ரக்ஷித்து, அழித்து, லீலா ரஸத்தை அநுபவிக்கிறவனும், இந்த மூன்று வேலைகளைச் செய்வதற்குத் தகுந்தபடி பிரம்மாவாகவும் தானாகவும் ருத்திரனாகவும் தோன்றுகிறவனும், ஆச்ரிதரான நமக்குத் தன்னைக் காட்டுகிறவனும், ஆச்ரிதர்களின் விரோதிகளாலே பார்க்க முடியாதவனுமான எம் பெருமான். அவன் சிவந்த மீன் குட்டிகள் ஸந்தோஷத்தினால் துள்ளிவிளையாடுகிற தேம்பணையுடைசூழ் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையில் நிலையாய் எழுந்தருளியிருக்கிறான். இந்த ஸர்வகாரணனை அவனைத்தவிர நமக்கு வேறு நிலையாயிருக்கும் துணை ஒருவரும் இல்லை.

குறிப்பு— (1) ஆழ்வார் தம்மைச் சேர்ந்தவர்களையும் சேர்த்துக்கொண்டு 'எங்கள்' என்று பன்மைச் சொல்லால் சொல்லுகிறார்.

(2) அந்த ஊரின் அழகை வாயால் சொல்லமுடியாமல் "அங்கு" என்று அருளிச் செய்கிறார்.

இ—ம். தேம்பணை - தேன் + பணை; னகர ஒற்றுக்கெட்டு இனவெழுத்துத் தோன்றியிருக்கிறது. (2)

---

என்னமர் பெருமா னிமையவர் பெருமா
னிருநில மிடந்த வெம்பெருமான்
முன்னை வல்வினைகள் முழுதுடன் மாள
வென்னை யாள்கின்ற வெம்பெருமான்
தென்திசைக் கணிகோள் திருச்செங் குன்றூரில்
திருச்சிற் றாற்றங் கரைமீபால்
நின்றவெம் பெருமா னடியல் லால்சரண்
நினைப்பிலும் பிறிதில்லை யெனக்கே. (௩)

(ப-ரை) இமையவர் பெருமான் - நித்தியஸூரிகளுக்கு ஸ்வாமி, என் அமர் பெருமான் - என்னுடன் நிலையாயிருக்கும் ஸ்வாமி, இரு நிலம் - விசாலமான பூமியை, இடந்த - பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்த, எம்பெருமான் - என் ஸ்வாமி, முன்னை - முன்னாலே, (எனக்கு உண்டாயிருந்த) வல் - பலமான, வினைகள் - கர்மங்கள் (துக்கம்), முழுது - முழுவதும், உடன் - ஒரே க்ஷணத்தில், மாள - நாசம் அடையும்படி, என்னை

ஆள்கின்ற - என்னை அடிமையாக்கிக்கொண்ட, எம்பெருமான் - என்னுடைய மஹாபுருஷன், தென் திசைக்கு - தெற்குத் திக்குக்கு, அணி கொள் - அலங்காரத்தைக்கொண்ட, திருச்செங்குன்றூரில், சிற்றாற்றங்கரை - திருச்சிற்றாற்றங்கரையினுடைய, மீபால் - மேல் பாகத்தில், நின்ற - நிலையாய் எழுந்தருளியிருக்கிற, எம்பெருமான் - எம்பெருமானுடைய, அடி அல்லால் - திருவடிகளை ஒழிய, எனக்கு, நினைப்பினும் - நினைப்பதிலும், பிறிது சரண் இல்லை - வேறான அடையவேண்டிய இடமில்லை.

(கருத்து) நித்தியஸூரிகளுடன் சேர்ந்திருப்பது தனக்கு எப்படி போக்கியமாயிருக்குமோ அப்படியே என்னுடன் சேர்ந்திருப்பதையும் தனக்குப் போக்கியமாய் எண்ணுகிறவனும், விசாலமான பூமியைப் பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டு வந்ததுபோல் முன் அவனுடைய பிரிவினால் உண்டான ஆழமான துக்க ஸமுத்திரத்தில் முழுகியிருந்த என்னை அந்தத் துக்கம் ஒரே க்ஷணத்தில் போகும்படி செய்து, தனக்கு அடிமையாக்கிக் கொண்டவனும், இதனால் ஒரு பெருமையை அடைந்தவனுமான எம்பெருமான் தெற்குத்திக்குக்கு அலங்காரமாக எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையில் மேல் பாகத்திலிருந்து தன் அழகைக் காட்டி என்னை அடிமைகொண்டான். அவனுடைய திருவடிகளைத் தவிர வேறு ஒருவனையும் ஸ்வப்நத்திலும் நினைக்க மாட்டேன்.

குறிப்பு— பாட்டில் "வினைகள்" என்பதற்கு அவைகளாலுண்டான துக்கம் என்பது பொருள். (3)

---

பிறிதில்லை யெனக்குப் பெரிய மூவுலகும்
 நிறையப்பே ருருவமாய் நிமிர்ந்த
குறியமா ணெம்மான் குரைகடல் கடைந்த
 கோலமா ணிக்கமேன் னம்மான்
செறிகுலை வாழை கமுகு தெங்கணிசூழ்
 திருச்செங் குன்றூர்த் திருச்சிற்றாறு
அறிய மெய்ம்மையே நின்றவெம் பெருமா
 னடியிணை யல்லதோ ரரணே. (ச)

(ப-ரை) குறிய மாண் - வாமந ப்ரம்மசாரியான, எம்பெருமான் - என்னுடைய ஸ்வாமி, பெரிய - மூ உலகும் - மூன்று

உலகங்களும், நிறைய, பேர் உருவமாய் - பெரிய ரூபமுள்ளவனாக, நிமிர்ந்த - வளர்ந்தவனும், குரை கடல்-சப்திக்கிற ஸமுத்திரத்தை, கடைந்த, கோலம் மாணிக்கம் - அழகான இந்திர நீல மணி போன்ற ரூபமுள்ளவனுமான, என் அம்மான்-என் ஸ்வாமி, செறி குலை - நிறைந்த பழக்குலைகளையுடைய, வாழை, கமுகு-பாக்கு, தெங்கு - தென்னை, (இவைகளின்) அணி - வரிசைகளாலே, சூழ் - சூழப்பட்ட, திருச்செங்குன்றூர் திருச்சிற்றாறு (அதிலுள்ள ஜநங்கள்) மெய்ம்மையே-உள்ளபடியே, அறிய - அறியும்படி, நின்ற, எம்பெருமான் - என்ஸ்வாமியினுடைய, அடி-இணை அல்லது -இரண்டு திருவடிகளையல்லாமல், பிறிது - வேறு, எனக்கு, ஓர் அரண் இல்லை - ஓர் உபாயமில்லை.

(கருத்து) வாமநப்ரம்மசாரியாய் அவதாரம் செய்து பெரிய மூன்று உலகங்களும் நிறையும்படி ஆரம்பித்த காரியம் முடிந்த ஸந்தோஷத்தாலே உடம்பு பூரித்ததுபோல் பெரிய உருவத்துடன் வளர்ந்தவனும், சப்திக்கிற திருப்பாற்கடலை கடைந்தவனும் அழகானவனும், நீலரத்னம்போன்ற திருமேனியையுடையவனும், இந்த அழகையும், செய்த வேலைகளையும் காட்டி என்னை அடிமையாக்கிக் கொண்டவனுமானவன் நிறைந்த பழக்குலைகளையுடைய வாழை பாக்கு தென்னை இவைகளின் வரிசைகளால் சூழப்பட்ட திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாங்கரையிலிருக்கிறவர்கள் தன்னை ஸர்வேசுவரன் என்று உள்ளபடி அறியும்படி இருக்கிறான். அவனையே ப்ராப்யமாக எண்ணியிருக்கிற எனக்கு அவனுடைய இரண்டு திருவடிகளைத் தவிர வேறு ஓர் உபாயமில்லை.

இ—ம். சிற்றாறு - ஆகுபெயராய் அதிலிருக்கிறவர்களைச் சொல்லுகிறது. (4)

---

அல்லதோ ரரணு மவனில்வே றில்லை
 யதுபோரு ளாகிலு மவனை
யல்லதேன் னாவி யமர்ந்தணை கில்லா
 தாதலா லவனுறை கின்ற
நல்லநான் மறையோர் வேள்வியுள் மடுத்த
 நறும்புகை விசும்பொளி மறைக்கும்
நல்லநீள் மாடத் திருச்சேங் குன்றூரில்
 திருச்சிற்றா றேனக்கு நல்லரணே. (ரு)

(ப-ரை) அல்லது - (இந்த ஊர் எம்பெருமானைத்) தவிர, ஓர் அரணும் - வேறு ஊர்களில் அர்ச்சாரூபமாக எழுந்தருளியிருக்கும் ரக்ஷகனான எம்பெருமான்களும், அவனில் - இந்த ஊரிலிருக்கிறவனைக் காட்டிலும், வேறு இல்லை, அது பொருள் - அதுவே உண்மையானது, (ஆகிலும்,) அவன் அல்லது - அவனைத் தவிர (வேறு எம்பெருமானை) என் ஆவி-என் மனது, அமர்ந்து-நிலையாயிருந்து, அணைகில்லாது - கிட்டுகைக்குச் சக்தியில்லாதது, ஆதலால், அவன் உறைகின்ற - வஸிக்கிற, நல்ல - பக்தியுள்ள, நான் மறையோர் - நான்கு வேதங்களை அறிந்தவர்களுடைய, வேள்வியுள் - யாகங்களில், மடுத்த - ஹோமஞ்செய்த ஹவிஸ்ஸுகளாலே, நறும் புகை - வாஸிக்கிற புகையானது, விசிம்பு ஒளி - ஆகாசத்திலிருக்கிற ஸூர்யன் முதலான ஜ்யோதிஸ்ஸுகளை, மறைக்கும், நல்ல - அழகான, நீள் - உயர்ந்த, மாடம் - வீடுகளை உடைய, திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு, எனக்கு, நல் அரண் - நல்ல ரக்ஷாஸ்தானம்.

(கருத்து) வேறு திவ்ய தேசங்களில் அர்ச்சாரூபமாக எழுந்தருளியிருக்கும் ரக்ஷகர்கள் அந்த ஊரில் எழுந்தருளியிருக்கும் ரக்ஷகனைக் காட்டிலும் வேறில்லை. இது உண்மையான விஷயம். ஆகிலும், என் மனது அவனைத் தவிர வேறு எம்பெருமானைக் கிட்டி நிலையாயிருக்கச் சக்தியில்லாதது. ஆகையால், பக்தியுள்ளவர்களும் நாலு வேதங்களை அறிந்தவர்களுமான ஸ்ரீ வைஷ்ணவர்கள் செய்யும் யாகங்களில் ஹோமஞ் செய்யப்பட்ட ஹவிஸ்ஸுகளிலிருந்து வாஸனையுள்ள புகை கிளம்பி ஆகாசத்திலே போய் ஸூர்யன் முதலான தேஜஸ்ஸுக்களை மறைக்கும்படியும் அழகான உயர்ந்த வீடுகளையுடையதாயுமிருக்கிற திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறே எனக்கு அவனை விடாமல் அநுபவிக்கும்படியான இடம்.

குறிப்பு— இப்படியே ஹநுமாரும் சக்கிரவர்த்தித் திருமகன் வைகுந்த நாதனைக் காட்டிலும் வேறில்லையென்று அறிந்தபோதிலும், சக்கிரவர்த்தித் திருமகனைக்காட்டிலும் வேறிடத்தில் என் மனது போகிறதில்லை என்று சொன்னார்.

இ—ம். அவனில் - இல், ஐந்தாம் வேற்றுமை உருபு. (5)

அவ.— இப்படிக் கீழ் ஐந்து பாட்டுக்களாலே திருச்செங்குன்றூரை வர்ணித்து, அதிலிருக்கும் திருச்சிற்றாறு தாம் தனிமையாய் இருப்பதாக நினைக்கப்பட்ட வருத்தம் போகும்படியான இடம் என்று சொன்னார்; மேற் பாட்டுக்களால், எம்பெருமானுக்குத் துணையானவர்கள் அநேகம் பேர்கள் அங்கே இருக்கிறார்கள் என்று அருளிச் செய்கிறார்:—

எனக்குநல் லரணை யெனதா ருயிரை
 யிமையவர் தந்தை தாய்தன்னை
தனக்குந்தன் தன்மை யறிவரி யானைத்
 தடங்கடற் பள்ளி யம்மானை
மனக்கோள்சீர் மூவா யிரவர்வண் சிவனு
 மயனுந் தானு மொப்பார்வாழ்
கனக்கோள் திண்மாடத் திருச்செங் குன்றூரில்
 திருச்சிற்று றதனுள் கண்டேனே. (சு)

(ப-ரை) எனக்கு,நல் அரணை-எப்போதும் ரக்ஷிக்கிறவனும், எனது ஆர் உயிரை - எனக்கு அருமையான பிராணனும் இருக்கிறவனும், இமையவர் - நித்யஸூரிகளுக்கு, தந்தை தாய் தன்னை-தகப்பனாராகவும் தாயாராகவுமிருக்கிறவனும்,தனக்கும், தன் தன்மை - தன் ஸ்வபாவத்தை, அறிவு அரியானை - அறிய முடியாதவனும், தடம் கடல் - விசாலமான திருப்பாற்கடலில், பள்ளி அம்மானை - படுத்திருப்பவனுமான என் ஸ்வாமியை, மனம் கொள் - மனதைக் கொள்ளும் (இழுக்கும்), சீர் - நல்ல குணங்களையுடைய, வண் - செல்வமுள்ள, சிவனும், அயனும் - பிரம்மாவும், தானும், ஒப்பார்-ஒப்பாகும்படியிருக்கிறவர்களான, மூவாயிரவர் - மூவாயிரம் பேர்கள், வாழ் - வாழ்கின்ற, கனம் கொள் - கனத்தைக்கொண்ட, திண் மாடம்-திடமான வீடுகளையுடைய, திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறு அதனுள் - திருச்சிற்றாற்றில், கண்டேன்.

(கருத்து) என்னை எப்போதும் ரக்ஷிக்கிறவனும், எனக்கு அருமையான பிராணனும், நித்தியஸூரிகளுக்குத் தகப்பனைப் போலவும் தாயைப்போலவும்ஹிதத்தையும் பிரியத்தையும் செய்கிறவனும், எல்லாமறிந்த தன்னாலும் தன் ஸ்வபாவத்தை அளவிட்டு அறியமுடியாதவனும்,பிரம்மாமுதலானதேவர்களை ரக்ஷிப்

பதற்காகவும்,ச்வேதத்வீபத்தில் வஸிக்கிற பெரியோர்கள் தம்மை அநுபவிக்கிறதற்காகவும் திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருப்பவனுமான என் ஸ்வாமியை நான் கண்டேன். எங்கே என்றால், மனதை இழுக்கும்படியான நல்லகுணங்களையுடையவர்களும் செல்வம் நிறைந்தவர்களும், பிரம்மாவையும் ருத்திரனையும் தன்னையும் போல் உலகங்களை உண்டுபண்ணி ரக்ஷித்து அழிக்க ஒவ்வொருவரே சக்தியுள்ளவர்களுமான மூவாயிரம் ஸ்ரீவைஷ்ணவர்கள் அவனை அநுபவித்து ஸந்தோஷத்துடன் வஸிக்கிற மிகவும் உயர்ந்து பெரிதாய் திருடமாயிருக்கும் வீடுகளையுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையில் கண்டேன்.

குறிப்பு— (1) எம்பெருமானுடைய திருமேனியைப் பிரீதியுடன் ரக்ஷிக்கிறவர்கள் இல்லையென்று கீழ்த் திருவாய்மொழியில் வருத்தப்பட்டார். அந்தத் திருமேனியில் பரிவுள்ளவர்கள் மூவாயிரம் பேர்கள் இருக்கிறார்களென்றும், இந்த பாக்கியத்தைப் பெற்றேனே என்றும் இதில் ஸந்தோஷப்படுகிறார்.

(2) அந்த ஊர்தானே பிரதிகூலர்களுக்குக் கிட்ட முடியாதிருக்கிறதென்பது "திண்மாடம்" என்பதின் பொருள். (6)

---

அவ:— எம்பெருமான் தனியாயிருக்கிறான் என்று பட்ட வருத்தம் நீங்கவே, ஆழ்வார் அவனை இந்தப் பாட்டில் அநுபவிக்கிறார்:—

திருச்சேங் குன்றூரில் திருச்சிற் றாறதனுள்
கண்டவத் திருவடி யென்றும்
திருச்செய்ய கமலக் கண்ணுஞ் செவ்வாயும்
செவ்வடி யுஞ்செய்ய கையும்
திருச்செய்ய கமல வுந்தியுஞ் செய்ய
கமலமார்புஞ் செய்ய வுடையும்
திருச்செய்ய முடியு மாரமும் படையும்
திகழ வென்சிந்தை யுளானே. (எ)

(ப-ரை) திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறு அதனுள், கண்ட-எல்லாராலும் பார்க்கப்பட்ட, அ திருவடி-அந்த ஸ்வாமி, திரு செய்ய-அழகையுடைய சிவந்த, கமலம் கண்ணும்-தாமரையிதழ் போன்ற திருக்கண்களும், செவ்வாயும்-சிவந்த திருப்பவளமும்,

செவ்வடியும்-சிவந்த திருவடிகளும், செய்ய கையும்-சிவந்த திருக்கைகளும், திரு செய்ய கமல உந்தியும் - அழகான செந்தாமரை போன்ற திருநாபியும், செய்ய கமல மார்பும் - செந்தாமரை போன்ற திருமார்பும், செய்ய உடையும் - பீதாம்பரமும், திரு செய்ய முடியும் - அழகான சிவந்த கிரீடமும், ஆரமும் - முத்து மாலையும், படையும் - ஆயுதங்களும், திகழ - விளங்கும்படி, என்றும் - எப்போதும், என் சிந்தையுளான் - என் மனதிலிருக்கிருன்.

(கருத்து) திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றின் கரையில் எல்லாரும் காணும்படி எழுந்தருளியிருக்கிற ஸ்வாமியானவன், அழகான செந்தாமரை போன்ற திருக்கண்களும், பவழம்போல் சிவந்த திருப்பவளமும், செந்தாமரை போன்ற திருக்கைகளும் திருவடிகளும் திருநாபியும், பிராட்டியின் காந்தியால் சிவந்த தாமரைப்பூப்போல் விளங்கும் திருமார்பும், நீலமலையைச் சுற்றிக் கொண்டிருக்கிற ஸாயங்கால வெய்யிலைப்போலிருக்கும் பீதாம்பரமும், பத்மராகங்கள் இழைக்கப்பட்டிருப்பதால் உதிக்கிற ஸூரியனைப்போன்ற சிவந்த கிரீடமும், முத்துமாலையும், சண்டைக் காலத்தில் ஆயுதங்களாகவும், மற்றக் காலங்களில் ஆபரணங்களாகவுமிருக்கிற சங்கு சக்ரம் முதலான ஆயுதங்களும் விளங்கும்படி எப்போதும் என் மனதில் எழுந்தருளியிருக்கிருன்.

குறிப்பு— (1) ஆழ்வார் எம்பெருமானுடைய திருக்கண்கள் முதலான அவயவங்களை அநுபவித்த விதம் - அளவில்லாத தயை, நன்றாயிருக்கவேணும் என்கிற எண்ணம், ஆசை, இவைகளை உள்ளே வைத்துக்கொண்டிருக்கிற கடாக்ஷங்களின் பரம்பரையால் ஆச்ரிதர்களான ஜநங்களை முதல் முதல் பார்த்து அதினால் அவர்களுடைய எல்லா இந்திரியங்களுக்கும் ஸுகத்தைக்கொடுத்து, காந்தியாலும் மிருதுவாயிருப்பதாலும் மலர்ந்திருப்பதாலும் செந்தாமரைப் பூவின் அழகை அபஹரிக்குமவைகளான திருக்கண்களிருக்கின்றன என்பதும், அவர்களைப் பார்த்ததினாலுண்டான மிகுந்த ஸந்தோஷத்தாலே "அப்பா வந்தாயா?" என்று சொல்வதுபோல் தன் அபிப்ராயத்தைக் காட்டுகிற அழகான மந்த ஹாஸத்துடன் திருப்பவளம் விளங்குகிறது என்பதும், சொன்னபடி இனியதான கடாக்ஷத்தாலும் மந்தஹாஸத்தாலும் தோற்றுப் பக்தி பரவசராய் விழுந்து தலை

யால் தொடும்போது அவர்களுடைய தலைகளுக்கு அலங்காரமான இரண்டு மலர்ந்த செந்தாமரைப் பூக்கள்போல் இரண்டு திருவடிகளிருக்கின்றன என்பதும், தன் திருவடிகளில் விழுந்த அவர்களை ஸ்நேஹத்தால் தன் திருக்கையால் தொடும்போது, மலர்ந்த தாமரைப்பூவின் ஸ்பரிசம்போன்ற ஸ்பரிசத்தையுடையவைகளாய் மிகவும் அழகாய் எல்லாத் தாபங்களையும் போக்குமவைகளாய்த் திருக்கைகள் இருக்கின்றன என்பதும், திருவடிகளில் விழுந்தவர்களை அவன் கட்டிக்கொள்ளும்போது, வணக்கத்தாலும் கூச்சத்தாலும் தலை குனிந்து அவர்களால் அநுபவிக்கும்படி அழகியதாய், பீதாம்பரத்தின் மேலே சாத்திக்கொண்டிருக்கிற அரைஞாணின் காந்தியாலே சிவப்பு நிறமுள்ளதாய், சுற்றிலும் உயரமாயும் நடுவில் பள்ளமாயுமிருப்பதால் கொஞ்சம் மலர்ந்த தாமரைப்பூப் போலிருக்கிறது திருநாபி என்பதுமாம். (7)

---

திகழவென் சிந்தை யுளிருந் தானைச்
செழுநிலத் தேவர்நான் மறையோர்
திசைகை கூப்பியேத்துந் திருச்செங் குன்றூரில்
திருச்சிற் றாற்றங் கரையானைப்
புகர்கோள் வானவர்கள் புகலிடந் தன்னை
யசுரர் வன்கையர் வெங்கூற்றைப்
புகழுமா றறியேன் பொருந்துமூ வுலகும்
படைப்போடு கெடுப்புக் காப்பவனே. (அ)

(ப-ரை) பொருந்து - (தன்னுடைய குணங்களிலே ஆசையுள்ளனவாகத்) தகுந்த, மூ உலகும் - மூன்று உலகங்களுடைய, படைப்பொடு - உண்டுபண்ணுவதோடு, கெடுப்பு - அழிப்பதையும், காப்பவன் - ரக்ஷிப்பதையும் செய்கிறவனும், புகர்கொள் - (தன்னிடத்தில் பக்தியாகிய) காந்தியைக்கொண்ட, வானவர்கள் - தேவர்களுக்கும், புகலிடம் தன்னை - ஆச்ரயிக்குமிடமானவனும், வன் கையர் - பலமுள்ள கைகளையுடையவர்களான, அசுரர் - அஸுரர்களுக்கு, வெம் கூற்றை - க்ரூரமான யமனும், நான்மறையோர் - நான்கு வேதங்களையறிந்தவர்களாய், செழு - விலக்ஷணர்களான, நிலத்தேவர் - பூமியிலிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள்

திசை கை கூப்பி - எல்லாத் திக்குக்களிலும் கைகளைக் கூப்பி, ஏத்தும் - ஸ்தோத்ரம் பண்ணும், திருச்செங்குன்றூரில் - திருச்சிற்றாற்றங்கரையானை, (அதிலிருக்குமவனும்), திகழ் - மிகவும் நன்றாய் விளங்கும், என் சிந்தையுள் இருந்தானை - என் மனதிலிருப்பவனுமான எம்பெருமானை, புகழும் ஆறு - ஸ்தோத்ரம் பண்ணும் விதத்தை, அறியேன்.

(கருத்து) நான்கு வேதங்களை அறிந்தவர்களும், எம்பெருமானுடைய திருவடிகளில் ஆசையுள்ளவர்களுமான பூமியில் இருக்கிற ஸ்ரீ வைஷ்ணவர்கள் எல்லாத் திக்குக்களிலும் கைகளைக் கூப்பிக்கொண்டு ஸ்தோத்ரம் பண்ணும் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையிலிருக்கிறவன் என்னுடைய மனதில் நன்றாய் விளங்குகிறான். அவன் தன்னிடத்தில் ஆசையுள்ளவைகளாகத் தகுந்த மூன்று உலகங்களையும் உண்டுபண்ணி ரக்ஷித்து அழித்துக்கொண்டு விளையாடுகிறான். தன்னிடத்தில் பக்தியாகிய காந்தியால் விளங்கும் பிரம்மாமுதலான தேவர்கள் வந்து அடைவதற்கு இடமாயிருக்கிறான். பலமுள்ள அஸுரர்களுக்கு க்ரூரமான யமனுயிருக்கிறான். இப்படிப்பட்ட அவனை நான் எப்படி ஸ்தோத்ரம் பண்ணுவேன். அவனுடைய அழகுக்கும் ஸௌசீல்யம் என்கிற குணத்துக்கும் அளவுண்டோ?

குறிப்பு— (1) உலகத்தை எப்படி தயையினுலுண்டுபண்ணுகிறானே, அப்படியே அதைத்தயையினுலேயே அழிக்கிறான். முன்னுல் செய்யப்பட்ட அபராதங்களால் உண்டான கெட்ட வாஸனைகள் அடங்குவதே ஸம்ஹாரத்துக்கு பிரயோஜநம்.

(2) உலகத்துக்குத் துன்பத்தைச் செய்யும் யமனும் தயையுள்ளவன் என்று சொல்லும்படி எம்பெருமான் அஸுரர்கள் விஷயத்தில் குரூரமாயிருக்கிறான் என்பது 'வெம்கூற்றை' என்பதின் கருத்து. (8)

---

அவ— "நீர் என்னை ஸ்தோத்ரம் பண்ண முடியாதென்று சொன்னீரே, நீர் சொன்னது ஸ்தோத்ரமன்றோ." என்கிற கேள்விக்கு இதில் பதில் சொல்லுகிறார்:-

படைப்பொடு கெடுப்புக் காப்பவன் பிரம
 பரம்பரன் சிவப்பிரா னவனே
இடைப்புக்கோ ருருவு மொழிவில்லை யவனே
 புகழ்வில்லை யாவையும் தானே
கோடைப்பெரும் புகழா ரினையர் தன்னானார்
 கூரிய விச்சையோ டொழுக்கம்
நடைப்பலி யியற்கைத் திருச்செங்குன் றூரில்
 திருச்சிற்று றமர்ந்த நாதனே. (கூ)

(ப-ரை) கொடை - தாநம் (செய்வதாலுண்டான), பெரும் புகழ் - பெரிய கீர்த்தியையுடையவர்களும், இளையர் - இன்னார் என்று பிரஸித்தர்களும், தன் ஆனார், தன்னைப் போலானவர்களுமான ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய, கூரிய விச்சை - ஸூக்ஷ்மமான வித்யைகளோடு, ஒழுக்கம் - ஆசாரங்களும், நடை பலி - (ஒவ்வொருநாளும்) நடக்கிற ஐந்து மஹா யஜ்ஞங்களும், இயற்கை - ஸ்வபாவமாயிருக்கிற, திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு - அதின் கரையில், அமர்ந்த-நிலையாயிருக்கிற, நாதன் - ஸர்வேசுவரன், படைப்பொடு கெடுப்பு காப்பவன் - உலகங்களை உண்டுபண்ணுவதுடன் அழித்து ரக்ஷிக்கிறவன், அவனே, பிரமன் - பிரம்மாவாகிய, பரம்பரன் அவனே, சிவன் பிரான் - சிவனாகிய (தேவர்களுக்கு) உபகாரம் பண்ணுகிறவன், அவனே, இடை புக்கு - (இவர்களுக்கு) நடுவே புகுந்து, ஓர் உருவும் - ஒரு வஸ்துவையும், ஒழிவில்லை - விட்டு விடுவதில்லை (விடாமல் ரக்ஷிக்கிறவன்). யாவையும் - எல்லா வஸ்துக்களும், தானே - தானாகவேயிருக்கிறான், புகழ்வு இல்லை - இது ஸ்தோத்ரமன்று. 'பரம்பரன்' என்பதற்கு, மனிதர்களைக் காட்டிலு முயர்ந்தவர்கள் தேவர்கள். அவர்களைக்காட்டிலுமுயர்ந்தவன் பிரம்மா என்பது பொருள்.

(கருத்து) வித்யாதாநம் முதலான தாநங்களினாலுண்டான பெரிய கீர்த்தியையுடையவர்களும், சிஷ்டர்கள் (உயர்ந்தவர்கள்) என்று கொண்டாடப்பட்டவர்களும், தன்னைப்போலிருக்கிறவர்களும் வேதவேதாந்தத்தின் ஸூக்ஷ்மமான ஜ்ஞாநமுடையவர்களும், அந்தஜ்ஞாநத்துக்குத் தகுந்தபடி அநுஷ்டாநமுடையவர்களும், ஒவ்வொரு நாளும் பஞ்ச மஹாயஜ்ஞங்களை இயற்கையாய்ச் செய்கிறவர்களுமான ஸ்ரீ வைஷ்ணவர்கள் வஸிக்கிற திருச்செங்

குன்றாரில் திருச்சிற்றுற்றங்கரையில் நிலையாயிருக்கும் ஸர்வேசுவரன் உலகங்களையுண்டுபண்ணி ரக்ஷித்து அழிக்கிறான். பரம்பரனான பிரம்மாவைக்கொண்டு ஸிருஷ்டியைச்செய்கிறான். தேவர்களுக்கு உபகாரம் செய்கிற சிவனாயிருந்து அதை அழிக்கிறான். இவர்களுக்கு நடுவிலே விஷ்ணுவாக அவதாரம் செய்து உலகங்களிலுள்ள எல்லா வஸ்துக்களையும் ஒன்றையும் விடாமல் ரக்ஷிக்கிறான். அவனே உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களாகக் காணப்படுகிறான். இப்படி அவனிருக்கிறான் என்று சொல்லுவது ஸ்தோத்ரமன்று. ஸ்தோத்ரமென்பது ஒருவனுடைய குணங்களைமுழுவதும் சொல்லுவதன்றோ? எம்பெருமானுடைய குணங்கள் ஒரு பெரிய ஸமுத்ரம். நான் சொல்லுவது அதில் ஒரு திவலை. அது எப்படி ஸ்தோத்ரமாக ஆகும்.

---

அவ— எம்பெருமானை ஸ்தோத்ரம் பண்ணமுடியாது என்று கீழ் இரண்டு பாட்டுக்களில் சொன்னார்; அவனைத் தாம் அநுபவிக்கும் பாக்கியத்தை அடைந்தேன் என்று இதில் ஸந்தோஷப்படுகிறார்:—

அமர்ந்த நாதனை யவரவ ராகி
 யவர்க்கரு ளருளுமம் மானை
அமர்ந்ததண் பழனத் திருச்செங்குன் றூரில்
 திருச்சிற்றுற் றங்கரை யானை
அமர்ந்தசீர் மூவா யிரவர்வே தியர்கள்
 தம்பதி யவனிதே வர்வாழ்வு
அமர்ந்த மாயோனை முக்க ணம்மானை
 நான்முக னையமர்ந் தேனே. (௧௦)

(ப-ரை) அமர்ந்த நாதனை - இயற்கையாகவே ஏற்பட்ட ஸ்வாமியாய், அவர் அவர் ஆகி - (ஆச்ரிதர்களில்) அவர் அவர்களோடு ஒன்றாயிருக்கிறவனும், அவர்க்கு-அவர்களுக்கு, அருள்-அருளவேண்டியவைகளை, அருளும் அம்மானை-கொடுக்கும் ஸ்வாமியாய், முக்கண் அம்மானை - மூன்று கண்களையுடைய தேவர்களுக்கு ஸ்வாமியான ருத்திரனுக்கு ஆத்மாவும், நான்முகனை - நான்கு முகமுள்ள பிரம்மாவுக்கு ஆத்மாவும், தம் பதி - (தமக்கு இன்பத்துடன்) இருப்பதற்கு இடமான, அமர்ந்த - தனக்குத் தகுந்தவைகளான, தண்பழனம் - குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த,

திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாற்றங்கரையானை - அதின் கரையில் எழுந்தருளியிருக்கிறவனும், வேதியர் - வேத மறிந்தவர்களும், அமர்ந்த சீர் - அறிவுக்குத் தகுந்த நல்ல குணங்களையுடையவர்களும், மூவாயிரவர் - மூவாயிரம் பேர்களு மான, அவனி தேவர் - பூமி தேவர்களான ஸ்ரீ வைஷ்ணவர் களுடைய, வாழ்வு - போகத்துக்கு, அமர்ந்த - தகுந்தவனும், மாயோனை - ஆச்சரியமாக இருப்பவனை, அமர்ந்தேன் - (கிட்டி) நிலையாயிருக்கப்பெற்றேன். (அநுபவிக்கப்பெற்றேன்.)

(கருத்து) எனக்கு இயற்கையாக ஏற்பட்ட ஸ்வாமியும், ஆச்ரிதர்களுடன் சேர்ந்திருப்பதே தனக்கு ஸ்வபாவமாய் அவர் களுக்கு வேண்டியதைச் செய்கிறவனும், பிரம்மாவுக்கும் ருத் திரனுக்கும் ஆத்மாவும், குளிர்ந்த தாமரைத் தடாகங்களால் சூழப்பட்ட திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையைத் தனக்கு இனியதான இருப்பிடமாக எண்ணுகிறவனும், வே தத்தையறிந்து அவனுடைய திருவடிகளில் பக்தியுள்ள மூவா யிரம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் அவனை அநுபவிப்பதற்கும் அவனுக் குக் கைங்கரியம் செய்வதற்கும் தகுந்தபடி அழகையும் ஸௌ சீல்யம் என்கிற குணத்தையும் காட்டிக்கொண்டிருக்குமவனான எம்பெருமானை நான் கிட்டி அநுபவிக்கிறேன்.

குறிப்பு:— 'அவரவராகி' என்பதற்கு, சக்ரவர்த்தித் திருமகனும் ஸுக்கிரீவனும் ஒன்றாயிருந்ததுபோல், எம்பெரு மான் ஆச்ரிதர்களுடன் ஒன்றாயிருக்கிறான் என்பது பொருள். அதாவது - அவர்கள் ஸந்தோஷப்பட்டால் தான் ஸந்தோஷப் படுவது; அவர்கள் துக்கப்பட்டால் தான் துக்கப்படுவது. இதனால், ஆச்ரிதர்களுடன் சேர்ந்திருப்பதே ஸ்வபாவமுள்ளவன் என்கிற அர்த்தம் கிடைக்கிறது.

---

தேனைநன் பாலைக் கன்னலை யமுதைத்
திருந்துல குண்ட வம்மானை
வானநான் முகனை மலர்ந்ததண் கொப்பூழ்
மலர்மிசைப் படைத்த மாயோனைக்
கோனைவண் குருகூர் வண்சட கோபன்
சொன்னவா யிரத்து ளிப்பத்தும்
வானின்மீ தேற்றி யருள்செய்து முடிக்கும்
பிறவிமா மாயக் கூத்தினையே. (கக)

(ப-ரை) தேனை - பல (புஷ்பங்களிலிருந்து சேர்க்கப்பட்ட) தேனைப் (போலினியவனும்), நல் பாலை - கறந்தபாலைப்போலே இயற்கையாகவே மதுரமானவனும், கன்னலை - கற்கண்டைப் போலேதாபத்தைப்போக்கி இனியவனுயிருப்பவனும், அமுதை- அமுதம்போலினியவனும், திருந்து-(ஒன்றின் ஸ்வபாவம்ஒன்றுக்கு வராதபடி) பிரிக்கப்பட்டிருக்கிற (வஸ்துக்களையுடைய), உலகு- உலகங்களை, உண்ட - பிரளயகாலத்தில் வயிற்றில் வைத்து ரக்ஷித்தவனும், அம்மானை - எனக்கு ஸ்வாமியும், வானம் - மேல் லோகத்திலிருக்கும், நான்முகனை - பிரம்மாவை, மலர்ந்த, தண்- குளிர்ந்த, கொப்பூழ் மலர்மிசை - தொப்புளின்மேல் இருக்கும் தாமரைப்பூவின்மேல், படைத்த - உண்டுபண்ணினவனும், மாயோனை-ஆச்சரியமாயிருக்கிற, கோனை-ஸ்வாமியான(எம்பெருமானைப்பற்றி) வண் குருகூர் வண் சடகோபன் சொன்ன, ஆயிரத்துள், இ பத்தும் - இந்தப் பத்துப்பாட்டுக்களும், அருள்செய்து- கிருபை செய்து, வானின்மீது ஏற்றி - வைகுந்தத்தின்மேல் ஏற்றி, பிறவி - ஸம்ஸாரமாகிய, மாயம் கூத்தினை - பெரிய ஆச்சரியமான நாடகத்தை, முடிக்கும்.

(கருத்து) தேனைப்போலவும் கறந்த பாலைப் போலவும் கற்கண்டைப் போலவும் அமிருதத்தைப்போலவும் இயற்கையாக இனியவனும், தாபத்தைப் போக்குகிறவனும், வெவ்வேறு ஸ்வபாவமுள்ள வஸ்துக்கள் நிறைந்த உலகங்களைப் பிரளய காலத்தில் வயிற்றில் வைத்து ரக்ஷித்தவனும், தன்னுடைய நாபீ கமலத்தில் பிரம்மாவை உண்டுபண்ணினவனும், ஆச்சரியமாய் எல்லாருக்கும் ஸ்வாமியுமான எம்பெருமானைப்பற்றி வண்குருகூர் வண்சடகோபன் அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களும் அவைகளைப் படிக்கிறவர்களுக்கு இங்கு இருந்த காலத்தில் கைங்கரிய ரஸத்தையுண்டாக்கி, பிறகு வைகுந்தத்தில் ஏற்றி ஸம்ஸாரமாகிய பெரிய ஆச்சரியமான நாடகத்தை அழித்துவிடும்.

உச்சண்டாநேபஹந்தா ருசிரதரநிலயஸ் ஸாம்யத்ருக் ஸம்ஸ்ருதேஷு
ரேஷாம் ஸ்வாயத்தேஷ்வ நாநாவிதஹ்ருதி ஸததம் தேவதாஸ்
த்வேஷிஸம்ஹ்ருத் | த்ரிதாத்ருஶ்யோ ராஜராஜ்யப்ரதேதந்த்ர
தாத்மா ஸர்வேஷ்வ: ஸ்ரீஶோ வேங்கடேஶோ நாய: ஸ்ரீதவிஷ்டிதஸ்வ
ஹ்ருத்ஸ்வஹ்ருத்ஸாஸ்ஸதி || ||௯௫||

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆச்ரிதர்களுக்கு உண்டாகும் பயத்தைப் போக்கத் தன்னுடைய ஸர்வைச்வரியத்தின் பெருமையைக் காட்டுகிறான் என்பது பத்துக்காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன- (1) அடக்க முடியாத குவலயாபீடம் என்கிற யானையைக்கொன்றது; (2) அழகான திருச்செங்குன்றூரில் எழுந்தருளியிருப்பது; (3) ஸம்ஸாரிகளிடத்திலும் நித்திய ஸூரிகளிடத்திலும் ஸமமாயிருப்பது; (4) திரிவிக்கிரமனாக வளர்ந்த காலத்தில் மேடுகளிலும் பள்ளங்களிலும் ஒரேவிதமாய்த் திருவடியை வைத்தது; (5) அங்கு இருப்பவன் வேறு, இங்கு இருப்பவன் வேறு என்று நினைக்க முடியாதபடி எல்லாத் திவ்வியதேசங்களிலும் எம்பெருமான் ஒருவனாகவேயிருப்பது; (6) எல்லாவற்றையும் தனக்கு உட்படுத்திக்கொண்டிருப்பது; (7) ஆச்ரிதர்களின் மனதில் எப்போதும் விளங்குவது; (8) தேவர்களுக்கு வேண்டியவனாகவும், அவர்கள் விரோதிகளுக்கு யமனாயுமிருப்பது; (9) உலகத்தை உண்டுபண்ணுவது; (10) பிரம்மா முதலானவர்களுக்கு ஆத்மாவாயிருப்பது முதலானவைகள். (95)

# ஐந்தாம் திருவாய்மொழி.



*அவ:— கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார் திருச்செங்குன்றூருக்குப் போகவேண்டுமென்று பிரயத்நம் செய்தார். எம்பெருமானை விட்டுப் பிரிந்த விடாயாலே அங்கே போகமுடியவில்லை. "அங்கே நான் வரமுடியவில்லை; நீயே இங்கே வரவேண்டும்" என்று அந்த ஊர் எம்பெருமானை இந்தத் திருவாய்மொழியில் கூப்பிடுகிறார்:—*

(அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.)

மாயக் கூத்தா வாமனா வினையேன் கண்ணா கண்கைகால்
தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதா
சாயல் சாமத் திருமேனி தண்பா சடையாத் தாமரைநீள்
வாசத் தடம்போல் வருவானே யொருநாள் காண வாராயே.(க)

*(ப-ரை) வாமனா - (எனக்காக) வாமநனாய் அவதாரம் செய்தவனே! வினையேன் கண்ணா - பாபம்பண்ணின என்னுடைய கண்ணா! மாயக்கூத்தா - ஆச்சரியமான கூத்துக்களை (லீலைகளை)ச் செய்தவனே! கண் கை கால் - திருக்கண்கள் திருக்கைகள் திருவடிகள், தூய செய்ய மலர்கள் ஆ - சுத்தமான சிவந்த புஷ்பங்களாகவும், சோதி - காந்தியுள்ள, செவ்வாய் - சிவந்த திருப்பவளம், முகுள் அது ஆ - அந்தப் புஷ்பங்களின் மொட்டாகவும், சாயல் - காந்தியுள்ள, சாமம் - கறுத்த, திருமேனி, தண்-குளிர்ந்த, பாசு அடை ஆ - பச்சிலையாகவும் உடைய, தாமரை - தாமரைகள் நிறைந்த, நீள் - விசாலமான, வாசம் தடம்போல் - நல்ல வாஸனையுள்ள தடாகம்போல், வருவானே - வரும் ஸ்வபாவமுள்ளவனே! ஒரு நாள் - ஒரு நாளாவது, காணவாராய் - நான் பார்க்கும்படி வரவேண்டும்.*

*(கருத்து) எனக்காக வாமநனாகவும் கண்ணனாகவும் அவதாரம் செய்து ஆச்சரியமான வேலைகளைச் செய்தாய். நான் பாபம் பண்ணினபடியாலே அவைகளை நான் பார்க்க முடியவில்லை. தாமரைப் பூக்கள் நிறைந்த விசாலமான நல்ல வாஸனையை வீசுகிற தாமரைத் தடாகம் நடந்துவருகிறதுபோல் வரும் ஸ்வபாவமுள்ளவனே! அந்தத் தாமரைத் தடாகத்தின் புஷ்பங்*

களைப்போல ஆச்ரிதர்களைக் குளிரக் கடாக்ஷிக்கும் உன் திருக் கண்களும், அந்தக் கண்களின் அழகில் அகப்பட்டவர்களைக் கட்டிக்கொள்ளும் திருக்கைகளும், அந்தக் கைகளின் ஸ்பரிசத்திற்குத் தோற்று அவர்கள் உன்னிடத்திலுள்ள ஆசைக்குப் பரவசராய் விழும் உன் திருவடிகளும், அதன் செந்தாமரைமொட்டுப்போல் மந்தஹாஸத்தாலே விளங்குகிற உன்னுடைய சிவந்த திருப்பவளமும், அதின் பச்சிலையைப்போலக் காந்தியுள்ள நீலமான உன் திருமேனியும் அதின் ஜலம்போலத் திருமேனியின் நாலுபக்கமும் பரவும் காந்தியுமாக இப்படி அழகாயிருக்கிற நீ ஒரு நாளாவது நான் பார்க்கும்படி வந்தருளவேணும்.

இ—ம். மலர்களா, முகிழதா, பாசடையா - இவைகளில் க கெட்டது கடைக்குறை என்னும் செய்யுள் விகாரம். முகிழதா என்பதில் 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. (1)

---

காண வாரா யென்றென்று கண்ணும் வாயுந் துவர்ந்தடியேன்
நாணி நன்னாட் டலமந்தா லிரங்கி யொருநாள் நீயந்தோ
காண வாராய் கருநாயி றுதிக்கும் கருமா மாணிக்கம்
நாள்நல் மலைபோல் சுடர்ச்சோதி முடிசேர் சென்னி யம்மானே.

(ப-ரை) காணவாராய், என்று என்று - என்று பலதடவை சொல்லி, கண்ணும், வாயும், துவர்ந்து - உலர்ந்து, அடியேன், நாணி - வெட்கப்பட்டு, நல் நாடு - (உன்னைப்பார்த்து ஸுகமாயிருக்கிற) நல்லதேசத்தில், அலமந்தால்-தடுமாறினால், இரங்கி, சுடர் சோதி-பிரபையுள்ளதும் அப்ராக்ருதஜ்யோதிஸ்ஸுமான, முடிசேர் - மயிர் முடிசேர்ந்திருக்கிற, சென்னி - தலையையுடைய, அம்மானே - ஸ்வாமியே! கரு நாயிறு-கறுப்பான ஸூரியன், உதிக்கும் - உதயகாலத்தில் சிகரத்தில் வந்துசேரும், கரு மா மாணிக்கம் - கறுப்பான பெரிய மாணிக்கமாகிய, நாள் - புதிதான, நல் - மிருதுவான, மலைபோல், அந்தோ-ஐயோ! ஒருநாள் காணவாராய்.

(கருத்து) காணவாராயென்று பல தடவை சொல்லி, நீ வருகிறாயோ என்று எல்லாத் திக்குக்களிலும் கண்ணாலே பார்க்கிறேன். இப்படிப் பார்க்கிற கண்கள் உலர்ந்துபோய்விட்டன. முன்னால் கையாலிறைக்கும்படி கண்ணீர் பெருகின தசை

ஸுகமென்று தோன்றும்படி ஆயிற்று. அலற்றுகிற வாயிலும் ஈரமில்லை. இப்படி வருத்தப்படுகிற என்னிடம் நீ வாராததைப் பார்த்து, உலகத்தார் உனக்கு இரக்கமில்லையென்று சொல்லு வார்களேயென்று நான் வெட்கப்படுகிறேன். உலகத்தில் வேறு ஒருவனும் என்னைப்போல உன்னைக்கூப்பிடவில்லையே. ஆகை யால், எல்லாரும் உன்னைப் பார்த்துக்கொண்டு ஸுகமாயிருக்க வேண்டும். இப்படியிருக்கிற தேசத்தில் நான் ஒருவனாக உன்னைக் காணப்பெறாமல் வியஸநப்பட்டால், நீ இரங்கி வரவேண்டாமா? உனக்கு என்னிடம் வர ஆசையில்லாவிட்டாலும் மற்றவர்கள் வருத்தத்தைப் பார்த்தாவது வரவேண்டாமோ? அப்ராக்ருத மாய் எங்கும் பரவுகிற காந்தியுள்ளதான கறுப்பான மயிர்முடி யைத் திருமுடியிலுடைய ஸ்வாமியே! ஓர் உயர்ந்த பிருதுவான மாணிக்கமலை தன் சிகரத்தில் கறுப்பான உதயகால ஸூரியனை வைத்துக்கொண்டுவருவதுபோல் வரவேணும். இந்த அழகின் பெருமை உனக்குத்தோன்றாமல் போனாலும் என் வருத்தமாவது உனக்குத் தோன்றவேண்டாமோ? எப்போதும் வரச்சொல்லு கிறேனோ? ஒரு நாள் வந்தால் போதும். வேறு பிரயோஜநத்துக் காக உன்னைக் கூப்பிடுகிறேனோ? உன்னையே நான் பிரயோ ஜநமாக எண்ணவில்லையா? (2)

---

முடிசேர் சென்னி யம்மாநின் மோய்பூம் தாமத் தண்டுழாய்
கடிசேர் கண்ணிப் பெருமானே யென்றென் றேங்கி யழுதக்கால்
படிசேர் மகரக் குழைகளும் பவள வாயும் நாற்றோளும்
துடிசே ரிடையு மமைந்ததோர் தூநீர் முகில்போல் தோன்றாயே.

(ப-ரை) முடி சேர் சென்னி - மயிர்முடியுடன் சேர்ந்த திருமுடியையுடைய, அம்மா - ஸர்வேச்வரனே! நின் - உன்னு டைய, மொய் - நெருங்கின (ஒன்றோடொன்று தொடுக்கப்பட்ட), பூம் - அழகான, தாம - காந்தியோடு கூடிய- கடி சேர்-வாஸனை சேர்ந்த, தண் துழாய் கண்ணி-குளிர்ந்த துளஸிமாலையையுடைய, பெருமானே - பெரியவனே! என்று என்று - என்று பலதடவை சொல்லி, ஏங்கி - ஏக்கம் அடைந்து, அழுதக்கால் - நான் அழுதால், படி சேர் - (காதுக்கு) தகுதியாய்ச் சேர்ந்திருக்கிற மகரம் குழைகளும் - மீன் வடிவமுள்ள குண்டலங்களும், பவள

வாயும் - பவழம்போன்ற திருப்பவளமும், நால் தோளும் - நான்கு தோள்களும், நுடி சேர் - உடுக்கையைப்போலிருக்கும், இடையும் - இடுப்பும், அமைந்தது-(இவைகளெல்லாம்) இருக்கும் படி உண்டான, தூ நீர் - சுத்தமான ஜலத்தையுடைய, ஓர் - ஒப்பில்லாத, முகில்போல் - மேகம்போல், தோன்றாய் - தோன்றுகிறதில்லை.

(கருத்து) மொய்ப்பூம் தாமத்தண்துழாய்மாலையைத் தரித்திருப்பதாலே அழகான மயிர்முடியையுடையத் திருமுடியை உடைய பெரியவனே! ஸ்வாமியே! என்று அடிக்கடி சொல்லிக்கொண்டிருக்கிறேனே. "இப்படி ஒரே தடவை சொல்லுகிறான். இவன் ஆறியிருக்கிறான்" என்று நீ நினைக்கிறாயோ? நான் எப்போதும் சொல்லிக்கொண்டேயிருக்கிறேன். மிகுந்த துக்கத்தாலே வெளிப்புறப்படமுடியாமல் மூர்ச்சையடைந்தவன் போலிருந்து நான் அழுதாலும் நீ தோன்றுகிறதில்லை. புதிதும் சுத்தமுமான ஜலத்தையுடைய ஒரு மேகம், காதுகளுக்குத் தகுந்த மகரகுண்டலங்களையும், பவளம்போன்ற திருப்பவளத்தையும், நான்கு தோள்களையும், உடுக்கைபோல் ஸூக்ஷ்மமான இடுப்பையும் உடையதாகச் செய்யப்பட்டால் அது எப்படியிருக்குமோ, அந்த அழகுடன் என்னிடம் வரவேண்டும். வாராமலிருப்பது தயைக்குப் பரவசனான உனக்குத் தகுந்ததோ?

இ—ம். அழுதக்கால் - அழுதால், வினையெச்சம். தோன்றாய் - எதிர்மறைவினைமுற்று. அபூத உபமை. (இல்பொருள் உவமை) (3)

---

அவ:— "மனதாலே என்னுடைய அநுபவம் உமக்கு இருக்கிறதே. ஏன் இந்தப் பாடு படுகிறீர்" என்று எம்பெருமான் கேட்டதாக நினைத்து,"அதுவே என்னைத் துன்பப்படுத்துகிறது" என்று இதில் பதில் சொல்லுகிறார்—

தூநீர் முகில்போற் றோன்றுநின் சுடர்கொள் வடிவுங் கனிவாயும்
தேநீர்க் கமலக் கண்களும் வந்தென் சிந்தை நிறைந்தவா
மாநீர் வெள்ளி மலைதன்மேல் வண்கார் நீல முகில்போலத்
தூநீர்க் கடலுள் துயில்வானே யெந்தாய் சொல்ல மாட்டேனே.

(ப-ரை) மா நீர் - விசாலமான ஜலத்தில், வெள்ளிமலை மேல், வண் - அழகான, கார் நீல முகில்போல - வர்ஷாகாலத்து நீலமேகம்போல், தூ நீர் - சுத்த ஜலமுள்ள, கடலுள்-திருப்பாற் கடலில், துயில்வானே - தூங்குகிறவனே! எந்தாய் - என் ஸ்வாமியே! தூ நீர் முகில்போல் - பரிசுத்தமான ஜலமுள்ள மேகம் போல், தோன்றும் - விளங்கும், நின் - உனக்கேயுள்ள, சுடர் கொள் - காந்தியைக்கொண்ட, வடிவும் - திருமேனியும், கனிவாயும் - கோவைப்பழம் போன்ற திருப்பவளமும், தேன் நீர் - தேனுகிய ஜலத்தையுடைய, கமலம் கண்களும் - தாமரைப்பூப் போன்ற திருக்கண்களும், வந்து - (என் கண்களுக்குத் தெரியாத படி) வந்து, என் சிந்தை நிறைந்த ஆ - என் மனதுள் நிறைந்த விதத்தை, சொல்லமாட்டேன்.

(கருத்து) விசாலமான ஜலத்தில் ஒரு வெள்ளிமலைமேல் மழைக் காலத்து நீருண்டமேகம்இருந்ததுபோல் திருப்பாற்கடலில் ஆதிசேஷன்மேல் தூங்குகிற என் ஸ்வாமியே! நீ பரிசுத்தமான ஜலத்தையுடைய மேகம்போல் தோன்றும் உனக்கேயிருக்கிற காந்தியுள்ள திருமேனியுடன் கோவைப்பழம் போன்ற திருப்பவளத்துடனும், அப்போதே மலர்ந்து தேனைச் சொட்டிக் கொண்டிருக்கிற தாமரைப்பூப்போன்ற திருக்கண்களுடனும் என் மனதில் நிறைந்திருக்கிறாய். ஆனால், என் கண்களால் உன்னைப் பார்க்கமுடியவில்லை. இந்த மானஸாநுபவமும் துன்பத்துக்குக் காரணமாயிருக்கிறது எவ்வளவு துன்பப்படுத்துகிறது என்று சொல்லமுடியவில்லை.

குறிப்பு— (1) வெள்ளிமலை உதாரணத்தால், வெள்ளிமலை போலிருக்கிற ஆதிசேஷன் படுக்கையாக இருக்கிறானென்பது காட்டப்படுகிறது.

(2) 'தேநீர் கமலக்கண்' என்பதற்கு, தேன் சொட்டுவதாலே தாமரைப்பூப் புதிதாய் மலர்ந்தது என்பது கருத்து. ஆழமான ஜலத்திலுண்டாகிப் பறிக்கப்படாமல் புஷ்டியுள்ள தண்டின்மேலிருக்கிற ஸூரியகிரணங்களால் அப்போதே மலரும்படி செய்யப்பட்ட தாமரைப்பூ மிகவும் அழகாயிருக்கும். அதுபோல எம்பெருமானுடைய திருக்கண்களும் இருப்பதாக ஆழ்வார் அநுபவிக்கிறார்.

இ—ம். நிறைந்த ஆ - ஆறு; கடைக்குறை. (4)

அவ— கீழ்ப்பாட்டில் எம்பெருமானுடைய திருமேனி தம் மனதில் தோன்றித் தம்மைத் துன்பப்படுத்துகிறதென்று சொன்னார்; அதை மறக்கமுடியவில்லையென்று இதில் சொல்லுகிறார்:—

சொல்ல மாட்டே னடியே னுன் துளங்கு சோதித் திருப்பாதம்
எல்லை யில்சீ ரிளநாயி றிரண்டு போலென் னுள்ளவா
அல்ல லென்னு மிருள்சேர்தற் குபாய மென்னே யாழிசூழ்
மல்லை ஞால முழுதுண்ட மாநீர்க் கொண்டல் வண்ணனே. (ரு)

(ப-ரை) ஆழிசூழ் - ஸமுத்ரத்தாலே சூழப்பட்ட, மல்லை ஞாலம் - வட்டமான (பெரிய) பூமியை, முழுது - முழுவதும், உண்ட - சாப்பிட்ட, மா நீர் - பெரிய ஜலத்தையுடைய, கொண்டல் வண்ணனே - மேகம் போன்ற வர்ணமுடையவனே; அடியேன், சொல்லமாட்டேன் - சொல்லச் சக்தியில்லாதவன். உன் - உன்னுடைய, துளங்கு சோதி-விளங்குகிற தேஜஸையுடைய, திருபாதம்-திருவடிகள், எல்லை இல்-அளவில்லாத, சீர் - அழகையுடைய, இரண்டு இளம்நாயிறுபோல்-இரண்டு பாலஸூர்யன்கள் போல், என் உள்ள - என்மனதிலிருக்கின்றன; ஆ - ஆச்சரியம்! அல்லல் என்னும் - கெடுதலாகச்சொல்லப்படுகிற, இருள்-இருட்டானது, சேர்தற்கு - வந்து கிட்டுகைக்கு, உபாயம் என்னே - உபாயமெது?

(கருத்து) ஸமுத்திரத்தினால் சூழப்பட்ட பூமி முழுவதையும் வியாபித்த பிரளய ஜலத்தை முழுவதும் பானம்பண்ணின மேகம்போன்ற வர்ணத்தையுடையவனே! உன்னுடைய இரண்டு திருவடிகள் அளவில்லாத அழகையுடைய இரண்டுபாலஸூர்யன்கள் போல் என் மனதில் பிரகாசிக்கின்றன. இஃது ஆச்சரியம். என்னை இவ்வளவென்று சொல்லமுடியாமல் துன்பப்படுத்துகிற உன் திருமேனியைமறப்பதற்கு அஜ்ஞானமாகிய இருட்டு அதில் வருகிறதில்லை. உலகத்தார் அஜ்ஞானத்தைக் கெடுதலாக எண்ணுகிறார்கள். இந்த தசையில் நான் அதை ஆசைப்படுகிறேன். ஆனால், அநர்த்தத்தையே போக்கும் ஸ்வபாவமுள்ள உன் திருவடிகள் அதைக் கிட்ட வரவொட்டாமல் செய்கின்றன. உன்னை மறப்பதற்கு ஓர் உபாயத்தையும் காணேன். மறந்து பிழைப்பதற்கும் வழியில்லையே.

இ—ம் உள்ள - உள் என்னும் பெயரடியாகப் பிறந்த பலவின்பால் குறிப்பு வினைமுற்று. ஆ - வியப்பு இடைச்சொல். ‘மல்லை’ என்பதற்கு ‘மல்லல்’ என்றும் பாடமுண்டு. (5)

---

அவ— இப்படி ஆழ்வார் கூப்பிட்டும் திருச்செங்குன்றூர் எம்பெருமான் எழுந்தருளவில்லை. எங்கேயிருந்தாவது எழுந்தருள வேண்டும் என்று இதில் அருளிச்செய்கிறார்:—

கோண்டல் வண்ணா குடக்கூத்தா வினையேன் கண்ணா
கண்ணாவேன்
அண்ட வாணா வென்றேன்னை யாளக் கூப்பிட் டழைத்தக்கால்
விண்டன் மேல்தான் மண்மேல்தான் விரிநீர்க் கடல்தான்
மற்றுத்தான்
தோண்ட னேனுன் கழல்காண வொருநாள் வந்து தோன்றாயே.

(ப-ரை) கொண்டல் வண்ணா - மேகம்போன்ற வர்ணமுடையவனே! குடக்கூத்தா - கிருஷ்ணாவதாரத்தில் குடத்தைவைத் துக்கொண்டு கூத்தாடினவனே! வினையேன் கண்ணா - பாபம்பண்ணின என்னுடைய கண்போன்றவனே! கண்ணா-கண்ணனே! என் அண்டவாணா-எனக்காக அண்டத்துக்கு ஸ்வாமியாயிருப்பவனே! என்று-இப்படிச் சொல்லி, என்னை, ஆள - அடிமைகொள்ளுவதற் காக, கூப்பிட்டு-(தாமதம் பொறுக்காமல்மிகுந்தவருத்தத்துடன்) கூப்பிட்டு, அழைத்தக்கால்-அழைத்தால், விண் தன் மேல் தான் - வைகுந்தத்திலிருந்தாவது, மண்மேல்தான் - பூமியில்எந்ததிவ்விய தேசத்திலிருந்தாவது, விரிநீர் - விசாலமான ஜலத்தையுடைய, கடல்தான் - திருப்பாற்கடலிலிருந்தாவது, (அல்லது)மற்றுதான் வேறு இடத்திலிருந்தாவது, தொண்டனேன் - சபலனான நான், உன் கழல் காண - உன் திருவடிகளைப் பார்க்கும்படி, ஒரு நாள் வந்து தோன்றாய்.

(கருத்து) கண்டபோதே விடாய் தீரும்படியான மேகம் போன்ற வர்ணமுடையவனே! ஆச்ரிதர்களின் மனதை இழுக் கும்படியான குடக்கூத்து முதலான பல லீலைகளைச் செய்த வனே! பாபம் செய்த எனக்குக் கண்ணைப்போலே அழகாயும் அலங்காரமாயும் எல்லா வேலைகளுக்கும் ஸாதநமாயுமிருக்கிறவ

னே! கண்ணனாக அவதாரம்செய்து ஆச்ரிதர்களுக்குஉட்பட்டிருப்பதைக் காட்டினவனே! எனக்காக ஜ்ஞானத்தையும் சக்தியையும் கருணையையும் உடையவனானது போலப் பிரம்மாண்டமான இந்த விபூதியையும்உடையவனே என்று சொல்லி, நீ வருவதில் தாமதத்தைப்பொறுக்காமல், மிகுந்த வருத்தத்துடன் கூப்பிடுகிறேனே. திருச்செங்குன்றூரிலிருந்து எழுந்தருள இஷ்டமில்லாவிட்டால், வைகுந்தத்திலிருந்தாவது, பூமியிலுள்ள வேறுஎந்ததிவ்விய தேசத்திலிருந்தாவது, விசாலமான ஜலத்தையுடைய திருப்பாற்கடலிலிருந்தாவது, அல்லது பிரஹ்லாதனுக்குத் தோன்றினதுபோல் தூணிலிருந்தாவது உன் திருவடிகளில் சபலனான நான் பார்க்கும்படி ஒரு நாளாவது எழுந்தருளவேண்டும்,

குறிப்பு— நீ எனக்குக் கண்ணாயிருப்பதாலே உன்னைப் பாராதபோது கண்ணையிழந்தவன்போலிருக்கிறேன். இப்படி இருக்கும்படி பலமான பாபத்தைப் பண்ணினேன் என்று 'வினையேன்' என்கிற சொல்லால் ஆழ்வார் தம்மை வெறுத்துக் கொள்ளுகிறார். (6)

---

அவ:— "உனக்கு இங்கே வர இஷ்டமில்லையாயினும், என்னை உன்னிடம் அழைத்துக்கொள்" என்று இதில் அருளிச் செய்கிறார்—

வந்து தோன்றா யன்றேலுன் வையந் தாய மலரடிக்கீழ்
முந்தி வந்து யான்நிற்ப முகப்பே கூவிப் பணிகொள்ளாய்
செந்தண் கமலக் கண்கைகால் சிவந்த வாயோர் கருநாயிறு
அந்த மில்லாக் கதிர்பரப்பி யலர்ந்த தொக்கு மம்மானே. (எ)

(ப-ரை) செம் - (கொஞ்சம்) சிவந்த, தண் - குளிர்ந்த, கமலம் - தாமரைப்பூப்போன்ற, கண் கை கால் - திருக்கண்கள், திருவடிகள் திருக்கைகள், சிவந்த வாய் - சிவந்த திருப்பவளம் (இவைகள் உள்ளதாய்), ஓர் - ஒப்பில்லாத, கருநாயிறு - கறுப்பு ஸூரியன், அந்தம் இல்லா - எல்லையில்லாத, கதிர் - கிரணங்களை, பரப்பி - (எல்லாத் திக்குக்களிலும்) பரவும்படி செய்து, அலர்ந்தது ஒக்கும் - மலர்ந்ததையொத்திருக்கும், அம்மானே - ஸ்வாமியே! வந்து தோன்றாய் - நான் பார்க்கும்படி வந்து

தோன்றவேண்டும், அன்றேல் - இப்படிச் செய்ய இஷ்டமில்லா விட்டால், உன் - உன்னுடைய, வையம் தாய-உலகங்களையளந்த, மலர் அடி கீழ் - திருவடிமலர்களின்கீழ், முந்தி - நீ சொல்லுவதற்கு முன்னாலே வந்து, யான் நிற்ப-நான் நிற்கும்படி, முகப்பே-உன் முன்னாலே, கூவி - என்னை அழைத்துக்கொண்டு, பணி கொள்ளாய் - நீ கைங்கரியத்தைப் பெற்றுக்கொள்.

(கருத்து) ஒரு கறுப்பான ஸூரியன் கொஞ்சம் சிவந்த திருக்கண்களையும், திருக்கைகளையும், திருவடிகளையும், சிவந்த திருப்பவளத்தையுமுடையதாய் எல்லாத் திக்குக்களிலும் எல்லையில்லாத கிரணங்களைப் பரவும்படி செய்துகொண்டு மலர்ந்தால், எப்படியிருக்குமோ, அப்படி அழகாயிருக்கும் ஸ்வாமியே ! நான் காணும்படி எழுந்தருளவேணும். இதைச் செய்ய இஷ்டம் இல்லாவிட்டால், உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று பாராமல் எல்லார் தலைகளிலும் திருவடி படும்படி உலகங்களை அளந்த உன் திருவடித்தாமரைகளின்கீழ் இருந்து உன் திருவுள்ளத்தில் தோன்றுகிற கைங்கரியத்தை 'நீ இதைச் செய்' என்று சொல்லுவதற்கு முன்னே செய்யவேண்டும். அதற்காக உன் முன்னாலே வந்து நிற்கும்படி என்னைக்கூப்பிட்டு அந்தக்கைங்கரியத்தைப் பெற்றுக் கொள். என்னுடைய ஸ்வபாவம் உனக்குத் தெரியாதா ? பரதாழ்வானைப்போல உன் குணங்களை அநுபவித்துக்கொண்டே இருக்கமுடியாது. இளையபெருமாளைப்போலே கைங்கரியம் செய்துகொண்டேயிருக்கவேண்டும். ஒரு க்ஷணமும் அது செய்யாமலிருக்கமுடியாது. (7)

---

அவ:— "நான் உம்மைக் கூப்பிடுகிறவரையில் வேறு விஷயங்களில் மனதை வைத்து என்னை மறந்திரும்" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, இதில் பதில் சொல்லுகிறார்—

ஒக்கு மம்மா னுருவமென் றுள்ளங் குழைந்து நாணளும்
தொக்க மேகப் பல்குழாங்கள் காணுந் தோறுந் தொலைவன்நான்
தக்க வைவர் தமக்காயன் றீரைம் பதின்மர் தாள்சாயப்
புக்க நல்தேர்த் தனிப்பாகா வாரா யிதுவோ பொருத்தமே. (அ)

(ப-ரை) அம்மான் உருவம் - ஸ்வாமியினுடைய ரூபம், ஒக்கும் என்று - ஒத்திருக்கும் என்று, தொக்க - சேர்ந்திருக்கிற, மேகம் பல் குழாங்கள்-மேகங்களுடைய பலவிதமான வரிசைகளை, காணும் தோறும் - காணும்போதெல்லாம், நாள் நாளும் - ஒவ்வொரு நாளும், உள்ளம் - (என்) மனது, குழைந்து - தளர்ந்து, நான், தொலைவன்-மரணாவஸ்தையை அடைகிறேன். தக்க-தகுந்த ஐவர் தமக்கு ஆய்-ஐந்து பாண்டவர்களுக்கு ஸொத்தாய்,அன்று- (பாரதச்சண்டை நடந்த) அந்தக் காலத்தில், ஈர் ஐம்பதின்மர் - இரண்டு ஐம்பது பேர்கள்(துர்யோதநன்முதலான நூறு பேர்கள்) தாள் சாய - அடி சாயும்படி (வேர் அற்ற மரம்போல் கீழே விழும்படி), புக்க - (ஸேனைகளின் நடுவில்) புகுந்த, நல் தேர் - நல்ல தேருக்கு, தனி பாகா - ஒப்பில்லாத ஸாரதியே! இதுவோ பொருத்தம் - (உன் ஸ்வபாவத்துக்கு) இதுவோ பொருந்தியது, வாராய்.

(கருத்து) உன்னை எப்படி மறக்கமுடியும்? கூட்டமாய்ச் சேரும் மேகங்களுடைய பலவிதமான வரிசைகள் நீலமாயும் மிருதுவாயும் கம்பீரமாயும் குளிர்ந்ததும் உதாரமுமான உன் திருமேனிக்கு ஒத்திருப்பதை நான் பார்க்கும்போதெல்லாம், என் மனம் தளர்ந்து நான் மரணாவஸ்தையை அடைகிறேன். உலகத்தில் ஜநங்களுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும் மேகங்கள் எனக்குத் துன்பத்தை உண்டுபண்ணுகின்றன. உன்னையே ப்ராப்யமாகவும் உபாயமாகவும் எண்ணியிருந்த ஐந்து பாண்டவர்களுக்கு இஷ்டப்படி செலவு செய்யும்படியான ஸொத்தாயிருந்து, அந்தப் பாரதச்சண்டை நடந்த காலத்தில் துர்யோதநன் முதலான நூறு பேர்கள் வேர் அற்ற மரம் விழுவதுபோல் நாசம் அடையும்படி, இரண்டு ஸேனைகளுக்கும் நடுவிலே புகுந்து நல்ல ரதத்தை நடத்தினவனே! அர்ஜுநன் "இரண்டு ஸேனைகளுக்கு நடுவில் ரதத்தை நிறுத்து" என்று சொன்னதை உடனே செய்தாயே. எனக்காக அந்தத் தேரை இங்கே கொண்டுவரக்கூடாதா? ஆச்ரிதர்கள் ஐந்து பேராயும் அவர்கள் விரோதிகள் நூறு பேர்களாயும் இருந்தால்தான் ரக்ஷிக்கவேண்டுமோ? ஆச்ரிதனான நான் ஒருவனாயும் என்னைத் துன்பப்படுத்துகிற மேகங்கள் பலவாயுமிருந்தால் ரக்ஷிக்கக் கூடாதா? இதுதானா ஆச்ரிதர்களுடன் சேருப்பட்டியான உன்

ஸ்வபாவம் ? ஆச்ரிதர்களுக்காக ரதத்தை நடத்தித் தூதுபோனாயே, ஆயுதமெடுக்கிறதில்லையென்று சொல்லி ஆயுதமெடுத்தாயே, இவைகளெல்லாம் பொய்யா ? இவைகளையெல்லாம் எனக்குச் செய்யவேண்டாம். ஒருநாள் உன் திருமுகத்தைக் காட்டினால் போதும்.

குறிப்பு— (1) பாண்டவர்கள் ராஜ்யத்தில் ஆசையுள்ளவர்களாயிருந்தபோதிலும், நாரதர், அஸிதர், தேவலர், வியாஸர், பீஷ்மர், கண்ணன் முதலானவர்களின் உபதேசத்தாலே எம்பெருமானை ப்ராப்யம் என்றும் உபாயமென்றும் அறிந்திருந்தார்கள் என்பது 'தக்க' என்பதின் கருத்து.

(2) 'நல்தேர்' என்கிறவிடத்தில் தேருக்கு நன்மையாவது— எம்பெருமானை ஸாரதியாக அடைந்தது.

(3) 'தனிப்பாகா' என்பதற்கு, ரதத்திலிருந்த அர்ஜுநன் தன் முதுகின்கீழே ஒதுங்கும்படி முக்கியமானவனாய் கண்ணன் தேரை நடத்தினான் என்பது கருத்து.

இ—ம். தொலைவன் - தன்மைவினைமுற்று. (8)

---

அவ:— இப்படிக் கூப்பிட்டும் எம்பெருமான் உடனே வரவில்லை. அவன் தம் விஷயத்தில் என்ன எண்ணிக்கொண்டிருக்கிறான் என்று ஆழ்வார் தமக்குள்ளே விசாரிக்கிறார்—

இதுவோ பொருத்தம் மின்னாழிப் படையா யேறு மிருஞ்சிறைப்புள்
அதுவே கொடியா வுயர்த்தானே யென்றென் றேங்கி யழுதக்கால்
எதுவே யாகக் கருதுங்கொ லிம்மா ஞாலம் பொறைதீர்ப்பான்
மதுவார் சோலை யுத்தர மதுரைப் பிறந்த மாயனே. (௯)

(ப-ரை) மின் ஆழி - மின்னலைப்போன்ற திருவாழியை, படையாய் - ஆயுதமாக உடையவனே ! ஏறும், இரும் சிறை - பெரிய சிறகுகளையுடைய, புள் அதுவே - (உன் வாஹநமான) அந்தக் கருடபக்ஷியையே, கொடி ஆ-த்வஜமாக, உயர்த்தானே- உயரத் தூக்கினவனே ! இதுவோ பொருத்தம், என்று என்று- இப்படிப் பல தடவை சொல்லி, ஏங்கி அழுதக்கால் - ஏங்கி அழுதால், இ மா ஞாலம் - இந்த பெரிய பூமியின், பொறை -

பாரத்தை, தீர்ப்பான் - தீர்க்க, மது ஆர் சோலை - தேனைச் சொரிகிற சோலைகள் சூழ்ந்த, வடமதுரை பிறந்த - வடமதுரையில் அவதாரம் செய்த, மாயோன் - ஆச்சரியமானவன், எதுவோ ஆக, கருதும் கொல் - நினைத்திருக்கிறானோ.

(கருத்து) மின்னலை ஆயுதமாக உடைய ஒரு நீலமேகமிருப்பதுபோல் திருவாழியுடன் விளங்குகிறவனே! வருத்தப்படுகிற ஆச்ரிதர்கள் இருந்தவிடத்திற்கு உடனே உன்னைக் கொண்டுபோகத்தகுந்த பெரிய சிறகையுடைய கருடபக்ஷியை வாஹநமாக உடையவனே! என்று இப்படிப் பல தடவை சொல்லி ஏங்கி நான் அழுதும் நீ வரவில்லையே. இதுவோ ஆச்ரிதர்களுடன் சேர்ந்திருக்கும் உன் ஸ்வபாவம். இந்தப் பெரிய பூமி அஸுரராஜாக்களாகிய பாரத்தைப் பொறுக்கமுடியாமல் வருத்தப்பட்டபோது, அந்த பாரத்தைக் கீழே இறக்குவதற்காக, புஷ்பங்களிலிருந்து தேன் சொரிகிற தோட்டங்களால் சூழப்பட்ட வடமதுரையில் தான் ஸர்வேசுவரன் என்று காட்டக் கூடிய அடையாளங்களுடன் பிறந்தவன், என் விஷயத்தில் என்ன செய்ய எண்ணியிருக்கிறானோ? என் கண்கள் ஆர நான் காணவருவதாகவா, அல்லது நான் கூப்பிட்டே முடிந்து போகவேண்டுமென்றோ? எனக்குத் தெரியவில்லை.

குறிப்பு– (1) வேறு பிரயோஜநங்களை ஆசைப்பட்ட பாண்டவர்களைப்போலில்லாமல் தன்னையே பிராப்யமாக எண்ணி இருக்கிற திருவாழியுடனும் கருடனுடனும் அவன் சேர்ந்திருப்பது பொய்யோ. அதுபோல தம்முடனும் அவன் சேரவேண்டாமோ என்றும் கருத்தாக ஆகலாம்.

2. கருடன்மேல் ஏறிக்கொண்டு கஜேந்திர ஆழ்வானிடம் போனதுபோல், தமக்கும் அவன்மேலே ஏறிக்கொண்டு வந்து திருவாழியும் கையுமாயிருக்கிற தன் அழகைக் காட்ட வேண்டுமென்று ஆழ்வார் ஆசைப்படுகிறார் என்றும் கருத்துக் கொள்ளலாம்.

கொடி ஆ - கொடியாக; தீர்ப்பான் - தீர்க்க; வினையெச்சம்.

---

அவ:—“ நான் எங்கும் இருக்கிறேனே, இப்போதே வரவேணும் என்று ஏன் சொல்லுகிறீர்” என்று எம்பெருமான், சொன்னதாக நினைத்து, இதில் பதில் சொல்லுகிறார்:—

பிறந்த மாயா பாரதம் பொருத மாயா நீயின்னே
சிறந்த கால்தீ நீர்வான்மண் பிறவு மாய பெருமானே
கறந்த பாலுள் நெய்யேபோ லிவற்று ளெங்குங் கண்டுகோள்
இறந்து நின்ற பெருமாயா வுன்னை யெங்கே காண்கேனே. (கய)

*(ப-ரை) பிறந்த மாயா - (அப்ராக்ருதமான ரூபத்தை மனித உருவம்போல் செய்துகொண்டு) அவதாரம் செய்த ஆச்சரிய மானவனே! பாரதம் - பாரதச் சண்டையை, பொருத - யுத்தம் பண்ணின (செய்த), மாயா - ஆச்சரியமான லீலைகளைச்செய்தவனே! சிறந்த - விருத்தியடைந்திருக்கிற, கால் - வாயு, தீ - அக்னி, நீர்-ஜலம், வான் - ஆகாசம், மண்-பூமி, (இவைகளுமாய்), பிறவும் ஆய - (இவைகள் தவிர) மற்றவைகளுமாயிருந்த பெருமானே - ஸர்வேசுவரனே! நீ, இன்னே - இப்படி இருக்க, கறந்தபாலுள், நெய் போல், இவற்றுள் - எங்கும், கண்டுகொள், இறந்து - பார்க்கமுடியாதபடி, நின்ற - எப்போதுமிருக்கிற, பெரு மாயா - மிகவும் ஆச்சரியமானவனே! உன்னை, எங்கே காண்கேன்-எங்கே பார்ப்பேன்?*

*(கருத்து) அப்ராக்ருதமான உன்னுடைய ரூபத்தை மனித உருவம்போல் செய்துகொண்டு அவதாரம் செய்து பாரதச்சண்டையில் பகலை ராத்திரியாகப் பண்ணினது முதலான ஆச்சரியமான லீலைகளைச்செய்தவனே! நீ எங்குமிருப்பது உண்மையே. சிறந்த பஞ்சபூதங்களாயும், அவைகளால் உண்டுபண்ணப்பட்ட தேவர்கள் மனிதர்கள் முதலானவைகளாயுமிருக்கிறாய். ஆனால், அப்போது கறந்த பாலுள் நெய் இருந்தபோதிலும் அதைப் பாலைவிட்டுப் பிரித்துப் பார்க்க முடியாது. அதுபோல், எங்கும் நீ இருந்தபோதிலும் அவைகளைவிட்டுப்பிரித்து உன்னை எப்படிப் பார்ப்பது? இப்படிக் காணமுடியாதிருக்கிற உன்னை எங்கே பார்க்க முடியும்? வைகுந்தத்தில் உன்னைப் பார்ப்பதற்கு எனக்குப் பிரகிருதியோடுள்ள ஸம்பந்தம் போகவேணும். சக்ரவர்த்தித் திருமகனும் கண்ணனும் அவதாரம் செய்த காலங்கள் முடிந்துவிட்டன. அர்ச்சையாய் நீ எழுந்தருளியிருக்கிற இடங்களில் போனால், எனக்கு வேண்டியது கிடைப்பதில்லை. நீ அந்தர்யாமியாயிருக்கிற உன் ஸ்வரூபத்தைப் பார்க்க முடியாது. ஆகையால், நான் உன்னை எங்கே பார்ப்பது? இப்படி உன்னைக் காணப்பெறாமல் முடிந்து போக வேண்டியதோ?*

குறிப்பு— கறந்த பாலைக் காய்ச்சி உறைக் குத்தி அது தயிரான பிறகு அதைக் கடைந்து வெண்ணெயை எடுத்து அதை நெய்யாகப் பண்ணவேணும். இவ்விடத்திலும் தயிரைக் கடைவதுபோல் மனதாலே எப்போதும் உன்னைத் தியானம் செய்துபார்க்கவேண்டும். அதற்கு எவ்வளவு காலமாகும் என்பது நெய் உதாரணத்துக்குக் கருத்து.

2. ஐந்து பூதங்கள் மேல் உண்டாகப்போகிற வஸ்துக்களுக்குக் காரணமாயும் ஆதாரமாயும் இருப்பது அவைகளுக்குச் சிறப்பு.

இ—ம். கண்டுகொள் - கண்டுகொள்ளுதல். தொழிற் பெயர். (10)

---

எங்கே காண்கே னீன்துழா யம்மான் றன்னை யானென்றென்று
அங்கே தாழ்ந்த சொற்களா லந்தண் குருகூர்ச் சடகோபன்
செங்கேழ் சொன்ன வாயிரத்து ளிவையும் பத்தும் வல்லார்கள்
இங்கே காண விப்பிறப்பே மகிழ்வ ரேல்லியுங் காலையே. ௧௧)

(ப-ரை) ஈன் (இன்) - மிகவும் இனியதான, துழாய்-திருத் துழாய் மாலையையுடைய, அம்மான் தன்னை - ஸர்வேசுவரனை, யான் - நான், எங்கே காண்கேன் என்று என்று, அங்கே - அவனுடைய அழகிலே, தாழ்ந்த - படிந்த, சொற்களால், அம்-அழகான, தண் - குளிர்ந்த, குருகூர் சடகோபன், செம் கேழ் - செம்மை (ஆர்ஜவம்) பொருந்தும்படி, சொன்ன, ஆயிரத்துள், இவையும் பத்தும் வல்லார்கள், இங்கே காண - (எல்லாரும்) பார்க்கும்படி, இ பிறப்பே - இந்தப் பிறப்பிலேயே, எல்லியும் - ராத்திரியும், காலையும் - பகலும், மகிழ்வார் - (எம்பெருமானை அநுபவித்து) ஸந்தோஷிப்பார்கள்.

(கருத்து) மிகவும் இனியதான துளஸிமாலையை உடைய ஸர்வேசுவரனை 'எங்கே பார்ப்பேன்' என்று ஒருதடவைசொல்லி ஆறியிருக்க முடியாமல் பல தடவை சொல்லி, அம் தண் குருகூர் சடகோபன் தோளில் திருத்துழாய் மாலையோடு அவனிருக்கிற அழகில் படிந்த சொற்களால் மனதும் வாக்கும் செய்கையும் ஒத்து அருளிச்செய்த இந்தப் பத்துப்பாட்டுக்களையும் படிக்கச் சக்தியுள்ளவர்கள் இந்தப் பிறப்பிலேயே இரவும் பகலும் அவனை

அனுபவித்து ஆநந்தத்தை அடைவார்கள். இப்படி ஆநந்தத்தை அடைவது ரஹஸ்யத்தில் அன்று. இந்த உலகத்தில் எல்லாரும் காணும்படியே நேரிடும்.

குறிப்பு— (1) ''இவையும் என்கிறவிடத்தில்'' இந்தப் பாட்டுக்களை ஆழ்வார் அபிப்பிராயத்தை அறிந்து அதே அபிப்பிராயமுள்ளவர்களாய் படிக்கிறவர்கள் கிடைப்பது அரிது என்பது ''உம்'' என்பதின் கருத்து.

இ—ம். ஈன் - இன், நீட்டல் என்னும் செய்யுள் விகாரம். ''செங்கேழ்'' என்பதை, செங்கு ஏழ் என்று பிரித்து பெரியோர்கள் வியாக்யாநம் செய்திருக்கிறார்கள். கருத்தில் வேறுபாடில்லை. மிகுந்த பிரயாஸத்துடன் வெளிப்படுத்தப்படுகிற லெக்ஸிகனில் 'செங்கு' என்கிற சொல் இல்லை. செம்மை+கெழு செங்கேழ் என்று ஆயிற்று எனக்கொள்ளவேண்டும். (11)

---

ஆஶ்சர்யாஹிதகார்யாத் ஹ்ருத்யமகுடதயா ஸ்வாம்யதோ
ஜ்யோ ஶயிதாப்தே: ஜீமூதஶ்யாமலத்வாதாஶ்ரிதஸுலபதயா பத்மஸூ
ர்யாயமாணாத் | ஸாரத்யாத் பாண்டுஸூநோரவநிபர
ஹ்ருதேரந்தராத்மத்வயோகாத் ஜீவாபேக்ஷா ப்ரதீக்ஷா ஹ்யவதி
தஶவிதே ஶ்ரீபதிஸ்ஸூக்தஹாணி ॥ ௯௬ ॥

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஜீவன்களை ரக்ஷிக்கிற விஷயத்தில் அவர்களின் பிரார்த்தனையை எதிர்பார்க்கிறான் என்பது பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) ஆச்சர்யமான வேலைகளைச் செய்வது, (2) அழகான கிரீடமுள்ளவனாயிருப்பது; (3) எல்லாருக்கும் ஸ்வாமி என்று தோன்றும்படியாயிருப்பது; (4) திருப்பாற்கடலில் படுத்திருப்பது, (5) மேகம்போல நீலவர்ணமாயிருப்பது, (6) ஆச்ரிதர்களுக்கு ஸுலபனாயிருப்பது, (7) தாமரைப் பூக்களை அவயவங்களாகவுடைய ஒரு ஸூரியன் இருந்தாற்போல் அழகாயிருப்பது; (8) பாண்டு பிள்ளையான அர்ஜுனனுக்கு ரதத்தை நடத்தினது; (9) பூமியின் பாரத்தை இறக்கினது, (10) எல்லாருக்கும் அந்தராத்மாவாயிருப்பது. (96)

---



அவ:— கீழ்த் திருவாய்மொழியில் வருத்தப்பட்டு ஆழ்வார் கூப்பிட்டதைக் கேட்டு,'ஐயோ! இப்படி இவர் வருத்தப்படுகிறாரே' என்று தானும் வருத்தப்பட்டு, அவருடைய வருத்தத்தைத் தீர்ப்பதற்காக ஸந்நத்தனான எம்பெருமான் உடனே அவரிடம் போனால் அவர் ஸந்தோஷமடங்காமல் இறந்துபோவர் என்று பயந்து, அது அடங்கின பிறகு அவரிடம் போகவேணும் என்று எண்ணி, தாம் திருக்கடித்தானத்தில் வந்திருப்பதை அவருக்குக் காட்டினான். அதை அறிந்து அவரும் இந்தத் திருவாய்மொழியில் ஸந்தோஷப்படுகிறார்.

2. இப்படியே சக்கிரவர்த்தித் திருமகன் அயோத்திக்குத் திரும்பி வருகையில் நேராக அயோத்திக்குப் போகாமல் பரத்வாஜர் ஆச்ரமத்தில் இருந்து தான் கிட்ட வந்திருப்பதை ஹநுமான் மூலமாக பரதாழ்வானுக்கு அறிவித்தான். இப்படியே கண்ணனும் ஹஸ்திநபுரத்துக்கு வரும்போது குசஸ்தலத்தில் இருந்துகொண்டு தன் வரவை விதுரனுக்கு அறிவித்தான்.

(கலிவிருத்தம்.)

எல்லியுங் காலையுந் தன்னை நினைந்தெழ
நல்ல வருள்கள் நமக்கேதந் தருள்செய்வான்
அல்லியந் தண்ணந் துழாய்முடி யப்பனூர்
செல்வர்கள் வாழுந் திருக்கடித் தானமே. (க)

(ப-ரை) அல்லி அம் - புஷ்பங்களாலே அழகான, தண் - குளிர்ந்த, அம் - தானே அழகான, துழாய் - துளஸியை, முடி - கிரீடத்திலுடைய, அப்பன் - ஸ்வாமியானவன், எல்லியும் காலையும் - ராத்திரியும் பகலும், தன்னை நினைந்து, எழ - உஜ்ஜீவித்திருக்கும்படி, நல் - நல்ல அருள்கள் - கிருபைகளை (கிருபையின் காரியங்களான வேலைகளை), நமக்கே - எனக்கே, தந்தருள் செய்வான், ஊர்-அவனிருக்கிற ஊர், செல்வர்கள் வாழும் - செல்வமுள்ளவர்கள் வாழும், திருக்கடித்தானம்.

(கருத்து) கீழ்த் திருவாய்மொழியில் மூன்றுவது பாட்டில் "மொய்பூம் தாமத்தண்துழாய்க் கடிசேர் கண்ணிப்பெருமானை அவனைக் காணவேணும்" என்று நான் ஆசைப்பட்டேன். அப்படியே புஷ்பமாலையோடுசேர்ந்து அழகாயிருப்பதோடுஇயற்கையாகவும் அழகான குளிர்ந்த திருத்துழாயைத் தரித்திருக்கிற கிரீடத்துடன் எனக்கு ஸேவை ஸாதிக்கிறுன். இப்படிப்பட்ட ஸர்வேச்வரனை 'என்னிடத்தில் இவனுக்கு எவ்வளவு ஆசையிருக்கிறது' என்று நினைத்து நினைத்து உஜ்ஜீவிக்கும்படி, என்னுடைய விடாய் எல்லாம் தீர்ப்பதான கிருபாகாரியங்களை இடைவிடாமல் செய்துகொண்டிருக்கிறுன். இந்த அநுக்ரஹம் எவருக்காவது கிடைக்குமோ ? அவன் தம்மிடம் வருவதற்கு முன்னேலேவந்து தங்கியிருக்கும்இடமானது அவனுடன் எப்போதும் சேர்த்தியாகிற ஸம்பத்தையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள் அவனுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்துகொண்டிருக்கும் திருக்கடித்தானம்.

குறிப்பு— அடுக்கடுக்கான இதழ்களையுடைய பூ அல்லி; இப்படியில்லாமல் ஒரே இதழையுடையது புல்லி. (1)

---

திருக்கடித் தானமு மேன்னுடைச் சிந்தையும்
ஒருக்கடுத் துள்ளே யுறையும் பிரான்கண்டீர்
செருக்கேடுத் தன்று திகைத்த வரக்கரை
உருக்கேட வாளி போழிந்த வோருவனே. (௨)

(ப-ரை) செருக்கு - கர்வம், எடுத்து - தலையெடுத்து, திகைத்த - மோஹித்தவர்களான, அரக்கரை - ராக்ஷஸர்களைக் (குறித்து), அன்று - அந்தக் காலத்தில், உரு கெட - உடம்புகள் நாசமாகும்படி, வாளி - பாணங்களை, பொழிந்த - வர்ஷித்த, ஒருவன் கண்டீர் - ஒப்பில்லாதவன் (மஹா வீரன் அன்றே) திருக்கடித்தானமும் - திருக்கடித்தானத்தையும், என்னுடை சிந்தையும்-என்னுடைய மனதையும், ஒருக்க-ஒருங்க, அடுத்து-ஒரேவிதமாய் அபிமானித்து, உள்ளே - இவைகளுக்குள்ளே, உறையும் பிரான் - வஸிக்கிற மஹோபகாரகன்.

(கருத்து) திருக்கடித்தானத்தில் வந்திருப்பது மாத்திரம் எம்பெருமான் செய்கிறுனே ? அதையும் என் மனதையும்

ஒரேவிதமாயிருப்பதாக அபிமானஞ் செய்து, என் மனதில் வந்திருந்து இந்த உபகாரத்தைச் செய்திருக்கிறான். ப்ரதிபந்தகங்கள் இருக்கின்றனவே; எப்படி அவன் உம் மனதில் இருக்கக்கூடும் என்றால், அவைகளையும் அவனே போக்கிறான். முன்னாலே பிரம்மாவினிடம் வரம் பெற்றுக் கர்வம் தலையெடுத்து, சக்கிரவர்த்தித் திருமகனை உள்ளபடி அறியாமல் பிரமித்த ராவணனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் பாணங்களை வர்ஷித்து, அவர்கள் உடம்புகளைச் சிந்நாபிந்நமாகச் செய்த மஹாவீரன் அன்றோ இந்த இடங்களில் வந்திருக்கிறவன்.

குறிப்பு— சக்கிரவர்த்தித் திருமகனை உள்ளபடியறியாமையாவது - அவன் ஸர்வேசுவரன் என்றும், அவனுக்குச் சத்ருக்களிடத்திலும் வாத்ஸல்யமிருக்கிறது என்றும், தன்னுடைய பெரிய குற்றத்தாலே ஜலத்தில் நெருப்பு உண்டானதுபோல் அவனுக்குத் தன் விஷயத்தில் கோபமுண்டாயிற்று என்றும் அறியாமை.

இ—ம். ஒருங்க - ஒருக்க, வலித்தல் விகாரம். ஒருக்க+அடுத்த—ஒருக்கடுத்த, தொகுத்தல் விகாரம். கண்டீர்—இது தேற்றத்தைக் காட்டும் முன்னிலையசை. இது பன்மை. ஒருமை காண். (2)

---

ஒருவ ரிருவரோர் மூவரென நின்று
உருவு கரந்துள்ளுந் தோறுந் தித்திப்பான்
திருவமர் மார்வன் திருக்கடித் தானத்தை
மருவி யுறைகின்ற மாயப் பிரானே. (ங)

(ப-ரை) ஒருவர் - (முதலில்) ஒரே ரூபமுள்ளவன், இருவர் ஓர் மூவர் என - பிறகு இரண்டு ரூபமுள்ளவன் மூன்று ரூபமுள்ளவன் என்னும்படி, நின்று - தோன்றி, உருவு கரந்து - (பிறகு தனக்கேயுள்ள)ரூபத்தைத் தெரியாதபடி பண்ணி,[வாளி பொழிந்தவன் - (ராவணனுடைய மூல பலத்தோடு சண்டை போடும்போது)பாணங்களை வர்ஷித்தவன்], திரு அமர் மார்வன்- பிராட்டி நிலையாயிருக்கும் திருமார்பையுடையவனும், திருக்கடித் தானத்தை, மருவி - பிரீதி பண்ணி, உறைகின்ற - அங்கே

வஸிக்கிறவனும், மாயம் பிரான் - ஆச்சரியமான உபகாரகனும், உள்ளும் தோறும் - நான் நினைக்கும்போதெல்லாம், தித்திப்பன் - இனியவனுமாக ஆனான்.

(கருத்து) அவன் செய்த உபகாரம் இது மாத்திரமோ; ராவணனுடைய மூலபலத்தோடு சண்டை செய்யும் காலத்தில், முதலில் ஒரே ரூபமுள்ளவனாகவும், பிறகு இரண்டு ரூபமுள்ளவனாகவும் மூன்று ரூபங்களுள்ளவனாகவும் தோன்றி அதின் மேலே தன் ரூபத்தைத் தெரியாதபடி பண்ணிப்பாணங்களை வர்ஷித்த மஹாவீரன் பிராட்டியோடுகூடத் திருக்கடித்தானத்திலும் என் மனதிலும் பிரீதியுடன் நிலைபாயிருக்கிறான். அவனை நினைக்கும்போதெல்லாம் எனக்கு மிகுந்த ஆநந்தமுண்டாகிறது.

குறிப்பு:—"வாளிபொழிந்தவன்" என்பதைக் கீழ்ப்பாட்டிலிருந்து வருவித்து பூர்வர்கள்வியாக்யாநம்பண்ணியிருக்கிறார்கள்.

---

மாயப் பிரானென் வல்வினை மாய்ந்தற
நேசத்தினல் நெஞ்சம் நாடு குடிகொண்டான்
தேசத் தமரர் திருக்கடித் தானத்தை
வாசப் பொழில்மன்னு கோயில் கொண்டானே. (ரு)

(ப-ரை) தேசத்து அமரர்-காந்தியையுடைய நித்தியஸூரிகளுக்கும் (அடையத் தகுந்ததான), திருக்கடித்தானத்தை, வாசம் பொழில் - (புஷ்பங்களாலே) வாஸனையுடைய உத்யானங்கள், மன்னு - நிலைபாயிருக்கிற, கோயில் - இருப்பிடமாக, கொண்டான் - கொண்டவனான, மாயப்பிரான் - ஆச்சரியமான உபகாரகன், என் வல் வினை-என்னுடைய பலமான துக்கங்கள், மாய்ந்து அற-நசித்து (கொஞ்சமும் மீதியில்லாமல்) போகும்படி, நேசத்தினால் - ஆசையோடு, நெஞ்சம் நாடு - தேசம்போலே விசாலமான என் மனதை, குடி கொண்டான் - நிலையாயிருக்குமிருப்பிடமாக எடுத்துக்கொண்டான்,

(கருத்து) எம்பெருமானை எப்போதும் அநுபவிப்பதாலே அதிககாந்தியுள்ள நித்யஸூரிகளும் ஆசைப்பட்டுவந்து அடையும்படியான திருக்கடித்தானத்தைப்புஷ்பங்களின் வாஸனைநிறைந்த தோட்டங்களாலே சூழப்பட்ட கோயிலாகக்கொண்டு அதில் எழுந்தருளியிருக்கிற ஆச்சரியமான குணங்களையும் லீலைகளையுமுடையவனான உபகாரகன், "காணவாராய்" என்று கண்ணும் வாயும் துவர்ந்துபட்ட என்னுடைய துக்கம் எல்லாம் போகும்

படி, அந்த ஊரைக்காட்டிலும் அதிகமான ஸ்நேஹத்தை என்னிடம் பண்ணி, தேசம்போல் விசாலமான என் மனதைத் தனக்கு நிலையான இருப்பிடமாக எண்ணி, அதில் தன்னைச்சேர்ந்தவர்களுடன் வந்திருக்கிறான்.

குறிப்பு— மனது விசாலமாயிருப்பது-எம்பெருமானுடன் சேருவதாலும் அவனை விட்டுப்பிரிவதாலும் அவனுடைய குணங்களையும் அவன்செய்த லீலைகளையும் அடிக்கடி நினைவுக்கு வருகின்றன. அதனால் உண்டான ஸம்ஸ்காரத்தாலே மனது அவனுடைய எல்லாக்குணங்களையும் எல்லா லீலைகளையும் நினைக்கத்தகுந்ததாக ஆயிருக்கிறது. இதுதான் மனது விசாலமாயிருப்பது. (4)

---

கோயில்கொண் டான்றன் திருக்கடித் தானத்தைக்
கோயில்கொண் டானத னோடுமென் னெஞ்சகம்
கோயில்கொள் தெய்வ மெல்லாந்தொழ வைகுந்தம்
கோயில் கொண்ட குடக்கூத்த வம்மானே. (ரு)

(ப-ரை) கோயில்கொள் - (தங்களுக்குத் தனியான) கோயில்களைக் கொண்டவர்களான, தெய்வம் எல்லாம்-ஸேனை முதலியார் முதலானவர்கள் எல்லாம், தொழ - ஸேவிக்கும்படி, வைகுந்தம்-வைகுந்தத்தை, கோயில்கொண்ட - தனக்கு இருப்பிடமாகக் கொண்டவனை, குடக்கூத்த அம்மான், திருக்கடித்தானத்தை, தன் கோயில்கொண்டான் - தனக்கு இருப்பிடமாகக் கொண்டவனாயிருந்து, அதனோடும் - அத்தொடும், என் நெஞ்சு அகம்-என்னுடைய மனதின் இடத்தை, கோயில்கொண்டான் - இருப்பிடமாக எடுத்துக்கொண்டான்.

(கருத்து) எம்பெருமானைப்போலே உலகத்தாராலே தாங்களும் ஆராதிக்கப்படுகிறவர்களானகையால் தனித்தனியே கோயில்களையுடைய ஸேனை முதலியார் முதலானவர்கள் ஸேவிக்கும்படி வைகுந்தத்திலிருந்து கண்ணனாய் அவதாரம் செய்து, குடக்கூத்து முதலான லீலைகளைச் செய்த ஸ்வாமியானவன் அங்குமிங்கும் இராமல் நிலையாய் திருக்கடித்தானத்திலிருந்துகொண்டு அந்த ஊருடன் என் நெஞ்சிலும் நிலையாய் வந்திருக்கிறான்.

குறிப்பு— உலகத்தில் கோயில்களுக்குள்ளே போகிறவர்கள் செருப்பை வெளியில் வைத்துவிட்டு உள்ளே போய் எம்

பெருமானை ஸேவிக்கிறார்கள். அதுபோல திருக்கடித்தானத்தை விட்டு விட்டு என்னிடம் வந்திருக்கிறானில்லை. அந்த ஊரு டன்கூட வந்திருக்கிறான் என்பது "அதனோடும்" என்பதின் கருத்து. (5)

---

கூத்த வம்மான் கொடியேனிடர் முற்றவும்
மாய்த்த வம்மான் மதுசூத வம்மானுறை
பூத்த பொழில்தண் திருக்கடித் தானத்தை
ஏத்த நில்லா குறிக்கொண்மி னிடரே. (சு)

(ப-ரை) கூத்த அம்மான் - ஆச்சரியமான லீலைகளைச் செய்கிற எல்லாருக்கும் ஸ்வாமியும், கொடியேன் - க்ரூரனான என்னுடைய, இடர் முற்றவும் - துக்கம் முழுவதையும், மாய்த்த அம்மான் - போக்கின ஸ்வாமியும், மதுசூத அம்மான் - மதுவைக் கொன்ற ஸ்வாமியுமானவன், உறை-வஸிக்கிற, பூத்த பொழில்-புஷ்பித்திருக்கிற சோலைகள் சூழ்ந்த, தண் - குளிர்ந்த, திருக்கடித்தானத்தை, ஏத்த - ஸ்தோத்ரம் பண்ணவே, இடர் - துக்கங்கள், நில்லா - இருக்கமாட்டா, குறிகொள்மின் - லக்ஷ்யமாகக் கொள்ளுங்கள் (இதை நன்றாக எடுத்துக்கொள்ளுங்கள்).

(கருத்து) ஆச்சரியமான லீலைகளைச் செய்கிறவனும், காணவாராய் என்று நிர்ப்பந்தம் பண்ணின க்ரூரமான ஸ்வபாவத்தையுடைய என்னுடைய எல்லாத் துக்கங்களையும் நாசம் பண்ணினவனும், ஆச்ரிதர்களுடைய விரோதிகளை நாசம் செய்தது போல ஆச்ரிதனான எனக்குத் தன் பிரிவினாலுண்டான துக்கத்தைத் தன் குணங்களையும் லீலைகளையும் காட்டிப் போக்கினவனுமான ஸ்வாமி எழுந்தருளியிருக்கிற புஷ்பித்திருக்கிற தோட்டங்களால் சூழப்பட்டு ஸம்ஸார தாபத்தைப் போக்கும் ஸ்வபாவங்களுள்ள திருக்கடித்தானத்தை வந்து ஸ்தோத்ரம் பண்ணுங்கள். இப்படிச் செய்தவுடனே உங்களுடைய துக்கம் எல்லாம் சப்தம் பண்ணாமல் ஓடிப்போய்விடும். எனக்கு இந்த ஸம்ருத்தியெல்லாம் அதை ஆச்ரயித்ததினால் தான் கிடைத்திருக்கிறது. நான் சொல்லுவது ஸ்தோத்ரமன்று; நான் வஸ்துவின் ஸ்வபாவத்தையே சொல்லுகிறேன்.

குறிப்பு— (1) எம்பெருமான் திருக்கடித்தானத்தில் நிலையாய் எழுந்தருளியிருப்பதாலே அதின் தோட்டங்களில் புஷ்பங்கள் எப்போதுமிருக்கின்றன. அவன் கடாக்ஷம் மாறினாலன்றோ புஷ்பங்கள் மாறும் என்பது "பூத்த பொழில்" என்பதின் கருத்து.

(2) ஆழ்வார் தமக்கு உண்டான பிரீதியாலே ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கூட்டிக்கொண்டு அவர்களுடன் அதை ஸ்தோத்ரம் பண்ணி அநுபவிக்கிறார். (6)

---

கொண்மி னிடர்கெட வுள்ளத்துக் கோவிந்தன்
மண்விண் முழுது மளந்த வொண்டாமரை
மண்ணவர் தாந்தொழ வானவர் தாம்வந்து
நண்ணு திருக்கடித் தான நகரே. (எ)

(ப-ரை) கோவிந்தன் - கோவிந்தனுடைய, மண் விண் - பூமியையும் ஆகாசத்தையும், முழுதும், (ஒன்றும் விடாமல்) அளந்த, ஒண் - அழகான, தாமரை - திருவடித் தாமரைகளை, மண்ணவர் - பூமியிலுள்ளவர்கள், தாம் தொழ - தாங்களை ஸேவித்துக்கொண்டிருக்க, வானவர் தாம் வந்து - நித்தியஸூரிகள் தாங்களை வந்து, நண்ணு - கிட்டும், திருக்கடித்தான நகர் - திருக்கடித்தானம் என்ற நகரத்தை, இடர் கெட - துக்கங்கள் போகும்படி, உள்ளத்து கொள்மின் - மனதில் கொள்ளுங்கொள் (நினையுங்கள்.)

(கருத்து) பசுக்களுக்கும் ஸுலபனாக இருக்கும்படி கண்ணனாய் அவதாரம் செய்தவன், திரிவிக்கிரமனாக அவதாரம் செய்த காலத்தில், பூமியையும் ஆகாசத்தையும் ஒன்றையும்விடாமல் அளந்த திருவடித் தாமரைகளைப்பூமியிலுள்ளவர்கள் ஸேவிக்கும்படியாகவும், வைகுந்தத்திலிருக்கும் நித்தியஸூரிகளும் பூமியில் வந்து ஸேவிக்கும்படியாகவும் அவன் எழுந்தருளியிருக்கிற திருக்கடித்தானத்தை நீங்கள் மனதால் நினைத்தால் எல்லாத் துக்கங்களும் போகும். நான் அதை ஸ்தோத்ரம் பண்ணச்சொன்னேன். அது வேண்டாம்; அதை நினைத்தாலும் போதும்.

குறிப்பு— (1) பூமியிலிருக்கிறவர்கள் வைகுந்தத்துக்குப் போவது எம்பெருமானுடைய பரத்வத்தை (பெருமையை) அநுபவிப்பதற்காக; நித்தியஸூரிகள் இங்கே வருவது அவனுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தை அநுபவிப்பதற்காக.

(2) இதனால் பூமியிலுள்ளவர்களும் நித்திய ஸூரிகளும் திருக்கடித்தானத்தை ஸேவிக்கிறார்கள் என்று அதின் பெருமை சொல்லப்படுகிறது.

(3) "மண்ணவர் தாம்தொழ" என்பதற்கு, இடக்கை வலக்கை அறியாத மனிதஜாதிகளான எல்லாரும் தங்களுக்கே போக்யமானவன் என்று அவனை ஸேவிக்கிறார்கள் என்பது கருத்து. இதனால் பரமபதம் நித்யஸூரிகளுக்காகவே இருக்குமாப்போலே, பூமியிலுள்ள திவ்ய தேசங்கள் முக்கியமாய் ஸம்ஸாரிகளுக்காகவே இருக்கின்றன என்பது விளங்குகிறது. (7)

---

தான நகர்கள் தலைச்சிறந் தெங்கெங்கும்
வானிந் நிலம்கடல் முற்றுமெம் மாயற்கே
ஆன விடத்து மென்னெஞ்சுந் திருக்கடித்
தான நகருந் தனதாயப் பதியே. (அ)

(ப-ரை) வான் - வைகுந்தம், இ நிலம் - இந்த பூமி, கடல் - திருப்பாற்கடல், எங்கு எங்கும் முற்றும் - ஆகிய இவைகள் எல்லாம், தலைச்சிறந்து-மிகவும் சிலாக்கியங்களாய், எம் மாயற்கு-என்னிடத்தில் ஆசையுள்ள ஆச்சரியமான லீலைகளையுடையவனுக்கு, தான நகர்கள் - இருப்பிடமான நகரங்கள், ஆனவிடத்தும் - இருந்தபோதிலும், என் நெஞ்சும் - என் மனதும், திருக்கடித்தான நகரும், தன - தன்னுடைய, தாயம் பதியே - தாயமாகக் கிடைத்த நகரங்கள்.

(கருத்து) "உம்முடைய மனதையும் திருக்கடித்தானத்தையும் தனக்கு எம்பெருமான் இருப்பிடமாக எடுத்துக்கொண்டிருக்கிறான்" என்று சொன்னீரே. அவனுக்கு வைகுந்தமும் இந்தப் பூமியும் திருப்பாற்கடலும் சிலாக்கியமான இருப்பிடங்கள் அல்லவா ? என்று கேட்கிறீர்களோ அவைகள் சிலாக்கியமான இடங்கள்தான். ஆனபோதிலும், என் மனதிலும் திருக்கடித்

தானத்திலும் தகப்பனிடமிருந்து கிடைத்த ஸொத்தில் பிள்ளைக்கு இருக்கும் பிரீதிபோல் அவனுக்கு அதிகப் பிரீதியிருக்கிறது. (8)

---

அவ— "எல்லா இடங்களும் எம்பெருமானுக்குத் தாயப் பதிகள் அல்லவா" என்று ஒருவன் கேட்டதாக எண்ணி, அதற்கு இதில் பதில் சொல்லுகிறார்:—

தாயப் பதிகள் தலைச்சிறந் தெங்கெங்கும்
மாயத்தினால் மன்னி வீற்றிருந் தானுறை
தேசத் தமரர் திருக்கடித் தானத்துள்
ஆயர்க் கதிபதி யற்புதன் தானே. (௯

(ப-ரை) தாயம் - தானேவந்த ஸொத்தான, பதிகள், எங்கு எங்கும் - இடங்களில் எல்லாவற்றிலும், தலைச்சிறந்து - தலையாய் (மேன்மையுள்ளவைகளாய்) இருக்கும்படி, மாயத்தினால் - ஆச்சரியமான அபிநிவேசமான ஜ்ஞானத்தினாலே, மன்னி - நிலையாய், விற்றிருந்தான் - (ஸௌலப்யம் என்கிற) பெருமை தோன்றும்படி எழுந்தருளியிருந்தவன், தேசத்து அமரர் - தேஜஸை யுடைய நித்தியஸூரிகள், (வந்து அடையும்படியான) திருக்கடித் தானத்துள், தானே உறை - தானே நித்தியவாஸம் பண்ணுகிற ஆயர்க்கு அதிபதி - கோபர்களுக்குத் தலைவனான, அத்புதன்- ஆச்சரியமானவன்.

(கருத்து) எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் எல்லா இடங்களும் அவனுக்கு தாயப்பதிகள்தான். அவைகளில் தன்னுடைய உயர்ந்த ஸௌசீல்யம் ஸௌலப்யம் என்கிற குணங்கள் நன்றாய் விளங்கும்படி அபிநிவேசத்துடனே இருக்கிறான். ஆன போதிலும், அவைகளிலிருப்பு அவனுக்கு இருப்பாகத் தோன்ற வில்லை. என்னுடன் சேருவதற்குத் தகுந்த இடம், அவனை அநுபவிக்கும் ஸந்தோஷத்தினாலே நன்றாய் பிரகாசிக்கும் நித்தியஸூரிகள் வந்து அடையும்படியான திருக்கடித்தானமே என்று எண்ணி, கோபர்களுக்குத் தலைவனாய் அவதாரம் செய்த ஆச்சரியமானவன் அதிலிருப்பே தனக்கு இருப்பாகத் தானே வந்து எழுந்தருளியிருக்கிறான்

குறிப்பு— எல்லாத் திவ்யதேசங்களிலும் அவன் எழுந்தருளியிருந்தாலும் என்னோடு சேருவதற்காகத் திருக்கடித்தானத்தில் மிகுந்த பிரீதியுடன் நிற்கிறான். இதென்ன ஆச்சரியமானவன் என்பது கருத்து. (9)

---

அற்புதன் நாரா யணனரி வாமனன்
நிற்பது மேவி யிருப்பதேன் னெஞ்சகம்
நற்புகழ் வேதியர் நான்மறை நின்றதிர்
கற்பகச் சோலைத் திருக்கடித் தானமே. (கo)

(ப-ரை) அற்புதன் - ஆச்சரியமானவனும், நாராயணன் - (தன்னைச் சேர்ந்தவர்களைக் கைவிடாதபடி செய்யும் வாத்ஸல்யம் முதலான குணங்களையுடையவனும்), அரி(ஹரி), (அவர்கள் அநுபவத்துக்கு இடையூறுகளைப்போக்கிறவனுமான), வாமநன், நிற்பது- நிலையாயிருப்பது, நல்புகழ் - நல்ல கீர்த்தியையுடைய, வேதியர்- வேதமறிந்தவர்களுடைய, நால்மறை - நான்கு வேதங்களும், நின்று - நிலையாய், அதிர் - முழங்குகிற, கற்பகம் சோலை - கல்பக வனங்களையுடைய, திருக்கடித்தானமே - திருக்கடித்தானத்தில், மேவி இருப்பது - பிரீதியுடனிருப்பது, என் நெஞ்சு அகம் - என் மனதான இடம்.

(கருத்து) ஆச்சரியமான குணங்களையும், லீலைகளையுமுடையவனும், தன்னைச் சேர்ந்தவர்களைக்கைவிடாதபடி செய்யும் வாத்ஸல்யம் முதலானகுணங்களையுடையவனும், அவர்களுடைய அநுபவத்துக்கு இடையூறுகளாயிருப்பவைகளைப் போக்குகிறவனும் தன் ஸ்வபாவத்தை விட்டு விட்டாவது அவர்கள் காரியங்களைச் செய்கிறவனுமான எம்பெருமான், அவனைத்தவிர வேறு பிரயோஜநத்தைத் தேடாதவர்கள் என்கிற கீர்த்தியையுடையவர்களும், நான்கு வேதங்களையறிந்தவர்களுமான வைதிகர்களுடைய நான்கு வேதங்கள் எப்போதும் முழங்குமிடமும் கற்பகச் சோலைகளால் சூழப்பட்டதுமான திருக்கடித்தானத்தில் இருக்கிறான். அதிக பிரீதியுடன் இருப்பது என் நெஞ்சிலே.

குறிப்பு— திருக்கடித்தானத்தில் எம்பெருமான் இருப்பது என் நெஞ்சிலேயிருப்பதற்காக என்பது கருத்து. (10)

சோலைத் திருக்கடித் தானத் துறைதிரு
மாலை மதிள்குரு கூர்ச்சட கோபன்சொல்
பாலோ டமுதன்ன வாயிரத் திப்பத்தும்
மேலை வைகுந்தத் திருத்தும் வியந்தே. (கக)

(ப-ரை) சோலை - சோலைகளால் சூழப்பட்ட, திருக்கடித் தானத்து - திருக்கடித்தானத்திலே, உறை - நித்தியம் வஸிக்கிற, திருமாலை - லக்ஷ்மீபதியைக்குறித்து, மதிள் குருகூர் - (ஸம்ஸாரத்தை உண்டாக்கும் பாபங்கள் உள்ளே புகாதபடி உயர்ந்திருக்கிற) மதிள்களையுடைய குருகூரிலிருக்கிற, சட கோபன் சொல்-ஆழ்வாருடைய சொல்லான, பாலோடு அமுது அன்ன - பாலோடு சேர்ந்த அமுதம்போலிருக்கும், ஆயிரத்து இ பத்தும், வியந்து - ஆச்சரியப்பட்டு, மேலை வைகுந்தத்து - மேலேயிருக்கும் வைகுந்தத்தில், இருத்தும் - இருக்கும்படி செய்யும். (இவைகளைப் படிக்கிறவர்களை)

(கருத்து) சோலைகளால் சூழப்பட்ட திருக்கடித்தானத்தில் நித்தியவாஸம் பண்ணுகிற எம்பெருமானைக் குறித்து, மதிள் குருகூர்ச் சடகோபன் அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களும், பாலோடு சேர்ந்த அமுதம்போல் இனியவைகளாயிருக்கின்றன. அவைகளைப் படிக்கிறவர்களை அவைகள் "ஸம்ஸாரத்திலிருக்கிறவர்கள் இப்படியும் இருப்பார்களோ" என்று ஆச்சரியப்பட்டு மேலேயிருக்கிற வைகுந்தத்தில் திரும்பி வராதபடி இருக்கும்படி செய்யும். எம்பெருமானும் இவர்களைவிட்டு ஒரு க்ஷணமும் பிரியமுடியாதவனாய், அவர்களைத் திரும்பி வரும்படி விடுகிறதில்லை.

குறிப்பு— இதில் 'பால்' என்பது பாட்டுக்களாலே சொல்லப்பட்ட திருக்கடித்தானத்திலிருக்கும் எம்பெருமான். பாட்டுக்கள் அமிருதம். பாட்டுக்களுக்கு அவனிடம் சேர்க்கையாலே மிகுந்த போக்கியதை உண்டாயிருக்கிறதென்பது கருத்து. (11)

ஸாத்க்வாஹ்ருத்துலஸ்யா ஶ்ரிதஹ்ருதிஶயநாத் ஶ்ரீஜவக்ஷஸ்
ஸாவாஷாஸ்வஸ்ர்யாவக்ரியத்வாத் ஸதா ஶத்ருஹநநாந்நித்யஸூரிஸேவ்யம்
ஸக்தத்வாத் | கோவிந்தத்வாத்ஸ்வஶேஷாபிமதவிஷயதாஸ்வீக்ரு
ஸஞ்சித்தத்வாத் ஸர்வாகாராத்புதத்வாத் ஸ்ப்ருஹணீயாமிமாஹ
ஸஜ்ஜத்ராஹ க்ருஷ்ணம் || ௯௭ ||

இந்தத் திருவாய்மொழியில், எம்பெருமான் தன் திருவடிகளை ஆச்ரிதர்களுக்குக் கொடுப்பதில் ஸக்தனாயிருக்கிறான் என்பது பத்துக்காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன- (1) அழகான துளஸியால் விளங்குவது; (2) ஆச்ரிதர்களின் மனதிலிருப்பது; (3) பிராட்டியைத் திருமார்பில் இயற்கையாக உடையவனாயிருப்பது; (4) ஆச்சரியமான உபகாரங்களைச் செய்வது; (5) நித்திய ஸூரிகளால் இடைவிடாமல் ஸேவிக்கப்படுவது; (6) சத்துருக்களை நாசம் பண்ணுவது; (7) கோவிந்தனாயிருந்தது. (8) தனக்குப்பிடித்த எல்லாத் திவ்விய தேசங்களைக் காட்டிலும் ஸத்துக்களுடைய மனதைத் தனக்குப் பிடித்த இடமாக எண்ணி அதிலிருப்பது; (9, 10) எல்லா ஆகாரங்களாலும் ஆச்சரியமாயிருப்பது. (97)

# ஏழாம் திருவாய்மொழி



அவ— கீழ்த் திருவாய்மொழியில், ஆழ்வார் எம்பெருமான் தமக்குச் செய்த அநுக்கிரஹ விசேஷ பரம்பரையைப் பிரீதியுடன் அநுபவித்தார்; இந்தத் திருவாய்மொழியில் தாம் முக்கியமாக ஆசைப்பட்ட அநுக்கிரஹம் கிடைத்ததைப் பேசுகிறார். அதாவது— தம்முடைய ஸந்தோஷம் அடங்கினபோது தம்முடைய மனதில் புகுந்து மனதால் தெளிவாய் அநுபவிக்கும்படி இருப்பது.

(2) அவர் ஆசைப்பட்டபடி பாஹ்ய ஸம்ச்லேஷம் இன்னம் கிடைக்கவில்லை. ஆனபோதிலும் இதுவரையில் தாம் பட்ட பாடு எல்லாம் தீரும்படி அவன் மனதில் எழுந்தருளியிருக்கிறான் என்பதையும், தமக்கு அவனிடத்திலிருக்கும் அபிநிவேசத்தைக் காட்டிலும் அவனுக்குத் தம்மிடத்தில் ஆயிரம் மடங்கு அபிநிவேசம் இருக்கிறதென்பதையும் சொல்லி, இப்படிப்பட்டவனையா "இதுவோ உன் பொருத்தம்" என்று சொன்னேன் என்று தம்மை வெறுத்துக்கொள்கிறார்:—

(கலிவிருத்தம்)

இருத்தும் வியந்தென்னைத் தன்பொன்னடிக் கீழென்று
அருத்தித் தெனைத்தோர் பலநா ளழைத்தேற்கு
பொருத்தமுடை வாமனன் றான்புகுந் தென்றன்
கருத்தையுற வீற்றிருந்தான் கண்டு கொண்டே. (க)

(ப-ரை) என்னை, வியந்து - ஆச்சரியப்பட்டு, தன் பொன் அடி கீழ் - தன்னுடைய அழகான திருவடிகளின் கீழே, இருத்தும் என்று - இருக்கும்படி செய்வன் என்று, அருத்தித்து - பிரார்த்தித்து, எனைத்து ஓர் பல நாள் - வெகுகாலம் ஒரேவிதமான பல நாள்கள், அழைத்தேற்கு - அழைத்த எனக்கு, (என்னோடு சேருவதில்,) பொருத்தம் உடை - ப்ரணியித்வத்தை (ஆசையுள்ளவனாயிருப்பதை) உடைய, வாமநன் தான் கண்டு கொண்டு, என்தன் கருத்தை - என் மனதை, புகுந்து, உற - நிலையாக, வீற்றிருந்தான் - பெருமை தோன்றும்படியிருந்தான்.

(கருத்து) அவனை விட்டுப் ப்ராணனைத் தரிக்கமுடியாதிருந்த என்னை, 'ஸம்ஸாரமண்டலத்தில் என்னையே வேண்டுகிற ஒருவனிருக்கிறானே' என்று ஆச்சரியப்பட்டுத் தன்னுடைய அழகான திருவடிகளின்கீழே இருக்கும்படி செய்வன் என்று நாம் தீர்மானம் செய்து ஆசைப்பட்டு, எவ்வளவோ நாள்கள் அவனை வாராய் வாராய் என்று கூப்பிட்டேன். இப்படிக் கூப்பிட்ட என்னுடன் சேருவதில் ஆசையுள்ளவனான வாமநன் பிறந்தது முதல் ஏழையான ஒருவன் மஹாநிதியையடைந்து ஸந்தோஷப்படுவதுபோல் ஸந்தோஷத்துடன் என்னைப் பார்த்து என் மனதில் புகுந்து என்னோடுசேர்ந்த பெரியஆநந்தம் தோன்றும்படி எழுந்தருளியிருந்தான்.

குறிப்பு– (1) எம்பெருமான் வாமநனாய் அவதாரம்பண்ணித் தன்னை விட்டுப் போயிருந்த ஸொத்தைத் திருப்பி எடுத்துக் கொண்டான். அதுபோல தன் ஸொத்தான என்னையும் தானே ப்ரயத்நம் செய்து பெறவேண்டியவன். இப்படியிருக்க, நான் அவனை வேண்டிக் கூப்பிட்டது என்ன காரியம் என்று ஆழ்வார் எண்ணுகிறார் என்பது 'வாமநன்' என்பதற்குக் கருத்து.

(2) 'தான் கண்டுகொண்டு' என்பதற்கு, ஆழ்வாரைவிட்டு எம்பெருமான் பிரிந்து பட்ட வருத்தங்கள் எவ்வளவுதான் என்று சொல்லமுடியாமலிருந்தன என்பதும், அந்த வருத்தமெல்லாம் போகும்படி அவரைக்கண்டு ஸந்தோஷமடைந்தான் என்பதும் கருத்து. எம்பெருமான் ஆழ்வாரைவிட்டுப் பிரிகையாவது— ஆழ்வார் தம்மை அநுபவிக்காதபோது, தனக்கு இவரோடு முன்னாலே உண்டாயிருந்த * ஸாமரஸ்யத்தை இழந்திருப்பது. உலகத்திலும் நாயகன் நாயகியை விட்டுப் பிரிவதாவது— நாயகி தனக்கு முகங்காட்டி சேர்ந்திருக்கும்போது உண்டாயிருந்த ரஸமில்லாமை.

இ—ம். இருத்தும் - பிறவினை. அழைத்தேற்கு - வினையால் அணையும் பெயர். (1)

---

* ஸாமரஸ்யமென்பது இருவர் சேர்ந்திருக்கும்போது சேர்க்கையினால் இருவருக்கும் உண்டாகும் ஒரேவிதமான ஆநந்தம்.

இருந்தான் கண்டுகொண் டெனதேழை நெஞ்சாளும்
திருந்ாத வோரைவரைத் தேய்ந்தற மன்னி
பெருந்தாட் களிற்றுக் கருள்செய்த பெருமான்
தருந்தா னருள்தா னினியா னறியேனே. (உ)

(ப-ரை) எனது - என்னுடைய, ஏழை - சபலமான, நெஞ்சு - மனதை, ஆளும் - (தங்கள் விஷயங்களில்) இழுக்கும், திருந்தாத - அடக்கமுடியாத, ஓர் - ஒப்பில்லாத, ஐவரை-ஐந்து இந்திரியங்கள், தேய்ந்து அற - நசித்துப்போகும்படி (பலம் குறைந்து தங்கள் வியாபாரங்கள் நீங்கும்படி), மன்னி - (என் மனதில்) நிலையாயிருந்து, கண்டுகொண்டு இருந்தான்; பெரும்தாள், பெரிய காலையுடைய, களிற்றுக்கு - யானைக்கு (கஜேந்திரனுக்கு)- அருள் செய்த - கிருபை பண்ணின, பெருமான் - ஸர்வேசுவரன், தான் - தானாகவே, தரும் அருள் தான் - கொடுத்துக்கொண்டிருக்கிற கிருபையையும், இனி, யான் அறியேன் - நான் அறியவில்லை.

(கருத்து) கண்ட எல்லா விஷயங்களிலும் சபலமாயிருந்த என்னுடைய மனதை அடக்கமுடியாத ஐந்து இந்திரியங்கள் தங்கள் விஷயத்தில் இழுத்துக்கொண்டிருந்தன. அவைகளின் பலம் குறைந்து தங்கள் துர்வியாபாரங்களை விடும்படி ஸர்வேசுவரன் என் மனதில் நிலையாயிருந்து, தரித்திரன் கிடைத்த தனத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதுபோல் என்னைப் பார்த்துக்கொண்டே இருக்கிறான், இந்த அவனுடைய ப்ரணயித்வம் என்கிற குணத்தைப் பார்க்கும்போது, பருத்த கால்களையுடைய கஜேந்திராழ்வானுக்குக் கிருபை செய்ததுமுதல் இதுவரையில் தானாகவே எனக்குச் செய்த கிருபாகாரியங்களை உயர்ந்தவைகளாக நான் எண்ணவில்லை. கஜேந்திராழ்வானை ஒரு முதலை சிலகாலம் பிடித்தது. அதுவும் ஒரு சின்ன குளத்தில். என்னைத் துன்பப்படுத்தினவர்களோ ஐந்து பேர்கள்; நான் துன்பப்படுகிற காலமோ அநாதியாக இதுவரையில் வந்த காலம்; நானிருந்த இடமோ கரையில்லாத ஸம்ஸாரஸமுத்ரம்; ஆகையால், அப்போது செய்த உபகாரம் உலகத்தில் செய்கிற உபகாரங்களைக் காட்டிலும் மேலாக இருந்தாலும் இப்போது செய்த உபகாரத்துக்கு ஸமமாகுமோ ?

குறிப்பு— கஜேந்திராழ்வானுக்குச் செய்த உபகாரத்தைத் தமக்குச் செய்ததாக ஆழ்வார் எண்ணுகிறார்.

(2) 'தரும்' என்கிற சொல்லாலே உபகாரங்களை அவன் செய்துகொண்டேயிருக்கிறான் என்பது காட்டப்படுகிறது.

(3) எவ்வளவு பலமுள்ளவனாலும் அடக்கமுடியாத இந்திரியங்கள் அவனைப் பிடிக்கிறபடியை நினைத்து, அவைகளைச் சேதநர்களைப்போல 'ஐவரை' என்கிற உயர்திணைச் சொல்லால் சொல்லுகிறார். (2)

---

அருள்தா னினியா னறியே னவனென்னுள்
இருள்தா னறவீற் றிருந்தா னிதுவல்லால்
பொருள்தா னெனில்மூ வுலகும் பொருளல்ல
மருள்தா னீதோ மாயமயக்கு மயக்கே. (௩)

(ப-ரை) இனிதான் - இதுக்குமேல், அருள்-கிருபையை, யான் அறியேன் - நான் (உயர்ந்த கிருபையாக) எண்ணுகிறதில்லை, அவன், என் உள் - என்னிடத்திலிருந்த, இருள்தான்- (அஜ்ஞாநமாகிய எல்லா) இருட்டும், அற - (கொஞ்சமுமில்லாமல்) போகும்படி, வீற்றிருந்தான் - (கிடைக்காதது கிடைத்தது போல் மிருந்த) ஸந்தோஷத்துடனிருக்கிறான். இது அல்லால்- இந்த இருப்பைத்தவிர, பொருள்தான் எனில்-வேறு புருஷார்த்தம் எது (என்று நினைத்துப் பார்க்கும்போது), மூ உலகும் - மூன்று உலகங்களும், பொருள் அல்ல - அவனுக்குப் புருஷார்த்தமல்ல, ஈது (இது), மருள்தானோ-என்னுடைய பிரமம்தானோ, மாய - ஆச்சரியமான, மயக்கு - பிரமத்தை உண்டாக்குமவைகளாலே உண்டான, மயக்கோ - பிரமமோ ?

(கருத்து) ஸர்வேசுவரன் என் மனதில் இப்போது எழுந்தருளியிருந்து செய்கிற கிருபையைக் காட்டிலும் வேறொரு கிருபையை நான் கிருபையாக எண்ணவில்லை. இந்தக் கிருபை எது என்றால், என்னிடத்திலிருந்த அஜ்ஞாநமாகிய இருட்டெல்லாம்கொஞ்சமுமில்லாதபடி என் மனதில் அடையமுடியாத லாபத்தை அடைந்ததுபோல் ஸந்தோஷப்பட்டுக்கொண்டு அவனிருக்கிறான். இப்படி அவன் இருக்கிற இருப்பைக் காட்டி

லும் வேறு புருஷார்த்தம் அவனுக்கு உண்டோ என்று விசாரித்துப்பார்த்தேன். மூன்று விதமான சேதநர்கள் மூன்று விதமான அசேதநங்கள் அவன் ஸொத்தாயிருப்பது தனக்குப் புருஷார்த்தமாக அவன் எண்ணவில்லை என்று தோன்றுகிறது. நானே மிகவும் தாழ்ந்தவன்; அவனே மிகவும் உயர்ந்தவன். அவன் என் மனதில் வந்திருப்பதும் அதை உயர்ந்த புருஷார்த்தமாக எண்ணுவதும் வாஸ்தவமோ? நான் அவனை இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருப்பதாலே உண்டான ஸம்ஸ்காரத்தால் அவன் இப்படி இருப்பதாக எண்ணுகிறேனோ? அல்லது இவர் இப்படி வருத்தப்படுகிறாரே என்று அந்த வருத்தம் போவதற்காக ஆச்சரியமான மயக்கும் ஸாதநங்களைக்கொண்டு மயக்கினானோ?

குறிப்பு— (1) 'மூவுலகும்' என்கிற இடத்தில் உலகம் என்பது பிரமாணங்களால் காட்டப்பட்ட வஸ்து. அது பக்தர் முக்தர் நித்தியர் என்று மூன்று விதமாயும், பிரகிருதி சுத்த ஸத்துவம் காலம் என்று மூன்றுவிதமாயுமிருக்கிறது. இதனால், எம்பெருமானுடைய இரண்டு விபூதியும் சொல்லப்பட்டன.

(2) எம்பெருமான் தனக்கு இப்போது பண்ணுகிற உபகாரத்தை அவர் மிகவும் பெரிய உபகாரமாக எண்ணுவது போல் அவனும் அவர் மனதிலிருப்பதை உயர்ந்த புருஷார்த்தமாக எண்ணுகிறான் என்று காட்டுவதற்கு உதாரணமாக இரண்டாம் பாட்டில் சொன்னதை முதலிரண்டு அடிகளால் அநுவாதம் பண்ணுகிறது.

(3) இப்படியே சக்கிரவர்த்தித் திருமகனுடைய கதையின் கந்தமில்லாத அசோகவநத்தில் அநுமான் அவர் கதையைச் சொல்லுவதைக் கேட்டு ஸீதை "இது உண்மையேயோ? அல்லது அவனை நான் எப்போதும் நினைத்துக்கொண்டிருப்பதாலே யாரோ அவனைப்பற்றிப் பேசுகிறதாகத் தோன்றுகிறதோ" என்று முதலில் பிரமித்தாள். (3)

மாயமயக்கு மயக்கா னென்னை வஞ்சித்து
ஆய னமரர்க் கரியே றெனதம்மான்
தூய சுடர்ச்சோதித் தனதென்னுள் வைத்தான்
தேசந் திகழுந்தன் திருவருள் செய்தே. (ச)

(ப-ரை) அமரர்களுக்கு-நித்தியஸூரிகளுக்கு, அரி ஏறு - ஆண்சிங்கம் போன்றவனான, ஆயன்-கோபாலனான, எனது அம்மான்-என்னுடைய ஸ்வாமி, என்னை வஞ்சித்து, மாயமயக்கு-ஆச்சரியமான மயக்குவதற்கு ஸாதநமானவைகளால், மயக்கான் - மயங்கும்படி செய்யமாட்டான், தேசம் திகழும்-எல்லாத் தேசங்களிலும் விளங்கும்படியாக, தம் திருவருள் செய்து - தனக்கேயுள்ள கிருபையை என்னிடத்தில் செய்து, தனது - தனக்கேயுள்ள, தூய - தோஷமில்லாத, சுடர் சோதி - பிரபையோடு கூடிய ஜ்யோதிர்மயமான திருமேனியை, என் உள்ளே வைத்தான் - என் மனதில் தோன்றும்படி செய்தான்.

(கருத்து) நித்தியஸூரிகளுக்குத் தலைவனாயிருந்தும் கோபர்களுக்குள்ளே ஒருவனாய் அவதாரம் செய்து எனக்கு ஸ்வாமியாயிருக்கிறவன் என்னை வஞ்சிக்கமாட்டான். ஏன் என்றால், அவன் ஸௌசீல்யம் என்கிற குணமுள்ளவன். நான் அவனை நம்பியிருக்கிறவன். ஆச்ரிதர்களின் விரோதிகளான துரியோதநன் முதலானவர்களையன்றோ மயக்குவது. ஆகையால் அவனுடைய பரிசுத்தமான அப்ராகிருதமான திருமேனியை உலகத்தில் எல்லாருக்கும் விளங்கும்படி என் மனதில் வாஸ்தவமாகவே காட்டியருளுகிறான். இவ்விதமான கிருபையை வேறொருவரால் செய்யமுடியுமோ?

இ—ம். மயக்கான் - எதிர்மறை வினைமுற்று. (4)

---

திகழுந்தன் திருவருள் செய்து லகத்தார்
புகழும் புகழ்தா னதுகாட்டித் தந்தென்னுள்
திகழும் மணிக்குன்ற மொன்றே யொத்துநின்றான்
புகழும் புகழ்மற் றெனக்குமோர் பொருளே. (ரு)

(ப-ரை) திகழும் - எல்லா உலகங்களிலும் விளங்கும்படியான, தன் திருவருள் செய்து - தனக்கேயுள்ள கிருபையை (என்னிடத்தில்) செய்து, உலகத்தார் புகழும் - உலகத்தார் ஸ்தோத்ரம் பண்ணும், அது - பிரஸித்தமான, புகழ் - ஸ்தோத்ரம், தான் காட்டி, தந்து, என்னுள் - என்னுடைய மனதில், திகழும் - விளங்குகிற, மணி குன்றம் ஒன்றே ஒத்து - ஓர் இந்திரநீலமலைபோன்றவனாய், நின்றான்-நிலையாயிருக்கிறான், மற்று- இந்தக் குணத்தைத் தவிர, வேறு புகழும் புகழ் - உலகத்தாரால் புகழப்படுகிற குணமும், எனக்கு ஓர் பொருளோ?

(கருத்து) என் மனதில் வந்திருப்பதாகிய ஒரு கிருபையை எல்லாரும் காணும்படி எம்பெருமான் செய்திருக்கிறான் என்று சொன்னேன்; இது மாத்திரமா? ஸர்வேசுவரனாயிருக்கிறவனுக்கு ஒரு சேதநனிடத்தில் இவ்வளவு அபிநிவேசமிருக்கிறதே. இஃதென்ன ஆச்சரியம் என்று உலகத்தார் ஸ்தோத்ரம் பண்ணுவதையும் எனக்குக் காட்டியருளினான். என் மனதாகிய தாமரைப்பூவைக் கிடைக்காதது கிடைத்த லாபமாக எண்ணி அந்த ஸந்தோஷத்தாலே ஓர் இந்திரநீலமலைபோல அதில் விளங்குகிறான். அவனுடைய உயர்வையும் என்னுடைய தாழ்மையையும் நினைத்து, அவனை ஒருவேளை நான் விட்டுவிடுவேனோ என்று பயந்து அவனை நான் விடமுடியாதபடி தன் அழகைக் காட்டி என்னை வசப்படுத்திக்கொண்டு என் மனதில் நிலையாயிருக்கிறான். இந்த மஹாகுணத்தைத்தவிர உலகத்தார் ஸ்தோத்ரம் பண்ணும் மற்றக் குணங்களை நான் ஒரு குணமாக எண்ணுவேனோ?

இ—ம். பொருளே - ஏகாரத்திற்கு எதிர்மறைப்பொருள். பொருளன்று என்று கருத்து. (5)

---

பொருள்மற் றெனக்குமோர் பொருள்தன்னில் சீர்க்கத்
தருமேல் பின்னையார்க் கவன்தன்னைக் கொடுக்கும்
கருமா ணிக்கக் குன்றத்துத் தாமரைபோல்
திருமார்பு கால்கண்கை செவ்வா யுந்தியானே. (சா)

(ப-ரை) பொருள் தன்னில் - புருஷார்த்தங்களுக்குள், மற்று - தன்னைத் தவிர வேறு, ஓர் பொருள் - ஒரு புருஷார்த்தத்தை, எனக்கும், சீர்க்க - சீர்மையாக (உயர்ந்ததாக), தருமேல் - கொடுத்தால், பின்னை, கருமாணிக்கம் குன்றத்து தாமரைபோல் - ஓர் இந்திரநீலமலைமேல் பூத்திருக்கிற தாமரைப் புஷ்பங்கள்போலிருக்கிற, திருமார்பு, கால் - திருவடிகள், கண் - திருக்கண்கள், கை - திருக்கைகள், செவ்வாய் - திருப்பவளம், உந்தியான் - திருநாபி ஆகிய இவைகளையுடையவன் அவன், தன்னை, யார்க்கு கொடுக்கும் - எவர்க்குக் கொடுப்பன்?

(கருத்து) தன்னைத் தவிர ஐசுவரியம் முதலான வேறு புருஷார்த்தத்தை எனக்குப் பூர்ணமாகக் கொடுத்தால் அதைப்

பெற்று வேறொன்றைத் தேடாமல் நான் அவனைக் கூப்பிட மாட்டேன் என்றும், அப்போது தன்னுடைய அளவில்லாத அழகை அநுபவிக்க வேறு ஒருவரும் இல்லையென்றும் நினைத்து, அவன் தன்னை எனக்குக்கொடுக்கவில்லை. அவனுக்கு என்னிட மிருக்கும் அபிநிவேசத்தாலேயே இப்படிச் செய்திருக்கிறான். இந்த அழகை அநுபவிக்க ஆசைப்படாதவர்கள் உண்டோ? இப்படி நித்தியஸூரிகள் எப்போதும் அநுபவிக்கவில்லையா? ஓர் இந்திரநீலமலையில் தாமரைப்பூக்கள்பூத்ததுபோல் இருக்கின்றன பிராட்டியாலும் கௌஸ்துபத்தாலும் விளங்குகிற திருமார்பும், இந்த அழகையநுபவிக்கிறவர்கள் ப்ரேமபரவசராய் விழும் திருவடிகளும், அவர்களை ஸௌஹார்த்தத்துடனும் ஆசையுடனும் கூடிய மந்தஹாஸத்துடன் கடாக்ஷிக்கும் திருக்கண்களும், அவர்களை முதுகில் தட்டிக்கொடுத்து ஸந்தோஷப்படுத்தும் திருக்கைகளும், அவர்களைப் பார்த்து இனிமையாய் வார்த்தை சொல்லும் திருப்பவளமும், அவர்களால் அநுபவிக்கப்படுமதாயும் பிரம்மாவையுண்டுபண்ணினதாயுமிருக்கும் திருநாபியும்.

---

சேவ்வாயுந்தி வெண்பல் சுடர்க்குழை தன்னோடு
எவ்வாய்ச் சுடரும் தம்மில்முன் வளாய்க்கோள்ளச்
சேவ்வாய் முறுவலோ டெனதுள்ளத் திருந்த
அவ்வா யன்றி யானறியேன் மற்றருளே. (எ)

(ப-ரை) செவ்வாய் - சிவந்த திருப்பவளம், உந்தி - திருநாபி, வெண்பல்-வெண்மையான திருமுத்துக்கள், சுடர் குழை-காந்தியுள்ள மகரகுண்டலங்கள், எவ்வாய் சுடர் தன்னிலும் - (ஆகிய இவைகளிலும் சொல்லாத) எந்த அவயவங்களிலுமுள்ள காந்தியைக் காட்டிலும் (அதிகமாக), முன்-எனக்கு முன்னாலே, வளாய்க் கொள்ள - வளைத்துக்கொள்ளும்படி, செவ்வாய் முறுவலோடு - திருப்பவளத்தின் மந்தஹாஸத்தோடு, எனது உள்ளத்து இருந்த-என் மனதிலிருந்த, அவ்வாய் இன்றி - அந்த விடம்தவிர, மற்று அருள் - வேறு கிருபையை, யான் அறியேன் - நான் ஒரு கிருபையாக எண்ணமாட்டேன்.

(கருத்து) முன்னாலே என்னை அடிமையாக்குவதற்காக அழகுடன் வந்தான். இப்போது என்னுடன் சேர்ந்த ஸந்தோ

ஷத்திஞல் ஒரு புதிதான காந்தி அவனுடைய திருப்பவளத்திலும் திருநாபியிலும் வெண்மையான திருமுத்துக்களிலும், மகரகுண்டலங்களிலும் மற்ற அவயவங்களிலும் உண்டாயிருக்கிறது. இதைக் காட்டிலும் அதிகக் காந்தியானது அவனுடைய திருப்பவளத்தின் மந்த ஹாஸத்திலிருந்து எல்லா அவயவங்களையும் வளைத்துக்கொண்டு ஒரு ஆருய் ஓடுகிறது. இவ்விதமான அழகுடன் என் மனதில் அவன் வந்திருப்பதைப் பார்க்கும்போது இந்தக் கிருபையைத்தவிர வேறு கிருபையை நான் ஒரு கிருபையாக நினைக்க முடியுமோ ?

இ—ம். வளாய் - வளாவி; வினையெச்சம். (7)

அறியேன் மற்றரு ளென்னையாளும் பிராஞர்
வெறிதே யருள்செய்வர் செய்வார்கட் குகந்து
சிறியே னுடைச்சிந்தை யுள்மூ வுலகுந்தன்
நெறியா வயிற்றிற் கொண்டுநின் ருெழிந்தாரே. (அ)

(ப-ரை) என்னை ஆளும் பிராஞர், சிறியேனுடை - மிகவும் தாழ்ந்தவஞன என்னுடைய, சிந்தையுள் - மனதில், மூவுலகும் - மூன்று உலகங்களையும், நெறியா - முறையாக (தனக்கும் அவைகளுக்குமுள்ள முறை தப்பாமல்), தம் வயிற்றில் கொண்டு - தனக்குள்ளே வைத்துக்கொண்டு, நின்ருெழிந்தார் - இப்படியே நிலையாக எழுந்தருளிவிட்டார். செய்வார்கட்கு - தான் கிருபை செய்யவேண்டுகிறவர்களுக்கு, உகந்து - ஸந்தோஷப்பட்டு, வெறிதே - ஒரு ஹேதுவில்லாமல், அருள் செய்வார் - கிருபை செய்தருளுவர், மற்று அருள் யான் அறியேன் - வேறு கிருபையை நான் அறியேன்.

(கருத்து) எனக்கு உபகாரங்களைச் செய்து என்னை அடிமையாகப் பண்ணிக்கொண்ட எம்பெருமான் மூன்று விதமான சேதநர்களையும் மூன்று விதமான அசேதநங்களையும் தனக்கும் அவைகளுக்கும் இருக்கும் உறவு தப்பாமல் நம்மைச் சேர்ந்ததென்று அதிக ப்ரீதியோடு தன்னிடத்தில் வைத்துக்கொண்டு மிகவும் தாழ்ந்த என்னுடைய மனதில் நிலையாயிருந்துவிட்டான். இதற்கு என்ன காரணம் என்று கேட்டால், எனக்கு ஒன்றும்

தோன்றவில்லை. தான் எவர்களுக்குக் கிருபை செய்வதாக எண்ணுகிறானோ அவர்களிடத்தில் ஸந்தோஷப்பட்டு ஒரு காரணமுமில்லாமல் கிருபையைச் செய்கிறான். எனக்கும் இப்படியே கிருபை செய்திருக்கிறான். இந்தக் கிருபையைத் தவிர வேறொன்றையும் நான் கிருபையாக எண்ணவில்லை.

குறிப்பு— தாம் செய்த சின்ன வியாபாரம் இந்த உபகாரத்துக்குத் தகுந்த காரணமன்று என்று நினைத்து இப்படி ஆழ்வார் அருளிச்செய்கிறார். வியாஜமாகவாவது ஒன்றும் வேண்டாமென்பது அவர் திருவுள்ளமன்று.

இ—ம். வெறிதே - குறிப்பு வினையெச்சம். வெறுமை + து. வெறுமை பண்புப்பெயரானதால் மை கெட்டு உகரம் இகரம் ஆயிருக்கிறது. தெறிபா - தெறியாக, கடைக்குறை. (8)

---

அவ:— கீழ் எட்டுப் பாட்டுக்களாலே சொன்ன விஷயங்களைப் பொதுவான சொல்லால் முடிக்கிறார்—

வயிற்றிற் கொண்டு நின்றொழிந் தாரும்யவரும்
வயிற்றிற் கொண்டு நின்றொரு மூவுலகுந்தம்
வயிற்றிற் கொண்டு நின்றவண்ணம் நின்றமாலை
வயிற்றிற் கொண்டு மன்னவைத்தேன் மதியாலே. (௯)

(ப-ரை) வயிற்றில் கொண்டு நின்ற - வயிற்றில் (தரிப்பித்) கொண்டிருந்த, ஒரு - ஒப்பில்லாத, மூவுலகும் - மூன்று உலகங்களையும், வயிற்றில் கொண்டு நின்றொழிந்தாரும் - தம் உடம்புக்குள்ளே வைத்துக்கொண்டிருந்தவர்களான பிரம்மாக்களையும், யவரும் - அந்த உலகங்களையும், தம் வயிற்றிற்கொண்டு - தன்னுடைய வயிற்றில் (தன்னுடைய ஸங்கல்பத்தின் ஒரு மூலையில்), அடக்கிக்கொண்டு, நின்ற வண்ணம் நின்ற - தானிருந்தபடி இருக்கிற, மாலை - ஸர்வேசுவரனை, மதியாலே - நல்ல அறிவினாலே, கொண்டு - பிடித்துக்கொண்டு, வயிற்றில் - என் மனதில், மன்ன - நிலைபெற்றிருக்கும்படி, வைத்தேன் - (திருடனாக) வைத்துக்கொண்டேன்.

(கருத்து) தன்னிடத்தில் வைத்துக்கொண்டிருந்த அண்டங்களையும், வாயாலே வர்ணிக்கமுடியாதபடி ஆச்சரியமாய்ச்

செய்யப்பட்டிருக்கிற தேவர்களென்றும்மனிதர்களென்றும் மற்றவர்களென்றும் சொல்லப்பட்ட மூன்று உலகங்களைத் தங்களுடைய உடம்புகளில் வைத்துக்கொண்டிருக்கிற பிரம்மாக்களையும் அவர்களின் உடம்புகளிலிருக்கிற மூன்று உலகங்களையும் தன்னுடைய ஸங்கல்பத்தினுடைய ஒரு மூலையில் அடக்கிக் கொண்டு ஒரு களைப்புமில்லாமல் முன்னிருந்தபடியிருக்கிற ஸர்வேசுவரனை நல்ல அறிவினால் பிடித்துக்கொண்டு நான் திருடமாய் மனதில் வைத்துக்கொண்டேன்.

குறிப்பு— பாட்டில் 'மூவுலகும்' என்பது மூன்று விதமான சேதநர்கள். மிருகங்களையும் ஸ்தாவரங்களையும் ஒரு வகுப்பாகப் பண்ணி மூன்று உலகம் என்று பாட்டுச் சொல்லுகிறது. பிரளய காலத்தில் இவைகளுக்குப் பெயரும் உருவமுமில்லாமையால் அந்தக் காலத்தில் அவைகளை ஸமஷ்டிஜீவன்கள் என்று சொல்லுகிறது. ஓர் அண்டத்தில் பிறக்கப்போகிற ஸமஷ்டி ஜீவன்களைத் தன்னுடம்பில் வைத்துக்கொண்டு பிரம்மா எம்பெருமானுடைய நாபீபத்மத்தில் உண்டாகிறான். இதை நினைத்துப் பாட்டு "வயிற்றிற் கொண்டு நின்றொழிந்தாரும்" என்று சொல்லுகிறது. அண்டத்தில் அந்த சேதநர்கள் பிறக்கும்போது அவர்களுக்கு உடம்புகளும் தேவன் மனிதன் என்கிற பேர்களும் உண்டாகிறபடியால் அவர்களை வியஷ்டி ஜீவன்கள் என்று சொல்லுகிறது. அப்போது முன்னே ஒரே வகுப்பாயிருந்தவர்கள் தேவர்கள் மனிதர்கள், மிருகங்கள், ஸ்தாவரங்கள் என்று நான்கு வகுப்புக்களாக ஆகிறார்கள்.

(2) ஒவ்வொரு அண்டத்துக்கும் ஒரு பிரம்மா இருக்கிறான், அண்டங்கள் அநேகங்களாகையாலே பிரம்மாக்களும் அநேகர்கள். இதை நினைத்துப் பாட்டில் பன்மைச்சொல் சேர்க்கப்பட்டிருக்கிறது. (9)

---

வைத்தேன் மதியா லெனதுள்ளத் தகத்தே
எய்த்தே யொழிவே னல்லேனென்று மெப்போதும்
மொய்த்தேய் திரைமோது தண்பாற் கடலுளால்
பைத்தேய் சுடர்ப்பாம் பணைநம் பரனையே. (௰)

(ப-ரை) மொய்த்து - நெருக்கமாய், ஏய் - தகுந்தவைகளான, திரை - அலைகள், மோது - அடிக்கிற, தண் - குளிர்ந்த, பாற்கடலுள், பைத்து - படங்களை விரித்துக்கொண்டு, ஏய்சுடர் - தகுந்த காந்தியையுடையவனான, பாம்பு - திருவனந்தாழ்வானை, அணை - படுக்கையாக உடையவனான, நம்பரனை, எனது - என்னுடைய, உள்ளத்து உள்ளே - மனதுக்குள்ளே, மதியால் - நல்ல அறிவினால், வைத்தேன் - வைத்துக்கொண்டேன், என்றும் - எந்த நாளும், எப்போதும் - அதில் எந்த க்ஷணத்திலும், எய்த்து ஒழிவேன் அல்லேன் - இளைத்து அதினால் (பிரித்து) விடுகிறவன் அல்லேன்.

(கருத்து) அலைகள் மோதுகிற குளிர்ந்த திருப்பாற்கடலுள் படங்களை விரித்துக்கொண்டு காந்தியோடு கூடியிருக்கிற திருவனந்தாழ்வான்மேல் பள்ளிகொண்டிருக்கும் ஸர்வேச்வரனை நல்ல அறிவினால் என் மனதில் நிதியைப்போல் வைத்துக்கொண்டேன். இனி ஒரு நாளும் ஒரு க்ஷணமும் அவனை விடுகிறதில்லை. நான் அவன் ஸ்வபாவத்தை எப்படி அறிந்துகொண்டேன் என்றால், தன்னைத் தவிர எல்லாவற்றையும் தன் ஸங்கல்பத்தின் லேசத்தால் நியமநம் செய்கிற ஸர்வேசுவரன் ஆச்ரிதர்களிடத்தில் இவ்வளவு ஆசை (பிரணயித்வம்) உள்ளவன் என்று அறிந்தேன். இந்த அவனுடைய குணத்தை அவன் திருப்பாற்கடலில் வந்து எல்லாரும் காணும்படி பள்ளிகொண்டிருப்பதாலே அறிந்துகொண்டேன்.

குறிப்பு— மூன்றும் அடியில் 'ஏய்திரை' என்பதற்கு, திருவனந்தாழ்வான் திருமேனியில் அலைகள் மோதும்போது, அதைப் பிடித்துவிடுவதுபோலிருப்பதால், அவைகள் அவன் திருமேனிக்குத் தகுந்தவைகள் என்பது கருத்து.

(2) நான்காம் அடியில் 'ஏய்சுடர்' என்பதற்கு மலர்ந்த கருநெய்தற் காட்டில் நிலா விழுந்ததுபோல், எம்பெருமானுடைய நீலமான திருமேனியில் ஆதிசேஷனுடைய வெளுப்பான காந்தி விழுந்து அதின் சேர்த்தியால் ஓர் அழகை உண்டாக்குவதால் எம்பெருமான் திருமேனிக்கு அவனுடைய உடம்பின் காந்தி தகுந்ததாயிருக்கிறது என்பது கருத்து.

சுடர்ப்பாம் பணைநம் பரனைத் திருமாலை
அடிச்சேர் வகைவண் குருகூர்ச் சடகோபன்
முடிப்பான் சொன்னவாயிரத் திப்பத்துஞ் சன்மம்
விடத்தேய்ந் தறநோக்குந் தன்கண்கள் சிவந்தே. (கக)

(ப-வை) சுடர் பாம்பு அணை - மிகுந்த தேஜஸ்ஸையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய, நம்பரனை - நமக்கு ஸ்வாமியான, திருமாலை - லக்ஷ்மீபதியை, வண் குருகூர் சடகோபன், அடி சேர் வகை - திருவடிகளில் சேரும்படியை, முடிப்பான் - முடிக்க, சொன்ன ஆயிரத்து இ பத்தும், சன்மம் - பிறப்பு (ஸம்ஸாரம்), அற தேய்ந்து விட - முழுவதும் தேய்ந்துவிடும்படியாக, தன் கண்கள் சிவந்து, நோக்கும் - பார்க்கும்.

(கருத்து) மிகுந்த தேஜஸ்ஸையுடைய திருவனந்தாழ்வான் மேலே படுத்துக்கொண்டிருக்கும் லக்ஷ்மீபதியான நம்முடைய ஸ்வாமியைக் குறித்து வண்குருகூர்ச் சடகோபன் அவனுடைய திருவடிகளை அடையும் விதத்தை முடித்துக்கொள்ள ஆசைப்பட்டு அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களும் அவைகளைப் படிக்கிறவர்களுடைய ஸம்ஸாரம் முழுவதையும் சிவந்த கண்களாலே பார்க்கும். அதாவது பார்த்தவுடனே ஸம்ஸாரம் அவர்களை விட்டுவிடும்.

குறிப்பு— நமக்குப் பிராப்பியமானவன் திருவனந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டு பிராட்டியுடன் சேர்ந்த நாராயணன் என்று பாட்டின் முதல் அடியால் காட்டப்படுகிறது.

இ—ம். முடிப்பான் - முடிக்க, வினையெச்சம். (11)

सत्यत्वाद्रक्षकत्वात् [illegible] कारुण्यतो मोह-
नाशात् [illegible] स्वजनकृतनिजात्मप्रदा-
हेतोः । [illegible] सुकृतिषु [illegible]
तानां [illegible] सतां [illegible] स्वजनहृदि
रतो [illegible] ॥ ௯௮ ॥

இந்தத் திருவாய்மொழியில், எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவர்களின் மனதில் பிரீதியுடன் இருக்கிறான் என்பது பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) ஆச்ரிதர் சொன்னபடி வேலை செய்கிறவனாயிருப்பது; (2) அவர்களை ரக்ஷிப்பதையே ஸ்வபாவமாகக் கொண்டிருப்பது; (3) அவர்களுக்குக் கிருபை செய்வதையே மூன்று உலகங்களை நியமநம் பண்ணுவதைக் காட்டிலும் அதிகமாக எண்ணுவது; (4) அவர்களுக்காகக்கோபர்களுக்குள் ஒருவனாய் அவதாரம் செய்தது; (5) இந்திரநீலமலைபோல் அழகாயிருப்பது; (6) தன்னைச் சேர்ந்தவர்களுக்குத் தன்னைக் கொடுக்க ஸமர்த்தனாயிருப்பது; (7) மந்தஹாஸத்துடன் அவர்கள் மனதிலிருப்பது; (8) ஸுக்ருதம் பண்ணினவர்கள் விஷயத்தில் நிர்ஹேதுகமாக கிருபை செய்வது; (9, 10) தன்னைச் சேர்ந்தவர்கள் மனதிலிருந்து விலகாதிருப்பது. (98)

# எட்டாம் திருவாய்மொழி.

அவ:— எம்பெருமான் தன்னுடைய அப்ராக்ருதமான ரூபத்துடனும் திருவாபரணங்களுடனும் திரு ஆயுதங்களுடனும் ஆழ்வார் மனதில் எழுந்தருளி, அவருடன் சேர்ந்திருப்பதைத் தனக்குக் கிடைக்காத லாபமாக எண்ணி ஸந்தோஷப்பட்டான் என்பது கீழ்த்திருவாய்மொழியில் சொல்லப்பட்டது. அதில் எட்டாம் பாட்டில் "சிறியேனுடைச் சிந்தையுள்" என்று ஆழ்வார் சொன்னதைக் கேட்டுப் பயந்தவனாய், "வளவேழுலகில்" இல் (1—5) போல் என்னை உயர்ந்தவனாகவும், தன்னைத் தாழ்ந்தவனாகவும் நினைத்து "தம்மை என்னுடன் சேருவதற்குத் தகுந்தவரன்று" என்று என்னை விட்டு விலகினால் நான் என்ன செய்வது. இவர் இப்படி எண்ணுவதற்குக் காரணம்— அநாதியான அவித்யை, கர்மம், இவை இரண்டினால் உண்டான வாஸனைகள், ருசி, பிரக்ருதியுடன் ஸம்பந்தம், அதினாலுண்டான த்வேஷம், ஆசை, கொழுப்பு, கர்வம், லோபம் மோஹம் ஆகிய இவைகளாலும் இவை போன்றவைகளாலும் ஆத்மாவானது ஸம்ஸாரதசையில் அசுத்தமாயிருப்பது. ஆகையால், "அது ஒருபோதும் ஒரு குற்றமுமில்லாமல் எல்லா நல்ல குணங்களும் நிறைந்த என்னுடன் சேரத் தகுந்ததன்று" என்று எண்ணுகிறார். இந்த எண்ணத்தை நான் போக்கவேண்டுமென்று பார்த்து அவருடைய ஆத்மஸ்வரூபம் இயற்கையாகவே மங்களமாயிருப்பதையும் தம்மை விட்டுப் பிரிக்கமுடியாதபடி எப்போதும் சேர்ந்து தனக்கு விசேஷணமாய் இருப்பதையும், ஸ்படிகத்தில் வைத்த நிதியைப்போல அவருக்குத் தெளிவாய் தெரியும்படி காட்டியருளினான். இதைக் கண்டு ஆழ்வார் அளவில்லாத ஸந்தோஷத்தை அடைந்து தங்கத்தில் வைக்கப்பட்ட ரத்நத்தைப்போலவும், அம்ருதஸமுத்ரத்தில் விழுந்த தேன் துளியைப்போலவும் தாம் அவனுக்கு அநுரூபனாயிருப்பதை இந்தத் திருவாய்மொழியில் அநுபவிக்கிறார்—

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ் சிவந்து கனிந்துள்ளே
வெண்ப லிலகு சுடரிலகு விலகு மகர குண்டலத்தன் [கன்
கொண்டல் வண்ணன் சுடர்முடியன் நான்கு தோளன் குனிசார்ங்
கொண்சங் கதைவா ளாழியா னொருவ னடியே னுள்ளானே. (க)

(ப-ரை) கண்கள் சிவந்து - திருக்கண்கள் சிவந்தும், பெரிய ஆய் - பெரியவைகளாயும் (நன்றாய் மலர்ந்தும்), வாயும் சிவந்து - திருப்பவளமும் சிவந்தும், கனிந்து - பழுத்தும், உள்ளே - அதற்குள்ளே, வெண்பல் - வெளுத்த திருமுத்துக்கள், இலகு - விளங்கியும், சுடர் இலகு - பிரபை விளங்குகிற, விலகு-அசைந்து கொண்டிருக்கிற, மகரகுண்டலத்தன் - மகரகுண்டலங்களை உடையவனும், கொண்டல் வண்ணன் - மழை மேகம்போன்ற வர்ணமுள்ளவனும், சுடர் முடியன் - பிரகாசமுள்ள கிரீடத்தை யுடையவனும், நான்கு தோளன் - நான்கு தோள்களையுடையவனும், குனிசார்ங்கன் - வளைந்த சார்ங்கத்திருவில்லையுடையவனும், ஒண்சங்கு - பிரகாசமுள்ள சங்கம், கதை, வாள் - கத்தி, ஆழியான் - திருவாழி இவைகளையுடையவனுமான, ஒருவன், அடியேன் உள்ளான் - அடியேனுடைய மனதிலிருக்கிறான்.

(கருத்து) எம்பெருமான் என்னுடன் சேர்ந்து, அந்தச் சேர்க்கை நிலையாயிருப்பதற்காகத் தன்னுடைய அளவில்லாத அழகைக்காட்டி என்னை வசப்படுத்திக்கொண்டு என் மனதில் எழுந்தருளியிருக்கிறான். அந்த அழகு எப்படியிருக்கிறதென்றால், என்னை விட்டுப்பிரிந்திருந்தபோது அவனுடைய திருக்கண்கள் வெளுத்திருந்தன. இப்போது என்னுடன் சேர்ந்த ப்ரீதியாலே அவைகள் செந்தாமரைபோல் சிவந்தவைகளாய் மலர்ந்திருக்கின்றன. மந்தஹாஸத்தாலே விளங்குகிற திருப்பவளம் கோவைப்பழம்போல் சிவந்திருக்கிறது. அதற்குள்ளேயிருக்கிற திருமுத்துக்கள் திருப்பவளத்துக்கு ஒரு புது அழகு செய்வதாய் முத்துவரிசைபோலிருக்கின்றன. அதின் அழகை எப்படிச் சொல்லுவேன், மகரகுண்டலங்கள் கொஞ்சம் அசைந்துகொண்டு கன்னங்களின் சோபைக்கு ஆரத்தி பண்ணுகிற ரத்னமயமான தீபங்கள்போல் விளங்குகின்றன. திருமேனி மழைமேகத்தின் வர்ணமுள்ளதாய்க்குளிர்ந்திருக்கிறது. என்னுடன் சேர்ந்து அவன் ஸர்வேச்வரனாயிருப்பது உறுதிப்பட்டபடியாலே அதற்கு அடையாளமாயிருக்கிற கிரீடமும் மிகுந்த காந்தியை அடைந்திருக்கிறது. என்னைக் கட்டிக்கொண்டபிறகு அவனுடைய நான்கு தோள்களும் பருத்து விளங்குகின்றன. வளைந்த வில்லையும், நீலமான திருமேனிக்கு அழகு செய்யும்படி சரத்கால சந்திரனைப்போல் விளங்குகிற சங்கத்தையும்

கதையையும் கத்தியையும் திருவாழியையும் உடையவனாய் மன்மதனுக்கு மன்மதன்போலிருக்கிறான்.

குறிப்பு— 'உள்ளே' என்பதற்கு ஆழ்வார் திருப்பவளத்தின் காந்திப் பிரவாஹத்தின் சுழலில் அகப்பட்டு, உள்ளே போய்த்திருமுத்துக்களின் அழகை அநுபவிக்கமுடியாமல் வெளியிலிருந்து திருமுகத்தின் காந்தியை அநுபவிக்கையில், திருமுத்துக்களின் அழகைக் கையை நீட்டிக் காட்டுகிறார் என்பது கருத்து.

இ—ம். பெரிய - பெரியவைகள்; வினையால் அணையும் பெயர். பெருமை + அ. சங்கு கதை-சங்கதை. தொகுத்தல் விகாரம். (1)

அடியே னுள்ளா னுடலுள்ளா னண்டத் தகத்தான் புறத்துள்ளான்
படியே யிதுவென் றுரைக்கலாம் படிய னல்லன் பரம்பரன்
கடிசேர் நாற்றத் துள்ளாலை யின்பத் துன்பக் கழிநேர்மை
ஒடியா வின்பப் பெருமையோ னுணர்வி லும்ப ரொருவனே. (உ)

(ப-ரை) அண்டத்து அகத்தான் - அண்டத்தில் உள்ளே இருக்கிறவனும், புறத்துள்ளான் - அதுக்கு வெளியில் இருக்கிறவனும், இது படி என்று - இது அவனுக்கு ஒத்தது என்று, உரைக்கலாம்படியன் அல்லன் - சொல்லத் தகுந்தவனல்லனும், பரம்பரன் - உயர்ந்தவர்களுக்குமுயர்ந்தவனும், கடிசேர்-புதுமையோடு கூடின, நாற்றத்துள் - (புஷ்பத்தின்) வாஸனையிலும், ஆலை - தேனிலுமுள்ள, இன்பம் - ஸுகத்தினுடைய, துன்பம் கழி - குற்றம் நீங்கின, நேர்மை-ஸாரமான பாகம்போலிருக்கிற, ஒடியா - ஒடியாத (நடுவில் விட்டுப்போகாத), இன்பம் பெருமையோன் - ஆனந்தத்தின் பெருமையையுடையவனும், உணர்வில் - ஜ்ஞாநத்தில், உம்பர் ஒருவன் - மேலேயிருக்கிறவர்களுக்குள்ளே ஒப்பில்லாதவனுமான எம்பெருமான் அடியேன் உள்ளான் - என்னுடைய மனதிலிருக்கிறான், உடல் உள்ளான்-உடம்பிலுமிருக்கிறான்.

(கருத்து) அண்டத்துக்குள்ளும் அதற்கு வெளியிலுமிருக்கும் வஸ்துக்களுக்கு ஆத்மாவாய்த்தன்னையொத்தாரும் தனக்கு மேற்பட்டவரும் இல்லாதவனும் உயர்ந்தவர்களுக்குள்ளே உயர்ந்

தவனும் புதுமையோடு கூடின புஷ்பங்களின் வாஸனையிலும் அவைகளிலுள்ள தேனிலுமுள்ள ஸுகத்திலே அல்பமாயும் நிலையில்லாததாயும் இருக்கும் பாகங்களைக் கழித்து ஸாரமாயும் எப்போதுமிருப்பதாயுமிருக்கும் பாகத்தைப்போல் அளவில்லாத ஆனந்தத்தையுடையவனும், ஜ்ஞாநத்தில் நித்யர்களுக்கும் முக்தர்களுக்கும் மேற்பட்டவனுமான எம்பெருமான் தன்னுடைய உயர்வையும் என்னுடைய தாழ்மையையும் நினைக்காமல் என்மனதிலிருக்கிறான். இது மாத்திரமோ? என் உடம்பிலுமிருக்கிறான். ஸர்வேச்வரனாயிருக்கிற அவனுக்கு என்னிடத்தில் என்ன அபிநிவேசம்!

குறிப்பு— 'என்னுள்ளான்' என்று சொல்லாமல் 'அடியேனுள்ளான்' என்பதினால் ஆத்மா எம்பெருமானுக்குத் தாஸனாயிருப்பது அவனுடைய மற்ற குணங்களைக் காட்டிலும் சிறந்ததாகையால் ஆத்மாவை அடியேன் என்றே எப்பொழுதும் அநுஸந்திக்கவேண்டுமென்று விளங்குகிறது.

இ—ம். ஒடியா - ஒடியாத, பெயரெச்சம். (2)

---

உணர்வி லும்ப ரொருவனை யவன தருளா லுறற்பொருட்டென்
உணர்வி னுள்ளே யிருத்தினே னதுவு மவன தின்னருளே
உணர்வு முயிரு முடம்பும் மற்று லப்பிலனவும் பழுதேயாம்
உணர்வைப் பெறவூர்ந் திறவேறி யானுந் தானா யொழிந்தானே. (௩)

(ப-ரை) உணர்வில் - ஜ்ஞானத்தில், உம்பர் - மேலேயிருக்கிறவர்களுள், ஒருவனை - ஒப்பில்லாதவனை, (மேற்பட்டவனை), அவனது அருளால் - அவனுடைய கிருபையால், உறல் பொருட்டு - சேருவதற்காக, என் உணர்வின் உள்ளே - (என் இச்சையாகிய) ஜ்ஞானத்தில், இருத்தினேன் - இருக்கும்படி செய்தேன், அதுவும் - அந்த (இச்சையும்) அவனது - அவனுடைய, இன் அருளே - இனிமையான கிருபையே, உணர்வும் - (விஷயங்களின்) அறிவும், உயிரும் - (ஐந்து விதமான காரியங்களைச் செய்யும்) பிராணனும், உடம்பும், மற்று உலப்பிலனவும் - வேறு முடிவில்லாமலிருக்கிறவைகளும், பழுதேயாம் உணர்வை - பிரயோஜனமில்லாதவைகள் என்கிற அறிவை, பெற - தான் அடையும்படி

ஊர்ந்து - நடந்து (வேலை செய்து), இற ஏறி - முடியப் போய், யானும் - நான் என்று சொல்லப்பட்டவன், தானாயொழிந்தான் - தானாக ஆகிவிட்டான்.

(கருத்து) இப்படி எம்பெருமான் என்னிடத்தில் பண்ணுகிற அபிநிவேசத்துக்கு என்ன காரணம் என்றால், அவன் என்னுடன் சேரவேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன். இது தவிர, வேறு காரணத்தை நான் அறியேன். அந்த இச்சையும் அவனுடைய கிருபையினாலேயே வந்தது. அவன் எனக்குச் செய்தது இது மாத்திரமா? விஷயங்களால் உண்டாகும் அநுபவமும் பிராணனும் உடம்பும், இவைகளைக் காட்டிலும் வேறான மனத் அஹங்காரம் பஞ்சபூதங்கள் இந்திரியங்கள் ஆகிய இவைகளும் புருஷார்த்தங்கள் அன்று என்கிற அறிவைஎனக்கு உண்டு பண்ணினான். இதனுடன் நிற்காமல் நான் என்று சொல்லப்பட்டது தன்னை விட்டுப் பிரியாமல் என்னை விசேஷணமாக உடைய தாமே என்கிற அறிவையும், தானே எனக்கு மிகவும் உயர்ந்த புருஷார்த்தம் என்பதையும், அவனுக்குச் சேஷமாயிருப்பதே என்னுடைய ஸ்வபாவம் என்பதையும் காட்டினான்.

குறிப்பு:— (1) உடம்பும் ஆத்மாவும் எப்போதும் சேர்ந்தும் ஆத்மாவுக்கு உடம்பு விசேஷணமாயும் ஆத்மாவுக்காகவே அமைந்திருப்பதாயும் இருக்கிறபடியால் உடம்பைச் சொல்லுகிற சொல் அத்துடன் சேர்ந்திருக்கும் ஆத்மாவையே சொல்லுகிறது. அதுபோலவே ஆத்மாவும் எம்பெருமானும் ஒன்றை விட்டு ஒன்று பிரியாதபடி சேர்ந்தும், அவனுக்கு ஆத்மா விசேஷணமாகவும் அவனுக்காகவே அவனிருப்பதுமாய் இருக்கிறபடியால் ஆத்மாவைச் சொல்லுகிற சொல் எம்பெருமானையே சொல்லுகிறது. ஆகையால் "யான் நான்" என்கிற சொற்கள் அவைகளால் காட்டப்படும் ஆத்மாவுக்கும் ஆத்மாவான எம்பெருமானையே சொல்லுகின்றன. இதை நினைத்துப் பாட்டில், "யானும் தானாயொழிந்தான்" என்று சொல்லுகிறது. இப்படியிருவருக்கும் உறவு இப்போது புதிதாயுண்டாகவில்லை. அது எப்போதும் இருக்கிறது. ஆகையால், இதற்குப் பொருள்— நான் இதை நன்றாய் அறியும்படி காட்டினான்—என்பது.

(2) பாட்டில் "பெற" என்பதற்கு தன்னைத் தவிர, மற்றவைகள் புருஷார்த்தங்கள் அன்று என்கிற ஜ்ஞானத்தைத் தாம்

பெற என்பது பொருள். நானும் அவனும் ஒன்றாயிருப்பதாலே என் வழியாய் அந்த அறிவை அவன் அடைகிறான். அதாவது- அடைகிறவன் நானே. என்னோடு சேர்ந்து ஒன்றாயிருப்ப தாலே அவனும் அடைகிறான் என்று சொல்லலாம்.

(3) எவன் மற்றொருவனுக்காகவே இருக்கிறானோ அவன் சேஷன். மற்றொருவன் சேஷி. ஆத்மா சேஷன்; எம்பெரு மான் சேஷி. எம்பெருமானுக்கு சேஷமாயிருப்பதே ஆத்மா வுக்கு உயர்ந்த ஸ்வபாவம்.

இ—ம். தானாயொழிந்தான் - இதில் 'ஒழி' தேற்றப் பொருள். (3)

---

யானுந் தானா யொழிந்தானை யாதும் யவர்க்கும் முன்னோனைத்
தானுஞ் சிவனும் பிரமனு மாகிப் பணைத்த தனிமுதலைத்
தேனும் பாலுங் கன்னலு மமுது மாகித் தித்தித்தென்
ஊனி லுயிரி னுணர்வினில் நின்ற வொன்றை யுணர்ந்தேனே. (ச)

(ப-ரை) யானும் தானாயொழிந்தானை - நான் என்கிற சொல் லாலே சொல்லப்பட்டவன் தானாகவேயாகிவிட்டவனும், யாதும்- எல்லா அசேதநங்களுக்கும், யாவர்க்கும் - எல்லா சேதநர்களுக் கும், முன்னோனை - முன்னாலிருந்தவனும், தானும் - (விஷ்ணு வாக அவதாரஞ் செய்த) தானும், சிவனும், பிரமனும் - பிரம்மா வும், ஆகி, பணைத்த - பல கிளைகளாய் ஆனவனாய், தனி முதலை - ஒப்பில்லாத காரணமாய், தேனும் பாலும், கன்னலும் - கற்கண் டும், அமுதும், ஆகி, தித்தித்து, என் ஊனில் - என் உடம்பில், உயிரில் - பிராணனுக்குள்ளே, உணர்வில் - ஜ்ஞாநம் என்கிற குணத்திலே, நின்ற - சேர்ந்திருக்கிற, ஒன்றை - விலக்ஷணமான ஒன்றை (ஆத்மஸ்வரூபத்தை), உணர்ந்தேன் - அறிந்தேன்.

(கருத்து) 'நான்' என்கிற சொல்லாலே சொல்லப்பட்ட வனும் தானே என்று எனக்குக் காட்டினதுமாத்திரமன்று; ஸமஷ்டியான அசேதநத்துக்கும் ஸமஷ்டியான ஆத்மாக்களுக் கும் முன்னாலேயிருந்து, கிளைகளில்லாத ஒரு மரம் கிளைகளுள் ளதாய் ஆகிறதுபோல், பிரளயகாலத்தில் பேர்களும் உருவங் களுமில்லாமல் ஒன்றாயிருந்த தாம் பல பேர்களும் பல உருவங்

களுமுள்ள பிரம்மா சிவன் முதலான உலகமாக ஆகி, இப்படி உலகத்துக்கு ஒப்பில்லாத காரணமாயிருந்த எம்பெருமான் தேனும் பாலும் கற்கண்டும் அமிருதமும் சேர்ந்ததுபோல் தன்னுடைய நூபுரம் முதலான திருவாபரணங்கள் எப்படித் தனக்கு இனியவைகளாயிருக்கின்றனவோ அப்படியே என் உடம்பிலும் என் பிராணனிலும் என் ஜ்ஞாநம் என்னும் குணத்திலும் இருக்கும் என் ஆத்மஸ்வரூபம் தனக்கு இனியதாயிருக்கிறதென்று எனக்குக் காட்டினான். அதை நான் அறிந்துகொண்டேன். (4)

---

அவ:— கீழ் இரண்டு பாட்டுக்களில் ஆத்மாவைச் சொல்லுகிற 'யான் நான்' என்கிற சொல்லால் எம்பெருமானைச் சொன்னார். இந்தப் பாட்டிலும் மேற்பாட்டுக்களிலும் ஆத்மஸ்வரூபம் இன்னதென்று காட்டுவதற்காக அதை எம்பெருமானை விட்டுப்பிரித்து அதைக்குறித்தே பேசுகிறார்—

நின்றவொன்றையுணர்ந்தேனுக் கதனுண்நேர்மையதுவிதுவென்று
ஒன்று மோருவர்க் குணரலாகா துணர்ந்து மேலுங் காண்பரிது
சென்று சென்று பரம்பரமாய் யாது மின்றித் தேய்ந்தற்று
நன்று தீதென் றறிவரிதாய் நன்றாய் ஞானங் கடந்ததே. (ரு)

(ப-ரை) நின்ற - நிலையாயிருக்கிற, ஒன்றை - விலக்ஷணமானதை (ஆத்மஸ்வரூபத்தை), உணர்ந்தேனுக்கு - அறிந்த எனக்கு, அதன் - அதனுடைய, நுண் - ஸூக்ஷ்மமான (ஆகையால் அறியமுடியாத), நேர்மை - (விலக்ஷணமான) ஸ்வபாவம், ஒன்றும் - கொஞ்சமும், ஒருவனுக்கும் - எவ்வளவு ஜ்ஞானமுள்ளவனுக்கும், அது - முன்னிலிருந்த வஸ்துவைப்போலிருக்கிறது என்றும், இது என்று - இப்போதிருக்கிற வஸ்துவைப் போலிருக்கிறது என்றும், அறியல் ஆகாது - (ஒருவரிடம் கேட்பதினாலும் அதைப்பற்றி நினைத்துக்கொண்டிருப்பதாலும்) அறிவதுமுடியாது (என்று தோன்றுகிறது). உணர்ந்து-(கேட்டும் நினைத்தும் எப்படியாவது) அறிந்து, மேலும்-யோகத்தைச் செய்துகொண்டிருக்கும்போதும், காண்பது அரிது - பார்ப்பது அருமையானது, சென்று சென்று - (அங்கமயம் முதலானவை

களை ஒன்றின் பின்னல் ஒன்றைவிட்டு) பரம்பரமாய் - முன்னல் முன்னலிருந்ததைக் காட்டிலும் வேறாய், யாதும் இன்றி - அவைகளின் ஸ்வபாவங்கள் ஒன்றுமில்லாமல், தேய்ந்து - மிகவும் ஸூக்ஷ்மமாய், அற்று-அவைகளோடு ஸம்பந்தமில்லாமல், நன்று தீது என்று அறிவு அரிதாய் - இது நல்லது இது கெட்டது என்று அறியமுடியாததாய், நன்றாய் - ஆனந்தமாயிருக்கும், ஞானம் கடந்தது - (விஷயங்களையும் அவைகளின் குணங்களையும் அறியும்) ஜ்ஞானத்தைத் தாண்டினது.

(கருத்து) மற்றவைகள் அழியும்போதும் அழிவில்லாமல் விலக்ஷணமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தை எம்பெருமானுடைய கிருபையினல் நான் அறிந்தேன். அது மிகவும் ஸூக்ஷ்மமாயும் மற்றவைகளைக் காட்டிலும் விலக்ஷணமாயுமிருப்பதாலே எவ்வளவு அறிவுள்ளவர்களும் முன்னல் இருக்கிற வஸ்துக்களைப் போலிருக்கிறதென்றும், இப்போதிருக்கிற வஸ்துக்களைப்போலிருக்கிறதென்றும் ஆசாரியனிடம் கேட்டும், கேட்டதை மனனம் செய்தும் அறியமுடியாது. கேட்டு மனனம் பண்ணியறிந்தாலும் யோகம் செய்து அதை அறிவதும் முடியாது. அது எப்படியிருக்கிறது என்று நான் அறிந்தேன் என்றல், உடம்பையும் பிராணனையும் மனதையும் ஒன்றின் பின்னல் ஒன்றை விட்டுப்போய் அவைகளைக் காட்டிலும் அது வேறாயிருக்கிறதென்றும், அதில் அவைகளின் தோஷங்களில்லையென்றும், அது ஸூக்ஷ்மமாயிருக்கிறதென்றும் அவைகளின் ஸம்பந்தமில்லாமலே தன் வேலையைச் செய்யக்கூடியதென்றும், உலகத்தில் வாஸனையைக் கொண்டு இது புஷ்பம் என்றும், இது சாணி என்றும், ருசியைக்கொண்டு இது ஒட்டு மாம்பழம் என்றும், இது வேப்பங்காய் என்றும், ரூபத்தைக்கொண்டு இது தங்கமென்றும் இது சோழியென்றும் அறிவதுபோல், ஆத்மஸ்வரூபத்தை ரூபம் ரஸம் முதலான குணங்களைக்கொண்டு அறியமுடியாதென்றும், அது ஆநந்தமான வஸ்துவென்றும், உலகத்து வஸ்துக்களையும் அவைகளின் குணங்களையும் அறிவதுபோல் இந்திரியங்களால் அதையறியமுடியாதென்றும் நான் அறிந்துகொண்டேன்.

குறிப்பு— (1) வேதத்தில் உலகத்துக்குக்காரணமாயும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயுமிருக்கிற எம்பெருமானைக் காட்டு

வதற்காக முதலில் அந்நரஸமயம் என்று உடம்பைச் சொல்லி, அதைக்காட்டிலும் வேறாய் அதுக்குள்ளே பிராணமயமென்று ஒன்று இருப்பதாய்ப் பிராணனைச் சொல்லி, அதற்கும் வேறாய் அதற்குள் இருப்பதாய் மனோமயம் என்று மனதைச்சொல்லி அதற்கும் வேறாய் அதற்குள் இருப்பதாய், விஜ்ஞாநமயம் என்று ஒன்றிருக்கிறதென்று சொல்லியிருக்கிறது. இதை நினைத்து "சென்று சென்று" என்று பாட்டு சொல்லுகிறது.

(2) ஆத்மாவை இன்னதென்று காட்டுவதற்காக முதலில் உடம்பைச் சொல்லி அதைக் காட்டிலும் வேறாகப் பிராணனைச் சொல்லி, அதையும் காட்டிலும் வேறாக மனதைச் சொல்லி அதையும் காட்டிலும் வேறாக ஆத்மாவைச் சொல்லியிருக்கிறது. ஆகையால், ஆத்மா, உடம்பு பிராணன் மனது ஆகிய இவைகளைக் காட்டிலும் வேறு.

(3) "யாதுமின்றி" என்பதற்கு, அவைகளின் ஸ்வபாவங்கள் ஆத்மாவுக்குக் கிடையாது என்பது பொருள். உடம்பின் ஸ்வபாவம் பிறப்பதும் வளர்வதும் தேய்வதும் அழிவதுமாம். பிராணனும் மனதும்ஸிருஷ்டிகாலத்தில் வாயுவிலிருந்தும்,ஸாத்துவிக அஹங்காரத்திலிருந்தும் முறையேயுண்டாகி, பிரளய காலத்தில் அழிந்து போகின்றன. இந்த ஸ்வபாவமும் ஆத்மாவுக்கு இல்லை,

(4) நன்று தீதென்று—உலகத்தில் வஸ்துக்களை அவைகளின் குணங்களாலேயே அறியவேண்டியது. அவ்விதமான குணங்கள் ஆத்மாவுக்கு இல்லாமையால் அவைகளைக்கொண்டு அதை அறியமுடியாதென்பது கருத்து.

(5) ஆத்மா அது அன்று இது அன்று என்றுசொல்லப்பட்டது; அது எப்படியிருக்கிறதென்றால், அதின் ஸ்வரூபம் ஜ்ஞானமும் ஆனந்தமுமாயிருக்கிறது. ஆநந்தமாயிருப்பது "நன்றாய் ஞானம்" என்பதால் சொல்லப்படுகிறது. ஆநந்தமென்பது அநுகூலமான ஜ்ஞாநமாகையால் ஜ்ஞாநமும் சொல்லப்பட்டதாயிற்று. (5)

---

நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந் திரியமெல் லாமீர்த்து
ஒன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா முலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே யப்போ தேவீ டதுவே வீடு வீடாமே. (கூ)

(ப-ஸா) ஒன்றாய் கிடந்த - தன்னோடு சேர்ந்திருந்த, அரும்-அருமையான (விலக்கமுடியாத), பெரும் பாழ் - பெரிய பாழ் நிலம்போலிருக்கிற, (பிரகிருதியாகிற) உலப்பிலதனை - முடிவில்லாத அதை, உணர்ந்து உணர்ந்து - (அது தோஷங்களுக்கிருப்பிடமாயிருப்பதை) அடிக்கடி நினைத்து, ஞானம் கடந்து போய் - (அதிலிருந்து உண்டான வஸ்துக்களின்) அறிவில் அகப்படாமல், ஆங்கு - அவைகளின் விஷயத்தில், நன்றாய் சென்று-(அவைகளின் அநுபவத்தில்) இறங்காமல் சுத்தமாய்ப் போய், இன்பம் துன்பங்கள் - அவைகளாலுண்டாகும் ஸுகத்தையும் துக்கத்தையும், செற்று - நாசம் செய்து, களைந்து - நன்றாய் விட்டு விட்டு, நல் ஈ (இ) ந்திரியம் எல்லாம் - நல்ல இந்திரியங்கள் எல்லாவற்றையும், ஈர்த்து - பிளந்து (ஜயித்து), பசை அற்றால் - (அவைகளிலுள்ள) ரஸம் போனால், அன்றே - அந்தத் தினமே, அப்போதே - அந்த முஹூர்த்தத்திலேயே, வீடு - மோக்ஷம், (உண்டாகும்), அதுவே வீடு - அதுவே மோக்ஷம், வீடாம் - அதுவே அடையவேண்டியது.

(கருத்து) யோகத்தினால் ஆத்மஸ்வரூபத்தைப் பார்ப்பது அரியது என்று சொன்னேன். இதற்குக் காரணம் அதைப் பார்ப்பதற்கு வெகு பிரயாஸம் வேண்டியதாகும். அந்தப் பிரயாஸம் எதினால் என்றால், ஆத்மா ப்ரகிருதியுடன் சேர்ந்திருந்ததும், எம்பெருமானுடைய பிரஸாதத்தாலேயல்லாமல் விடமுடியாததும்; அவனுடைய ஸ்வரூபத்தை மறைப்பதும் ஆகிய இவைகளால். அவனுடைய அநுபவத்துக்கு விரோதமாய்ப் பிரகிருதி இருக்கிறது என்றும், அதின் அநுபவம் அல்பமும் நிலையில்லாததும் துக்கத்துடன் கலந்ததுமாயிருக்கிறது என்றும் இந்தத் தோஷங்களை அடிக்கடி பார்க்கவேணும். அதிலிருந்து உண்டான விஷயங்களினுடைய அறிவில் அகப்படாமல் அவைகள் கிட்ட இருப்பதை விலக்கவேண்டும். இப்படிச் செய்தும் தற்செயலாய் அவைகள் தன்னிடம் வந்தால் அவைகளை அநுபவிக்காமல் இருக்கவேண்டும். சாஸ்திர பலத்தினால் சிலவற்றை அநுபவிக்கும்படி நேர்ந்தாலும் அவைகளாலுண்டாகும் ஸுகத்தாலே ஸந்தோஷப்படுவதையும் துக்கத்தால் வருத்தப்படுவதையும் விட்டுவிடவேண்டும். இவ்விதமாக, பாம்புக்கு நல்ல பாம்பு என்று பெயர் வந்ததுபோல் நல்ல இந்திரியங்கள் என்று பெயர்

பெற்று ஆத்மாக்குத் துன்பத்தையே விளைவிக்கிற இந்திரியங்களை ஜயிக்கவேண்டும். இப்படிச் செய்தும், விஷயங்களில் ஸூக்ஷ்மமாகக் கொஞ்சம் பற்று இருக்கும். அதுவும் எந்தத் தினம் போகிறதோ, அந்தத் தினமே அந்த முஹூர்த்தத்திலேயே ஆத்மாவைப் பார்ப்பதற்கு ப்ரதிபந்தகங்களாயிருந்தவைகள் போய்விடும்; அதுவே ஆத்மாவை உள்ளபடி அநுபவிப்பது. இவ்விதமான அநுபவம்தான் மோக்ஷம் அடையும்போது எம்பெருமானுடைய அநுபவத்துடன் சேர்ந்திருக்கும். ஆகையால் அதை மோக்ஷம் என்று சொல்லக் குறையில்.

குறிப்பு— (1) மண் கட்டியில்லை என்றால், குடம் இருக்கிறதென்று பொருள். ஆத்மாவின் அநுபவத்துக்குப் பிரதிபந்தகங்களில்லையென்றால், ஆத்மாநுபவம் வந்திருக்கிறது என்பது பொருள்.

(2) முக்தி தசையில் ஒருவன் தன்னுடைய ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து எம்பெருமானை அநுபவிக்கும்போது அவனுக்கு உடம்பாகத் தன்னையும் அநுபவிக்கிறான். அப்போது அநுபவிக்கிற தன் அநுபவமும் இப்போது யோகத்தாலுண்டாகும் அநுபவமும் ஒரே விதம்தான்.

(3) இப்படி யோகிகளுக்குங்கூட வெகு பிரயாஸத்துடன் அடையக்கூடிய ஆத்மாவின் அநுபவத்தை எம்பெருமான் கிருபையினால் தமக்குக் கொடுத்திருக்கிறான் என்று அவனுடைய ஔதாரியத்தை ஆழ்வார் கொண்டாடுகிறார். (6)

---

அதுவே வீடு வீடுபேற் றின்பந் தானு மதுதேறி
எதுவே தானும் பற்றின்றி யாது மிலிக ளாகிற்கில்
அதுவே வீடு வீடுபேற் றின்பந் தானுமது தேறாது
எதுவே வீடே தின்பமென் றெய்த்தா ரெய்த்தா ரெய்த்தாரே. (எ)

(ப-ரை) அதுவே - ஆத்மாவின் ஸ்வரூபம் தோன்றுவதே, வீடு - மோக்ஷம், வீடு பேற்று இன்பம் தானும் - மோக்ஷத்தை அடைதலால் வரும் ஸுகமும், அது - அதுவே, (என்று) தேறி - தெரிந்து, எதுவே தானும் - எந்தெந்த வஸ்துக்களிலும், பற்று இன்றி - ஸம்பந்தமில்லாமல், யாதும் இலிகள் - அவைகளில் ருசி

யும் வாஸனையுமில்லாதவர்களாக, ஆகிற்கில் - ஆகச் சக்தர்களா ஞல், வீடு - மோக்ஷமும், வீடு பேற்று இன்பம் தானும் - அதை அடைதலால் உண்டாகும் ஸுகமும், அதுவே; அது தேறுது - இந்தவிஷயம் தெரியாமல், எதுவே வீடு-வீடு என்பது எதுவோ? எது இன்பம் - அதிஞலுண்டாகும் இன்பம் எதுவோ? என்று - (ஸந்தேஹப்பட்டு) எய்த்தார் - இளைத்தவர்கள், எய்த்தார் எய்த்தாரே - ஸம்ஸாரத்தில் எப்போதும் உழன்றுகொண்டேயிருப்பவர்களே.

(கருத்து) ஆத்மாவின் மறைந்திருந்த ஸ்வரூபம் தோன்றுவதே மோக்ஷம். அதுவே மோக்ஷம் வந்தபின் வருகிற ஆநந்தமும். இதைத் தெளிவாய் அறிந்து, விஷயங்களோடு உள்ள ஸம்பந்தத்தையும் அவைகளில் உண்டாயிருக்கும் ருசியையும் வாஸனையையும் விடுவதே இந்த இரண்டும். இதை அறியாமல் எவர்கள் அவைகளின் விஷயத்தில் ஸந்தேஹமுள்ளவர்களாயிருக்கிறார்களோ அவர்கள் த்ருடமான மனதில்லாதவர்கள். அவர்கள் ஸம்ஸாரத்தில் எப்போதும் உழன்றுகொண்டே இருப்பார்கள்.

குறிப்பு—(1) ஆத்மாவின் ஸ்வரூபம்தோன்றுவதாவது ஆத்மாவுக்கு எம்பெருமானைப்போல் எட்டுக் குணங்கள் ஸ்வபாவமாயிருக்கின்றன. அவைகள் கர்மத்தால் இப்போது தோன்றுமலிருந்து எம்பெருமானுடைய உபாஸநத்தைச் செய்வதாலே பிரதிபந்தகங்கள் போனல் தானே தோன்றும்; அப்படித்தோன்றுவதுதான் அநிஷ்டம் போவதும் இஷ்டமான ஆத்மாவின் அநுபவம் கிடைப்பதும்,

(2) இதையறிந்து எம்பெருமானுடைய உபாஸநத்தைச் செய்தால் பிரதிபந்தகங்கள் போகும். அவைகளாவன— விஷயங்களின் ஸம்பந்தமும், விஷயங்களிலிருக்கும் ருசியும், வாஸனையுமாம்.

(3) ஐந்தாவது பாட்டில் ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிவதிலிருக்கும் வருத்தமும், ஆருவதுபாட்டில் அதை யோகத்தில் பார்ப்பதிலிருக்கும் வருத்தமும் சொல்லப்பட்டன. யோகத்தில் ஆத்மாவை அநுபவிக்கும்போது அதின் ஸ்வரூபமான எட்டுக் குணங்கள் தோன்றுகிறதில்லை. அவைகள் எம்பெருமானிடம் போன பிற்பாடுதான் தோன்றும், இந்தப்பாட்டில் மறைந்தி

ருந்த ஸ்வரூபம் தோன்றி ஆத்மாவை அநுபவிப்பதிலிருக்கும் வருத்தம் சொல்லப்படுகிறது.

(4) 'ஆகிற்கில்' என்பதால் ஆவதின் அருமை சொல்லப் படுகிறது.

(5) 'எய்த்தார் எய்த்தார்' என்று இரட்டித்தது நிச்ச யத்தைக் காட்டுவதற்காக.

இ—ம். ஆகிற்கில் - ஆ+கில்+கு+இல். கில்-சக்தியைக் காட்டும் இடைச்சொல்; கு-சாரியை; இல்-வினையெச்சவிகுதி.

---

எய்த்தா ரெய்த்தா ரெய்த்தா ரென்றில்லத் தாரும் புறத்தாரும்
மொய்த்தாங் கலறி முயங்கத்தாம் போகும் போதுன் மத்தர்போல்
பித்தே யேறி யநுராகம் பொழியும் போதெம் பெம்மானோடு
ஒத்தே சென்றங் குள்ளங் கூடக்கூடிற் றாகில் நல்லுறைப்பே. (அ)

(ப - ரை) எய்த்தார் எய்த்தார் எய்த்தார் என்று - இளைத் தார் இளைத்தார் இளைத்தார் என்று, இல்லத்தாரும் - (பெண் டாட்டிபிள்ளை முதலான) வீட்டிலிருக்கிறவர்களும்,புறத்தாரும் - வெளியிலிருக்கிறவர்களும்,மொய்த்து - (இறந்துபோகிறவர்களைச் சுற்றிலும்) நெருங்கியிருந்து, ஆங்கு - அந்தத்தசையில், அலறி - அழுதுகொண்டு, முயங்க - அவன்மேலேவிழுந்து கட்டிக்கொள்ள தாம் - தாங்கள் (உடம்பைவிட்டு போகும்போது), உன்மத்தர் போல் - பயித்தியம் பிடித்தவர்களைப்போல், பித்தே ஏறி - மோ ஹமே அதிகமாய், அநுராகம்- (பிள்ளை பெண்டாட்டிகளிடத்தில்) ஆசை, பொழியும்போது - வளரும்போது, எம்பெம்மானோடு - என்னுடைய ஸ்வாமியான எம்பெருமானோடு, ஒத்தே சென்று - ஸமானமாக நடந்து, ஆங்கு - அந்த ஆத்ம வஸ்துவிலே, உள்ளம் - மனது, கூட - சேருவதற்கு, கூடிற்றாகில் - கூடுமேயானால், நல் உறைப்பு - நல்ல வாய்ப்பு (லாபம்).

(கருத்து) வருத்தப்பட்டு எம்பெருமானை உபாஸித்தால்தான் ஆத்மஸ்வரூபம் தோன்றுமென்று சொன்னேன். அதுமாத் திரம் போதாது. ஒருவன் உடம்பைவிட்டுப்போகும் காலத்தில் கடைசி க்ஷணத்தில் எம்பெருமானைப்போலிருக்கும் தன்னுடைய

ஸ்வரூபத்தில் மனதை வைத்து அதை நினைத்துக்கொண்டே போகவேணும். இப்படிச்செய்தால் ஸ்வரூபம்தோன்றுவதாகிய பெரியலாபம் கிடைக்கும். ஆனால், இது செய்வது மிகவும் கஷ்டம். ஏனென்றால், செத்துப்போகிறவனை, இதுவரையில் நமக்கு ஸ்வாதீனமில்லாதிருந்த எல்லாம் நமக்கு ஸ்வாதீனமாகும் என்று நினைக்கிற பெண்டாட்டி பிள்ளை முதலான வீட்டிலிருக்கிறவர்களும், பொறாமையால் செத்தால் நல்லதென்று நினைக்கிற வெளியிலிருக்கிறவர்களும் மொய்த்துக்கொண்டிருக்கிறார்கள். கலியாணத்துக்கு வாராதவர்களும்இப்போது வந்துசேருவார்கள். அவனைக் கூப்பிட்டுக் கூப்பிட்டு முடிந்தான் முடிந்தான் என்று சொல்லுவர்கள். "உன் ஆபத்துக்கு உதவுகிற எம்பெருமானை நினை; உன் ஸ்வரூபத்தை நினை" என்று சொல்லுகிறவர்கள் ஒருவருமில்லை. தங்களுக்கு நேரும்வருத்தத்தையே நினைத்துக்கொண்டு கத்துவர்கள். ஒரு நாழி கழித்து இறந்துபோகிறவன்மேல் விழுந்து உடனே பிராணன் போகும்படி செய்வர்கள். இறந்துபோகிறவன் எப்படியிருக்கிறனென்றால், பயித்தியம் பிடித்தவன்போல் மோஹத்தை அடைந்து தன்னதாக எண்ணிக்கொண்டிருந்தவைகளை நினைத்துக்கொண்டிருந்து தான் ஆசை வைத்தவர்களிடம் ஆசையுள்ளவனாய், தனக்குப் பிறகு அவர்கள் என்ன செய்வார்களோ என்று கவலையுடன் இறந்துபோவன். இந்தக் கஷ்டதசையில் மனது தெளிந்து ஆத்மாவை நினைக்கமுடிந்தால் நல்ல லாபம்தான். அவனுக்கு அவன் ஸ்வரூபம் எப்படித் தோன்றும்.

---

கூடிற் றாகில் நல்லுறைப்புக் கூடா மையைக் கூடினால்
ஆடற் பறவை யுயர்கொடியெம் மாய னாவ தது அதுவே
வீடைப் பண்ணி யொருபரிசே யெதிர்வும் நிகழ்வுங் கழிவுமாய்
ஓடித் திரியும் யோகிகளு முளரு மில்லை யல்லரே. (கூ)

(ப-ரை) கூடிற்றாகில் - (எம்பெருமானுடையவும் ஆத்மாவினுடையவும் ஸ்வரூபங்கள் ஒன்றாகக்)கூடுமாகில், நல் உறைப்பு-அது நல்ல லாபம், ஆடல் பறவை - (ஸந்தோஷத்தினால்) கூத்தாடுதலையுடைய, கருட பக்ஷியை, உயர் கொடி - உயர்ந்த த்வஜமாகவுடையவனை, எம்மாயனாவது - எம்முடைய ஆச்சரியமான ஸ்வாமியாக, (ஜீவன்) ஆவது, கூடாமையை - சேர்ந்திருக்கமுடி

யாதவைகள், கூடினால், (இதுவும் கூடும்). அது அதுவே - ஜீவ ஸ்வரூபம் ஜீவஸ்வரூபமே. ஒரு பரிசு - ஒரு விதமாகவே, வீடை பண்ணி - மோக்ஷத்தை (தன் புத்தியாலே) கல்பித்து, திரியும் - (ஸம்ஸாரத்தில்) அலையும், யோகிகளும், கழிவுமாய் - போன காலத்திலும் (இருந்தார்கள்.) நிகழ்வும்-இப்போதுமிருக்கிறார்கள், எதிர்வும் இல்லையல்லர் - வரும் காலத்திலுமிருக்கமாட்டார்கள் என்பதில்லை.

(கருத்து) இறந்துபோகிறவன் எம்பெருமானுக்கு ஸமமான தன் ஸ்வரூபத்தில் மனதை வைத்துக்கொண்டு போகவேண்டுமென்று சொன்னேன். எம்பெருமானும் ஆத்மாவும் மோக்ஷ தசையில் ஒன்றாகிவிடவில்லையா? என்று சிலர் கேட்கலாம். எம்பெருமானுடைய ஸம்பந்தம் கிடைக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறவனுக்கு அவனுடன் ஒன்றாய்ப்போவது கிடைக்குமானால், அது பெரிய லாபம்தான். அது எப்படிக் கூடும்? இருப்பதும் (பாவம்) இல்லாமையும் (அபாவம்) சேருமானால், கருடனை த்வஜமாக வைத்துக்கொண்டிருக்கிற எம்பெருமானாக ஜீவன் ஆகலாம். ஒரு வஸ்து வேறு வஸ்துவாக ஒரு நாளும் ஆகமாட்டாது. ஜீவன் ஜீவனாகவே இருப்பன்; எம்பெருமான் எம்பெருமானாகவே இருப்பன்; இந்த விஷயத்தை எடுத்துக் காட்டவேணுமோ என்றால், சில யோகிகள் ஒரு ப்ரமாணத்தையும் நம்பாமல் தங்கள் புத்தியாலேயே மோக்ஷமென்பது எம்பெருமானும் ஜீவனும் ஒன்றாவதுதான் என்று சொல்லுகிறார்கள். இப்படிச் சில யோகிகள் இருந்தார்கள். இப்போதுமிருக்கிறார்கள். இனிமேலும் இருக்கலாம். இருக்கமாட்டார்களென்பதில்லை. இந்த மஹாயோகிகள் ஸம்ஸாரத்தில் ஓடியோடிப் பல பிறப்பும் பிறந்து திரிகிறவர்கள்.

குறிப்பு— வேதம் முழுவதும் தன்னையே ஸர்வேச்வரன் என்று சொல்லுகிறதென்று காட்டுவதற்காக எம்பெருமான் எல்லாரும் பார்க்கும்படி வேத ஸ்வரூபனான கருடனைத் தனக்கு அடையாளமாக த்வஜத்தில் வைத்துக்கொண்டிருக்கிறான் என்பது "ஆடல்பறவையுயர் கொடி" என்பதின் கருத்து.

இ—ம். 'கூடாமையை' என்பதில் ஐகாரத்துக்குப் பொருத்தமில்லை. அதைச் சாரியாகக் கொள்ளவேண்டும். (9)

உளரு மில்லை யல்லரா யுளரா யில்லை யாகியே
உளரெம் மொருவ ரவர்வந்தென் னுள்ளத் துள்ளே யுறைகின்றார்
வளரும் பிறையுந் தேய்பிறையும் போல வசைவு மாக்கமும்
வளருஞ் சுடரு மிருளும்போற் றெருளும் மருளு மாய்த்தோமே. (ய)

(ப-ரை) இல்லையாகியே உளராய் - (ஸர்வேச்வரன் என்று ஒருவனில்லை என்கிற ஸாங்கியர்கள் மதத்தில்) இல்லாதவனாக இருக்கிறவனும், இல்லையல்லராய் உளரும் - (அவன் ஸ்ரூபத்தை ஒப்புக்கொண்டு எல்லாரையும் நியமநம் செய்கிற பெருமையில் லாதவனாகச் சொல்லுகிற யோக மதத்தில்) கொஞ்சமுமில்லை யென்று சொல்லப்படாதவனாயிருக்கிறவனுமான, எம் ஒருவர் - எனக்கு ஸ்வாமியான ஒப்பில்லாதவன், உளர் - எனக்குத் தன்னைக் காட்டினான், அவர் வந்து - (தானே) வந்து, என் உள்ளத் துள்ளே - என் மனதிலே, உறைகின்றார் - நிலையாயிருக்கிறான், வளரும் பிறையும் - வளர்கிற சந்திர கலைபோன்ற, ஆக்கமும் - விருத்தியையும், தேய் பிறையும் போல் - தேய்கிற சந்திரகலை போலிருக்கிற, அசைவும் - க்ஷயத்தையும், வளரும் சுடரும் - வளருகிற பிரபையுடைய ஸூர்யன் போலிருக்கிற, தெருளும் - ஜ்ஞானத்தையும், இருளும்போல் - இருட்டைப் போலிருக்கிற, மருளும் - அஜ்ஞானத்தையும், மாய்த்தோம் - நாசம் பண்ணினோம்.

(கருத்து) ஐந்தாவது முதல் நாலு பாட்டுக்களாலே ஆத்ம ஸ்வரூபம் அறியமுடியாதென்றும், மூன்றுவது நான்காவது பாட்டுக்களில் அது எம்பெருமானுக்குச் சேஷம் என்பதும், அநுபவிக்கும்போது அது மிகவுமினியதாயிருக்கும் என்பதும் சொல்லப் பட்டன. இவ்விதமான என் ஆத்ம ஸ்வரூபத்தைப் பார்த்து ஸர்வேச்வரன் என்று ஒருவனில்லை என்கிற ஸாங்கியமதத்திலும், அவன் ஸ்வரூபத்தை ஒப்புக்கொண்டு அவனுக்கு எல்லாரையும் நியமநம் செய்கிற பெருமையில்லை யென்று சொல்லுகிற யோக மதத்திலும் நான் சேராதபடி நம்முடைய ஸ்வாமி தன்னுடைய அளவில்லாத அழகு நல்ல வாஸனை மிருதுவாயிருப்பது யௌவனம் ஆகிய இவைகளையுடைய திருமேனியுடனும், கணக்கில்லாத நல்ல குணங்களுடனும் அப்ராகிருதமான ஆபரணங்களுடனும் ஆயுதங்களுடனும் தன்னை எனக்குக்காட்டியருளினான். இந்தச் சேர்க்கை நிலையாயிருப்பதற்காகத் தானே கிருபையால் என்

மனதில் நிலையாயிருக்கிறான். இனிமேல் சந்திர கலை வளருவதும் தேய்வதும்போல் வளருவதும் தேய்வதுமான பிரதிபந்தகங்களையும், ஸூரியனையுமிருட்டையும்போல மாறி மாறிவருகிற 'நான் எம்பெருமானுக்குத் தகாதவன்' என்கிற எண்ணமும், அவனையும் என்னையும் அறியாமையும் ஆகிய இவைகளையும் கொஞ்சமும் மீதியில்லாமல் போக்கினேன்.

குறிப்பு— வளருவதும் தேய்வதும் ஆத்மாவுக்கு இல்லாமல் போனபோதிலும் அதனுடன் சேர்ந்த உடம்புவழியாக அதுக்கு வரக்கூடும் என்பது கருத்து.

இ—ம். பாட்டில் எம்பெருமானைச் சொல்லுகிற சொற்கள் ஒருமையில் வந்த பன்மைச்சொற்கள். (10)

---

தெருளும் மருளும் மாய்த்துத்தன் திருந்து செம்பொற் கழலடிக்கீழ்
அருளி யிருத்து மம்மானு மயனுஞ் சிவனுந் திருமாலால்
அருளப் பட்ட சடகோப னோரா யிரத்து ளிப்பத்தால்
அருளி யடிக்கீ ழிருத்துநம் மண்ணல் கருமா ணிக்கமே. (கக)

(ப-ரை) தெருளும்-ஜ்ஞானத்தையும், மருளும்-அஜ்ஞானத்தையும், மாய்த்து - நாசம் செய்து, தன் - தன்னுடைய, திருந்து-திருத்தமான (விலக்ஷணங்களான), செம் பொன் கழல்-செம்பொன்னாலே செய்யப்பட்டதண்டையையுடைய, அடி கீழ்-திருவடிகளின் கீழ், அருளி-கிருபை பண்ணி, இருத்தும் - (ஆச்ரிதர்களை) இருக்கும்படி செய்கிற, அம்மானும்-ஸ்வாமியாகவும், அயனும்-பிரம்மாவாகவும், சிவனும் - சிவனாகவுமிருக்கிற, திருமாலால் - லக்ஷ்மீபதியால், அருளப்பட்ட-கிருபை செய்யப்பட்ட, சடகோபன்-ஆழ்வாருடைய, ஓர் ஆயிரத்துள், இ பத்தால் - இந்தப் பத்துப் பாட்டுக்களால், நம் அண்ணல் - நம்முடைய ஸ்வாமியான, கருமாணிக்கம்- இந்திரநீலம் போலிருக்கிற எம்பெருமான், அருளி - கிருபை செய்து, அடி கீழ் - திருவடிகளின்கீழ், (இவைகளைப் படிக்கிற ஆச்ரிதர்களை) இருத்தும் - இருக்கும்படி செய்வன்.

(கருத்து) பிரம்மா சிவன் முதலான எல்லாரையும் நியமனம் செய்கிறவனும், லக்ஷ்மீபதியும், ப்ராக்ருத விஷயங்களைத் தம்முடையதென்று எண்ணுகிற அறிவையும், அவைகள் எம்பெருமானுடைய ஸொத்துக்கள் என்று அறியாமையையும்

நாசம் செய்து, ஆச்ரிதர்களைத் தன்னுடைய விலக்ஷணங்களான செம்பொற்கழல் திருவடிகளின் கீழேயிருக்கும்படி செய்கிறவனும் கருமாணிக்கம்போன்ற திருமேனியையுடையவனுமான ஸ்வாமியால் கிருபை செய்யப்பட்ட ஆழ்வார் சொன்ன இந்தப் பத்துப் பாட்டுக்களையும் அடிக்கடி படிக்கிறவர்களை அந்த ஸ்வாமி தன் திருவடிகளின் கீழே நிலையாயிருக்கும்படி செய்வன்.

குறிப்பு— (1) 'திருந்து' என்பதற்கு, ஆச்ரிதர்கள் வேறொருவரின் காலில் போய் விழாதபடி அவர்களைப் பிரித்து அவர்களுடைய இஷ்டங்களெல்லாவற்றையும் பூர்த்திச் செய்யச் சக்தியுள்ளவைகள் அவன் திருவடிகள் என்பது கருத்து.

(2) "அருளப்பட்ட" என்பதற்கு முதல் திருவாய்மொழியில் முதற்பாட்டில் சொன்னபடி மயர்வறமதிநலம் கொடுக்கப் பட்டவர் என்பது கருத்து.

---

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ஹரி: [illegible] தா³ஸ்யம் [illegible] ||  ||௯௯||

இந்தத் திருவாய்மொழியில், எம்பெருமான் தனக்கு அடிமைகளாயிருப்பது ஆத்மாக்களுக்கு ஸ்வபாவமென்று பத்துக் காரணங்களாலே காட்டுகிறான் என்பது சொல்லப்படுகிறது. அவைகளாவன:— (1) அலங்காரத்துடன் ஆச்ரிதர்கள் மனதில் பிரகாசிப்பது; (2) எங்கும் இருப்பதாலே அண்டங்களிலும் அதற்கு வெளியிலுமிருக்கும்படியான பூர்ணமான மஹிமை; (3) எல்லாருக்கும் மேற்பட்டவனாயிருப்பது; (4) ஆச்ரிதர்களுடைய உடம்பிலும், உடம்பையுடையவர்களிடத்திலும் அவர்களின் ஜ்ஞானத்திலுமிருப்பது; (5, 6, 7) ஆச்ரிதர்கள் தங்கள் ஸ்வரூபத்தை அறியும்படியும் பார்க்கும்படியும் அடையும்படியும் அதனைக் காட்டுவது; (8) அந்திம ஸ்மிருதியாலே அடையப்படுகிறவனாயிருப்பது; (அந்திம ஸ்மிருதி என்பது இறந்துபோகும் காலத்தில்கடைசியிலுண்டாகும் நினைவு); (9) தன்னுடைய ஸ்வரூபமும் எம்பெருமானுடைய ஸ்வரூபமும் ஒன்று என்கிற தப்பு எண்ணத்தை மாற்றுவது; (10) தன்னுடைய அநுபவத்துக்கு விரோதியான ஆத்மா அநர்ஹன் என்கிற அறிவையும், தன்ஸ்வரூபத்தையும் எம்பெருமான் ஸ்வரூபத்தையும் அறியாமையையும் நாசம் பண்ணுவது. (99)

---

# ஒன்பதாம் திருவாய்மொழி.



அவ:— எம்பெருமான் தன் அழகைக் காட்டித் தம்மை வசீகரித்துக்கொண்டு தம்முடன் சேர்ந்ததாலே தமக்கு உண்டான ஸுகத்தைத் தோழி வார்த்தையாலே அருளிச் செய்கிறார்.

(2) இங்கே அழகு என்பது, எம்பெருமானுடைய திருமேனியின் அழகும், ஆழ்வாரின் ஸ்வரூபத்தின் அழகும். அவருடைய ஸ்வரூபம் அவனுடைய ஸ்வரூபத்தை விட்டுத் தனியாக இராததாலும், அது மங்களமாயிருப்பதாலும் அதினுடைய அழகும் எம்பெருமானுடைய அழகுதான். உடம்பின் அழகு ஆத்மாவினுடையதுதானே.

(3) தன் பெண்ணுக்கு யௌவனத்தில் உண்டான அழகைப் பார்த்து, அவளுக்குத் தகுந்த நாயகனைத் தாயார் தேடும்போது, அந்த நாயகியின் ஸ்வபாவத்தையும் அவனுக்குத் தகுந்த நாயகனுடன் உண்டான சேர்க்கையையும் அறிந்த அவள் தோழியானவள் தாயாரைப் போன்ற மனதையுடையவர்களாகத் தன்னைக் காட்டிக்கொண்டு, நடந்த விஷயத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக அறிவிக்கிறாள். அதுபோல ஆழ்வாருக்கு அந்தரங்கரானவர்கள் அவருக்குப் திருப்புலியூர் எம்பெருமானுடன் சேர்க்கையைத் தெரிவிக்கிறார்கள்.

(4) இதுவரையில் அந்யாபதேசமாகப் பேசினது எம்பெருமானைவிட்டுப் பிரிந்து வருத்தப்பட்ட தசையில்தான். இங்கே அவனுடன் சேர்ந்து ஸுகப்பட்ட தசையிலும் அப்படியே பேசுகிறார். எம்பெருமானுடன் சேர்ந்தோ அவனைவிட்டுப் பிரிந்தோ, அவனிடத்தில் அபிநிவேசத்தினால் பரவசமாயிருக்கும்போது தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே சொல்லக் கூடும்.

(5) இந்தப்பெண் திருப்புலியூர் எம்பெருமானுடைய குணங்களுக்கு வசப்பட்டு, அவனைத் தவிர வேறொன்றையும் அறியாள் என்று தோழி சொல்லி, தாய்மார்களை வேறு நாயகனைத் தேடுவதிலிருந்து விலக்க, அவர்களும் "இவளுக்கு அவன் அழகு ஒத்திருக்குமோ" என்று கேட்க, தோழி இதில் பதில் சொல்லுகிறாள்:—

(அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.)

கருமா ணிக்க மலைமேல் மணித்தடந் தாமரைக் காடுகள்போல்
திருமார்வு வாய்கண் கைஉந்தி காலுடை யாடைகள் செய்யபிரான்
திருமா லெம்மான் செழுநீர்வயற் குட்ட நாட்டுத் திருப்புலியூர்
அருமாயன் பேரன்றிப் பேச்சில ளன்னைமீ ரிதற்கென் செய்கேனோ.

(ப-ரை) கரு மாணிக்க மலைமேல் - நீல ரத்நமான ஒரு மலைமேல், மணி தடம்-அழகான ஒரு தடாகத்தில், தாமரைக் காடுகள் போல் - (மலரும்)தாமரை வனம்போல், திரு மார்வு, வாய்-திருப்பவளம், கண்,கை, உந்தி - திருநாபி, கால், உடை, ஆடைகள் - இடுப்பிலிருக்கிற பீதாம்பரம், செய்ய - (இவைகள் எல்லாம்) சிவந்திருக்கிறவனான, பிரான், திருமால் - லக்ஷ்மீபதி, அம்மான் - ஸ்வாமி, செழுநீர் வயல் - செழுமையுள்ள ஜலங்களையுடைய வயல்களால் சூழப்பட்ட, குட்டநாட்டு - குட்டம் என்கிற நாட்டில், திருப்புலியூர் - திருப்புலியூர் என்கிற ஊரில், அரு மாயன் - அருமையாய் ஆச்சரியமாய் எழுந்தருளியிருக்கிறவனுடைய, பேர் அன்றி - திருநாமங்களல்லாமல், பேச்சிலள் - வேறு பேச்சில்லாதவளாயிருக்கிறாள், அன்னைமீர் - தாய்மார்களே! இதற்கு என் செய்கேன். ஓ

(கருத்து) செழுநீர் வயல் சூழ்குட்ட நாட்டில் திருப்புலியூரில் பிரம்மா முதலானவர்களால் கிட்ட முடியாதவனும் ஆச்சரியமான லீலைகளையும் குணங்களையுமுடையவனுமாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய அழகை என்ன சொல்வேன்? நீல ரத்நமாகிய ஒரு மலைமேல் ஒரு தடாகமிருந்து அதில் தாமரைக் காடுகள் மலருவதுபோல் அவனுடைய திருமேனியும் அதைச் சுற்றியிருக்கிற காந்தி மண்டலமும், அதில் தோன்றுகிற சிவந்த திருமார்பும், திருப்பவளமும், திருக்கண்களும், திருக்கைகளும், திருநாபியும், திருவடிகளும், அப்ராக்ருதமான பீதாம்பரமுமிருக்கின்றன. அவனுடைய நல்ல குணங்களைக் காட்டுகிற திருநாமங்களைத் தவிர வேறு ஒரு வார்த்தையையுமிவள் பேசுகிறதில்லை. தாய்மார்களே! இதற்கு நான் என்ன செய்வேன். வேறு ஒரு ராஜகுமாரனுக்கு இவளைக் கொடுப்பது முடியாதது போல் தோன்றுகிறது.

இ—ம்- செய்கேனோ - ஓ என்பதற்கு இரக்கப்பொருள்.

*அவ.— "நாயகிக்குத் தகுந்த அழகு திருப்புலியூர் எம்பெருமானுக்கு இருக்கிறதா ?" என்று கேட்டதற்கு அவனுடைய அவயவங்களின் அழகைக் கீழ்ப் பாட்டில் தோழி சொன்னாள்; இதில், ஆபரணங்களின் அலங்காரத்தாலேயுண்டாயிருந்த அழகைச் சொல்லுகிறாள்:—*

அன்னைமீ ரிதற்கென் செய்கே னணிமே ருவின்மீ துலவும்
துன்னு சூழ்சுடர் ஞாயிறு மன்றியும் பல்சுடர் களும்போல்
மின்னு நீண்முடி யாரம் பல்கலன் றானுடை யெம்பெருமான்
புன்னை யம்பொழில் சூழ்திருப் புலியூர் புகழு மிவளே. (உ)

*(ப-ரை) அணி - அழகான, மேருவின்மீது, உலவும் - ஸஞ்சாரம் பண்ணும் (உதிக்கும்), துன்னு - நெருங்கியிருக்கிற, சூழ் - நாலு பக்கத்திலும் பரவியிருக்கிற, சுடர் - பிரபையையுடைய, ஞாயிறும் - ஸூர்யனும், அன்றியும்-அது தவிர, பல் சுடர்களும் போல் - பல கிரகங்களும் நக்ஷத்திரங்களும் போல், மின்னு - பிரகாசிக்கிற, நீள் - நீண்ட, முடி - கிரீடத்தையும், பல் கலன் - பல ஆபரணங்களையும், தான் - தானாகவே, உடை - உடைய, எம்பெருமான் - எம்பெருமானுடைய, அம் புன்னை பொழில் - அழகான புன்னை மரங்கள் நிறைந்த தோட்டங்களாலே, சூழ் - சூழப்பட்ட, திருப்புலியூர் - திருப்புலியூரை, இவள், புகழும்-ஸ்தோத்ரம்பண்ணிக்கொண்டிருக்கிறாள், அன்னைமீர் ! இதற்கு என் செய்கேன்.*

*(கருத்து) புன்னையம் பொழில் சூழ் திருப்புலியூரில் எழுந்தருளியிருக்குகிற எம்பெருமானுடைய அழகை என்ன சொல்வேன் ? அழகான மேரு மலையின் மேலே துன்னு சுடர் சூழ் ஸூரியனும் மற்றக்கிரஹங்களும் நக்ஷத்ரங்களும்உதித்தது போல், அவனுடைய திருமுடியிலிருக்கும் நீண்ட கிரீடமும், திருமேனியிலிருக்கும் பல திருவாபரணங்களும் விளங்குகின்றன. இவைகள் அவனுக்கு ஸ்வபாவமாக உள்ளவைகள். இந்தப் பெண் அந்த ஊர்த் தோட்டத்தில் பூப்பறிக்கப்போனபோது அவனைக் கண்டு அவனுடைய இயற்கையான அழகையும் ஆபரணங்களாலுண்டான செயற்கை அழகையும் பார்த்து அவற்றில் ஈடுபட்டிருக்கவேண்டும். அதினாலேதான் அவனையே புகழ்ந்து கொண்டிருக்கிறாள். இவளை வளர்த்த உங்களாலும், காத்துக்கொண்டிருக்கிற என்னாலும் இனி என்ன செய்யமுடியும் ?* (2)

அவ:— "அழகு இருந்தால் போதுமா? ஆண்மைத் தனம் அவனுக்கு இருக்கவேண்டாமா?" என்று தாய்மார்கள் கேட்க, அதற்குத் தோழி பதில் சொல்லுகிறாள்—

புகழு மிவணின்றி ராப்பகல் பொருநீர்க் கடற்றீப் பட்டெங்கும்
திகழு மெரியொடு செல்வ தொப்பச் செழுங்கதி ராழிமுதல்
புகழும் பொருபடை யேந்திப் போர்புக் கசுரரைப் பொன்று
திகழு மணி நெடு மாட நீடு திருப்புலியூர் வளமே [வித்தான்

(ப-ரை) பொருநீர்-(அலைகள் ஒன்றோடொன்று)மோதுகிற ஜலத்தையுடைய,கடல்-ஸமுத்ரமானது,தீப்பட்டு-நெருப்புப்பட்டு எங்கும், திகழும் - விளங்கும், எரியொடு - ஜ்வாலையோடு-செல்வது ஒப்ப - நடந்துபோவதை ஒத்திருக்க, செழும் கதிர் - நிறைந்த காந்தியையுடைய, ஆழி முதல் - திருவாழி முதலான, புகழும் - எல்லாராலும் கொண்டாடப்படும், பொரு - சண்டை செய்யும் தன்மையுள்ள(எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற), படை-ஆயுதங்களை, ஏந்தி - ஏந்திக்கொண்டு, போர்-சண்டையில், புக்கு-புகுந்து, அசுரரை-அஸுரர்களை, பொன்றுவித்தான்-கொல்லும்படிசெய்தவனுடைய,திகழும் மணி-விளங்குகிற ரத்நங்களுடைய, நெடுமாடம் - உயர்ந்த வீடுகளையுடைய, நீடு - விஸ்தாரமான, திருப்புலியூர் - திருப்புலியூரினுடைய. வளமே - ஸம்பத்தையே, இவள், நின்று - நிலையாய் (விடாமல்), இராப்பகல் - ராத்திரியும் பகலும், புகழும் - புகழ்ந்துகொண்டிருக்கிறாள்.

(கருத்து) திகழும் மணிமாடநீடு திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய சௌரியத்தையும் வீர்யத்தையும் அன்றோ இவள் சொல்லிக்கொண்டிருக்கிறாள். பொருநீர் ஸமுத்ரமானது நெருப்புப் பிடித்து எங்கும் விளங்கும் ஜ்வாலையோடு ஓடிவந்தால் எப்படியிருக்குமோ, அப்படியே அவனும் சத்துருக்களாலும் கொண்டாடப்பட்டும், எங்கே சண்டை வருகிறது என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற செழுங்கதிர் திருவாழி முதலான ஆயுதங்களைத் திருக்கைகளில் ஏந்திக்கொண்டு அஸுரர்களுடைய சேனைக்குள் ஓடிப் போய்ப் புகுந்து அவர்களை நாசம் செய்வித்தான். கரன் தூஷணன் முதலானவர்களை வதஞ்செய்து திரும்பிவந்த சக்ரவர்த்தித்

திருமகளைப் பிராட்டி கட்டிக்கொண்டதுபோல், இவளும் அவனுடைய வீரஸ்ரீயை நினைத்து அவனிருக்கும் ஊரின் ஸம்பத்தை ராத்திரியும் பகலும் விடாமல் புகழ்ந்துகொண்டிருக்கிறாள். இவள் அவனைப் பாராமலிருந்து அவன் செய்கையை யாராவது சொல்லக்கேட்டிருந்தால் அதை ஒரு தடவை சொல்லுவள்; அதை விடாமல் எப்போதும் சொல்லிக்கொண்டிருக்கிறபடியாலே அவனைப்பார்த்தேயிருக்கவேண்டும்.

குறிப்பு— சௌரியம் என்பது— சத்துருக்களின் ஸேனைக்குள் பயமில்லாமல் புகும்தன்மை. வீர்யம்—அவர்களைக் கொல்லும்தன்மை. (3)

---

அவ:— "அழகும் ஆண்மைத்தனமும் போதுமோ? அவன் குணவானாக இருக்கவேண்டாமா?" என்று அன்னைமார்கள் கேட்க, தோழி பதில் சொல்லுகிறாள்—

ஊர்வ ளங்கிளர் சோலையுங் கரும்பும் பெருஞ்செந்நெலுஞ் சூழ்ந்து
ஏர்வ ளங்கிளர் தண்பணைக் குட்ட நாட்டுத் திருப்புலியூர்
சீர்வ ளங்கிளர் மூவுல குண்டுமிழ் தேவ பிரான்
பேர்வ ளங்கிளர்ந் தன்றிப் பேச்சில ளின்றிப் புனையிழையே. (ச)

(ப-ரை) ஊர்வளம் - ஊரினுடைய ஸம்பத்து, கிளர் - விருத்தியடையும்படியான, சோலையும்-தோட்டங்களும், பெரும் கரும்பும், பெரும் செந்நெலும் - அவைகளைக் காட்டிலுமுயர்ந்திருக்கிற செந்நெல்பயிரும், சூழ்ந்து, ஏர்வளம் - ஏர்களின் அழகானது, கிளர் - விளங்குகிற, தண் - குளிர்ந்த, பணை - வயல்களையுடைத்தான, குட்ட நாட்டு திருப்புலியூர் - அந்த ஊரில், சீர் - நல்ல குணங்களுடைய, வளம் - ஸமிருத்தியானது, கிளர் - உலகமெல்லாம் விளங்கும்படி, மூவுலகு - மூன்று உலகங்களையும், உண்டு, உமிழ் தேவபிரான் - தேவர்களுக்கு அஸுரர்களால் ஆபத்து வந்த காலத்தில் உபகாரம் செய்தவனுடைய, பேர் வளம் - திருநாமங்களுடைய ஸமிருத்தியை, கிளர்ந்து இன்றி - ஸந்தோஷத்தாலே சொல்லியல்லாமல், புனையிழை - அணியப்பட்ட ஆபரணங்களையுடைய இந்த பெண், பேச்சிலள் - வேறு பேச்சைச் சொல்லுகிறாளில்லை.

(கருத்து) ஊர்வளம் தோன்றும்படி சுற்றிலும் தோட்டங்களையும், பெருங்கரும்பையும் அதைக் காட்டிலும் உயர்ந்த செந்நெல்பயிரையும் உடையதாய் ஏர்வளம் விளங்குகிற குளிர்ந்த வயல்களையுடையதாய்க் குட்டநாட்டிலிருக்கும் திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய குணங்களையன்றோ இவள் சொல்லிக்கொண்டிருக்கிறாள். அவனுடைய குணங்களின் ஸம்ருத்தி உலகம் எல்லாம் விளங்கும்படி மூன்று உலகங்களையும் பிரளயகாலத்தில் வயிற்றில் வைத்து ரக்ஷித்து, ஸ்ருஷ்டி காலத்தில் அவைகளை வெளிப்படுத்தி அஸுரர்களாலே தேவர்களுக்கு ஆபத்து வந்த காலத்தில் அவர்களை ரக்ஷிக்கவில்லையா? ஆபத்காலத்தில் உதவுவதாகிய இந்த அவன் குணங்களைச் சொல்லும் திருநாமங்களையே அவள் சொல்லிக்கொண்டிருக்கிறாள். இவைகளைச்சொல்லச்சொல்ல அதினால் ஆபரணம் பூட்டிக்கொண்டதுபோல் அவளுக்கு அழகு உண்டாகிறது. அவள் வேறு பேச்சைப் பேசுகிறதில்லை.

குறிப்பு— ஏர் என்பது— இரண்டு மாடுகள் பூட்டின கலப்பை.

இ—ம். புனையிழை - அன்மொழித்தொகை. (4)

---

அவ:— "அவனுக்கு அழகு முதலானவைகள் இருந்தால் என்ன? அவனை நாம் முன்னால் அறியோம். ஆகையால், வேறு ஒருவனுக்கு இவளைக் கொடுப்பதாக நிச்சயம் பண்ணியாய் விட்டது. இனி என்ன செய்கிறது?" என்று தாய்மார்கள் சொல்ல, தோழி, இவள் மனிதனுக்கு வாழ்க்கைப்படேன் என்று எண்ணியிருக்கிறாளே, தாய்மார்கள் சொன்னபடி செய்தால் இவளையிழந்துபோகும்படி நேரிடுமே என்று பயந்து இனிமேல் உண்மையைச் சொல்லவேணுமென்று தீர்மானம் பண்ணித்திருப்புலியூர் எம்பெருமானுடன் இவளுக்குஉண்டான சேர்க்கையை அறிவிக்கிறாள்—

புனையிழை களணிவு மாடை யுடையும் புதுக்க ணிப்பும்
நினையும் நீர்மை யதன்றிவட் கிதுநின்று நினைக்கப் புக்கால்
சுனையி னுட்டடந் தாமரை மலரும் தண்டிருப் புலியூர்
முனைவன் மூவுல காளி யப்பன் திருவருள் மூழ்கினளே. (டு)

(ப-ரை) புனையிழைகள் - (நம்மால்) பூட்டப்பட்ட ஆபரணங்களினுடைய, அணிவும் - (அழகாகப்) பூட்டிக்கொண்டிருப்பதும், ஆடை உடையும் - வஸ்திரத்தை உடுத்திக்கொண்டிருப்பதும், புதுக்கணிப்பும் - உல்லாஸமும், இவளுக்கு இது - இவளுக்கு உண்டாயிருக்கிற இவைகள், நின்று நினைக்க புக்கால் - நிலையாயிருந்து நினைத்தால், நினையும் நீர்மையது அன்று - நினைக்கத்தகுந்த ஸ்வபாவமுள்ளதன்று. சுனையினுள்-குளத்தில், தடம்-விசாலமான, தாமரை - மலரும், தண் - குளிர்ந்த, திருப்புலியூர் - திருப்புலியூருக்கு, முனைவன்-நாதனை, மூ உலகு ஆளி-மூன்று உலகங்களையும் ஆளுகிற, அப்பன் - ஸ்வாமியினுடைய, திரு அருள் - அழகான கிருபையில், மூழ்கினள் - முழுகியிருக்கிறாள்.

(கருத்து) இவளுக்கு நாம் பூட்டின ஆபரணங்களையும் உடுத்திக்கொண்டிருக்கிற வஸ்திரத்தையும் அவளுடைய உல்லாஸத்தையும் பாருங்கள். இப்போது அவைகளால் இவளுக்கு புதிதாய் ஓர் அழகு உண்டாயிருக்கிறது. இதை இன்னதென்று நாம் நிலையாயிருந்து நினைத்தாலும் நினைக்கமுடியாததுபோலிருக்கிறது. ஆகையால், இவள் சுனையுள் தடம் தாமரைமலரும் திருப்புலியூருக்கு நாதனாய் மூன்று உலகங்களை ஆளுகிற ஸ்வாமியான எம்பெருமானுடன் எல்லாவிதத்தாலும் சேர்ந்து அமிருதஸமுத்ரத்தில் மூழ்கினவள்போல் காணப்படுகிறாள். ஸமுத்ரத்தில் முழுகினவன் போல் இனி இவள் நமக்கு உதவாள்.

குறிப்பு— "தடம் தாமரை" என்பதற்கு, ஒரே பூவானது சுனையெல்லாம் மூடும்படி விசாலமாயிருக்கிறதென்பது கருத்து. (5)

---

அவ:— "இவளுக்கு உண்டாயிருக்கும் உல்லாஸம் யௌவனத்தாலும், ஆபரணங்களைப் பூண்டுகொண்டிருப்பது விளையாட்டான சேஷ்டைகளாலும் உண்டாயிருக்கக்கூடாதோ? இவள் திருப்புலியூர் எம்பெருமானுடன் சேர்ந்ததற்கு வேறு என்ன அடையாளமிருக்கிறது?" என்று தாய்மார்கள் கேட்க, தோழி பதில் சொல்லுகிறாள்.—

திருவருள் மூழ்கி வைகலுஞ் செழுநீர் நிறக்கண் ணபிரான்
திருவருள் களுஞ்சேர்ந் தமைக்கடை யாளந் திருந்தவுள
திருவரு ளருளா லவன்சென்று சேர்தண் டிருப்பு லியூர்
திருவருள் கமுகொண் பழத்தது மெல்லி யல்செவ் விதழே. (௬)

(ப-ரை) செழுநீர் நிறம் - செழுமையுள்ள (நிறைந்த) ஜலத்தையுடைய ஸமுத்திரத்தின் வர்ணத்தையுடையவனான, கண்ணபிரான் - கண்ணனுடைய, திரு அருள்-(பெரிய ஔதாரிய மாகிற) கிருபையில், வைகலும்-எப்போதும், மூழ்கி, திரு அருள் களும்-(சேர்ந்தபிறகு அவன் செய்த)அநுக்கிரஹ பரம்பரைகளை, சேர்ந்தமைக்கு-அடைந்ததற்கு, அடையாளம்-அடையாளங்கள், திருந்த - தெளிவாக, உள - இருக்கின்றன, மெல் இயல் - மிருது ஸ்வபாவமுள்ள இவளுடைய, செவ் இதழ் - சிவந்த தளிர்போ லிருக்கிற திருப்பவளம், திரு அருள் - பெருமை பொருந்திய கிருபையை, அருளால் - செய்வதற்காக, அவன் - அந்த ஸர்வே ச்வரன், சென்று - வைகுந்தத்திலிருந்து வந்து, சேர் - சேரு மிடமான, தண் - குளிர்ந்த, திருப்புலியூர் - திருப்புலியூரிலே, திருவருள் கமுகு - அவனுடைய உயர்ந்த கிருபையாலே வளரு கிற பாக்குமரத்தின், ஒண் பழத்தது - அழகான பழம்போலே இருக்கிறது.

(கருத்து) செழுநீர் ஸமுத்திரத்தின் வர்ணமுள்ளவனும் கண்ணனாக அவதாரம் செய்து கோபிகைகளுக்கு உபகாரம் செய்தவனுமான எம்பெருமானுடைய,தன்னுடன்சேர்க்கையைக் கொடுப்பதற்குத் தகுந்த உயர்ந்த ஔதார்யமாகிய கிருபையில் எப்போதும் முழுகி, அவனுடன் சேர்ந்தபிறகு மேன்மேலும் அவன் செய்யும் கிருபைகளை அடைந்திருக்கிறாள் என்பதற்கு அடையாளங்கள் எல்லாரும் பார்க்கும்படி இருக்கின்றன. அவை களில் ஒன்றைச் சொல்லுகிறேன். அந்த ஸர்வேசுவரன் வைகுந் தத்திலிருந்து வந்து எல்லாருக்கும் 'பெருமை பொருந்தின கிருபையைச் செய்ய, சேர்ந்திருக்கும் குளிர்ந்த திருப்புலியூ ரில் அவனுடைய கிருபையினால் வளருகிற பாக்குமரத்தின் நன்றாய் பழுத்து அழகாயிருக்கும் பழம்போல் இருக்கிறது. மிருதுஸ்வபாவமுள்ள இவளுடைய தளிர்போல் சிவந்த திருப் பவளம். யௌவனத்தாலே இந்த அழகு இவளுக்கு வந்ததா

ளுல், உலகத்திலுள்ள பாக்குமரங்களின் பழம்போலிருக்குமே; இவளுடைய திருப்பவளத்தில் அப்படியில்லாமல் அவனுடைய கிருபையாகிய அமுதவர்ஷத்திஞல் வளருகிற பாக்குமரத்தின் பழத்தின் அழகு இருக்கிறதே. ஆகையால், இவள் அவளு டன் சேர்ந்தேயிருக்கவேண்டும்.

குறிப்பு— (1) 'தண் திருப்புலியூர்' என்பதற்கு அவனு டைய கிருபையாகிய பிரவாஹத்தாலே எப்போதும் புஷ்டி அடைந்திருக்கிற திருப்புலியூர் என்பது கருத்து.

(2) 'திருவருள் அருளாலவன் சென்று' என்றவிடத்தில் 'திரு'என்பதற்கு இது ஸ்தாவரம் இது ஜங்கமம் என்றும், இது குணமுள்ளது, இது குணமில்லாதது என்றும் பார்க்காமல் எல்லா ருக்கும் கிருபை செய்வதாகிய பெருமையையுடையது என்பது கருத்து.

(3) 'திருவருள் கமுகு' என்பதற்கு ஜலத்தால் மாத்தி ரம் வளருவதில்லாமல் அவனுடைய கிருபையிஞலேயும் கமுகு மரங்கள் வளருகின்றன. இப்படியே பிருந்தாவநத்திலும் கண் ணனுடைய நல்ல எண்ணத்தால் மரங்கள் நன்ருய் வளர்ந்தன என்று சொல்லப்படுகிறது. சாப்பிடுகிற ஆஹாரத்துக்குத் தகுந்தபடி உடம்பில் ஒரு சோபையுண்டாகிறதுபோல் எம் பெருமானுடைய கிருபைக்குத் தகுந்தபடி பாக்குமரங்களின் பழங்களுக்கு ஒரு புதிதான அழகு உண்டாயிருக்கிறதென் பது கருத்து. (6)

இ—ம். அருளால்— மூன்ரும் வேற்றுமைக்கு நான்காம் வேற்றுமைப்பொருள்.

அவ:— "இவள் திருப்பவளத்தின் அழகு ஸ்வபாவமா யுள்ளதல்லவா? இது அவனுடன் சேர்ந்ததற்கு அடையாள மாகுமோ? அவன் இவளுடன் சேர்வதற்குத் தகுந்த * பிரண யித்வமுடையவனே" என்று தாய்மார்கள் கேட்க, தோழி பதில் சொல்லுகிருள்—

* பிரணயித்வம் - ஆசையுள்ளவனுயிருக்கும் தன்மை.

மெல்லிலைச் செல்வ வண்கொடிப் புல்க வீங்கிளந்தாள் கமுகின்
மல்லிலை மடல்வாழை யீன்கனி சூழ்ந்து மணங்க மழ்ந்து
புல்லிலைத் தெங்கி னூடு காலுலவுந் தண்திருப் புலியூர்
மல்லலஞ் செல்வக் கண்ணன் தாளடைந்தா ளிம்மட வரலே. (எ)

(ப-ரை) மெல் இலை-மெலிதான இலைகளையுடைய, செல்வம்-மிகவும் அழகான, வண் - உதாரமான, கொடி - வெற்றிலைக் கொடி, புல்க - கட்டிக்கொள்ள, வீங்கு-அதினால் பருத்து, இளம் தாள்-(நாளுக்கு நாள்) இளமையை அடைகிற தாளையுடைய, கமுகின்-பாக்குமரங்களுக்கு(கிட்டே இருக்கிற),மல் இலை-விசாலமான இலைகளையும், மடல் - பூவின் இதழ்களையுமுடைய, வாழை - வாழைகளினுடைய, ஈன் - இனியவைகளான, கனி - பழங்களை, சூழ்ந்து, மணம் கமிழ்ந்து - (அதினால்) வாஸனையையடைந்து, புல் இலை-(வாழைகளைக்) கட்டிக்கொண்டிருக்கிற இலைகளையுடைய தெங்கின் ஊடு - தென்னைமரங்களின் நடுவழியாய், கால்-காற்று, உலவும் - உலாவிக்கொண்டிருக்கும், தண் - குளிர்ந்த, திருப்புலியூர் - திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கும், மல்லல் - மிகுதியையுடைய, அம் - அழகிய, செல்வம் - ஸம்பத்தையுடைய, கண்ணன் தாள் - கண்ணனுடைய திருவடிகளை, இ மடவரல் - இந்தச் சிறுபெண், அடைந்தாள்.

(கருத்து) தண் திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கும் கண்ணனுக்கு மிகவும் உயர்ந்த அழகான பிரணயித்வம் என்கிற ஸம்பத்து இருப்பதைப் பாருங்கள். மெலிதான இலைகளையுடைய மிகவும் அழகான வெற்றிலைக்கொடி ஔதார்யம் என்கிற குணத்தாலே தன்னை முழுவதையும் தனக்குக் கணவனான பாக்குமரத்துக்குக் கொடுத்து, அதைக் கட்டிக்கொண்டிருக்கிறது. அந்தப் பாக்குமரமும் மனைவியாகிய கொடியால் கட்டிக்கொள்ளப்பட்டு, பருத்து அடிமரம் நாளுக்கு நாள் இளையதாக ஆகிறது. இப்படியிருக்கிற பாக்குமரத்துக்கும் வெற்றிலைக்கொடிக்கும் வாழைமரம் மயில் தோகையால் செய்யப்பட்ட சாமரத்தை வீசுவதுபோல் பெரிய இலையை அசைக்கிறது. அதினுடைய பூவின் மடல்கள் இந்தத் தம்பதிக்கு தம்பலம் உமிழுகிற காளாஞ்சிகள் போலிருக்கின்றன. வாழைகளைத் தென்னைமரங்கள் தங்களுடைய இலைகளால் தோழிகளைப்போல்

கட்டிக்கொள்ளுகிறது. காற்றும் வாழைகளின் பழக்குலைகளைச் சூழ்ந்துகொண்டு அவைகளின் வாஸனையை எடுத்துக்கொண்டு தென்னைமரத்தின் இலைகளின்நடுவில் உலாவிக்கொண்டிருக்கிறது. இப்படி அவனுடைய ப்ரணயித்வம் தனக்குள் அடங்காமல் எங்கும் ஓடுகிறபடியால் ஸ்தாவரங்களும் அந்த பிரணயித்வ பிரவாஹத்தில் முழுகி ஒன்றையொன்று கட்டிக்கொண்டு தரித்துக்கொண்டிருக்கின்றன. இவ்விதமான பிரணயித்வத்தையுடைய அவனுடைய திருவடிகளை இந்தச்சிறுபெண் அடைந்திருக்கிறாள்.

குறிப்பு— 'தண் திருப்புலியூர்' என்கிறவிடத்தில் 'தண்' என்பதற்கு, இது ஜங்கமம் இது ஸ்தாவரம் என்கிற பிரிவில்லாமல் ஒவ்வொன்றும் மற்றொன்றினிடத்தில் ஆசையுள்ளதாயிருக்கிறது என்பது கருத்து. (7)

இ—ம். 'இன்கனி' என்பது 'ஈன்கனி' என்று நீண்டது. ஈன்ற கனி என்றும் கொள்ளலாம். அப்படியும் சில வியாக்யானங்கள். (7)

---

அவ:— "அவனுக்கு பிரணயஸ்வபாவம்போல் நல்ல நடவடிக்கையும் இருக்கவேண்டாமோ?" என்று தாய்மார்கள் சொல்ல, தோழி பதில் சொல்லுகிறாள்—

மடவர லன்னைமீர் கட்கேன் சொல்லிச் சொல்லுகேன் மல்லைச்செல்வ
வடமொழி மறைவாணர் வேள்வியுள் நெய்யழல் வான்புகைபோய்
திடவிசும்பி லமரர் நாட்டை மறைக்குந் தண்டிருப் புலியூர்
படவர வணையான் றன்நாம மல்லால் பரவா ளிவளே. (அ)

(ப-ரை) அன்னைமீர்கட்கு - தாயார்களான உங்களுக்கு, என் சொல்லி - எந்தச் சொற்களைச் சொல்லி, சொல்லுகேன் - (அவன் நல்ல நடக்கையுடையவன் என்பதை) சொல்லுவேன், மல்லை செல்வம் - மிகவுமுயர்ந்த (ஆராதநத்துக்கு வேண்டிய) ஸம்பத்தையுடைய, வடமொழி - ஸம்ஸ்க்ருதபாஷைக்கும், மறை - வேதத்துக்கும், வாணர் - நிர்வாஹகரான பிராமணர்கள் (செய்கிற), வேள்வியுள் - யாகங்களில், நெய் அழல் - ஹோமம் பண்ணப்பட்ட நெய்யோடு கூடிய அக்னியினுடைய, வான் புகை - பெரிய புகையானது, போய் - மேலே போய், திட-

திடமான விசும்பில் - ஆகாசத்தில், அமரர் நாட்டை - தேவர்களின் தேசத்தை, மறைக்கும் - மறைக்கும்படியிருக்கிற, தண் - குளிர்ந்த, திருப்புலியூர் - திருப்புலியூரில், பட அரவு - படங்களையுடைய திருவனந்தாழ்வானை, அணையான் தன் - படுக்கையாக உடையவனுடைய, நாமம் அல்லால் - திருநாமங்களைத் தவிர, இவள் பரவாள் - வேறொன்றையும் சொல்லுகிறதில்லை.

(கருத்து) தாய்மார்களே! அவனுக்கு நல்ல நடவடிக்கை இருக்கிறதென்பதை எந்தச் சொற்களாலே உங்களுக்குச் சொல்லுவேன். அதை வாயால் சொல்லமுடியுமோ? அவனுடைய வைதிகஸம்பத்தைப் பாருங்கள். அவனுடைய ஆராதநத்துக்கு வேண்டினபடி மிகவுமுயர்ந்த ஸம்பத்தையுடையவர்களும், ஸம்ஸ்கிருதபாஷைக்கும் வேதத்துக்கும் நிர்வாஹம் செய்கிறவர்களுமான பிராமணர்கள் அவனுக்கு ஆராதநமாகச் செய்கிற யாகங்களில், நெய்யை ஹோமம் பண்ணும்போது, அக்னியிலிருந்து பெரிய புகை கிளம்பி திடமான ஆகாசத்தில் போய்த்தேவர்களுடைய உலகத்தை மறைக்கிறது. இப்படிப்பட்ட வைதிக ஸம்பத்தையுடைய தண் திருப்புலியூரில் அந்த பிராம்மணர்களிடத்தில் பிரீதியினால் எம்பெருமான் நித்தியவாஸம்செய்கிறான். இப்படியிருக்கிற அவன் வ்ருத்தமுள்ளவனாயிருப்பதைப் பற்றி நான் சொல்லவேண்டுமோ? இவள் அவனுடன் சேர்ந்தபோது திருவனந்தாழ்வானாகிய படுக்கையில் படுத்திருந்த அழகை நினைத்து அவனுடைய திருநாமங்களை அக்ரமமாய்ச் சொல்லிக்கொண்டிருக்கிறாள். வேறொன்றையும் சொல்லுகிறதில்லை.

குறிப்பு— 'திடவிசும்பில்' என்கிறவிடத்தில் பூமி முதலான பூதங்களைப்போல் அடிக்கடி மாறாமல் ஒரேவிதமாய் ஆகாசமிருக்கிறதென்பது 'திட' என்பதின் கருத்து.

இ—ம். மல்லை, மல்லல்— மல் - பண்படி; ஐ அல், பண்புப்பெயர் விகுதிகள். பரவாள் - எதிர்மறை வினைமுற்று. (8)

---

அவ:— "நல்ல நடவடிக்கையுண்டாயிருந்தாலும், அதற்குத் தகுந்த தத்வஜ்ஞாநம் வேண்டாமா?" என்று தாய்மார்கள் கேட்க, தோழி பதில் சொல்லுகிறாள்—

பரவா ளிவளின் றிராப்பகல் பனிநீர் நிறக்கண் ணபிரான்
விரைவா ரிசைமறை வேதிய ரொலிவேலை யினின்றோ லிப்ப
கரவார் தடந்தோறுந் தாமரைக் கயந்தீ விகைநின் றலரும்
புரவார் கழனிகள் சூழ்திருப் புலியூர்ப் புகழன்றி மற்றே. (கூ)

(ப-ரை) விரை வார் - வாஸனையைக் கொட்டுகிற, இசை - கானத்தையுடைய (மிகவும் போக்கியமான), மறை-(ஸாம)வேதத்தினுடைய (கோஷமும்), வேதியர் - வேதமறிந்தவர்கள் (அதின் அர்த்தத்தை விசாரிக்கிற), ஒலி - கோஷமும், வேலையில் - ஸமுத்ரம் போல, நின்று - இடைவிடாமல், ஒலிப்ப - சப்திக்க, கரவு - முதலைகள், ஆர் - நிறைந்த, தடம் தொறும் - ஒவ்வொரு குளங்களிலும், தாமரைக்கயம் - தாமரைப்பூவின் கூட்டம், தீவிகை நின்று - தீபங்கள்போல் நின்று, அலரும் - மலரும், புரவு ஆர் - செழுமை பொருந்திய, கழனிகள் - வயல்கள், சூழ் - சூழ்ந்திருக்கிற, திருப்புலியூர் - அந்த ஊரில், பனி நீர் நிறம் - குளிர்ந்த ஜலத்தின் நிறம்போல (நீலமாயும் சிரமத்தைப் போக்குவதாயுமிருக்கிற) நிறத்தையுடைய, கண்ணபிரான் - கண்ணபிரானுடைய, புகழ் அன்றி - கல்யாணகுணங்களைத்தவிர, மற்று-வேறொன்றை இவள், இராப்பகல் - இராத்பகலும், நின்று - நிலையாய், பரவாள் - பிரீதியுடன்

(கருத்து) முதலைகள் நிறைந்திருக்கும்படி ஆழமான ஒவ்வொரு குளத்திலும் தாமரைப்பூக்கள் நிலைவிளக்கு எரிவதுபோல் மலருகிற மேன்மையுள்ள வயல்களால் சூழப்பட்ட திருப்புலியூரில் இருக்கிற பிராம்மணர்கள் மிகவும் போக்கியமான கானத்துடன் கூடிய ஸாமவேதத்தை அத்தியயநம் பண்ணும்போதும், அவர்கள் வேதத்தின் அர்த்தத்தை விசாரம் செய்யும்போதும் உண்டாகும் கோஷமானது இடைவிடாமல் ஸமுத்திரகோஷம்போல் சப்திக்கிறது. இந்த ஊருக்கு நிர்வாஹகனை அவனுக்குத் தத்துவஜ்ஞானமுண்டென்று சொல்ல வேண்டுமோ ? அவனுடைய நல்ல குணங்களைப் பிரீதியுடன்விடாமல் இராப்பகல் முன்னும்பின்னுமாய் இவள் சொல்லிக்கொண்டு இருக்கிறாள். அதைத் தவிர வேறொன்றையும் பேசுகிறதில்லை.

இ-ம்— வேலையில் - இல் என்பதற்கு ஒப்புப் பொருள். இப்படி பன்னீராயிரத்தில் நிர்வாஹம் (9)

*அவ— "சொன்ன குணங்கள் இருந்தாலுமென்ன? ஆரம்பித்த கலியாணத்தை நிறுத்துவது தகுந்தது அன்று" என்று தாய்மார்கள் சொல்ல, தோழி பதில் சொல்லுகிறாள்:—*

அன்றி மற்றோ ருபாயமேன் னிவளந் தண்டுழாய் கமழ்தல்
குன்றமா மணிமாட மாளிகைக் கோலக் குழாங்கள் மல்கி
தென் றிசைத் திலதம் புரைகுட்ட நாட்டுத் திருப்புலியூர்
நின்ற மாயப் பிரான் திருவருளா மிவணேர் பட்டதே (க0)

*(ப - ரை) அன்றி - (மேலே சொல்லப்போவதைத்) தவிர, இவள், (இவளிடத்தில்) அம் - அழகிய, தண் - குளிர்ந்த, துழாய் கமழ்தல் - துளஸி வாஸிப்பதற்கு, மற்று உபாயம் என்-வேறு காரணம் என்ன? குன்றம் - மலைபோல் (உயர்ந்த), மாமணி-உயர்ந்த ரத்நங்கள்இழைத்த, மாடம் - மதிள்களுடையவும் மாளிகை-வீடுகளுடையவும், கோலம் குழாங்கள் - அழகான கூட்டங்கள், மல்கி - அதிகமாய், (அதினால்) தென்திசை - தெற்குத்திக்குக்கு, திலதம்புரை - திலகத்துக்கு ஒத்திருக்கிற, குட்டநாட்டுத்திருப்புலியூர் - அந்தஊரிலே, நின்ற - நித்தியவாஸம் செய்கிற, மாயப்பிரான் - ஆச்சரியமான குணங்களையுடைய உபகாரம் செய்த எம்பெருமானுடைய, திரு அருள்-உயர்ந்த கிருபையை, இவள், நேர்பட்டதாம் - அடைந்ததாக வேணும்.*

*(கருத்து) நான் சொன்னதை நீங்கள் என் நம்பவில்லை, இவள் உடம்பைப் பாருங்கள். அதில் அழகான குளிர்ந்த துளஸியின் வாஸனையிருக்கிறதே. இதற்கு என்ன காரணத்தைச்சொல்லக்கூடும். குன்றமாமணிமாட மாளிகை கோலக்குழாங்களையுடையதும் தெற்குத்திக்குக்குத்திலகம்போலிருப்பதுமான குட்டநாட்டுத் திருப்புலியூரில் நித்தியவாஸம் செய்கிற மாயப்பிரானுடைய உயர்ந்த கிருபையை இவள் அடைந்திருக்கவேண்டும். இதில் ஸந்தேஹமில்லை.* (10)

---

நேர்பட்ட நிறைமூ வுலகுக் குமநா யகன்றன் னடிமை
நேர்பட்ட தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன்சட
நேர்பட்ட தமிழ் மாலை யாயிரத் துள்ளிவை பத்தும் [கோபன்சொல்
நேர்பட்டா ரவர்நேர் பட்டார் நெடுமாற் கடிமை செய்யவே. (கக)

(ப - ரை) நிறைமூவுலகுக்கும் - நிறைந்த மூன்று உலகங்களுக்கும், நேர்பட்ட - நன்றாகவாய்த்த, நாயகன் தன் - ஸ்வாமியினுடைய, அடிமை - கைங்கர்யத்துக்கு, நேர்பட்ட - வாய்த்தவரான, தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் (ஆகிய) சடகோபன் - ஆழ்வாருடைய, சொல் - சொல்லாகிய, நேர்பட்ட - வாய்த்த, தமிழ்மாலை ஆயிரத்துள், இவைபத்தும், நேர்பட்டாரவர் - அடிக்கடி படிக்கிறவர்கள், நெடுமாற்கு - ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ஆசையுள்ள எம்பெருமானுக்கு, அடிமை செய்ய - கைங்கரியம் செய்ய, நேர்பட்டார் - வாய்த்தவர்கள்.

(கருத்து) உலகங்களிலுள்ள சேதனர்களுக்கும் அசேதனங்களுக்கும் வாய்த்த ஸ்வாமியான எம்பெருமானுடைய கைங்கரியத்துக்கு நேர்பட்ட தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் அருளிச்செய்த உலகத்துக்குவாய்த்த ஆயிரம் பாட்டுக்களாகிய தமிழ் மாலையில் இந்தப்பத்துப்பாட்டுக்களை அடிக்கடி படிக்கிறவர்கள் ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ஆசையையுடைய எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதற்கு வாய்த்தவர்களாக ஆவர்கள்.

குறிப்பு— (1) எம்பெருமான் உலகத்துக்கு எப்போதும் ஸ்வாமியாயிருக்க 'நேர்பட்ட நாயகன்' என்று புதிதாக ஏற்பட்டதுபோல் சொன்னதின்கருத்து—அவனுடைய நல்ல குணங்களை அறிந்து நினைக்கிறவர்களுக்கு, அவனுடன் ஸம்பந்தம் ஒவ்வொரு க்ஷணமும் புதிதாய் உண்டானது போலவும் அடையமுடியாத நிதியையடைந்ததுபோலவும் தோன்றும் என்பது.

(2) 'நேர்பட்ட தமிழ் மாலை' என்பதற்கு உலகத்துக்குக் கிடைக்கமுடியாத லாபம் கிடைத்ததுபோல் ஆழ்வாருடைய ஆயிரம் பாட்டுக்கள் இருக்கின்றன என்பது கருத்து.

(3) ஆழ்வார் எம்பெருமானுக்குச் சேஷமாயிருப்பது ஒவ்வொரு க்ஷணமும் அவனுக்குப் புதிதாய்த் தோன்றுகிறது என்றும், அதைக் கிடைக்கமுடியாத நிதியென்று அவன் எண்ணுகிறான் என்றும் நினைத்து 'நேர்பட்ட தொண்டர் தொண்டர்' என்று சொல்லுகிறார்.

(4) 'மாலை' என்பதற்கு, பூமாலையில் புஷ்பங்கள் தொடுத்திருப்பதுபோல், பாட்டுக்கள் ஒன்றோடொன்று அழகாய் சேர்க்கப்பட்டிருக்கின்றன என்பது கருத்து.

(5) ஆழ்வார் தமக்கு எம்பெருமான் செய்தஉபகாரங்களை நினைத்துப் பிரீதராய், அவனுக்குக் கைங்கர்யம் செய்வதில் எல்லை நிலமான பாகவதகைங்கர்யத்தை ஆசைப்படுகிறார் என்பது கருத்து. தொண்டர் என்பதற்கு சபலர் என்பது பொருள். எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதில் எவர்கள் சபலரோ அவர்களுக்குக்கைங்கரியம்செய்வதில் எவர்கள் சபலர்களோ அவர்களுக்குக் கைங்கரியம் செய்வதில் எவர்கள் சபலர்களோ அவர்களுக்குக் கைங்கரியம் செய்வதில் ஆழ்வார் சபலர் என்பது "தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன்" என்பதற்குப் பொருள். (11)

---

[illegible]

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தனக்கு ஆச்ரிதர்கள் செய்யும் கைங்கரியத்தில் அவர்கள் நிலையாயிருப்பதைக் காட்டுகிறான் என்பது பத்துக்காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) தன் திருமேனி விலக்ஷணமாயிருப்பது; (2)கிரீடம் முதலான உயர்ந்தஆபரணங்களுள்ளவனாயிருப்பது(3) தனக்குத்தகுந்த அநேக ஆயுதங்களுள்ளவனாயிருப்பது; (4) பிரளயம் போன்ற ஆபத்காலங்களில் துணையாயிருப்பது; (5) உலகம் பிழைத்திருப்பதற்காக வேலை செய்வது; (6–8) ஆச்ரிதர்களுக்கு உட்பட்டிருப்பதும் ஆதிசேஷன் மேல்படுத்திருப்பதும்; (7–9) அளவில்லாத ஐசுவரிய முள்ளவனுயும், வைதிக ஸம்பத்து உள்ளவனுயுமிருப்பது; (10) ஆச்சரியமான லீலைகளைச் செய்வது.

# பத்தாம் திருவாய்மொழி



அவ— ஆழ்வார் தனக்கே அடிமையாக இருக்கும்படி எம்பெருமான் செய்த உபகாரத்தை நினைத்து பிரீதராய், அந்தப் பிரீதி உள்ளடங்காமல் அவனுடைய அழகையும் ஸௌசீல்யம் என்கிற குணத்தையும் பார்த்து அவைகளிலீடுபட்டு இருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சேஷமாயிருப்பதே தமக்கு மிகவும் உயர்ந்த புருஷார்த்தம் என்று நிர்மானம் செய்து, ஐசுவரியம் முதல் ஸர்வேச்வரனுயிருப்பது வரையிலுள்ள எல்லாப் புருஷார்த்தங்களும் தனித்தனியாகவும் சேர்ந்தும் பாகவதர்களுக்குச் சேஷமாயிருப்பதற்கு ஸமம் அன்று என்று இந்தத் திருவாய்மொழியில் சொல்லுகிறார்.

(2) 'பயிலுஞ் சுடரொளி' இல் (6—7) பாகவதர்களுக்குச் சேஷமாயிருப்பது தம்முடைய ஸ்வரூபத்தைபொட்டி வருகிறதென்று சொன்னுர்; இதில் அதுவே புருஷார்த்தம் என்று சொல்லுகிறார்.

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

நெடுமாற் கடிமை செய்வேன்போ லவனைக் கருத வஞ்சித்து
தடுமாற் றற்ற தீக்கதிகள் முற்றுந் தவிர்ந்த சதிர் நினைந்தால்
கொடுமா வினையே னவனடியா ரடியே கூடு மிதுவல்லால்
விடுமா றென்ப தென்னந்தோ வியன்மூ வுலகு பெறினுமே. (க)

(ப-ரை) நெடுமாற்கு - ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ஆசையையுடைய எம்பெருமானுக்கு, அடிமை செய்வேன் போல், அவனை - எம்பெருமானை, கருத - நினைக்க, தடுமாற்று அற்ற - தடுமாறுதலில்லாத, தீ - நெருப்புப்போன்ற, கதிகள் - புண்யம் பாபம் என்று சொல்லப்பட்ட கர்மங்கள், முற்றும் - முழுமையும், வஞ்சித்து - (கள்ளர் போவதுபோல் ஒருவருக்கும்) தெரியாதபடி, தவிர்ந்த - போய்விட்டன; சதிர் நினைந்தால் - எது தகுந்தது என்று நினைத்துப் பார்த்தால், அவன் அடியார் அடியே, கூடும் இது அல்லால்-சேருவதுதவிர, வியன் - விசாலமான, மூவுலகு - மூன்று உலகங்களை, பெறினும் - பெற்றாலும், கொடு மா வினையேன் - கொடுமையான

பெரிய பாபங்களையுடைய நான், விடும் ஆறு என்பது - அடிமை செய்வதை விடும் பிரகாரம் என்பது. என் -என்ன, அந்தோ - ஐயோ !

(கருத்து) ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ஆசையையுடைய எம்பெருமானுக்கு அடிமை செய்யவேண்டுமென்று இச்சித்தேன். இதனாலேயே தடுமாற்றமில்லாமல் நெருப்பைப்போல் துன்பப்படுத்திக்கொண்டிருந்த புண்ணியம் என்றும் பாபம் என்றும் சொல்லப்பட்ட ஸம்ஸாரிகளின் கர்மங்கள் முழுவதும் திருடர்கள் ஓடிப்போவதுபோல் ஒருவருக்கும் தெரியாத படி போய்விட்டன. எது தகுந்தது என்று நினைத்துப் பார்க்கும்போது, இப்படி ஆசையுள்ள அவனுடைய தாஸர்களுக்கு அடிமையாயிருப்பதே உயர்ந்த புருஷார்த்தம் என்று தோன்றுகிறது. பலவிதமான போகங்கள் நிறைந்து ஆச்சரியமான இந்த மூன்று உலகங்களையும் ஆளுவதாகிய ஐசுவரியமும் இதுக்கு ஸமமாகுமோ ? அதைப் பெற்று இதை விடுவதென்பது எப்படி ? ஐயோ ! இதை நான் நிரூபணம் பண்ண வேண்டுமோ ? இந்த ஐசுவரியம் எவ்வளவு தாழ்ந்தது; அடியார்களுக்கு அடிமை செய்வது எவ்வளவு உயர்ந்தது, இந்த இரண்டும் ஸமம் என்று எவனாவது எண்ணுவனோ என்று ஸந்தேஹப்பட்டு அவைகள் ஸமம் அன்று என்று நான் சொல்லும்படி கொடுமையான பெரிய பாபத்தைப் பண்ணியிருக்கிறேனே.

குறிப்பு— தடுமாற்றற்ற— மோக்ஷத்துக்கு வேண்டிய ஸுக்ருதம் கொஞ்சமுமில்லை; ஆதலால் புண்யங்களும் பாபங்களும் ஒரு விரோதியுமில்லாமல் தங்கள் இஷ்டப்படி துன்பங்களை உண்டுபண்ணுகின்றன என்பது கருத்து. (1)

---

அவ:— கீழ்ப்பாட்டில் பாகவதர்களுக்கு அடிமை செய்வதற்கு ஐசுவரியம் ஸமம் அன்று என்று சொன்னார். ஐசுவரியமும் ஆத்மாவை மாத்திரம் அநுபவிப்பதாகிய கைவல்யமும் சேர்ந்தும் அதற்கு ஸமம் அன்று என்று சொல்லுகிறார்—

வியன்மூ வுலகு பெறினும்போய்த் தானே தானே யானாலும்
புயல்மே கம்போல் திருமேனி யம்மான் புனைபூங் கழலடிக்கீழ்
சயமே யடிமை தலைநின்றார் திருத்தாள் வணங்கி யிம்மையே
பயனே யின்பம் யான்பெற்ற துறுமோ பாவி யேனுக்கே. (உ)

(ப-ரை) வியன் - விசாலமான, மூ உலகு - மூன்று உலகங்களையும், பெறினும் - அடைந்தாலும், போய்-(விஷயங்களால் உண்டாகும் ஸுகத்தில் பற்று இல்லாமல்) போய், தானே தானே ஆனாலும் - தன்னை மாத்திரம் அநுபவிப்பது உண்டானாலும், புயல் மேகம் போல்-மழை மேகம் போன்ற, திருமேனி-திருமேனியையுடைய, அம்மான் - ஸ்வாமியினுடைய, புனை பூம் - அலங்கரித்துக்கொண்டிருக்கிற புஷ்பங்களையும், கழல்-வீரகண்டையையுமுடைய, அடி கீழ்-திருவடிகளின் கீழே, சயமே - (ஸ்வயமே) தானே, அடிமை - அடிமையில் (பரிபூர்ணமான கைங்கரியத்தில்), தலை நின்றார் - நிலையாயிருக்கிற பாகவதர்களுடைய, திரு தாள் - அழகான திருவடிகளை, வணங்கி, இம்மையே - இந்தப் பிறப்பிலேயே, பயனே - பலமாகவேயிருக்கிற, இன்பம் - ஆனந்தத்தை, பாவியேனுக்கு - பாபியான எனக்கு, உறுமோ - சேருமோ ?

(கருத்து) மழை மேகம்போன்ற திருமேனியையுடைய ஸ்வாமியினுடைய புஷ்பங்களாலும் வீரகடகத்தாலும் அலங்கரிக்கப்பட்ட திருவடிகளின் கீழே அவைகளையே பிரயோஜநமாக எண்ணிக்கொண்டு பரிபூர்ண கைங்கரியங்களை நிலையாய்ச் செய்துகொண்டிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுடைய அழகான திருவடிகளை ஸ்வயம்பிரயோஜநமாகவே வணங்கி இந்தச் சரீரத்திலேயே ஆனந்தத்தைப் பாவியேனான நான் அடைந்திருக்கிறேன். இந்த ஆனந்தத்துக்கு மூன்று உலகங்களையடைவதும், விஷயங்களிலுண்டான ஸுகத்தில் பற்றுப்போய்த் தன் ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டிருந்த பிரகிருதியின் ஸம்பந்தத்தை விட்டுத் தன்னை மாத்திரம் அநுபவித்துக்கொண்டிருப்பதும் இந்த இரண்டும் சேர்ந்தாலும் ஸமமாகுமோ ?

குறிப்பு.— 'பாவியேன்' என்பதற்கு, முதற் பாட்டில் "கொடுமாவினையேன்" என்பதைப் போல் பொருள் கொள்ள வேண்டும்.

இ—ம். உறுமோ - ஓகாரத்திற்கு எதிர்மறைப்பொருள். உறுது என்பது பொருள். தலைநின்றார்—தலை இடைச்சொல். (2)

அவ— மோக்ஷமும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அடிமை செய்வதற்கு ஸமம் அன்று என்று சொல்லுகிறார்:—

உறுமோ பாவி யேனுக்கிவ் வுலக மூன்று முடனிறையச்
சிறுமா மேனி நிமிர்த்தவென் செந்தா மரைக்கண் திருக்குறளன்
நறுமா விரைநாண் மலரடிக்கீழ்ப் புகுத லன்றி யவனடியார்
சிறுமா மனிச ராயென்னை யாண்டா ரிங்கே திரியவே. (௩)

(ப-ரை) சிறு மா மனிசராய் - (ஆகாரத்தாலே) சிறியவர்களாய் (மஹிமையாலே)பெரியவர்களான புருஷர்களாய், என்னை ஆண்டார்-என்னை அடிமைகொண்டவர்களான, அவன் அடியார்-ஸ்ரீவைஷ்ணவர்கள், இங்கே திரிய — இந்த லோகத்திலே ஸஞ்சாரம் செய்துகொண்டிருக்க, அன்றி - (அவர்களுக்கு கைங்கரியம் செய்வதைத்)தவிர, இ உலகு மூன்றும் - இந்த மூன்று உலகங்களும், உடன் - ஒரே காலத்தில், நிறைய - நிரம்பும்படி, சிறு - ஆகாரத்தாலே சிறியதாய்; மா - (அழகாலே) பெரிதான, மேனி - திருமேனியை, நிமிர்த்த - வளரும்படி செய்த, என் - எனக்குப் போக்கியமான, செந்தாமரைக்கண், திரு குறளன் - அழகிய வாமநனுடைய, நறு - நல்ல, மாவிரை - பெரிய வாஸனையையுடைய, நாள் மலர் - அப்போது பூத்த பூவைப்போலிருக்கிற, அடி கீழ் - திருவடிகளின்கீழே, புகுதல் - புகுந்திருப்பது, பாவியேனுக்கு - பாபியான எனக்கு, உறுமோ - தகுமோ?

(கருத்து) ஆகாரத்தாலே மற்ற மனிதர்களைப்போல் சிறுவர்களாய், மஹிமையாலே நித்திய ஸூரிகளைக்காட்டிலும் பெரியவர்களாய் என்னை அடிமையாக்கின ஸ்ரீ வைஷ்ணவர்கள் இந்த உலகத்தில் ஸஞ்சாரம் செய்துகொண்டிருக்கையில், அவர்களுக்கு அடிமை செய்வதை விட்டு, இந்த மூன்று உலகங்களும் ஒரே காலத்தில் நிறையும்படி ஆகாரத்தாலே சிறியதாய் அழகால் பெரிதாயிருந்த திருமேனியை வளரும்படிசெய்த செந்தாமரைக் கண்ணையுடைய வாமனனாகிய என் ஸ்வாமியின் நறுமாவிரை நாண் மலர்திருவடிகளின் கீழே, வைகுந்தத்துக்குப்போய் புகுந்திருப்

பது பாவியான எனக்கு தகுமோ? வைஷ்ணவர்களுக்குக்கைங்கரியத்தோடு முடிகிற எம்பெருமானுடைய கைங்கரியத்துக்கு, எம்பெருமானுடைய கைங்கரியம் மாத்திரம் ஸமமாகுமோ? பாவியேன் இதை நிரூபணம் பண்ணவேண்டுமோ. (3)

அவ:— "பாகவதர்களுக்குக் கைங்கரியம் செய்வதாகிய புருஷார்த்தத்தை விருத்தி பண்ணுவது எம்பெருமானுடைய அநுபவம்தானே; அது பூர்ணமாககிடைப்பதற்கு வைகுந்தத்துக்குப்போகவேண்டாமோ?" என்கிற கேள்விக்குப்பதில் சொல்லுகிறார்—

இங்கே திரிந்தேற் கிழுக்குற்றே னிருமா நிலமுன் னுண்டுமிழ்ந்த
செங்கோ லோத்த பவளவாய்ச் செந்தா மரைக்க ணென்னம்மான்
பொங்கேழ் புகழ்கள் வாயவாய்ப் புலன்கோள் வடிவென் மனத்ததாய்
அங்கேய் மலர்கள் கையவாய் வழிபட் டோட வருளிலே. (௪)

(ப-ரை) இரு - விசாலமான, மா - பெரிய, நிலம் - பூமியை, முன் - பிரளயகாலத்திலே, உண்டு, உமிழ்ந்த, செம் - சிவந்த, கோலத்த - அழகையுடைய, பவள வாய் - பவழம் போன்ற திருப்பவழத்தையும், செந்தாமரை கண் - செந்தாமரைக்கண்களையுமுடைய, என் அம்மான் - என் ஸ்வாமியினுடைய, பொங்கு ஏழ் - பொங்கி வளருகிற, புகழ்கள் - நல்ல குணங்கள், வாயவாய் - என் வாயில் இருப்பவைகளாயும், புலன் கொள் - இந்திரியங்களை அபஹரிக்கும், வடிவு-திருமேனி, என் மனத்ததாய் - என் மனதிலிருப்பதாயும், அங்கு ஏய் மலர்கள் - அந்தத் திருமேனிக்குத் தகுந்த புஷ்பங்கள், கையவாய் - என் கைகளிலிருப்பவைகளாயும், வழி பட்டு - ஸ்ரீவைஷ்ணவர்கள் நடந்து கொண்டிருக்கிற வழியில் நடந்து, ஓட - மேல்மேலும் அதிகமாக நடக்கும்படி, அருளில் - அவன் கிருபை செய்தால், இங்கே திரிந்தேற்கு - இங்கே உலகத்திலேயே திரிகிற எனக்கு, இழுக்குற்று என் - குறைவு என்ன?

(கருத்து) எம்பெருமானுடைய அநுபவம் இங்கேயே பூர்ணமாய்க் கிடைக்கலாம். மோக்ஷத்துக்கு வேண்டிய உபாயத்தை ஜீவன்கள் செய்யத்தகுந்தவைகளாய் விசாலங்களாய்

இருக்கிற உலகங்களை, பிரளயமாகிய ஆபத்து வந்த காலத்தில் தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்து ஸிருஷ்டிகாலத்தில் போகத்தையும் மோக்ஷத்தையும் ஜீவன்கள் ஸம்பாதிக்கும்படி அவைகளை வெளிப்படுத்தி, இப்படி எல்லா விதமாயும் ஹிதத்தைச் செய்கிறவனும் செங்கோலத்த பவளவாயையும் செந்தாமரைக் கண்களையுமுடையவனுமான என் ஸ்வாமியினுடைய பொங்கி விருத்தியாகிற நல்ல குணங்களை வாயாலே சொல்லி, இந்திரியங்களை இழுக்கும்படியான அழகான திருமேனியை மனதாலே நினைத்து, அவன் திருவடிகளில் ஸமர்ப்பிக்கத்தகுந்த புஷ்பங்களைக் கைகளில் வைத்துக்கொண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் நடந்து கொண்டிருக்கிற நல் வழியிலிருந்துகொண்டு மேன்மேலும் கைங்கரியம் செய்யும்படி அவன் கிருபை செய்யவேணும். அப்படி அவன்செய்தால் இந்த உலகத்தில் திரிந்துகொண்டிருக்கிற எனக்கு அவன் அநுபவத்தில் என்ன குறைவு இருக்கும்?

இ—ம். இழுக்குற்று - இழுக்கு + உற்று. இழுக்கு - குற்றம். அதை அடைதல். பொங்கேழ்—பொங்கு + வழ் எழு; என்பது ஏழ் எனத் திரிந்தது (4)

அவ'— பாகவதர்களுக்குச் சேஷமாயிருப்பதை விருத்தி பண்ணுகிற எம்பெருமானுடைய அநுபவத்தில் பிரீதியானது அதற்கு விரோதியான ஸம்ஸாரத்திலிருப்பவர்களுக்கு உண்டாகுமோ? என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார்—

வழிபட் டோட வருள்பெற்று மாயன் கோல மலரடிக்கீழ்
சுழிபட் டோடுஞ் சுடர்ச்சோதி வெள்ளத் தின்புற் றிருந்தாலும்
இழிபட் டோடு முடலினிற் பிறந்து தன்சீ ரியான்கற்று
மொழிபட் டோடுங் கவியமுத நுகர்ச்சி யுறுமோ முழுதுமே. (ரு)

(ப-ரை) வழிபட்டு-வழியிலே இருந்து (ஸ்வரூபத்திற்குத் தகுந்ததான கிடைக்கவேண்டிய கைங்கரியத்தைப் பெற்று), ஓட-முடிவில்லாமல் அதைச் செய்யும்படி, அருள் பெற்று-(எம்பெருமானுடைய) கிருபையையடைந்து, மாயன்-ஆச்சரியமான அழகு முதலானவைகளையுடைய அவனுடைய, கோல மலர் - அழகான புஷ்பம்போலிருக்கிற, அடி கீழ்-திருவடிகளின் கீழே, சுழிபட்டு

ஓடும் - ஆறுகளைப்போல் சுழல்கள் உள்ளதாய் ஓடும், சுடர் - பிரபையையுடைய, சோதிவெள்ளத்து - ஜ்யோதிஸாகிய பிரவாஹத்தில் (வைகுந்தத்தில்), இன்பு உற்று - ஆநந்தத்தையடைந்து, இருந்தாலும், முழுதும் - கீழ்ச்சொன்ன எல்லாம் சேர்ந்தாலும் இழிபட்டு ஓடும்-தாழ்மையாய் ஓடிக்கொண்டிருக்கிற, உடலினில்- உடம்புடன், பிறந்து, தன் சீர் - எம்பெருமானுடைய நல்ல குணங்களை, யான் கற்று - நான் இடைவிடாமல் அநுபவித்து, மொழிபட்டு - (அதின் பிரீதியாலே) சொற்களைக் கொண்டு, ஓடும் - மேன்மேலும் நடக்கிற, கவி அமுதம் - பாட்டுக்களாகிய அமுதத்தை, நுகர்ச்சி - பானம் பண்ணுகையை (அநுபவிக்கையை), உறுமோ - (தகுந்ததாகச்) சேருமோ?

(கருத்து) ஸ்வரூபத்துக்குத் தகுந்த கைங்கரியத்தைப் பெற்று, அதை முடிவில்லாமல் செய்துகொண்டிருக்கும்படி எம்பெருமானுடைய கிருபையை அடைந்து, ஆறுகளிலுண்டாகும் சுழல்போல் சுழல்களையும் காந்தியையுமுடைய சோதிவெள்ளம் ஓடிக்கொண்டிருக்கிற வைகுந்தத்திற்குப் போய், அவனுடைய கோலமலர்த் திருவடிகளின்கீழேயிருந்து ஆநந்தத்தை அநுபவித்தாலும், அதுவும், கீழே சொன்ன ஐசுவரியமும் கைவல்யமும் சேர்ந்து, மிகவுமிளப்பமான உடம்புடன் பிறந்து நான் அவனுடைய நல்ல குணங்களை இடைவிடாமல் அநுபவித்து அதினுலுண்டான பிரீதியாலே சொற்களைக்கொண்டு அவனைப் பாடுவதாகிய அமுதத்துக்குத் தகுந்தவைகளாக ஆகுமோ? எம்பெருமானுடைய அநுபவத்தில் பிரீதியுண்டாவதற்கு ஸம்ஸாரம் விரோதிதான். அந்த விரோதத்தை அவனுடைய கிருபை போக்கும். திருவாய்மொழியைப் பாடுவதும் அதே வேலையைச் செய்யும். எம்பெருமான் அநுபவத்தில் பிரீதியுமுண்டாகும். அப்போது ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கைங்கரியமும் செய்யமுடியும். ஆகையால், திருவாய்மொழியைப் பாடுகிற அமுதத்துக்கு ஸமமானது ஒன்றுமில்லை.

இ—ம். சீர்+யான், சீரியான். அநுபந்தம் 2, 10-வது பாராவைப் பார்க்க. (5)

---

அவ:— இப்படி நடுவிலுண்டான ஸந்தேஹங்களை நாலாவது ஐந்தாவது பாட்டுக்களாலே தீர்த்து, ஸ்ரீவைஷ்ணவர்

களுக்குக் கைங்கரியம் செய்வதாகிய ஆநந்தத்துக்கு, ஜீவனுக்கு மோக்ஷத்தில் உண்டான ஆநந்தமும், எம்பெருமானுக்கு எல்லா உலகங்களையும் நியமநம் செய்வதால் உண்டாகும் ஆநந்தமும் சேர்ந்து ஸமமாக ஆகா என்று சொல்லுகிறார்—

நுகர்ச்சி யுறுமோ மூவுலகின் வீடு பேறுதன் கேழில்
புகர்ச்செம் முகத்த களிறட்ட பொன்னா ழிக்கையென் னம்மான்
நிகர்ச்செம் பங்கி யெரிவிழிகள் நீண்ட வசுர ருயிரெல்லாம்
தகர்த்துண் டுழலும் புட்பாகன் பெரிய தனிமாப் புகழே. (௬)

(ப - ரை) தன் கேழ் இல் - தனக்கு ஒப்பில்லாத, புகர் - (மதத்தின் மிகுதியாலேயுண்டான) காந்தியையும், செம்முகத்த - (கோபத்தாலே) சிவந்த முகத்தையும் உடைய, களிறு-(குவலயா பீடம் என்கிற) யானையை, அட்ட-கொன்ற, பொன் ஆழி கை - அழகான மோதிரங்களுள்ள கையையுடையவனும், என் அம்மான், நிகர் - தங்களுக்குத்தகுந்த, செம் - சிவந்த, பங்கி - முன்னும் பின்னும் தொங்குகிற மயிர்களையும், எரி விழிகள் - நெருப்பு போன்ற கண்களையும், நீண்ட - மிகவும் நீண்ட உடம்புகளையும் உடைய, அசுரர் - அசுரர்களுடைய, உயிர் எல்லாம், தகர்த்து - பிடித்து, உண்டு - நாசஞ்செய்து, உழலும்-(இதுவே வேலையாக) ஸஞ்சாரம் செய்யும், புள்-கருடனுக்கு, பாகன்-பாகனாயிருப்பவனுமான ஸர்வேசுவரனுடைய, பெரிய-அளவிடமுடியாத, தனி-ஒப்பற்ற, மா - மிகவுமினியவைகளான, புகழ் - புகழை, நுகர்ச்சி-பானம்பண்ணுகையை (ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸந்தோஷப் படும்படி திருவாய்மொழியாலே அநுபவிப்பதை), வீடு - மோக்ஷமாகிய ஆநந்தமும், மூ உலகின் - மூன்று உலகினுடைய, பேறு - பெறுகையும் (அவைகளையுண்டு பண்ணுவதான பெருமையும்), உறுமோ - தகுந்தவைகளாகச் சேருமோ?

(கருத்து) ஒப்பில்லாத புகர்ச் செம்முகத்தையுடைய குவலயா பீடம் என்கிற யானையை மோதிரங்களைத் தரித்துக்கொண்டிருக்கிற தன்கையால் கன்னத்தில் அடித்தவனும், மோதிரங்களும் கையுமான அழகைக் காட்டி என்னை அடிமையாக்கிக்கொண்டவனும், நிகர் செம்பங்கி எரிவிழிகள் நீண்ட அஸுரர்களுடைய உயிர்களைப்பிடித்து நாசம் செய்வதையே வேலையாகக்கொண்டு ஸஞ்சாரம் செய்கிற கருடனுக்குப் பாகனுமான ஸர்வேசுவரனுடைய

பெரிய தனிமாப்புகழ்களை, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸந்தோஷமுண்டாகும்படி திருவாய்மொழியால் பாடுவதாகிய அவர்கள் கைங்கரியத்தைச் செய்து அடையும் ஆநந்தத்துக்கு ஒருவன் மோக்ஷம் அடைந்து அடையும் ஆநந்தமும், உலகங்களையுண்டு பண்ணி எம்பெருமான் அடையும் ஆநந்தமும் சேர்ந்து ஸமமாகுமோ? (6)

---

அவ— இங்கே இப்போதே ஸ்ரீவைஷ்ணவர்களின் கைங்கரியத்தையும் அதை விருத்திபண்ணும்படியான எம்பெருமானுடைய அநுபவத்தையும் நான் பெற்றிருக்கிறேன். வைகுந்தத்துக்குப்போய், அவனை அநுபவிப்பது இதற்கு விரோதியாகையால் அது எனக்கு வேண்டாம் என்று அருளிச்செய்கிறார்:—

தனிமாப் புகழே யெஞ்ஞான்றும் நிற்கும் படியாத் தான்றோன்றி
முனிமாப் பிரம முதல்வித்தா யுலக மூன்றும் முளைப்பித்த
தனிமாத் தெய்வத் தளிரடிக்கீழ்ப் புகுத லன்றி யவனடியார்
நனிமாக் கலவி யின்பமே நாளும் வாய்க்க நங்கட்கே. (எ)

(ப - ரை) தனி - ஒப்பில்லாத, மா-ஸிலாக்கியமான, புகழே- கீர்த்தியையே, எஞ்ஞான்றும் - எப்போதும், நிற்கும்படியா - (வேதாந்தங்களால் கொண்டாடப்பட்டு) நிலைபாய் நிற்கும்படி, தான்-தானே (ஜீவன்கள் பிரயத்தினங்களில்லாமலே), தோன்றி- (ஸிருஷ்டிசெய்ய மனமுடையவனாய்) தோன்றி, முனி-(நாமங்களையும் ரூபங்களையும் உடைய உலகங்களாக ஆவேன் என்று) ஸங்கல்பம்செய்த, மா பிரமம் - பரப்பிரம்மம் என்று வேதங்களிலே சொல்லப்படுகிற வஸ்துவான, முதல் வித்தாய்-எல்லாவற்றுக்கும் முதலான உபாதாநகாரணமும், உலகம்மூன்றும் - மூன்று உலகங்களையும், முளைப்பித்த-முளைக்கும்படிசெய்த (தன்னிடத்திலிருந்து வெளியே வரும்படி செய்த) தனி - ஒப்பில்லாத, மா தெய்வம் - பெரியதெய்வமுமான எம்பெருமானுடைய, தளிர் அடி கீழ்-தளிர் போல்(சிவந்துமிருதுவாய்க் குளிர்ந்துவாஸனையுள்ளதாய் அழகாய் இருக்கிற) திருவடிகளின்கீழ், புகுதல்,(வைகுந்தத்திற்குப்போய் புகுந்திருப்பது), அன்றி - அல்லாமல், (அது எனக்கு வாராமல்) அவன் அடியார் - அவனுக்கு அடிமைகளான ஸ்ரீவைஷ்ணவர்க

ளுடைய, தனி மா கலவி - மிகவுமுயர்ந்த சேர்க்கையால் உள்ள, இன்பமே - ஸுகமே, நங்கட்கு - எங்களுக்கு, நாளும் - எப்போதும், வாய்க்க - கிடைக்கவேண்டும்.

(கருத்து) தன்னுடைய தனிமாப்புகழ்களை வேதங்கள் எப்போதும் நிலையாய்க்கொண்டாடும்படி, பிரகிருதியோடு சேர்ந்து தூங்குகிறவர்கள் போல் இருந்த ஜீவன்கள் கேட்காமலே கிருபையினாலே தானேயுலகங்களையுண்டுபண்ணுவதில் மனதைவைத்து, நாமங்களும் ரூபங்களுமுள்ள உலகங்களாக ஆவேனென்று ஸங்கல்பத்தைச்செய்த பரம்பிரம்மமென்று சொல்லப்பட்டவனும், தனக்கு ஒத்தாரும் மேற்பட்டவனுமில்லாதவனும், எல்லாவற்றிற்கும் முதல் காரணமும் உலகங்களை தன்னிடமிருந்து உண்டாகும்படி செய்தபெரியதெய்வமுமான எம்பெருமானுடைய தளிர்போன்ற திருவடிகளின்கீழ் வைகுந்தத்திலிருந்து கைங்கர்யம் செய்வது எனக்குவேண்டாம்; அது இங்கு இருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு கைங்கரியம் செய்வதற்கு விரோதி. நான் வேண்டுவது ஸிருஷ்டி செய்வது முதலான அவனுடைய நல்லகுணங்களைப் பார்த்து அவனுக்கு வசப்பட்டவர்களாய் அவன் கைங்கரியத்திலேயே ருசியுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுடைய மிகவுமுயர்ந்த சேர்க்கையில் பிரீதிதான். அது எப்போதும் எங்களுக்குக்கிடைக்கவேண்டும்.

இ—ம். படியா - படியாக, ஈறு கெட்ட வினையெச்சம். வாய்க்க - வியங்கோள் வினைமுற்று. (7)

---

அவ— கீழ்ப்பாட்டில் ஸ்ரீவைஷ்ணவர்களுடன் * சேர்ந்திருக்க வேணுமென்றார்; இதில் அதுவும் வேண்டாம் அவர்களுடன்கூட இருந்தால் போதும் என்று சொல்லுகிறார்:—

நாளும் வாய்க்க நங்கட்கு நளிர்நீர்க் கடலைப் படைத்துத்தன்
தாளுந் தோளும் முடிகளுஞ் சமனி லாத பலபரப்பி
நீளும் படர்பூங் கற்பகக் காவும் நிறைபன் னாயிற்றின்
கோளு முடைய மணிமலைபோல் கிடந்தான் றமர்கள் கூட்டமே.

---

* சேர்ந்திருப்பதாவது— ஸம்ச்லேஷம்; அதாவது ஒருவர் மற்றொருவருக்கு அந்தரங்கமாயிருப்பது. கூட இருப்பது (ஸஹவாஸம்). அப்படியில்லாமல் ஒரே இடத்தில் இருப்பது.

(ப-ரை) தளிர் நீர்-குளிர்ச்சியையுடைய ஜலத்தையுடைய, கடலை-ஸமுத்ரத்தை, படைத்து - உண்டுபண்ணி, சமன் இலாத - ஒப்பிலாத, பல - கணக்கில்லாத, தன்-தனக்கேயுள்ள, தாளும்-திருவடிகளையும், தோள்-திருத்தோள்களையும், முடிகளும்-திருமுடிகளையும், பரப்பி-(பிரளயஜலத்தில் நிறையும்படி) பரப்பி, நீளும்-மிகவும் உயரமான, படர்-நாலுபக்கங்களிலும் தழைந்திருக்கிற, பூ-அழகான, கற்பகக் காவும் - கற்பகச்சோலைகளையும், நிறை - நிறைந்த பல் - பல, நாயிற்றின் - ஸூர்யன்களுடைய, கோளும் - தேஜஸ்களையும் உடை - உடைய, மணிமலைபோல் - நீலரத்நமலைபோல், கிடந்தான் - படுத்திருந்தவனாகிய எம்பெருமானுடைய, தமர்கள் கூட்டம்-சேர்ந்தவர்களுடன் (தாஸர்களுடன்) கூட இருப்பது, நங்கட்கு - நமக்கு, நாளும்-எப்போதும் வாய்க்க - கிடைக்க வேண்டும்.

(கருத்து) பிரளயகாலத்தில் ஸூர்யனில்லாமையால் குளிர்ந்ததான ஜலத்தையுடைய ஸமுத்ரத்தை உண்டுபண்ணி, நீலரத்நமான மலைபோல் திருமேனியையும், காந்திநிறைந்த பல ஸூர்யன்களைப் போலக்கணக்கில்லாத தலைகளையும் மிகவும் உயர்ந்த நாலுபக்கமும் தழைந்திருக்கும் கணக்கில்லாத கற்பகச்சோலைகள்போல் கணக்கில்லாத திருவடிகளையும் திருத்தோள்களையும் உடையவனும் பிரளயஜலம் நிறையும்படி அதில் படுத்துக்கொண்டிருந்த எம்பெருமானுடைய தாஸர்களுடன்கூட எப்போதுமிருப்பது நமக்கு கிடைக்கவேண்டும்.

இ—ம். கூட்டம் - கூடுதல், தொழிற்பெயர். (8)

---

அவ:— ஸ்ரீவைஷ்ணவர்களுடன் கூட இருக்கவேண்டாம்; அவர்கள் அடியவர் அடியவர் அடியவனாயிருப்பது போதும் என்று சொல்லுகிறார்—

தமர்கள் கூட்ட வல்வினையை நாசஞ் செய்யுஞ் சதிர்மூர்த்தி
அமர்கோ ளாழி சங்குவாள் விற்றண் டாதிபல் படையன்
குமரன் கோல வைங்கணை வேள்தாதை கோதி லடியார்தம்
தமர்கள் தமர்கள் தமர்களாஞ் சதிரே வாய்க்க தமியேற்கே. (௯)

(ப-ரை) தமர்கள் கூட்டம் - எம்பெருமானைச் சேர்ந்தவர்களின் கூட்டத்தின், வல் வினையை - பலமான பாபங்களை, நாசம்

செய்யும் - நாசம் பண்ணும், சதிர் மூர்த்தி-ஸமர்த்தமான திரு மேனிகளையுடையவனும், அமர் கொள் - (விரோதிகளை நாசம் செய்வதற்காக) சண்டையைக்கொண்ட, ஆழி - சங்கு, வாள் - கத்தி, வில், தண்டு - கதை, ஆதி - இவைகள் முதலான, பல் - பல, படையன் - ஆயுதங்களையுடையவனும், குமரன் - எப்போதும் யௌவனமுள்ளவனாய், கோலம் - அழகுள்ள, ஐங் கணை - ஐந்து பாணங்களையுடைய, வேள் - மந்மதனுக்கு, தாதை - தகப்பனுமான கண்ணனுடைய, கோது இல் - தோஷமில்லாத, அடியார் தம் - தாஸர்களுடைய, தமர்கள் - தாஸர்கள் எவரோ அவர்களுடைய, தமர்கள் - அவர்களுடைய தாஸர்கள் எவர்களோ, தமர்களாம் - அவர்களுக்குத் தாஸர்களாக இருக்கும், சதிர் - சாதுர்யம் (அதிகப் பிரயாஸமில்லாமல் உயர்ந்த புருஷார்த்தத்தை அடைவது), தமியேற்கு-துணையற்ற, எனக்கு, வாய்க்க - கிடைக்கவேண்டும்.

(கருத்து) ஸ்ரீவைஷ்ணவக் கூட்டங்களுடைய பலமான பாபங்களை நாசம் பண்ணக்கூடிய திருமேனிகளையுடையவனும், விரோதிகளை நாசம் செய்வதற்காகச் சண்டையில் நோக்குள்ள ஐந்து ஆயுதங்கள் முதலான பல ஆயுதங்களையுடையவனும், எப்போதும் யௌவனமும் அழகுமுள்ள ஐந்து பாணங்களையுடைய மந்மதனுக்குத் தகப்பனாயிருக்கிறபடியால் அதிக அழகையுடையவனுமான கண்ணனுடைய தோஷமில்லாத தாஸர்களின் தாஸர்களின் தாஸர்களின் தாஸனாக இருப்பதாகிய சாதுர்யம், ஸம்ஸாரமண்டலத்தில் என்னைப்போல் இருப்பவர் இல்லாமையால் துணையற்றவனாயிருக்கும் எனக்குக் கிடைக்கவேண்டும்.

குறிப்பு— 'கோதில்' என்கிறவிடத்தில் கோதாவது— எம்பெருமானைத் தவிர, வேறொன்றைப் பிரயோஜனமாக எண்ணுவதும், அவனுக்கு அபராதம் செய்வதில் ருசியும், சாஸ்திரம் சொல்லுவதில் ஸந்தேஹமும் ஆமாம். (9)

அவ:— கீழ்ப்பாட்டில் ஸ்ரீவைஷ்ணவர்கள் தமர்கள் தமர்கள் தமராயிருப்பதைத்தமக்கு வேண்டுமென்றார்; இதில் தம்மைச் சேர்ந்தவர்களுக்கும் இது வேண்டுமென்கிறார்—

வாய்க்க தமியேற் கூழிதோ றூழி யூழி மாகாயாம்
பூக்கொள் மேனி நான்குதோள் பொன்னு ழிக்கை யென்னம்மான்
நீக்க மில்லா வடியார்தம் மடியா ரடியா ரடியாரெங்
கோக்க ளவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடே. (ம)

(ப-ரை) மா - மிகவும் சிலாக்கியமான, காயாம்பூ - காயாம்பூவின் காந்தியை, கொள் - அடைந்திருக்கிற, மேனி - திருமேனியையும், நான்கு தோள்-நான்கு திருத்தோள்களையும், பொன்- அழகான, ஆழி கை-திருவாழியையேந்தின திருக்கையையுமுடைய, என் அம்மான் - என் ஸ்வாமியினுடைய, நீக்கம் இல்லா - நீங்குதல் (அவனை விட்டுப் பிரிதல்) இல்லாத, அடியார்தம் - தாஸர்களுடைய, அடியார் அடியார் அடியார், எம் கோக்கள் - எமக்கும் என்னைச் சேர்ந்தவர்களுக்கும் ஸ்வாமிகள், அவர்க்கே - அவர்களுக்கே, குடிகளாய் செல்லும் - கைங்கரியம் செய்யும் குடிகளாய் நடக்கும்படியான, நல்ல கோட்பாடு - நல்லதான கொள்ளப்படுகை, ஊழிதோறுஊழி-ஒவ்வொரு மஹாகல்பத்திலும், ஊழி- அதற்கு உட்பட்ட கல்பத்திலும், தமியேற்கு - துணையற்ற எனக்கு, வாய்க்க - கிடைக்கவேண்டும்.

(கருத்து) மிகவும் சிலாக்கியமான காயாம்பூவின் காந்தியை உடைய திருமேனியையும், ஆச்ரிதர்களுக்கு நிழலாயிருக்கும்படி கிளைகளையுடைய கற்பகவிருக்ஷம்போலிருக்கும் நான்கு தோள்களையும் அந்த மரத்திலுண்டான பூவைப்போன்ற திருவாழியை ஏந்தின திருக்கையையுமுடைய எம்பெருமானுக்கு ராஜாவின் மஹிஷியைப்போல் கைங்கரியம் செய்வதில் ஆசை ஒரு க்ஷணமும் விட்டிருக்காத தாஸர்கள் தாஸர்கள் தாஸர்கள் எமக்கும் என்னைச் சேர்ந்தவர்களுக்கும் ஸ்வாமிகள். ஆகையால், அவர்களுக்கே கைங்கரியம் பண்ணும் குடிகளாயிருக்கும்படி அவர்கள் எங்களைத் தாஸர்களாக ஒப்புக்கொள்ளுவதே ஸம்ஸார மண்டலத்தில் துணையற்ற எனக்கு எப்போதும் கிடைக்கவேண்டும்.

குறிப்பு— (1) 'நீக்கமில்லா' என்கிறவிடத்தில் ராஜமஹிஷிகள் ராஜாவைத் தவிர வேறு ஒருவனையும் கண்ணால் பார்க்காதவர்களாய், தங்களுடைய போகமானது தங்களுக்காக இருக்கிறதென்றும் தங்களுக்கு அதீநம் என்றும், எண்ணுதவர்களா

யிருப்பார்கள். அதுபோல் எம்பெருமானுடைய தாஸர்களும் வேறு தேவதைகளைக் கண்ணாலே பார்க்காதவர்களாயும் தங்களுடைய அநுபவம் தங்களுக்காக இருக்கிறதென்றும் தங்களுக்கு அதீநமாய் இருக்கிறதென்றும் எண்ணமில்லாதவர்களாய் இருப்பார்கள் என்பது கருத்து.

(2) பாகவதர்களிடத்தில் தமக்கு இருக்கும் பேராசையாலே 'ஊழிதோறூழி' என்று காலத்தைப் பெருக்கி, அவ்வளவு காலம் தாஸர்களாக இருக்கவேண்டுமென்று ஆழ்வார் சொல்லுகிறார். இதினால் அவர் ஆசையின் மிகுதி சொல்லப்படுகிறது.

இ—ம். காயாப்பூ - ஆகு பெயராய் அதின் நிறத்தைக் காட்டுகிறது. (10)

---

நல்ல கோட்பாட் டுலகங்கள் மூன்றி னுள்ளுந் தான்நிறைந்த
அல்லிக் கமலக் கண்ணனை யந்தண் குருகூர்ச் சடகோபன்
சொல்லப் பட்ட வாயிரத்து ளிவையும் பத்தும் வல்லார்கள்
நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே. (கக)

(ப-ரை) நல்ல - ஸ்லாக்யமான, கோட்பாடு - கொள்கையையுடைய, உலகங்கள் மூன்றின் உள்ளும் - மூன்று உலகங்களிலும், தான் நிறைந்த - தானேயாகும்படி பரிபூர்ணனை; அல்லி - மலர்ந்த, கமலம் கண்ணனை-தாமரைப்பூப்போன்ற கண்களையுடைய எம்பெருமானைக் குறித்து, அம் - அழகான, தண்- குளிர்ந்த, குருகூர்சடகோபன்-ஆழ்வார், சொல்ல-அருளிச்செய்யப்பட்டு உண்டான, ஆயிரத்துள், இவையும் பத்தும்-இந்தப் பத்துப் பாட்டுக்களையும், வல்லார்கள் - படிக்கச் சக்தியுள்ளவர்கள், நல்ல பதத்தால் - ஸ்லாக்யமான (பாகவதர்களுக்குக் கைங்கரியம் பண்ணுவதாகிய) உயர்ந்த அதிகாரத்தோடு, கொண்ட பெண்டிர் மக்கள் - தங்களாலே தங்களுடையவர்களாக எண்ணப்பட்ட மனைவிகளும் பிள்ளைகளும் இதில் ஸம்பந்தமுடையவர்களாயிருந்து, மனை-வீட்டில் (கிருஹஸ்தாச்ரமத்தில்), வாழ்வர்.

கோட்பாட்டின் நன்மையாவது- பாகவதர்களுக்குக் கைங்கரியம் செய்வதற்குத் தகுதியாயிருப்பது.

(கருத்து) நல்ல கோட்பாட்டையுடைய மூன்று உலகங்களிலும் தானே பிரதாநமாயிருக்கும்படி நிறைந்து, ஆழ்வார் இருந்த இடத்தில் வியாபிக்கும்படி எனக்குக் கிடைத்ததே என்று எண்ணி அதினால் உண்டான பிரீதியாலே மலர்ந்த தாமரைப்பூபோலிருக்கிற திருக்கண்களையுடைய எம்பெருமானைப்பற்றி அந்தண் குருகூர்ச்சடகோபன் அருளிச்செய்து உண்டான ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே, இந்தப் பத்துப் பாட்டுக்களையும் படிக்கச் சக்தியுள்ளவர்கள், ஸிலாக்யமான பாகவதர்களுக்குக் கைங்கரியம் செய்வதாகிய பதவியை இதில் ஆசையுள்ள தங்கள் மனைவிகளுடனும் பிள்ளைகளுடனும் அடைந்து இங்கேயே இருந்து வாழ்வார்கள்.

குறிப்பு.— 1. கோட்பாட்டுக்கு நன்மையாவது — ஆழ்வார் ஒருவர் இருப்பதினாலே மூன்று உலகங்களுக்கும் ஒரு நாதன் ஏற்பட்டதாகவும், அடையவேண்டிய பலன்களை அது அடைந்ததாகவும் எம்பெருமானால் எண்ணப்படுவதாம்.

2. 'தான் நிறைந்த' என்பதற்கு, ஆழ்வார் இந்தத் திருவாய்மொழியைப் பாட ஆரம்பித்த உடனே, இந்த உலகமெல்லாவற்றிலும் பாகவதர்களுக்குச் சேஷமாயிருப்பதாகிய புருஷார்த்தம் நிலையாயிருக்கும்படி செய்யப்படும் என்கிற பிரீதியாலே எம்பெருமானே நிறைந்துவிட்டான் என்பது கருத்து.

3. 'அம்தண்குருகூர்' என்பதற்கு, தாம் இந்தத் திருவாய்மொழியைப் பாடினபோதே ஊருக்கு எல்லா நல்ல குணங்களும் உண்டாகி அதிலிருக்கும் எல்லாருக்கும் சிரமம் போய்விட்டது என்பது கருத்து.

4. வேதம் எம்பெருமானுடைய பரத்வம்போலே உயர்ந்ததாயும் கிட்டமுடியாததாயுமிருக்கிறது. ஆழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி அப்படியன்று; சக்ரவர்த்தித் திருமகன் அவதாரம் எல்லாருக்கும் நெருங்கி அடையும்படியிருந்ததுபோல, எல்

லாராலும் எளிதாய் அறியக்கூடியதாயிருக்கிறது திருவாய்மொழி என்பது "சொல்லப்பட்ட" என்பதின் பொருள்.

5· அல்லி - மலர்ந்த என்று பூர்வர்கள். அடுக்கான இதழ் களையுடைய பூவகை என்று லெக்ஸிகன். (11)

---

வ்யாமோஹாத் ஸ்வாச்ரிதேஷு ப்ரமதஜலதரா வாமநத்வேந
சாபத்பந்துத்வ ஆச்சர்யதாத் உதிதநிரஸநாச் சைக குக்ஷி
ஷ்ட்யாதிஸம்ஸ்தே: | ஸ்வைர ஸாயிக்யயோகாத் ஸ்ரிததுரிதஹ்ருதே
புஷ்பாதஸீவர்ணகாந்த்யா ஸ்வாக்ருஷ்டே: ஸ்வீயதாஸ்யாவதி விஸத
யதி த்யாக நாதம் ஸ்வதாஸ்யே || ||௧0௧||

இந்தத் திருவாய்மொழியில், எம்பெருமான் தனக்குத் தாஸன் செய்யவேண்டிய வேலை தன்னைச் சேர்ந்தவர்கள் வரையில் போக வேண்டியதென்று தெளிவாய்க் காட்டுகிறான் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— 1. ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ஆசையுள்ளவனாயிருப்பது, 2. மழை மேகத்தின் வர்ணமுள்ளவனாயிருப்பது, 3. வாமனனாய் அவதாரம் செய்தது, 4. ஆபத்காலத்திலே பந்துவாயிருப்பது, 5. ஆச்சரியமாயிருப்பது, 6. விரோதிகளை நாசம் செய்தது, 7. உலகத்தை உண்டு பண்ணுவது முதலானவைகளுக்குச்சக்தியுள்ளவனாயிருப்பது, 8. பிரளயஜலத்தில்படுத்திருப்பது, 9. ஆச்ரிதர்களுடைய பாபங்களைப் போக்குவது 10. காயாம்பூவின் நிறமுள்ளவனாயிருந்து எல்லார் மனதையும் இழுப்பது.

இந்தத் திருவாய்மொழியில் சொல்லப்பட்ட பாகவதர்களில் 'சயமேயடிமை தலை நின்றார்' (2-பாட்டு) என்றது பரதாழ்வானைப்போன்றவர்களை; "கோதில் அடியார்கள்" (8-பாட்டு) என்றது சத்ருக்நாழ்வானைப் போன்றவர்களை; "நெக்கமில்லா அடியார்கள்" என்றது லக்ஷ்மணனைப் போன்றவர்களை என்று நம்பிள்ளை சொன்னாராம்.

இந்தத் திருவாய்மொழியின் அர்த்தத்தை ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் புருஷார்த்த காஷ்டாதிகாரத்தில் கடைசி சுலோகத்தால் சுருக்கமாய்க் காட்டியிருக்கிறார். அந்த சுலோகமாவது—

நாமைவ த்ரவிணம் அந்யத் அந்யதபி வா தஸ்ய நாபி நாளீக
நாளீகஸ்ப்ருஹணீய ஸௌரபவஹ வாசா வாசா ந யாசாமஹே |
ஶார்ங்காணாம் து ஸஹைவ ஶ்ரியம் ஶார்ங்காஸ்வரிகாணாம்
நாம் தேவதேஸ்யைக ஸ்வாமிநம் தாஸ்யே ஸக்திம் பூயஸீம் தே
ஹந: ||

இதில், த்ரவிணம்— (செத்தை) என்பது முதற்பாட்டில் சொன்ன ஐசுவரியம். முதல் 'அந்யத்' (வேறு) என்கிற சொல் இரண்டாம் பாட்டில் சொன்ன கைவல்யம். இரண்டாம் 'அந்யத்' என்பது மூன்றும் பாட்டில் சொன்ன மோக்ஷம். 'அபி' என்பது முன் சொல்லப்படாமல் ஆறும் பாட்டில் சொன்ன எம்பெருமானுடைய ஆநந்தத்தை இவைகளுடன் சேர்க்கிறது. 'வா' என்கிற சொல் 'வ' என்கிற சொல்லின் பொருளைக் காட்டுகிறதாய் இந்த நான்கையும் தனித்தனியே வேண்டாததுபோல், சேர்த்தும் கேட்கமாட்டோம் என்கிற அர்த்தத்தைக் காட்டுகிறது. 'ந யாசாமஹே' (கேட்கமாட்டோம்) என்பது சொன்னவைகள் பாகவதர்களுக்குக் கைங்கரியம் செய்வதைக்காட்டிலும் இளப்பமாகையால், அவைகளைக் கேட்கமாட்டோம் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது. இந்த அர்த்தம் ஏழாம்பாட்டிலும் அறியலாம். 'ஸௌரபவஹ வாசா (வாஸனையை வீசுகிறவாக்காலே) என்றது எம்பெருமானுடைய குணங்கள் விஷயமாக பாட்டுக்களைப் பாடுகிற வாயாலே என்று பொருளாய் 'புகழ்கள் வாயவாய்' என்றுநாலாம்பாட்டிலும் 'வழிபட்டு ஓடும் கவியமுதம்' என்று ஐந்தாம்பாட்டிலும் சொன்னதைக் காட்டுகிறது. 'தஸ்ய நாபி நாளீக நாளீகஸ்ப்ருஹணீய (அவனுடைய நாபியாகிய தாமரை ஓடையிலிருக்கும் தாமரையினால் ஆசைப்படுத்தத்தகுந்த)

என்றது, அந்த தாமரைப் பூவுக்கு எம்பெருமானுடைய ஸம்பந்தமே தவிர, பாகவதர்கள் ஸம்பந்தமில்லை என்றும், வேறு தேவதையான பிரம்மாவின் ஸம்பந்தமிருக்கிறதென்றும் தம்முடைய வாக்குக்கு வேறு தேவதையின் ஸம்பந்தமில்லை என்றும், பாகவதர்களுக்குக்கைங்கரியம் பண்ணப்பெற்றிருக்கிற தென்றும், ஆகையால் தம்முடைய வாக்கின் வாஸனையானது (ஸௌரப்யம்) அந்தத் தாமரைப் பூவுக்கு இல்லையென்றும் காட்டப்படுகிறது. இது பத்தாம்பாட்டில் "அவர்க்கே குடிகளாய்' என்கிறவிடத்தில் 'ஏ' என்பதின் அர்த்தம். "மோக்ஷாநாஞ்ச' என்கிறவிடத்தில் பிரிக்கிற தன்மையுள்ள 'ச' என்கிறசொல் ஐசுவரியம் முதலானவைகளிலிருந்து பாகவதர்களுக்குக் கைங்கரியம் செய்வதைப் பிரித்துக் காட்டுகிறது. இது இந்தத் திருவாய்மொழியின் திரண்டபொருள். மோக்ஷாநாம்' என்பது முதலான மூன்று விசேஷணங்களும் "கோதில் அடியார்" என்கிற அர்த்தத்தைக் காட்டுகின்றன. 9-வது பாட்டின்குறிப்பைப்பார்க்க. "ஶேஷா:' (அடிக்கடி) என்பது 'ஊழிதோறூழி' என்பதின் பொருள்.

இஷ்டம் ஸம்ப்ரீதிபூர்வத்ருக்ஷார்த்ர பூர்விஷயமிதவேஷஸ்வ
ஹேதுவஶ்யம் ஸ்வாநாம் விஶேஷாபோஹ்யம் ப்ரதிதவிஹிதவஸ
மஹ்யக்ஷஸம்பத்திம் ஶாரிபி: । ஸ்வாபேக்ஷா ஸவ்யபேக்ஷம் ஸ்வமித
ரணவஶம் ஹ்ருத்யதம் ஸ்வஸ்யதஞ்ச தாஸ்யம் ஸ்வம் தஸ்ய நிஷ்டாம்
தத்வயிமவி வாக்யைஷ் ஶேஷ ஸ்வஸ்யவஶ்ய: ॥ ॥௧0௨॥

இந்தப் பத்தில் எம்பெருமான் தனக்கு இஷ்டமானவர்களுக்கு வசப்பட்டிருக்கிறான் என்பது அவனுடைய பத்து குணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன—(1) பார்க்க வேணுமென்று ஆசைப்படுகிறவர்களுக்குக் கண்ணில் படுவது; (2) தன்னைத்தவிர மற்றவைகளில் ஆசையில்லாதவர்களால் அடையத் தகுந்தவனாயிருப்பது; (3) தன்னைச் சேர்ந்தவர்களுக்குத் தன்னை விட்டுப் பிரிந்தகாலத்தில் போக்கியமாயிருப்பது; (4) ஆச்ரிதர்களுக்காக எல்லா விபவங்களையும் வைத்துக்கொண்

டிருப்பது; (5) தன்னை ஆச்ரிதர்கள் அபேக்ஷிப்பதை எதிர்பார்த்துக்கொண்டிருப்பது; (6) தன்னை ஆச்ரிதர்களுக்குக் கொடுப்பதற்கு ஸித்தமாயிருப்பது; (7) ஆச்ரிதர்கள் மனதில் தாம் இருப்பதை அவர்களுக்குத் தெளிவாய்க் காட்டுவது; (8, 9, 10) தனக்கு ஜீவன்கள் இயற்கையாகவே தாஸர்கள் என்பதையும், அதில் அவர்கள் நிலையாயிருக்கவேண்டுமென்பதையும், அதின் எல்லை நிலத்தையும் அவர்களுக்குத் தெளிவாய்க் காட்டுவது.

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ||

ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநஸேவதயே ஸ்ரீமதே வேதாந்த
ராமாநுஜ மஹாதேசிகாய நம: ||

சீரார்துப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளேசரணம்.

திருக்குருகைப் பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எட்டாம்பத்து முற்றிற்று



ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ॥

ஜ்ஞாநவைராக்யஸந்தாநஸேவ்யாய ஸ்ரீமதே வேதாந்த ராமாநுஜமஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ॥

திருக்குருகைப் பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஒன்பதாம் பத்து.

காம்யம் விச்வஸ்மிந் விஷ்டபைகாங்க்ஷ்யாவிஷ்டம்
ப்ரயச்சந் த்ருஷ்ட்வா பரதேவாந்தரோபேக்ஷகாரஸிக: ।
நிஸ்தாந்யாபேக்ஷோ நிஜமஹிமஸம்பந்நவத்வே
நிதாநம் ஸித்தீநாம் நிரவதிஸௌஹார்த்தம் மணயதி ॥ ௧௧ ॥

வெவ்வேருன பலன்களை ஆசைப்படுகிற உலகத்தார்களுக்கு அவரவர்களிஷ்டப்பட்டதைப் பக்ஷபாதமில்லாமல் எம்பெருமான் கொடுப்பதை எட்டாம் பத்தில் தெரிவித்து, மிகவும் உயர்ந்த புருஷார்த்தமான அவனுடைய கைங்கரியம் ஒன்றிலேயே ஆசை உடைய ஆழ்வார், வேறு விஷயங்களைத் தேடாதவராய், ஸர்வேச்வரன் இயற்கையாய் ஸுஹ்ருத்தாயிருப்பதை அந்தந்தப் பலன்களுக்குக் காரணமாக ஒன்பதாம்பத்தில் வர்ணிக்கிருர். (19)

ஸஹாவ்யோ காருண்யாச்ரிதவ்ருதநயஸ்பீதஜநயி:
ஸ்வஸம்பந்தாத் ரோத்தா ஸ்வமஹிமபரிஸ்தோரணபர: ।
ஸ்வபக்த்யா விஸ்தீர்ணம் ஸ்வகுணவிஸ்ஸூரிஷய
ஸ்வஜாதிஸ்ஸம்பந்தாவஸரே ஜந்மவஸ்ஸ்ரீ ॥ ௨௰ ॥

இந்தப்பத்தில் எம்பெருமான் ஒருகாரணமில்லாமல் தானே எல்லா ஜீவன்களுக்கும் ஸுஹ்ருத்தாயிருக்கிருனென்பது பத்துக் குணங்களால் காட்டப்படுகிறது. அவைகளாவன— (1) தான் ஒருவனே பந்துவாயிருப்பது; (2.) வெகு காலமாய் ஆரம்பித்து கிருபையைப் பண்ணிக்கொண்டிருப்பது; (3) ஸௌசீல்யத்துக்கு ஸமுத்ரமாயிருப்பது; (4.) தன்னுடன் உள்ள உறவாலேயே ரக்ஷிப்பது; (5.) தன் குணங்களின் பெருமையை நினைக்கும்படி

செய்வது; (6.) மறக்கமுடியாத ஸ்வபாவமுள்ளவனாயிருப்பது; (7.) ஆசாரியர்கள்வழியாக நம்பிக்கைக்குவிஷயமாயிருப்பது; (8.) ஆச்ரிதர்களுக்குக்ஷேமத்தையே நினைத்துக்கொண்டிருக்கிறபிராட்டியை மஹிஷியாக உடையவனாயிருப்பது; (9.) ஆச்ரிதர்களுக்கு தன்னைக்கொடுப்பதற்குத்தகுந்த காலமுள்ளவனாயிருப்பது;(10) தன்னைக்கொடுப்பதற்குத் தகுந்த காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது. (20)

## முதல் திருவாய்மொழி.

அவ— பாகவதர்களுக்குக் கைங்கரியம் பண்ணுவதாகிய ஸம்பத்தை அதில் ஆசையுள்ளவர்களுடன் கூட இருந்து அநுபவிக்க வேண்டுமென்று ஆழ்வார் ஆசைப்பட்டார். அப்படி உலகத்தில் ஒருவரையும் காணவில்லை. இருக்கிறவர்களுக்கு அதில் ஆசையுண்டாவதற்கு உபாயமாக உலகத்திலுள்ளவர்களைப் பார்த்து, "எம்பெருமான் ஒருவனே உங்களுக்கு பந்து ; மற்றவர்கள் அல்ல" என்று அவர் இந்தத் திருவாய்மொழியில் சொல்லுகிறார்:—

(கலித்துறை.)

கொண்டபெண்டிர் மக்க ளுற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்ட தல்லாற் காதன்மற் றியாதுமில்லை
எண்டிசையுங் கீழும் மேலும் முற்றவு முண்டபிரான்
தொண்டரோமா யுய்ய லல்லா லில்லைகண் டீர்துணையே (க)

(ப-ரை) கொண்ட - (உங்களுக்கு பந்துக்களாக மனதால்) எண்ணப்பட்டவர்களாகிய, பெண்டீர்-மனைவிகளும், மக்கள்-பிள்ளைகளும், உற்றார் - ஸம்பந்திகளும், சுற்றத்தார் - ஜ்ஞாதிகளும், பிறரும் - (அம்மான் முதலான) மற்ற பந்துக்களும், கண்டதோடு (உங்கள் கையில்) காணப்பட்ட பொருளோடு, பட்டது அல்லால்-சேர்ந்திருப்பது இல்லாமல், மற்று-வேறு, காதல் - ஸ்நேஹமானது, யாதும் - கொஞ்சமும், இல்லை - இல்லாதவர்கள், எண்திசையும்-எட்டுத்திக்குக்களையும், கீழும் - கீழேயுள்ளவைகளையும், மேலும் - மேலேயுள்ளவைகளையும், முற்றவும் - ஆகிய எல்லாவற்றையும், உண்ட, பிரான் - உபகாரகனுக்கு, தொண்டரோ

மாய் - தாஸர்களாய் - உய்யல் அல்லால் - உஜ்ஜீவிப்பதல்லாமல், துணை - வேறொரு துணை, இல்லை. கண்டீர் - இது நிச்சயம்.

(கருத்து) உலகத்திலிருப்பவர்களே! உங்களுக்குப்பந்துக்களாக உங்கள் மனதால் எண்ணப்பட்ட மனைவிகளும் பிள்ளைகளும் ஸம்பந்திகளும், ஜ்ஞாதிகளும் அம்மான் முதலான வேறு பந்துக்களும் ஸ்நேஹிதர்களும் உங்களுக்கு உண்மையில் பந்துக்கள் அல்ல; உங்கள் கையில் இருக்கும் பொருளோடு அவர்களுக்கு ஸம்பந்தம். அந்தப்பொருள் போனால் உங்களை விட்டுவிடுவார்கள். அவர்களுக்கு உங்களிடத்தில் கொஞ்சமும் ஆசையில்லை. ஆகையால், எட்டுத் திக்குக்களையும் கீழேயுள்ள உலகங்களையும், மேலேயுள்ள உலகங்களையும் ஒன்றையும் விடாமல் பிரளயகாலத்தில் தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்த எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்ய வாருங்கள்; அப்படிச் செய்தால் நாம் உஜ்ஜீவிக்கலாம். அதைத் தவிர, வேறு துணை நமக்கு இல்லை. இது நிச்சயம்.

குறிப்பு— 'தொண்டரோமாய்' என்று உலகத்தார்களைத் தன்னுடையவர்களாகச் சேர்த்துக்கொண்டு சொன்னபடி; அவர்களைப் பிரித்துச் சொன்னால் "தொண்டர்" என்று சொல்ல வேண்டும். (1)

---

அவ— பந்துக்கள் ஒருவனுடைய பொருளுக்காக அவனுடன் சேர்ந்திருக்கிறார்கள் என்று கீழே சொன்னார்; அதுவும் வஞ்சனையால் என்று சொல்லுகிறார்:—

துணையுஞ் சார்வு மாகுவார்போற் சுற்றத் தவர்பிறரும்
அணைய வந்த வாக்கமுண்டேல் அட்டைகள் போல்சுவைப்பர்
கணையொன் றாலே யேழ்மரமு மெய்தவெங் கார்முகிலை
புணையென் றுய்யப் போகிலல்லா லில்லைகண் டீர்பொருளே. (உ)

(ப-ரை) துணையும் - (ஸுகத்திலும் துக்கத்திலும்) துணையாயும், சார்வும் - (ஆபத்து வந்தபோது) தாங்குகிறவர்களாயும், சுற்றத்தவர் - பந்துக்களும், பிறரும் - மற்றவர்களும், (தங்களைக் காட்டிக்கொண்டு), அணைய - அணையும்படி, (தாங்கள் கைக்கொள்ளலாம்படி) வந்த - (உங்களுக்கு) வந்த, ஆக்கம் - ஸம்பத்து, உண்

டேல் - உண்டாயிருந்தால், அட்டைகள் போல், சுவைப்பர்- (அதை) அநுபவிப்பார்கள். கணை ஒன்றாலே - ஒரே பாணத்தாலே, ஏழ் மரமும் - ஏழு மராமரங்களை, எய்த, எம் கார் முகிலை - நம்முடைய மழை மேகம் போன்ற சக்ரவர்த்தித் திருமகனை, புணை என்று - தெப்பம் என்று நினைத்து, உய்யப்போகில் அல்லால் - பிழைக்கப்போவதல்லாமல், பொருள் - (வேறொருவரை ஆச்ரயித்து ஒரு) பிரயோஜனம், இல்லை, கண்டீர் - இது நிச்சயம்.

(கருத்து) உங்களுடைய பந்துக்களும் மற்றவர்களும் ஸுகத்திலும் துக்கத்திலும் துணையாக இருப்பவர்களாகவும், ஆபத்துவந்த காலத்தில் உங்கள் ஆபத்தைப்போக்கித் தாங்குகிறவர்களாகவும், தங்களைக் காட்டிக்கொண்டு தாங்கள் கைக்கொள்ளும்படியான ஸம்பத்து உங்களுக்கு உண்டாயிருந்தால், அட்டைகள் வியாதிக்காரனுடைய ரத்தத்தை உறுஞ்சுவதுபோல் அதை அநுபவிப்பர்கள். அட்டைகளை வியாதிக்காரன் தனக்கு ஓர் உபகாரத்தைச் செய்யும் என்று எண்ணி, அவைகளை தன் உடம்பில் விட்டுக்கொள்ளுகிறான். அவர்களோ தாங்களே உபகாரம் செய்கிறவர்கள்போல் காட்டிக்கொள்ளுகிறார்கள். இதுதான் அவர்களுக்கும் அட்டைகளுக்கும் வித்தியாஸம். இந்த விஷயத்தில் பந்துக்களுக்கும் மற்றவர்களுக்கும் பேதமில்லை. ஆகையால், இவர்கள் வேண்டியவர்கள் என்கிற எண்ணத்தை விட்டுவிட்டு, சக்ரவர்த்தித்திருமகனை ஸம்ஸாரஸமுத்ரத்தைத் தாண்டுவதற்குத் தெப்பமாகப் பற்றி உஜ்ஜீவியுங்கள். அவன் தன் பிரயோஜநத்தைத் தேடாமல் மழைமேகம்போல் எல்லாருக்கும் உபகாரம் செய்கிறவன். ஸுக்ரீவனை ரக்ஷிப்பதாகச் சொல்லி அவனுக்கு நம்பிக்கை வருவதற்காக ஒரே பாணத்தால் ஏழு மராமரங்களைத் துளைத்து தன்னுடைய இந்த ஸ்வபாவத்தை வெளியிட்டிருக்கிறானே, அவனைப் பற்றினால் பிழைக்கலாம். வேறு எவனாலே எந்தப் பிரயோஜநம் கிடைக்கும்? இந்த விஷயத்தில் நீங்கள் ஸந்தேஹப்படவேண்டாம்.

---

அவ:— ஸம்பத்து வந்தால் அதைப் பந்துக்கள் அநுபவிப்பர்கள் என்று கீழே சொன்னார்; ஏழைத்தனம் வந்தால் அவர்கள் விட்டுவிடுவார்கள் என்று சொல்லுகிறார்—

பொருள்கையுண்டாய்ச் செல்லக் காணில் போற்றியென் றேற் [றெழுவர்
இருள்கொடுன்பத் தின்மை காணி லென்னே யென்பாரு மில்லை
மருள்கொள்செய் கையசுரர் மங்க வடமதுரைப் பிறந்தாற்கு
அருள்கொ ளாளா யுய்யிலல்லா லில்லைகண் டீரரணே. (ங)

(ப-ரை) கை - (ஒருவன்) கையிலே, பொருள் உண்டாய், செல்ல காணில் - நடக்கப் பார்த்தால், போற்றி என்று, ('நீ வாழவேணும்' என்கிற அர்த்தத்தைக் காட்டுகிற) போற்றி என்கிற சொல்லைச் சொல்லி ஸ்தோத்ரம் பண்ணி, ஏற்று - (நீங்கள் கொடுக்கும் பொருளை) வாங்கிக்கொண்டு, எழுவர் - (அவர்கள்) திரும்பிப்போவர்கள், இருள் கொள்-அஜ்ஞானத்தைக் கொடுக்கிற (புத்தியைக் கலக்குகிற), துன்பத்து - துக்கத்தைக் கொடுக்கும், இன்மை - பொருளில்லாமையை (தரித்ரனாயிருப்பதை) காணில் - கண்டால், என்னே என்பாரும் இல்லை-என்ன செய்கிறாயென்று (ஒரு வார்த்தையையும்) சொல்லுவார்களு மில்லை, மருள்கொள் - அஜ்ஞானத்தைக் கொள்ளும்படியான (மனது கலங்கும்படி பயத்தைஉண்டுபண்ணும்படியான,செய்கை வேலைகளைச்செய்கிற, அசுரர் - அஸுரர்கள்,மங்க - நாசம் அடையும்படி, வடமதுரை - வடமதுரையில், பிறந்தாற்கு - அவதாரம் செய்தகண்ணனுக்கு, அருள் கொள் ஆளாய் - கிருபைக்கு விஷயமான தாஸஜனங்களாய், உய்யில் அல்லால் - பிழைப்பது அல்லாமல், அரண் - வேறொரு ரக்ஷகன், இல்லை கண்டீர்.

(கருத்து) பந்துக்கள் உங்கள் கையில் பொருள் உண்டாயிருந்ததைப் பார்த்தால், உங்களிடம் வந்து போற்றி என்று ஸ்தோத்ரம் பண்ணி, நீங்கள் கொடுக்கும் பொருளை வாங்கிக் கொண்டு திரும்பிப்போவர்கள். மனதைக் கலக்கும்படியான துக்கத்தைக் கொடுக்கும் ஏழைத்தனம் வந்தால் உங்களால் உபகாரம் செய்யப்பட்ட அவர்களை 'நீ என்ன செய்கிறாய்' என்று ஒரு வார்த்தையையும் சொல்லமாட்டார்கள். தாங்கள் ஒரு வார்த்தை சொன்னால், அதைக்கொண்டு உங்களுக்கு ஜீவனம் நடக்கும் என்று சொன்னாலும், அதைச் சொல்லமாட்டார்கள். ஆகையால் அவர்களை விட்டுவிடுங்கள். உலகத்துக்குப் பயத்தையுண்டுபண்ணும் வேலைகளைச் செய்துகொண்டிருந்த

அஸுரர்கள் நாசம் அடையும்படி வடமதுரையில் அவதாரம் செய்த கண்ணனுக்குக் கிருபைக்கு விஷயமான தாஸர்களாக ஆகிப் பிழையுங்கள். அதைத்தவிர உங்களுக்கு வேறு உபாயம் இல்லை. கண்டீர். (3)

---

அவ— ஆபத்துக்காலத்தில் உதவுவதற்காகப் பொருளைக் கொடுத்து ஒருவனை ஸம்பாதிக்கக் கூடாதா என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார்:—

அரணமாவ ரற்றகாலைக் கென்றென் றமைக்கப் பட்டார்
இரணங் கொண்ட தெப்பராவ ரின்றியிட் டாலுமஃதே
வருணித் தென்னே வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே
சரணென் றுய்யப் போகிலல்லா லில்லைகண் டீர்சதிரே. (ச)

(ப-ரை) அற்ற காலைக்கு - (பொருள் உங்களை விட்டுப் போன (ஆபத்) காலத்துக்கு, அரணம் - (உங்களை) ரக்ஷிக்கிறவர்கள் ஆவர்கள், என்று என்று - என்று பலதடவை நினைத்து, அமைக்கப்பட்டார் - பணத்தைக் கொடுத்துவைக்கப்பட்டவர்கள், இரணம் கொண்ட - கடன் கொடுத்தபொருளைத்திரும்பி வாங்கிக் கொண்ட,தெப்பர் ஆவர்-அல்பர்களாக ஆவார்,இன்றி இட்டாலும்-இப்படிநீங்கள்பணம்கொடுத்து ஸம்பாதிக்காவிட்டாலும்,அஃதே-அதுவே,வருணித்துஎன்னே-இதைச்சொல்லிஎன்னபிரயோஜநம்? வடமதுரைப் பிறந்தவன் - வடமதுரையில் பிறந்த கண்ணனுடைய, வண்புகழே - நல்ல குணங்களே, சரண் - உங்களுக்கு ரக்ஷகம், என்று - நினைத்து, உய்யப்போகில் அல்லால் - பிழைப்பதற்கு முயற்சி செய்வதல்லாமல், சதிர் - ஸாமர்த்தியமானது, இல்லை, கண்டீர்.

(கருத்து) பொருள் உங்களைவிட்டுப் போகும் ஆபத்காலத்தில் நமக்கு இவர்கள் உதவி செய்வர்கள் என்று பலதடவை நினைத்து, அவர்களுக்கு இப்போதே பொருளைக்கொடுத்து உதவி செய்யத்தகுந்தவர்களாவைக்கப்பட்டாலும், ஆபத்து வந்த காலத்தில் உங்களிடத்தில் கடன் கொடுத்திருந்த பணத்தைத் திருப்பி வாங்கிக்கொண்டவர்கள்போல் அல்பர்களாய் உங்களுக்கு உதவிசெய்யமாட்டார்கள், நீங்கள் பொருள்கொடுத்து ஸம்பாதித்ததற்கும் அது செய்யாததற்கும் வித்தியாஸமில்லை, இந்த

விஷயத்தை விரிவாய்ச் சொல்லி என்ன பிரயோஜநம்? ஆதலால் ஒருவரையும் ஆபத்துக்குத் துணையாக நினைக்கவேண்டாம். முன் செய்த உபகாரத்தை நினைத்தோ மேல் உபகாரம் செய்வர் என்று எண்ணியோ உபகாரம் செய்வதில்லாமல் தன் பிரயோஜநமாகவே உபகாரம் செய்ய வடமதுரையில் அவதாரம் பண்ணின கண்ணனுடைய நல்ல குணங்களை ரக்ஷகமாகப் பற்றிப் பிழையுங்கள். இப்படிச் செய்தால், கொஞ்ச பிரயாஸத்தால் பெரிய லாபம் கிடைக்கும். இதைத் தவிர வேறு உபாயமில்லை,

இ—ம், வருணித்து - வடமொழி வர்ணித்து. (4)

---

அவ— பந்துக்கள் ஆபத்காலத்தில் உதவமாட்டார்கள் என்று கீழே சொன்னார்; அவர்கள் அவமாநத்தையும் செய்வர்கள் என்று சொல்லுகிறார்—

சதிரமென்று தம்மைத் தாமே சம்மதித் தின்மொழியார்
மதுர போகந் துற்றவரே வைகிமற் றொன்றுறுவர்
அதிர்கொள் செய்கை யசுரர்மங்க வடமதுரைப் பிறந்தாற்கு
எதிர்கோ ளாளா யுய்யலல்லா லில்லைகண்டீ ரின்பமே. (௫)

(ப-ரை) சதிரம் என்று - (வேண்டியவர்களை வசப்படுத்திக்கொண்டு அநுபவிக்கும்படியான) ஸாமர்த்தியமுள்ளவர்களென்றும், தம்மை, தாமே-தாங்களே, சம்மதித்து - கௌரவம் பண்ணிக்கொண்டு, இன் மொழியார்-இனிய பேச்சுக்களைப்பேசுகிற ஸ்திரீகளுடைய, மதுரபோகம் - இனிய போகங்களை, துற்றவரே - (பூர்ணமாய்) அநுபவித்தவர்களே, வைகி - காலம் கழிந்து (யௌவநம் போனபோது), மற்று ஒன்று - வேறொன்றை, (கடுமையான பேச்சு முதலியவைகளை), உறுவர் - அடைவர்கள். அதிர் கொள் - நடுக்கத்தைக்கொண்டிருக்கிற, செய்கை - செய்கைகளையுடைய, அசுரர், மங்க - நாசமடைய, வடமதுரை - வடமதுரையில், பிறந்தாற்கு - பிறந்த கண்ணனுக்கு, எதிர்கொள் ஆளாய் - (வரும்போது) எதிர்கொள்ளும் தாஸர்களாய், உய்யல் அல்லால் - பிழைப்பது இல்லாமல், இன்பம் - ஸுகம், இல்லை கண்டீர்.

(கருத்து) யௌவனம் இருக்கும்போது எந்த ஸ்திரீகள் தங்களுக்கு வேண்டியவர்களை வசப்படுத்திக்கொண்டு அநுபவிக்கும் ஸாமர்த்தியமிருக்கிறதென்று தங்களையே தாங்கள் கௌரவம் பண்ணிக்கொண்டு இனிய பேச்சுக்களைப் பேசி, பூர்ணமாகப் போகத்தைக் கொடுத்தார்களோ, அவர்களே யௌவனம் போன பிறகு, கடுமையான பேச்சுக்களைப் பேசி, அவமானத்தைச் செய்வார்கள்; முன்னாலே மிகவுமினியவர்களாயிருந்த ஸ்திரீகளே பிறகு விஷம்போல் ஆய்விடுவார்கள். ஆகையால், அவர்களால் இன்பமுண்டாகாது. உலகத்துக்கு நடுக்கத்தை யுண்டு பண்ணும் செயல்களையுடைய அஸுரர்கள் நாசமடையும்படிக்கும் தன்னை அடைந்தவர்களுக்கு எப்பொழுதும் அதிகப் பிரீதியோடு தன்னை அனுபவிக்கக் கொடுப்பதற்கும் வடமதுரையில் பிறந்த ஸ்ரீ க்ருஷ்ணனை எதிர்கொண்டு நல்வரவு சொல்லி அவனுக்குக் கைங்கரியம் செய்தால் பிழைக்கலாம். அதைத் தவிர இன்பம் கொடுப்பது வேறில்லை. (5)

---

இல்லைகண்டீ ரின்ப மந்தோ வுள்ளது நினையாதே
தொல்லையார்க ளெத்தனைவர் தோன்றிக் கழிந்தொழிந்தார்
மல்லை மூதூர் வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே
சொல்லியுய்யப் போகி லல்லால் மற்றொன்றில் லைசுருக்கே

(ப-ரை) இன்பம் இல்லை - (எம்பெருமானைத் தவிர வேறு) ஸுகமான வஸ்து இல்லை, கண்டீர், உள்ளது-இந்த உண்மையான அர்த்தத்தை, நினையாதே, தொல்லையார்கள் - முன் இருந்தவர்கள், எத்தனைவர் - எத்தனை பேர்கள், தோன்றி - பிறந்து, கழிந்தொழிந்தார் - போய்விட்டார்கள், அந்தோ - ஐயோ! மல்லை - (எல்லா) பெருமையை உடைய, மூதூர்-பழைய ஊரான, வடமதுரை - வடமதுரையில், பிறந்தவன் - அவதாரம் பண்ணின, கண்ணனுடைய, வண் புகழே - உயர்ந்த நல்ல குணங்களை, சொல்லி, உய்யப் போகில் அல்லால் - பிழைக்க முயற்சி செய்தால் அல்லது, மற்று ஒன்று இல்லை - வேறு உபாயமில்லை, சுருக்கு - இது சுருக்கமாய்ச் சொன்ன அர்த்தம்.

(கருத்து) எம்பெருமானைத் தவிர வேறு புருஷார்த்தமில்லை கண்டீர்; இந்த உண்மையான அர்த்தத்தை விசாரித்துத்தெரிந்து

கொள்ளாமல், முன்னேயிருந்தவர்கள் எத்தனை பேர்கள் பிறந்து இறந்துபோய்விட்டார்கள். எம்பெருமானுடைய அறிவு இல்லாமையால் அவர்களுக்குப்பிறப்பதும் இறப்பதும்தான் மிஞ்சின. ஐயோ! இவர்கள் காலம் வீணாய்ப் போய்விட்டது. உங்களுடைய பிறப்பையும் அப்படி வீணாக்காமல், எல்லா ஸம்பத்தும் நிறைந்த பழைமையான ஊராகிய வடமதுரையில் அவதாரம் பண்ணின கண்ணனுடைய உயர்ந்த நல்ல குணங்களைச் சொல்லிப் பிழையுங்கள். இதைத் தவிர பிழைப்பதற்கு வேறு உபாயமில்லை. மிகவும் ஸாரமான அர்த்தத்தைச் சுருக்கமாகச் சொன்னேன்.

குறிப்பு— 'முதூர்' என்பதற்கு, மதுரை, முன்னால் வாமனன் ஆச்ரமமாயிருந்து,பிறகு சத்துருக்னாழ்வான் இருப்பிடமாய் இருந்ததால் அநாதியாக எம்பெருமான் ஸம்பந்தம் பெற்ற ஊர் என்பது கருத்து. (6)

---

அவ:— கீழ்ச்சொன்ன சுருக்கத்தைக் கொஞ்சம் விஸ்தாரமாக அருளிச்செய்கிறார்—

மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத் தெவ்வுயிர்க்கும்
சிற்றவேண்டா சிந்திப்பே யமையுங் கண்டீர் களந்தோ
குற்றமன் றெங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப் பிறந்தான்
குற்றமில்சீர் கற்றுவைகல் வாழ்தல் கண்டீர் குணமே. (எ)

(ப-ரை) மற்று ஒன்று இல்லை - (இனி நாம் சொல்ல வேண்டியது) வேறொன்று இல்லை, மா நிலத்து - இந்த விசாலமான பூமியில், எவ்வுயிர்க்கும் - எல்லா ஆத்மாக்களுக்கும், சுருங்க சொன்னோம் - சுருக்கமாகச் சொன்னோம், சிற்றவேண்டாம்-சஞ்சலப்படவேண்டாம்(பிரயாஸப்படவேண்டாம்)சிந்திப்பே - நினைப்பதே, அமையும் - போதும், கண்டீர்கள், அந்தோ- ஐயோ! குற்றம் அன்று - (இதைச் செய்தவருக்கு) ஒரு குற்றமும் வாராது, எங்கள் - நம்முடைய, வடமதுரையில் பிறந்தவன், பெற்றத்தாயன் - மாடுகளை உடைய கோபாலனுடைய, குற்றம் இல் சீர் - குற்றமில்லாத நல்ல குணங்களை, கற்று - (ஆசாரியன் உபதேசத்தாலே) அறிந்து, வைகல் - எப்போதும், வாழ்தல் கண்டீர், குணம் - தகுந்ததும் போக்கியமுமானது.

(கருத்து) நீங்கள் பிழைப்பதற்கு உபாயத்தைச் சுருக்கமாகச் சொன்னேன். நான் சொல்லவேண்டியது வேறொன்றில்லை. விசாலமான பூமியிலிருக்கிற ஆத்மாக்களே! நாம் சொன்னதை இந்தத் தேசத்தில் தான் செய்யலாம், இந்தக் காலத்தில்தான் செய்யலாம், இன்ன அதிகாரிதான் செய்யலாம் என்கிற நிர்ப்பந்தமில்லை. எந்தத் தேசத்திலும் எந்தக் காலத்திலும் எந்த அதிகாரியும் இதைச் செய்யலாம். நீங்கள் வாயாலே சொல்லி, உடம்பாலே வேலை செய்து பிரயாஸப்படவேண்டாம். மனதாலே நினைத்தால் போதும். ஐயோ! இப்படி லகுவான உபாயத்தை ஜநங்கள் செய்கிறதில்லையே! பலன் கிடைப்பதில் உங்களுக்கு ஸம்சயமுண்டானாலும் இதைச் செய்யுங்கள். இதினால் உங்களுக்கு ஒரு கெடுதலும் உண்டாகாது. செய்யவேண்டியது என்னவென்று கேட்கிறீர்களோ? கேளுங்கள். ஆச்ரிதர்களுக்காக வடமதுரையில் அவதாரம் செய்து, மாடுகளை மேய்த்துக்கொண்டிருந்த கோபாலனுடைய தோஷமில்லாத நல்ல குணங்களை அநுபவியுங்கள். இதுவே தகுந்தது; இதுவே இனியது.

இ—ம். சிந்திப்பே—ஏ காரத்திற்கு பிரிநிலைப்பொருள்; நினைப்பதை மற்ற வேலைகளிலிருந்து பிரிக்கிறது. (7)

---

வாழ்தல் கண்டீர் குணமிதந்தோ மாயவ னடிபரவிப்
போழ்துபோக வுள்ள கிற்கும் புன்மையி லாதவர்க்கு
வாழ்துணையா வடமதுரைப் பிறந்த வன்வண் புகழே
வீழ்துணையாப் போமிதனில் யாது மில்லை மிக்கதே (அ)

(ப-ரை) வாழ்தல் இது கண்டீர் குணம் - வாழ்வாகிய இது எல்லாருக்கும் குணமாகும், அந்தோ - ஐயோ! மாயவன் - ஆச்சரியமான குணங்களையும் லீலைகளையுமுடையவனுடைய, அடி - திருவடிகளை, பரவி - (ப்ரீதியோடு) ஸ்தோத்திரம் பண்ணி, போழ்துபோக - காலத்தைப் போக்க, உள்ள கிற்கும் - நினைக்கைக்குச் சக்தியுள்ள, புன்மையிலாதவர்க்கு - தோஷமில்லாதவர்களுக்கு, வாழ்துணை ஆ - வாழ்வதற்கு உபாயமாக, வடமதுரை பிறந்தவன் வண்புகழே, வீழ்துணை ஆ - ஆசைப்படும்படியான ஸஹாயமாய், போம் இதனில் - (எப்போதும் அநுப

விப்பதாகிய) இதைக்காட்டிலும், மிக்கது-உயர்ந்தது (அதிகமான புருஷார்த்தத்துக்கு உபாயம்), யாதும் இல்லை - ஒன்றுமில்லை.

(கருத்து) போகங்களை அநுபவிக்கிற இது எல்லாருக்கும் குணம். இது எல்லாருக்கும் தெரியாதா? ஐயோ! இந்த போகத்துக்கு உபாயத்தை நீங்கள் அறியவில்லையே; ஆச்சரியமான குணங்களையும் லீலைகளையுமுடையவனுடைய திருவடிகளை வாயாலே பிரீதியுடன் ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு காலத்தைப் போக்கவேண்டுமென்று நினைக்கச் சக்தியுள்ளவர்களாய் வேறு பிரயோஜநத்தைத் தேடுவதாகிய தோஷமில்லாதவர்களாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவனுடைய குணங்களை அநுபவிப்பதாகிய வாழ்தலுக்கு உபாயமாக இருப்பதற்காகவே கண்ணன் வடமதுரையில் அவதாரம் செய்தான். அவனுடைய குணங்களையே ஆசைப்படத்தகுந்த புருஷார்த்தத்திற்குத் துணையாக எண்ணி இருங்கள். இதைக்காட்டிலும் புருஷார்த்தத்துக்கு உயர்ந்த உபாயம் வேறில்லை.

இ—ம். வீழ்துணை ஆ - வீழ்துணை ஆக. இதனில் - இல் ஐந்தாம் வேற்றுமை உருபு; இதைக் காட்டிலும் என்பது பொருள். (8)

---

யாது மில்லை மிக்கதனி லென்றேன் றதுகருதி
காதுசெய்வான் கூதைசெய்து கடைமுறை வாழ்க்கை யும்போம்
மாதுகிலின் கொடிக்கொள் மாட வடமதுரைப் பிறந்த
தாதுசேர்தோள் கண்ணனல்லா லில்லை கண்டீர் சரணே. (௯)

(ப-ரை) அதனில் - அதை(கைவல்யத்தை)க்காட்டில், மிக்கு-அதிகமாய், யாதும் இல்லை-ஒரு புருஷார்த்தமும் இல்லை, என்று என்று-இப்படி எப்போதும்நினைத்து, அது கருதி-அதை நினைத்து (ஆசைப்பட்டு), காது செய்வான், காதைச் செய்ய (குண்டலம் போட்டுக்கொள்வதற்குக் காதை பெருக்கும்படி செய்ய), கூதை செய்து - மூளியாகச் செய்து (செய்வதுபோல), முறை - முன்னால் உள்ளதான, கடை வாழ்க்கையும் - தாழ்ந்த (ஸம்ஸாரிகளுடைய) போகமும், போம் - போய்விடும், மா துகிலின் - பெரிய வஸ்திரங்களுடைய, கொடி கொள் - த்வஜங்களைக்கொண்ட,

மாடம் - வீடுகள் நிறைந்த, வடமதுரை பிறந்த, தாது சேர் - மாலைகள் சேர்ந்த, தோள் - தோள்களையுடைய, கண்ணன் அல்லால் - கண்ணனைத்தவிர, சரண் - அடையவேண்டியது, (வேறு) இல்லை கண்டீர்.

(கருத்து) சிலர் புத்திக்குறைவாலே கைவல்யம் என்பதே உயர்ந்த புருஷார்த்தம், அதற்கு மேற்பட்ட புருஷார்த்தமில்லையென்று அடிக்கடி நினைத்து, அதை அடைய ஆசைப்பட்டு அதின் உபாயத்தைச் செய்வதற்குப் பாடுபடுகிறார்கள். ஒருவன் குண்டலம் போட்டுக்கொள்ளுவதற்காகக் காதைப் பெருக்கவேண்டுமென்று ஆசைப்பட்டு ஒரு வியாபாரத்தைச் செய்து அதை மூளியாகப் பண்ணிக்கொள்வதுபோலிருக்கிறது அவர்கள் செய்யும் வியாபாரம். கைவல்யம் கிடைக்கலாம்; ஆனால் அது எம்பெருமானுடைய அநுபவத்தைக்காட்டிலும் மிகவும் தாழ்ந்தது. அவனுடைய அநுபவம் ஸமுத்ரம்போல; கைவல்யம் அதில் ஒரு துளிபோல. இதுமாத்திரமன்று. முன்னிருந்த ஸம்ஸார ஸம்பந்தமும் போய்விடும். அவர்களுக்கு எம்பெருமானைத் தோன்றாதபடி செய்கிற கர்மத்தின் ஸம்பந்தம் முழுவதும் போகவில்லை. அது போகாததற்குக் காரணமான கர்மம் இருக்கிறது. ஆகையால் கைவல்யத்தையும் தேடவேண்டாம். மாதுகிலின் கொடிக்கொள் மாடம் வடமதுரையில் அவதாரம் செய்து, அதனால் ஒரு புதிய அழகை அடைந்த கண்ணனையே பிராப்யமாக எண்ணுங்கள். இதைத்தவிர வேறு பிராப்யமில்லை. (9)

---

கண்ணனல்லா லில்லை கண்டீர் சரணது நிற்கவந்து
மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்
திண்ணமா நும்முடைமை யுண்டே லவனடி சேர்த்துய்மினோ
எண்ண வேண்டா நும்மதாது மவனன்றி மற்றில்லையே. (௰)

(ப-ரை) கண்ணன் அல்லால் - கிருஷ்ணனைத்தவிர, சரண் இல்லை கண்டீர் - வேறு ரக்ஷகன் இல்லை, அது நிற்கவே - அப்படி ரக்ஷகனாயிருப்பது நிலையாயிருப்பதற்காகவே, மண்ணின் பாரம் - பூமியின் பாரத்தை, நீக்குதற்கு - அதிலிருந்து பிரிப்பதற்காக, வந்து - (திருப்பாற்கடலிலிருந்து) வந்து, வடமதுரை பிறந்தான். நும் உடைமை உண்டேல் - உமக்கு ஸொந்தமாக எண்ணுகிற

வஸ்துக்கள் இருந்தால், (அவைகளை) அவன் அடி-அவன் திருவடிகளில், திண்ணம் - திடமாக, சேர்த்து உய்பிழைமின் - சேர்த்துப் பிழையுங்கள், நும்மது - உம்முடையது, ஆதும் - எல்லாம், அவனன்றி - அவனல்லது, மற்று இல்லை - வேறொன்றுமில்லை, எண்ணவேண்டா - இதில் ஸம்சயப்படவேண்டாம்.

(கருத்து) கண்ணனைத்தவிர வேறு ரக்ஷகனில்லை கண்டீர். இப்படி அவன் ரக்ஷகன் என்பது உலகத்தில் நிலையாயிருப்பதற்காகவே அவன் வடமதுரையில் அவதாரம் செய்து பூமியின் பாரத்தைக் கீழே இறக்கி, உலகத்தை ரக்ஷித்தான். ஆதலால் அவனே ரக்ஷகன். உங்களுடையதாக நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கிற வஸ்துக்கள் இருந்தால் அவைகளையும் உங்களையும் அவன் திருவடிகளில் சேஷம் என்று ஸமர்ப்பியுங்கள். இப்படிச் செய்தால் பிழைக்கலாம். உங்களுக்குச் சேர்ந்ததாக எண்ணுவதெல்லாம் அவனுக்கே சேஷம். அவனை விட்டுப்பிரியாமல் அவனுடைய பிரகாரமாகவே எல்லாமிருக்கின்றன. இதில் ஒரு ஸம்சயம் வேண்டாம்.

குறிப்பு— 'நும்முடைமையுண்டேல்' என்பதாலே, உங்களுடையதாக ஒன்றுமில்லை; அறியாமையால் உங்களுடையதென்று எண்ணுகிறீர்கள் என்பது காட்டப்படுகிறது. (10)

---

ஆது மில்லை மற்றவனி லென்றதுவே துணிந்து
தாதுசேர்தோள் கண்ணனைக் குருகூர்ச் சடகோபன் சொன்ன
தீதிலாத வொண்டமிழ்க ளிவையா யிரத்து ளிப்பத்தும்
ஓதவல்ல பிராக்கள் நம்மையா ளுடையார்கள் பண்டே. (கக)

(ப-ரை) அவனில் - அந்த கிருஷ்ணனைக்காட்டிலும், மற்று-வேறு, யாதும் இல்லை என்று - ஒன்றுமில்லையென்று, அதுவே - அந்த அர்த்தத்தையே, துணிந்து - நிச்சயம் செய்து, தாது சேர்தோள் - மாலைகள் சேர்ந்திருக்கிற தோள்களையுடைய, கண்ணனை குருகூர் சடகோபன் சொன்ன, தீது இலாத - தோஷம் இல்லாத, ஒண் - நல்ல குணங்களுள்ள, தமிழ் - தமிழ்ப் பாட்டுக்கள், இவை ஆயிரத்துள், இ பத்தும் ஓத வல்ல - படிக்கச்சக்தியுள்ள, பிராக்கள் - உபகாரகர்கள், பண்டே - முன்னே நம்மை, ஆளுடையார்கள் - அடிமையாக உடையவர்கள்.

(கருத்து) கண்ணனைத்தவிர வேறு ஒன்றுமில்லை. ஆத்மாவும் அதைச் சேர்ந்தவைகளும் எல்லாம் அவனுக்கே சேஷம் என்று தீர்மானம் செய்து தாதுசேர்தோள் கண்ணனைப்பற்றி குருகூர்ச் சடகோபன் அருளிச்செய்த சொற்குற்றமும் பொருள் குற்றமுமில்லாமல் பல குணங்களையுடைய இந்தப் பத்துப் பாட்டுக்களைப் படிக்கச் சக்தியுள்ளவர்கள், இவைகளைப் படிப்பதற்குத் தகுந்த உடம்பை அடைந்த காலம் முதல் எம்மை அடிமையாக உடையவர்கள்.

குறிப்பு— இவைகளைப் படிக்கிறவர்கள் படிப்பதைத் தமக்கு உபகாரமாக எண்ணி ஆழ்வார் அவர்களைப் 'பிராக்கள்' என்கிறார்.

இ—ம். அவனில்— இல் ஐந்தாம் வேற்றுமை உருபு; அவனைக்காட்டிலும் என்பது பொருள். (11)

---

𑌆𑌪𑌤𑍍𑌸𑌖𑌿𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑍍𑌯𑌾 𑌪𑍍𑌰𑌶𑌮𑌯𑌤𑌿 𑌜𑌨𑌨𑌾𑌦𑍍𑌦𑍈𑌤𑍍𑌯𑌨𑌾𑌶𑌾-
𑌯 𑌸𑍍𑌵𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌜𑌾𑌤𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌂 𑌸𑌰𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚 𑌦𑌯𑌾𑌸𑌾𑌰𑌂 𑌕𑍃-
𑌤𑌾𑌯𑌾𑌂 𑌦𑌯𑌾𑌦𑍇𑌶𑍍𑌚 𑍤 𑌸𑌦𑍍𑌯𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌸𑍍𑌯 𑌪𑌾𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌣𑌮𑌿𑌹
𑌵𑌿𑌨𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯 𑌸𑌹𑌾𑌯𑌃 𑌸𑌂𑌸𑍃𑌤𑍌 𑌰𑌕𑍍𑌷𑌾𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌹𑌾𑌨𑍇
𑌹𑍃𑌷𑍍𑌟𑌿𑌨𑌤𑌿 𑌹𑌿𑌤𑌂 𑌶𑌾𑌰𑌿𑌸𑌂𑌨𑍍𑌨𑌿𑌬𑌦𑍍𑌧𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥ ॥௧௦௩॥

இந்தத் திருவாய்மொழியில் ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷிக்க ஸாமர்த்தியமில்லாமையால் எல்லாருக்கும் பந்துவான கண்ணனுடைய திருவடிகளை ஆசிரயிப்பதைக் காட்டிலும் வேறு உபாயமும் பிராப்பியமுமில்லையென்று சொல்லப்படுகிறது. இதற்குக் காரணம்— (1) ஆபத்காலத்தில் அவன் பந்துவாயிருக்கிறான் என்கிற பிரஸித்தி; (2) ஆச்ரிதர்களுடைய ஸந்தேஹத்தைப் போக்கித்திருடமான நம்பிக்கையையுண்டுபண்ணுவது; (3) அஸுரர்களை நாசம் பண்ண வடமதுரையில் அவதாரம் பண்ணினது; (4) தயாஸமுத்ரமாயிருப்பது. (103)

---

# இரண்டாம் திருவாய்மொழி.



அவ:— கீழ்த் திருவாய்மொழியில் எம்பெருமான் ஒருவனே பந்துவென்று ஆழ்வார் அநுஸந்தானம் பண்ணினார்; இப்படியிருக்கிற அவனுடன் சேரவேண்டுமென்று திருப்புளிங்குடிக்குப் போனார்; அங்கே எல்லாரையும் கடாக்ஷிப்பது போல் தம்மையும் கடாக்ஷிப்பதைத்தவிர, தமக்கு பாஹ்ய ஸம்ச்லேஷத்தைத் தாம் ஆசைப்பட்டபடி அவன் கொடுக்கவில்லை; அதினால் மிகுந்த வருத்தத்தையடைந்து பாஹ்ய ஸம்ச்லேஷத்தைக் கொடுக்கும்படி இதில் பிரார்த்திக்கிறார்—

(எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.)

பண்டை நாளாலே நின்திரு வருளும்
பங்கயத் தாள்திரு வருளும்
கொண்டுநின் கோயில் சீய்த்துப்பல் படிகால்
குடிகுடி வழிவந்தாட் செய்யும்
தொண்ட ரோர்க்கருளிச் சோதிவாய் திறந்துன்
தாமரைக் கண்களால் நோக்காய்
தெண்டிரைப் பொருநல் தண்பணை சூழ்ந்த
திருப்புளிங் குடிக்கிடந் தானே. (க)

(ப-ரை) தெண்திரை - தெளிந்த அலைகளையுடைய, பொருநல் - தாம்பரபர்ணியைச் சேர்ந்ததாய், தண் பணை சூழ்ந்த - குளிர்ந்த நீர் நிலங்களால் சூழப்பட்ட, திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியில், கிடந்தானே - பள்ளிகொண்டிருக்கிறவனே! நின் திருவருளும் - உன்னுடைய கிருபையையும், பங்கயத்தாள் திருவருளும் - தாமரைப்பூவில் வஸிக்கிற பிராட்டியின் கிருபையையும், பண்டைநாளாலே கொண்டு-முன்பு நெடுநாள் தொடங்கி பெற்று, நின் கோயில் - உன்னுடைய கோயிலை, சீய்த்து - பெருக்கி (அது முதலானவைகளைச் செய்து), பல்படிகால் - வெகுவிதமாக (தலைமுறை தலைமுறையாய்), குடிகுடி - பிள்ளை பெண்டாட்டிகளுடன்கூட, வழி வந்து - (சாஸ்திரம் சொல்லுகிற) வழியை விட்டு விலகாமல் அதிலேயே இருந்து, ஆட் செய்

யும் - அடிமை செய்கிற, தொண்டரோர்க்கு - தாஸர்களான எங்களுக்கு, அருளி - கிருபை பண்ணி, சோதிவாய் திறந்து - (கோவைப்பழம் போல்) விளங்குகிற திருப்பவளத்தைத் திறந்து ஒரு வார்த்தையைச் சொல்லி, உன் தாமரைக்கண்களால், நோக்காய் - பார்க்கவேண்டும்.

(கருத்து) உன் திருமேனிக்குத் தகுந்த தெண்திரைப் பொருனலால் ஜலஸம்ருத்தியையுடையதாய் தண்பணைகளால் சூழப்பட்ட திருப்புளிங்குடியில் பள்ளிகொண்டிருக்கிறவனே! உன்னுடைய கிருபையையும் தாமரைப்பூவிலிருக்கும் பிராட்டியின் கிருபையையும் வெகுநாளாய்ப் பெற்று உன்னுடைய கோயிலில் திருவலகு சேர்ப்பது முதலானவைகளைச் செய்து தலைமுறை தலைமுறையாய் பெண்டாட்டி பிள்ளைகளுடன் கூடி சாஸ்திரம் சொன்ன வழியிலேயேயிருந்து, அடிமை செய்து கொண்டிருக்கிற தாஸர்களாகிய எங்களுக்குக் கிருபை செய்து கோவைப்பழம்போல் விளங்குகிற திருப்பவளத்தைத் திறந்து ஒரு வார்த்தையைச் சொல்லி, தாமரைக்கண்களாலே பார்க்க வேண்டும். நீ பள்ளிகொண்டிருக்கும் அழகைப் பார்த்தேன். நீ திருப்பவளத்தைத் திறக்கும் அழகையும் பார்க்கவேண்டும். இவ்வளவு காலம் கிருபை செய்த நீ பலனை அடையும் காலத்தில் உபேக்ஷை செய்யலாமா? பிராட்டியின் கிருபைக்கு நாங்கள் விஷயமாயிருக்கிறோம். அவள் அபிப்பிராயத்தை அறிந்து அதின்படி நடக்கிற நீ இப்போது உபேக்ஷிப்பது தகுந்ததோ?

குறிப்பு— (1) தம்மைச் சேர்ந்தவர்களையும் சேர்த்துக் கொண்டு 'தொண்டரோர்க்கு' என்று ஆழ்வார் சொல்லுகிறார்.

(2) பிரம்மாவும் ருத்திரனும் கிட்டமுடியாத நீ, எங்களுக்கு இயற்கையாகவே பந்துவாயிருப்பதாலே இங்கே வந்து பள்ளிகொண்டிருக்கிறாய் என்கிற கருத்தால் 'திருப்புளிங்குடிக் கிடந்தானே' என்று அருளிச்செய்கிறார்.

(3) 'சோதிவாய் திறந்து' என்பதின் கருத்து—வார்த்தை சொல்லும்போது உள்ள திருப்பவளத்தின் அழகைக் காண வேணும் என்பது.

இ—ம். நோக்காய்— ஒருமை ஏவல் வினைமுற்று. (1)

குடிக்கிடந் தாக்கஞ் செய்து நின்றீர்த்த
வடிமைக் குற்றேவல் செய்துன்போன்
அடிக்கட வாதே வழிவரு கின்ற
வடியரோர்க் கருளிநீ யொருநாள்
படிக்க ளவாக நிமிர்த்த நின்பாத
பங்கய மேதலைக் கணியாய்
கொடிக்கோள் பொன்மதிள்சூழ் குளிர்வயற் சோலைத்
திருப்புளிங் குடிக்கிடந் தானே. (௨)

(ப-ரை) கொடி கொள் - த்வஜங்களைக்கொண்ட, பொன் மதிள் சூழ் - பொன்னால் செய்யப்பட்ட ப்ராகாரத்தாலே சூழப் பட்டதும், குளிர்வயல் சோலை - குளிர்ந்த வயல்களையும் தோட் டங்களையுமுடையதும் ஆன, திருப்புளிங்குடிக் கிடந்தானே! - திருப்புளிங்குடியில் திருக்கண் வளர்கிறவனே! குடி கிடந்து - குடியிலே கிடந்து, ஆக்கம் செய்து - ஸம்ருத்தியைச் செய்து, தீர்த்த - பரிசுத்தியைச் செய்கிற, நின் அடிமை - உன் கைங்கரி யங்களுக்குள்ளே, குற்றேவல் செய்து - அந்தரங்க கைங்கரியங் களைச் செய்து, உன் பொன் அடி - உன்னுடைய அழகான திருவடிகளை, கடவாதே - மீறாதே, வழி வருகின்ற - அடிமை தப்பாதே நடக்கிற, அடியரோர்க்கு - தாஸர்களான எங்களுக்கு, அருளி நீ, படிக்கு - பூமிக்கு, அளவாக - ஒத்த அளவுள்ளதாய், நிமிர்த்த - வளரும்படி செய்யப்பட்ட, நின் பாதபங்கயமே - உன்னுடைய திருவடித்தாமரையையே, ஒரு நாள், (எங்கள்) தலைக்கு, அணியாய் - அலங்காரமாகச் செய் தருளவேணும்.

(கருத்து) கொடிக் கொள் பொன் மதில்களால் சூழப்பட்டு, குளிர்ந்த வயல்களையும் தோட்டங்களையுமுடைய திருப்புளிங் குடியில் ஆச்ரிதர்கள் உன்னை அநுபவிக்கும்படி பள்ளிகொண் டிருப்பவனே! உனக்குத் தாஸர்களான குலங்களுக்கு ஏற் பட்ட வரம்பு தவறாமல், அவைகளுக்குத் தகுந்த கைங்கர்யங் களைச் செய்வதில் முயற்சி செய்து வேறு ப்ரயோஜநங்களிலுள்ள ஆசை போகும்படி செய்கிற உன் கைங்கரியங்களுக்குள்ளே அந்தரங்கமானவைகளைச் செய்து, உன் அழகான திருவடியைத் தவிர வேறு புருஷார்த்தத்தை அறியாமல் தலைமுறை தலை முறையாய் நாங்கள் தாஸர்கள். எங்களுக்குக் கிருபை செய்து

திரிவிக்கிரமனாய் உலகு அளந்தபோது பூமியின் அளவுள்ளதாய் வளரும்படி செய்யப்பட்டு எல்லா ஆத்மாக்களுக்கும் ஸுலபமாயிருந்த உன் திருவடித்தாமரையை ஒரு நாளாகிலும் எங்கள் தலைக்கு அலங்காரமாகச் செய்யவேண்டும். (2)

---

கிடந்தநாள் கிடந்தா யெத்தனை காலம்
கிடத்தியுன் றிருவுடம் பசைய
தொடர்ந்து குற்றேவல் செய்து தொல்லடிமை
வழிவரும் தொண்டரோர்க் கருளித்
தடங்கொள்தா மரைக்கண் விழித்துநீ யெழுந்துன்
றாமரை மங்கையும் நீயும்
இடங்கொண் மூவுலகுந் தொழவிருந் தருளாய்
திருப்புளிங் குடிக்கிடந் தானே (௩)

(ப-ரை) திருப்புளிங்குடிக் கிடந்தானே! கிடந்த நாள் - நீ பள்ளிகொண்டிருக்கிற நாள்களெல்லாம், கிடந்தாய் - (ஒரே விதமாய்) படுத்திருந்தாய், உன் திருவுடம்பு, அசைய - நோவு படும்படி, எத்தனை காலம், கிடத்தி - படுத்திருப்பாய், தொடர்ந்து - அந்தந்த இருப்பை அநுஸரித்து, குற்றேவல் செய்து - அந்தரங்க கைங்கர்யங்களைச் செய்து, தொல் - அநாதியான அடிமை - அடிமையினுடைய, வழி - வழியிலே, வரும் வருகிற, தொண்டரோர்க்கு - தாஸர்களான எங்களுக்கு, அருளி, தடம் கொள் - தடாகங்களின் அழகை அபஹரிக்கிற, தாமரைக் கண் - தாமரைக் கண்களை, விழித்து - திறந்து, நீ எழுந்து, உன், தாமரை மங்கையும், நீயும், இடம் கொள் - இடத்தைக்கொண்ட (விசாலமான) மூவுலகும் தொழ - மூன்று உலகத்திலிருக்கிறவர்கள் தொழும்படி, இருந்தருளாய் - உட்கார்ந்திருக்கவேண்டும்-

(கருத்து) திருப்புளிங்குடியில் பள்ளிகொண்டிருப்பவனே! நீ படுத்திருக்கும் அழகைக் காண ஆசைப்பட்ட ஆச்ரிதர்களுக்குக்காகப் படுத்திருக்கும் நாளெல்லாம் இப்படியே ஒரே விதமாய் படுத்திருந்தாயே! உன்னுடைய மிருதுவான திருமேனிக்கு நோவு உண்டாகாதோ? எத்தனை காலம் படுத்திருப்பாய். இதை எல்லாம் நீ ஆச்ரிதர்களுக்காகச் செய்கிறபடியாலே எனக்காகக்

கண்வளர்வதைத் தவிர வேணும். உன்னுடைய அந்தந்த இருப்புக்குத்தகுந்தபடி அந்தரங்க கைங்கர்யங்களைச் செய்துகொண்டு, அநாதி காலமாக அடிமை வழியிலிருக்கும் தாஸர்களான எங்களுக்குக் கிருபை செய்து, தடாகங்களின் அழகை அபஹரிக்கும் தாமரைக் கண்களை அவைகளின் அழகை நாங்கள் அநுபவிக்கும்படி திறந்து, நீ திருவனந்தாழ்வானாகிய படுக்கையிலிருந்து எழுந்து, தாமரைமங்கையும் நீயும் விசாலமான மூன்று உலகங்களிருப்பவர்கள் உங்களை ஸேவிக்கும்படி உட்கார்ந்தருள வேணும்.

குறிப்பு— (1) முதல் பாட்டில் இருவரையும் உபாயமாகச் சொன்னார்; இதில் அவர்களைப் பிராப்யமாகச் சொல்லுகிறார்.

(2) 'தொண்டரோர்க்கு' என்று அடிக்கடி சொன்னது தாம் அடிமையாயிருப்பதைப் பெருமையாகச் சொன்னதற்காக அன்று. உனக்கு அடிமையாயிருக்கிறவர்கள் வேறு ஒருவரிடம் போகலாமோ? நீயே அவர்களை ரக்ஷிக்கவேண்டாமா? என்று தமக்கு வேறு உபாயமில்லாமையைச் சொன்னபடி.

(3) இருப்பு என்பது எழுந்திருப்பது, ஸ்நாநம் செய்வது, அலங்காரத்தைப் பெறுவது, நிவேதநத்தைக் கொள்வது முதலான அவஸரங்கள்.

இ—ம். கிடத்தி - முன்னிலை ஒருமை வினை முற்று. 'தடம்கொள்' என்கிறவிடத்தில், தடம் என்கிற சொல் ஆகுபெயராய் அதின் அழகைச் சொல்லுகிறது. (3)

---

புளிங்குடிக் கிடந்து வரகுண மங்கை
யிருந்துவை குந்தத்து ணின்று
தெளிந்த வென்சிந்தை யகங்கழி யாதே
யென்னை யாள்வா யெனக்கருளி
நளிர்ந்த சீருலகம் மூன்றுடன் வியப்ப
நாங்கள்கூத் தாடிநின் றார்ப்பப்
பளிங்குநீர் முகிலின் பவளம்போற் கனிவாய்
சிவப்பநீ காணவா ராயே. (௫)

(ப-ரை) புளிங்குடி கிடந்து - (எனக்காக) திருப்புளிங்குடியில், பள்ளிகொண்டு, வரகுணமங்கை - வரகுணமங்கை என்கிற ஊரில், இருந்து - உட்கார்ந்து, வைகுந்தத்துள் - ஸ்ரீவைகுண்டம் என்கிற ஊரில், நின்று, தெளிந்த - (என்னுடைய ஸ்வரூபத்தின் உண்மையைக் கண்டு) தேறின, என் சிந்தை அகம் - என் மனதில் இருந்து, கழியாதே - (அதை) விட்டுப்போகாதே, என்னை ஆள்வாய் - என்னை அடிமை கொள்ளுகிறவனே! எனக்கு அருளி - (இந்த, கிருபை செய்ததுபோல் மேலும் எனக்கு) கிருபை செய்து, நளிர்ந்த - குளிர்ந்த, சீர்-(உன்னுடைய)நல்ல குணங்களை, உலகம் மூன்று - மூன்று உலகங்களிலிருக்கிற எல்லாரும், உடன்- சேர்ந்து, வியப்ப - ஆச்சரியப்பட, நாங்கள் கூத்தாடி, நின்று - நிலையாயிருந்து, ஆர்ப்ப - கூச்சல் போடும்படி, பளிங்கு நீர் - ஸ்படிகம் போல சுத்தமான ஜலத்தை யுண்ட, முகிலின் - மேகத்தின், பவளம் போல் கனிவாய், சிவக்க - சிவக்கும்படி, காண - (நாங்கள்) காணும்படி, நீ வாராய்-நீ நடந்துவரவேண்டும்.

(கருத்து) எனக்காகத் திருப்புளிங்குடியில் பள்ளிகொண்டு, வரகுணமங்கை என்கிற ஊரில் உட்கார்ந்து, ஸ்ரீவைகுண்டம் என்கிற ஊரில் நிற்கிறாய்; நான் உனக்குத் தகாதவன் என்று எண்ணி உன்னைவிட்டுப் போகாதபடி என் ஸ்வரூபத்தின் உண்மையை எனக்குக் காட்டினாய்; அதினால் தேறியிருக்கிற என் மனதுக்குள்ளேயிருந்து அதைவிட்டுப்போகாதிருக்கிறாய்; இப்படி உபகாரங்களைச் செய்ததுபோல் மேலும் உன்னுடைய பெரிய கிருபையால் ஓர் உபகாரஞ் செய்யவேண்டும். அதாவது சோதிவாய் திறந்து தாமரைக் கண்களாலே நோக்கி, திருவடிகளை என் தலையில் வைத்தருளி, பிராட்டிபோலேகூட இருந்தருள் என்று ஆழ்வார் கேட்டார். அதை எம்பெருமான் உடனே செய்துவிட்டானே, இதென்ன ஆச்சரியம்! என்று மூன்று உலகத்திலிருக்கிறவர்கள் அறிந்தவர்களோ அறியாதவர்களோ எல்லாரும் ஒரேவிதமாய் நினைப்பவர்களுக்கு மனது குளிரும்படி செய்கிற உன் நல்ல குணங்களைக் கண்டு ஆச்சரியப்படவும், நீ நடந்துவருகிற அழகைக் கண்டு மிகுந்த ஸந்தோஷத்தினால் நாங்கள் கூத்தாடி நிலையாய்க் கூச்சல் போடவும், ஒரு மேகமானது ஸ்படிகம்போல் சுத்தமான ஸமுத்ர ஜலத்தைக் குடித்து, அத்து

டன் கூட தனக்குள்ளே வந்த பவழமானது வெளியில் படர்ந்தால் எப்படி அழகாயிருக்குமோ, அப்படி அழகாய் உன்னுடைய நீலமான திருமேனியில், கோவைப் பழம்போல் விளங்கும் திருப்பவளம் எங்களுடைய பரபரப்பைப் பார்த்து மந்தஹாஸம் செய்து அதினால் மிகவும் சிவக்கும்படியும் நாங்கள் காணும்படி நீ நடந்துவரவேண்டும்.

இ—ம். ஆள்வாய் - வினையாலணையும் பெயரின்விளி வேற்றுமை. (4)

பவளம்போற் கனிவாய் சிவப்பநீ காண
வந்துநின் பன்னிலா முத்தம்
தவிழ்கதிர் முறுவல் செய்துநின் திருக்கண்
டாமரை தயங்கநின் றருளாய்
பவளநன் படர்க்கீழ்ச் சங்குறை பொருநல்
தண்திருப் புளிங்குடிக் கிடந்தாய்
கவளமா களிற்றி னிடர்கெடத் தடத்துக்
காய்சினப் பறவை யூர்ந்தானே. (5)

(ப-ரை) நல் பவளம் - நல்லபவழங்களுடைய, படர் கீழ் - செடிகளின் கீழே, சங்கு, உறை - இருக்கிற, பொருநல் - தாம்ரபர்ணியையுடைய, திருப்புளிங்குடிக் கிடந்தானே - திருப்புளிங்குடியில் கண்வளர்ந்திருக்கிறவனே! கவள மா களிற்றின் - கபளங்களை உண்ணுகிற பெரிய யானையின், இடர் - துக்கமானது, கெட - போவதற்காக, தடத்து - தடாகத்திலே, காய் சினம் - (சத்ருக்களைச்) சுடுகிற கோபத்தையுடைய, பறவை - கருடபக்ஷியை, ஊர்ந்தானே - நடத்தினவனே! பவளம்போல் கனிவாய், சிவப்ப - சிவக்கும்படியும், நீ காண வந்து, நின்பல் - உன்னுடைய தந்தங்களாகிய, நிலா முத்தம் - நிலாவையுடைய முத்துக்களின், கதிர் - காந்தியானது, தவிழ் - (உள்ளடங்காமல் மேலே) தவழும்படியும், முறுவல் செய்து - மந்தஹாஸம் செய்து, நின் - உன்னுடைய, திருக்கண் தாமரை, தயங்க - (ஸந்தோஷத்தாலே) அழகாய் பிரகாசிக்கும்படியும், நின்றருளாய்.

(கருத்து) பவளக்கொடிகளின் கீழே சங்குகள் இருக்கும்படியான தாம்ரபர்ணியின் கரையிலிருக்கிற திருப்புளிங்குடி

யில் பள்ளிகொண்டிருப்பவனே ! இந்த ஊரில் சங்குகள் பவழக் கொடிகளைச் சேர்ந்து ஸுகமாக இருக்கும்போது நான் மாத்திரம் உன்னுடைய பவளம்போன்ற திருப்பவளத்தைக் காணமலுமிருக்கலாமோ ? கபளங்களை யுண்டு ஒரு வருத்தத்தையும் அறியாமல் மதங்கொண்டிருந்த பெரிய கஜேந்திராழ்வான் முதலையால் பிடிக்கப்பட்டபோது, அந்தக் காலத்தில் அந்த குளத்தின் கரையில் சத்ருக்கள் விஷயத்தில் கோபம் ஜ்வலிக்கிற கண்களையுடைய பக்ஷிராஜன்மேல் ஏறிக்கொண்டு, அதின் வேகம் போதாதென்று அவனைத் தள்ளிக்கொண்டு நடத்தினவனே ! அந்த யானைக்கு வந்ததுபோல் நான் கண்ணாலே பார்க்கும்படி வந்தருளவேணும். மனதில் தோன்றுவது மாத்திரம் போதாது. பவழம் போன்ற உன் திருப்பவளமானது என்னைக்கண்ட ஸந்தோஷத்தாலே மிகவும் சிவக்கும்படியும், உன்னுடைய தந்தங்களாகிய திருமுத்துக்களின் காந்தியானது உள்ளடங்காமல் வெளியில் தவிழும்படியும், மந்தஹாஸம் செய்து, உன்னுடைய தாமரைக் கண்கள் தயங்தும்படியும் என் முன்னே வந்து நாலடி வந்த ஸந்தோஷத்தாலேயே மேலே நடக்க முடியாமல் நின்றருளவேண்டும். (5)

---

காய்சினப் பறவை யூர்ந்துபோன் மலையின்
மீமிசைக் கார்முகில் போல
மாசின மாலி மாலிமா னென்றங்
கவர்படக் கனன்றுமுன் னின்ற
காய்சின வேந்தே கதிர்முடி யானே
கலிவயல் திருப்புளிங் குடியாய்
காய்சின வாழி சங்குவாள் வில்தண்
டேந்தி யெம்மிடர் கடிவானே. (௬)

(ப-ரை) காய்சினம் - (ஆச்ரிதர்களின் விரோதிகள் விஷயத்தில்) சுடுகிற கோபத்தையுடைய, ஆழி - திருவாழி, சங்கு, வாள் - கத்தி, வில், தண்டு - கதை, (இவைகளை) ஏந்தி - (திருக்கைகளில்) வைத்துக்கொண்டு, எம் - எங்களுடைய, இடர் - பாபங்களை, கடிவானே - போக்கப் பாத்தியப்பட்டவனே! பொன் மலையின் மீ மிசை - பொன் மலையின் மேலே யிருந்த, கார்முகில் போல - கருத்த மேகம்போல, காய்சினம் - (சத்ருக்கள் விஷ

யத்தில்) சுடுகிற கோபத்தையுடைய, பறவை - கருட பக்ஷியை, ஊர்ந்து - நடத்திக்கொண்டு, மா சினம் - மிகுந்த கோபத்தை யுடைய, மாலி, மான்மாலி - பெரியமாலி (ஸுமாலி என்கிற ராக்ஷஸன்), அங்கு - அந்தச் சண்டையில், பட - படும்படி, கனன்று - எரிந்து (கோபித்து), முன் நின்ற - (அவர்கள்) முன்னே நின்ற, காய்சினம் (ஆச்ரிதர்களின் விரோதிகள் விஷயத்தில்) சுடுகிற கோபத்தையுடைய, வேந்தே - ஸ்வாமியே! கதிர் முடியானே - கிரணங்களையுடைய கிரீடத்தை யுடையவனே! கலி - ஸந்தோஷப்படுகிற (பயிர்களின் ஸம்ருத்திகளுள்ள) வயல் - வயல்களையுடைய, திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலிருப்பவனே!

(கருத்து) 'நீர் ஆசைப்படுவதை உடனே செய்யமுடியுமோ? இடையூறுகள் இருக்கின்றனவே' என்று சொல்லுகிறாயோ? அவைகளைப் போக்குவதற்காக அன்றோ திருவாழி முதலான ஐந்து ஆயுதங்களை நீ ஏந்திகொண்டிருக்கிறது. பொன் மலையின்மேல் ஒரு கறுப்பு மேகம் இருப்பதுபோல், சத்துருக்கள் விஷயத்தில் ஜ்வலிக்கிற கோபத்தையுடைய கருடன்மேல் ஏறிக் கொண்டுபோய், முன்னாலே ஒரு சண்டையில் மிகுந்த கோபமுள்ள மாலி ஸுமாலி மாலியவான் முதலானவர்கள் முன்பு கோபத்துடன் நின்று அவர்களை நாசம் பண்ணினதுபோல் என்னுடைய இடையூறுகளையும் நீயே போக்கவேண்டும். பயிர் ஸம்ருத்தியையுடைய வயல்களால் சூழப்பட்ட திருப்புளிங்குடியில் எழுந்தருளியிருப்பவனே! சத்துருக்களை ஜயித்த ஸ்ரீ விளங்குகிற கிரீடத்தையுடையவனே! நான் நினைத்த வேண்டினதைச் செய்தருளவேண்டும்.

இ—ம். கலி - களி; போலி. (௬)

---

எம்மிடர் கடிந்திங் கென்னை யாள்வானே
யிமையவர் தமக்குமாங் கனேயாய்
செம்மடன் மலருந் தாமரைப் பழனத்
தண்டிருப் புளிங்குடிக் கிடந்தாய்
நம்முடை யடியர் கவ்வை கண்டுகந்து
நாங்க ளித்தள நலங்கூர
இம்மட வுலகர் காணநீ யொருநா
ளிருந்திடா யெங்கண்கண் முகப்பே. (௭)

(ப-ரை) எம் இடர் - (ஸம்ஸாரத்திலுண்டாகும்) எங்களுடைய துக்கங்களை, கடிந்து - போக்கி, இங்கு - இந்த உலகத்திலே, என்னை, ஆள்வானே - அடிமைகொள்ளுகிறவனே ! இமையவர் தமக்கும் - பிரம்மா முதலான தேவர்களுக்கும், ஆங்கனையாய் - அப்படியே யிருக்கிறவனே, செம்மடல் - சிவந்த இதழ்கள், மலரும் - விகஸிக்கும், தாமரை - தாமரைப் பூக்கள்நிறைந்த, பழனம் - நீர் நிலங்களால் சூழப்பட்ட, தண் - குளிர்ந்த, திருப்புளிங்குடி கிடந்தாய், நம்முடைய அடியர் - 'இவர்கள் நமக்கு அடியவர்கள்' என்று நீ சொல்லும்படி உனக்கே சேஷமாயிருக்கும் நித்யஸூரிகளுடைய, கவ்வை - (உன்னை அநுபவிக்கிற) கோலாஹலத்தை, கண்டு, நாம் உகந்து - நாங்கள் ஸந்தோஷப்பட்டு, களித்து - (மேன்மேலும்) ஆனந்தத்தையடைந்து, உளம் - மனதில், நலம் - ஸ்நேஹமானது, கூர - விருத்தியடையும்படி, இ மட உலகர் - இந்த அறிவில்லாத உலகத்தார், காண - பார்க்கும்படி, நீ, எங்கள் கண்முகப்பே - எங்களுடைய கண்களுக்கு முன்னாலே, ஒரு நாள், இருந்திடாய் - உட்கார்ந்திருக்கவேண்டும்.

(கருத்து) ஸம்ஸாரத்தில் உண்டாகும் எங்களுடைய துக்கங்களைப் போக்கி, இந்த இளப்பமான உலகத்தில் மிகவும் தாழ்ந்த எங்களை அடிமைகொள்ளுகிறவனே! இப்படியே பிரம்மா முதலான தேவர்களையும் அடிமைகொள்ளுகிறவனே! இவர்கள் உயர்ந்தவர்கள் இவர்கள் தாழ்ந்தவர்கள் என்று பாராமல் நீ எல்லாரையும் ரக்ஷிக்கிறனவல்லா ? சிவந்த இதழ்கள் மலரும் தாமரைப் பூக்கள் நிறைந்த திருப் புளிங்குடியில் பள்ளிகொண்டிருப்பவனே ! 'நம்முடைய அடியவர்கள்' என்று நீ சொல்லும்படி உனக்கே சேஷமாயிருக்கிற நித்யஸூரிகள் உன்னை அநுபவித்துப்படுகிற பாட்டைக் கண்டு நாங்கள் ஸந்தோஷப்பட்டு மேன்மேலும் ஆனந்தமடைந்து எங்கள் மனதில் ஸந்தோஷம் வளரும்படி இந்த அறிவில்லாத உலகத்தார் காணும்படி எங்கள் கண்களுக்கு முன்னாலே உட்கார்ந்திருக்கவேண்டும்.

குறிப்பு— ஐந்தாம் பாட்டில் நீ என் முன்னாலே இருக்கவேணும் என்று பிரார்த்தித்து, நடுவில் வந்த ஸந்தேஹத்தை ஆறும் பாட்டில் தீர்த்தார்; மூன்றும் பாட்டில் சொன்னபடி கண்களுக்கு முன்னாலே உட்கார்ந்திருக்கவேண்டும் என்று இதில் சொல்லுகிறார். ஆனால் அதில் படுக்கையைவிட்டு எழுந்

திருக்கவேணும் என்பதில் கருத்து; இதில் உட்கார்ந்திருக்க வேணும் என்று வேண்டப்படுகிறது. (7)

---

எங்கள் கண்முகப்பே யுலகர்க ளெல்லா
மிணையடி தொழுதெழு திறைஞ்சித்
தங்களன் பாரத் தமதுசொல் வலத்தால்
தலைத்தலைச் சிறந்து பூசிப்பத்
திங்கள்சேர் மாடத் திருப்புளிங் குடியாய்
திருவைகுந் தத்துள்ளாய் தேவா
இங்கண்மா ஞாலத் திதனுளு மொருநா
ளிருந்திடாய் வீற்றிடங் கொண்டே. (அ)

(ப-ரை) திங்கள் சேர் மாடம் - சந்திரனைச் சேருகிற வீடுகளையுடைய திருப்புளிங்குடியாய், திருவைகுந்தத்து உள்ளாய், தேவா - (ஸௌசீல்யம் என்கிற குணத்தாலே) விளங்குகிறவனே! எங்கள் கண் முகப்பே - எங்களுடைய கண்ணுக்கு முன்னாலே, உலகர்கள் எல்லாம் - உலகத்திலிருக்கிறவர்கள் எல்லாரும், இணை அடி - (ஒன்றுக்கொன்று அழகால்) ஒத்திருக்கிற உன் திருவடிகளை, தொழுது - ஸேவித்து, எழுது - பெருமையை அடைந்து, இறைஞ்சி - ஆச்ரயித்து (உன்னைத் தங்களுக்கு ரக்ஷகனாகத் திர்மானம் பண்ணி), தங்கள் அன்பு - (உன்னிடத்தில்) தங்களுக்கு ஸ்நேஹம், ஆர - பூர்ணமாயிருக்க, தமது - தங்களுடைய, சொல் வலத்தால்-சொல் பலத்தாலே (சொல்லும் ஸாமர்த்தியத்துக்குத் தகுந்தபடி), தலைத்தலைச்சிறந்து-நான் முன்னாலே நான்முன்னாலே என்றுபோட்டி போட்டுக்கொண்டு, பூசிப்ப-பூஜை செய்யும்படி, இங்கண் மா ஞாலத்து-பெரிய இடத்தையுடைய இந்தப் பூமியில், இதனுளும் - இந்த ஊரிலும், இடம்கொண்டு - உட்காருவதற்கு இடத்தையெடுத்துக்கொண்டு, வீற்று - பெருமையை அடைந்து, ஒருநாள், இருந்திடாய் - இருந்தருளவேணும்.

(கருத்து) 'நீர் சொல்வதெல்லாம் வைகுந்தத்துக்கு வந்த பிறகு செய்கிறேன்' என்று நினைத்துப் பேசாமலிருக்கிறீரோ ? அதுவரையில் பொறுத்திருக்கமுடியாது. சந்திரனைச் சேரும்படி உயர்ந்திருக்கிற வீடுகளையுடைய திருப்புளிங்குடியிலிருக்கிறவனே ! ஸ்ரீவைகுண்டம் என்கிற ஊரிலிருக்கிறவனே !

ஸௌசீல்யம் என்கிற உன் குணத்தாலே வைகுந்தத்தைக் காட்டிலும் இங்கே அதிகமாய் விளங்குகிறவனே! எங்கள் கண்களுக்கு முன்னாலே யிருந்து இந்த உலகத்திலுள்ளவர்கள் எல்லாரும் அழகாலே ஒன்றையொன்று ஒத்திருக்கிற உன் திருவடிகளை ஸேவித்துக் கிருதார்த்தர்களாய், உன்னையே தங்களுக்கு ரக்ஷகனாகத் தீர்மானித்து, தங்கள் ஸ்நேஹம் வளரும்படி சொல்லுவதற்குத் தகுந்த தங்களுடைய சக்தியாலே நான் முன்னாலே நான் முன்னாலே என்று மேல் விழுந்து ஸ்தோத்திரம் பண்ணும்படியாக, நீ அவதாரம் பண்ணும்படி சிலாக்கியமான இந்த விசாலமான பூமியிலேயே இந்தத் திருப்புளிங்குடியில் ஓர் இடத்தை ஏற்பாடு செய்துகொண்டு, அதில் பிராட்டியுடன் கூட உங்களுடைய சேர்த்தியின் அழகு தோன்றும்படி ஒரு நாளாகிலும் உட்கார்ந்திருக்கவேண்டும்.

இ—ம். எழுது - எழுந்து, வினையெச்சம். (8)

---

வீற்றிடங் கொண்டு வியன்கொண் மாஞாலத்
திதனுளு மிருந்திடா யடியோம்
போற்றி யோவாதே கண்ணிணை குளிரப்
புதுமல ராகத்தைப் பருகச்
சேற்றிள வாளை செந்நெலூ டுகளும்
செழும்பணைத் திருப்புளிங் குடியாய்
கூற்றமா யசுரர் குலமுத லரிந்த
கொடுவினைப் படைகள் வல்லானே. (கூ)

(ப-ரை) செந் நெல் ஊடு - சிவந்த நெல் பயிர்களின் நடுவிலே, சேறு - சேற்றில், இளவாளைகள் - இளவயதுள்ள வாளை மீன்கள், உகளும் - மேலேகிளம்பும், செழும்பணை- அழகான நீர்நிலங்களையுடைய, திருப்புளிங்குடியாய்! கூற்றமாய் - யமனாய் - அசுரர் குலம் - அஸுரர்களின் குலத்தை, முதல் அரிந்த - வேரிலேயே அறுத்தவனே! கொடுவினை - (ஆச்ரிதர்களின் விஷயத்திலே) கொடிய வேலையைச் செய்யும், படைகள் - ஆயுதங்களை வல்லானே - (உனக்கு இஷ்டமான வேலைகளில் ஏவும்படி) சக்தியுள்ளவனே! அடியோம் - தாஸர்களான நாங்கள், போற்றி -

ஸ்தோத்ரம் பண்ணி, கண் இணை - இரண்டு கண்களும், குளிர, புது மலர் ஆகத்தை - அப்போது மலர்ந்த புஷ்பத்தை (ப்போல மிருதுவான) உன் திருமேனியை, ஓவாதே - இடைவிடாமல், பருக - பாநம்பண்ணி, வியன்கொள் - விசாலத்தைக்கொண்டிருக்கிற, மா ஞாலத்து - இந்தப் பெரிய பூமியில், இதனுளும் - இந்த ஊரிலும், இடம் கொண்டு - இருப்பிடத்தை ஏற்பாடு செய்துகொண்டு, வீற்று - உன் பெருமை தோன்றும்படி, இருந்திடாய் - நீ இருக்கவேணும்.

(கருத்து) பழுத்துப் பொன் வர்ணமுள்ள நெற் பயிர்களின் நடுவிலே இளவயதுள்ள வாளைமீன்கள் துள்ளி விளையாடுகிற அழகான நீர் நிலங்களையுடைய திருப்புளிங்குடியில் பள்ளிகொண்டிருப்பவனே! அஸுரர்கள் குலங்களுக்கு யமனாய் அவைகளை வேருடன் அறுக்கிறவனே! ஆச்ரிதர்களின் விரோதிவிஷயத்தில் கொடுமையான வேலைகளைச் செய்யும் திருவாழி முதலான ஆயுதங்களை உனக்கு இஷ்டமான வேலைகளில் ஏவும்படி சக்தியுள்ளவனே! தாஸர்களாகிய நாங்கள் உன்னை ஸ்தோத்ரம் பண்ணவும் அப்போது மலர்ந்த புஷ்பத்தைப்போல மிருதுவாயிருக்கிற திருமேனியை உன்னைக் காணவேணுமென்று விடாய்த்த இரண்டு கண்கள் குளிரும்படியும் அவைகளால் இடைவிடாமல் பாநம் பண்ணும்படியும், இந்த விசாலமான பூமியிலே இந்த ஊரிலே உனக்கு இருப்பிடத்தை ஏற்பாடு செய்துகொண்டு, நீ எல்லாரைக் காட்டிலும் விலக்ஷணனாயிருக்கிறாய் என்கிற உன் பெருமை தோன்றும்படி உட்கார்ந்திருக்கவேண்டும்.

குறிப்பு— (1) 'சேற்றில்' என்பதற்கு அந்த ஊரில் ஜலஸமிருத்தியாலே வயல்களில் எப்போதும் சேறு இருக்கிறதென்பது கருத்து.

(2) 'உகளும்' என்பதற்கு, அந்த ஊரிலுள்ள பிராணிகள் எல்லாம் தங்களுக்கு வேண்டியதை அடைந்து ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கையில், நானும் எனக்கு வேண்டியதை அடையவேண்டாமோ என்பது.

(3) 'வியன்கொள் ஞாலம்' என்றவிடத்தில், 'வியன்' என்பதற்கு ஆச்சரியமான என்று பூர்வர்கள் வியாக்யானம். இங்கே ஆச்சரியமாவது— எல்லாவிதமான பந்துவாய் மிகவும்

உயர்ந்த புருஷார்த்தமாயிருக்கிற எம்பெருமானை மனதாலேகூட ஜநங்கள் நினைக்காதது.

(4) ஆச்ரிதர்களுடைய துக்கங்களைப் போக்கச்சக்தியுள்ளவனாய் நீ இருக்க, என் விஷயத்தில் அதைச் செய்யாமல் இருக்கலாமோ என்பது நான்காம் அடியின் கருத்து. (9)

---

கொடுவினைப் படைகள் வல்லையா யமரர்க்
கிடர்கெட வசுரர்கட் கிடர்செய்
கடுவினை நஞ்சே யென்னுடை யமுதே
கலிவயற் றிருப்புளிங் குடியாய்
வடிவிணை யில்லா மலர்மகள் மற்றை
நிலமகள் பிடிக்கும் மெல்லடியைக்
கொடுவினை யேனும் பிடிக்க நீயொருநாள்
கூவுதல் வருதல் செய்யாயே. (ம)

(ப-ரை) கொடு வினை - கொடுமையான செயல்களையுடைய, படைகள்-(திருவாழி முதலான) ஆயுதங்களை, வல்லையாய்-எடுக்கச் சக்தியுள்ளவன் ஆகி, அமரர்க்கு-(ஆச்ரிதர்களான) தேவர்களுக்கு, இடர் கெட - (அஸுரர்களாலுண்டான) துன்பம் போகைக்காக, அசுரர்க்கு - அந்த அஸுரர்களுக்கு, இடர் செய் - துக்கங்களை (ஸ்வபாவமாய்)செய்கிற, கடு வினை நஞ்சே-சீக்கிரம் வேலைசெய்கிற விஷமாயிருக்கிறவனே! என்னுடை - என்னுடைய, அமுதே - அமிருதமே! கலி வயல் - ஸமிருத்திகளையுடைய வயல்களை உடைய, திருப்புளிங்குடியாய்! வடிவு இணை இல்லா - திருமேனி அழகில் ஒப்பில்லாத, மலர் மகள் - பெரிய பிராட்டியும், மற்றை நிலமகள் - வேறு மஹிஷியான பூமிப்பிராட்டியும், பிடிக்கும் - (கூச்சத்துடன்) பிடிக்கும், மெல் அடியை - மிருதுவான திருவடிகளை, கொடு வினையேனும் - கொடிய பாபங்களையுடைய நானும், பிடிக்க - பிடிப்பதற்காக, நீ ஒருநாள், கூவுதல் - என்னை உன்னிடம் கூப்பிட்டுக்கொள்ளுதலை, வருதல் - அல்லது இங்கே நீ வருகையை, செய்யாய் - செய்யவேண்டும்.

(கருத்து) ஆச்ரிதர்களின் விரோதி விஷயத்தில் கொடுமையான வேலைகளைச் செய்கிற திருவாழி முதலான ஆயுதங்களை எடுக்கச் சக்தியுள்ளவன் ஆகி ஆச்ரிதர்களான தேவர்களுக்கு

அஸுரர்களாலே துன்பமுண்டானபோது, அந்தத் துன்பம் போவதற்காக அஸுரர்கள் விஷயத்தில் துக்கத்தைச் சீக்கிரம் செய்யும்படியான விஷம் போலிருக்கிறவனே! எனக்கு அளவில்லாத இனியவனாய் என்னை உஜ்ஜீவிக்கும்படி செய்கிறவனே! ஸம்ருத்தியுள்ள வயல்களையுடைய திருப்புளிங்குடியிலிருப்பவனே! தாமரைப் பூவிலிருக்கிற அழகில் ஒப்பில்லாத பிராட்டியும் அவளைப்போலிருக்கிற மற்றொரு மஹிஷியான பூமியும் நம்முடைய கை பட்டால் வாடிப்போய்விடுமோவென்று கூச்சத்துடன் பிடிக்கும்படி மிருதுவான உன் திருவடிகளை அவைகளின் போக்யதையை அறிந்தும் அவைகளைக் காணப்பெறாதபடி பாபம் பண்ணின நானும் பிடிக்கவேணும். அதற்காக என்னை உன்னிடம் அழைத்துக்கொள். அல்லது, என்னிடம் நீ இங்கே வரவேணடும். இரண்டில் ஒன்றைச் செய்யவேண்டும்.

குறிப்பு— (1) சிலருக்கு விஷமாயிருப்பதே ஆழ்வாருக்கு அமிருதமாயிருக்கிறதென்பது "நஞ்சே அமுதே" என்கிற சொற்களின் கருத்து

(2) 'மலர்மகள்' என்பதற்கு, தாமரைப்பூவின் அழகும் வாஸனையும் மிருதுவாயிருக்கும் தன்மையும் சேர்ந்து ஒரு ரூபத்தை எடுத்துக்கொண்டிருப்பதுபோல் இருக்கிறாள் பெரிய பிராட்டி என்பது கருத்து.

(3) 'படைவல்லாய்' என்பதற்கு, ஆச்ரிதர்களின் விரோதிகள் விஷயத்திலேயே எம்பெருமானுக்கு ஆயுதங்களை எடுக்கச் சக்தியுண்டு; மற்றவர்கள் விஷயத்தில் அஃதில்லையென்பது கருத்து. "ஸுக்கிரீவனே! வந்திருக்கிறவன் விபீஷணனோ? அல்லது ராவணனேயோ? யாராயிருந்தாலும் அவனை அழைத்துக்கொண்டுவா, அவனுக்கு நான் அபயம் கொடுத்துவிட்டேன்" என்று சொன்னவன் அல்லவோ அவன்.

(4) ஆண்மையில் எம்பெருமானுக்கு எப்படி ஒப்பில்லையோ, அப்படியே பிராட்டிக்கும் அழகில் ஒப்பில்லை என்பது "வடிவிணை இல்லா" என்பதின் கருத்து. "பார்ப்பவர்களுடைய கண்களையும் மனதையுமிழுக்கிறவன்" என்று வால்மீகியால் கொண்டாடப்பட்ட அவனும் அழகில் இவளுக்கு ஒப்பில்லை என்பதும் கருத்து.

இ—ம். இல்லா - இல்லாத; ஈறுகெட்ட எதிர்மறைப்பெய ரெச்சம். வல்லே - முன்னிலை ஒருமை வினையால் அணையும் பெயர். செய்யாய் - ஒருமை ஏவல் வினைமுற்று. (10)

---

கூவுதல் வருதல் செய்திடா யென்று
குரைகடல் கடைந்தவன் றன்னை
மேவிநன் கமர்ந்த வியன்புனற் பொருநல்
வழுதி நாடன் சடகோபன்
நாவியல் பாட லாயிரத் துள்ளு
மிவையுமோர் பத்தும் வல்லார்கள்
ஓவுத லின்றி யுலகம் மூன்றளந்தா
னடியிணை யுள்ளத்தோர் வாரே. (கக)

(ப-ரை) குரை கடல் - கோஷிக்கிற ஸமுத்ரத்தை, கடைந் தவன் தன்னை, மேவி - பிரீதியுடன், கூவுதல், வருதல், செய்தி டாய் என்று, நன்கு - நன்றாக, அமர்ந்த - கிட்டின, வியன்புனல் - ஆச்சரியமான ஜலத்தையுடைய. பொருநல் - தாம்ரபர்ணியை யுடைய, வழுதிநாடன் சடகோபன், நா இயல்-நாக்கின் வியாபா ரமான, பாடல் ஆயிரத்துள், இவையும் ஓர் பத்தும், வல்லார்கள், உள்ளத்து - மனதில், உலகம் மூன்று, அளந்தான் - அளந்த ஸ்வாமியினுடைய, அடியிணை - இரண்டு திருவடிகளை, ஓவுதல் இன்றி - ஒழிவில்லாமல், ஓர்வார் - நினைக்கப்பெறுவார்.

(கருத்து) கடையமுடியாதபடி அலைகள் ஓங்கிக் கோஷித் துக்கொண்டிருந்த திருப்பாற்கடலைக் கடைந்தவனையே மிகவும் உயர்ந்த பிராப்யமாக எண்ணி, கூவுதல் வருதல் செய்திடா யென்று வேறு பிரயோஜநத்தைத் தேடாமல் கிட்டினவரும், ஆச்சரியமான ஜலத்தையுடைய தாம்ரபர்ணி ஓடுகிற வழுதி நாட்டில் அவதாரம் செய்தவருமான ஆழ்வார் வாக்கின் வியா பாரமாகவே அருளிச்செய்த ஆயிரம் பாட்டுக்களுள்ளே இந்தப் பத்துப் பாட்டுக்களையும் படிக்கச் சக்தியுள்ளவர்கள் ஆச்ரிதர் களுக்கு ஸுலபனும் மூன்று உலகங்களையும் அளந்த ஸ்வாமி யினுடைய இரண்டு திருவடிகளை இடைவிடாமல் மனதால் நினைக்கப்பெறுவர்கள்.

குறிப்பு— 'நாவியல்' என்கிற விடத்தில், திருவாய்மொழி ஆயிரமும் ஆழ்வாரின் வாக்கின் வியாபாரம்; மனதின் வியாபாரமன்று. பாட்டுக்களைச் செய்வதில் மனதுக்கு வியாபாரமில்லை. அவைகளே ஆறுபோல் நாக்கிலிருந்து ஓடிவந்தன என்பது கருத்து.

குறிப்பு— 'வியன்' என்பதைப்பற்றி 9-ம் பாட்டின் 3-வது குறிப்பைப் பார்க்க. இங்கே ஆச்சரியமாவது— ஸம்ருத்தியுள்ளதாயிருப்பது. (11)

---

ஶ்ரீஸம்பந்தாத் பூமிமித்யா ஸரோஜ-
ஶ்ரீநேத்ரத்வாத் திவ்யதேஶேஷு ஸ்தித்யா ஸ்தாநாத்
நாகேந்த்ரத்ராணாத் ; தார்க்ஷ்யாம்ஸேந வைரிஸம்ஹாரி-
ஹண நிர்வாணாத் தேவதுர்க்ராஹதாத்யை கா(ந்)த்யா ஹேதீநாம்
நாஶேந் ஹேத்யாஸுராணாம் ஸ்வாமித்வம் வ்யக்தயாமாஸ ॥ ௨௦ ॥

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் வெகு நாள் அடங்கி, கிருபையைச் செய்கிறவன் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) பிராட்டியுடன் சேர்ந்து ஒருபோதும் பிரியாதிருப்பது; (2) பூமியை யளந்தது; (3) தாமரைக் கண்ணனாயிருப்பது; (4) திவ்ய தேசங்களில் படுத்திருப்பது நிற்பது முதலான தன் வியாபாரங்களாலே தன்னைச் சேர்ந்தவர்களின் மனதை இழுப்பது; (5) கஜேந்திராழ்வானை ரக்ஷித்தது; (6) கருடன் தோள்களில் ஏறிக்கொண்டு விரோதிகளை நாசம் பண்ணினது; (7) தேவர்களால் அடையமுடியாமலிருப்பது; (8) காந்தியுள்ளவனாயிருப்பது; (9) திருவாழி முதலான ஆயுதங்களை எடுக்கச் சக்தியுள்ளவனாயிருப்பது; (10) கொடுவினையுடைய அஸுரர்களை நாசம் செய்தது. (104)

# மூன்றாம் திருவாய்மொழி.



அவ— கீழ்த் திருவாய்மொழியில், சொன்னபடி ஆழ்வார் வேண்டினபோது எம்பெருமான் "நீர் இப்படி பிரார்த்திக்க வேண்டுமோ? அநாதியாகவும் விடமுடியாதபடியும் என்னோடு உமக்கு ஸம்பந்தமில்லையா? ஆகையால் நீர் வேண்டுகிறதெல்லாம் தகப்பன் ஸொத்துப் பிள்ளைக்கு வருவதுபோல் தானாகவே உமக்குக் கிடைக்கும்" என்று சொல்ல, அதைக் கேட்டு அந்தச் சொற்கள் அழகாயும் இனியவைகளாயுமிருப்பதாலே இழுக்கப்பட்ட மனதையுடையவராய், அவனிடமுள்ள ஸம்பந்தம் முதலானவைகளை நினைத்து, தாம் ஆசைப்பட்ட விஷயங்கள் கிடைக்காமையால் உண்டான தம்முடைய மனதின் வருத்தமெல்லாம் தீர்ந்து இந்தத் திருவாய்மொழியில் ஸந்தோஷப்படுகிறார்.

(கலிவிருத்தம்)

ஓரா யிரமா யுலகே ழளிக்கும்
பேரா யிரங்கொண்ட தோர்பீ டுடையன்
காரா யினகாள நன்மே னியினன்
நாரா யணனங் கள்பிரா னவனே. (க)

(ப-ரை) ஓர் - ஒரு திருநாமமே, ஆயிரமாய் - ஆயிரம் பிரகாரமாயிருந்து, உலகு ஏழு அளிக்கும் - ஏழு உலகங்களையும் ரக்ஷிக்கும்படியான, பேர் ஆயிரம் கொண்டது - ஆயிரம் திருநாமங்களையுடைய, ஓர் - ஒப்பில்லாத, பீடு உடையன் - பெருமையையுடையவனும், காராயின - மழை மேகமான, காளநன் மேனி இனன் - நீலமான நல்ல திருமேனியையுடையவனுமான, நாராயணன் - அவன், நங்கள் பிரான் - நமக்கு எல்லாருக்கும் ரக்ஷகன்.

(கருத்து) ஒரு திருநாமமே அர்த்தம் பண்ணுகிற பிரகாரத்தாலே ஆயிரம் பிரகாரமாயிருந்து, ஒவ்வொருவரையும் தனித்தனியே ரக்ஷிக்காமல் எல்லாரையும் சேர்த்து உலகம் முழுவதையும் அதையும் ஒவ்வொன்றாக ரக்ஷிக்காமல், ஏழு உலகங்களையும் சேர்த்து ரக்ஷிக்கும். இப்படி ரக்ஷிக்கிற ஆயி

ரம் திருநாமங்களுள்ளவனும் அதினால் ஒப்பில்லாத ஒரு பெருமையையுடையவனும், மழை மேகம்போல் நீலமான நல்ல திருமேனியையுடையவனும், அந்தத் திருநாமங்களுக்குள்ளே முக்கியமான நாராயணன் என்கிற திருநாமத்தாலே சொல்லப்பட்டவனுமான அவனே நமக்கு ரக்ஷகன், அவனே நமக்கு இயற்கையாலேயே ஒரு காரணத்தாலல்லாமல் ஸ்வாமி.

குறிப்பு— (1) 'ஆயிரமாய்' என்பதற்கு, 'பகவான்' என்கிற சொல்லில் ஒவ்வொரு எழுத்துக்கும் அர்த்தம் சொல்ல வந்த ப்ரமாணமானது 'ஃ' என்கிற எழுத்துக்கு உலகத்தை உண்டுபண்ணுவதற்கு வேண்டிய ஸாமக்கிரிகள் சேர்ந்திருக்கிறவன் என்றும், அதைத் தாக்குகிறவன் என்றும் சொல்லுகிறது. அதுபோல ஒவ்வொரு திருநாமமும் அர்த்தம் சொல்லுகிற வழியாலே எம்பெருமானுடைய பல குணங்களைச் சொல்லுகிறது. ஆகையால் ஒவ்வொரு திருநாமமும் ஆயிரமாயிருக்கிறது என்பது கருத்து.

(2) எல்லாருக்கும் விருந்து செய்கிறவன் சோற்றையும் தண்ணீரையும் நிறைய வைத்துக்கொண்டிருப்பதுபோல், உலகத்தை ரக்ஷிப்பதற்காக ஆயிரம் திருநாமங்களும் அந்தத் திருநாமங்களால் சொல்லப்படுகிற குணங்களும் ஆச்சரியமான லீலைகளும் அவனுக்கு இருக்கின்றன என்பதையும், இவ்விதமான பெருமையையுடையவன் என்பதையும்காட்டுகிறது "பீடுடையன்" என்கிற சொல்.

(3) திருமேனிக்கு நன்மையாவது—அழகு, நல்ல வாஸனை, மிருதுவாயிருக்கும் தன்மை, யௌவனம் முதலிய குணங்களுள்ளதாயிருப்பது.

(4) 'நாராயணன்' என்கிற சொல், எம்பெருமானுடைய ஸ்வரூபம் எப்போதும் ஒரேவிதமாயிருக்கிறதென்றும், அவனிடத்திலிருந்து எல்லாம் உண்டாகின்றன என்றும், எல்லாம் அவனுடைய ஸொத்து என்றும், அவன் எல்லாவற்றையும் தாக்குகிறவன் என்றும், எல்லா ஆத்மாக்களாம் அடையவேண்டியவன் அவனேயென்றும், அவனே அவர்களுக்கு அடைவதற்கு உபாயமென்றும், அவன் வேறுதேவதைகளைக்காட்டிலும் வேறுபட்டவன் என்றும், அவனே எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறான் என்றும் இன்னும் இவ்விதமான பல குணங்களைக் காட்டுகிறபடியால், அதுவே திருநாமங்களுள்ளே முக்கியமானது (1)

அவ:— பிரம்மாவும் ருத்திரனும் ஈசுவரன் அல்லர்களா? நாராயணனையே ஸர்வேச்வரன் என்று சொல்லலாமோ என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார்:—

அவனே யகல்ஞாலம் படைத்தி டந்தான்
அவனே யஃதுண்டு மிழ்ந்தா னளந்தான்
அவனே யவனு மவனு மவனும்
அவனே மற்றெல் லாமுமறிந் தனமே. (உ)

(ப-ரை) அவனே, அகல் ஞாலம் - விசாலமான பூமியை, படைத்து - உண்டுபண்ணி, இடந்தான் - பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்தான். அவனே, அஃது - அதை, உண்டு - சாப்பிட்டு, உமிழ்ந்தான், அளந்தான், அவனே, அவனும் - பிரம்மாவும், அவனும் - ருத்திரனும், அவனும் - இந்திரனும், அவனே, மற்று எல்லாமும் - வேறு எல்லாவஸ்துக்களும், (ஆகையால் அவனே ஸர்வேச்வரன் என்று) அறிந்தனம் - அறிந்தோம்.

(கருத்து) நாராயணனே இந்த விசாலமான பூமியையுண்டு பண்ணி, அது பிரளயஜலத்தில் மூழ்கியிருந்தபோது அதை மேலே கொண்டுவந்தான்; அவனே பிரளயகாலத்தில் உலகங்களை வயிற்றில் வைத்து ரக்ஷித்து, ஸ்ருஷ்டி காலத்தில் வெளிப்படுத்தினான். அவனே பூமியை அளந்து மஹாபலியிடமிருந்து எடுத்துக்கொண்டு இந்திரனுக்குக் கொடுத்தான். அவனே எல்லாருக்கும் ஆத்மாவாயிருந்து பிரம்மாவாகவும் ருத்திரனாகவும் இந்திரனாகவும் மற்ற எல்லா வஸ்துக்களாகவும் தோன்றுகிறான். ஆகையால் பிரம்மா முதலான சொற்கள் அவனையே சொல்லுகின்றன. இந்தக்காரணங்களால் நாராயணனே ஸர்வேசுவரன் என்று நான் அறிந்தேன்.

குறிப்பு:— 'அவனே அவனே' என்கிற விடங்களில் 'ஏ' என்கிற எழுத்துக்களுக்கு, இந்த வேலைகளைச் செய்யும்போது அவனுக்கு ஒரு துணையும் வேண்டியதில்லை; அவன் ஸங்கல்பமே போதும் என்பது கருத்து.

இ—ம். 'அவனே' என்கிற சொற்களில் ஏகாரத்திற்குப் பிரிநிலைப் பொருள்; மற்றவர்களிடமிருந்து அவனைப் பிரிக்கிறது. (2)

அவ:— கீழ்ப்பாட்டில் நாராயணன் ஸர்வேசுவரன் என்று தாம் அறிந்ததாகச் சொன்னார்; அதை விரிவாய்ச் சொல்லி அனுபவிக்கிறார்:—

அறிந்தன வேத வரும்பொரு ணூல்கள்
அறிந்தன கொள்க வரும்பொரு ளாதல்
அறிந்தன ரெல்லா மரியை வணங்கி
அறிந்தனர் நோய்க ளறுக்கு மருந்தே. (௩)

(ப-ரை) கொள்க - கொள்கைக்கு, (உள்ளபடி அறிய), அரும் - அருமையான, பொருள் - அர்த்தத்தை, அறிந்தன - அறிந்தவைகளும், வேதம்-வேதங்கள் என்பவைகளும், அரும்பொருள் - அருமையான அர்த்தத்தைக் காட்டுகிறவைகளுமான, நூல்கள் ஆதல் - நூல்களும், அறிந்தன - (நாராயணனை உள்ளபடி) அறிந்தவைகள், அறிந்தனர் எல்லாம் - நல்ல ஜ்ஞானமுள்ள எல்லாரும், அரியை - ஹரியை, வணங்கி - ஸேவித்து, நோய்கள் - (ஸம்ஸார துக்கங்களாகிய) வியாதிகளை, அறுக்கும் - அறுக்கத்தகுந்த, மருந்து - மருந்தாக, அறிந்தனர்.

(கருத்து) ஒருவராலும் செய்யப்படாததும், ஆதலால் ஒரு தோஷமுமில்லாததும், உள்ளபடி அறியமுடியாததுமான அர்த்தங்களைச் சொல்லுகிறதும், நாராயணனையுள்ளபடி அறிவிப்பதற்காகவே ஏற்பட்டதுமான வேதமென்கிற சாஸ்திரமும் அநேகமாயிரம் ஜந்மங்களில் செய்யப்பட்ட தபஸாலும் ஜ்ஞானத்தாலும் யோகத்தாலும் எல்லாப்பாபங்களும் போய் ஹரியைவணங்கி அவனுடைய திருவடிகளில் பக்தியுள்ளவர்களாயிருக்கிற வால்மீகி பராசர் வியாஸர் முதலான ருஷிகளும், அவனை ஸம்ஸாரத்திலுண்டாகிற துக்கங்களை, மருந்து வியாதிகளைத் தீர்ப்பதுபோல், தீர்க்கிறவனாக அறிந்திருக்கிறார்கள். இப்படி அவர்கள் அறிந்த அவனை அவர்களைப்போல் கஷ்டப்படாமல் நான் அறியப்பெற்றேன். இதென்ன ஆச்சர்யம்!

இதற்கு வேறுவிதமாயும் அர்த்தம் சொல்லலாம்— கொள்க அரும்பொருள் ஆதல் - எம்பெருமான் இவ்வளவு மஹிமையுள்ளவன் என்று அவனுடைய ஸ்வரூபத்தையாவது குணங்களையாவது உள்ளபடி அறியமுடியாது என்கிற விஷயத்தை வே

தங்களும் ருஷிகளும் அறிந்திருக்கிறார்கள். அப்படிப்பட்டவனை நான் அறிந்தேன். இஃதென்ன ஆச்சர்யம் என்பதாம்.

குறிப்பு — "அரி" என்கிற சொல்லுக்கு ஆச்ரிதர்களுடைய பாபத்தைப் போக்குகிறவன் என்பது பொருள்.

இ—ம். கொள்க - வினையெச்சம். கொள் + கு + அ. கு சாரியை. அரும்பொருள் - அன்மொழித்தொகை. முதல் அடியில் 'அறிந்தன' வினைமுற்றுப்பெயரெச்சம்; மற்றொன்று வினைமுற்று. மூன்றும் அடியில் 'அறிந்தனர்' வினையாலணையும் பெயர், மற்றொன்று பலர்பால் வினைமுற்று. ஆதல் என்பதற்கு உம்மைப் பொருள். (3)

---

அவ— தமக்குக்கிடைத்த எம்பெருமானுடைய ஜ்ஞாநமானது நிலையாயிருக்கவேண்டும் என்று ஆசைப்பட்டு தம்முடைய மனதை அவனை விடாதே என்று ஏவுகிறார்:—

மருந்தே நங்கள்போக மகிழ்ச்சிக் கென்று
பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும் பிரான்
கருந்தேவ னெம்மான் கண்ணன் விண்ணுலகம்
தருந்தேவனைச் சோரேற் கண்டாய் மனமே. (௪)

(ப-ரை) நங்கள் - நம்முடைய, போக மகிழ்ச்சிக்கு - (உன்னுடைய) அநுபவத்தாலேயுண்டாகும் ஆனந்தத்துக்கு, மருந்தே - ஸித்தர்கள் மருந்துபோல்விருத்திசெய்பண்ணுகிறவனே, என்று, பெரும் தேவர் குழாங்கள் - பெரிய தேவர்களான நித்யஸூரிகளுடைய கூட்டங்கள், பிதற்றும் - முன்னும் பின்னுமாய் ஸ்தோத்ரம் பண்ணும், பிரான் - உபகாரம் பண்ணுகிறவனும், கரும் தேவன் - நீலமான திருமேனியையுடையவனும், கண்ணன் - கண்ணனாக அவதாரம் செய்தவனும், எம்மான் - எனக்கு ஸ்வாமியும், விண் உலகும் தரும் - வைகுந்தமாகிய உலகத்தைக்கொடுக்கிறவனும் ஆன, தேவனை, மனமே - என்னுடைய மனமே ! சோரேல் - விடாதே, கண்டாய்.

(கருத்து) "உன்னுடைய அநுபவத்தாலே உண்டாயிருக்கிற எங்களுடைய ஆனந்தத்தை உன் அழகால் ஸித்தர்கள் மருந்துபோல் விருத்திபண்ணுகிறவனே!" என்று நித்யஸூரிகளின் கூட்

டங்கள் மூன்னும் பின்னுமாய் ஸ்தோத்ரம் பண்ணும்படி அவர்களுக்கு உபகாரம் செய்கிறவனுயிருந்து இந்த உலகத்தில் கண்ணனாய் அவதாரம் செய்து எல்லாருக்கும் ஸுலபனும் நித்ய ஸூரிகளுக்குக் கொடுக்கிற ஆநந்தத்தை நம்மைப் போன்றவர்களுக்கும் கொடுக்கும் ஸ்வபாவனும் எனக்கு ஸ்வாமியுமான நீலமான திருமேனியையுடைய எம்பெருமானை நாம் ஒருவிதமாய் அநுபவிக்கப் பெற்றோம். மனமே இனிமேல்! ஒரு க்ஷணமும் அவனை விடாதே.

இ—ம். சோரேல்—எதிர்மறை ஏவல் ஒருமை வினைமுற்று. பிதற்றும் - பெயரெச்சம், செயப்படு பொருளைக்கொண்டு முடிந்தது. (4)

---

அவ— அதிக ஆசையால் கீழ்ச் சொன்னதை உறுதிப் படுத்துகிறார்:—

மனமே யுன்னை வல்வினை யே னிரந்து
கனமே சொல்லினே னிதுசோரேற் கண்டாய்
புனமே வியபூந் தண்டுழா யலங்கல்
இனமே துமிலா னையடைவ துமே. (ரு

(ப-ரை) புனம் மேவிய - புனத்தில் (தன்னுடைய இடத்தில்) சேர்ந்திருக்கிற, பூம் - அழகான, தண் - குளிர்ந்த, துழாய் அலங்கல் - துளஸி மாலையையுடையவனும், இனம் ஏதும் இலானை - (தான் போக்யமாயிருப்பதில்) உபமானம் ஒன்றுமில்லாதவனும் ஆன எம்பெருமானை, அடைவதும் - (ஒரு க்ஷணமும் விடாமல்) அநுபவிக்கவேணும், மனமே - மனமே, இது - இதை, சோரேல் கண்டாய் - விடாதே, உன்னை, வல் வினையேன் - பலமான பாபம் செய்த நான், இரந்து - யாசித்து, கனமே சொல்லினேன் - திருடமாகச் சொன்னேன்.

(கருத்து) தானுண்டான நிலத்தில் இருப்பதுபோல் விளங்குகிற அழகான குளிர்ந்த துளஸியை மாலையாக உடையவனும், தான் போக்கியமாக இருப்பதில் உபமானமில்லாதவனுமான எம்பெருமானை ஒரு க்ஷணமும் விடாமல் அநுபவிக்கவேண்டும். மனமே! இந்த விஷயத்தை ஒரு க்ஷணமும் மறந்து போகாதே; உன்னை நான் யாசித்து உறுதியாய்ச் சொல்லுகிறேன்; என் இப்படி

வேண்டுகிறாய் என்கிறாயோ? அயலாரைப்போல் உன்னையும் வேண்டும்படி பாபம் பண்ணியிருக்கிறபடியால் இப்படிச் சொல்லுகிறேன்.

இ—ம். அடைவது - அடைதல் - தொழிற் பெயர். அடைவதைச் சொன்னேன் என்று அந்வயம். அடைவதைச் சொரேல் என்றும் அந்வயமாம். வினைமுற்றாகவும் கொள்ளலாம். (5)

---

அவ— தாம் கேட்டுக்கொண்டது ஸபலமாயிற்று என்று தம்முடைய மனதைக் கொண்டாடுகிறார்.—

அடைவது மணியார் மலர்மங் கைதோள்
மிடைவது மசுரர்க் குவேம்போர் களே
கடைவதுங் கடலுள முதமேன் மனம்
உடைவது மவற்கே யொருங்கா கவே. (௬)

(ப-ரை) அடைவதும் - சேருவதும், அணி - திருவாபரணங்கள், ஆர் - நிறைந்த, மலர் மங்கை தோள் - தாமரைப் பூவில் எப்போதும் யௌவனத்துடன் இருக்கும் பிராட்டியுடைய தோள்கள்; மிடைவதும்-நெருங்கிச் (இடைவிடாமல்) செய்வதும், அசுரர்க்கு - அஸுரர்களுக்கு,வெம் போர்களே - க்ரூரமான சண்டைகளே; கடைவதும், கடலுள் - திருப்பாற்கடலுள்; அமுதம்; என் மனம் - என் மனது, ஒருங்காக - ஒன்றாகச்சேர்ந்ததாக (இடைவிடாமல்), உடைவதும் - (அதிகப் பிரீதியினால்) தளர்ச்சியை யடைவதும், அவற்கே - அவனுக்கே.

(கருத்து) தாமரைப் பூவில் எப்போதும் யௌவனத்துடனிருக்கிற பிராட்டியுடைய திருவாபரணங்கள் நிறைந்த தோள்களை எம்பெருமான் சேர்ந்திருப்பது, அதற்கு விரோதியாயிருக்கிற அஸுரர்களுடன் க்ரூரமான சண்டைகளே அவன் எப்போதும் செய்யும் செய்கைகள். அவள் கடாக்ஷத்தைப் பெற அவன் செய்த வேலை திருப்பாற்கடலைக் கடைந்தது. இப்படி எம்பெருமான் பிராட்டியிடத்தில் ஆசையுள்ளவனாயிருப்பது போல என் மனதும் அவனை அநுபவிப்பதிலேயே ஆசையுள்ளதாய் தளர்ச்சியை அடைந்திருக்கிறது. நான் அவனை விடாதே என்று சொல்லி முடிப்பதற்கு முன்னாலேயே கடல் உடைந்தாற்போல்அதுபரவசமாய்விழுந்து கிடக்கிறதே. இனி அது திரும்பவர முடியுமோ? ஒருவனாலும் அதைத் திருப்பவும் முடியுமோ?

குறிப்பு— "தோள்" என்பதற்கு, தோளின் அழகாலே அவைகளைத் தவிர அவனுடைய வேறு அவயவங்களின் அழகைப் பார்க்கமுடியாதபடி அவைகளிலேயே சாய்ந்து கிடக்கிறான் எம்பெருமான் என்பது கருத்து.

இ—ம். அவற்றிலே - ஏகாரத்திற்கு பிரிநிலைப் பொருள். அவனுடைய அநுபவத்தை மற்ற அநுபவங்களிலிருந்து பிரிக்கிறது. (6)

---

அவ— கீழ்ப்பாட்டில் சொன்ன மனதின் ஆசை முற்றிற்று என்று சொல்லுகிறார்:—

ஆகஞ் சேர்நர சிங்கம தாகியோர்
ஆகம் வள்ளுகிராற் பிளந்தா னுறை
மாக வைகுந்தங் காண்பதற் கென்மனம்
ஏக மெண்ணு மிராப்பக லின்றியே. (எ)

(ப-ரை) ஆகம் சேர் - (ஒரே) உடம்பில் சேர்ந்த, நரசிங்கம் - மனிதத் தன்மையும் சிங்கத்தின் தன்மையையுமுடைய, அது ஆகி - அந்த விலக்ஷணமான வஸ்துவாக ஆகி, ஓர் ஆகம் - ஒப்பில்லாத (வாக்கால் சொல்லமுடியாதபடி கடினமான ஹிரண்யகசிபுவினுடைய) உடம்பை, வள் உகிரால் - வளப்பத்தையுடைய (வளர்ந்து கெட்டியான), நகங்களாலே, பிளந்தான் - பிளந்தவன், உறை - நித்யம் வாஸம்பண்ணுகிற, மாகம் - உயர்ந்த ஆகாசம் (என்று வேதத்தில் சொல்லப்பட்ட), வைகுந்தம் - வைகுந்தத்தை, காண்பதற்கு, என் மனம், இராப்பகல் இன்றி - இது ராத்திரி இது பகல் என்கிற பிரிவில்லாமல், ஏகம் - ஒரே விதமாக, எண்ணும் - ஆசைப்படுகிறது.

(கருத்து) மனிதத்தன்மையையும் சிங்கத்தின் தன்மையையும் ஒரே உடம்பில் சேர்த்துக்கொண்டு விலக்ஷணமான ரூபமுள்ளவனும் அப்படி அவதாரம் செய்து வாயால் சொல்ல முடியாதபடி கடினமான ஹிரண்யகசிபுவினுடைய உடம்பை வளர்ந்த நகங்களாலே பிளந்தவனுமான எம்பெருமான் நித்ய வாஸம் செய்கிற வைகுந்தத்தை அடையவேணும் என்று என்

மனம் இதுராத்திரி இதுபகல் என்கிற பிரிவில்லாமல் ஒரே விதமாக இருக்கிறது. இப்படி என் மனது இருந்தால் அதைக் கொண்டு நான் என் செய்வேன்.

குறிப்பு— உலகத்தாருக்குப்பகலில் இந்தவேலைசெய்கிறது, ராத்திரியில் வேறு வேலை செய்கிறது என்று ஏற்பாடு உண்டு. இது என் மனதுக்கில்லை, ஒன்றையே எண்ணிக்கொண்டிருக்கிறது என்பது "இராப்பகலின்றி ஏகம்" என்பதற்குக் கருத்து இ—ம். ஏகம்—வடசொல் (7)

---

அவ— உம்முடைய மனது எம்பெருமானை அனுபவிப்பதற்கு வைகுந்தத்திற்குப் போகவேணுமோ? அவன் திருமலையில் கிட்ட இருக்கவில்லையா என்கிற கேள்விக்குப்பதில் சொல்கிறார்:—

இன்றிப் போக விருவினையுங் கெடுத்து
ஒன்றி யாக்கை புகாமை யுய்யக்கோள்வான்
நின்ற வேங்கட நீணிலத் துள்ளது
சென்று தேவர்கள் கைதொழு வார்களே. (அ)

(ப - ரை) இரு வினையும் - புண்ணியம் பாபம் என்கிற இரண்டு வித கர்மங்களையும், இன்றி போக - இல்லாமல்போக, கெடுத்து - நாசம்செய்து, ஒன்றி - (இதுவேறு அதுவேறு என்றுபிரிக்க முடியாதபடி) ஒன்றாய், ஆக்கை புகாமை - உடம்பில் மறுபடியும் புகாதபடி, உய்யக்கொள்வான் - உஜ்ஜீவிக்கச்செய்ய வேணும் என்று ஆசைப்படுகிற எம்பெருமான், நின்ற - இருக்கிற இடமான, வேங்கடம் - திருமலை, நீள்நிலத்தில் உள்ளது - சிலாக்கியமான இந்தப் பூமியிலிருக்கிறது, சென்று-அங்கேபோய், கைதொழுவார்கள்- கைங்கர்யம் செய்யுமவர்கள், தேவர்கள் - நித்தியஸூரிகள்.

(கருத்து) தன்னை ஆச்ரயித்தவர்களுடைய புண்ணியம் பாபம் என்கிற இருவகையான கர்மங்கள் மீதியில்லாமல்போய் மறுபடியும் சரீரங்களில் புகுந்து உடம்பு வேறு ஆத்மா வேறு என்று தனித்து பிரிக்கமுடியாதபடி எள்ளில் எண்ணெய்போல

வும், விறகில் நெருப்பைப்போலவும், ஒன்றுமறியாமல் அவர்கள் உஜ்ஜீவிக்கும்படி எம்பெருமான் ஆசைப்பட்டு எப்போது அவர்கள் தன்னை ஆச்ரயிப்பார்கள் என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற இடமான திருமலையானது சிலாக்கியமான இந்த பூமியிலிருக்கிறது. இது உண்மைதான். அதனால் எனக்கு என்ன பிரயோஜனம்? அங்கேபோய் அவனுக்குக் கைங்கர்யம் செய்கிறவர்கள் நித்யஸூரிகள் அன்றோ. அங்கே நான் போகத்தகுந்தவனோ?

குறிப்பு— 'நீணிலத்துள்' என்கிறவிடத்தில் நீள் என்பதற்கு விசாலமான என்பது பொருள். இங்கே தன்னிடத்தில் திருமலையிருப்பதாகிய பூமியின் பெருமையை அது காட்டுகிறது என்பது கருத்து.

(இ—ம்) கொள்வான்—வினையாலணையும்பெயர். (8)

---

அவ— கீழ்ப்பாட்டில் திருமலைக்குத் தாம் போகத் தகாதவர் என்பது கருத்தாலே தோன்றிற்று; அதை வெளியிடுகிறார்:—

தொழுது மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு
எழுது மென்னு மிதுமிகை யாதலில்
பழுதில் தொல்புகழ்ப் பாம்பணைப் பள்ளியாய்
தழுவு மாறறி யேனுன தாள்களே. (௯)

(ப-ரை) பழுது இல் - தோஷம் ஒன்றுமில்லாமல், தொல் புகழ் - அநாதியாக நல்ல குணங்களையுடைய, பாம்பு அணை - ஆதிசேஷனை, பள்ளியாய் - படுக்கையாக உடையவனே! மா மலர் - உயர்ந்த புஷ்பங்களையும், நீர் - தீர்த்தத்தையும், சுடர் - தீபத்தையும், தூபம் - தூபத்தையும், கொண்டு - எடுத்துக் கொண்டு, தொழுது - ஸேவித்து, எழுதும் - உஜ்ஜீவிப்போம், என்னும் இது - என்கிற இது, மிகை - அதிகமாயிருக்கிறது. ஆதலில் - ஆகையால், உன தாள்கள் - உன்னுடைய திருவடிகளை, தழுவுமாறு - கட்டிக்கொள்ளும் விதத்தை, (கைங்கர்யம் பண்ணும் விதத்தை) அறியேன்.

(கருத்து) எம்பெருமானே எல்லாவித தோஷங்களுக்கும் விரோதியாய், அநாதியாய் எல்லா நல்ல குணங்களும் நிறைந்த

ஆதிசேஷன் உன் படுக்கை; உயர்ந்த புஷ்பங்களையும் தீர்த்தத்தையும் தீபத்தையும் தூபத்தையும் எடுத்துக்கொண்டு கைங்கரியங்களைப் பண்ணி உஜ்ஜீவிப்போம் என்று உன்னுடைய கைங்கரியங்களில் ஆசைப்படுகிறவர்கள் அந்த ஆதிசேஷன் சேனை முதலியார் முதலான எண்ணிக்கையில்லாத நித்யஸூரிகள். இப்படி உயர்ந்த உன்னுடைய திருவடிகளை மிகவும் தாழ்ந்த நான் கட்டிக்கொள்ளும்விதத்தை அறியமுடியவில்லை;

இ—ம். எழுதும் - எழுவோம். எழு - பகுதி, தும் - எதிர் காலத்தைக் காட்டும் தன்மைப் பன்மை விகுதி. (9)

---

அவ— தாம் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் பண்ணத் தகாதவர் என்று நினைத்த ஆழ்வாருடைய கூச்சம் போகும்படியாக எம்பெருமான் தன்னுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தைக் காட்டினன்; அதைக் கண்டு பிரீதியை அடைந்து அந்தக் குணத்தைக் கொண்டாடுகிறார்:—

தாள தாமரை யானுன துந்தியான்
வாள்கொள் நீள்மழு வாளியுன் னாகத்தான்
ஆள ராய்த்தொழு வாரு மமரர்கள்
நாளு மென்புகழ் கோவுன சீலமே. (ய)

(ப-ரை) தாள தாமரையான் - தண்டை மாத்திரமுடைய தாமரைப் பூவில் தோன்றின பிரம்மா, உனது உந்தியான் - உன்னுடைய நாபியிலிருக்கிறவன், வாள்கொள் - காந்தியைக் கொண்ட, மழு வாளி - கோடாலியை வைத்துக்கொண்டிருக்கிற ருத்திரன் - உன் ஆகத்தான் - உன்னுடைய திருமேனியில் வலது பக்கத்திலிருக்கிறவன், ஆளராய் - தாஸர்களாய், தொழுவாரும் - ஸேவிக்கிறவர்களும், அமரர்கள் - (இந்திரன் முதலான) தேவர்கள், உன் சீலம் - (இப்படிப்பட்ட) உன்னுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தை, நாளும் - ஒவ்வொரு நாளும், (எல்லாக் காலங்கள் சேர்ந்தாலும்) என் புகழ்கோ - எப்படி ஸ்தோத்ரம் பண்ணுவேன்.

(கருத்து) உன்னைவிட்டு வேறு பிரயோஜநத்தைத் தேடின பிரம்மாவும் ருத்திரனும் உன்னுடைய நாபியிலும் வலது பக்

கத்திலும் இருக்கிறார்கள். இது மாத்திரமோ உனக்குக் கைங்கரியம் செய்கிறவர்களும் அப்படியே இருக்கும் இந்திரன் முதலான தேவர்கள். இப்படி இவர்களுடன் இடைவிடாமல் சேர்ந்திருக்கும் உன்னுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தை நான் எல்லாக் காலங்கள் சேர்ந்தாலும் எப்படி ஸ்தோத்ரம் பண்ணுவேன். இந்த ஸௌசீல்ய குணத்தின் உயர்த்திக்கு ஓர் அளவு உண்டோ ?

குறிப்பு— (1) 'தாளதாமரை' என்பதற்கு, உலகத்தில் தாமரைக்குக்குள மும் கிழங்கும் தண்டுமுண்டு; காபிக லத்திற்கு தண்டு மாத்திரமிருந்தது; விபஷ்டி ஸ்ருஷ்டிக்கு முன்பு அது உண்டானபடியாலே— என்பது கருத்து.

(2) 'மழு' என்பது ஸம்ஹாரத்துக்கு ஸாதகமான கருவி. அதைச் சொன்னது ருத்திரனுக்கு ஸம்ஹாரத்தில் அதிகாரம் என்பதைக் காட்டுவதற்காக. (10)

---

சீல மெல்லை யிலானடி மேலணி
கோல நீள்குரு கூர்ச்சட கோபன்சொல்
மாலை யாயிரத் துள்ளிவை பத்தினின்
பாலர் வைகுந்த மேறுதல் பான்மையே. (கக)

(ப-ரை) சீலம் - ஸௌசீல்ய குணத்துக்கு, எல்லை இலான் - அளவில்லாதவனுடைய, அடிமேல் - திருவடிகளின்மேல், அணி - அலங்காரமாயிருக்கிறவைகளாய், கோலம் நீள் - அழகில் பெரிதாயிருக்கிற, குருகூர் சடகோபன் - ஆழ்வாருடைய, சொல் மாலை - மாலைபோல் சேர்க்கப்பட்ட சொற்கள், ஆயிரத்துள், இவை பத்தின் பாலர் - இந்தப் பத்துப்பாட்டுக்களின் பக்கத்திலிருக்கிறவர்கள், வைகுந்தம் ஏறுதல் - வைகுந்தத்துக்கு ஏறிப் போவது, பான்மையே - ஸ்வபாவமே.

(கருத்து) அளவில்லாத ஸௌசீல்யம் என்கிற குணத்தையுடைய திருவேங்கடமுடையான் திருவடிகளுக்கு அலங்காரமாக ஆழ்வார் அருளிச் செய்த இந்தப் பத்துப் பாட்டுகளையும் கேட்கிறவர்களும் படிக்கிறவர்களும் தரித்துக்கொண்டிருக்கிறவர்களும் எழுதுகிறவர்களும் வைகுந்தத்துக்கு ஏறுவது ஆச்சரியமன்று. தகப்பன் ஸொத்துப்பிள்ளைக்குச்சரீரஸம்பந்தத்தினால்

வருவதுபோல் வைகுந்தம் அவர்களுக்கு இந்தப் பாட்டுக்களின் ஸம்பந்தத்தாலேயே வரும்.

குறிப்பு— வைகுந்தத்தைக் காணவேணுமென்று தம்முடைய மனம் ஆசைப்பட்டது என்பதை ஏழாம் பாட்டில் சொன்னார்; இதில் தம்மைச் சேர்ந்தவர்களும் அதைக் காண்பர் என்கிறார். (11)

---

नैकश्रीनामवत्त्वाज्जगदुदयमुखात् साधुवर्गाघनाशात्
मोक्षोपायप्रदानात् सकलगुणनिधेः सर्वदोषप्रतीपात् ।
श्रीयानाथीकृतत्वान्नृहरिवपुषः शैलवासात् फणीन्द्रे
शय्यात्वाद्रुद्रमुख्यस्वतनुवितरणात्सौशील्यमाह ॥ ९१ ॥

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஸௌசீல்யமென்கிற குணங்களுக்கு ஸமுத்ரம் என்பது பத்து காரணங்களாலே சொல்லப்படுகிறது, அவைகளாவன:— (1) கணக்கில்லாத உயர்ந்த நல்ல குணங்களைக் காட்டும் திருநாமங்களையுடையவனாயிருப்பது; (2) உலகங்களை உண்டுபண்ணுவது ரக்ஷிப்பது முதலானவைகளைச் செய்வது; (3) ஆச்ரிதர்களின் பாபங்களைப் போக்குவது; (4) மோக்ஷத்தைக் கொடுப்பது; (5) எல்லாத் தோஷங்களுக்கு விரோதியாயிருப்பது. இது துளஸி மாலையைச் சொன்னதால் ஏற்படுகிறது; (6) புருஷகாரமாயிருக்கத் தகுந்த பிராட்டியுடன் கூடியிருப்பது; (7) நரசிங்கனுய் அவதாரம் செய்து ப்ரஹ்லாதனை ஸந்தோஷப்படுத்தினது; (8) திருமலையில் கிட்டவந்திருப்பது; (9) ஆதிசேஷன்மேல் படுத்திருப்பது; (10) ருத்திரன் முதலானவர்களுக்குத் தம் திருமேனியை கொடுத்திருப்பது. (5)வதில் தோஷமில்லாமைக்குக் காரணம் "இனமேதுமிலானை" என்பதென்றும், அதில் இனம் என்பதற்கு ஈனம் என்கிற சொல் இனம் என்பதாக குறைந்திருக்கிறது என்றும் பதினெண்ணுபிரம். அப்போது அதற்குப் பொருள் ஈனம் - குறைவு, யாதும் இலாதவனை - ஒன்றுமில்லாதவனை என்பது.

---

# நான்காம் திருவாய்மொழி.



அவ— இப்படி எம்பெருமானுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தைக் கண்டு ஆழ்வாருக்கு உண்டான பயம் தீர்ந்து அவனை அநுபவிக்க ஆரம்பித்தார். அது கிடைக்கவில்லை. இதனால் அவருக்கும் அவருடைய எல்லா இந்திரியங்களுக்கும் வருத்தமுண்டாகி, மனதால் அநுபவித்ததும் போய் விட்டது. அவனைக் காணவேணுமென்று இந்தத் திருவாய்மொழியில் சொல்லுகிறார்:—

(கலிவிருத்தம்)

மையார் கருங்கண்ணி கமல மலர்மேல்
செய்யாள் திருமார் வினிற்சேர் திருமாலே
வெய்யார் சுடராழி சுரிசங்க மேந்தும்
கையாவுன்னைக் காணக் கருதுமென் கண்ணே. (க)

(ப-ரை) மை ஆர் - மை நிறைந்திருக்கிற, கரும் கண்ணி - கருமையுள்ள திருக்கண்களையுடையவளும், கமலமலர்மேல் - தாமரைப்பூவின் மேலிருக்கிறவளும், செய்யாள் - பொன் நிறமுள்ளவளுமான பிராட்டி, திருமார்பினில், சேர் - சேர்ந்தவனும் திருமாலே - அந்தப்பிராட்டியிடம் மிகுந்த ஆசையுள்ளவனுமானவனே! வெய் ஆர் - வெம்மை (உஷ்ணத்தன்மை) நிறைந்த, சுடர் ஆழி - காந்தியுள்ள திருவாழியையும், சுரிசங்கம் - கோடுகளையுடைய சங்கத்தையும், ஏந்தும் - வைத்துக்கொண்டிருக்கும், கையா - திருக்கைகளையுடையவனே! உன்னை, என் கண் காண, கருதும் - ஆசைப்படும்.

(கருத்து) ஸ்வபாவத்தால் கருப்பாய் மையிடப்பட்ட திருக்கண்களையுடையவளும், தாமரைப் பூவின்மேல் இருப்பவளும் பொன் நிறமுடையவளுமான பிராட்டி சேரும் திருமார்பையுடையவனே! அவளிடத்தில் மிகுந்த ஆசையுள்ளவனே! உஷ்ணத் தன்மையையும் காந்தியையுமுடைய திருவாழியை ஒரு திருக்கையிலும் சுரிசங்கை இன்னொரு திருக்கையிலும் ஏந்திக்கொண்டிருக்கிறவனே! பிராட்டியுடன் சேர்ந்திருக்கிற உன் அழகையும், திருவாழியும் சங்குமான திருக்கைகளின் அழகையும் காண்பதற்காக என் கண் ஆசைப்படுகிறது.

குறிப்பு— (1) 'மையார்' என்று மையைச் சொன்னதின் கருத்து— அதினுடைய நீல காந்தியானது எம்பெருமானுடைய திருமேனியின் நீல காந்தியை விருத்திபண்ணி ஒரு அழகை உண்டுபண்ணுகிறதென்பது.

(2) பிராட்டியின் திருநாமத்தைச் சொல்லாமல் 'கமல மலர்மேல் செய்யாள்' என்று சொன்னதற்குக் கருத்து— தாமரைப்பூவின் வாஸனையும் மிருதுவாயிருக்கும்தன்மையும் சேர்ந்து ஒரு பெண்ணாக ஆயிருக்கிறதோ என்று சொல்லும்படி அவள் திருமேனி இருக்கிறது; அது இன்னது என்று சொல்லமுடியாதென்பது.

(3) 'சேர்' என்பதற்கு, வெகு நாளாய் பிரிந்து சேர்ந்த க்ஷணமானது எவ்வளவு ஆநந்தத்தைக்கொடுக்குமோ, ஒவ்வொரு க்ஷணமும் அதுபோல் அவனுக்கு ஆநந்தத்தைக் கொடுக்கிறது என்பது.

(4) பிராட்டி அவனுடைய திருமார்பின் அழகைப் பார்த்து அதிலிருக்கிருள். அவனே அவள் முழு திருமேனியின் அழகைப் பார்த்து, அதில் மிகுந்த ஆசையுள்ளவனாயிருக்கிறுனென்று அவளுடைய அவயவங்கள் ஒன்றையும் சொல்லாமல் பொதுவாய் பாட்டு "திருமாலை" என்று சொல்லுகிறதென்பது கருத்து.

(5)'வெய்யார்' என்பதற்கு, அவன் அழகைப் பிராட்டியும், அவள் அழகை அவனும் பார்த்துக்கொண்டு சேர்ந்திருக்கும் இச்சேர்த்தி அழகுக்கு என்ன கெடுதி உண்டாகுமோ என்று பயந்து கோபத்தால் ஜ்வலிக்கிறது திருவாழி என்பது கருத்து.

(6) பிராட்டி தன் திருக்கைகளில் அவனுக்குப் போக்கியமாயிருப்பதற்காகத் தாமரைப்பூக்களை ஏந்திகொண்டிருக்கிருள். அவனும் அவளுக்குப் போக்யமாயிருப்பதற்காக தன் திருக்கைகளில் திருவாழியையும் திருச்சங்கையும் வைத்துக் கொண்டிருக்கிறுன் என்பது "ஏந்தும்" என்பதின் கருத்து.

---

கண்ணே யுன்னைக் காணக்கருதி யென்னெஞ்சம்
எண்ணே கொண்ட சிந்தையதாய் நின்றியம்பும்
விண்ணோர் முனிவர்க் கென்றுங்காண் பரியாயை
நண்ணு தொழியே னென்றுநா னழைப்பனே. (உ)

(ப-ரை) கண்ணே - கண்ணைப்போலிருக்கிறவனே! உன்னை, காண, கருதி - ஆசைப்பட்டு, என் நெஞ்சம் - என் மனது, எண் கொண்ட - எண்ணை ஜபித்த, (கணக்கில்லாத), சிந்தையதாய் எ - எண்ணங்களை (எப்போதும்) உள்ளதாயே, நின்று - நிலையாயிருந்து, இயம்பும்-சொல்லும் (கூப்பிடும்), விண்ணோர் முனிவர்க்கும்-மேல்உலகத்திலிருக்கிற பிரம்மாமுதலானவர்களுக்கும் ஸநகர் முதலானருஷிகளுக்கும், என்றும்-எப்போதும், காண்பு அரியாயை-பார்ப்பதுமுடியாத உன்னை, நான், நண்ணாது - கிட்டாமல், ஒழியேன் என்று - விடேன் என்று, அழைப்பன் - கூப்பிடுகிறேன்.

(கருத்து) கண்ணைப்போல் வேண்டியதை அடைவதற்கு ஸாதநமும், நான் சொன்னதைச் செய்கிறவனும், நிலையான அழகை உண்டுபண்ணுகிறவனும் மிகவும் பிரியனுமானவனே! அளவில்லாமல் போக்கியமாயிருக்கிற உன்னைப் பார்க்க ஆசைப்பட்டு என் மனது எப்போதும் உன்னையே நினைத்துக்கொண்டு நிலையாய் அழுதுகொண்டேயிருக்கும். நீயோ, மேல் உலகத்திலிருக்கிற பிரம்மா முதலானதேவர்களுக்கும் உன்னை எப்போதும் தியாநம் பண்ணிக்கொண்டிருக்கிற ஸநகர் முதலான ருஷிகளுக்கும் எப்போதும் பார்க்கமுடியாதவனாயிருக்கிறாய். எனக்கோ ஜ்ஞானத்தை விருத்திபண்ணும்படியான மேல்உலகங்களிலிருப்புமில்லை. ருஷிகளைப்போல எனக்குத் தியானமுமில்லை. இப்படி உயர்ந்திருக்கிற உன்னை இப்படித் தாழ்ந்த நான் பார்க்காவிட்டால் தரித்திருக்கமாட்டேன் என்று கூப்பிடுகிறேன். என் மனது வேறு ஓரிடமும் போகிறதில்லை.

இ—ம். காண்பு - காணுதல்; பு-தொழிற்பெயர் விகுதி, ஒழியேன் - தன்மையொருமையெதிர்மறை வினைமுற்று. (2)

---

அழைக்கின்ற வடிநாயேன் நாய்கூழை வாலால்
குழைக்கின் றதுபோல வென்னுள்ளங் குழையும்
மழைக்கன்று குன்றமெடுத் தாநிரை காத்தாய்
பிழைக்கின்ற தருளென்று பேது றுவனே. (௩)

(ப-ரை) அழைக்கின்ற - (அழுது) கூப்பிடுகிற, அடி நாயேன் - நாய்போலிருக்கிற தாஸனாகிய, என் உள்ளம் - என்

மனது, நாய், கூழைவாலால், குழைக்கின்றதுபோல்-தன்கருத்தை வெளியிடுவதுபோல், குழையும்-வாடும்(தான் தீநனையிருப்பதைக் காட்டுகிறது, அன்று - (இந்திரன் கோபித்துக்கொண்டு மழை) பெய்த, காலத்தில், மழைக்கு - மழையைத் தடுப்பதற்காக, குன்றம் எடுத்து - ஒரு மலையை எடுத்து, ஆநிரை - பசுக்களின் கூட்டத்தை, காத்தாய் - ரக்ஷித்தவனே ! அருள் - (இந்த) உன் கிருபையானது, பிழைக்கின்றது என்று - என்னைத் தப்பிப்போய் விட்டது என்று, பேது-மோஹத்தை, உறுவன் - அடைகிறேன்.

(கருத்து) உன்னை அழுது கூப்பிடுகிற, நாய்போலிருக்கிற என் மனதானது, ஒரு நாய் கூழையான தன் வாலை யாட்டிக் கொண்டு தன் ஸ்வாமிக்குத் தன் கருத்தைத் தெரிவிப்பது போல், தன்னுடைய அபிப்பிராயத்தைக் காட்டுகிறது. நாய் தன் வால் கூழையாயிருப்பதால், தன் கருத்தை நன்றாய்த் தெரிவிக்கச் சக்தியில்லாதது. அதுபோல் என் மனதுக்கும் தன் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க ஸாமக்ரியில்லை. ஆனாலும் நாயைப் போல உன்னைக் கிட்டமுடியாத என் மனது சபலப்படுகிறது. முன் காலத்தில் இந்திரன் கோபித்துக்கொண்டு மழை பெய்த போது அதைத் தடுப்பதற்காக கோவர்த்தநம் என்கிற மலையை ஏந்திக்கொண்டு பசுக் கூட்டங்களை ரக்ஷித்தாயே; அவைகள் தங்களை ரக்ஷிக்கும்படி உன்னைக் கேட்டனவா? நீ கருணையாலே யே அதைச் செய்யவில்லையா? நான் இவ்வளவு கூப்பிட்டும் நீ பேசாமலிருக்கிறபடியால் அந்தக் கருணை வெள்ளத்தில் நான் அகப்படவில்லையோ என்று பயத்தினால் மோஹத்தை அடைகிறேன். (3)

---

அவ— "நான் ஆச்ரிதர்களுக்கு ஸுலபன் அல்லவா? நீர் ஏன் இப்படிக் கலங்குகிறீர்" என்று எம்பெருமான் கேட்பதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார்:—

உறுவ திதுவென் றனக்காட் பட்டுநின்கண்
பெறுவ தேதுகொலென்று பேதையேன் நெஞ்சம்
மறுகல் செய்யும் வானவர்தா னவர்க்கென்றும்
அறிவ தரிய வரியாய வம்மானே. (௪)

(ப-ரை) வானவர் தானவர்க்கு - தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும், அறிவது - உள்ளபடி அறிதல், அரிய - முடியாதவனை, அரியாய் - நரசிங்கனை, அம்மானே - ஸ்மாமியே! இது - உனக்குச் சேஷமாயிருப்பது,உறுவது என்று - தகுந்தது என்று, உனக்கு ஆட்பட்டு - உனக்குத் தாஸனாயிருப்பதை ஒப்புக்கொண்டு, நின்கண் - உன்னிடத்தில், பெறுவது - நான் அடையப்போகிறது, எது கொல் என்று - எதுவோ என்று, பேதை - விவேகமில்லாத, என் நெஞ்சம் - என் மனது, மறுகல் செய்யும் - மோஹத்தைச் செய்யும் (அடையும்).

(கருத்து) ஸ்வாமியே! நீ பிரஹ்லாதனுக்காக நரசிங்க ரூபத்தை எடுத்துக்கொண்டு தோன்றினாய்; ஆகையால் நீ ஆச்ரிதர்களுக்கு ஸுலபன்தான்; ஆனால் தேவர்களும் அஸுரர்களும் உன்னை உள்ளபடி அறியமுடியாதவனாயுமிருக்கிறாய். உனக்குச் சேஷமாயிருப்பது என் ஸ்வரூபத்துக்குத் தகுந்தது என்று எண்ணி உனக்கு அடிமையாயிருப்பதை ஒப்புக்கொண்டிருக்கிறேன். இப்படியிருக்கிற நான் உன்னிடத்தில் எதை அடையப்போகிறேன். நான் எந்த வகுப்பில் சேர்ந்தவன். பிரஹ்லாதனைப்போல் உன்னைப் பார்ப்பேனா? அல்லது தேவர்களையும் அஸுரர்களையும்போல் உன்னைப் பார்க்காமலிருப்பேனா? இப்படி பயந்து விவேகமில்லாத என் மனது மோஹத்தை அடைகிறது. (4)

---

அவ— "நீர் வேண்டுகிறது என்ன" என்று எம்பெருமான் கேட்பதாக நினைத்து, அதற்குப்பதில் சொல்லுகிறார்:—

அரியாய வம்மானை யமரர் பிரானைப்
பெரியானைப் பிரமனை முன்படைத் தானை
வரிவா ளரவினணைப் பள்ளி கொள்கின்ற
கரியான் கழல்காணக் கருதுங் கருத்தே. (ரு)

(ப-ரை) பிரமனை - பிரம்மாவை, முன் - (வியஷ்டி ஸ்ருஷ்டிக்கு) முன்னாலே, படைத்தானை - உண்டுபண்ணினவனும்; பெரியானை - (இதனால்) ஸர்வேச்வரன் என்று அறியப்பட்டவனும், அமரர் பிரானை - நித்யஸூரிகளுக்கு(ஸத்தையை உண்டுபண்ணி)

உபகாரம் செய்கிறவனும், அரியாய - நரசிங்கமாய் அவதாரம் செய்தவனும், அம்மானை - என் ஸ்வாமியும், வரி - கோடுகளையும், வாள் அரவின் - காந்தியையுமுடைய ஆதிசேஷனாகிய, அணை - படுக்கையில், பள்ளிகொள்கின்ற - படுத்துக்கொண்டிருப்பவனும், கரியான் - நீலமான திருமேனியையுடையவனுமான உன்னுடைய, கழல் காண - திருவடிகளைக் காண, கருத்து- என் மனது, கருதும் - ஆசைப்படுகிறது.

(கருத்து) வியஷ்டி ஸிருஷ்டிக்கு முன்னாலே பிரம்மாவை உண்டுபண்ணினபடியாலே ஸர்வேச்வரனும், நித்யஸூரிகளுக்கு உபகாரம் செய்கிறவனும், எல்லாருடைய மனதையும் கண்களையுமிழுக்கும்படி அழகான நரசிங்க ரூபத்துடன் அவதாரம் செய்தவனும், இந்த அழகாலே எனக்கு ஸ்வாமியும், ஆச்ரிதர்கள் எல்லாரும் வந்து அடையும்படி திருப்பாற் கடலில் ஒரு வெள்ளி மலைமேல் காளமேகம் படுத்திருப்பதுபோல் காந்தியுள்ள ஆதிசேஷனாகிய படுக்கையில் நீலமான திருமேனியுடன் பள்ளி கொண்டவனுமானவனே! இப்படிப்பட்ட உன்னுடைய திருவடிகளைக் காண என் மனது ஆசைப்படுகிறது. எனக்கு வேண்டியது உன்னைப்பார்ப்பதுதான். (5)

---

அவ— இப்படி ஆழ்வார் வேண்ட, எம்பெருமான் கண்ணால் பார்ப்பதுபோல் அவர் மனதில் தோன்றினான்; அவனை அநுபவிக்கிறார்:—

கருத்தே யுன்னைக் காணக்கருதி யென்னெஞ்சத்
திருத்தாக விருத்தினேன் தேவர்கட் கெல்லாம்
விருத்தா விளங்குஞ் சுடர்ச்சோதி யுயரத்
தொருத்தா வுன்னையுள்ளு மென்னுள்ள முகந்தே (௬)

(ப-ரை) கருத்தே - என் மனமே! தேவர்கட்கு எல்லாம் - நித்யஸூரிகளுக்கு எல்லாம், விருத்தா-விருத்தனே! (ப்ரதானமானவனே!), விளங்கும் சுடர் - விளங்கும் பிரபையையுடைய, சோதி - ஜ்யோதிஸ்ஸான, உயரத்து - உயர்ந்த இடமான வைகுந்தத்தில், ஒருத்தா - ஒப்பில்லாமலிருப்பவனே! உன்னை, காண கருதி, என் நெஞ்சத்து - என் மனதில், இருத்தினேன் - இருக்

கும்படி செய்தேன், என் உள்ளம் - என் மனது, உகந்து - ஸந்தோஷப்பட்டு, உன்னை, உள்ளும் - நினைக்கிறது (அநுபவிக்கிறது).

(கருத்து) வருத்தப்பட்டுக்கொண்டிருந்த என் மனது வருத்தத்தைவிட்டு உன்னைநினைக்கும்படி அதற்கு சக்தியைக்கொடுத்தவனே! நித்யஸூரிகளுக்கு அநாதியாக சேஷியாயிருக்கிறவனே! எல்லாவற்றிற்கும் மேற்பட்ட ஜ்யோதிர்மயமான வைகுந்தத்தில் ஒப்பில்லாமலிருக்கிறவனே! ஆச்ரிதர்களுடன் சேருவதில் ஆசையுள்ள உன்னைப்பார்க்க ஆசைப்பட்டேன்; உடனே என்மனதில் நீ வைகுந்தத்திலிருக்கிறபடியே வந்து புகுந்து நிலையாயிருக்கிறாய்; இப்படி ஸுலபனான உன்னை என் மனது ஸந்தோஷத்துடன் அநுபவித்துக்கொண்டிருக்கிறது. (6)

---

உகந்தே யுன்னை யுள்ளுமென்னுள் ளத்தகம்பால்
அகந்தா னமர்ந்தே யிடங்கொண்ட வமலா
மிகுந்தா னவன்மார் வகல மிருகூறும்
நகந்தாய் நரசிங்க மதாய வுருவே. (எ)

(ப-ரை) நரசிங்கம் ஆய - மனிதத் தன்மையும் சிங்கத் தன்மையும், சேர்ந்துள்ள, அது - அந்த (ஒப்பில்லாத), உருவே - ரூபத்தையுடையவனே! மிகும்தானவன் - (ஆச்ரிதர்களுக்கு விரோதம் பண்ணுவதில்) விருத்தியை அடைந்த அஸுரனாகிய ஹிரண்யகசிபுவினுடைய, அகலம் மார்பு - விசாலமான மார்பு, இரு கூறு ஆம் - இரண்டு பாகமாக ஆகும்படியான, நகந்தாய் (நகத்தாய்) - நகத்தையுடையவனே! உகந்தே - எப்போதும் ஸந்தோஷப்பட்டுக்கொண்டே, உன்னை, உள்ளும் - அநுபவிக்கும், என் உள்ளத்து - என் மனதினுடைய, அகம்பால் அகம் - உள்ளுக்குள்ளே, தான் - நீயே (ப்ரீதிக்குக் கட்டுப்பட்டவனாய்), அமர்ந்தே - நிலையாயிருந்தே, இடங்கொண்ட - இருக்கிற, அமலா - தோஷமில்லாதவனே!

(கருத்து) என்னுள்ளே புகுந்த உன்னுடைய அழகையும், ஆச்ரிதனுக்கு விரோதத்தைப் பலமாய்ச் செய்து கொண்டிருந்த ஹிரண்யகசிபுவின் விசாலமான மார்பை நகத்தால்

பிளந்த உன் செயலையும் என் மனது எப்போதும் ஸந்தோஷப்பட்டு அநுபவிக்கும்போது, அதையே காரணமாகக்கொண்டு அந்த மனதிலேயே ப்ரீதியினால் கட்டுப்பட்டவனாய் "ஒரு நாளும் இதை விட்டுப்போகிறதில்லை" யென்று நிலையாயிருக்கிறாய், உன்னைக் காணப் பெறாமையாலே கலங்கின என்னைத் தெளிவித்த தோஷமில்லாதவனே !

இ—ம். நகந்தாய் - நகந்தான் என்பதின் விளிவேற்றுமை. நகத்தாய் என்பது நகந்தாய் என்று ஆனது மெலித்தல் விகாரம். ஆம் - பெயரெச்சம். (7)

---

அவ— முன்பு மனதால் அநுபவித்தது போலில்லாமல் இப்போது * ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றேன் என்று சொல்லுகிறார்:—

உருவா கியவாறு சமயங்கட் கெல்லாம்
பொருவாகி நின்றானவ னெல்லாப் பொருட்கும்
அருவாகிய வாதியைத் தேவர்கட் கெல்லாம்
கருவாகிய கண்ணனைக் கண்டுகொண் டேனே. (அ)

(ப-ரை) உருவாகிய - ஒரு மதம் போல் தோன்றுகிற, ஆறு சமயங்கட்கு எல்லாம் - (வேதத்துக்கு விருத்தமான) ஆறு மதங்கள் எல்லாவற்றுக்கும், பொருவாகி நின்றான் - விரோதியாக இருக்கிறான், எல்லா பொருட்கும், அருவாகிய - ஸூக்ஷ்மமான, ஆதியை - முக்கியமானவனும், தேவர்கட்கெல்லாம் - எல்லாத்தேவதைகளுக்கும், கருவாகிய - காரணனுமான, கண்ணனை, கண்டு கொண்டேனே - ஸாக்ஷாத்கரித்தேன்.

(கருத்து) உண்மையில் ஒரு மதமாக இல்லாமல் மதம் போல் தோன்றுகிற வேதத்துக்கு விருத்தங்களான ஆறு மதங்களில் நான் புகாதபடி அதற்குத் தடையாயிருந்து, எல்லா வஸ்துக்களுக்குள்ளே ஸூக்ஷ்மமான ஆத்மாவாயிருந்து, எல்லாத் தேவர்களுக்கும் காரணமாயிருந்து, ஸௌலப்யத்தாலே கண்ணனாக அவதாரம் செய்த எம்பெருமானுடைய ஸாக்ஷாத்காரத்தை நான் பெற்றேனே.

---

* ஸாக்ஷாத்காரமாவது - கண்ணால் பார்ப்பதுபோல் மிகவும் தெளிவாய் பார்ப்பது.

குறிப்பு— ஆறு சமயங்களாவன - சார்வாகம், பௌத்தம், ஸாங்க்யம், வைசேஷிகம், ஜைனம், பாசுபதம் - என்பவைகளாம்.

இ—ம். பொருநு - சண்டையைச் சொல்லுகிற இது ஆகு பெயராய்ச் சண்டைபோடுகிற விரோதியைச்சொல்லுகிறது கரு-கர்ப்பம், அதுவே பிறகு குழந்தையாவதற்குக் காரணமாயிருப்பதால், ஆகு பெயராய் உபாதாந காரணத்தைச் சொல்லுகிறது. உபாதாந காரணமென்றால், எதில் இருந்து ஒன்று உண்டாகிறதோ, அது. (8)

அவ— எம்பெருமான் தமக்கு உபகாரம் செய்த விதங்களைக் கொண்டாடுகிறார்:—

கண்டுகொண் டென்கண்ணிணை யாரக் களித்துப்
பண்டை வினையாயின பற்றோ டறுத்துத்
தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்
அண்டத் தமரர் பெருமா னடியேனே. (௯)

(ப-ரை) என் கண் இணை - என்னுடைய இரண்டு கண்கள், ஆர - திருப்தியடையும்படி, கண்டு கொண்டு-(எம்பெருமானை) ஸாக்ஷாத்கரித்து, களித்து-ஸந்தோஷப்பட்டு, பண்டை - முன்னேயிருந்த, வினையான - கர்மங்களாயிருந்தவைகளை, பற்றோடு - வாஸனையுடன், அறுத்து, அண்டத்து - அண்டத்திலிருக்கிற, அமரர் - தேவர்களுக்கு, பெருமான் - ஸ்வாமியானவனுக்கு, அடியேன் - தாஸனான நான், தொண்டர்க்கு - அவனிடத்தில் சபலர்களாயிருக்கிறவர்களுக்கு, அமுது உண்ண - அமுதம்போல் அநுபவிக்கும்படி, சொன்மாலைகள் - சொல்மாலைகளான பாட்டுக்களை, சொன்னேன் - சொல்லப்பெற்றேன்.

(கருத்து) முதற்பாட்டில் "உன்னைக் காணக்கருதும் என் கண்" என்று சொல்லப்பட்ட என்னுடைய இரண்டுகண்கள் திருப்தி அடையும்படி ஸர்வேசுவரனை ஸாக்ஷாத்கரித்துக் களிக்கவும், நான் முன்னாலே செய்திருந்த எல்லாக்கர்மங்களையும் வாஸனையுடன்போக்கவும், அண்டத்தில் நிர்வாஹம்செய்கிற பிரம்மாமுதலான தேவர்களுக்கும் நிர்வாஹம் செய்கிற அவனால் விசேஷமாகக் கடாக்ஷிக்கப்பட்டும் இருக்கிற அடியேன் அவனிடத்தில் சபலமுள்ளவர்கள் அமுதம்போல் அநுபவிக்கும்படி சொன்மாலைகளைச்சொல்லவும் பெற்றேன்.

*குறிப்பு— (1) யோகம் செய்யும்போது மனதால் அறிவதல்லாமல் கண்களாலும் பார்க்கலாம் என்பது ஆசாரியன் நியாய பரிசுத்தியில் அருளிச் செய்திருக்கிறார். ஆகையால் இரண்டு கண்களாலும் யோகத்தில் எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்கலாம்.*

*(2) நானும் போகங்களை அநுபவித்து, என் வேலைக்காரர்களை ஜீவிக்கும்படி செய்து, பந்துக்களுக்கும் விருந்துசெய்யும்படி ஆனேன் என்று சொல்வதுபோல், ஆழ்வாரும் எம்பெருமானைக்கண்டு தாமும் கிருதார்த்தராய், தம் கண்களும் திருப்தியையடைந்து, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் போகமுண்டாகும்படி திருவாய்மொழியைச் சொல்லப்பெற்றேன் என்று ஸந்தோஷப்படுகிறார் என்பது கருத்து.* (9)

---

*அவ— கீழ்ப்பாட்டில் வாக்கால் கைங்கரியம் செய்யப்பெற்றேன் என்று சொன்னார்; எல்லாவிதமான கைங்கரியங்களையும் செய்ய யோக்யனாக அவனால் ஒப்புக்கொள்ளப்பட்டேன் என்று ஸந்தோஷப்படுகிறார்:—*

அடியா னிவனென் றெனக்கா ரருள்செய்யும்
நெடியானை நிறைபுக ழஞ்சிறைப் புள்ளின்
கொடியானைக் குன்றாம லுலக மளந்த
அடியானை யடைந்தடி யேனுய்ந்த வாறே. (கய)

*(ப-ரை) நிறை புகழ் - நிறைந்த கீர்த்தியையுடைய, அம் சிறை - அழகிய சிறகுகளையுடைய, புள்ளின் - கருடபக்ஷியையுடைய, கொடியானை - கொடியையுடையவனை, அடியான் இவன் என்று - இவன் எனக்குத் தாஸன் என்று, எனக்கு, அருள் செய்யும் - கிருபை செய்யும் - நெடியானை - பெரியவனை, குன்றாமல் - (ஓர் இடமும்) குறையாமல், உலகு அளந்த, அடியானை - திருவடியையுடையவனை, அடைந்து, அடியேன், உய்ந்தவாறு - உஜ்ஜீவித்த விதம், ஏ - என்ன ஆச்சரியம்.*

*(கருத்து) ஸௌசீல்யமுள்ளவன் ஸுபலன் சூரன் என்கிற நிறைந்த கீர்த்தியையுடைய அழகான சிறகையுடைய கருடனுக்குத் தன்னுடைய த்வஜத்தில் இருப்பிடத்தைக் கொடுத்து எம்பெருமான் அவனுக்கு அனுக்ரஹம்செய்ததுபோல், எனக்கும் அனுக்ரஹம் செய்திருக்கிறான். இது மாத்திரமா? "இவன்*

எனக்குத்தாஸன், இவனுக்குச்செய்தது போதாது" என்றுமேன் மேலும் கிருபை செய்து தனக்கு எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்ய யோக்யனாக என்னை ஒப்புக்கொண்டிருக்கிறான். த்ரிவிக்ரமனாய் திருவடியால் ஓர் இடத்தையும் விடாமல் அளந்தது போல் தான் செய்யும் கிருபாகாரியங்களுக்குக் கர்மயோகம் முதலான காரணங்களில்லாவிட்டாலும் நிர்ஹேதுக கிருபையினால் இவைகளைச் செய்கிறான். இப்படிப்பட்டவனை நான் ஆச்ரயித்து உஜ்ஜீவித்திருக்கும் விதம் என்ன ஆச்சரியம்! (10)

---

ஆறு மதயானை யடர்த்தவன் றன்னைச்
சேறார் வயல்தென் குருகூர்ச் சடகோபன்
நூறே சொன்னவோ ராயிரத்து ளிப்பத்தும்
ஏறே தரும்வானவர் தம்மின் னுயிர்க்கே. (கக)

(ப-ரை) ஆறு மதம் (ஒருவேலியும்) மட்டுப்படாத மதத்தையுடைய, யானை-(குவலயாபீடம்) என்கிற யானையை, அடர்த்தவன் தன்னை - முறித்தவனைக் (குறித்து); சேறு ஆர் - சேறு நிறைந்த வயல்களையுடைய, தென் - அழகான, குருகூர்சடகோபன், நூறே சொன்ன, நூறு நூறு பாட்டுகளாகச் சொன்ன, ஓர் ஆயிரத்துள் இப்பத்தும் - வானவர் தம் - நித்யஸூரிகளுடைய, இன் உயிர்க்கு - இனியதான ஆத்மஸ்வரூபத்துக்கு, ஏறு ஏ - பிரதானமான எம்பெருமானைத் தானே, தரும் - கொடுக்கும்,

(கருத்து) ஒருவேலியும் மட்டுப்படாத மதமுள்ள குவலயாபீடம் என்கிற யானையை முறித்தது போல், தன்னுடைய துக்கத்தையெல்லாம் போக்கின எம்பெருமானைப் பற்றி சேறார்வயல் தென் குருகூர்ச்சடகோபன், நூறு நூறு பாட்டுக்களாக அருளிச்செய்த ஆயிரத்துள் இந்தப் பத்துப் பாட்டுக்களும் படிக்கிறவர்களுக்கு நித்யஸூரிகளுடைய இனிய ஆத்மஸ்வரூபத்துக்கு முக்கியமான எம்பெருமானுடைய ஜ்ஞானத்தையும், பக்தி முதலானவைகளையும் கொடுப்பது மாத்திரமல்லாமல் அவனையும் கொடுக்கும்.

குறிப்பு— மற்ற க்ரந்தங்களில் ஒரு அத்தியாயத்தில் ஐம்பது சுலோகமும், மற்றவைகளில் நாற்பது சுலோகங்களும்,

அறுபது சுலோகங்களும் இருக்கும். அப்படியில்லாமல் இவை களைத் தரிப்பவர்களுக்கு ஸௌலபமாயிருக்கும்படி ஒவ்வொரு பத்திலும் நூறுபாட்டுக்களை ஆழ்வார் அருளிச் செய்திருக்கிறார் என்பது "நூறே" என்பதின் கருத்து.

இ-ம். நூறே-ஏகாரத்திற்கு பிரிநிலைப்பொருள், நூறு என்கிற எண்ணை மற்ற எண்களிலிருந்து பிரிக்கிறது. ஏறே - ஏகாரத்திற்குத் தேற்றப்பொருள். இதில் ஸந்தேஹமில்லையென்பது கருத்து. (11)

---

ஶ்ரீவக்ஷஸ்ஸ்தாநவாஸாத் ஸ்வஜநஸுலபதா வர்ஷதோ தாரணாத்ரே:
ரணாமெஷ்வ த்ருட்ஜ்ஞேயகத்வாத் ஸுராத்யைரவிதிதயா
நாகிநாம் வ்யூஹநாவாத் | ஶேஷித்வம் ஹ்ருத்யாவஸிதாயா: ஸ்வஜந
வஶதயா தத்ர வாஸக்தி ஸ்வஸ்வாமிகாதிப்ராப்யா ஜகதி
ஹரிரேத்த்ருஹாணீயமாபி: || ||௧௦௬||

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் எல்லாருக்கும் ஸ்வாமியாயும் எல்லாம் அவனுக்கு ஸொத்தாகவும் இருக்கிற உறவினாலேயே, அவர்களை ரக்ஷிக்கிறானென்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன — (1) லக்ஷ்மியை மார்பில் வைத்துக்கொண்டிருக்கும் தன்மை. (2) தன்னைச் சேர்ந்தவர்களுக்கு ஸௌலபனாயிருப்பது. (3) மலையெடுத்து மழை தடுத்தது. (4) தேவர்கள் முதலானவர்களுக்கு அறியப்படாமை. (5) எல்லாருக்கும் ஸ்வாமியாயிருப்பது. (6) நித்யஸூரிகளுக்கு அநாதியாக சேஷியாக இருப்பது. (7) தன்னைச்சேர்ந்தவர்களுடைய மனதுக்குள் வஸிப்பது. (8) தன்னைச் சேர்ந்தவர்களின் வசத்திலிருப்பது. (9, 10) அவர்களிடத்தில் அதிகப் பற்றுள்ளவனாயிருப்பது. (106)

---

# ஐந்தாம் திருவாய்மொழி.

அவ:— கீழ்த் திருவாய்மொழியில் சொன்னபடி ஆழ்வார் எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்தபோது அவனுடைய பாஹ்யஸம்ச்லேஷத்தில் ஆசை உண்டாயிற்று. அது கிடைக்காமல் அதனால் மிகுந்த துக்கத்தையடைந்து அதைப்போக்குவதற்காக உலகத்திலுள்ள பதார்த்தங்களைப் பார்ப்போமென்று, அவைகளைப் பார்க்கும்போது 'ஜ்யோதீம்ஷி விஷ்ணு:' (ஜ்யோதிஸ்ஸுகள் விஷ்ணு) என்று விஷ்ணுபுராணம் சொல்லுகிறபடி எல்லாம் அவனுக்குப் பிரகாரங்களாக இருப்பதாலும், அவைகளில் சில அவனைப்போலிருப்பதாலும் அவனை மறக்க முடியாமல் மிகவும் வருத்தப்பட்டு, தம் வருத்தத்தை நாயகனை விட்டுப்பிரிந்த நாயகியின் பேச்சாலே பேசுகிறார்—

(2) நாயகனுடன் சேர்ந்து பிரிந்த ஒரு பிராட்டி பிரிவாலுண்டான துக்கத்தால் தோட்டத்துக்குப்போய் அங்கு இருப்பவைகளைப்பார்த்துப்போது போக்கலாமென்று தோட்டத்துக்குப் போனாள். அங்கு குயில் முதலான பக்ஷிகளைப் பார்த்து, அவைகளின் குரலாலும் ரூபத்தாலும் அவன் நினைவை உண்டாக்கி தன் வருத்தத்தை அதிகப்படுத்துவதைப்பார்த்து, "இவைகள் என்னைத் துன்பப்படுத்துகின்றனவே; இவைகளுக்கு என்னிடத்தில் விரோதமில்லையே; இவைகளைக்கொண்டு என்னை முடிப்பதற்காக நாயகன் இவைகளை அனுப்பியிருக்கவேண்டும்" என்று தனக்குள்ளே நினைக்கிறாள்.

(கலித்துறை)

இன்னுயிர்ச் சேவலு நீருங் கூவிக்கொண் டிங்கெத்தனை
என்னுயிர் நோவ மிழற்றேன்மின் குயிற் பேடைகாள் !
என்னுயிர்க் கண்ண பிரானை நீர்வரக் கூவுகிலீர்
என்னுயிர்க் கூவிக் கொடுப்பார்க்கு மித்தனை வேண்டுமோ.

(ப-ரை) குயில் பேடைகாள் - குயில் ஸ்திரீ பக்ஷிகளே! இன் உயிர் -(உங்களுக்கு) மிகவும் இனிய பிராணனான, சேவலும் - புருஷபக்ஷிகளும், நீரும் - நீங்களும், கூவிக்கொண்டு, (எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லி அவனைக்) கூப்பிட்டுக்

கொண்டு, என் உயிர் நோவ - என் பிராணன் நோவுபடும்படி, மிழற்றேன்மின் - சப்திக்கவேண்டாம், இங்கு எத்தனை - இவ்விடத்தில் என்ன விஷயம் உங்களுக்கு இருக்கிறது. என் உயிர்-என் பிராணனான, கண்ணபிரானை - கண்ணனாய் உபகாரம் செய்தவனை, நீர் வர கூவுகிலீர் - வரும்படி நீங்கள் அழைக்கிறீர்கள் இல்லை. என் உயிர் - என் பிராணனை, கூவி - கூப்பிட்டு (அபஹரித்து), கொடுப்பார்க்கும் - (அவன் கையில்) கொடுக்கப் பார்க்கிறவர்களுக்கும், இத்தனை-இத்தனை பிரயத்னங்கள், வேண்டுமோ?

(கருத்து) குயில் பெண்பக்ஷிகளே! உங்களுக்கு இனிய பிராணனான ஆண் பக்ஷிகளும் நீங்களும் எம்பெருமானுடைய திருநாமங்களைச்சொல்லி அவனைக் கூப்பிட்டு சப்திக்கவேண்டாம். ஏற்கனவே அவனைவிட்டுப் பிரிந்து நான் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறேன். நீங்கள் அவன் திருநாமங்களைச் சொல்லும்போது எனக்கு வருத்தம் அதிகமாகிறது. ஸ்திரீகளான நீங்கள் உங்களைப் போலிருக்கிற என்னை, புருஷர்களைப்போல் வருத்தப்படுத்தலாமோ? ஒரு பெண்ணின் வதம் வருமானால் அதற்கு காரணமான வியாபாரத்தை விடவேண்டாமோ? காலாக்னிக்கு ஒரு வைக்கல்காரைபோல் உங்களுக்கு நான் இருக்கிறேன். உங்களுக்கு இங்கே இவ்வளவு வேலைசெய்ய என்ன இருக்கிறது. "கொலை செய்கிறவனைப்போல் எங்களைப் பார்த்துச்சொல்லுகிறாயே? நாங்கள் கண்ணனை வரும்படி கூப்பிடுகிறோ"மென்று அவைகள் சொன்னதாக எண்ணிக்கொண்டு அவைகளுக்குப் பதில் சொல்லுகிறாள். இது உண்மையன்று. கண்ணனாய் அவதாரம் செய்து பெண்களுக்கு உபகாரம் செய்து எனக்கு இனியவனாயிருக்கிறவனை நீங்கள் கூப்பிடுகிறீர்களில்லை; அதைச் செய்வதானால் அவன் இருக்கிற விடத்தில் போயன்றோ கூப்பிடவேண்டியது. ஆகையால் என் பிராணனைக் கூப்பிட்டு அழைத்துக்கொண்டு அதை அவனிடம் கொடுக்கப் பார்க்கிறீர்கள். இந்த வேலைக்கு நீங்கள் சேர்ந்திருப்பதும், அவன் திருநாமங்களைச் சொல்லுகையும், ஒருவரிடத்தில் ஒருவர் ஆசையோடு கூச்சல் போடுவதும் வேண்டுமோ? நீங்கள் இருப்பதே போதாதோ?

குறிப்பு— (1) எம்பெருமான் என்னை முடிக்கவேணும் என்று எண்ணுகிறான். அதற்கு உபாயம் என்னுடன் சேர்ந்து

என்னைவிட்டுப் பிரிவது என்று நினைத்து, 'என்னுடன் கலந்து என்னைவிட்டுப் பிரிந்தான். இந்தப் பிரிவினாலே நான் முடியா விட்டால் என்ன பண்ணுகிறதென்று நினைத்து, "என் குணங்களை அவள் முன்னாலே சொல்லி அவளை முடியுங்கள்" என்று இந்தக் குயில்களை என்னிடம் அனுப்பியிருக்கிறான் என்று நாயகி நினைத்தாள் என்பது "என்னுயிர் கூவிக் கொடுப்பார்க்கும்" என்பதின் கருத்து.

(2) கண்ணன் எனக்குத் தாரகன், அதாவது - என் உடம்பில் உயிர் இருப்பதற்குக் காரணம்; தாரகமானது அந்தந்த வஸ்துவுக்குத் தகுந்ததாக இருக்கும். பசுக்களுக்கு புல்; மனிதர்களுக்கு அன்னம்; தேவர்களுக்கு அமுதம்; எனக்குக்கண்ணன் என்று ஆழ்வார் எண்ணுகிறார் என்பது "என்னுயிர் கண்ண பிரானை" என்பதின் கருத்து.

இ—ம். மிழற்றேன்மின் - எதிர்மறைப்பன்மை ஏவல் வினைமுற்று. கூவுகிலீர் - கூவு+கு+இல்+ஈர்; கு-சாரியை; கூவுதல் இல்லாதவர்கள் நீங்கள். (1)

---

அவ— இப்படிக் குயில்களைப் பார்த்துப் பேசிக்கொண்டிருக்கையில், நடுவே அன்றில் பக்ஷிகள் வந்து நெருப்பை உருக்கிக் காதில் வார்ப்பதுபோல் சப்தம் பண்ண, அவைகளைப் பார்த்து, 'குயில்கள் போதாதோ? நீங்களும் அவர்களுடன் சேரவேணுமோ?' என்று நாயகி சொல்லுகிறாள்:—

இத்தனை வேண்டுவ தன்றந்தோ வன்றிற் பேடைகாள்
எத்தனை நீரும்நுஞ் சேவலுங் கரைந் தேங்குதிர்
வித்தகன் கோவிந்தன் மெய்ய னல்ல னொருவர்க்கும்
அத்தனை யாமினி யென்னு யிரவன் கையதே. (௨)

(ப-ரை) அன்றில் பேடைகாள் - அன்றில் பெண் பக்ஷிகளே! நீரும் - நீங்களும், நும் சேவலும் - உங்களுடைய ஆண் பக்ஷிகளும், எத்தனை-எவ்வளவு, கரைந்து - (ஒருவர் மற்றொருவர்களிடத்திலிருக்கும் ஆசையாலே) உருகி, ஏங்குதிர் - தழதழத்துப் பேசுகிறீர்கள். இத்தனை வேண்டுவது அன்று - இவ்வளவு வியாபாரங்கள் வேண்டுவதில்லையே, அந்தோ - ஐயோ! வித்த

கன் - ஆச்சரியமானவன், கோவிந்தன், ஒருவர்க்கும், மெய்யன் அல்லன் - உண்மையான பிரீதியுள்ளவன் அல்லன், இனி, என் உயிர் - என் பிராணன், அவன் கையதே - அவன் கையிலிருப்பதாகவே, ஆம் அத்தனை - ஆய்விடுமத்தனை.

(கருத்து) அன்றில் பெண் பக்ஷிகளே! நீங்கள் வேறு ஜாதி, குயில்கள் வேறு ஜாதி; ஆனாலும் என்னைத் துன்பப்படுகிற விஷயத்திலோ உங்களுக்கு வித்யாஸத்தை நான் பார்க்கவில்லை. நீங்கள் ஆண் பக்ஷிகளின் அபிப்பிராயத்தை அறிந்து அவைகளும் உங்கள் அபிப்பிராயத்தை அறிந்து ஒருவருக்கொருவர் ஆசையினால் கரைந்து தழுதழுத்துக் கூச்சலிடுகிறீர்கள். ஏற்கனவே நாயகனைவிட்டுப் பிரிந்து வருத்தப்படுகிற எனக்கு உங்களுடைய கூச்சல்கள் பழுக்கக் காய்ச்சின பாணங்கள் போலிருக்கின்றன. என் பிராணனை எடுத்துக்கொண்டு கோவிந்தனிடம் கொடுப்பதற்கு இவ்வளவு துன்பப்படுத்துகிற வியாபாரங்கள் செய்யவேண்டுமோ? நீங்கள் இதைச் செய்யக்கூடாது. ஐயோ! மறுபடியும் கூச்சலிட ஆரம்பிக்கிறீர்களே! சரணம் என்று சொல்லுகிற வாயில் பாணங்களை நிறைப்பதுபோலிருக்கிறது உங்களுடைய வேலை. இப்படி நாயகி அவைகளை வேண்டினாள். "உன்னோடு சேர்ந்திருப்பதே அவனுக்குத் தாரகம்; ஒரு க்ஷணம் அவன் உன்னை விட்டுப் பிரிந்தால் இப்படிக் கொடுமை சொல்லவேணுமோ? தானே வருகிறான்" என்று அன்றில்கள் சொன்னதாக நினைத்துப் பதில் சொல்லுகிறாள். கோவிந்தன் ஆச்ரிதர்களுக்கு ஸுலபன்போல் தோன்றி, உண்மையில் துர்லபனாக இருக்கும்படி ஆச்சரியமானவன். அவனுக்கு ஒருவரிடத்திலும் உண்மையான ஸ்நேஹமில்லை. இந்த விஷயத்தில் வேண்டியவர்களுக்கும் வேண்டாதவர்களுக்கும் அவன் ஒரேவிதமாயிருக்கிறவன். 'நான் இரண்டு வார்த்தை பேசுகிறதில்லை' என்று அவன் சொல்லவில்லையா" என்கிறீர்களோ? அது ராமாவதாரத்திலன்றோ? இந்த அவதாரத்தில் மோசம் செய்வதே அவனுக்கு ஸ்வபாவம்; பாரதச் சண்டையில் பகலை இராத்திரியாக்கவில்லையா? அவன் ஆயுதம் எடுக்கிறதில்லையென்று சொல்லி ஆயுதத்தை எடுக்கவில்லையா? அவனை எப்படி நம்பலாம். அவன் வருவன் என்று எண்ணியிருக்

கலாமோ? என்னுடைய பிராணன் அவன் கையிலிருப்பதாகவே ஆகிவிட்டது. அதுக்கு இதைத் தவிர வேறு கதியில்லை. ஆகையால் அது முடிந்துவிட்டது.

இ-ம். ஏங்குதிர் - முன்னிலைப் பன்மை வினைமுற்று. (2)

---

அவன்கை யதேயென தாருயி ரன்றிற் பேடைகாள்
எவஞ்சொல்லி நீர்குடைந் தாடு தீர்புடை சூழவே
தவஞ்செய் திலா வினையாட்டி யேனுயி ரிங்குண்டோ
எவஞ்சொல்லி நிற்றும்நும் மேங்கு கூக்குரல் கேட்டுமே. (௩)

(ப-ரை) அன்றில் பேடைகாள், என் ஆர் உயிர் - என்னுடைய சிறந்த பிராணன், அவன் கையதே - அவனுடைய கையிலிருக்கிறது. தவம் - தபஸ்ஸை, செய்து இலா - செய்தல் இல்லாத, வினையாட்டியேன் - பாபம் பண்ணின என்னுடைய, உயிர் - பிராணன், நும் - உங்களுடைய, ஏங்கு கூக்குரல் - ஆசையினால் தழுதழுக்க (ஒருவர் மற்றொருவரைக்) கூப்பிடுகிற சப்தத்தை, கேட்டும், இங்கு உண்டோ - என்னிடத்தில் இருக்குமோ? எவம் சொல்லி - எதைச் சொல்லி, நிற்றும் - நிற்போம், நீர் - நீங்கள், எவம் சொல்லி - ஏதோ ஒன்றைச் சொல்லிக்கொண்டு, குடைந்து - ஒருவர் முகத்தை மற்றொருவர் உடலில் வைத்துக்கொண்டு, புடை சூழவே - என் பக்கங்களைச் சுற்றிலும், ஆடுதிர் - அங்குமிங்கும் போகிறீர்கள்.

(கருத்து) அன்றில் பேடைகளே! என் உயிர் முழுவதும் அவன் கையிலிருக்கிறது. ஒருத்தி ஒரு நாயகனை ஆசைப்பட்டால், அவள் பிராணன் அவனிடத்திலேதானே இருக்கும். இது உங்களுக்குத் தெரியாதா? அவனுடன் இடைவிடாமல் சேர்ந்திருக்கும்படி தபஸை நான் செய்யவில்லை. உங்கள் வியாபாரங்களாலே துன்பப்படும்படி கெட்ட கர்மங்களைச் செய்திருக்கிறேன். உங்களுடைய ஏங்கும் கூக்குரலைக் கேட்ட பிறகும் என் உயிர் என்னிடம் இருக்குமோ? எதைப் பிடித்துக்கொண்டு நான் தரிப்பேன். வாயால் சொல்லுவதற்குக்கூட ஒரு பிடிப்பில்லை. இப்படி நான் இருக்கையில், நீங்கள் ஆசையைக் காட்டும் சொல்லைச் சொல்லிக்கொண்டு ஒருவர் மற்றொருவருடைய உடலில் முகத்தை வைத்துக்கொண்டு என்னைச் சுற்

றிலுமிருந்து அங்குமிங்கும் போய்க்கொண்டிருக்கிறீர்களே. உங்களுடைய இந்த ச்ருங்கார வியாபாரங்களை என் முன்னால் செய்யவேணுமோ? அவைகளைச் செய்ய வேண்டாம்.

இ—ம். இல்லா - இல்லாத, ஈறுகெட்ட பெயரெச்சம். நிற்றும் - நில்+தும், தும் காலம் காட்டும் தன்மைப் பன்மை விகுதி. ஏ + அம்ஏவம். அம் சாரியை. ஏ என்கிற வினா எழுத்துக்கு ஏது என்பது பொருள். (3)

---

அவ— நாயகி அன்றில்களோடு பேசிக்கொண்டிருக்கையில் மயில்கள் வந்து கத்தின; அவைகளைப் பார்த்துப் பேசுகிறாள்:-

கூக்குரல் கேட்டுநங் கண்ணன் மாயன் வெளிப்படான்
மேற்கிளைக் கொள்ளேன்மி னீருஞ் சேவலுங் கோழிகாள்
வாக்கும் மனமுங் கரும முந்நமக் காங்கதே
ஆக்கையு மாவியு மந்தரம் நின்று ழலுமே. (ச)

(ப-ரை) கோழிகாள் - பெண் மயில்களே! கூக்குரல் கேட்டு - கூப்பிடுகிற உங்களுடைய குரலைக் கேட்டு, மாயன் - ஆச்சரியமான, நம் கண்ணன், வெளிப்படான் - தோன்றான், நீரும் - நீங்களும், நும் சேவலும் - உங்களுடைய ஆண் பக்ஷிகளும், மேல் கிளை - உயர்ந்த குரலை, கொள்ளேன்மின் - கொள்ள வேண்டாம், வாக்கும், மனமும், கருமமும் - (வேலைகள் செய்கிற) உடம்பும், நமக்கு - எனக்கு, ஆங்கதே - அவனிடத்திலேயே சேர்ந்திருக்கிறவைகள். ஆக்கையும் ஆவியும் - உடம்பும் பிராணனும், அந்தரம் நின்று - நடுவிலிருந்து, உழலும் - சுழலும், (துன்ப்படுகின்றன.)

(கருத்து) பெண் மயில்களே! நீங்களும் உங்கள் ஆண் மயில்களும், என்ன செய்ய மேன்மேலும் அவனைக் கூப்பிடுகிறீர்கள் "அவனை வரும்படி நாங்கள் கூப்பிடுகிறோம்" என்று சொல்லுகிறீர்களோ? நீங்கள் சொல்வது உண்மையானால், கோபிகள் கிட்டவிருந்து பிறகு மறைந்து அவர்கள்வருத்தப்படும்போது ஆச்சர்யமான நம்முடைய கண்ணன் தோன்றினதுபோல ஏன் அவன் இப்போது தோன்றவில்லை. ஆகையால் நீங்கள் கூவுவது அவன் வருவதற்காக அன்று. என்னை முடிப்பதற்காகத்தானே

நீங்கள் கூவுவது. ஏற்கனவே என்னுடைய வாக்கு முதலான எல்லாக் கரணங்களும் முடிந்தன. இன்னமும் என்ன செய்வதற்காக ப்ரயாஸப்படுகிறீர்கள். "உன்னுடைய கரணங்கள் முடிந்துவிட்டால் நீ பேசுவதும் வேலை செய்வதும் எப்படி?" என்று கேட்கிறீர்களோ? உடம்பும் பிராணனும் மற்றக் கரணங்களும் முடிந்து போயிருந்தும் நடுவில் சில வேளைகளில் பழைய வாஸனையால் துன்பப்படுகின்றன. இவ்வளவுதான்.

குறிப்பு— "நம் கண்ணன்" என்பதில் 'நம்' என்பதற்கு ஆலமரத்தில் யக்ஷிணிக்கிறான் என்று உலகத்தில் பிரஸித்தி. அதுபோல 'கண்ணனும் ஸாலபன்' என்று அவனுக்கு பிரஸித்தியிருக்கிறது என்பது கருத்து.

இ—ம். ஆங்கு - அங்கு, நீட்டல் விகாரம். (4)

---

அவ— நாயகி மயில்களோடு பேசிக்கொண்டிருக்கையில், அவள் வளர்த்த பூவைகள், நாயகன் திருநாமங்களைச் சொல்ல, அவைகளைப் பார்த்துப் பேசுகிறாள்:—

அந்தரம் நின்றுழல் கின்ற யானுடைப் பூவைகாள்
நுந்திறத் தேது மிடையில் லைகுழ றேன்மினோ
இந்திர ஞாலங்கள் காட்டியிவ் வேழுல குங்கொண்ட
நந்திரு மார்பன் நம்மாவி யுண்ணநன் கெண்ணினான். (ரு)

(ப-ரை) அந்தரம் நின்று - நடுவில் நின்று, உழல்கின்ற - வருத்தப்படுகிற, யானுடை - என்னுடைய, பூவைகாள் - பூவைகளே! நும் திறத்து - உங்களுடைய வகைக்கு (கூட்டத்துக்கு) (என்னிடத்தில்) ஏதும் - கொஞ்சமும், இடையில்லை - இடமில்லை, குழறேல்மினோ - குழறவேண்டாம், இந்திர ஞாலங்கள் - இந்திர ஜாலங்களை, காட்டி - (மஹாபலிக்குக்) காட்டி, ஏழு உலகும் - ஏழு உலகங்களையும், கொண்ட—அவனிடமிருந்து எடுத்துக் கொண்ட, நம் - நம்முடைய, திருமார்பன், நம் ஆவி - என்னுடைய பிராணனை, உண்ண - சாப்பிட, நன்கு-நல்ல உபாயத்தை, எண்ணினான்.

(கருத்து) பூவைகளே! உங்களுக்கு நான் என்ன கெடுதலைச் செய்தேன். நடுவில் வந்து அவனுடைய திருநாமங்களைச்

சொல்லி என் துன்பப்படுத்துகிறீர்கள். நீங்கள் ஞானிகளைப் போலிருக்கவில்லையே; என்னுடைய சொத்தாயிருக்கிற நீங்களு மிப்படிச் செய்யலாமோ? உங்களை என்னுடையவைகள் என்று எண்ணினது எனக்குக்கெடுதலாய் முடிந்ததே; (௨) 'என்னுடையது' என்கிற எழுத்துக்கள் மிருத்யு என்று பெரியோர்கள் சொல்லுகிறார்களே; அது என் விஷயத்தில் பலித்துவிட்டதே. நீங்கள் கூட்டமாய் இவ்வளவு பிரயாஸப்படுவதற்கு என்னிடத்தில் கொஞ்சமும் இடமில்லை. ஆகையால் அவன் திருநாமங்களைக் குழறல் வேண்டாம். இப்படிச் சொல்லி தனக்கு உள்ளே வருத்தத்துடன் நினைக்கிறாள், முன்காலத்திலே இந்திர ஜாலங்களைப்போல் உண்மை என்று பிரமிக்கும்படி செய்கிற மிகவும் அழகான திருமேனியையும் மிகவும் ஆச்சரியங்களான குணங்களையும் லீலைகளையும் மஹாபலிக்குக் காட்டி அவனிடமிருந்து உலகங்களை அபஹரித்துக்கொண்டதுபோல், சில பொய்களைச் செய்து என்னோடு சேர்ந்து இருப்பவன் போல் தோன்றி, நான் பிரமிக்கும்படி செய்து, என்னைவிட்டுப் போய் விட்டான். இப்படிச் செய்வதுதான் என்னை முடிப்பதற்கு நல்ல உபாயமென்று பார்த்தான். மிகவும் கெட்டிக்காரன். (௭)

நன்கெண்ணி நான்வ ளர்த்த சிறுகிளிப் பைதலே
இன்குரல் நீமிழற் றேலென் னாருயிர்க் காகுத்தன்
நின்செய்ய வாயொக்கும் வாயன் கண்ணன் கைகாலினன்
நின்பசுஞ் சாம நிறத்தன் கூட்டுண்டு நீங்கினான். (௮)

(ப-ரை) நன்கு - நல்லதை, எண்ணி, நான் வளர்த்த, சிறு கிளி பைதலே - இளமையுள்ள அறிவில்லாத கிளியே! நின் - உன்னுடைய, செய்யவாய் ஒக்கும் - சிவந்த வாயை ஒத்திருக்கும், வாயன் - வாயையுடையவன், நின் - உன்னுடைய, பசும் சாமம் - குளிர்ந்து கருப்பாயிருக்கிற, நிறத்தனன் - வர்ணமுள்ளவன், என் - எனக்கு, ஆர் உயிர் - முழு உயிரான. காகுத்தன், கூட்டு உண்டு - சேர்ந்திருப்பதை அநுபவித்து, நீங்கினான் - என்னை விட்டுப் போனான். நீ, இன் குரல் - இனிமையான குரலை, மிழற்றேல் - மிழற்றாதே.

(கருத்து) சிறு வயதுள்ள அறிவில்லாத கிளியே! நாயகனுடன் நான் சேர்ந்திருக்கும்போது அவனுடைய குணங்களையும் லீலைகளையும் சொல்லவும், அவனை விட்டுப் பிரிந்தபோது

அவன் திருநாமங்களைச் சொல்லாமலிருக்கவும் அன்றோ நான் உன்னை வளர்த்தது. ஓரே பிள்ளையுள்ள தாய் அதை வேலைக்காரியைக்கொண்டு வளர்க்காமல் தானே வளர்ப்பதுபோல், நானே உன்னை வளர்க்கவில்லையா? அவனை விட்டு நான் பிரிந்திருக்கும்போது அவனுடைய திருநாமங்களைச்சொல்லித் தாயாகிய என்னை நீ துன்பப்படுத்தலாமோ? உன்னுடைய சிவந்த வாய் அவனுடைய திருப்பவளத்தையும், திருக்கண்களையும், திருக்கைகளையும், திருவடிகளையும் ஒத்திருக்கிறது. உன் உடம்பும் அவன் நிறமுள்ளது. உன்னுடைய உடம்பும் வாயும் அவனை நினைப்பூட்டி என்னைத் துன்பப்படுத்துகின்றனவே. ஓர் உடம்பில் எனக்கு இவ்வளவு சத்துருக்களைத் தேடிவைக்கலாமோ? தன்னைப் பிரிந்து தரித்திருக்கமுடியாதபடி எனக்கு முழுப் பிராணனான காகுத்ஸ்தன் என்னுடன் சேர்ந்திருந்து என்னைவிட்டுப் போய்விட்டான். அதினாலுண்டான வருத்தத்தாலே என் பிராணன் கழுத்தில் வந்திருக்கிறது. ஆபத்துக்கு உதவுவதற்காக நான் வளர்த்த கிளியே! அவன் திருநாமங்களை மிழற்ற வேண்டாம். உன் குரல் என் காதுக்கு பழுக்கக் காய்ச்சின பாணங்கள் போலிருக்கிறது.

இ—ம். 'பைதல்' என்பதற்குச் சிறு பிள்ளை என்பது பொருள். அது ஆகுபெயராய், சிறு பிள்ளையின் தன்மையாகிய அறியாமையைச் சொல்லுகிறது. சாமம் - வடமொழி ஶ்யாம; கறுப்பான என்பது பொருள். (6)

---

கூட்டுண்டு நீங்கிய கோலத் தாமரைக்கட் செவ்வாய்
வாட்டமி லென்கரு மாணிக்கங் கண்ணன் மாயன்போல்
கோட்டிய வில்லோடு மின்னு மேகக்குழாங் கள்காள்
காட்டேன் மின்னும் முருவென் னுயிர்க் காலனே. (எ)

(ப-ரை) கூட்டு உண்டு - என்னுடன் சேர்ந்திருப்பதை அநுபவித்து, நீங்கிய - என்னை விட்டுப் பிரிந்திருக்கிற, வாட்டம் இல் - (அகமுறல்) ஒரு வாட்டமுமில்லாத, மாயன் - ஆச்சரியமானவனுமிருக்கிற, கோலம் தாமரை கண் - அழகான தாமரைக் கண்களையும், செவ்வாய் - சிவந்த திருப்பவளத்தையும் உடைய, என் கருமாணிக்கம் - என்னுடைய நீலரத்னம் போன்ற, கண்ணன் போல் - கண்ணனைப்போல, கோட்டிய வில்லொடு - வளைந்த

வில்லோடு, மின்னு - மின்னுகிற, மேகக்குழாங்கள்காள் - மேகக் கூட்டங்களே! நும் - உங்களுடைய, உரு - ரூபத்தை, காட்டேல் மின் - காட்டவேண்டாம், அது - அந்த ரூபம், என் உயிருக்கு, காலன் - மிருத்யு.

(கருத்து) கண்ணன் என்னுடன் சேர்ந்திருப்பதை அநுபவித்து, என்னை விட்டுப் பிரிந்து போய்விட்டான். இதனால் அவனுக்கு ஒரு வாட்டமுமில்லை. இது மாத்திரமன்று. அவன் திருமேனியில் அழகான தாமரைக் கண்களிலும் சிவந்த திருப்பவளத்திலும் நீலரத்நம் போன்ற திருமேனியிலும் முன்னைக் காட்டிலும் அதிக அழகு உண்டாயிருக்கிறது. மேகக் கூட்டங்களே! வளைந்த வில்லாலும் மின்னல் கொடிகளாலும், உங்கள் நிறத்தாலும் நீங்கள் அவனைப் போலிருக்கிறீர்கள், உங்களைப் பார்க்கும்போது அவன் நினைவு எனக்கு வருகிறது. ஏற்கனவே அவனைப் பிரிந்து வருத்தப்படுகிற என்னை அது கொளுத்தி வெடிக்கும்படி செய்யும்.

குறிப்பு— (1) பாட்டில் 'அது காலன்' என்று மேகத்தைப் பார்க்கமுடியாமல் தலை குனிந்து "அது" என்று சொல்லுகிறார். அவைகளை நேரில் பார்த்தால் "இது" என்று சொல்லவேண்டுமே.

(2) ஆகாசத்தில் தோன்றுகிற இந்திர தநுஸ்ஸை எம்பெருமானுடைய சார்ங்கம்போலவும், மின்னல்கொடிகள் அவனுடைய ஹார கேயூரங்கள் போலவுமிருக்கின்றன என்பது கருத்து.

இ—ம். குழாங்கள்காள் - குழாங்கள்கள் என்பதின் விளிவேற்றுமை. முதல் "கள்" பகுதிப்பொருள் விகுதி; இரண்டாவது "கள்" விகுதிமேல் விகுதி. (7)

---

அவ— முதல் பாட்டில் காட்டிலிருக்கும் குயில்களுடன் நாயகி பேசினாள்; இதில் தான் வளர்த்த குயில்களோடு பேசுகிறாள்.—

உயிர்க்கது காலனென் றும்மை யானிரந் தேற்குநீர்
குயில்பைதல்காள் கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர்
தயிர்ப்பழஞ் சோற்றொடு பால டிசிலுந் தந்துசோல்
பயிற்றிய நல்வள மூட்டினீர் பண்புடை யீரே. (அ)

(ப-ரை) குயில் பைதல்காள் - சிறு வயதுள்ள குயில்களே! அது - அவனுடைய திருநாமம், உயிருக்கு - என் பிராணனுக்கு, காலன் - மிருத்யு என்று, உம்மை-உங்களை, யான் இரந்தேற்கு - யாசித்த எனக்கு, நீர் - நீங்கள், கண்ணன் நாமமே - கண்ணனுடைய திருநாமங்களையே! குழறி - சொல்லி, கொன்றீர் - (என்னை) கொன்றுவிட்டீர்கள், தயிர் பழம் சோற்றோடு - தயிரோடு கூடிய பழைய சோற்றோடு, பால் அடிசிலும்- பால் அன்னமும், தந்து - கொடுத்து, சொல் பயிற்றிய - சொல்லுக்களைச் சொல்லும்படி பழக்கினதற்கு, நல் வளம் - நல்ல ஸம்பத்தை, ஊட்டினீர் - (நான்) அநுபவிக்கும்படி செய்தீர். பண்பு உடையீர் - (நீங்கள்) நல்ல குணமுடையவர்கள்.

(கருத்து) குயில்களே! நீங்கள் சிறு வயதுள்ளவர்கள் என்பதை நன்றாய் காட்டுகிறீர்கள். 'கண்ணனுடைய திருநாமம் எனக்குத் துன்பப்படுத்துவது மாத்திரமின்றி, என்னைக் கொன்றும்விடும்' என்று உங்களுக்குச் சொன்னேன். என் கருத்தை அறிந்து நீங்களே செய்யவேண்டியிருக்க அதைச் செய்யும்படி நானுகவே யாசித்தேன். தாயாகிய நான் உங்களை இதைச் செய் என்று கட்டளையிடவேண்டியவள். ஆனாலும், உங்களை மன்றாடிக் கேட்டுக்கொண்டேன். நீங்களோ அவன் திருநாமங்களையே சொல்லிக்கொண்டு எனக்கு விரோதமான காரியத்தைச் செய்து என்னைச் சாகும் காலத்தில் கொண்டுவந்து விட்டீர்கள். உங்களுக்குக் காலை வேளையில் தயிரும் பழையசோறும் மற்ற வேளைகளில் பாலும் அன்னமும் ஊட்டி உங்களை வளர்த்தேன். உங்களுக்குச்சொற்களைச் சொல்லும்படி பழக்கினேன். இந்த உபகாரங்களுக்குப் பதிலாக நல்ல உபகாரத்தைச் செய்து விட்டீர்கள்! நல்ல ஸம்பத்தை நான் அநுபவிக்கும்படி செய்தீர்கள். உங்களுடைய ஸ்வபாவம் நல்ல ஸ்வபாவம்.

குறிப்பு— மன வருத்தத்தாலேயே நாயகி தனக்கு அவைகள் செய்த அபகாரத்தை உபகாரமாகவும், அவைகளின் நன்றி மறந்த ஸ்வபாவத்தை நல்ல ஸ்வபாவமாகவும் வெறுப்புடன் சொல்லுகிறாள். (8)

பண்புடை வண்டோடு தும்பிகாள் பண்மிழற் றேன்மின்
புண்புரை வேல்கொடு குத்தா லொக்கு நும்மின்குரல்
தண்பெரு நீர்த்தடந் தாமரை மலர்ந்தா லொக்கும்
கண்பெருங் கண்ணன் நம்மாவி யுண்டெழ நண்ணினான். (௯)

*(ப-ரை) பண்பு உடை - நல்ல ஸ்வபாவத்தையுடைய, வண்டொடு - வண்டுகளுடன் சேர்ந்திருக்கிற, தும்பிகாள் - தும்பிகளே! நும் - உங்களுடைய, இன் - இனிய, குரல், புண் புரை - புண்ணிலிருக்கும் ஓட்டையில், வேல் கொடு - வேலைக்கொண்டு, குத்தால் ஒக்கும் - குத்துவதை ஒத்திருக்கிறது; பண் - உங்கள் கானத்தை, மிழற்றேன் மின் - மிழற்ற வேண்டாம், தண் - குளிர்ந்த, பெரு நீர் - நிறைந்த ஜலத்தில், தடம் - பெரிய, தாமரை, மலர்ந்தால் ஒக்கும் - மலர்ந்ததை ஒத்திருக்கும், பெருங்கண் - விசாலமான திருக்கண்களையுடைய, கண்ணன், நம் ஆவி - என்னுடைய பிராணனை, உண்டு - சாப்பிட்டு (எடுத்துக்கொண்டு), எழ - போகைக்கு, நண்ணினான் - என்கிட்ட வந்தான்.*

*(கருத்து) நல்ல ஸ்வபாவமுடைய வண்டுகளே! தும்பிகளே! நான் கண்ணனை விட்டுப்பிரிந்து வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறேன். நீங்கள் அவனுடைய திருநாமத்தைக் கானம் பண்ணினால், அந்த இனிய கானமானது புண்ணில் வேலைக்கொண்டு குத்துவதுபோல் எனக்கு மிகுந்த துன்பத்தை உண்டுபண்ணும். ஆதலால், அந்தக் கானத்தைச் செய்யவேண்டாம் — என்று சொல்ல, அவைகள் "அவன் விஷயமான கானம் உனக்கு மிகவும் இனியதாக இருக்கவில்லையா" என்று கேட்பதாக நினைத்துப் பதில் சொல்லுகிறாள்:— குளிர்ந்த பெரிய ஜலத்தில் ஒரு விசாலமான தாமரை பூத்தால் எப்படி அழகாயிருக்குமோ, அப்படியிருக்கிற திருக்கண்களையுடைய கண்ணன் என் பிராணனை அபஹரித்துக்கொண்டு போக நினைத்து என்னுடன் சேர்ந்து என்னை விட்டுப் பிரிந்து போய்விட்டான். ஆகையால், இப்போது அவன் விஷயமான உங்களுடைய கானம் எனக்கு இனிதாயிராமல் துன்பத்தையே உண்டுபண்ணுகிறது.*

*குறிப்பு— வண்டுகள் நாவற் பழம்போலிருப்பது. தும்பி என்பது நடுச்சிறுத்து நீண்டு இருப்பது. இரண்டும் ஒரே ஜாதி.*

இ—ம். குத்தால் - குத்தல்; நீட்டல்விகாரம். கொடு - கொண்டு - இடைக்குறை. (9)

---

எழநண்ணி நாமும் நம்வான நாடனோ டொன்றினோம்
பழன நன்னாரைக் குழாங்கள்காள் பயின் றென்னினி
இழை நல்ல வாக்கையும் பையவே புயக்கற்றது
தழைநல்ல வின்பந் தலைப்பெய் தெங்குந் தழைக்கவே. (ம)

(ப - ரை) நாமும், எழ - (உடம்பை விட்டுப்) போவதற்கு, நண்ணி - கிட்டி, நம் - நம்முடைய, வான நாடனோடு - வைகுந்தமென்கிற நாட்டையுடையவனோடு, ஒன்றினோம் - ஒன்றாகிவிட்டோம். இழை நல்ல - ஆபரணம்போல் நல்லதான, ஆக்கையும் - உடம்பும், பையவே - கொஞ்சம் கொஞ்சமாக, புய - வெளிப்படுவதை, கற்றது - கற்றுக்கொண்டது, பழனம் - வயல்களிலிருக்கும், நல் - நல்ல, நாரைக் குழாங்கள்காள் - நாரைக் கூட்டங்களே! இனி, பயின்று-(நீங்கள்)கூட்டம் கூடி, என்-என்ன பிரயோஜநம்? எங்கும் - எல்லாத் தேசமும், தழை - தழைத்ததான, நல்ல இன்பம் - ஸுகத்தை, தலைப்பெய்து - அடைந்து, தழைக்க - தழைத்திருக்கவேண்டும்.

(கருத்து) வயல்களில் ஸஞ்சாரம் செய்யும் அழகான நாரைக்கூட்டங்களே! இங்கேயிருந்து எம்பெருமானை அநுபவிக்க ஆசைப்பட்ட எனக்கு அது கிடைக்கவில்லை; என்னை முடிக்கவேணுமென்று எண்ணியிருக்கிற அவனுடைய ஸங்கல்பப்படி நாமும் முடிந்துவிடுவதென்று தீர்மானித்து வைகுந்தமாகிய தேசத்தையாளுகிற அவனுடன் ஒன்றாகச் சேர்ந்துவிட்டேன்; அதாவது முடிந்துவிட்டேன். ஆபரணங்களைப்போல் அவன் ஆசைப்படும்படியான என் உடம்பும் கொஞ்சம் கொஞ்சமாய்க்கெட்டுப் போக ஆரம்பித்துவிட்டது. இப்படி ஆன பின்பு நீங்கள் எதற்காகக் கூட்டங்கூடி ஆலோசனை செய்கிறீர்கள்? (என்று சொல்லித் தமக்குள்ளே வேண்டுகிறாள்) நான் பட்டது போல் படாமல் இந்தத் தேசம் முழுவதும் துக்கக் கலப்பில்லாத ஸுகத்தை (அதாவது - மிகவும் உயர்ந்த ஸுகமான எம்பெருமானுடைய அநுபவத்தை) அடைந்து நன்றாயிருக்கவேண்டும்.

இ—ம். புய-புய் பகுதி அ வினையெச்சவிகுதி. இது தொழிற் பெயர் பொருளில் வந்திருக்கிறது. (10)

---

இன்பந் தலைப்பெய் தெங்குந் தழைத்த பல்லூழிக்குத்
தன்புக ழேத்தத் தனக்கருள் செய்த மாயனைத்
தென்குரு கூர்ச்சட கோபன் சொல்லா யிரத்துள்ளிவை
ஒன்ப தோடொன் றுக்கும் மூவுலகு முருகுமே. (கக)

(ப-ரை) இன்பம் தலைப்பெய்து - ஸுகத்தை அடையும்படி செய்து, எங்கும் தழைத்த - எங்கும் நிறைந்திருக்கிற, தன் புகழ் - தன்னுடைய நல்ல குணத்தை, பல் ஊழிக்கு - பல கல்பங்களுக்கு, (எப்போதும்), ஏத்த - கொண்டாடும்படி, தனக்கு அருள் செய்த, மாயனை - ஆச்சர்யமானவனைப்பற்றி, தென் குருகூர்ச் சடகோபன் சொல் ஆயிரத்துள், இவை - இப்படிப் பட்டவைகளான, ஒன்பதோடு ஒன்றுக்கும் - பத்துப் பாட்டுக்களுக்கும், மூவுலகும் - மூன்று உலகங்களும், உருகும்.

(கருத்து) அநுபவித்தவர்களுக்கு அளவில்லாத ஸுகத்தைக் கொடுக்கிறதும் உலகம் எங்கும் ப்ரஸித்தமுமான தன்னுடைய நல்ல குணத்தை எப்போதும் கொண்டாடும்படி எம்பெருமான் அநுக்கிரஹம் பெற்ற தென்குருகூர்ச் சடகோபன் அருளிச் செய்த ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே மிகுந்த வருத்தத்துடன் அவர் சொன்ன இந்தப் பாட்டுக்களைப் படிக்கும்போது ரஸம் அறிந்தவர்களும் அதை அறியாதவர்களும் உள்பட மூன்று உலகத்திலுள்ளவர்களும் ப்ரேமத்தால் உருகுவார்கள்.

குறிப்பு (1) நாயகியின் பேச்சாக தான் முடிந்ததாக பத்தாம் பாட்டில் சொன்னார். அதினால் அவருக்கு மோஹமுண்டாயிருந்தது என்றும், வெகு காலம் கழித்து பிரஜ்ஞை திரும்பி வந்தது என்றும் பதினோராம் பாட்டு அருளிச் செய்ததாலே ஏற்படுகிறது.

(2) "பல்லூழிக்கு"என்பதற்கு பல் ஊழிகளிலும் என்பது பொருள். அதாவது எப்போதும் தாம் எம்பெருமானை அநுபவித்து அவனைக் கொண்டாடினதுபோல் அவனைப் பிரிந்து வருத்தப்படும்போதும் அவன் குணங்களை அவர் கொண்டாடினார் என்பது கருத்து.

(3) இப்படி ஆபத் காலத்தில் அவனை மறந்துபோகாத படி அவன் தமக்குக் கிருபை செய்ததை "மயர்வற மதி நலம ருளினன்" என்று சொன்னார். அதுபோல இதிலும் 'தனக்கு அருள்செய்த' என்று சொல்லுகிறார்.

"ஒன்பதோடொன்றுக்கு" என்று முதல் ஒன்பது பாட்டுக்களையும் பத்தாம்பாட்டையும் பிரித்துச்சொன்னதின்கருத்து-முதல் ஒன்பது பாட்டுக்களில் தாம் எம்பெருமானை விட்டுப் பிரிந்து வருத்தப்பட்டதையும், அதின் மேலே பக்ஷிகளின் குரலை யும் வண்டுகளின் கானத்தையும் கேட்டு, மேகங்களையும் பார்த்து, அந்த வருத்தம் அதிகமானதையும் சொன்னார். பத்தாம் பாட்டில் மோஹம் அடைந்ததைச் சொன்னார். இந்த வித்தியாஸம் தோன்றவேண்டும் என்பது. (11)

---

ப்ராணத்வாதாச்ரிதாநாமபி ச ஸாத்விகத்வேந ஸவ்யஸ்வ
யோமாத்ருக்ஷ்வக்ஷஸ்ஸ்ராவாத்ருவாக்ய ஜநநாஷீர்த்தாஹ்ரு
த்வா | க்ருஷ்ணத்வாதப்ஜாக்ஷாக்ஷ வரவேதித்யா வெஸ்வரம்
ஸம்ச்ரிதாநாம்வ்யஸ்ராதோர்: ஸ்வமாணமேவஸம்ஸ்காரம்
ஸவ்யுக்யஸ் || ||௧0௭||

இந்தத் திருவாய்மொழியில் ஸர்வேச்வரன் தன்னைச் சேர்ந்தவர்களைத் தன்னுடைய நல்ல குணங்களின் பெருமையை நினைக்கும்படி செய்கிறான் என்பதுக் பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன:— (1) தன்னை அடைந்த வர்களுக்குப் பிராணனாயிருப்பது; (2) ஆச்சரியமானவனாயிருப் பது; (3) அப்படியே பிரஸித்தனாயிருப்பது; (4) சொன் னதைக்கேட்டுச்செய்யும்படி ஆச்ரிதர்களுக்கு உட்பட்டிருப்பது; (5) பிராட்டி திருமார்பிலிருப்பது; (6) ரகு குலத்தில் அவதாரம் செய்தது; (7) நீல ரத்நம் போன்ற காந்தியுள்ள திருமேனியை உடையவனாயிருப்பது; (8) கண்ணனாய் அவதரித்தது; (9) தாம ரைக் கண்ணனாயிருப்பது; (10) பரமபதத்துக்கு நாதனாயிருப் பது. (107)

---

# ஆறும் திருவாய்மொழி.

அவ— கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வாருக்கு எம்பெருமானை விட்டுப் பிரிந்திருந்த வருத்தத்தாலே மோஹமுண்டாயிருந்தது என்பது சொல்லப்பட்டது; அந்த மோஹம் தெளிந்து ப்ரஜ்ஞை திரும்பி வந்தபோது பிரிவினுலுண்டான துக்கம் ஒருபக்கமிருக்க, முன் அவனோடு தமக்கு உண்டானதாக 'இருத்தும் வியந்து' இல். (8-7)சொன்ன சேர்க்கையை நினைத்துக் கொண்டு அவனுடைய குணங்களைச் சொல்லி ஸந்தோஷப் படுகிறார்.

(2) இப்படியே சக்ரவர்த்தித் திருமகனை விட்டுப் பிரிந்து அசோகவனத்திலிருந்த பிராட்டி, பிரிவினுலுண்டான வருத்தமிருக்கையில், ஹநுமானைக் கண்டபோது, ராமனுடன் அயோத்தியில் பன்னிரண்டு வர்ஷகாலம் சேர்ந்திருந்ததை நினைத்து ஸந்தோஷப்பட்டு அவனுடைய குணங்களைப் பேசினுள்.

(கலிவிருத்தம்)

உருகுமால் நெஞ்ச முயிரின் பரமன்றிப்
பெருகுமால் வேட்கையு மென்செய்கேன் தொண்டனேன்
தெருவெல்லாங் காவி கமழ்திருக் காட்கரை
மருவிய மாயன்றன் மாயம் நினைதொறே. (க)

(ப• ரை) தெரு எல்லாம் - எல்லாத் தெருக்களிலும், காவி - செங்கழுநீர் புஷ்பங்கள், கமழ் - வாஸிக்கும்படியான, திருக்காட் கரை - திருக்காட்கரை என்கிற ஊரில், மருவிய - ப்ரீதியுடன் எழுந்தருளியிருக்கிற, மாயன் தன் - ஆச்சரியமானவனுடைய, மாயம் - ஆச்சரியங்களை, நினைதொறு - நினைக்கும் க்ஷணம் தோறும், நெஞ்சம் மனது, உருகும், வேட்கையும் - ஆசையும், உயிரின் பரமின்றி - ஆத்மாவாலே தாங்க முடியாதபடி, பெருகும் - பெருகிக்கொண்டிருக்கிறது. தொண்டனேன் - சபலமுள்ள நான், என் செய்கேன் - என்ன செய்வேன்.

(கருத்து) வைகுந்தம் தூர இருப்பதினுல் கிட்டமுடியாது; அவதாரங்கள் காலம் சென்றபடியால் கிட்ட இருக்கவில்லை, அப்படி இல்லாமல், ஊரைச் சுற்றிலும் புஷ்பங்கள் நிறைந்த தடாகங்கள் இருப்பதினுலே எல்லாத் தெருக்களிலும்

செங்கழுநீர் புஷ்பம் வாஸிக்கிற திருக்காட்கரை என்கிற ஊரில் எல்லாரும் எப்போதும் காணும்படி பிரீதியுடன் அதில் எழுந்தருளியிருக்கிற ஆச்சரியமான அழகு முதலான குணங்களையுடைய எம்பெருமான், உயர்ந்தவனைத் தாழ்ந்தவர்கள் அநுஸரிப்பது போல் என்னுடன் சேர்ந்து செய்த ஆச்சரியங்களை நினைக்கிற ஒவ்வொரு க்ஷணமும் என் மனது உருகுகிறது. அவனை மறப்போம் என்றால் மறக்கமுடியாதபடி செய்து கொண்டு அவனிடத்திலிருக்கும் என் ஆசையானது என்னாலே தாங்க முடியாதபடி பெருகிக்கொண்டுமிருக்கிறது. அவன் குணங்கள் விஷயத்தில் சபலனான நான் என்ன செய்வேன். மனதை உருகாதபடி நிறுத்துகிறதா? ஆசையின் வெள்ளத்தை மட்டுப் படுத்துகிறதா? அவனுடைய குணங்களை அநுபவிக்காதபடி விலக்குகிறதா? என் சபலத் தன்மையை விலக்குகிறதா? என்ன செய்வதென்று தெரியவில்லை.

குறிப்பு— (1) எம்பெருமான் செய்த ஆச்சரியமான லீலைகள் எப்படி மனதை உருக்கி வருத்தப்படுத்துகின்றனவோ, அப்படியே அவனிடத்தில் ஆசையும் அவனை மறக்க வொட்டாமல் செய்து துன்பப்படுத்துகிறது என்பது "வேட்கையும்" என்றவிடத்தில் "உம்" என்பதின் கருத்து. அதற்கு எச்சப் பொருள்.

இ—ம். நினைதொறு - நினை - முதனிலைத்தொழிற்பெயர். நினைவு என்பது பொருள். தொறு - இடப்பன்மையையும் காலப் பன்மையையும் காட்டும் இடைச்சொல். உருகுமால் - ஆல் - அசைநிலை. (1)

---

அவ— கீழ்ப் பாட்டில் ஆழ்வார் தாம் எம்பெருமானை அநுபவித்ததைச் சொன்னார்; அதை எம்பெருமானுக்குத் தெரிவிக்கிறார்:—

நினைதோறுஞ் சொல்லுந்தோறும் நெஞ்சி டிந்துகும்
வினைகொள்சீர் பாடிலும் வேமெ னதாருயிர்
சுனைகொள்பூஞ் சோலைத்தென் காட்கரை யென்னப்பா
நினைகிலேன் நானுனக் காட்செய்யும் நீர்மையே. (உ)

(ப-ரை) சுனை கொள் - சுனைகளைக் கொண்டதும், பூம் சோலை - அழகான சோலைகளையுடையதும், தென் - அழகுள்ளதுமான, காட்கரை - திருக்காட்கரை என்கிற ஊரில் எழுந்தருளியிருக்கும், என் அப்பா - என்னுடைய தந்தையே! (பந்தூ! தேவ) வினை - துக்கங்களை, கொள் - அபஹரிக்கும்படியான, (போக்கும்படியான) சீர் - (ஸௌசீல்யம் முதலான) நல்ல குணங்களை, நினைதொறும் - நினைக்கும்போதெல்லாம், நெஞ்சு - மனது, இடிந்து - தளர்ந்து, சொல்லும் தொறும் - சொல்லும் போதெல்லாம், உகும் - உருகும், பாடிலும் - (அவைகளைப்) பாடினாலும், எனது - என்னுடையதான, ஆர் - நிறைந்த (உனக்கு மிகவும் பிரியமானபடியாலே ச்லாக்யமான) உயிர் - ஆத்மா, வேம் - தபிக்கும். நான், உனக்கு ஆட் செய்யும் நீர்மை - உனக்குக் கைங்கரியம் செய்யும் பிரகாரத்தை, நினைகிலேன் - நினைக்கைக்குச் சக்தியில்லாதவனாயிருக்கிறேன்.

(கருத்து) சுனைகளையும் அழகான சோலைகளையும் உடைய அழகான திருக்காட்கரையில் எழுந்தருளியிருக்கும் அப்பனே! உன்னுடைய ஸௌசீல்யம் முதலான நல்ல குணங்கள் எல்லாருடைய துக்கங்களைப் போக்கும் ஸ்வபாவமுள்ளவைகள். அவைகளையே நான் நினைக்கும்போதெல்லாம் சொல்லும் போதெல்லாம் வாயாலே பாடும்போதெல்லாம், என் மனது தளர்ந்து உருகுகிறது. உனக்கு மிகவும் இனியதான அதினால் ச்லாக்யமான என் ஆத்மாவும் தாபத்தையடைகிறது. “நீர் இப்படி என் விஷயத்தில் ஈடுபடுவதற்கு நான் என்ன செய்தேன்” என்று கேட்கிறாயா? நீ என்னைப் பார்த்து “நீர் பண்ணும் கைங்கர்யங்களைப் பெற்றுக்கொள்ளுகிறேன்” என்று சொல்லி நீ செய்த வியாபாரங்களுக்குக் கணக்கு உண்டோ? அவைகளை என்னாலே சொல்லமுடியுமோ?

குறிப்பு— (1) பாட்டில் நினைப்பதாலும் சொல்லுவதாலும் மனது உருகுகிறது என்றும், பாடுவதால் ஆத்மா தபிக்கிறது என்றும் பிரித்துச் சொன்னபோதிலும், மூன்று வியாபாரங்களாலே இரண்டும் வருத்தப்படுகின்றன என்பது கருத்து. இதைக் கருத்தில் காட்டியிருக்கிறது.

(2) எம்பெருமான் தன்னை ஸ்வாமியாகவும் ஆழ்வாரைத் தாஸனாகவும் வைத்து அடிமைகொள்ளாமல், ஆழ்வார் ஸ்வாமியாகவும்

தான் தாஸனாகவும் இருப்பதுபோல் முறை தப்பி வியாபாரங்களைச் செய்தான் என்றும், அவைகளை நினைப்பதும் விரிவாய்ச் சொல்வதும் தகாதென்றும் ஆழ்வாருக்குக் கருத்து என்றும் "நினைக்கிலேன்" என்பதற்குப் பொருள் கொள்ளலாம்.

இ—ம். வினைகொள் - 'வினை' ஆகுபெயராய், அதினாலுண்டாகும் துக்கத்தைச் சொல்லுகிறது. (2)

---

அவ— உம்மை அடிமை கொள்வதற்கு மேல் நான் ஏதாவது செய்ததுண்டோ? என்று எம்பெருமான் கேட்டதாக நினைத்து, ஆழ்வார் பதில் சொல்லுகிறார்:—

நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப் புகுந்தென்னை
ஈர்மைசெய்தென் னுயிரா யென்னுயி ருண்டான்
சீர்மல்கு சோலைத் தென்காட்கரை யென்னப்பன்
கார்முகில் வண்ணன்றன் கள்வ மறிகிலேன். (௩)

(ப-ரை) நெஞ்சம் - (என்) மனதை, வஞ்சித்து, புகுந்து - (அதற்குள்ளே) புகுந்து, என்னை, நீர்மையால்-தன் நல்ல ஸ்வபாவத்தால், ஈர்மை செய்து - பிளத்தலை செய்து (துன்பப்படுத்தி), என் உயிராய் - எனக்கு உயிராய், என் உயிர் உண்டான் - என் ஆத்மாவை அநுபவித்தவனும், சீர் மல்கு - (தேன் புஷ்பங்கள், முதலான) ஸம்பத்து பெருகுகிற, சோலை - சோலைகளையுடைய, தென் - அழகான, காட்கரை என் அப்பன் - திருக்காட்கரையில் எழுந்தருளியிருக்கிற என் பந்துவும், கார்முகில் வண்ணன் தன் - மழை மேகம் போன்ற நிறமுள்ளவனுமான எம்பெருமானுடைய, கள்வம் - வஞ்சனையுள்ள வியாபாரங்களை, அறிகிலேன் - நான் அறியச் சக்தி யில்லாதவனாயிருக்கிறேன்.

(கருத்து) தேன், புஷ்பங்கள் முதலான ஸம்பத்து பெருகியிருக்கிற சோலைகளையுடைய தென் காட்கரையில் எழுந்தருளியிருக்கிற அப்பனே! மழை மேகம் போன்ற நிறமுள்ளவனே! நீ 'உம்மை அடிமை கொள்ளுகிறேன்" என்று சொல்லி, என் நெஞ்சில் புகுந்து, நீ சொல்வது உண்மை என்று நம்பியிருந்த என்னை உன்னுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தாலும், நான் சேஷனாயும் நீ சேஷியாயுமிருக்கிற முறை தப்பி

எனக்குஉட்பட்டவனுய் நீ செய்த வியாபாரங்களாலும் என்னைத் துன்பப்படுத்தி, இவைகளால் உன்னை விட்டுப் பிரிந்துத் தரித்திருக்கமுடியாதபடி பண்ணி,என் ஆத்மாவைக்கிடைக்காதபொருள் கிடைத்தது போல் அநுபவித்தாய். இவைகளை நினைக்கும் போது இவைகள் உண்மையில் நடந்தனவோ ? அல்லது நான் பிரமிக்கிறேனே" என்று தெரியவில்லை.

குறிப்பு— (1) ஆழ்வாரை அநுபவித்து அதினால் எம்பெருமானுக்கு உண்டான ஸந்தோஷத்தினால், அந்த ஊருக்கு ஒரு அழகு உண்டாயிற்று என்பதும், அவன் திருமேனிக்கும் ஒரு சோபையுண்டாயிற்று என்பதும் "சீர்மல்கு" என்பதாலும் "கார்முகில் வண்ணன்" என்பதாலும் காட்டப்படுகின்றன.

(2) எல்லாருக்கும் மேற்பட்ட அவன் என் விஷயத்தில் இப்படி ஆசைப்பட்டு வியாபாரங்களைச் செய்யக்கூடாது. முன் அநுபவம் திடமாயிருக்கையாலே அது பொய் என்றும் சொல்ல முடியவில்லை. ஆகையால் என் மனம் பிரமிக்கிறதென்பது ஆழ்வாரின் கருத்து. இப்படியே "இருத்தும் வியந்து" இல் "மருள்தானீதோ"(8-7-3) என்கிற பாட்டிலும் சொல்லியிருக்கிறார்.

இ—ம். வேம் - வேகும், வேகும் என்பது வேம் என்றாயிற்று. (3)

---

அவ— உம்முடைய விஷயத்தில் எம்பெருமான் இவ்வளவு ஆசையுள்ளவனாயிருந்தால், அதற்கு உம்மால் செய்யக்கூடியது உண்டோ என்பதற்குப் பதில் சொல்லுகிறார்:—

அறிகிலேன் றன்னு ளனைத்துலகும் நிற்க
நெறிமையாற் றானு மவற்றுணிற் கும்பிரான்
வெறிகமழ் சோலைத்தேன் காட்கரை யென்னப்பன்
சிறியவென் னுருயி ருண்ட திருவருளே. (௪)

(ப-ரை) தன் உள் - தன் ஸங்கல்பத்திலே, அனைத்து உலகும் - எல்லா உலகங்களும், நிற்க - அடங்கியிருக்கும்படி, தானும், நெறிமையால் - வழியால், (தான் சேஷியாயிருக்கும் முறை தப்பாமல்), அவற்றுள் - அவைகளுக்குள், நிற்கும், பிரான் - உபகாரகனும், வெறிகமழ் - வாஸனை வாஸிக்கிற,

சோலை - சோலைகளையுடைய, தென் காட்கரை - அழகிய திருக்காட்கரையில் எழுந்தருளியிருப்பவனுமான, என் அப்பன் - என் ஸ்வாமி, சிறிய - (என் புத்தியாலே மிகவும்) தாழ்ந்ததும், என் - என்னுடைய, ஆர் - நிறைந்த, (அவன் புத்தியாலே ஸிலாக்யமுமான), உயிரை - ஆத்மாவை, உண்ட திரு அருள் - அநுபவித்த இந்த ஸிலாக்யமான கிருபாகாரியத்தை, அறிகிலேன் - (இவ்வளவென்று) நினைக்கச் சக்தியில்லாதவனாயிருக்கிறேன்.

(கருத்து) பரிமளம் வீசுகிற சோலைகளையுடைய திருக்காட்கரையில் எழுந்தருளியிருக்கும் என் அப்பன் எல்லா உலகங்களையும் தன்னுடைய ஸங்கல்பத்துக்கு அதீநமாயிருக்கும்படி செய்துகொண்டு, அவைகளுக்குள்ளே தான் சேஷியாயிருக்கும் முறை தப்பாமல் இருக்கிறன். இப்படிப்பட்டவன் மிகவும் தாழ்ந்த என் ஆத்மாவைச்ஸிலாக்கியமான வஸ்துவாக எண்ணிக் கொண்டு அதை அநுபவித்தானே; இதை முறை தப்பிச் செய்யவேணுமா ? அவன் என்னிடம் வைத்திருக்கும் இந்த ஆசைக்கு ஒரு முடிவு காணவில்லை.

குறிப்பு— இந்த விஷயத்தை "இருத்தும் வியந்து" இல் (8—7) எட்டாம் பாட்டில் அருளிச் செய்தார். (4)

---

திருவருள் செய்பவன் போலவென் னுட்புகுந்து
உருவமு மாருயிரு முடனே யுண்டான்
திருவளர் சோலைத்தென் காட்கரை யென்னப்பன்
கருவளர் மேனியென் கண்ணன்கள் வங்களே. (ரு)

(ப-ரை) திரு அருள் - உயர்ந்த கிருபையை, செய்பவன் போல, என் உள் - என் மனதில், புகுந்து, உருவமும் - என் உடம்பையும், ஆர் உயிரும்-நிறைந்த ஆத்மாவையும், உடனே-கூடவே, உண்டான் - அநுபவித்தவனான, திருவளர் - ஸம்பத்து வளருகிற, சோலை-சோலைகளையுடைய, தென் காட்கரை என் அப்பன், கரு வளர் - கருமை (நீலவர்ணம்)வளருகிற, மேனி-திருமேனியையுடைய, என் கண்ணன் - என் கண்ணனுடைய, கள்வங்கள் - கிருத்திரிமங்களான செய்கைகள், ஏ - என்ன ஆச்சரியம்.

(கருத்து) ஸம்பத்து வளருகிற சோலைகளையுடைய தென் காட்கரை என்னப்பன் முன்னால் 'ஒழிவில் காலம்' என்பதில்(3-3) நான் ஆசைப்பட்டபடி அடிமைகொள்ளுகிறதான பெரிய உபகாரத்தைச் செய்கிறவன்போல் வந்து, என் மனதில் புகுந்து தாழ்ந்த என் உடம்பையும், தான் ச்லாக்யமாக எண்ணுகிற என் ஆத்மாவையும் சேர்த்து "இது தாழ்ந்தது, இது உயர்ந்தது" என்று பார்க்காமல் அநுபவித்தான். இப்படிச் செய்து இதினால் தன் சீலமான திருமேனிக்கு ஒரு சோபையை அடைந்த என் கண்ணனுடைய க்ருத்திரிமங்களான வியாபாரங்களை என்ன சொல்வேன்? அவன் வரும்போது ஒருபடி, பின்பு ஒருபடியாயிற்று. அடிமை பெற்றுக்கொள்பவன்போல் வந்தான்; பிறகு எனக்கு வேலைக்காரனைப்போல் உட்பட்டிருந்தான். விரோதியான என் சரீரத்தை விலக்குவதுபோல் வந்து அதையே தனக்குப் புருஷார்த்தமாக அநுபவித்தான். எனக்கு போக்யமாக ஆகிறவன்போல வந்து என்னைப்போக்யமாக அநுபவித்தான். எனக்கு லாபத்தைச் செய்பவன்போல் வந்து தனக்கு லாபத்தைச் செய்து முடித்துக்கொண்டான். இவைகள் என்ன ஆச்சரியங்கள்.

குறிப்பு— "திருவளர்சோலை" என்பதற்கும் "கருவளர் மேனி" என்பதற்கும் 3-ம்பாட்டில் 1-வது குறிப்பைப் பார்க்க.

---

அவ— ஒரு நாள் அவன் வஞ்சனையில் நீர் அகப்பட்டால், மறுபடியும் அதற்கு உட்படாமலிருக்கக்கூடாதோ? என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார்:—

என்கண்ணன் கள்வ மெனக்குச்செம் மாய்நிற்கும்
அங்கண்ண னுண்டவென் னாருயிர்க் கோதிது
புன்கண்மை யெய்திப் புலம்பி யிராப்பகல்
என்கண்ண னென்றவன் காட்கரை யேத்துமே. (௫)

(ப-ரை) என் கண்ணன் கள்வம்-என் கண்ணனுடைய வஞ்சனையுள்ள வியாபாரங்கள், எனக்கு, செம்மை ஆய் நிற்கும் - செம்மையாக (உண்மையாயிருப்பவைகள்போல்) இருக்கும், அங்கண்ணன் - அதிக ஆசையையுடையவன், உண்ட-அநுபவித்த, என் - என்னுடைய, ஆர் - ச்லாக்யமான, இது உயிர் கோது - இந்த

ஆத்மாவாகிய சக்கை, புல் கண்மை - அல்பமான ஜ்ஞாநத்தை, எய்தி - அடைந்து, இராப்பகல், என் கண்ணன் என்று, புலம்பி, அவன் காட்கரை - அவனிருக்கும் காட்கரையை, ஏத்தும் - ஸ்தோத்ரம் பண்ணும்.

(கருத்து) என்னிடத்தில் மிகுந்த ஆசையுள்ள கண்ணன் செய்கிற வஞ்சனையுள்ள வியாபாரங்கள், அப்போது அவைகளின் ஸ்வபாவங்கள் அறியப்படாமல் உண்மையான வியாபாரங்கள்போல் தோன்றுகின்றன. அப்போது அவைகளின் ஸ்வபாவத்தை நான் அறியமுடியவில்லை. அவன் புத்தியாலே நிலாக்யமாய் உண்மையில் ஸாரம் நீங்கின சக்கைபோல் இருக்கிற என் ஆத்மாவை, அவன் அநுபவித்துப்போய் வெகு காலமான பிறகு அந்த அநுபவ ரஸத்தினாலே போயிருந்த அறிவு திரும்பி வருகிறது. அப்போது அவனைக் காண ஆசைப்பட்டு ராத்திரியும் பகலும் 'என் கண்ணா என் கண்ணா' என்று அலற்றி அவன் எழுந்தருளியிருக்கிற திருக்காட்கரையை ஸ்தோத்ரம் பண்ணுகிறேன். (6)

---

அவ— ஐந்தாம் பாட்டில் எம்பெருமான் ஆழ்வார் தம்முடைய உடம்பையும் ஆத்மாவையும் அநுபவித்தான் என்று சொன்னார்; இதனால் அவனுக்குத் திருப்தி உண்டாகவில்லை என்று சொல்லுகிறார்:—

காட்கரை யேத்து மதனுட்கண் ணாவென்னும்
வேட்கை நோய்கூர நினைந்து கரைந்துகும்
ஆட்கொள்வா னொத்தென் னுயிருண்ட மாயனால்
கோட்குறை பட்டதென் னாருயிர் கோளுண்டே. (எ)

(பதவுரை) என் ஆர் உயிர் - என்னுடைய நிலாக்யமான ஆத்மாவானது, காட்கரை - காட்கரையை, ஏத்தும் - ஸ்தோத்ரம் பண்ணும், அதனுள் - அந்த ஊருக்குள் எழுந்தருளியிருக்கிற, கண்ணா என்னும் - கண்ணா என்று சொல்லும், வேட்கைநோய் - ஆசையாகிய துன்பமானது, கூர - வளரும்படி, நினைந்து - கரைந்து,உகும் - உருகும்,ஆட்கொள்வான் ஒத்து - அடிமையைக் கொள்ளுகிறவனை ஒத்து, என் உயிர் உண்ட - என் ஆத்மாவை

அநுபவித்த, மாயனால் - ஆச்சரியமானவனாலே, கோள் உண்டு - கொள்ளப்படுவதை (அநுபவிப்பதை) அடைந்து, கோள் குறைபட்டது - அநுபவிப்பதில் குறைவு அடையப்பட்டது.

(கருத்து) எம்பெருமானுக்குச் சிலாக்யமான என் உயிரானது அவனிருக்கும் திருக்காட்கரையை ஸ்தோத்ரம் பண்ணும்; அவனை அதிலிருக்கும் கண்ணா என்று அழைக்கும்; ஆசையாகிய துன்பமானது வளர வளர அவனை நினைத்துத் தளர்ந்து உருகும். இப்படி வருத்தப்பட்ட என்னைப் பார்த்து அந்த வருத்தம் தீரும்படி என்னுடைய அடிமையை ஏற்றுக் கொள்ளுகிறவன்போல் வந்து அவன் செய்த இந்த க்ருத்ரிமத்தை நான் உள்ளபடி அறியாதபடி செய்த ஆச்சரியமானவனுக்கு அநுபவித்தும் திருப்தி வரவில்லை; குறைவுள்ளவனாகவே காணப்படுகிறான்.

குறிப்பு— 'மாயனாலே' என்பதை 'குறைபட்டது' என்பதுடன் சேர்க்கவேண்டியது. (7)

இ—ம். நோய் - என்பது ஆகுபெயராய் அதின் கார்யமான துன்பத்தைச் சொல்லுகிறது.

---

அவ— இப்படித் தம்மை நாள்தோறும் அநுபவிக்கிற எம்பெருமான் மிகவும் உயர்ந்த குணமுள்ளவனாயிருப்பதைக் கொஞ்சமும் பொறுக்கமுடியவில்லை என்று சொல்லுகிறார்:—

கோளுண்டா னன்றிவந் தென்னுயிர் தானுண்டான்
நாளுநாள் வந்தென்னை முற்றவுந் தானுண்டான்
காளநீர் மேகத்தென் காட்கரையென் னப்பற்கு
ஆளன்றே பட்டதென் னுருயிர் பட்டதே. (அ)

(ப-ரை) கோள் உண்டான் அன்றி - கொள்கையை (அநுபவிப்பதை) அடைந்தவன் அல்லாமல், வந்து, என் உயிர் - என் ஆத்மாவை, தான் உண்டான் - அநுபவித்தான், நாளும் நாள் வந்து - ஒவ்வொரு நாளும் வந்து, என்னை, முற்றவும் - முழுவதும், தான் உண்டான் - தன் லாபமாக அநுபவித்தான், காள நீர் மேகம் - (நீர் உண்ட) அதனால் நீல நிறமுள்ள மேகம் போன்ற, தென் காட்கரை, என்னப்பன் - ஸ்வாமிக்கு,

ஆள் அன்றே பட்டது - அடிமையாகவன்றோ பட்டது, என் ஆர் உயிர், பட்டதே - என்ன பாடுபட்டது.

(கருத்து) என்னை ஒரு தடவையும் அநுபவிக்காமல் புதிதாய் அநுபவிக்க வேண்டுகிறவன்போல் எம்பெருமான் என்னிடம் வந்து என்னுடைய சிலாக்கியமான ஆத்மாவை மிகுந்த ஆசையுடன் அநுபவித்தான். இதை ஒரு நாள் செய்தானோ? ஒவ்வொரு நாளும் என் ஸ்வரூபத்தையும் குணங்களையும் உடம்பையும் இவைகளுக்குள்ளே ஒரு வித்தியாஸத்தையும் பார்க்காமல் அநுபவித்தான். நீருண்ட கருமேகம் போன்ற திருமேனியுடன் தென்காட்கரையில் எழுந்தருளியிருக்கும் என் ஸ்வாமிக்கு அடிமை செய்வதையன்றோ நான் ஒப்புக்கொண்டது. இப்படியிருக்க, என் ஆருயிரை என்ன பாடுபடுத்தியிருக்கிறான். ராவணனைப்போல நான் எதிரம்பு கோத்தேனோ? பாணத்தினாலுண்டாகும் வேதனையைப் பொறுக்கலாம்; இந்த ஸௌசீல்யம் என்கிற குணம் படுத்துகிற பாட்டை எப்படிப்பொறுப்பேன்? (8)

---

அவ— "எம்பெருமான் தன்னோடு சேர்ந்த எல்லாரையும் இப்படிப் படுத்தவில்லையோ? உமக்கு என்ன அதிகமாகச் செய்தான்?" என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார்:—

ஆருயிர் பட்ட தெனதுயிர் பட்டது
பேரிதழ்த் தாமரைக் கட்கனி வாயதோர்
காரேழில் மேகத்தேன் காட்கரைக் கோயில்கொள்
சீரேழி னாற்றடந் தோள்தெய்வ வாரிக்கே. (௯)

(ப-ரை) பேர் இதழ் - பெரிய இதழ்களையுடைய, தாமரைக் கண் - தாமரைப்பூப் போன்ற திருக்கண்களையுடையதும், கனி வாயது - கோவைப்பழம் போன்ற திருப்பவளத்தையுடையதும், ஓர் - ஒப்பில்லாத, கார் எழில் மேகம் - கறுத்த அழகையுடைய மேகம் போன்றதும், தென் காட்கரை - தென் காட்கரையை, கோயில்கொள் - இருப்பிடமாகக் கொண்டதும், சீர் எழில் - வீரஸ்ரீயையும் அழகையுமுடையதும், நால் தடம் தோள் - நான்கு விசாலமான தோள்களையுடையதுமான, தெய்வவாரிக்கு -

தேவதைகள் உண்டாகும் ஸமுத்திரத்துக்கு, எனது உயிர் பட்டது - என் ஆத்மா பட்டதை, ஆர் உயிர் பட்டது - யாருடைய ஆத்மா பட்டது ?

(கருத்து) பெரிய இதழ்களையுடைய தாமரைப்பூப்போன்ற திருக்கண்களையும், கோவைப் பழம்போன்ற திருப்பவழத்தையும், வீர ஸ்ரீயையும் காந்தியையுமுடைய விசாலமான நான்கு தோள்களையுமுடைய ஓர் காரெழில் மேகம்போலிருக்கிறவனும், திருக்காட்கரையை இருப்பிடமாகக் கொண்டிருக்கிறவனும், முத்துக்கள் உண்டாகும் ஸமுத்ரம்போல் தேவதைகள் உண்டாவதற்கு ஸமுத்ரமுமான எம்பெருமானுக்கு இனியதாயிருந்து என் ஆத்மா பட்டபாட்டை எவருடைய உயிர் பட்டது? நித்யஸூரிகள் உயிர்கள்தான் பட்டதோ ? தனக்கு என்ன குறைவு உண்டாய் இப்படிச் செய்தான்? அழகில் குறைவா? ஐச்வரியத்தில் குறைவா ? உலகத்தில் மிகவுமுயர்ந்த வஸ்துவை அன்றோ ஒருவன் அதிக ஆசைப்படுவது? தனக்கு இல்லாத பெருமை என்னிடம் என்ன இருக்கிறது? இதென்ன ஆச்சரியம்?

குறிப்பு— (1) பட்டபாடாவது— ஆழ்வார் ஆத்மாவை எம்பெருமான் அநுபவிக்கும்போது, அவன் மிகுந்த ஆசையுடன் செய்த செயல்களைப்பார்த்து, ஆழ்வார் மிகுந்த ஆநந்தத்தையும் மோஹத்தையும் மூர்ச்சையையும் அடைந்து வியாகுலப்பட்டது.

(2) புதிதாய் கல்யாணம் செய்யப்பட்டுத் தன் புருஷனுடன் சேர்ந்த ஒரு ஸ்திரீக்கு அவனுடைய ஸ்பர்சத்தாலே ஓர் அபூர்வமான ஸந்தோஷம் உண்டாகும். வெகு நாளாய்த் தன் புருஷனுடன் சேர்ந்த ஸ்திரீகளுக்கு அது உண்டாகாது. அப்படியே அநாதி காலமாக ஸம்ஸாரியாயிருந்த ஆழ்வாருக்கு எம்பெருமானுடைய சேர்க்கையாலே உண்டான ஸந்தோஷம் எப்போதும் அவனை அநுபவித்துக்கொண்டிருக்கிற நித்யஸூரிகளுக்கு உண்டாகுமோ ? இப்படி நஞ்சீயர் அருளிச் செய்தாராம்.

(9)

---

அவ— "நீர்தான் அவனை அநுபவிக்காமல், அவன் உம்மை அநுபவிக்கும்படி ஏன் கொடுத்துக்கொண்டிருந்தீர்?" என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார்.—

வாரிக்கொண் டுன்னை விழுங்குவன் காணிலென்று
ஆர்வுற்ற வென்னையொழிய வென்னின் முன்னம்
பாரித்துத் தானென்னை முற்றப் பருகினான்
காரொக்கும் காட்கரை யப்பன் கடியனே. (ய)

(ப-ரை) காணில் - அவனைப் பார்த்தால், உன்னை, வாரிக்கொண்டு-(வேறொருவருக்கும் மிச்சமில்லாதபடி) எடுத்துக்கொண்டு, விழுங்குவன் என்று, ஆர்வுற்ற-ஆசையை அடைந்த, என்னையொழிய - என்னைத் தவிர (தன்னை அடையமுடியாதபடி என்னைப் பண்ணி), என்னில் முன்னம் - எனக்கு முன்னாலே, பாரித்து - மிகுந்த பரபரப்பு உள்ளவனாய், தான் என்னை, முற்ற - முழுவதும், பருகினான் - குடித்தான் (அநுபவித்தான்). கார் ஒக்கும்-மழை மேகம் போன்ற காட்கரையப்பன், கடியன் - சீக்கிரம் வேலை செய்கிறவன்.

(கருத்து) நான் அவனைப் பார்த்தபோது திருவனந்தாழ்வான் முதலான நித்யஸூரிகளுக்கு கொஞ்சமுமில்லாமல் எல்லாக்கைங்கரியங்களையும் செய்து அநுபவிக்கவேணும் என்று ஆசைபட்டுக்கொண்டிருந்தேன். எனக்கு முன்னாலே பரபரப்புடன் என்னை முழுவதும் அவன் அநுபவித்தான். என் எண்ணத்தை நிறைவேற்ற எனக்கு அவன் இடம் கொடுக்கவில்லை. அவனோ எங்கு மிருக்கிறவன், நானோ அணு; அவனோ ஸ்வதந்திரன், நானோ பரதந்திரன்; நான் என்ன செய்வேன். திருக்காட்கரையில் மழை மேகம்போல் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமி சீக்கிரம் வேலைசெய்கிறவன். மழைமேகம் விளையவேண்டிய பயிர்களுக்கு எவ்வளவு வேண்டுமோ, அவ்வளவோடு நிற்காமல் அதிகமாய் அவைகளின் மேல் பெய்கிறது. அதுபோலிருக்கிறது அவன் செய்கிற வேலை. எவ்வளவு செய்தால் தாங்க முடியும் என்று பாராமல் இப்படி அதிகமாய்ச் செய்திருக்கிறானே.

குறிப்பு— எட்டாம் பாட்டில் எம்பெருமான் ஆழ்வாருடைய உயிரை உண்டான் என்று சொன்னார். உண்டவனுக்கு தீர்த்தம் வேண்டாமோ? தன் குணங்களையும் லீலைகளையும் காட்டி அவர் உயிரை நீராகப் பண்ணிக் குடித்தான் என்று "பருகினான்" என்பதின் கருத்து. (10)

கடியனாய்க் கஞ்சனைக் கொன்ற பிரான்றன்னைக்
கொடிமதிள் தென்குரு கூர்ச்சட கோபன்சொல்
வடிவமை யாயிரத் திப்பத்தினாற் சன்மம்
முடிவெய்தி நாசங்கண் டீர்களெங் கானலே. (கக)

(ப-ரை) கடியனாய் - சீக்கிரம் வேலை செய்கிறவனாய், கஞ்சனை கொன்ற - கம்ஸனைக் கொன்ற, பிரான் தன்னை, கொடி மதில் - கொடிகளையுடைய மதிள்களுள்ள, தென் குருகூர் சடகோபன், சொல் - சொன்ன, வடிவு அமை - அழகு நிறைந்த ஆயிரத்து, இ பத்தினால், சன்மம் - பிறப்பு, (பிறப்புக்களின் வரிசை), முடிவு எய்தி - முடிவை அடைந்து, எம் கானல் - நம்முடைய கானல் போன்ற ஸம்ஸாரம், நாசம், (அடையும்), கண்டீர்கள்.

(கருத்து) தன்னைக் கொல்லுவதற்கு முயற்சி செய்கிற கம்ஸனுக்கு முன்னாலே தான் அவனைக் கொன்ற எம்பெருமானைப்பற்றிக் கொடி மதிள் தென்குருகூர்ச் சடகோபன் அருளிச் செய்த அழகு அமைந்த இந்தப் பாட்டுக்களைப் படிக்கிறவர்களுக்கு வரிசையாய் வருகிற பிறப்புக்கள் முடிவையடையும்; கானல்போல் உண்மையில் ஸாரமில்லாமல் ஸாரமுள்ளது போல் தோன்றி எம்பெருமானுடைய அநுபவத்துக்கு விரோதியான ஸம்ஸாரமும் நாசத்தை அடையும். இது நிச்சயம்.

குறிப்பு— (1) இவைகளைப் படிக்கிறவர்களை ஆழ்வார் தம்முடன் சேர்த்துக்கொண்டு "எம் கானல்" என்று சொல்லுகிறார்.

(2) கானல் என்பது வெய்யில் காலத்தில் மத்தியான்ன வேளையில் தூரத்தில் ஜலமில்லாமலிருக்க ஜலம்போல் தோன்றுவது.

(3) ஆச்ரிதர்களுக்காக எம்பெருமான் ஏதேனும் செய்யும்போது அதைக் கம்ஸனைக் கொன்றதுபோல் சீக்கிரம் செய்வன். இது அவன் ஸ்வபாவம் என்பது 'கடியனாய்' என்பதற்குக் கருத்து.

(11)

ஆஶ்சர்யேஹாங்கிதத்வாத் விஶ்வஸ்வாமிதயா அந்தராத்மத்வதோ
ஸாமர்த்யாத் ஸ்வகரத்வாத் ஜலதநிபதயா ஸத்யஸங்கல்பகத்வாத் |
ஔதார்யாத் திவ்யஶோபாதிஶய ஸம்ஸாரிணாம் ரக்ஷ
ணே த்ருஷ்டிவ்யாஸங்காத் நைவ ஶக்யோ ஹரிரிதி ஸம்
ஜிக ஸம்ஸஜதாஹ || கO அ ||

இந்தத் திருவாய்மொழியில் ஹரி (எம்பெருமான்) மறக்க முடியாதவன் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) ஆச்சரியமான லீலைகளைச் செய்தது; (2) எல்லாருக்கும் ஸ்வாமியாயிருப்பது; (3) எல்லாருக்கும் அந்தராத்மாவாயிருக்கும் பெருமை; (4) வேறு ஒருவனாலும் செய்யமுடியாததைச் செய்யச் சக்தியுள்ளவனாயிருக்கும் பெருமை; (5) நீருண்ட மேகம் போன்ற திருமேனியையுடையவனாயிருப்பது; (6—7) ஆச்ரிதர்களுக்குச் சொன்னதைச் செய்கிறவனாய் அவர்கள் மனதையிழுப்பது; (8) வேண்டியவர்களுக்கு வேண்டியதைக் கொடுப்பது; (9) திருமேனியின் அவயவங்களில் சோபையுள்ளவனாயிருப்பது; (10) ஸம்ஸாரிகளை ரக்ஷிப்பதில் அதிகப்பற்றுள்ளவனாயிருப்பது.

# ஏழாம் திருவாய்மொழி.

அவ— (1) கீழில் திருவாய்மொழியில் எம்பெருமான் தம்முடன் சேர்ந்து செய்த வியாபாரங்களை நினைத்து ஸந்தோஷப்பட்டார். அவனுடைய பாஹ்ய ஸம்ச்லேஷம் கிடைக்காமையால் உண்டான துக்கமும் அந்த ஸந்தோஷத்துக்குள்ளே அடங்கியிருந்தது. இப்போது அந்தத் துக்கம் மேலிட்டு நாயகனைவிட்டுப் பிரிந்த நாயகி நாயகனுக்கு பக்ஷிகளைத் தூதுவிடுவதுபோல் எம்பெருமானுக்குத் தம்முடைய அபிப்ராயத்தைத் தெரிவிக்கிறார்.-

(2) நாயகனுடன் சேர்ந்திருந்த நாயகி பிரிவைப் பொறுக்க முடியாமல் தன்னுடைய தோட்டத்துக்குப் போய், அங்குள்ள பக்ஷிகளைக் கண்டு அவைகளை நாயகனுக்குத் தூதாக அனுப்புகிறாள். தோழிகள் தன்னைப்போல் வருத்தப்படுகிறவர்களாகையால் அவர்களால் தூதுபோகிற வேலை செய்யமுடியாது என்று எண்ணி அவர்களை அனுப்பவில்லை. அறிவை இழந்தமையால் பக்ஷிகள் அந்த வேலையைச் செய்யத் தகுந்தவைகள் என்று பிரமித்து அவைகளை அனுப்புகிறாள்.

(3) நாலு தடவை பக்ஷிகளை ஆழ்வார் தூதுவிடுகிறார். முதல் தடவை "அஞ்சிறை" (1-4). இல்; எம்பெருமான் ஆச்ரிதர்களின் அபராதங்களைப் பொறுக்கும் தன்மையுள்ளவன் என்பதை நினைத்து; "வைகல் பூங்கழிவாய்" இல் (6-1) அவனுக்கும் தனக்குமிருக்கும் சேஷி சேஷன் என்கிற உறவை நினைத்து; 'பொன்னுலகாளீரோ' இல் (6-8) ஆச்ரிதர்களோடு அவனுக்குள்ள * ஐகரஸ்யமிருப்பதை நினைத்து; இதில் அவனுடைய அழகை நினைத்துப் பக்ஷிகள் தூது விடப்படுகின்றன.

(தரவுக்கொச்சகக்கலிப்பா)

எங்கான லகங்கழிவா யிரைதேர்ந்திங் கினிதமரும்
செங்கால மடநாராய் திருமூழிக் களத்துறையும்
கொங்கார்பூந் துழாய்முடியெங் குடக்கூத்தர்க் கென்தூதாய்
நுங்கால்க ளென்தலைமேல் கெழுமீரோ நுமரோடே. (க)

* இரண்டு பேர்கள் சேர்ந்து ஒரு வேலையைச் செய்யும்போது ஒரே விதமான ஸந்தோஷம் இருவருக்குமுண்டாவது ஐகரஸ்யம்.

(ப-ரை) எம் கானல் - எங்களுடைய தோட்டத்தின், அகம் - உள்ளில், கழிவாய் - கழியில், இரை - ஆஹாரத்தை, தேர்ந்து - தேடி, இங்கு, இனிது - இனியதாக, அமரும் - நிலையாயிருக்கிற, செம் கால - சிவந்த கால்களையுடைய, மட நாராய் - மடப்பமுள்ள நாரையே! திருமூழிகளத்து - திருமூழிக்களம் என்னும் ஊரில், உறையும் - வஸிக்கிற, கொங்கு ஆர் - தேன் நிறைந்த, பூம் - அழகான, துழாய் முடி - துளஸி மாலையைத் திருமுடியிலேயுடையவரான, எம் குடக்கூத்தர்க்கு - எங்களுடைய குடக்கூத்து ஆடின கண்ணனுக்கு, என் தூதாய் - என்னுடைய தூதர்கள் செய்யவேண்டிய வேலைகளைச் செய்கிறவர்களாய், நுமரோடே - உங்களைச் சேர்ந்தவர்களுடன்கூட, நும் கால்கள் - உங்களுடைய திருவடிகளை, என் தலைமேல், கெழுமீர் - பொருந்தி இருக்கும்படி செய்யுங்கள்.

(கருத்து) என்னுடைய தோட்டத்துக்குள்ளே இருக்கும் கழியில் ஆஹாரத்தைத் தேடிக்கொண்டு அந்த இடத்திலேயே ஸுகமாக நித்ய வாஸம் செய்கிற செங்கால மட நாரைகளே! தேன் நிறைந்த அழகான துளஸி மாலையைத் திருமுடியில் தரித்துக்கொண்டவனும் கண்ணனாய் அவதாரம் செய்து குடக்கூத்தாடினவனுமான எம்பெருமான் தன்னுடைய அழகையும் தான் செய்த லீலைகளையும் எனக்குக் காட்டித் தன்னை விட்டுப் பிரிந்து நான் இருக்கமுடியாதபடி என்னைத் தனக்கு அடிமையாகப் பண்ணிக்கொண்டு என்னுடன் சேர்ந்து உடனே என்னை விட்டுப் பிரிந்து திருமூழிக்களத்தில் எழுந்தருளியிருக்கிறான். அவனிடத்தில் என்னுடைய தூதர்களாகப் போகிற வேலையை ஒப்புக்கொண்டு உங்கள் பிள்ளை பெண்டாட்டி முதலானவர்களுடன் சேர்ந்து உபகாரம் செய்யப்போகிற உங்களுடைய திருவடிகளை என் தலைமேல் சேர்க்கவேண்டும். ஸ்வாமியாயிருக்கிறவனுடைய திருவடிகளைத் தாஸன் தன் தலையில் வைத்துக்கொள்வது அவர்களுக்கும் தனக்கும் இருக்கும் முறையினால் அன்றோ?

குறிப்பு— (1) கானல் என்பதற்கு ஸமுத்திரக் கரையிலிருக்கும் காடு என்பது பொருள். இங்கே அதற்குத் தோட்டமென்பது பொருள்.

(2) 'கழி' என்பது ஒரு குளத்திலிருந்தோ ஆறுகளிலிருந்தோ வழிந்து ஓடுகிற ஒரு வாய்க்கால்.

(3) "கானல் அகம்" என்பது உங்களுக்கு உபயோகமாகும்படி எனக்கு ஒரு தோட்டமிருக்கிறதே என்றும், அதற்குள்ளே ஸந்தேஹப்படாமல் வந்திருக்கும்படி உங்களை அந்தரங்கர்களாகப் பெற்றேனே என்றும் ஸந்தோஷப்படுகிறார் என்பது கருத்து.

(4) 'இரை தேர்ந்து';—என்னது என்று எண்ணிக்கொண்டிருப்பதை நீங்கள் உங்களுக்கு ஆஹாரமாக எடுத்துக்கொள்ளும்படி பாக்கியம் பண்ணினேனே என்று ஸந்தோஷப்படுகிறபடி.

(5) 'இங்கு' என்பதனால் என்னுடன் சேர்ந்து என்னைவிட்டுப் பிரிந்தவன் போலில்லாமல் என்னிடத்தில் ப்ரீதியாலே எனக்கு ஸமீபத்தில் இருக்கிறீர்களே என்று ஸந்தோஷப்பட்டபடி.

(6) 'செங்கால' என்பதற்கு, என் மடியில் வைத்துக்கொள்ளுகிற எம்பெருமான் திருவடிகள் போல் அழகாய் நான் தலையில் வைத்துக்கொள்ளப்போகிற உங்கள் திருவடிகள் இருக்கின்றன என்பது கருத்து.

(7) திருமூழிக்களத்துறையும்— வைகுந்தத்துக்குத் தூதர்களை அனுப்பமுடியாது. அவர்களை அனுப்பத் தகுந்தபடி ஸமீபத்தில் திருமூழிக்களத்தில் அவனிருக்கிறபடியால் அந்த ஊர் வைகுந்தத்தைக் காட்டிலும் சிறந்தது என்பது கருத்து.

(8) குடக்கூத்து— இடையர்கள் பாற்குடத்தைத் தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடுவது. இதை எம்பெருமான் கண்ணனாய் அவதாரம் செய்த காலத்தில் செய்தான். ஆகையால், 'குடக்கூத்தன்' என்கிற சொல் அவனைக் காட்டுகிறது.

(9) எம்பெருமானிடம் தூதனுகப் போகிற பக்ஷிகள் ஆசார்யர்கள்; அவர்களின் திருவடிகளைச் சிஷ்யன் தலையில் வைத்துக்கொள்வது அவனுக்கு ஏற்பட்ட கடமை. அவர்களிடத்தில் போல அவர்களின் பத்னியிடத்திலும், பிள்ளைகளிடத்திலும் அவன் கௌரவம் செய்யவேண்டியது. இதை "நமர்போடே" என்கிற சொல் காட்டுகிறது.

(10) "கெழுமீர்" என்று சொன்னதற்கும் 'வையுங்கள்' என்று சொல்லாததற்கும் கருத்து—உங்கள் திருவடிகளும் என் தலையும் சேர்ந்திருக்கவேண்டியவைகள். பிரிந்திருந்தால் உங்கள் திருவடிகளுக்கும் என் தலைக்கும் புருஷார்த்தத்தில் குறையுண்டு என்பது.

அவ— கீழ்ப் பாட்டில் வேண்டப்பட்ட நாரைகளுக்குச் சொல்லவேண்டியதைத் துக்கத்தின் மிகுதியாலே கலங்கி குருகு களைப் பார்த்துச் சொல்லுகிருள்:—

நுமரோடும் பிரியாதே நீரும்நுஞ் சேவலுமாய்
அமர்காதற் குருகினங்கா ளணிமூழிக் களத்துறையும்
எமராலும் பழிப்புண்டிங் கென்தம்மா லிழிப்புண்டு
தமரோடங் குறைவார்க்குத் தக்கிலமே கேளீரே. (உ)

(ப-ரை) நுமரோடும் - உங்கள் பந்துக்களோடும், பிரியாதே, நீரும் - நீங்களும், நும் சேவலுமாய் - உங்கள் ஆண்பக்ஷிகளு மாய், அமர் - பிரியாமல் சேர்ந்திருக்கிற, காதல் குருகு இனங் காள் - ஒருவரோடு ஒருவர் ஆசையுள்ளவர்களாயிருக்கும் குருகுக்கூட்டங்களே! அணி - அழகான, மூழிக்களத்து - திரு மூழிக்களத்தில், உறையும் - வஸிக்கிற, தம்மால், இழிப்பு ண்டு - உபேக்ஷிக்கப்பட்டு, எமராலும் - என்னைச் சேர்ந்தவர் களாலும், பழிப்புண்டு - பழிக்கப்பட்டு, இங்கு - இந்த உல கத்திலிருந்து, என் - என்ன பிரயோஜனம்? தமரோடு - தம் மைச் சேர்ந்தவர்களோடு, அங்கு, உறைவார்க்கு - இருக்கிற வனுக்கு, தக்கிலமே - தகுந்தவர்களல்லோமோ? கேளீர் - இதை அவனிடம் கேளுங்கள்.

(கருத்து) உங்களுடைய பந்துக்களுடனும் உங்களிடத்தில் பிரீதியுள்ள சேவல்களுடனும் சேர்ந்து பிரியாமலிருக்கிற குரு குக் கூட்டங்களே! இப்படி ஒருவரிடத்தில் ஒருவருக்கு ஆசை யுடன் சேர்ந்திருக்கிற நீங்கள் நான் படுகிற துக்கத்தைப் போக்க வேண்டாமோ? என்று அவைகளை அழைத்துவைத்து, நடு விலே தன் வருத்தத்தாலே "அழகான திருமூழிக்களத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் என்னை உபேக்ஷித்திருக் கிறன். என்னைச் சேர்ந்தவர்களும் என்னைப்பற்றிப் பழி சொல் லுகிறார்கள். அவனுடைய உபேக்ஷையையும் இவர்களுடைய பழிப்பையும் அநுபவித்துக்கொண்டு இந்தப் பூமியிலிருந்து என்ன பிரயோஜனம்? முடிந்துபோவதே நல்லது" என்று தனக் குள்ளே நினைத்து, பின்னையும், அவனை விடமுடியாமல், கூப் பிட்ட குருகுகளைப் பார்த்துச் சொல்லுகிறாள்- "அந்த ஊரில் எம்பெருமான் தன் பரிஜனங்களுடன் சேர்ந்திருக்கும் அழகை

அநுபவிப்பதற்கு நான் தகுந்தவள் அன்றோ ?' என்று அவனைக் கேளுங்கள். (2)

தக்கிலமே கேளீர்கள் தடம்புனல்வா யிரைதேரும்
கொக்கினங்காள் குருகினங்காள் குளிர்மூழிக் களத்துறையும்
செங்கமலத் தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய்
அக்கமலத் திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே. (௩)

(ப-ரை) தடம் புனல் வாய் - தடாகத்தினுடைய ஜலத்தில், இரை - ஆஹாரத்தை, தேரும் - தேடுகிற, கொக்கு இனங்காள் - கொக்குக் கூட்டங்களே! குருகு இனங்காள் - குருகுக்கூட்டங்களே! குளிர் - குளிர்ந்த, மூழிக்களத்து உறையும், செம் கமலத்து அலர்போலும் - செந்தாமரைப் பூக்களைப்போல் இருக்கும், கண் கை கால் - திருக்கண்கள் திருக்கைகள் திருவடிகள், செங்கனிவாய் - சிவந்த கோவைப்பழம் போன்ற திருப்பவளம், அ கமலத்து இலை - அந்தத் தாமரைக்கொடியின் இலைபோலிருக்கும் திருமேனி, (இவைகளையுடைய) அடிகளுக்கு - ஸ்வாமிக்கு, தக்கிலமே - நாங்கள் தகுந்தவர்கள் அல்லோமோ ? கேளீர் - இதைக் கேளுங்கள்.

(கருத்து) தடம்புனலில் இரைதேடுகிற கொக்குக் கூட்டங்களே! குருகுக்கூட்டங்களே! என் ஆசைக்குத் தகுந்தபடி கூட்டம் கூட்டமாக தூது போகும்படி உங்களைக்காணப்பெற்றேனே; நான் எம்பெருமானை விட்டுப் பிரிந்து பட்டினியிருக்கிறவள்போலிருக்கிறேனே; நீங்கள் மாத்திரம் இரைதேடலாமோ? ஆகையால், அவனிடம் போய் நான் சொல்லப்போவதை கேளுங்கள். "செந்தாமரைப் புஷ்பங்கள் போலிருக்கும் திருக்கண்களையும் திருக்கைகளையும் திருவடிகளையும் சிவந்த கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தையும், இவைகளால் ஒரு புதிய அழகைப்பெற்று தாமரையிலையைப்போலிருக்கும் திருமேனியையுமுடையவனை குளிர்ந்த திருமூழிக்களத்தில் இருக்கும் அழகை நான் பார்க்கத்தகுந்தவள் அன்றோ? அதை நான் பார்க்காமல் இழந்து போகவேண்டுமோ ?" என்று

குறிப்பு— 'தண்' என்பதற்கு ஆழ்வாருக்குப் பிரிவினாலுண்டான தாபத்தைப் போக்கத் தகுந்தது அந்த ஊர் என்பது கருத்து.

இ—ம். தக்கிலமே - ஏகாரத்திற்கு வினாப்பொருள். (3)

அவ— கீழ்ப் பாட்டில் வேண்டின பக்ஷிகள் போகவில்லை; திருமூழிக்களத்துக்குக் கிட்ட இருக்கிற மேகங்களை வேண்டுகிறாள்:—

திருமேனி யடிகளுக்குத் தீவினையேன் விடுதூதாய்
திருமூழிக் களமென்னுஞ் செழுநகர்வா யணிமுகில்காள்
திருமேனி யவட்கருளீ ரென்றக்கா லும்மைத்தன்
திருமேனி யொளியகற்றித் தெளிவிசும்பு கடியுமே. (௪)

(ப-ரை) திருமூழிக்களம் என்னும், செழு நகர்வாய்-அழகான பட்டணத்திலே (இருக்கிற), அணி-அழகான, முகில்காள்-மேகங்களே! திருமேனி அடிகளுக்கு - திருமேனி (அழகாலே எல்லாரையும் வசப்படுத்திக்கொண்டிருக்கும்) ஸ்வாமிக்கு, தீ வினையேன் - கெட்ட கர்மங்களைச் செய்திருக்கிற நான், விடு தூது ஆய் - விடுகிற தூதனுடைய வேலைகளைச் செய்கிறவைகளாய், திருமேனி - (உன்னுடைய) திருமேனியை, அவட்கு - அவளுக்கு, அருளீர் - கிருபையாலே கொடுக்கவேணும். என்றக்கால் - என்று சொன்னால். தன் திருமேனி ஒளி - (உங்களுக்குக் கொடுத்திருக்கிற) தன் திருமேனியின் காந்தியை, உம்மை - உங்களை, அகற்றி - (உங்களைவிட்டு) பிரியும்படி செய்து, தெளி விசும்பு - நிர்மலமான ஆகாசத்திலிருந்து (வைகுந்தத்திலிருந்து), கடியுமே - துறத்துவனோ?

(கருத்து) திருமூழிக் களமென்னும் அழகான பட்டணத்தின் மேலே இருக்கிற அழகான மேகங்களே! நான் பாபம்செய்திருக்கிறபடியாலே அந்த ஊரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் என்னைவிட்டுப் பிரிந்திருக்கிறான். நான் உங்களைப் பிரார்த்திக்கவேண்டியதாயிருக்கிறது. என்னுடைய தூதர்களாக அவனிடம் போய் "உன்னுடைய திருமேனியை அவளுக்குக் கிருபையினாலே கொடுக்கவேண்டும்" என்று சொல்லவேண்டும். அப்படிச் சொன்னால் உங்களுக்கு அவன் கொடுத்திருக்கிற தன்னுடைய திருமேனிக் காந்தியை உங்களிடமிருந்து பிடுங்கிக்கொண்டு உங்களை வைகுந்தத்துக்கு வரவொட்டாமல் செய்வனோ? அப்படிச் செய்யமாட்டான். உங்களுக்கு இப்போது கொடுத்திருப்பது கொஞ்சம் ஒற்றுமை (ஸாம்யம்) போல வை

குந்தமென்கிற உயர்ந்த ஆகாயத்துக்கு அழைத்துக்கொண்டு போய், பிறகு அளவில்லாத ஒற்றுமையையும் (பரமஸாம்யம்) கொடுப்பன். இந்தப் பெரிய லாபம் எனக்காக ஒரு பேச்சுப் பேசுவதாலேயே உங்களுக்குக் கிடைக்கும். (4)

---

அவ—"அவட்கு" என்று பொதுவாகச் சொன்னால், அவள் இன்னாள் என்று அறிவனோ? என்று மேகங்கள் கேட்டதாக நினைத்து, பதில் சொல்லுகிறாள்:—

தெளிவிசும்பு கடிதோடித் தீவளைத்து மின்னிலகும்
ஒளிமுகில்காள் திருமூழிக் களத்துறையு மொண்சுடர்க்குத்
தெளிவிசும்பு திருநாடாத் தீவினையேன் மனத்துறையும்
துளிவார்கட் குழலார்க்கென் தூதுரைத்தல் செப்புமினே. (ரு)

(ப-ரை) தெளி விசும்பு - நிர்மலமான ஆகாசத்தில், கடிது - சீக்கிரமாக ஓடி, தீவளைத்து - நெருப்பு வலயம்போலிருக்கிற, மின் - மின்னல், இலகும் - விளங்குகிற, ஒளி முகில்காள் - காந்தியுள்ள மேகங்களே! திருமூழிக்களத்து உறையும், ஒண் சுடர்க்கு - பிரபையோடு கூடின காந்தியையுடையவரும், தீவினையேன் மனத்து - தீவினைகளையுடைய என்னுடைய மனதிலே, தெளி விசும்பு - வைகுந்தமான, திருநாடு ஆ - அழகான தேசமாக, உறையும் - வஸிக்கிறவரும், துளி வார் - துளித்துளியாய்ப் பெருகுகிற, கள் - தேனையுடைய, குழலார்க்கு - கூந்தலையுடையவருமான எம்பெருமானுக்கு, என் தூது உரைத்தல் - என் தூதவாக்கியத்தை, செப்புமின் - சொல்லுங்கள்.

(கருத்து) நிர்மலமான ஆகாசத்தில் வேகமாய் ஓடிக்கொண்டு, நெருப்புவலையம்போன்ற மின்னலையுடைய காந்தியுள்ள மேகங்களே! "தெளிவிசும்பான வைகுந்தத்தில் பண்ணும் பிரீதியைப்பண்ணிக்கொண்டு எவள் மனதில் நீ இருந்தும் அவள் செய்தபாபத்தாலேஅவள் கண்ணாலே பார்க்கமுடியாதபடி இருக்கிறாயோ! அவளைத்தான் 'அவட்கு' என்று சொன்னோம்" என்று தேன் துளிகளைச் சொட்டவிட்டுக்கொண்டிருக்கிற பூக்களாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியுடன் திருமூழிக்களத்தில் எழுந்தருளியிருக்கும் அவனுக்குச் சொல்லவேணும். இதுதான் நீங்கள் எனக்குத் தூதர்களாய் செய்யும் வேலை.

குறிப்பு— மேகங்கள் ஆகாசத்தில் வேகமாய் ஓடுவதைப் பார்த்து, ஆகாசத்தில் வேகமாய் லங்கைக்குப்போன ஹநுமானைப்போல தன்னுடைய தூத க்ருத்யத்தை அவைகள் செய்யும் என்று நினைத்து "கடிதோடி" என்று சொல்லுகிறார்.

(2) ஒரு கொள்ளிக்கட்டையை வேகமாகச் சுற்றினால் அது ஒரு நெருப்புச் சக்கிரம்போலிருக்கும். மின்னல் தோன்றும்போது அப்படியே காணப்படுகிறபடியால், அதை 'தீவளைத்து மின் இலகும்' என்கிறார்.

இ—ம். விசும்பு ஆ - விசும்பாக. (5)

---

அவ— மேகங்கள் போகவில்லை; அதினாலோ, அல்லது வண்டுகளை மேகங்களாக பிரமித்தோ வண்டுகளை வேண்டுகிறாள். இப்படியே மேலும் ஸங்கதியை அறியலாம்.

தூதுரைத்தல் செப்புமின்கள் தூமொழிவாய் வண்டினங்காள்
போதிரைத்து மதுநுகரும் பொழின்மூழிக் களத்துறையும்
மாதரைத்தம் மார்வகத்தே வைத்தார்க்கென் வாய்மாற்றம்
தூதுரைத்தல் செப்புதிரேற் சுடர்வளையுங் கலையுமே. (௬)

(ப-ரை) தூ மொழி வாய் - சுத்தமான (மனதை இழுக்கும்படியான) சொற்கள் வாய்த்த (கிடைத்திருக்கிற), வண்டு இனங்காள் - வண்டுகளின் கூட்டங்களே! சுடர் வளையும் - காந்தியுள்ள வளைகளையும், கலையும் - பட்டு வஸ்திரத்தையும், (இழந்தேன் என்று) தூது உரைத்தல் - தூத வாக்கியத்தை, செப்புமின் - சொல்லுங்கள், என் - என்னுடைய, வாய் மாற்றம்- வாய்ச் சொல்லைத் திருப்பிச் சொல்லுவதாகிய, தூது உரைத்தல் - தூதன் சொல்லவேண்டியதை, செப்புதிரேல் - சொன்னால், போது - (புஷ்பங்கள் மலரும்) காலத்தில், இரைத்து - பாடிக்கொண்டு, மது நுகரும் - தேனைக் குடிக்கும்படியான, பொழில் - சோலைகளையுடைய, திருமூழிக்களத்து உறையும், மாதரை - அழகையுடையவளான பிராட்டியை, தம் மார்பு அகத்து - தன்னுடைய திருமார்பிலே, வைத்தார்க்கு - வைத்துக்கொண்டவருக்கு (சொல்லுங்கள்.)

(கருத்து) வண்டுக் கூட்டங்களே! உங்களுக்கு கேட்பவர்களின் மனதை இழுக்கும்படியான சொற்களைச் சொல்லும் ஸாமர்த்தியம் கிடைத்திருக்கிறது. "வரமாட்டோம்" என்று அவன் தீர்மானித்திருந்தபோதிலும், உங்களுடைய மதுரமான சொற்களைக் கேட்டவுடன் கட்டாயம் இங்கே வருவன். ஆகையால், நீங்கள் திருமூழிக்களத்திலிருக்கும் அவனிடம் போய் "நான் காந்தியுள்ள வளைகளையும் பட்டு வஸ்திரத்தையுமிழந்தேன்" என்கிற இந்தச் சொற்களை அவனிடம் சொல்லுங்கள். இந்த வேலையைப் பிராட்டி அவன் கிட்ட இருக்கும்போது செய்யுங்கள். அந்த ஊரிலுள்ள சோலைகளில் புஷ்பங்களிலிருந்து தேன் சொட்டிக்கொண்டிருக்கிறது. அதைப் பானம் பண்ணிப் பாடிக்கொண்டு இதைச் செய்யுங்கள். லங்கையிலிருந்து திரும்பி வந்த ஹநுமானும் மற்ற வாநரங்களும் மதுவநத்தில் தேனைக் குடித்ததுபோல், என் வேலையைச் செய்து தேனைக் குடிக்கவேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லை. முன்னும் சாப்பிடலாம், சாப்பிட்ட பிறகே என் வேலையைச் செய்யலாம். ததிமுகன் வாநரர்களைத் தடுத்ததுபோல உங்களைத் தடுக்கிறவன் ஒருவனுமில்லை.

இ—ம். மாதர் - உரிச்சொல். அழகு என்பது அதன் பொருள். 'மாதர்' என்கிற சொல் ஆகுபெயராய் அதை உடைய பிராட்டியைச் சொல்லுகிறது. 'மாதர்' என்பதற்கு விருப்பம் என்பதும் பொருள். அப்போது எம்பெருமானுடைய விருப்பத்துக்கு விஷயமானவள் என்பது பொருளாகும். இந்த இரண்டு பொருளையும் திருவுள்ளத்தில் கொண்டு "உத்தமஸ்திரீ" என்று பூர்வர்கள் வியாக்யாநம் செய்தார்கள். (௬)

---

சுடர்வளையுங் கலையுங்கொண் டருவினையேன் தோள்துறந்த
படர்புகழான் திருமூழிக் களத்துறையும் பங்கயக்கண்
சுடர்பவள வாயனைக்கண் டொருநாளோர் தூய்மாற்றம்
படர்பொழில்வாய்க் குருகினங்கா ளெனக்கொன்று பணியீரே. (௭)

(ப-ரை) படர் - படருகிற, பொழில் வாய் - சோலைகளில் இருக்கும், குருகு இனங்காள் - குருகுக் கூட்டங்களே! சுடர் வளையும் - காந்தியுள்ள வளைகளையும், கலையும் - பட்டு வஸ்திரத்

த்தையும், கொண்டு - அபஹரித்துக்கொண்டு, அரு - அருமையான, வினையேன் - பாபங்களைச் செய்த என்னுடைய, தோள் துறந்து - தோள்களை விட்டுவிட்டு, படர் புகழான் - பரவுகிற கீர்த்தியையுடையவனும், திருமூழிக்களத்துறையும், பங்கயக் கண் - தாமரைக் கண்ணனும், சுடர் பவள வாயனை - காந்தியுள்ள திருப்பவளத்தையுடையவனுமானவனை, கண்டு - எனக்கு, எனக்காக, ஒரு நாள், ஓர் - ஒப்பில்லாத, தூய் - பரிசுத்தமான, (சிலாக்யமான), மாற்றம் - வார்த்தையை, ஒன்று - ஒன்றாக, (வேறு வார்த்தையை வேண்டாமல் ஸாரமாயிருக்கும்படி), பணியீர் - சொல்லுங்கள்.

(கருத்து) படருகிற சோலைகளிலிருக்கும் குருகுக் கூட்டங்களே ! திருமூழிக்களத்திலிருக்கிறவன் மிகுந்த பிரீதியுடன் வந்து என் தோள்களின் அழகிலீடுபட்டு அவைகளை அநுபவித்து என்னை விட்டுப் போகும்போது என்னுடைய காந்தியுள்ள வளைகளையும் பட்டு வஸ்திரத்தின் அழகையும் அபஹரித்துக்கொண்டுபோய்விட்டான். இதுவே தனக்கு எங்கும் பரவும் புகழாக எண்ணியிருக்கிறான். இப்படி அவன் வந்து என்னோடு சேர்ந்து என்னை விட்டுப்போகும்படியான கொடுமையான பாபத்தைப் பண்ணியிருக்கிறேன். எனக்காக ஒருநாள் அவனிடம் போய், சிலாக்யமான பேச்சை வேறு வார்த்தை சொல்லவேண்டாதபடி ஸாரமாகவே சொல்லவேணும். அவன் அந்த வழியில் தாமரைப்பூப் போன்ற திருக்கண்களையும், காந்தியுள்ள பவழம் போன்ற திருப்பவளத்தையுமுடையவனாயிருக்கிறான். இந்த அழகை எனக்கு முன்னாலே நீங்கள் பார்க்கலாம். உங்களுக்கு இது கிடைக்கும். (7)

---

எனக்கொன்று பணியீர்க ளிரும்பொழில்வா யிரைதேர்ந்து
மனக்கின்பம் படமேவும் வண்டினங்காள் தும்பிகாள்
கனக்கொள்திண் மதிள்புடைசூழ் திருமூழிக் களத்துறையும்
புனக்கொள்கா யாமேனிப் பூந்துழாய் முடியார்க்கே. (அ)

(ப-ரை) இரும் - விசாலமான, பொழில்வாய் - சோலைகளிலே, இரை - (தேனாகிய) ஆஹாரத்தை, தேர்ந்து - தேடிக்கொண்டு, மனக்கு - உங்களுடைய மனதுக்கு, இன்பம் பட -

ஆநந்தமுண்டாகும்படி, மேவும் - ஒருவரிடத்தில் ஒருவர் பிரீதி பண்ணிக்கொண்டு இருக்கிற, வண்டு இனங்காள்-வண்டுக் கூட்டங்களே! தும்பிகாள் - தும்பிகளே ! கனம் கொள்-கனத்தைக்கொண்டிருக்கிற, திண் - திருடமான, மதிள் - மதிள்களாலே, புடை சூழ் - சுற்றிலும் சூழப்பட்ட, திருமூழிக்களத்து உறையும், புனம் கொள்-தான் வளருமிடத்திலிருக்கிற, காயாமேனி-காயாம் பூவைப்போன்ற திருமேனியையுடையவரும், பூம் துழாய் முடியார்க்கு - அழகான துளஸியைத் திருமுடியில் உடையவருமான எம்பெருமானுக்கு, எனக்கு - எனக்காக, ஒன்று - ஒரு வார்த்தையை, பணியீர்கள் - சொல்லுங்கள்.

(கருத்து) உங்கள் மனதில் ஆனந்தம் உண்டாகும்படி ஒருவரிடத்தில் ஒருவர் ஆசையுள்ளவர்களாய் விசாலமான சோலைகளில் தேனைத் தேடிக்கொண்டு சேர்ந்திருக்கும் வண்டுக் கூட்டங்களே! தும்பிகளே! பொன்னால் செய்யப்பட்டிருப்பதாலே கனமாயும் திருடமாயுமிருக்கிற மதில்களாலே சுற்றிலும் சூழப்பட்ட திருமூழிக்களத்தில் எம்பெருமான் தன் இடத்திலிருக்கும் காயாம் பூவைப்போல் காந்தியை வீசும் திருமேனியையும் அழகான துளஸி மாலையைத் தரித்திருக்கிற திருமுடியையுமுடையவனாய் எழுந்தருளிக்கிறான். அவனிடத்தில் எனக்காக "அவள் உன்னைப் பாராமல் உன் அழகைப் பார்த்து அநுபவிப்பதை இழந்துபோகவேண்டியதோ?" என்கிற இந்த ஒரு வார்த்தையைச் சொல்லுங்கள். (8)

---

பூந்துழாய் முடியார்க்குப் பொன்னாழிக் கையாருக்கு
ஏந்துநீ ரிளங்குருகே திருமூழிக் களத்தாருக்கு
ஏந்துபூண் முலைபயந்தென் னிணைமலர்க்கண் ணீர்ததும்பத்
தாந்தம்மைக் கொண்டகல்தல் தகவன்றென் றுரையீரே. (௯)

(ப-ரை) நீர் ஏந்து - ஜலத்தாலே ஏந்தப்படுகிற (தூக்கப்படுகிற), இளம் குருகே - சிறு வயதுள்ள குருகே! பூந்துழாய் முடியார்க்கு - அழகான துளஸியைத் திருமுடியில் உடையவருக்கு, பொன் ஆழி கையாருக்கு - அழகான திருவாழியைத் திருக்கையில் வைத்துக்கொண்டிருக்கிறவருக்கு, திருமூழிக்களத்தாருக்கு, பூண் ஏந்து - ஆபரணங்களைப் பூட்டிக்கொள்ளவேண்டியவைகளான, முலை - என் ஸ்தனங்கள், பயந்து - வெளுத்து, என் -

என்னுடைய, இணை மலர் கண் - ஒன்றுக்கொன்று ஒத்துத் தாமரைப்பூக்களைப்போலிருக்கிற கண்களில்,நீர் ததும்ப-நீர் நிரம்ப, தாம், தம்மை கொண்டு அகல்தல் - தம்மை எடுத்துக்கொண்டு இங்கிருந்து போவது, தகவு - அன்று என்று - கிருபையன்று என்று, உரையீர் - சொல்லுங்கள்.

(கருத்து) ஜலத்துக்குப் பயப்படுவதற்கு இடமில்லாமல், அதினுல் தூக்கப்படுகிற சிறு குருகே! உனக்குத் தூதுபோகத் தகுந்த இளமைப்பருவமிருக்கிறது. ஜலத்துக்குப் பயப்படாமல் ஹநுமானைப்போலப் போகும் திறமையுமிருக்கிறது. ஜலம் உனக்குத் தடையாகாது; ஆகையால் திருமூழிக்களத்தில் அழகான துளஸியைத் திருமுடியிலும் காந்தியுள்ள திருவாழியைத் திருக்கையிலும் வைத்துக்கொண்டிருக்கிற எம்பெருமானிடம் என்னுடைய தூதாகப் போ. "ஆபரணங்களைப் பூட்டிக்கொள்ளவேண்டிய அவள் ஸ்தநங்கள் வெளுக்கும்படியாகவும், நீர் அவளுடன் சேர்ந்திருந்த காலத்தில் இரண்டு தாமரைப் புஷ்பங்கள் போலிருந்த அவள் கண்களில் நீர் நிரம்பும்படியாகவும் செய்துவிட்டீரே; நீர் போகும்போது உம்மை அவளிடம் விட்டு விட்டுப் போகக்கூடாதோ? அதையும் கொண்டுபோகவேணுமோ ? இது கிருபையுள்ளவன் செய்கிற வேலையோ ? ஸ்திரீ வதம்பண்ணுகிறவன் அன்றோ இப்படிச் செய்வன்" - என்று இப்படிச் சொல்லுங்கள்.

குறிப்பு— துளஸி திருமுடிக்கு எப்படி அழகாயிருக்கிறதோ, அப்படியோ திருவாழியும் திருமேனிக்கு அழகாயிருக்கிறது. அவைகளைப்போலவே ஸௌசீல்யம் ஸௌலப்யம் என்கிற குணங்களும் அவன் ஸ்வரூபத்துக்கு அழகாயிருக்கின்றன என்று அந்த ஊரில் வாஸமானது காட்டுகிறது என்பது கருத்து. (9)

---

தகவன்றென்று ரையீர்கள் தடம்புனல்வா யிரைதேர்ந்து
மிகவின்பம் படமேவும் மென்னடைய வன்னங்காள்
மிகமேனி மெலிவெய்தி மேகலையு மீடழிந்தேன்
அகமேனி யொழியாமே திருமூழிக் களத்தார்க்கே. (ய)

(ப-ரை) தடம் புனல் வாய் - விசாலமான ஜலத்தில், இரை- ஆஹாரத்தை, தேர்ந்து - தேடிக்கொண்டு, மிக - அதிகமாக, இன்பம் பட - ஆநந்தமுண்டாகும்படி, மேவும் - ஒருவர் மற்றொருவரிடத்தில் பிரீதியுடனிருக்கிற, மென் நடைய - மிருதுவான நடையையுடைய, அன்னங்காள் - அன்னங்களே! மேனி - என் உடம்பு, மிக - மிகவும், மெலிவு - மெலிந்திருப்பதை, எய்தி - அடைந்து, மேகலையும் - ஒட்டியாணமும், ஈடு அழிந்து - பூட்டிக்கொள்வதையிழந்து, என் அகமேனி - எனக்கு உள்ளேயிருக்கும் ஸ்வரூபம், ஒழியாமே - ஒழியாமல் (உடம்பின் ஸம்பந்தத்தை விடுவதற்கு முன்னே), திருமூழிக் களத்தார்க்கு, தகவு அன்று - (உம் திருமேனியைக்கொண்டுவந்தது) கிருபையின் வேலையன்று, என்று, உரையீர்கள் - சொல்லுங்கள்.

(கருத்து) விசாலமான ஜலத்தில் ஆஹாரம் தேடிக்கொண்டு ஆநந்தமுண்டாகும்படி ஒருவர் மற்றொருவருடன் பிரீதியுடன் சேர்ந்து இருக்கிற மிருதுவான நடையையுடைய அன்னங்களே! திருமூழிக்களத்தில் இருக்கும் எம்பெருமானிடம் போய் என் உடம்பு இளைத்து, அதினாலே மேகலையைப் பூட்டிக்கொள்ளமுடியாமல் என் ஆத்மஸ்வரூபம் உடம்பைவிட்டுப் பிரிவதற்கு முன்னாலே இந்த ஸமாசாரத்தைச் சொல்லுங்கள்— "நீ பிரிந்துபோகும்போது உன் உடம்பை அவளிடம் விட்டு வராமல் அதைக் கொண்டுவந்தது கிருபையுள்ளவன் செய்கிற வேலையோ?" என்று.

---

ஒழிவின்றித் திருமூழிக் களத்துறையு மொண்சுடரை
ஒழிவில்லா வணிமழலைக் கிளிமொழியா ளலற்றியசொல்
வழுவில்லா வண்குருகூர்ச் சடகோபன் வாய்ந்துரைத்த
வழுவில்லா வாயிரத்திப் பத்தும்நோ யறுக்குமே. (கக)

(ப-ரை) ஒழிவு இன்றி - முடிவதில்லாமல், திருமூழிக்களத்து உறையும், ஒண் சுடரை - அளவில்லாத அழகையுடைய ஸர்வேசுவரனைப்பற்றி, ஒழிவு இல்லா - பிரியுங்காலத்தில் இல்லாதவள் என்று சொல்லும்படியான, அணி மழலை-அழகான மழலைச் சொல்லையுடைய, கிளி மொழியாள் - கிளிபோல் பேசுகிற பிராட்டி, அலற்றிய சொல் - அலற்றின சொற்களாலே, வழுவு

இல்லா - (அந்தப் பிராட்டி ஸ்வபாவத்தில் ஒன்றும்) குறையில்லாதவரான, வண் குருகூர் சடகோபன், வாய்ந்து - கிட்டி, உரைத்த - சொன்ன, வழுவு இல்லா - பிரிந்து போவதில்லாத, ஆயிரத்து, இ பத்து - இந்தப் பத்துப் பாட்டுக்கள், நோய் - (பிரிவாகிய) வியாதியை, அறுக்கும்.

(கருத்து) ஊரின் அழகாலே திருமூழிக்களத்தில் அதை ஒரு க்ஷணமும் விடாமல் வஸிக்கிற அழிவில்லாத அழகையுடைய ஸர்வேசுவரனைப்பற்றி, அவனை விட்டுப் பிரிந்தால் இவள் இல்லையென்று சொல்லும்படியான ஸ்வபாவத்தையுடைய கிளி போல் அழகான மழலைச் சொல்லைச் சொல்லுகிற ஒரு பிராட்டி அலற்றின சொற்களாலே அவள் ஸ்வபாவத்தில் ஒரு குறைவுமில்லாத வண் குருகூர்ச் சடகோபன் அருளிச் செய்தவைகளும் கேட்பவர்கள் மனதிலிருந்து ஒருபோதும்பிரியாதபடி இனியவைகளுமான ஆயிரத்துள் இப்பத்துப் பாட்டுக்கள் அவைகளைப் படித்தவர்களுக்கு அவனை விட்டுப்பிரிவதாகிய வியாதியை அறுக்கும். அதாவது அவர்கள் அவனுடன் எப்போதும் சேர்ந்திருப்பார்கள்.

குறிப்பு— மழலைச் சொல் என்பது அதில் இந்த எழுத்துக்கள் சேர்ந்திருக்கின்றன என்று நன்றாய்த் தெரியாமல் இனியதாயிருக்கும் சொல்.

இ—ம். இல்லா-இல்லாத, ஈறுகெட்ட பெயரெச்சம். (11)

ரம்யம் துலஸ்யா ஸ்ரிதஜநஸஹிதம் பத்மநேத்ரம் வக்ஷ்ராக்ஷ
தாயா: ஸ்வாமிநம் ஸ்வம் பரம்ஜ்யோதிரிதி கதிதம் ஸ்ரீயா
ஸ்வாதிகீர்த்யா | வக்ஷஸ்யாஸக்தலக்ஷ்மீம் ருசிரவரணைஸ்ஸேவ்யமாநம் ஸ்வ
யாயகாத்யைஸ் ஸௌரேயீவாந் ஸமீபஸ்தம் ஸவ
ஸாவிஸ்ஸம் ஸ்லாக்யம் ஆஹ || ||கO௯||

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆசாரியன் வழியாய்த் தன்னை அடைகிறவனுக்கு நம்பத் தகுந்தவன் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன:— (1) துளஸியினால் அலங்கரிக்கப்படுவதனாய் அழகாயிருப்பது; (2) ஆச்ரிதர்களான பரிஜநங்களுடன் சேர்ந்திருப்பது; (3) தாமரைக் கண்ணனாயிருப்பது; (4) எல்லாருக்கும் ஸ்வாமியாயிருப்பது, (5) பரம் ஜ்யோதிஸ் என்று சொல்லப்பட்டவனாயிருப்பது; (6) பிராட்டியைத் திருமார்பில் வைத்துக்கொண்டிருப்பது; (7) பெரிய கீர்த்தியையுடையவனாயிருப்பது; (8) காயாம்பூவைப்போல் மிகுந்த நீல வர்ணமுள்ளவனாயிருப்பது; (9) திருவாழி முதலான ஆயுதங்கள் உள்ளவனாயிருப்பது; (10) ஸமீபத்திலிருப்பது. (109)

## எட்டாம் திருவாய்மொழி.



அவ— இப்படி ஆழ்வார் தூதர்களை அனுப்பியும் எம்பெருமான் வரவில்லை. துக்கம் மிகுந்து அவன் வருகிறவரையில் பொறுக்காமல் அவன் எழுந்தருளியிருக்கும் திருநாவாய்க்குப் போகவேண்டுமென்று ஆசைப்படுகிறார்:—

(கலிவிருத்தம்)

அறுக்கும் வினையா யினவா கத்தவனை
நிறுத்தும் மனத்தோன் றியசிந் தையினார்க்கு
வெறித்தண் மலர்ச்சோ லைகள்சூழ் திருநாவாய்
குறுக்கும் வகையுண் டுகொலோ கொடியேற்கே. (க)

(ப-ரை) ஆகத்து - (தங்கள்) மனதில், அவனை, நிறுத்தும் மனத்து - நிற்கும்படி செய்யவேணுமென்கிற தீர்மானத்தில், ஒன்றிய - சேர்ந்திருக்கிற, சிந்தையினார்க்கு - எண்ணமுடையவர்களுக்கு, வினையாயின - பாபங்களானவைகளை, அறுக்கும், வெறி-வாஸனையுடைய, தண் - குளிர்ந்த, மலர்சோலைகள் சூழ்-புஷ்பங்களையுடைய சோலைகளால் சூழப்பட்ட, திருநாவாய் - திருநாவாய் என்கிற ஊரை, கொடியேற்கு - பாபம் பண்ணின எனக்கு, குறுக்கும் வகை - கிட்டும் வழி, உண்டு கொல் ஓ - கிடைக்குமோ?

(கருத்து) எவர்கள் எம்பெருமானைத் தங்கள் மனதில் எப்போதும் நிற்கச்செய்யவேணுமென்று தீர்மானித்து அதையே நினைத்துக்கொண்டிருக்கிறார்களோ, அவர்களுடைய பாபங்களின் காரியங்களாகிய எல்லாத் துக்கங்களையும் போக்குவதும், வாஸனையுள்ள குளிர்ந்த புஷ்பங்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்டதுமான திருநாவாய் என்கிற ஊரை, அடையமுடியாதபடி பாபம் செய்த நான், கிட்டுவதற்கு உபாயம் கிடைக்குமோ? அது வராமல் போகுமோ?

இ—ம். குறுக்கும் - குறுகும், விரித்தல் விகாரம். வினை - ஆகுபெயராய் அதின் காரணமான துக்கத்தைச் சொல்லுகிறது.

---

அவ— தம்முடைய பாபரப்பாலே அவ்விடம் போகும் நாள் எப்போது வரும் என்று துடிக்கிறார்—

கோடியே ரிடைக்கோ கனகத் தவள்கேள்வன்
வடிவேற் றடங்கண் மடப்பின் னைமணாளன்
நெடியா னுறைசோ லைகள்சூழ் திருநாவாய்
அடியே னணுகப் பெறுநா ளெவைகொல்லோ. (உ)

(ப-ரை) கொடி ஏர் இடை - கொடிபோன்ற இடுப்பை யுடைய, கோகனகத்தவள் - தாமரைப்பூவிலிருக்கிற பிராட்டிக்கு, கேள்வன் - தகுந்த நாயகனும், வடி - கூர்மையுள்ள, வேல் - வேலைப்போல் நீண்ட, தடம் - விசாலமான, கண்-கண்களையுடைய, மடப்பின்னை - மடப்பம் என்கிற ஸ்வபாவத்தை யுடைய நப்பின்னைக்கு (நீளைக்கு), மணாளன் - நாயகனும், நெடியான் - பெருமையையுடையவனுமான எம்பெருமான், உறை - வஸிக்கிற, சோலைகள் சூழ் - சோலைகளாலே சூழப்பட்ட, திருநாவாய் - திருநாவாயை, அடியேன், அணுகப்பெறும் நாள்-கிட்டும்படியான நாள்கள், எவைகொலோ ?

(கருத்து) கொடிபோல் அழகான இடுப்பையுடைய தாமரைப்பூவில் வஸிக்கிற பெரிய பிராட்டிக்குத் தகுந்த நாயகனும் வேல்போல் கூர்மையுள்ள விசாலமான அழகான கண்களையுடைய நீளாதேவிக்கு நாயகனும், மற்றுமுள்ள மஹிஷிகளுடனும், பரிஜநங்களுடனும் கூடி அளவில்லாத பெருமையையுடையவனுமான எம்பெருமான் வஸிக்கிற சோலைகளால் சூழப்பட்ட திருநாவாயை, அவனுக்கு எல்லாவிதமான கைங்கரியங்களையும் செய்வதற்காகவே ஏற்பட்ட நான் கிட்டுகிற நாள் எதுவோ ? அது இப்போதே வாராதோ ?

குறிப்பு— பிராட்டியைச் சொன்னதின் கருத்து—குற்றம் பண்ணுதவன் எவன் என்று சொல்லிச் சிபார்சு செய்கிற பிராட்டி கிட்ட இருக்கும்போது நான் அந்த ஊரைக் காணப் பெறுமல் இழக்கலாமோ ? என்பது (2)

அவ— கீழ்ப் பாட்டில் அந்த ஊருக்கு போகும் நாள் எது என்று கேட்டார்; அங்கிருக்கும் ஸபையில் எப்போது புகுவது என்று ஆசைப்படுகிறார்:—

எவைகொ லணுகப் பெறுநாளேன் றெப்போதும்
கவையில் மனமின்றி க்கண்ணீர் கள்கலுழ்வன்
நவையில் திருநா ரணன்சேர் திருநாவாய்
அவையுட் புகலாவ தோர்நா ளறியேனே. (ரு)

(ப-ரை) அணுக பெறும் நாள் - அந்த ஊரை கிட்டப் பெறும் நாள்கள், எவைகொல், என்று-எப்போதும், கவையில் - (வேறு) வியாபாரத்தில், மனம் இன்றி - மனம் இல்லாமல், கண்ணீர்கள், கலுழ்வன் - பெருகும்படி இருக்கிறேன், நவை இல் - தோஷம் (ஒன்றும்) இல்லாத, திரு நாரணன் - பிராட்டியோடுகூடிய நாராயணன், சேர் - சேரும், திருநாவாய் அவையுள் - திருநாவாயிலுள்ள ஸபையில், புகலாவது - புகும்படியான, ஓர் நாள் அறியேன்.

(கருத்து) "அந்த ஊரை நான் கிட்டப்பெறும் நாள் எது" என்று இதையே எப்போதும் நினைத்துக்கொண்டு வேறு வியாபாரத்தில் மனதில்லாதவனாய்க் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டிருக்கிறேன். கிட்ட முடியாதவன் என்பது முதலான தோஷங்கள் ஒன்றுமில்லாதவனும் பிராட்டியுடன் கூடியவனுமான நாராயணன் வஸிக்கிற திருநாவாயிலுள்ள ஸபையில் நான் புகும்படியான நாள் எதுவோ? அதை நான் அறியவில்லை, அந்த நாள் எப்போது வரப்போகிறது? (3)

அவ— எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதை ஆசைப்படுகிறார்:—

நாளே லறியே னெனக்குள் ளனநாளும்
மீளா வடிமைப் பணிசெய்யப் புகுந்தேன்
நீளார் மலர்ச்சோ லைகள்சூழ் திருநாவாய்
வாளேய் தடங்கண் மடப்பின்னை மணாளா. (சு)

(ப-ரை) நீள் - நீண்ட, ஆர் மலர்-நிறைந்த புஷ்பங்களையுடைய, சோலைகள் சூழ் - சோலைகளால் சூழப்பட்ட, திருநாவாய் - திருநாவாயிலிருக்கிற, வாள் ஏய் - கத்தியைப் போன்ற, தடம் கண் - விசாலமான கண்களையுடைய, மடப்பின்னை மணாளா - மடப்பத்தையுடைய, நப்பின்னையின் நாயகனே! நாளும்,

மீளா - திரும்புதல் இல்லாத, அடிமைப்பணி - அடிமையான வேலைகளை, செய்ய, புகுந்தேன்-ஆரம்பித்திருக்கிறேன். எனக்கு, உள்ளன-இருக்கிற(அதற்கு நீ ஏற்படுத்தின), நாளேல் - நாள்களை யானால், அறியேன் - அறியவில்லை.

(கருத்து) கைங்கரியம் செய்வதற்கு உபகரணமான புஷ்பங்கள் நிறைந்த விசாலமான சோலைகளால் சூழப்பட்ட திருநாவாயில் கத்தியைப்போல் விசாலமான கண்களையும் மடப்பத்தையுமுடையவளும் தன்னுடைய அழகாலும் ஆத்ம குணங்களாலும் உன்னை வசப்படுத்திக்கொள்ளச் சக்தியுள்ளவளுமான நப்பின்னைக்கும் போக்கியனாய் எழுந்தருளியிருக்கிறவனே! அநாதிகாலமாக ஸம்ஸாரியாக இருந்த நான் நித்யஸூரிகளைப் போலத் திரும்புதலில்லாத உன் கைங்கரியங்களைச் செய்ய ஆரம்பித்திருக்கிறேன். அதற்கு நீ ஏற்படுத்தின நாளை அறியேன்.

குறிப்பு— தேசாந்தரம் போயிருந்து தன் ஊருக்குத் திரும்பிவருகிற குழந்தைகள் தங்கள் தாயாரைப் பலதடவை நினைப்பதுபோல் ஆழ்வாரும் தான் ஆசைப்பட்ட தேசம் கிட்டினபோது தாயார்களான எம்பெருமானுடைய மஹிஷிகளை ஒவ்வொரு பாட்டிலும் நினைக்கிறார்.

இ—ம். மீளா - மீளாத - ஈறு கெட்ட பெயரெச்சம். (4)

அவ— இரண்டாம் பாட்டில் கைங்கரியம் செய்வதற்காக அந்த ஊருக்குப் போகவேணுமென்றார்; அந்த ஊரை அநுபவிக்கவேணுமென்று ஆசைப்படுகிறார்:—

மணாளன் மலர்மங் கைக்குமண் மடந்தைக்கும்
கணாள னுலகத் துயிர்தே வர்க்கெல்லாம்
விணாளன் விரும்பி யுறையுந் திருநாவாய்
கணாரக் களிக்கின்ற திங்கென்று கொல்கண்டே. (ரு)

(ப-ரை) மலர் மங்கைக்கும் - தாமரைப்பூவில் யௌவனத்துடன் இருக்கும் பிராட்டிக்கும், மண் மடந்தைக்கும் - பூமிப் பிராட்டிக்கும், மணாளன் - நாயகனும், உலகத்து-உலகத்திலுள்ள, உயிர் தேவர்க்கு எல்லாம் - தேவர்கள் மனிதர்கள் முதலான எல்லாப் பிராணிகளுக்கும், கணாளன் (கண்ணாளன்) - நிர்வாஹக

னும், விண்ணுளன் (விண்ணுளன்) - வைகுந்தத்தை இருப்பிடமாக உடையவனும் (இருந்து) எம்பெருமான் விரும்பி - (வைகுந்தத்தைக் காட்டிலும்), அதிகப் பிரீதி பண்ணி, உறையும் - வஸிக்கிற, திருநாவாய் - திருநாவாயை, இங்கு - இந்த உலகத்திலே, (இந்த உடம்போடே கூடியிருக்கும்போதே) கண் ஆர - கண்கள் திருப்தி அடையும்படி, கண்டு களிக்கின்றது - ஸந்தோஷப் படுவது, என்று கொல் - எப்போதோ ?

(கருத்து) மலர் மங்கைக்கும் பூமிப் பிராட்டிக்கும் நீளைக்கும் நாயகனும், தேவர்கள் மனிதர்கள் முதலான எல்லாப்பிராணிகளுக்கும் நிர்வாஹகனும் வைகுந்தத்தை இருப்பிடமாகவுடையவனுமான எம்பெருமான் அதிகப் பிரீதி பண்ணிக்கொண்டு வஸிக்கிற திருநாவாயை, இந்த உடம்போடே கூடியிருக்கும்போது, கண்கள் திருப்தியடையும்படி பார்த்து நான் ஸந்தோஷப்படுகிறது எப்போதோ? அந்தக் காலம் இப்போதே வாராதோ ?

குறிப்பு— பிராட்டியையும் பூமியையும் சொன்னது நீளைப் பிராட்டிக்கும் உபலக்ஷணம். (5)

---

அவ:— கீழ்ப்பாட்டில் எம்பெருமானுக்கு விபூதியான ஊரின் அழகை அநுபவிக்க வேணுமென்று சொன்னார்; இதில் அந்த விபூதியையுடைய அவனையே அநுபவிக்கவேணும் என்கிறார். நாலாவது பாட்டில் அவனுக்குக் கைங்கர்யம் பண்ண வேணுமென்றார். இதில் அவனை அநுபவிக்கவேணுமென்கிறார். ஆகையால், முன்சொன்னதை மறுபடியும் சொல்லவில்லை.

கண்டே களிக்கின்ற திங்கென்று கொல்கண்கள்
தொண்டே யுனக்கா யொழிந்தேன் துரிசின்றி
வண்டார் மலர்ச்சோ லைகள்சூழ் திருநாவாய்
கொண்டே யுறைகின்ற வெங்கோ வலர்கோவே. (சு)

(ப-ரை) வண்டு ஆர் - வண்டுகள் நிறைந்த, மலர் சோலைகள் சூழ் - புஷ்பங்களையுடைய சோலைகளாலே சூழப்பட்ட, திருநாவாய் - திருநாவாயை, கொண்டே - இருப்பிடமாக எடுத்துக் கொண்டே, உறைகின்ற - வஸிக்கிற, எம் - எங்களுடைய, கோவலர் கோவே - கோபாலர்களுக்கு ஸ்வாமியே, துரிசு இன்றி -

தோஷமில்லாமல், உனக்கே - உன்னிடத்திலேயே, தொண்டாயொழிந்தேன் - சபலனாக ஆய்விட்டேன்; இங்கே - இந்த ஊரிலேயே, கண்கள், கண்டு - உன்னை அநுபவித்து, களிக்கின்றது - ஸந்தோஷப்படுவது, என்று கொல் - எப்போதோ ?

(கருத்து) வண்டுகள் நிறைந்த புஷ்பங்களையுடைய சோலைகளால் சூழப்பட்ட திருநாவாயை "ஆழ்வாரை வசப்படுத்திக் கொள்ளத்தகுந்த ஊர் இதுதான்" என்று தீர்மானித்து அதையே இருப்பிடமாகக்கொண்டு வஸிப்பவனும் எங்களுக்கு ஸ்வாமியும் கோபாலர்களின் ஸ்வாமியே ! வேறு பிரயோஜநங்களில் ஆசைப்படுவதாகிய தோஷமில்லாதவனாய் உன்னிடத்திலேயே சபலனாயிருக்கிற நான் வைகுந்தத்திற்குப் போகாமல் அந்த ஊரிலேயே உன்னைக் கண்களாலே பார்த்து அநுபவித்து ஸந்தோஷிப்பது எப்போதோ ? அந்த நாள் இப்போதே வாராதோ ? (6)

---

அவ— கீழ் தாம் வேண்டினவைகள் எல்லாம் கிடைக்க வேணுமென்று திருநாவாய் எம்பெருமானைப் பிரார்த்திக்கிறார்-

கோவா கியமா வலியை நிலங்கொண்டாய்
தேவா சுரஞ்செற் றவனே திருமாலே
நாவா யுறைகின்ற வென்நா ரணநம்பி
ஆவா வடியா னிவனென் றருளாயே (எ)

(ப-ரை) கோவாகிய - (இந்திரனைத் தள்ளித் தன்னை) ஸ்வாமியாகப் பண்ணிக்கொண்ட, மாவலியை - மஹாபலியிடமிருந்து, நிலம் கொண்டாய் - உலகங்களை எடுத்துக்கொண்டவனே! தேவாசுரம் - தேவர்களுக்கும் அஸுரர்களுக்குமுள்ள விரோதத்தை, செற்றவனே - நாசம் பண்ணினவனே ! திருமாலே - பிராட்டியினிடம் ஆசையுள்ளவனே, நாவாய் உறைகின்ற - திருநாவாயில் வஸிக்கிற, என் நாரணன் நம்பி - குணங்கள் நிறைந்த என் நாராயணனே ! ஆ ஆ அடியான் இவன் - ஹாஹா இவன் தாஸன், என்று, அருளாய் - கிருபை செய்யவேணும்.

(கருத்து) இந்திரனைத் தள்ளித் தன்னை ஸ்வாமியென்று நினைத்துக்கொண்ட மஹாபலியிடமிருந்து உலகங்களை எடுத்துக் கொண்டு இந்திரனுக்குக் கொடுத்து, ஆச்ரிதர்கள் வேண்டுவதைக் கொடுக்கிறவனே ! அஸுரர்களை நாசம் செய்து அவர்க

ளுக்கும் தேவர்களுக்குமிருந்த விரோதத்தைப் போக்கி ஆச்ரிதர்களுடைய அநிஷ்டங்களைப் போக்குகிறவனே! இப்படி ஆச்ரிதர்களுக்கு இஷ்டத்தைக் கொடுப்பதற்கும் அநிஷ்டங்களைப் போக்குவதற்கும் காரணமாயிருக்கிற பிராட்டியினிடம் மிகுந்த ஆசையுள்ளவனே! திருநாவாயில் எல்லாருக்கும் ஸுலபனாய் எழுந்தருளியிருக்கிறவனே! சொன்ன குணங்கள் நிறைந்தவனும் என்னுடையவனுமான நாராயணனே! "ஐயோ! இவன் நம்மாலேயே ரக்ஷிக்கவேண்டிய தாஸன்" என்று நான் வேண்டினவைகளையெல்லாம் முடித்துத் தந்தருளவேண்டும். (7)

---

அவ— கீழ்ப்பாட்டில் தாம் வேண்டினதை எம்பெருமான் உடனே செய்யாதபடியாலே துக்கப்பட்டு அவனை வெறுக்கிறார்.

அருளா தொழிவா யருள்செய் தடியேனைப்
பொருளாக்கி யுன்பொன் னடிக்கீழ்ப் புகவைப்பாய்
மருளே யின்றியுன் னையென்னெஞ் சத்திருத்தும்
தெருளே தருதென் திருநாவா யென்தேவே. (அ)

(ப-ரை) மருளே இன்றி - அஜ்ஞாநம் கொஞ்சமுமில்லாமல், உன்னை, என் நெஞ்சத்து - என் மனதில், இருத்தும் - இருக்கும்படி செய்கிற, தெருளே - நல்லஜ்ஞாநத்தையே தரு - தந்த, தென் திருநாவாய் - அழகான திருநாவாயில் இருக்கிற, என் தேவே - என்னுடைய தெய்வமே, அருள் செய்து - கிருபை செய்து, அடியேனை, பொருள் ஆக்கி - ஒரு வஸ்துவாகப் பண்ணி, உன் பொன் அடிகீழ்-உன்னுடைய அழகான திருவடியின் கீழே, புக - புகும்படி, வைப்பாய் - வைத்தருள், அருளாது ஒழிவாய் - அப்படிக் கிருபை செய்யாமல் விட்டுவிடு.

(கருத்து) அஜ்ஞாநம் கொஞ்சமுமில்லாமல் என் மனதில் உன்னை இருக்கும்படி செய்து வேறு விஷயங்களைப் பார்க்காமல் உன்னையே கண்ணாலே பார்ப்பதுபோல் மனதாலே பார்த்துக் கொண்டிருக்கும்படி கிருபை செய்திருக்கிறாய். அழகான திருநாவாயில் எனக்கு ப்ராப்யமும் ப்ராபகமாயுமிருக்கிற தைவமே! கிருபை செய்து உனக்கு நித்ய சேஷனான என்னை, திருணம் போல் அலக்ஷியம் செய்யாமல் ஒரு வஸ்துவாகப் பண்ணி, உன்

அழகான திருவடியின் கீழ் புகும்படி செய்; அப்படிச் செய்ய இஷ்டமில்லாவிட்டால், என்னை விட்டு விடு; உனக்கு எது இஷ்டமோ அதைச் செய்.

இ—ம். அருளாது - எதிர்மறை வினையெச்சம். ஒழிவாய் முன்னிலை ஒருமை வினை முற்று. (8)

---

அவ—கீழ்ப்பாட்டில் ஆழ்வார் எம்பெருமானை வெறுத்துச் சொன்னபோதிலும் அவன் அவருக்கு விசேஷ கடாக்ஷம் பண்ணவில்லை. அதினால் துன்பத்தையடைந்து பேசுகிறார்—

தேவர் முனிவர்க் கென்றுங்காண் டற்கரியன்
மூவர் முதல்வ னொருமூ வுலகாளி
தேவன் விரும்பி யுறையுந் திருநாவாய்
யாவ ரணுகப் பெறுவா ரினியந்தோ. (௯)

(ப-ரை) தேவர் - (பிரம்மா முதலான) தேவர்களுக்கும், முனிவர்க்கும் - (ஸநகர் முதலான) ருஷிகளுக்கும், என்றும் - எப்போதும், காண்டற்கு - பார்ப்பதற்கு, அரியன் - முடியாதவன், மூவர் முதல்வன் - (பிரம்மா ருத்திரன் இந்திரன் இந்த) மூன்று பேர்களுக்கும் காரணன், ஒரு - ஒப்பில்லாத, மூ உலகு ஆளி - மூன்று உலகங்களுக்கும் வேண்டியதைக்கொடுக்கிறவன், தேவன் - தன்னுடைய லீலைக்காக உலக வியாபாரங்களைச் செய்கிறவன்,(இப்படிப்பட்ட எம்பெருமான்)விரும்பி - ஆசைப்பட்டு, உறையும் - வஸிக்கிற இடமான, திருநாவாய் - திருநாவாயை, இனி - நான் காணப்பெறாமல் முடிந்தபின்பு, அந்தோ - ஐயோ! அணுக பெறுவார் - கிட்டுகிறவர்கள், யாவர் - யாரோ ?

(கருத்து) பிரம்மா முதலான தேவர்களுக்கும், ஸநகர் முதலான முனிகளுக்கும் கண் முதலான இந்திரியங்களாலே தங்களுடைய யத்நத்தாலேயே எப்போதும் பார்க்கமுடியாதவனும் பிரம்மா ருத்திரன் இந்திரன் ஆகிய மூன்று பேர்களுக்கும் காரணனும் மூன்று உலகங்களில் இருக்கிறவர்களுக்கு வேண்டியதைக் கொடுக்கிறவனும், தன்னுடைய லீலைக்காக உலக வியாபாரங்களைச் செய்கிறவனும் இந்த வியாபாரங்களாலே ஒப்பில்

லாதவனுமான எம்பெருமான் ஆசைப்பட்டு எல்லாருக்கும் ஸுலபனாய் வஸிக்கிற திருநாவாயை ஆசைப்பட்டு அநுபவிக்க பாக்கியமில்லாமல் இழந்த நான் முடிந்த பிறகு கிட்டுகிறவர்கள் எவர்களோ? அவர்கள் மனிதர்கள் அல்ல; நித்தியஸூரிகள் தான்; நான் பாக்யக்குறைவால் அவ்விடம் போவதை இழந்தேன். (9)

---

அவ— இப்படி எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெறுமல் நிராசையாக ஆனபோதிலும், அவனை விடமுடியாமையால் மறுபடியும் கூப்பிடுகிறுர்.—

அந்தோ வணுகப் பெறுநாளென் றெப்போதும்
சிந்தை கலங்கித் திருமா லென்றழைப்பன்
கொந்தார் மலர்ச்சோ லைகள்சூழ் திருநாவாய்
வந்தே யுறைகின்ற வெம்மா மணிவண்ணு. (ம)

(ப-ரை) கொந்து ஆர் மலர் - பூங்கொத்துக்கள் நிறைந்த, சோலைகள் சூழ் - சோலைகளாலே சூழப்பட்ட, திருநாவாய்-திருநாவாயில், வந்தே உறைகின்ற - வந்து வஸிக்கிற, என் - என்னுடைய, மா மணிவண்ணு - மிகவும் இனியதான நீல ரத்நத்தின் நிறத்தையுடையவனே, அணுக பெறும் நாள் - (உன்னை) கிட்டும் நாள், (என்றோ - எப்போதோ) அந்தோ என்று - ஐயோ என்று புலம்பி, எப்போதும், சிந்தை கலங்கி - மனது கலங்கி, திருமால் என்று - பிராட்டியோடு கூடிய ஸ்வாமியே என்று, அழைப்பன்.

(கருத்து) பூங்கொத்துக்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட, திருநாவாயில் வைகுந்தத்திலிருந்து வந்து என்னுடன் சேருவதற்காகவே நிலையாய் வஸிக்கிற மிகவும் இனிய நீலரத்நம் போன்ற காந்தியையுடைய என் ஸ்வாமியே! ஐயோ உன்னைக் கிட்டுகிற நாள் எப்போதோ என்று புலம்பிக்கொண்டு மனது கலங்கி, வருத்தப்படுகிற குழந்தை தாயையும் தகப்பனையும் கூப்பிடுவதுபோல், திருமாலே என்று அழைக்கிறேன்.

குறிப்பு— (1) ஓர் ஊருக்குப் போகிறவன் வழியிலிருக்கும் புல்லுகளைத் தொட்டுக்கொண்டு போவதுபோல் எம்பெருமான் தற்செயலாய் இந்த ஊருக்கு வந்தவன் அன்று. அங்கே

நிலையாயிருப்பதற்காகவே வந்தவன் என்பது 'வந்தே' என்கிற விடத்தில் ஏகாரத்துக்குப் பொருள்.

(2) அணுகப்பெறுநாள் என்று ஆழ்வார் தம்முடைய வியஸநத்தாலே இந்த வாக்கியத்தை முடிக்காமலே சொன்னபடி.

இ—ம். வந்தே ஏகாரத்துக்குப் பிரிநிலைப் பொருள். (10)

---

வண்ணம் மணிமாட நன்னாவா யுள்ளானைத்
திண்ணம் மதிட்டென் குருகூர்ச் சடகோபன்
பண்ணார் தமிழா யிரத்திப்பத் தும்வல்லார்
மண்ணாண் டுமணங் கமழ்வர் மல்லிகையே. (கக)

(ப-ரை) வண்ணம் - (பலவித) வர்ணங்களையுடைய, மணி மாடம் - ரத்நங்கள் இழைக்கப்பட்ட வீடுகளையுடைய, நல் நாவாய் உள்ளானை - மிகவும் இனியதாயிருக்கிற திருநாவாயில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானைக் குறித்து, திண் - திருடமான, அம் - அழகிய, மதிள் - மதிள்களையுடைய, தென் குருகூர் சடகோபன், பண் ஆர் - கானம் நிறைந்த, தமிழ் ஆயிரத்து - ஆயிரம் தமிழ்ப்பாட்டுகளுக்குள்ளே, இபத்தும் வல்லார், மண் - பூமியை, ஆண்டு, மல்லிகை ஏ - மல்லிகைப் பூவைப்போல், மணம் கமழ்வர் - வாஸனை வீசுவர்.

(கருத்து) பலவித வர்ணமுள்ள ரத்நங்கள் இழைத்த வீடுகளையுடைய மிகவும் இனியதான திருநாவாயில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைப் பற்றித் திண்ணம் மதிள்தென் குருகூர்ச் சடகோபன் அருளிச்செய்த கானத்தோடு கூடிய தமிழ்ப் பாட்டுக்கள் ஆயிரத்துள்ளே இந்தப் பத்துப்பாட்டுக்களையும் படிக்கச் சக்தியுள்ளவர்கள் இந்த உலகத்தில் ஐசுவரியத்தை அநுபவித்து, வைகுந்தத்துக்குப்போய் மல்லிகைப் புஷ்பங்கள் போலே பரிசுத்தர்களாகி எம்பெருமானை அநுபவித்துத் தங்களுடைய கீர்த்தியை எங்கும் பரவும்படி செய்வர்கள். (11)

---

𑌵𑌲𑍍𑌲𑍀𑌮𑌧𑍍𑌯𑌾 𑌲𑍋𑌕𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤 𑌶𑍍𑌰𑍀𑌵𑌚𑍋 𑌵𑌾𑌚𑍍𑌯𑌾 [illegible] ॥ ககo ॥

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆச்ரிதர்களின் க்ஷேமத்தையே நினைத்துக்கொண்டிருக்கும் பிராட்டியை மஹிஷியாக உடையவன் என்பது அவளுடைய சில குணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) கொடிபோன்ற இடுப்பையுடையவளாயிருப்பது; (2) உலகத்தில் பிரஸித்தமான ஸ்ரீ என்கிற சொல்லால் சொல்லப்படுவது; (3) பூமியையும் நீளையையும் மற்றுமுள்ள மஹிஷிகளையும் தன்னுடைய விபூதியாக வைத்துக்கொண்டிருப்பது; (4) எம்பெருமான் அவதாரம் செய்யும்போது அவனோடு கூட வருவது; (5) புருஷகாரமாயிருந்து ஆச்ரிதர்களை எம்பெருமானிடத்தில் சேர்ப்பது; (6) நல்ல அறிவைக்கொடுப்பது; (7) பாபத்தைப்போக்குவது; (8) கிட்ட இருப்பது. (110)

# ஒன்பதாம் திருவாய்மொழி.



அவ— கீழ்த் திருவாய்மொழிகளில் ஆழ்வார் தூதர்களை அனுப்பியும், பலவிதமாய் ஆசைப்பட்டு வேண்டியும் எம்பெருமானை உடனே காணப் பெறாமையாலே மிகுந்த வியஸநத்தை அடைந்து, கண்ணனோடு சேர்ந்திருந்து அவன் மாடு மேய்க்கப் போனபோது, அவன் திரும்பி வருவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்த கோபிகை ஸாயங்காலத்தில் மாடுகள் திரும்பிவந்தும், அவன்தோழர்கள் வேணுகாநம் கேட்கப்பட்டும் அவன் வராமலிருந்ததைப் பார்த்து வருத்தப்பட்டுப் பேசினதுபோல் தம்முடைய தசையை இந்தத் திருவாய்மொழியில் பேசுகிறார்.

(2) ஆழ்வார்விஷயத்தில் ஸாயம்காலமாவது அவருடன் எம்பெருமான் சேருவதற்கு மூந்தினகாலம். வேணுகாநம் முதலானவைகள் தம்மைச் சேருவதற்காக வருகிற எம்பெருமானுடைய சங்கத்வநியும், அவன் ஏறி வருகிற கருடனுடைய சிறகுகளின் சப்தமும். இவைகள் ஆழ்வாரை வருத்தப்படுத்துகிறதற்குக் காரணம் அவனை அந்த க்ஷணமே காணப் பெறாமை.

(எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்)

மல்லிகை கமழ்தென்ற லீரு மாலோ
வண்குறிஞ் சியிசை தவரு மாலோ
செல்கதிர் மாலையும் மயக்கு மாலோ
செக்கர்நன் மேகங்கள் சிதைக்கு மாலோ
அல்லியந் தாமரைக் கண்ண னெம்மா
னயர்க ளேறரி யேறெம் மாயோன்
புல்லிய முலைகளுந் தோளுந் கோண்டு
புகலிட மறிகிலந் தமிய மாலோ. (க)

(ப-ரை) மல்லிகை - மல்லிகைப்பூ, கமழ் - வாஸிக்கிற, தென்றல் - தென்னல் காற்று, ஈரும் - (என்னை) பிளக்கிறது. ஆல் ஓ - என்ன கஷ்டம்! வண்-மனதைபிழுக்கும்படியான, குறிஞ்சி இசை-குறிஞ்சி என்கிற கானம், தவரும்-உடம்பைத் துளைக்கிறது, செல் கதிர் - போகிற (அஸ்தமிக்கிற) ஸூரியனையுடைய, மாலையும்-ஸந்தியா காலமும், மயக்கும்-மோஹத்தை உண்டாக்கு

கிறது, செக்கர்-(சிலவிடங்களில்) சிவந்த, நல்-நல்ல, (இந்திர நீல ரத்நம்போல் அழகான), மேகங்கள், சிதைக்கும்-உடம்பைச் செதுக்குகின்றன, அல்லி-அடுக்கான இதழ்களையுடைய, அம்-அழகான, தாமரைக்கண்ணன், எம்மான்-என் ஸ்வாமி, ஆயர்கள் ஏறு-கோபாலர்களுக்குள் சிறந்தவனும், அரி ஏறு-ஸிம்மச்ரேஷ்டனுமான, எம்-எங்களுடைய, மாயோன்-ஆச்சரியமானவன், புல்லிய-நெருக்கிக்கட்டிக்கொண்ட, முலைகளும் - ஸ்தநங்களையும், தோளும் கொண்டு - தோள்களையும் கொண்டு, புகல் இடம் - ஒதுங்குமிடத்தை, அறிகிலம் - அறியச் சக்தியில்லாதவர்களாயிருக்கிறோம், தமியம்-இந்தத் தசையில் துணையில்லாதவர்களாகவிருக்கிறோம்.

(கருத்து) மல்லிகைப் பூவின் வாஸனையைக் கொண்டுவருகிற தென்றல்காற்று என்னைப் பிளக்கிறது. கேட்பார் மனதை இழுக்கும்படியான குறிஞ்சி என்கிற கானம் என் உடம்பைத் துளைக்கிறது. அஸ்தமிக்கப்போகிற ஸூரியனையுடைய ஸந்தியாகாலம் என்னை மயங்கும்படி செய்கிறது. கண்ணனுடன் சேர்ந்திருந்தபோது இன்பத்தைக் கொடுத்த இவைகள் எல்லாம் இப்போது துன்பத்தை உண்டுபண்ணுகின்றன. ஓர் இடத்தில் சிவப்புள்ளதாய் நல்ல நீலரத்நம்போலிருக்கிற ஸந்தியாகாலத்து மேகங்கள் பீதாம்பரத்தால் அலங்கரிக்கப்பட்ட அவனுடைய ரூபத்தை நினைவு மூட்டி, என் உடம்பைச்சிதைக்கிறது. மலர்ந்த அழகான தாமரைப்பூப்போன்ற கண்களையுடையவனும், இந்த அழகாலே என்னையும் கோபர்களையும் அடிமையாக்கிக்கொண்டவனும், இந்த அழகோடு கொழுத்த ஸிம்மம்போலிருக்கிறவனும், என்னுடன் சேர்ந்தபோது மிகவும் ஸுலபனும், ஆச்சரியமுமான கண்ணன் இன்னம் வரவில்லையே. அவனுமேல நெருக்கிக் கட்டிக்கொள்ளப்பட்ட ஸ்தனங்களும் தோள்களும் நான் ஆறியிருந்தாலும் ஆறியிருக்கவில்லையே. அவைகளின் தாபத்தைப்பார்க்க முடியவில்லையே. தென்றல் முதலானவைகள் துன்பப்படுத்தாதபடி அவைகளைக் கொண்டு நான் இருக்கும் இடத்தை அறியவில்லை. நான் தனியாயிருக்கிறேன். இந்த ஸமயத்தில் என்னை ரக்ஷிக்கிறவன் என்னுடன் கூட இருக்கவேண்டாமோ? என்னை இவைகளிடம் காட்டிவிட்டு வாராமலிருக்கிறானே? சக்கிரவர்த்தித் திருமகன் ஸீதையைப் பிரிந்து வருத்தப்படும்போது தம்பியாவது கூட இருந்தான். அப்படி எனக்கு ஒரு துணையுமில்லையே.

குறிப்பு— (1) தென்றல் ஒன்றுமே துன்பப்படுத்துமே, மல்லிகையின் வாஸனையும் சேர்ந்தால், அது என்ன செய்யாது. விஷத்தைப் பூசின கத்தி போலவும், இருபுறமும் கூருள்ள கத்தி போலவும் அது இருக்கிறது. இது த்வக் என்கிற இந்திரியத்தை மாத்திரம் துன்பப்படுத்தவில்லை; வாஸனையினால், க்ராணம் என்கிற இந்திரியத்தையும் துன்பப்படுத்துகிறது.

(2) ஆல் ஓ-இரக்கத்தைக்காட்டும் இடைச்சொற்கள். இரண்டும் சேர்ந்து வந்தது அதின் மிகுதியைக் காட்டுகிறது. 'ஆலோ' என்று ஒவ்வொரு வாக்யத்தில் கடைசியிலும் சொல்லுவதற்கு, ஒவ்வொன்றுமே துன்பப்படுத்தக்கூடும்; எல்லாம் சேர்ந்தால் அவைகள் உண்டுபண்ணும் துன்பத்தை எப்படிப்பொறுக்கலாம்-என்பது கருத்து.

(3) கண்ணனுடைய ஆலிங்கனத்தாலேயே என் ஸ்தநங்களும் தோள்களும் தரித்திருந்தன. அஃதில்லாமல் அவைகள் எப்படியிருக்கமுடியும்?

(4) அல்லி - மலர்ந்த என்பது பூர்வர்களின் வ்யாக்யானம்.

---

புகலிட மறிகிலந் தமிய மாலோ
  புலம்புறு மணிதென்ற லாம்ப லாலோ
பகலடு மாலைவண் சாந்த மாலோ
  பஞ்சமம் முல்லைதண் வாடை யாலோ
அகலிடம் படைத்திடந் துண்டு மிழ்ந்தளந்
  தெங்கு மளிக்கின்ற வாயன் மாயோன்
இகலிடத் தசுரர்கள் கூற்றம் வாரா
  னினியிருந் தென்னுயிர் காக்கு மாறென். (உ)

(ப-ரை) தமியம் - துணையில்லாத நாம், புகல் இடம் அறிகிலம் - (மேலே சொல்லப்போகிறவைகள் துன்பப்படுத்ாதபடி ஒதுங்கியிருக்குமிடத்தை அறியவில்லை. ஆலோ - ஆ! ஆ! புலம்புறு மணி - சப்திக்கிற (காளை மாடுகளின் கழுத்தில் கட்டியிருக்கிற) மணிகளும், தென்றல் - தென்றலும், ஆம்பல் - இலைபால் செய்யப்பட்ட குழல்களும், (என் உடம்பைச் செதுக்குகின்றன); ஆலோ, பகல் அடும் - பகலை நாசம் செய்யும், மாலை - ஸாயங்காலமும், வண் சாந்தம்-(அந்தகாலத்துக்குக்

தருந்த) உயர்ந்த சந்தநமும், (துன்பப்படுத்துகின்றன); ஆலோ, பஞ்சமம் - பஞ்சமம் என்கிற ஸ்வரமும், முல்லை - முல்லைப் பூவும், தண் - குளிர்ந்த, வாடை - வாடைக்காற்றும், (துன் பப்படுத்துகின்றன); இகல் இடத்து - யுத்தபூமியில், அசுரர்கள் கூற்றம் - அஸுரர்களுக்கு யமனும், மாயோன் - ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்கு வேண்டிய ஆச்சரியமான அறிவும் சக்தியுமுள்ளவ னும், அகல் இடம் - (எல்லாரும் இருக்கும்படி) விசாலமானபூமி யை, படைத்து-(உலகங்களுக்கு ஹிதம் செய்ய) உண்டுபண்ணி, இடந்து-(பிரளயவெள்ளத்தில் மூழ்கியிருந்த அதை) மேலேகொ ண்டுவந்து, உண்டு-உமிழ்ந்து, அளந்து-(த்ரிவிக்கிரமனாய்) அளந்து, எங்கும் - (உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று பார்க்காமல்) எல்லா ரையும், அளிக்கின்ற-ரக்ஷிக்கிறவனுமான, ஆயன்-கோபாலன், வா ரான்-வரவில்லை, இனி இருந்து, என் உயிர்-என் பிராணனை, காக் கும் ஆறு என் - ரக்ஷிக்கும் உபாயமென்ன ?

(கருத்து) துணையில்லாதிருக்கிற நான் மேலே சொல்லப்போகிறவைகளாலே துன்பப்படுத்தப்படாமல் ஒதுங்கியிருக்குமிடத் தை அறியவில்லை. காளைமாடுகளின் கழுத்தில் கட்டியிருக்கிற மணிகளின் ஓசையும், தென்றல் காற்றும், இடையர்கள் இலை களைக் குழலாகப் பண்ணிக்கொண்டு செய்கிற கானமும், பகலை நாசம் செய்யும் ஸாயங்காலமும், அந்தக் காலத்துக்குத் தகுந்த உயர்ந்த சந்தனமும், பாடுகிறவர்களுடைய பஞ்சமம் என்கிற ஸ்வரமும், முல்லைப்பூவும், குளிர்ந்த வாடைக்காற்றும் சேர்ந்து என்னைத் துன்பப்படுத்துகின்றன. எல்லாருமிருக்கும்படி விசா லமான இந்தப் பூமியை உண்டுபண்ணி பிரளயஜலத்தில் அழுந்தி இருந்த அதை மேலே கொண்டுவந்து பிரளயகாலத்தில் அதை வயிற்றில் வைத்துக்கொண்டு ரக்ஷித்து, ஸிருஷ்டி காலத் தில் அதை வெளிப்படுத்தி, த்ரிவிக்கிரமனாய் அதையளந்து இப்படிப் பல படியால் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று பார்க் காமல் எல்லாரையும் ரக்ஷிக்கிறவனும், ஆச்ரிதர்களுக்கு விரோதி களான அஸுரர்களை யுத்த பூமியில் நாசம் செய்கிறவனும் ரக்ஷிப்பதற்கும் நாசம் செய்வதற்கும் வேண்டினபடி ஆச்சரிய மான அறிவும் சக்தியுமுள்ளவனுமான கோபாலன் வரவில்லை யே ? இனிமேல் இந்த விரோதிகளின் நடுவிலேயிருந்து என் பிராணனை ரக்ஷிக்கும் உபாயம் என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை.

குறிப்பு— (1) கீழ்ப்பாட்டில் ஒவ்வொன்றும் துன்பப்படுத்தினதைச் சொன்னார். அதினாலேயுண்டான பலக்குறைவாலே எல்லாம் சேர்ந்து துன்பப்படுத்துவதாகச் சொல்லத் தொடங்கி அவர்களின் பெயர்களை மாத்திரம் சொல்லி வாக்கியங்களை முடிக்காமல் விட்டுவிடுகிறார். புலியின் கையில் அகப்பட்டவன் 'புலி பிடித்திருக்கிறது' என்று சொல்லமுடியாமல் "புலி புலி" என்று கதறுவதுபோலிருக்கிறது ஆழ்வார் புலம்புவது.

(2) மாலையில் வீசும் தென்றலும் காலையில்வீசும் வாடையும் சேர்ந்து வரமாட்டா. துன்பம் செய்வதில் இரண்டும் ஒத்திருப்பதால் தென்றலையே வாடையாகப் பிரமித்துச் சொன்னபடி.

(3) பகலில் பிரிந்து வருத்தப்படுகிறவர் ஏதாவது ஒன்றைப் பார்த்து ஆறியிருக்கலாம். அப்படிச் செய்யவொட்டாமல் மாலைக்காலம் பகலை நாசம் செய்துவிட்டது. துணைபாக இருக்கக் கூடிய ஜடாயுவைக் கொன்றுவிட்டு ராவணன் வந்து நின்றதுபோலிருக்கிறது மாலைப் பொழுது.

(4) ஆம்பல் என்கிற சொல்லுக்கு பூர்வர்கள் வியாக்யானத்தை அநுஸரித்துப் பொருள் எழுதப்பட்டது. 'ஆம்பல்' என்பதற்கு குமுதபுஷ்பத்தின் வடிவுள்ளதாய் வெண்கலத்தால் செய்யப்பட்ட வாத்ய விசேஷம் என்று லெக்ஸிகன். (2)

---

அவ— கீழ் இரண்டு பாட்டுக்களில் வெளியிலிருக்குமவைகள் துன்பப்படுத்தினதைச் சொன்னார்; இதில் கண்ணனுடைய அழகு முதலானவைகள் தமக்கு உள்ளே புகுந்து துன்பப்படுத்துவதைச் சொல்லுகிறார்:—

இனியிருந் தென்னுயிர் காக்கு மாறே
 ணிணைமுலை நமுக நுண்ணிடை நுடங்கத்
துனியிருங் கலவிசெய் தாகந் தோய்ந்து
 துறந்தெம்மை யிட்டகல் கண்ணன் கள்வன்
தனியிளஞ் சிங்கமெம் மாயன் வாரான்
 தாமரைக் கண்ணுஞ் செவ்வாயும் நீலப்
பனியிருங் குழல்களும் நான்கு தோளும்
 பாவியென் மனத்தே நின்றீரு மாலோ (௩)

(ப-ரை) கள்வன் - வஞ்சகனும், தனி - ஒப்பில்லாதவனும், இளஞ்சிங்கம் - இளஞ்சிங்கம்போலிருக்கிறவனும், எம்-நம்முடையவனும், மாயன் - ஆச்சரியமானவனும், இணை முலை - ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற ஸ்தனங்கள், நமுக - குழையும்படியும், நுண் - ஸூக்ஷ்மமான, இடை - இடுப்பு, நுடங்க - துவளும்படியும், துனி-துக்கத்தைச் செய்கிற, இரும் கலவி-பெரிய ஸம்ச்லேஷத்தை, செய்து, ஆகம் தோய்ந்து - (என்) உடம்பில் முழுகி, எம்மை, துறந்து - விட்டு, இட்டு - (திருணத்தைப் போல) எறிந்துவிட்டு, அகல் கண்ணன் - பிரிந்துபோகும் ஸ்வபாவமுள்ளவனுமான கண்ணன், வாரான் - வருகிறானில்லை. தாமரைக் கண்ணும், செவ்வாயும், நீலம் - நீலமான, பனி - குளிர்ந்த, இரும் - மிருந்த, குழல்களும் - தலைமயிர்களும், நான்கு தோளும், பாவியேன் - பாவம் பண்ணின என்னுடைய, மனத்தே - மனதில், நின்று - நிலையாயிருந்து, ஈரும் - பிளக்கின்றன, ஆலோ - ஐயோ கஷ்டம்! இனி - இருந்து, என் உயிர்- என் பிராணனை, காக்கும் ஆறு - ரக்ஷிக்கும் உபாயம், என் - என்ன ?

(கருத்து) இளஞ்சிங்கம்போல் மிருதுவாயும் சூரனாயும் இனியவனாயும் அழகாயுமிருக்கிற கண்ணன் என்னுடன் சேர்ந்த காலத்திலே குளிர்ந்த பார்வையாலும் மதுரமான பேச்சாலும் மற்ற செய்கைகளாலும் எனக்குள்ளவைகள் எல்லாவற்றையும் அபஹரித்துக்கொண்டான். அப்போது என்னைவிட்டுப் பிரியாதவன்போல் மிகுந்த ஆசையைக் காட்டி, ஆச்சரியமாயிருந்தான். என்னுடன் சேர்க்கையாலே அளவில்லாத ஆநந்தத்தை அடைந்து ஒப்பில்லாதவன்போல் தன்னைக் காட்டினான். இவைகளாலே என்னை வசப்படுத்திக்கொண்டு எனக்குப் பிராணனாயிருந்து, ஒன்றோடொன்று சேர்ந்து நெருங்கியிருக்கிற ஸ்தநங்கள் குழையும்படியும் ஸூக்ஷ்மமானஎன் இடுப்பு துவளும்படியும், பின்னால் பிரிவினால் துக்கத்தைக் கொடுக்கக்கூடியதான பெரிய ஸம்ச்லேஷத்தைச் செய்து, என் உடம்பில் மூழ்கி, என்னைவிட்டுப் பிரிந்து ஒரு திருணத்தை எறிந்துவிடுவதுபோல் விட்டுவிட்டுப் போய்விட்டான். இப்படிப் பிரிவதே அவனுக்குஸ்வபாவமாயிருக்கிறது. அவன் சேருவது எப்போதோ ஒரு ஸமயத்தில் உண்டாகும். பிரிவதே அவனைக் காட்டும் இயற்கையான குணம். பிரி

விலேயே அவனுக்கு நோக்கு, அதற்காகத்தான் சேருகிறது. அவன் வரவில்லை. அவன் என்னைவிட்டுப் பிரியும்போது, என்னை விடமாட்டாதபடி ஆசையுள்ளவன்போல் பார்த்த தாமரைக் கண்களும், போய்வருகிறேன் என்று சொல்லமுடியாமல் பிரிதியாலே துடித்து அதினாலே கோவப்பழம்போல் சிவந்த திருப்பவளமும், திருமேனியிற் காட்டிலும் அதிக நீலமும், மிகவும் மிருதுவும், சேர்ந்திருக்கும்போது சேர்க்கையாலும் பிரிகையில் வருத்தத்தாலும் கலைந்துபோனதுமான தலைமயிர்களும், இப்படிப்பட்ட தலைமயிர்களால் அலங்காரம் செய்யப்பட்டு என்னை நெருக்கிக்கட்டிக்கொண்ட நான்கு தோள்களும், என்னுடைய மனதில் நிலையாயிருந்து என்னைப் பிளக்கின்றன. அவன் என் கண்க்கு விஷயமாகாமலிருப்பதுபோல் இவைகள் என் மனதுக்கு விஷயமாகாமலிருக்கக்கூடாதோ? அவைகளை மறப்போமென்றால், மறக்க முடியவில்லை. அவைகளை மறக்கமுடியாதபடி பாபம் செய்திருக்கிறேன். இப்படி இறந்தவனைப் பிழைப்பு மூட்டும் படியான மருந்துபோல் இருக்கிற அவன் அழகே என்னை இப்படி ஹிம்ஸித்தால் அவனைக் காணப்பெறாதபோது நான் ஒரு வஸ்துவாக இருந்துகொண்டு என் பிராணனை ரக்ஷித்துக்கொள்ளும் உபாயம் என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை.

குறிப்பு— (1) "இணைமுலை" என்பதற்கு, முத்து மாலைக்கு இடமில்லாதபடி நெருங்கி ஒன்றோடொன்று சேர்ந்திருந்தன என்பது பொருள். இதைத் தானே சொல்லமாட்டாளாகையால், அவன் சேர்ந்திருந்தபோது ஸ்தனங்களின் சேர்த்தியின் அழகை அவன் சொல்லிச் சொல்லி அநுபவித்ததை அநுவாதம் பண்ணினபடி.

இதற்கு வேறு விதமாயும் பொருள் கொள்ளலாம்— இவைகள் அவனுக்கு மிகவும் இனியவைகளாயிருந்தன என்கிற ப்ரீதியாலும், இனிமேலும் அவனுக்கு அப்படியேயாகவேண்டுமென்கிற ஆசையாலும் அவைகளைக் கொண்டாடுகிறார்—என்று. ஆழ்வாருடைய ஸ்தனங்களாவன—ஜ்ஞாநமும், பக்தியும். நமுக - (குழைய) என்பது தங்களுக்குள்ள கடினமாயிருப்பதைப்பதை இழப்பது.

(2) 'ஆகம் தோய்ந்து' என்பதற்கு, தன்னுடைய லீலைகளாலே தம்மை நீராக்கிக் கோடைகாலத்தில் ஜலத்தில் முழுகு

கிறவன்போல அதில் முழுகியிருந்தான் என்பது (அதாவது அவன் வேறு நான் வேறு என்று அறியமுடியாதபடி நெருக்கி ஆலிங்கனம் பண்ணிக்கொண்டான் என்பது) கருத்து.

(3) மிகவுமுயர்ந்த யோகிகளால் வாக்காலும் மனதாலும் எட்டமுடியாதவன்; மிகவும் மங்களமானவன்; தேவர்களிடத்திலும் மனிதர்களிடத்திலும் காணமுடியாதபடி அழகையும், கெட்டிக்காரத்தனத்தையும், இனியவனாயிருப்பதையும் ஸௌசீல்யம் என்கிற குணத்தையுமுடையவன்; எல்லாருக்கும் மேற்பட்ட தைவம். இப்படி உயர்ந்தவன், தாழ்ந்த தம்முடன்சேர்ந்து இந்த லீலைகளைச் செய்தால் இதைக்காட்டிலும் வேறு உயர்ந்த புருஷார்த்தம் என்ன இருக்கிறது? அதை ஒரு க்ஷணமிழந்தாலும் அதைக்காட்டிலும் வேறு கொடுமையான துக்கம்தான் எது? என்கிற கருத்துடன் இடப்பெண்ணாகத் தம்மை பாவித்து ஆழ்வார் வாயைவிட்டுச் சொல்லி அலற்றுகிறார்.

(4) கம்ஸன்வதம் வரையில் இரண்டு திருக்கைகளையுடையவனாகத் தோன்றினபோதிலும் கோபிகளுடன் சேரும்போது நான்கு திருக்கைகளுடனிருந்தான் என்பது 'நான்கு தோளும்' என்பதால் காட்டப்படுகிறது. (3)

---

அவ— எம்பெருமானுடைய திருக்கண்கள் முதலானவைகள் மனதில் துன்பத்தையுண்டாக்கின என்பது மாத்திரமன்று. இவைகளோடுகூட வெளியிலிருக்கும் வஸ்துக்களும் துன்பப்படுத்துகின்றன என்று சொல்லுகிறாள்:—

பாவியேன் மனத்தே நின்றீரு மாலோ
வாடைதண் வாடை வெவ்வாடை யாலோ
மேவுதண் மதியம் வெம்மதிய மாலோ
மென்மலர்ப் பள்ளி வெம்பள்ளி யாலோ
தூவியம் புள்ளுடைத் தெய்வ வண்டு
துதைந்த வெம்பெண்மை யம்பூவி தாலோ
ஆவியின் பரமல்ல வகைக ளாலோ
யாமுடை நெஞ்சமுந் துணையன் றாலோ. (௪)

(ப-ரை) பாவியேன் மனத்தே - பாபங்கள் செய்தவனுடைய மனதில், நின்று - நிலையாயிருந்து, ஈரும்

பிளக்கும் (கீழே சொன்னவைகள் துன்பப்படுத்தும்), தண் - குளிர்ந்த, வாடை வாடை - வாடை என்கிற காற்று, (இப்போது), வெம் வாடை - உஷ்ணமான காற்றாய்விட்டது, மேவு - (எல்லாராலும்) விரும்பப்படும், தண் - (அவர்களுக்கு) குளிர்ந்த, மதியம் - சந்திரன், வெம் மதியம் - உஷ்ணமான சந்திரனாக ஆகிவிட்டான். மெல் - மிருதுவான, மலர் பள்ளி - புஷ்பங்களாலே செய்யப்பட்ட படுக்கை, வெம் பள்ளி - உஷ்ணமான படுக்கையாக ஆயிற்று, அம் தூவி - அழகிய சிறகுகளையுடைய, புள்ளுடை - பக்ஷியான கருடனையுடைத்தான, தெய்வ வண்டு - தெய்வமான வண்டு, எம் பெண்மை - நம்முடைய பெண்தன்மையாகிற, அம் பூ-அழகிய புஷ்பத்தை, துதைந்த இது - கசக்கின இது (இப்படி அநுபவித்த), வகைகள்-என்னைத் துன்பப்படுத்துகிற விதங்கள், ஆவியின் பரமல்ல - என் ஆத்மாவாலே தாங்கமுடிந்த பாரமல்ல, யாமுடை நெஞ்சமும் - நம்முடைய மனதும் கூட, துணை அன்று-துணையாக இருக்கவில்லை, ஆலோ - ஐயோ கஷ்டம்.

(கருத்து) பாபம் செய்த என்னுடைய மனதில் நிலையாயிருந்து கீழ்ச் சொன்னவைகள் துன்பப்படுத்தின என்பது மாத்திரமன்று; வெளியிலிருப்பவைகளும் துன்பப்படுத்துகின்றன. வடக்கிலிருந்து வரும் குளிர்ந்த வாடைக்காற்று எல்லாராலும் தாபத்தைப்போக்குவதற்காக இனியதாய் அநுபவிக்கப்படுகிறதே, அது இப்போது என்னைக் கொளுத்துகிறது. எல்லாரும் தாபம் போவதற்காக ஆசைப்பட்டு நிலாவில் படுக்கிறார்களே. நான் வாடைக்காற்றாலேயுண்டான தாபம் போவதற்காக நிலாவில் படுக்கப்போனேன். அதுவும் எனக்கு இப்போது விபரீதமாயிருக்கிறது. சந்திரன் அவனுடைய மனதிலிருந்து உண்டானபடியாலே அவன் மனதின் குணம் அவனுக்கும் வந்துவிட்டதோ ? இவைகளுக்குப் பயந்து புஷ்பங்களால் செய்யப்பட்ட குளிர்ந்த மிருதுவான படுக்கையில் படுக்கப்போகையில் அதுவும் தணலால்செய்யப்பட்ட படுக்கை போலிருக்கிறது. ஒரு வண்டு வந்து புஷ்பங்களுக்குள்ளே குடைந்து அவைகளைக் கசக்கி அநுபவிப்பதுபோல், கண்ணன் பொன்போல் அழகாக விளங்கும் இரண்டு சிறகுகளையுடைய பக்ஷிராஜன்மேல் எழுந்தருளி ஸ்திரீகளுக்கே உள்ளவைகளான ஸ்தனங்களையும் மிகவும் மிரு

துவாயும் அழகாயுமிருக்கிற மற்ற என் அவயவங்களையும் கசக்கி அநுபவித்தான். இப்படி அவன் செய்த வியாபாரங்கள் என்னாலே தாங்கமுடியுமோ? துணையிருந்தால் ஒருவேளை தாங்கலாம். அதுவும் இந்த தசையில் இல்லை. எனக்குத் துணையாக என்னுடன்கூட இருக்கவேண்டிய மனமே என்னை விட்டு அவனிடம் போயிற்று. வேறு யார் துணை.

குறிப்பு— (1) எம்பெருமானை வண்டாகச் சொன்னதின் கருத்து- வண்டுக்குள்ள நீலகாந்தி அவனுக்குமிருக்கிறது. வண்டு புஷ்பங்களிலிருந்து ஸாரமான தேனை எடுத்துக்கொள்வதுபோல் அவனும் ஸாரமில்லாததை விட்டு ஸாரத்தை எடுத்துக்கொள்கிறான்; அவன் ஸாரஜ்ஞனாயிருக்கிறான்; குணமுள்ள வஸ்துக்களை ரஸம் தெரிந்து அநுபவிக்கிறவன், இனியபேச்சுக்களைப் பேசும் ஸ்வபாவமுள்ளவன்; வண்டு புஷ்பங்களைத் தேடிக்கொண்டு அவைகளிருக்கிற இடத்தில் வருவதுபோல் போக்கியமான வஸ்துக்களைத் தேடிக்கொண்டு அவைகளிருக்குமிடம் அவன் வருகிறவன்; மிகுந்த ஆசையாலே ஸாரத்தை எடுத்துக்கொண்டு தம்மை அநுபவித்தவன், வண்டு தேனைக்குடித்துவிட்டு வனத்தில் பறப்பதுபோல் தம்மை அநுபவித்து வேறு இடங்களுக்குப் போய்விட்டான். சஞ்சலனாயிருப்பதாலே தம்முடன் நிற்காமல் மற்றக் கோபிகைகளிடத்தில் போகிறவன், இப்படிப்பட்ட ஸ்வபாவமுள்ளவன்— என்பது.

(2) ஆழ்வாருடைய பெண்மையைப் புஷ்பமாகச் சொன்னதின் கருத்து— இங்கே பெண்மையாவது- ஸ்திரீகளுக்கேயுள்ள ஸ்தனங்களும் மற்ற அவயவங்களும். அவைகள் மிருதுவாயும், நல்ல வாஸனையையும் விலக்ஷணமான காந்தியையும் உடையவைகளாயும், புஷ்பங்கள் வண்டுக்காகவே இருப்பதுபோல் அவனுக்காகவே இருப்பவைகளாகவும், அவனால் தனக்கு தாரகமாகவும் போஷகமாயும் போக்கியமாயும் எண்ணப்பட்டவைகளாயும், தாபத்தைப் பொறுக்கமுடியாதவைகளாயும் இருக்கின்றன—என்பது.

(3) 'பாவியேன்' என்பதற்கு எல்லாருக்கும் அநுகூலமாயிருக்கிறவைகளே தமக்குப் பிரதிகூலங்களாக ஆகும்படி பாபம் பண்ணியிருக்கிறேன் என்பது கருத்து. (4)

அவை— தமக்கு அநுகூலமாகவே இருக்கவேண்டியவைகள் இப்போது தங்கள் தங்கள் ஸ்வபாவங்களை விட்டு விட்டு பிரதிகூலங்களாக ஆய்விட்டன என்று சொல்லுகிறார்—

யாமுடை நெஞ்சமுந் துணையன் றுலோ
ஆபுகு மாலையு மாகின் றுலோ
யாமுடை யாயன்றன் மனங்கல் லாலோ
அவனுடைத் தீங்குழ லீரு மாலோ
யாமுடைத் துணையென்னுந் தோழி மாரு
மெம்மில்முன் னவனுக்கு மாய்வ ராலோ
யாமுடை யாருயிர் காக்கு மாறென்
அவனு டையருள் பெறும்போ தரிதே (ரு)

(ப-ரை) யாமுடை நெஞ்சமும் - நம்முடைய மனதும், துணை அன்று - நமக்குத் துணையாக இல்லை. ஆ - மாடுகள், புகு - (காட்டிலிருந்து வந்து தங்களுடைய வீடுகளில்) நுழையும்படியான, மாலையும் - ஸந்தியாகாலமும், ஆகின்று - வந்துவிட்டது, யாமுடை - நம்முடைய. ஆயன் தன் - கோபாலனுடைய, மனம், கல் - வஜ்ரக்கல்லாக ஆகிவிட்டது. அவனுடை - அந்த கோபாலனுடைய, தீம் குழல் - இனிய வேணு, ஈரும் - நம்மைப் பிளக்கிறது, யாமுடை - நம்முடைய, துணை என்னும் - துணையென்று எண்ணிக்கொண்டிருக்கிற, தோழிமாரும், அவனுக்கு - அவன் பொருட்டு, எம்மில் முன் - எங்களுக்கு முன்னாலே, மாய்வர் - முடிந்துபோகிறார்கள், அவனுடை அருள் - அவனுடைய கிருபையை, பெறும் போது - நாம் அடையும் காலம், அரிது - அருமையாயிருக்கிறது, யாமுடைய - நம்முடைய, ஆர் உயிர் - உடம்பில் வியாபித்திருக்கிற ஆத்மாவை, காக்கும் ஆறு என் - ரக்ஷிக்கும் வழி எது ?

(கருத்து) என்னதாகையாலே இயற்கையாக எனக்குத் துணையாயிருந்து உதவவேண்டிய மனது எனக்கு உட்பட்டிருந்த கண்ணனைப் போலத் துணையல்லாததாகிவிட்டது. நான் அதை என்னது என்று எண்ணினதே துணையாக ஆகாமலிருப்பதற்கும் காரணமாய்விட்டதே. எனக்கு உபாயமாயிருக்கவேண்டியதே எனக்கு அபாயமாய் ஆகிவிட்டதே. இது நிற்க, மாடுகள் வீட்டுக்கு வருகிற ஸந்தியாகாலமும் உடனே வரவேணுமோ? தீனை

யான என்னிடத்தில் கிருபை பண்ணிப் பொறுத்து வரக்கூடாதோ? என்னைவிட்டுப் பிரியமுடியாதபடி எனக்கு உட்பட்டு இருப்பதே ஸ்வபாவமாக உள்ள கோபாலனுடைய மனது இப்போது வஜ்ரம்போலக் கடினமாய் என்னை விட்டுப்பிரிந்தும் திடமாய் விரஹதாபத்தை வளரும்படி செய்கிற வஸ்துக்களைப் பார்த்தும் உருகாமலிருக்கிறதே; அவன் மனது கடினமாகாவிட்டால், இந்த ஸந்தியாகாலத்தைப் பார்த்தவுடன் என்னைப் போல நீராயுருகி இங்கே பதறிக்கொண்டு வரமாட்டானோ? பூவைப்போல் மிருதுவான அவன் நெஞ்சு வஜ்ரத்தைக்காட்டிலும் கடினமாய் முடிந்ததே. கல்லை அஹல்யையென்கிற பெண்ணாக ஆக்கினவன் மனதே கல்லானால், அதை எவர் மிருதுவாகப் பண்ணக்கூடும்? "பகல் எல்லாம் உன்னுடைய முகமாகிய சந்திரனை நான் காணாமல் சகோர பக்ஷியைப்போலவே தபித்துக்கொண்டிருக்கிறேன். இவ்வளவு தாமதமுண்டானபடியாலே உன்னுடைய அநுக்கிரஹத்தோடு கூடின ஆலிங்கனத்தை இழந்துவிடுவேனோ என்று பயப்படுகிறேன். நான் ஸ்வதந்திரனோ? தகப்பனுக்கு உட்பட்டவனன்றோ? ஆகையால், உன் மனதின்படி என்னால் நடக்கமுடியவில்லை. ஆகலால், ஸரளமான மனதையுடைய நீ என்னிடத்தில் தயை பண்ணவேணும்" என்று இந்தப்பொருளுள்ள பாட்டுக்களை வேணுவிலே கானம் செய்து என் காதுகளுக்கு ஒவ்வொரு ஸாயங்காலமும் அம்ருதத்தை வர்ஷிக்கிறவனுடைய கானம் இப்போது கேட்கப்படவில்லையே. அது இப்போது நினைக்கும்பொழுது பீடிக்கிறதே. அவனிடத்தில் ஆசையற்றவளாய் அவன் மனதுகல்லாய்விட்டதென்று நிர்மானம் பண்ணவும் அது விடுகிறதில்லை. எனக்குத் துணையாக இருப்பவர்களாகத் தங்களை எண்ணிக்கொண்டிருந்த தோழிமார்களும் அவன் வாராமல் நான் வருத்தப்படுவதைப் பார்த்து, எனக்கு முன்னாலே முடிந்துபோவார்கள் போலிருக்கிறார்கள். அவன் கிருபையை அடைவது துர்லபமாயிருக்கிறது. இந்தத்தசையில், இந்த உடம்பில் வியாபித்திருக்கும் என் ஆத்மாவை முடிந்துபோகாமல், ரக்ஷிப்பதற்கு என்ன உபாயமிருக்கிறது? ஒன்றையும் காணேன்.

இ—ம். ஆகின்று - ஆகின்றது. நிகழ்கால வினைமுற்று. என்னில் - இல் ஐந்தாம்வேற்றுமை உருபு. "போகுகிறதே" என்

றே புஸ்தகங்களில் பாடமிருக்கிறது. 'றீதே என்று இருந்தால் ஓசை குறையாது. அது நீட்டல் என்னும் செய்யுள் விகாரமாம்.

---

அவ— அநுகூலமாக இருக்கவேண்டிய எம்பெருமானுடைய ஸௌசீல்யம் என்கிற குணமும் பிரதிகூலமாக ஆகிவிட்டது என்று சொல்லுகிருள்—

அவனு டையருள் பெறும்போ தரிதா
லவ்வரு ளல்லன வருளு மல்ல
அவனருள் பெறுமளவ வாவி நில்லா
தடுபகல் மாலையும் நெஞ்சும் காணேன்
சிவனொடு பிரமன்வண் டிருமடந்தை
சேர்திரு வாகமெம் மாவி யீரும்
எவமினிப் புகுமிட மெவன்செய் கேனோ
ஆருக்கென் சொல்லுகே னன்னை மீர்காள் (௬)

(ப-ரை) அவனுடை அருள் - அவனுடைய கிருபையையும் அதின் காரியங்களையும், பெறும் போது-நாம் அடையும் காலம், அரிது - அருமையாயிருக்கிறது. அ அருள் அல்லன - அவன் கிருபையைத்தவிர வேறு கிருபைகள், அருளும் அல்ல - (என் பிராணனை)ரக்ஷிக்கும் ஸாதனங்கள் அல்ல, அவன் அருள் பெறும் அளவு - அவன் கிருபையை அடைகிற வரையில், ஆவி - ஆத்மா, நில்லாது - நிற்காது, பகல் அடும் - பகலை நாசம் செய்யும், மாலையும் - ஸந்தியாகாலமும் (வந்தது), நெஞ்சும் காணேன்-மனதையும் பார்க்கவில்லை. சிவனொடு பிரமன் - சிவனும் பிரம்மாவும், வண் - நல்ல குணங்கள் நிறைந்த, திரு மடந்தை - பிராட்டியான பெண்ணும், சேர் - சேர்ந்திருக்கிற, திரு ஆகம் - திருமேனி, எம் ஆவி - என் ஆத்மாவை ஈரும் - பிளக்கிறது, இனி, புகும் இடம் - ஒதுங்குமிடம், எவம் - நாம் எதையுடையவர்கள்? எவன்செய்கேன் - எதைச்செய்வேன்? அன்னைமீர்காள்-தாய்மார்களே! ஆருக்கு - யாருக்கு, என் சொல்லுகேன் - எதைச் சொல்வேன்?

(கருத்து) கண்ணனுடைய கிருபையையும், அதின் காரியங்களையும், நான் அடைகிற காலம் துர்லபமாயிருக்கிறது. அது பிருந்தாவனத்திலிருந்த மரங்களுக்கும் திருணங்களுக்கும் ஸுல

பமாயிருந்தது; எனக்கு மாத்திரம் அப்படியில்லை. அவனுடைய கிருபையை அடைகிற வரையில் பந்துக்கள்ஸமாதானம் சொல்லு கிற சொற்களைக்கொண்டு பிழைத்திருக்கலாமே என்றால், அவை கள் என் பிராணனை ரக்ஷிப்பதற்கு ஸாதனங்கள் அல்ல. அவைகள் என் தாபத்தைக் குறைக்கிறவைகள் அல்ல. வெய்யிலால் தாபம் அடைந்தவனுக்கு நெருப்புப் பொறி களைப் போலிருக்கின்றன. அவனுடைய கிருபை அவசியம் வருமாகையால் அதுவருகிற வரையில் பொறுத்திருக்கலா மே என்றால், அதுவரையில் என் ஆத்மா உடம்பில் நிற் காது. ஆகையால், ஏதாவதொன்றைப் பார்த்து ஆறியிருக்க லாமே என்றால், அப்படிச்செய்யக்கூடிய பகலேமுடித்துக்கொண்டு ஸாயங்காலமும் வந்து விட்டது. இப்போது எனக்குத் துணை யாக இருக்கவேண்டிய மனதையும் காணேன். எல்லா நல்ல குணங்களும்நிறைந்தவளும் அவனுக்கு அளவில்லாத ஸம்பத்தும் ஸ்திரீகளுக்குள்ளே மிகவும் உயர்ந்தவளும் ஆன பெரிய பிராட்டியைத் தன் திருமேனியில் வைத்துக்கொண்டிருப்பது போல், வேறுபிரயோஜனங்களில் பற்றுள்ளபிரம்மாவையும் சிவனை யும் தன் திருமேனியில் வைத்துக்கொண்டிருக்கிறானே. இந்த ஸௌசீல்யம் என்கிற குணமுடையவன் வேறு பிரயோஜனத் தைத் தேடாமல் அவனையே பிராப்யமாக எண்ணிக்கொண்டிருக் கிற எனக்குத் துர்லபனாயிருக்கிறானே. நினைக்கும்போது அந்தக் குணமே என்னைத் துன்பப்படுத்துகிறது, ஆனால், அவனை நினைப்பு மூட்டுகிற இடங்களிலில்லாமல் வேறு இடத்தில் ஒதுங் கியிருக்கலாமே என்றால், அவ்விதமான இடத்தைக்காணேன். வேறு உலக வியாபாரங்களை நினைத்துக்கொண்டிருக்கலாமே என் றால், அவ்விதமான வியாபாரத்தை ஒன்றையும் நான் காணேன். முன் நடந்த சேர்க்கையை யாருடனாவது பேசிக்கொண்டிருக்க முடியாதா என்றால், யாருடன் பேசுவேன்? தோழிகள் மூர்ச் சையையடைந்தவர்கள்போலிருக்கிறார்கள்; ஊரார் வேறு விஷயங் களில் மனதை வைத்திருக்கிறவர்கள். தாய்மார்களே! நீங்களோ நான் துக்கப்படுகிற விதத்தை அறியவில்லை. அதைச் செய்; இதைச் செய்யவேண்டாம் என்று மாத்திரம் கட்டளையிடு கிறீர்கள். இதை நானே அநுபவிக்கவேண்டியதாயிருக்கிறது. வேறு ஒருவருக்கும் இதைச் சொல்லச் சொற்களில்லை.

குறிப்பு— பாட்டில் 'அருள்' என்பதற்குக் கிருபை என்பது பொருள். அது கிருபையையும் அதின் காரியங்களையும் சொல்லுகிறது. அந்தக் காரியங்களாவன— தம்மை எம்பெருமான் குளிரக் கடாக்ஷிப்பதும், மதுரமாகப் பேசுவதும், ஆலிங்கநம் பண்ணிக்கொள்வதும்.

இ—ம். எவம் - தன்மைப்பன்மை குறிப்பு வினைமுற்று. எவன் என்பது குறிப்பு வினா வினைமுற்று; யாது என்பது அதன் பொருள். எவம் என்றும் பாடமுண்டு. (6)

---

ஆருக்கென் சொல்லுகே னன்னை மீர்கா
 ளாருயி ரளவன்றிக் கூர்தண் வாடை
காரொக்கு மேனிநங் கண்ணன் கள்வம்
 கவர்ந்தவத் தனிநெஞ்ச மவன்க ணஃதே
சீருற்ற வகிற்புகை யாழ்ந ரம்பு
 பஞ்சமந் தண்பசுஞ் சாந்த ணைந்து
போருற்ற வாடைதண் மல்லி கைப்பூப்
 புதுமண முகந்துகொண் டெறியு மாலோ (எ)

(ப-ரை) கார் ஒக்கும் - நீலமேகத்தை ஒத்திருக்கிற, மேனி - திருமேனியையுடைய, நம் கண்ணன் - நம்முடைய கண்ணனுடைய, கள்வம் - கிருத்திம வியாபாரங்களாலே, கவர்ந்த - அபஹரிக்கப்பட்ட, தனி - என்னை விட்டுத் தனியே போயிருக்கிற, அ நெஞ்சம் - அந்த மனது, அவன்கணஃதே - அவனிடத்திலேயே இருக்கிறது, கூர் - மிகவும் வளர்கின்ற, தண் - (மற்றவர்களுக்குக்) குளிர்ந்திருக்கிற, இ வாடை - இந்த வாடைக் காற்று, ஆர் உயிர் - உடம்பில் வியாபித்திருக்கிற ஆத்மாவின், அளவு அன்று), ஆத்மாவைக் கொல்லுவதற்கு எவ்வளவு வேண்டுமோ அதுக்கு மேல் வேலை செய்கிறது. எப்படியென்றால்), சீர் உற்ற- (நல்ல வாஸனையாகிய) ஸம்பத்தோடு கூடிய, அகில் புகை - அகில் புகையையும், யாழ் நரம்பு - வீணையின் தந்தியினுடைய, பஞ்சமம் - பஞ்சமம் என்கிற ஸ்வரத்தையும், தண்-குளிர்ந்த, பசும் - ஈரமான (புதிதான), சாந்து - சந்தனத்தையும், அணைந்து - தழுவிக்கொண்டு, போர் உற்ற - சண்டைக்கு வந்த, வாடை- வாடைக்காற்று, தண் - குளிர்ந்த (ஊராருக்குச்சிரமத்தைப்போக்குகிற),மல்லிகைப்பூ-மல்லிகைப்பூவினுடைய, புது மணம் - புதிய

வாஸனையை, முகந்து கொண்டு - எடுத்துக்கொண்டு, எறியும் - வீசுகிறது, ஆலோ - ஐயோ கஷ்டம், அன்னைமீர்காள் - தாய்மார்களே! ஆருக்கு என் சொல்லுகேன் - யாருக்கு எதைச் சொல்லுவேன்?

(கருத்து) கண்ணன் என்னுடன் சேர்ந்திருக்கிற காலத்தில் நீலமேகம் போன்ற திருமேனியின் அழகாலும், பிரீதியுள்ளவன் போல் தன்னைக் காட்டிக்கொண்டு அவன் செய்த வியாபாரங்களாலும், அபஹரிக்கப்பட்டு, எனக்குத் துணையாக இருக்க வேண்டிய என் மனது அவனிடம் போய் அவனிடத்திலேயே நின்றுவிட்டது. எல்லாருக்கும் குளிர்ந்ததாயிருக்கிற வாடைக் காற்று, பலமுள்ளதாய் வளர்ந்து என் உடம்பில் வியாபித்திருக்கிற ஆத்மா தாங்க முடியாதபடி அதைக் கொல்லுவதற்கு வேண்டியதற்கு மேலே அதிக வியாபாரத்தைச் செய்கிறது. எப்படியென்றால், சண்டைக்குப் போகிறவன், வில்லையும் பாணங்களையும் கத்தியையும் கதையையும் கொண்டு போவது போல், நல்ல வாஸனையாகிய ஸம்பத்தையுடைய அகில் புகையையும், வீணை வாசிக்கிறவர்கள் அதின் தந்தியிலே உண்டு பண்ணுகிற பஞ்சமம் என்கிற ஸ்வரத்தையும், குளிர்ந்து அப்போது அரைக்கப்பட்ட சந்தனத்தையும் கொண்டுவந்திருக்கிறது. இப்போது மலர்ந்துகொண்டிருக்கிற மல்லிகைப் புஷ்பங்களின் வாஸனையில் சிலவற்றை ஸமுத்ரத்தில் ஜலத்தை முகந்துகொண்டு வருவதுபோல் எடுத்துக்கொண்டு வந்து வீசுகிறது. சண்டையில் ஒருவன் பழுக்கக் காய்ச்சின பாணங்களை எதிரிகள் மேல் போடுவது போல், தன்னை விரஹதாபம் தொடாதபடி தூர நின்று தான் கொண்டுவந்திருக்கிற உபகரணங்களை என் மேலே போடுகிறது. ஐயோ கஷ்டம்! தாய்மார்களே! என் வருத்தத்தை யாருக்கு எப்படிச்சொல்லுவேன். இதை அநுபவத்தாலேயே அறியவேண்டியது. எம்பெருமான் விஷயமான அநுபவ ரஸத்தை அறியாதவர்களுக்கு இதை எப்படிச்சொல்லுவது. ஆகையால் ஒருவருடன் சொல்லி ஆறியிருக்கவும் முடியவில்லை.

இ—ம். அவன்கணாம்ந்து குறிப்புவினைமுற்று, ஆய்தம் (ஃ) விரித்தல் விகாரம். (7)

புதுமண முகந்து கொண்டெறியு மாலோ
பொங்கிள வாடை புன்செக்க ராலோ
அதுமணந் தகன்றநங் கண்ணன் கள்வம்
கண்ணனிற் கொடிதினி யதனி லும்பர்
மதுமண மல்லிகை மந்தக் கோவை
வண்பசுஞ் சாந்தினில் பஞ்சமம் வைத்து
அதுமணந் தின்னரு ளாய்ச்சி யர்க்கே
யூதுமத் தீங்குழற் கேயுய் யேன்நான். (அ)

(ப-ரை) பொங்கு - மேன்மேலும் பலமுள்ளதாய் வளர்ந்து கொண்டிருக்கிற, இளம் வாடை - இளமையுள்ள வாடைக்காற்று, புது மணம் - (இப்போது மலருகிற மல்லிகை முதலான புஷ்பங்களின்) புதிய வாஸனையை, முகந்துகொண்டு - எடுத்துக்கொண்டு, எறியும் - வீசுகிறது. ஆலோ - (இது மாத்திரமன்று); புல் செக்கர் - அல்பமான (கொஞ்சம் மிச்சமான) செவ்வானம் (துன்பப் படுத்துகிறது); (இதின் மேலே) அது-அப்படி (இன்னபடியென்று வாயாலே சொல்லமுடியாதபடி வியாபாரங்களைச் செய்து), மணந்து - என்னுடன் சேர்ந்து, அகன்ற - பிரிந்துபோன, நம் கண்ணன்-நம்முடைய கண்ணனுடைய, கள்வம் - திருட்டுவேலை, கண்ணனில்-அவனைக் காட்டிலும், கொடிது-கொடுமையுள்ளது, இனி-இன்னமும், அதனில் உம்பர் - அதற்கு மேலே, மது மண மல்லிகை-தேனையும் நல்ல வாஸனையையுமுடைய மல்லிகைப் புஷ்பங்களுடைய, மந்தம் கோவை - நெருக்கக் கோத்த மாலையைக் காட்டிலும், வண் - (அவனுடன் சேர்ந்திருந்தபோது) மனதுக்குப் பிரியமாயிருந்த, பசும் - ஈரமான, சாந்தினில் - சந்தனத்தைக் காட்டிலும், அது மணந்து-அப்படி மணக்க, சேர-ஆசைப்பட்டு, இன் அருள் இனியதான அவன் கிருபையைப்பெற்றிருந்த, ஆய்ச்சியர்க்கே-கோபிகைகளுக்கு மாத்திரம் (கேட்கும்படி,) பஞ்சமம் வைத்து - பஞ்சம ஸ்வரத்தை வைத்து, ஊதும், அ தீம் குழற்கே-அந்த மதுரமான வேணுவுக்கே, நான், உய்யேன் - பிழைத்திருக்கமாட்டேன்.

(கருத்து) குளிர்ந்த இளவாடைக்காற்று மேன்மேலும் பலமுள்ளதாய் வளர்ந்து இப்போது மலருகிற மல்லிகை முதலான புஷ்பங்களின் வாஸனையை முகந்துகொண்டு வந்து என்னைத் துன்பப்படுத்துகிறது என்று சொன்னேன். இது மாத்திரமோ?

கொஞ்சம் மீதியிருக்கிற செவ்வானமும் பீடிக்கிறது. இப்படிப்பட்டவைகள் என்று வாயாலே சொல்லமுடியாதபடி கண்ணன் என்னுடன் சேர்ந்து செய்த வியாபாரங்கள் நினைவுக்கு வந்து என்னை விட்டுப் பிரிந்துபோன அவனைக் காட்டிலும், அதிகக்கொடுமையுள்ளவைகளாய்த் துன்பப்படுத்துகின்றன. தேனையும் நல்ல வாஸனையையுமுடைய மல்லிகைப்புஷ்பங்கள் நெருங்கக் கோக்கப்பட்ட மாலையும், மனதையிழுக்கும்படியாக அப்போது அரைக்கப்பட்ட குளிர்ந்த சந்தனமும் செய்கிற துன்பத்தைப் பொறுத்தாலும் பொறுக்கலாம்; வாயாலே சொல்ல முடியாதபடி கோபிகைகளுடன் சேர்ந்து ராஸக்ரீடை செய்வதில் மனதை வைத்து அவர்கள் மாத்திரம் கேட்கும்படி ஊதின மதுரமான வேணுகானம் நினைவுக்கு வருவதை எப்படிப் பொறுப்பேன்? பிரிவினால் தவிக்கிற நான் இப்படி இவைகள் என்னைத் துன்பப்படுத்துகையில் எப்படி உயிருடன் இருக்கக்கூடும்?

குறிப்பு:— இளவாடை- ஸ்திரீகளை வதம் செய்கிறவனுக்கு ஆயுஸ் குறையும் என்பது பிரஸித்தம். என்னைக் கொல்லுகிற இந்த வாடைக்காற்றுக்கு ஆயுஸ் வளர்ந்து அதின் யௌவநம் அதை விடாமலிருக்கிறதே என்பது கருத்து.

இ—ம். கண்ணனில் - இல் ஐந்தாம் வேற்றுமை உருபு. உய்யேன் - தன்மை ஒருமை எதிர்மறை வினை முற்று. (8)

---

ஊதுமத் தீங்குழற் கேயுய் யேன்நான்
அதுமொழித் திடையிடை தன்செய் கோலத்
தூதுசெய் கண்கள்கொண் டொன்று பேசித்
தூமொழி யிசைகள் கொண்டொன்று நோக்கிப்
பேதுறு முகஞ்செய்து நொந்து நொந்து
பேதைநெஞ் சறவறப் பாடும் பாட்டை
யாதுமொன் றறிகில மம்ம வம்ம
மாலையும் வந்தது மாயன் வாரான். (கூ)

(ப-ரை) ஊதும் அ தீம் குழற்கே - அவன் ஊதின அந்த இனியதான வேணுகானத்துக்கே, நான் உய்யேன் - நான் உயிரோடு இருக்கமாட்டேன், அதும் ஒழிந்து - அதையும் தவிர,

இடை இடை - (வேணுகானம் பண்ணும்போது) நடுவிலே, தன் - தனக்கேயுள்ள, செய் - சிவந்த, கோலம் - அழகான, தூது செய் - தூதன் வேலைகளைச் செய்கிற, கண்கள் கொண்டு - திருக்கண்களைக்கொண்டு, ஒன்று பேசி - ஒரு வார்த்தை பேசி - ஒரு வார்த்தை சொல்லி, தூ மொழி - பரிசுத்தமான (மனதை யிழுக்கும்படியான சொற்களையுடைய, இசைகள் கொண்டு - வேணுகானங்களைக்கொண்டு, ஒன்று நோக்கி - ஒருபடி பார்த்து, பேது உறு முகம் செய்து - மோஹத்தை அடைந்த முகத்தைப் பண்ணி, நொந்து நொந்து - மிகவும் வருத்தப்பட்டவனாய், பேதை நெஞ்சு அறவு அற-அறியாத சிறுவர்களான கோபிகளு டைய மனதில் பிரிவு தீரும்படி, பாடும் பாட்டை - அவன் பண் ணும் கானத்தை, யாதும் ஒன்றும் - ஏதாவதொரு வழியாலும், அறிகிலம் - அறியச் சக்தியில்லாதவர்கள் நாங்கள், அம்ம அம்ம, மாலையும் - ஸாயங்காலமும், வந்தது - வந்துவிட்டது, மாயன் - ஆச்சரியமானவன், வாரான் - வரவில்லை.

(கருத்து) கண்ணன் இனியதாய் ஊதின வேணுகானம் ஒன் றையே கேட்டு நான் உயிரோடு இருக்கமுடியாது என்று சொன் னேன். இதைப் பொறுத்தாலும் பொறுக்கலாம். அவன் வேணு கானம் பண்ணினதைக்கேட்டு,வந்த கோபிகைகளுடன் ராஸக்ரீடை செய்து பண்ணின வியாபாரங்களை நினைக்கும்போது எப்படி உயி ரோடு இருக்கலாம். வேணுகானம் பண்ணும்போது, தனக்கே உள்ளவைகளும் கோபிகளின் வரவினால் உண்டான ஆசை யினால் சிவந்து அழகானவைகளும் தூதன் வேலையைச் செய்கிற வைகளுமான தன் திருக்கண்களைக்கொண்டு வாயால் சொல்லமுடி யாதபடி அவர்களுக்கு மிகவும் உட்பட்டிருப்பதுபோல் நடுவே நடுவே பேசின பேச்சுக்களும், கோபிகைகளின் மனதை ஸந்தோ ஷப்படுத்தும்படியான விஷயங்களைக் காட்டும் வார்த்தைகளைச் சேர்த்து வேணுகானத்தைச் செய்து, இப்படியென்று சொல்ல முடியாதபடி பிரீதியுடன் பார்த்ததும்,தான் பாடுகிறபாட்டுக்கள் தன் காதுகளுக்கு அமிருதம் போலிருந்தபடியாலே அவைகளின் ரஸத்தை அநுபவித்துத் தான் அடைந்த மோஹத்தைக் காட்டும் படி நீராய்க் கரைந்து கண்ணை மூடிக்கொண்டு, தோளில் கன்னத் தை வைத்துக்கொண்டு இருந்த இருப்பும், 'கல்நெஞ்சான என்

மனதையும் உருக்கும்படியான இந்தக் கானத்தைக்கேட்டுஇந்தப் பெண்கள் எப்படி ஆவார்களோ' வென்று வருத்தப்பட்டதும், சிறு பெண்களான கோபிகளுக்குப் பிரிவினாலுண்டான கோபத்தைத் தீர்த்து ராஸக்ரீடையை அநுபவித்துப் பிறகு அவன் பாடின பாட்டுக்களும் இவைகளெல்லாம் நினைவுக்குவரும்போது எனக்கு உண்டாகிறதுன்பம் இவ்வளவென்று என்னாலே சொல்ல முடியவில்லை. இந்தத் தசையில், ஸாயம்காலமும் வந்து இருக்கிறது. விரஹ தாபத்தை அடைந்த கோபிகைகள் லஜ்ஜைப்படும்படி அவர்களைக்காட்டிலும் ஆயிரம் மடங்கு வருத்தப்பட்டுவரக்கூடிய கண்ணன் வரவில்லை.

குறிப்பு— (1) தூதுபோகிறவன் தன்னை அனுப்பினவன் அபிப்ராயத்தை மற்றொருவனுக்குத் தெரிவித்து, அவனை ஸமாதானம் பண்ணுவதுபோல், கண்ணனுடைய திருக்கண்களும் பிரிவினாலுண்டான தன் வருத்தத்தைக் கோபித்துக்கொண்டிருந்த கோபிகைகளுக்குத் தெரிவித்து, அவர்கள் மனதை நீராக்கி அவர்களை ஸமாதானப்படுத்தின என்பது "தூது செய் கண்கள்" என்பதின் கருத்து.

(2) 'கண்கள் கொண்டு பேசி' என்பதற்கு அவன் சொல்ல வேண்டியவைகளெல்லாம் அவன் பேச்சுக்களைக் காட்டிலும் அதிகத் தெளிவாகப் பார்க்கும் சாதுர்யத்தாலே கண்கள் காட்டின- என்பது கருத்து.

(3) அவன் பேசின பேச்சுக்கள் இவைகள் என்று விரிவாய்ச் சொல்லத் தகாதவைகளாகையால் "ஒன்று" என்று பாட்டுச் சொல்லுகிறது.

(4) 'இசைகள் கொண்டு நோக்கி' என்பதற்கு பார்க்கிற சாதுர்யத்தாலே கோபிகைகள்நெஞ்சையுருக்கினதுபோல் வேணு கானத்தாலேயும் அவர்கள் மனதை உருக்கினான்என்பதுகருத்து.

இ—ம். அதும்-அதுவும். வாரான் - எதிர்மறை வினைமுற்று. அம்ம அம்ம - துக்கத்தின் மிகுதியைக்காட்டும் உரிச்சொற்கள். (9)

மாலையும் வந்தது மாயன் வாரான்
மாமணி புலம்ப வல்லே றணைந்த
கோல நன்னாகு களுகளு மாலோ
கொடியன குழல்களும் குழறு மாலோ
வாலொளி வளர்முல்லை கருமுகைகள்
மல்லிகை யலம்பிவண் டாலு மாலோ
வேலையும் விசும்பின்விண் டலறு மாலோ
என்சொல்லி யுய்வனிங் கவனை விட்டே. (கய)

(ப-ரை) மாலையும் வந்தது - ராத்திரியும் வந்துவிட்டது, மாயன் - ஆச்சரியமான கண்ணன், வாரான் - வருகிறானில்லை, மா மணி - (மாடுகளுக்குக் கழுத்துக்களில் அலங்காரமாகக் கட்டின) பெரிய மணிகள், புலம்ப - சப்திக்க, வல் ஏறு - பல முள்ள காளை மாடுகளாலே, அணைந்த - அணைப்பட்ட, கோலம் - (அதினாலுண்டான ஸந்தோஷத்தாலே) அழகாயிருக்கிற, நல் - நல்ல, (அந்தக் காளைமாடுகளிடத்தில் ஆசையுள்ள); நாகுகள் - கிடாரிகள், உகளும் - துள்ளிக் குதிக்கின்றன; கொடியன - க்ரூரங்களான, குழல்களும் - (அவன் தோழர்களான கோபர்களுடைய) வேணுகானமும், குழறும் - இனியவைகளாய் சப்திக்கின்றன, வால் - (மிகவும்) வெளுப்பான, ஒளி வளர் - காந்தி வளருகிற, முல்லை, கருமுகை மல்லிகை - ஆகிய இந்தப் புஷ்பங்களில், அலம்பி - குடைந்து, (அவைகளிலுள்ள தேனைக் குடித்து) வண்டு, ஆலும் - சப்தம் பண்ணுகின்றன, வேலையும் - ஸமுத்ரமும், விசும்பில் - ஆகாசத்தில், விண்டு - (அலைகள் வழியாக) வாயைவிட்டு, அலறும் - கூப்பிடுகிறது, இங்கு - இந்தத் தசையில், அவனை விட்டு, என் சொல்லி உய்வன் - எதைச் சொல்லி உயிரோடிருப்பேன்.

(கருத்து) அவன் தான் திரும்பி வருகிறதாகச் சொன்ன காலமும் வந்துவிட்டது. பிரதிகூலங்களாயிருக்குமவைகளெல்லாம், தன்னைக்கண்டால் அநுகூலங்களாக ஆகும்படி இருக்கும் ஆச்சரியமான கண்ணன் வரவில்லை. அவனும் வராமல் அவன் சொன்ன காலம் போய் ராத்திரியும் வந்தால், நான் எப்படிப் பொறுப்பேன். கழுத்தில் கட்டப்பட்ட பெரிய மணிகள் சப்திக்கும்படி பலமுள்ள காளைமாடுகளாலே தழுவப்பட்டு அதினாலுண்

டான ஸந்தோஷத்தாலே இடாரிகள் துள்ளிக் குதிக்கின்றன. அவன் நினைவையுண்டுபண்ணி என்னைத் துன்பப்படுத்தும்படி அவனுடைய தோழர்களான கோபர்கள் வேணுகானம் பண்ணிக் கொண்டு வருகிறார்கள். மிகவும் வெறுப்பான முல்லை கருமுகை மல்லிகை முதலான புஷ்பங்களில் வண்டுகள் குடைந்து தேனைக் குடித்து ஸந்தோஷத்தினால் பாடுகின்றன. ஸமுத்ரமும் அலைகளின் வழியாய் ஆகாசம் வரையில் கிளம்பி வாயை விட்டுக் கோஷிக்கிறது. இப்படி இவைகளெல்லாம் ஸந்தோஷப்பட்டு அந்த ஸந்தோஷத்தைப் பல படியால் காட்டும்போது நான் ஒருத்தி மாத்திரமோ துக்கப்படுவது? இந்தத் தசையில், அவனைப்பிரிந்திருந்து எதைச் சொல்லிக்கொண்டு உயிரோடிருப்பேன்?

குறிப்பு— கருமுகை - மல்லிகையில் ஒருவகை. (11)

---

அவனைவிட் டகன்றுயி ராற்ற கில்லா
வணியிழை யாய்ச்சியர் மாலைப் பூசல்
அவனைவிட் டகல்வதற் கேயி ரங்கி
யணிகுரு கூர்ச்சட கோபன் மாறன்
அவனி யுண் டுமிழ்ந்தவன் மேலு ரைத்த
வாயிரத் துள்ளிவை பத்துங் கொண்டு
அவனியு ளலற்றிநின் றுய்மின் தொண்டீ
ரச்சொன்ன மாலை நண்ணித் தொழுதே. (கக)

(ப-ரை) அவனை விட்டு, அகன்று - பிரிந்து, உயிர் - தங்கள் பிராணனை, ஆற்ற - பொறுப்பதற்கு, இல்லா - சக்தியில்லாதவர்களாய், அணி இழை - பூட்டிக்கொண்டிருந்த ஆபரணங்களை உடைய, ஆய்ச்சியர் - கோபிகைகளுடைய, மாலைப்பூசல் - ஸந்தியா காலத்தில் பண்ணின அழுகைக்கூப்பாட்டடை, அவனை விட்டு, அகல்வதற்கு - பிரிந்திருப்பதற்கு; இரங்கி - கரைந்து, அணி குருகூர் சடகோபன் மாறன், அவனி - பூமியை, உண்டு உமிழ்ந்தவன்மேல், உரைத்த - சொன்ன, ஆயிரத்துள், இவை பத்தும் கொண்டு, தொண்டீர் - அவனிடத்தில் சபலமாயிருக்கிறவர்களே! அ சொன்ன - அப்படிச் சொல்லப்பட்ட, மாலை - ஆச்ரிதர்களிடத்தில் ஆசையுள்ள கண்ணனை, நண்ணி - கிட்டி, தொழுது - நமஸ்காரம் பண்ணி, அவனியுள் -

பூமிக்குள்ளே, நின்று அலற்றி - நிலையாயிருந்து அடிக்கடி உரக்கப்பாடி,உய்மின் - பிழைத்திருங்கள்.

(கருத்து) கோபிகைகள் கண்ணனை விட்டுப் பிரிந்து தங்களுடைய ஆத்மாவைத் தரிக்கச் சக்தியில்லாதவர்களாய், ஆபரணங்களைப் பூட்டிக்கொண்டு ஸாயங்காலத்தில் அவன் வருவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்து அவன் வருவது தாமதப்படும் போது அழுது கூப்பிட்டதுபோல் அணி குருகூர்ச் சடகோபன் மாறன், எம்பெருமானை விட்டுப் பிரிந்து தரிக்கச் சக்தியில்லாதவராய் கரைந்து அவனைப்பற்றி அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களையும் கொண்டு, அவனிடத்தில் சபலமாயிருக்கிறவர்களே ! பூமியைப் பிரளய காலத்தில் தன் வயிற்றில் வைத்துக்கொண்டு ரக்ஷித்து, ஸிருஷ்டி காலத்தில் அதை வெளிப்படுத்தினவனும் ஆச்ரிதர்களிடத்தில் ஆசையுள்ளவனுமான அவனைக் கிட்டி நமஸ்காரம் செய்து பிரீதியுடன் நிலையாயிருந்து உரக்கப் பாடுங்கள்; இப்படிச்செய்தால் நீங்கள் இந்தப் பூமியில் வாழலாம்.

குறிப்பு— (1) இந்தப் பத்துப் பாட்டுக்களையும் கோபிகைகள் ஒவ்வொருத்தியும் தனித்தனியாக ஒரு பாட்டைச் சொன்னதாகவும், எல்லாரும் கூடினபோது எல்லாருக்குமாக ஒருத்தி சொன்னதாகவும் சொல்லலாம். முதல் பக்ஷத்தில் 'என் உயிர்காக்குமாறு' என்பது முதலான ஒருமைச் சொற்கள் ஸ்வரஸங்கள். ஆனால் "தமியமாலோ" என்பது முதலான பன்மைச் சொற்கள் ஸ்வரஸங்கள் அல்ல. இரண்டாவது பக்ஷத்தில் பன்மைச் சொற்கள் ஸ்வரஸங்கள். ஆனால் ஒருமைச் சொற்கள் அஸ்வரஸங்கள். இவைகளுக்கு விரோதமில்லாமல் இன்னுமொரு பக்ஷம் சொல்லலாம்:— கோபிகைகள் கூடினபோது ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு பாட்டைச் சொன்னார்கள்; அவர்களில் சிலர் தங்களைப்பற்றி மாத்ரம் சொன்னார்கள்; வேறு சிலர் எல்லாரையும் சேர்த்துக்கொண்டு சொன்னார்கள்-என்பதாம்.

(2) 'ஆய்ச்சியர்' என்கிற பன்மைச் சொல்லாலே எல்லாக் கோபிகைகளும் பட்ட பாட்டை ஆழ்வார் ஒருவரே பட்டார் என்பது காட்டப்படுகிறது. (11)

பத்³மாக்ஷத்வப்ரஸித்³த்⁴யா ஜக³த³வநதயா [illegible]
ஸாரக்³ராஹித்வ [illegible] ஹ்ருஷிதஜநதயா ஸ்வாங்க³
தா³நாதி³ஜாதே³: || ஶ்யாமத்வாத்³ த்³ரவ்யசோரத்வத உத ஸரஸஸ்வை
ரசேஷ்டா [illegible]
தயா [illegible] ||   ||கககக||

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆச்ரிதர்களுக்குத் தன்னைக் காட்டுவதற்குத் தகுந்த காலத்தையுடையவன் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) தாமரைக் கண்ணன் என்கிற பிரஸித்தி; (2) உலகத்தை ரக்ஷிப்பது; (3) ஆச்ரிதர்களுக்கு உட்பட்டவனாயிருந்து அவர்கள் மனதில் ஆசையுண்டுபண்ணுவது; (4) ஸாரமில்லாததை விட்டு விட்டு ஸாரத்தை எடுத்துக்கொள்ளுவது; (5) வேணுகானத்தாலே ஜனங்களை ஸந்தோஷப்படுத்தினது; (6) பிரம்மா முதலானவர்களுக்குத் தன் உடம்பை இருப்பிடமாகக் கொடுத்திருப்பது; (7) நீலமான திருமேனியுள்ளவனாயிருப்பது, (8) வெண்ணெய் முதலான திரவியங்களைத் திருடினது; (9) ஸரஸமான பேச்சுப் பேசுவது; (10) மனதை இழுக்கும்படியான லீலைகளைச் செய்வது. (111)

# பத்தாம் திருவாய்மொழி.



அவ— கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார் மிகுந்த துக்கத்தை அடைந்து பட்ட வியஸநங்கள் எல்லாம் தீரும்படி திருக்கண்ணபுரத்தில் எம்பெருமானைக் கண்டு, அவனுடன் சேர்ந்து அதினலுண்டான ஸந்தோஷத்தாலே பிறர்களுக்கு உபதேசம் செய்கிறார். இங்கே சேர்க்கையாவது - முன்போல மனதாலே தெளிவாய் அவனை அநுபவித்ததை மறுபடியும் திரும்பி அடைந்தது. கோபிகைகளும் திரும்பிவந்த கண்ணனைக் கண்டு தங்கள் வியஸநங்கள் எல்லாம் போய் ஸந்தோஷப்பட்டார்கள். அவர்களைப்போல் ஆழ்வாரும் ஸந்தோஷப்பட்டார்.

(கலி விருத்தம்.)

மாலைநண் ணித்தொழு தெழுமினோ வினைகெடக்
காலை மாலை கமல மலரிட்டுநீர்
வேலை மோதும்மதிள் சூழ்திருக் கண்ணபுரத்து
ஆலின்மேலா லமர்ந்தா னடியி ணைகளே. (க)

(ப-ரை) வேலை மோதும் - ஸமுத்ரம் (அலைகளாலே) மோதுகிற, மதில் - மதிள்களால், சூழ் - சூழப்பட்ட, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்தில் இருக்கும், ஆலின் மேல் - ஜலத்தின் மேலே, ஆல் அமர்ந்தான் - ஆலையிலையில் கண்வளர்ந்த, மாலை - ஸர்வேசுரனை, நண்ணி - கிட்டி, அடி இணைகள் - அவனுடைய திருவடிகளிரண்டையும், காலை மாலை - காலையிலும் ஸாயங்காலத்திலும், கமல மலர் இட்டு - தாமரைப் புஷ்பங்களை ஸமர்ப்பித்து, நீர் - நீங்கள், வினை கெட - உங்கள் பாபம் (பாபங்களின் காரியமான துக்கம்) போகும்படி, தொழுது - ஸேவித்து, எழுமின் - உஜ்ஜீவியுங்கள்.

(கருத்து) ஓ ஜனங்களே! பிரளய ஜலத்தில் ஆலிலையின் மேல் கண்வளர்ந்த ஸர்வேசுவரன் ஸமுத்ரத்தின் அலைகள் மோதுகிற மதிள்களால் சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தில் இப்போது எழுந்தருளியிருக்கிறன். அவனுடைய இரண்டு திருவடிகளிலும் தாமரை முதலான உங்களுக்குக் கிடைத்த புஷ்பங்களைக் காலையி

லோ மாலையிலோ அல்லது காலம் கிடைத்தபோதோ ஸமர்ப்பித்து ஸேவியுங்கள். அப்படிச் செய்தால், ஸம்ஸாரத்தில் துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற உங்களுடைய துக்கம் எல்லாம் போய் உஜ்ஜீவிக்கலாம். இப்படி அவனை ஸேவிப்பதற்கு இன்ன காலம் தகுந்தது, இன்ன காலம் தகாதது என்று நியமமில்லை. அதை எப்போதும் செய்யலாம்.

(1) "ஆலின்மேல் அமர்ந்தான்" என்பதால் பிறர்களாலே செய்யமுடியாத செயல்களை எம்பெருமான் செய்யச் சக்தியுள்ளவன் என்பதும், ஆகையால் அவனே ஸம்ஸாரிகளை ரக்ஷிக்கத்தகுந்தவன் என்பதும், ஆச்ரிதர்கள் தன்னைக் கிட்டுவதற்காக அவனே திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிறான் என்பதும் காட்டப்படுகின்றன. (1)

---

அவ— கீழ்ப்பாட்டில் எம்பெருமானைப் புஷ்பங்களாலே அர்ச்சியுங்கள் என்று சொன்னார்; அதைத் தியானத்துடன் செய்யுங்கள் என்கிறார்:—

கள்ளவி ழும்மல ரிட்டுநீ ரிறைஞ்சுமின்
நள்ளிசே ரும்வயல் சூழ்கிடங் கின்புடை
வெள்ளியேய்ந்த மதிள்சூழ் திருக்கண் ணபுரம்
உள்ளி நாளுந்தொழு தெழுமினோ தொண்டரே. (உ)

(ப-ரை) ஓ தொண்டரே - பகவானிடத்தில் சபலமாயிருக்கிறவர்களே! கள் அவிழும் - தேன் சொட்டும், மலர் - புஷ்பங்களை, இட்டு - ஸமர்ப்பித்து, நீர் - நீங்கள், இறைஞ்சுமின் - வணங்குங்கள், நள்ளி - பெண் நண்டுகள், சேரும் வயல் சூழ், கிடங்கின் புடை - அகழின் பக்கத்திலே, வெள்ளி - சுக்கிரனை, ஏய்ந்த - தொட்டுக்கொண்டிருக்கிற, மதிள்சூழ், திருக்கண்ணபுரம் - திருக்கண்ணபுரத்தை (அதில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் திருவடிகளை), உள்ளி - தியானித்துக்கொண்டு, நாளும் - ஒவ்வொரு நாளும், தொழுது - ஸேவித்து, எழுமின் - உஜ்ஜீவியுங்கள்.

(கருத்து) ஓ தொண்டர்களே! ஜலஸமிருத்தியாலே பெண் வண்டுகள் சேர்ந்திருக்கிற வயல்களால் சூழப்பட்ட அகழை நாலு பக்கங்களிலுமுடையதாய், ஆகாசத்திலிருக்கும் சுக்கிரனைத்

தொடும்படி உயர்ந்திருக்கிற மதிள்களால் சூழப்பட்டதாய் இருக்கிற திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் அவன் திருவடிகளை வணங்குங்கள் என்று சொன்னேன். தேன் சொட்டிக் கொண்டிருக்கும் புஷ்பங்களை ஸமர்ப்பித்து, இதைச் செய்யும் போது அவனை மனதாலே தியானம் பண்ணிக்கொண்டு செய்யுங்கள். இப்படிச் செய்தால் வாழலாம். (2)

---

அவ— வேறு பிரயோஜநத்தைத் தேடாமையை எம்பெருமானை அடைவதற்கு அங்கமாகச் சொல்லுகிறார்:—

தொண்டர்நுந் தம்துயர் போகநீ ரேகமாய்
விண்டுவா டாமல ரிட்டுநீ ரிறைஞ்சுமின்
வண்டுபா டும்பொழில் சூழ்திருக் கண்ணபுரத்
தண்ட வாண னமரர்பெரு மானையே. (௩)

(ப-ரை) தொண்டர் - எம்பெருமான் விஷயத்தில் சபலராயிருக்கிறவர்களே! வண்டு பாடும், பொழில் சூழ் - சோலைகளாலே சூழப்பட்ட, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற, அண்டவாணன் - அண்டத்துக்கு (லீலா விபூதிக்கு) நிர்வாஹகனான, அமரர் பெருமானை - நித்யஸூரிகளுக்குத் தலைவனான எம்பெருமானை, நும் தம் துயர் போக - உங்களுடைய துக்கம் போகும்படி, நீர் - நீங்கள், ஏகமாய் - ஒன்றாய், (வேறு பிரயோஜநங்களைத் தேடுகிறவர்களைப்போல் நடுவில் விடாமல்), விண்டு - மலர்ந்து, வாடா - வாடாத, மலர் இட்டு - புஷ்பங்களை ஸமர்ப்பித்து, நீர் - நீங்களே, இறைஞ்சுமின் - ஆராதியுங்கள்.

(கருத்து) தொண்டர்களே! முக்தர்கள் வைகுந்தத்தில் ஸாமகானம் பண்ணுகிறதுபோல ஸந்தோஷத்தினாலே வண்டுகள் தேனைக்குடித்துப் பாடிக்கொண்டிருக்கும் சோலைகளாலே சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தில் எல்லாரும் ஆச்ரயிக்கும்படி எழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரனும், நித்யஸூரிகளின் தலைவனுமான எம்பெருமானை ஸம்ஸாரத்தில் உங்களுக்கு உண்டாயிருக்கும் துக்கம் எல்லாம் போவதற்காக அப்போதே மலர்ந்து வாடாமலிருக்கிற புஷ்பங்களை ஸமர்ப்பித்து ஆராதியுங்கள். இதைச் செய்யும்போது கைங்கரியமே உங்களுடைய ஸ்வரூபத்துக்கு

ஏற்பட்ட புருஷார்த்தம் என்று அதில் ருசியாலே நீங்கள் அவனுக்குச் சேஷமாயிருப்பதை நினைத்துக்கொண்டு வேறு பிரயோஜநங்களைத் தேடாமல் செய்யவேண்டியது. அதுதான் உங்கள் ஸ்வரூபத்திற்குத் தகுந்தது.

குறிப்பு— (1) வேறு பிரயோஜநத்தைத் தேடுகிறவன் சில காலம் எம்பெருமானை ஆச்ரயித்து, அது கிடைத்தவுடன் அவனை விட்டு விடுகிறான். அவனையே பிரயோஜநமாக எண்ணுகிறவன் அவனை அடைந்த பிறகும் அவனுடனேயே இருக்கிறான். இந்த அர்த்தத்தைப் பாட்டில் "ஏகமாய்" என்கிற சொல் காட்டுகிறது.

(2) பாட்டிலிருக்கிற 'நீர்' என்கிற இரண்டு சொற்களில் ஒன்றுக்கு நீங்கள் என்பது பொருள். மற்றொன்றுக்கு, நீங்களாகவே என்பது பொருள். அதாவது கைங்கரியத்தைச் சாஸ்திரம் செய்யச்சொல்லுகிறது என்று எண்ணி அதைச் செய்யவேண்டாம். அதுவே புருஷார்த்தம் என்று எண்ணி அதில் ருசியுள்ளவர்களாய் அதில் ப்ரீதியினாலேயே தூண்டப்பட்டு அதைச் செய்யவேண்டுமென்பது கருத்து.

இ—ம். வாடா—வாடாத; ஈறுகெட்ட பெயரெச்சம். (3)

---

அவ— கீழ்ப்பாட்டில் சொன்னபடி எம்பெருமானை ஆராதிப்பதின் பலனைச் சொல்லுகிறார்—

மானை நோக்கி மடப்பின்னை தன்கேள்வனைத்
தேனை வாடா மலரிட்டுநீ ரிறைஞ்சுமின்
வானை யுந்து மதிள்சூழ் திருக்கண்ணபுரம்
தான யந்த பெருமான்சர ணாகுமே. (ச)

(ப-ரை) தேனை - தேன்போல் இனியவனும், மானை நோக்கி - மான்கள் வருத்தப்படும்படியான பார்வையையுடையவளான, மடம் பின்னை தன் - மடப்பமுள்ள நப்பின்னைக்கு (நீளைக்கு), கேள்வனை - தகுந்த நாயகனுமான எம்பெருமானை, வாடா மலர் இட்டு - வாடாத புஷ்பங்களை ஸமர்ப்பித்து, நீர் - நீங்கள், இறைஞ்சுமின் - ஆராதியுங்கள், வானை உந்தும் - ஆகாசத்தை மேலே தள்ளும்படி உயர்ந்திருக்கிற மதில் சூழ், திருக்கண்ணபுரம் - அந்த ஊரை, தான் - தானாக

வே, நயந்த - ஆசைப்பட்ட, பெருமான் - ஸர்வேசுவரன், சரண் ஆகும் - ரக்ஷகனாக ஆவன்.

(கருத்து) தேனைப்போல இனியவனும், கண்ணழகில் பிரஸித்தமான மான்களும் வருந்தும்படி அதிக அழகுள்ள கண்களையுடைய நீளைக்குத்தகுந்த நாயகனும், ஆச்ரிதர்களுடன் சேருவதற்கு இது தகுந்த இடம் என்று பார்த்து மிகுந்த பிரீதியுடன், ஆகாசத்தை மேலே தள்ளும்படி உயர்ந்திருக்கிற மதிள்களால் சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருப்பவனுமான ஸர்வேசுவரனை வாடாத புஷ்பங்களைக்கொண்டு நீங்கள் வேறு பிரயோஜனங்களில் ஆசையில்லாமல் ஆராதித்தால், உங்களுக்கு அவன் நித்யஸித்தமான தன் திருவடிகளில் கைங்கரியம் செய்வதாகிய ஸம்பத்தைக் கொடுப்பன்.

குறிப்பு— 'சரண்' என்பதற்கு ரக்ஷிப்பவன் என்பது பொருள். ரக்ஷிப்பது என்பது வேண்டியதைக் கொடுப்பதும், வேண்டாததை விலக்குவதும். ஆத்மாவுக்கு வேண்டியது அவன் திருவடிகளில் கைங்கரியம். ஆத்மா அவனுக்கு இயற்கையாகவே சேஷமாயிருந்தும் அதின் ப்ரயோஜனமான அவனுக்கு எப்போதுமுள்ளதான கைங்கரியம் கர்மத்தாலே தடைபட்டிருந்தது. ஆராதநத்தால் அந்தத் தடை நீங்கினால் அந்த ஸம்பத்து வந்துவிடும். (4)

---

அவ— கீழ் நாலு பாட்டுக்களில் பக்தியோகம் செய்வதை உபதேசித்து, அதைச் செய்யமுடியாதவர்களுக்குப் பிரபத்தியை உபதேசிக்கிறார்:—

சரண மாகுந்தன தாளடைந் தார்க்கெல்லாம்
மரணமானல் வைகுந்தங் கொடுக்கும் பிரான்
அரணமைந் தமதிள் சூழ்திருக் கண்ணபுரத்
தரணியா ளன்தன தன்பர்க்கன் பாகுமே. (ரு)

(ப-ரை) தன தாள் - தன்னுடைய திருவடிகளை, அடைந்தார்க்கு - (உபாயமாக) அடைந்தவர்களுக்கு, சரணம் எல்லாம் ஆகும் - எல்லாவிதத்தாலும் ரக்ஷிக்கிறவனாக ஆகிறவனும், மரணம் ஆனால், வைகுந்தம் - வைகுந்தத்தை, கொடுக்கும் - கொடுக்கிறவனும், பிரான் - இப்படி உபகாரம் செய்கிறவனும், அரண்

அமைந்த - (நல்ல) ரக்ஷையாக ஏற்பட்ட, மதிள்சூழ்-திருக்கண்ண புரத்தரணியாளன் - திருக்கண்ணபுரத்திலிருக்கிறவனும் பூமியிலிருக்கும் ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனுமான எம்பெருமான், தனது அன்பர்க்கு - தன்னிடத்தில் ஸ்நேஹமுள்ள ப்ரபந்நர்களுக்கு, அன்பாகும் - ஸ்நேஹமே ஓர் உருவத்தை எடுத்துக் கொண்டதுபோலிருப்பன்.

(கருத்து) ரக்ஷையாயிருக்கிற மதிள்களாலே சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருந்து பூமியிலிருக்கிற ஸம்ஸாரிகளை ரக்ஷிக்கிற எம்பெருமான் பக்தியோகம் செய்யச் சக்தியில்லாமல் தன் திருவடிகளையே பக்தி ரூபமான உபாயமாக நினைத்து, தங்களை ரக்ஷிக்கிற சுமையைத் தன்னிடத்தில் கொடுத்தவர்களை எல்லாவிதத்தாலும் ரக்ஷிக்கிறான். இப்படி அவர்கள் பிரபத்தி செய்யும் க்ஷணத்திலேயே பிரகிருதியின் ஸம்பந்தத்தைக் கழித்து, அவர்களை வைகுந்தத்துக்குக் கொண்டுபோய் அவர்களுடன் சேரவேண்டும் என்று ஆசைப்பட்டு, அவர்களுடன் சேராவிட்டால் ஆத்மாவைத் தரிக்கமுடியாதவனாயிருக்கிறான். எவர்களுக்கு அநாதியான வாஸனையாலே உடம்போடு இருப்பது பொறுக்கக்கூடியதாயிருக்கிறதோ, அவர்களுக்கு எப்போது மரணம் வந்து பிரகிருதியானது அவர்களைத் தானே விடுகிறதோ என்று பார்த்துக்கொண்டிருந்து அது நேர்ந்தபோது அவர்களுக்கு வைகுந்தத்தைக் கொடுக்கிறான். இப்படி மிகுந்த உபகாரத்தைச் செய்தவன் தன்னிடத்தில் பிரபத்திப் பண்ணின பக்தர்களிடத்தில் ஸ்நேஹமே ஓர் உருவத்தை எடுத்துக்கொண்டதுபோலிருந்து நான் இவர்களுக்கு ஒன்றையும் செய்யவில்லையே, எதைச் செய்யலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்.

குறிப்பு— (1) திருக்கண்ணபுரத்து எம்பெருமானிடத்தில் பக்தியுள்ளவர்கள் பக்தியின் மிகுதியாலே அவனுக்கு என்ன வருமோ என்று பயப்படாதபடி அந்த ஊருக்கு மதிள்கள் ரக்ஷையாயிருக்கின்றன என்பது 'அரண் அமைந்த' என்பதின் கருத்து. (5)

அவ— தன்னையே பிரயோஜனமாக எண்ணுகிறவர்கள் தன்னை அடைவதற்கு இடையூறுகளாயிருப்பவைகளை எம்பெருமானே போக்குகிறான் என்று சொல்லுகிறார்:—

அன்பனா குந்தன தாளடைந் தார்க்கெல்லாம்
செம்பொ னாகத் தவுணனுடல் கீண்டவன்
நன்பொ னேய்ந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தன்பனா ளுந்தன மெய்யர்க்கு மெய்யனே. (௬)

(ப-ரை) தன தாள் - தன்னுடைய திருவடிகளை, அடைந்தார்க்கு எல்லாம் - (உபாயமாக) பற்றின எல்லாருக்கும், அன்பன் ஆகும் - ஸ்நேஹமுள்ளவனாக இருக்கிறவனும், செம் பொன் ஆகத்து - சிவந்தபொன் போல் இருந்த உடம்பையுடைய, அவுணன் உடல் - ஹிரண்யன் என்கிற அஸுரனுடைய உடம்பை, கீண்டவன் - (நகங்களால்) பிளந்தவனும், நன் பொன் ஏய்ந்த - நல்ல பொன் சேர்ந்த (அதனால் செய்யப்பட்ட), மதிள் சூழ், திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்தில், அன்பன் - ஸ்நேஹமுடையவனுமான எம்பெருமான், தன் மெய்யர்க்கு - தன்னிடத்தில் உண்மையான ஸ்நேஹத்தை யுடையவர்களுக்கு, நாளும் - எப்போதும், மெய்யன் - உண்மையான ஸ்நேஹமுடையவன்.

(கருத்து) தன்னுடைய திருவடிகளையே உபாயமாக அடைந்த எல்லாரிடத்திலும் ஸ்நேஹமுள்ளவனும், தன்னிடத்தில் உண்மையான ஸ்நேஹமுள்ளவர்களுக்குத் தானும் உண்மையான ஸ்நேஹமுள்ளவனும், நல்ல பொன்னால் செய்யப்பட்ட மதில்களால் சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தில், ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்குத் தகுந்த இடம் என்று ஸ்நேஹத்துடன் வஸிக்கிறவனுமான எம்பெருமான் ஆச்ரிதர்களுடைய விரோதிகளைத் தாமே போக்குகிறான். தன்னிடத்தில் பக்தியுள்ள ப்ரஹ்லாதனை ரக்ஷிப்பதற்காக செம்பொன் போன்ற உடம்பையுடையவனும் அதினாலே ஹிரண்யன் என்று பெயர் பெற்றவனுமான அஸுரனுடைய உடம்பை நகத்தாலே பிளந்ததுபோல்.

குறிப்பு— (1) உண்மையான ஸ்நேஹமுள்ளவர்கள், எம்பெருமானையே பிரயோஜனமாக எண்ணுகிறார்கள். ஆதலால் அவர்களுடைய ஸ்நேஹம் உண்மையானது. வேறு பிரயோஜனத்

தை ஆசைப்பட்டு அவனிடத்தில் பக்தி பண்ணுகிறவர்கள் அது கிடைத்தவுடன் அவனைவிட்டு விடுகிறபடியால் அவர்களுக்கு அவனிடத்தில் உண்மையான ஸ்நேஹமில்லை. இது'மெய்யர்க்கு' என்பதின் பொருள்.

(2) ''அன்பர்க்கு எல்லாம்'' என்பதின் கருத்து— தன்னிடத்தில் அன்பு உண்டானால் இவன் உயர்ந்தவன் அவன் தாழ்ந்தவன் என்று எம்பெருமான் பார்க்கிறதில்லை. எல்லாரையுமே ஒரே விதமாய் ரக்ஷிக்கிறான் என்பது. (6)

---

மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க் கெல்லாம்
பொய்யனாகும் புறமே தொழுவார்க் கெல்லாம்
செய்யில் வாளை யுகளுந் திருக்கண்ணபுரத்து
ஐயனா கத்தணைப் பார்கட் கணியனே. (எ)

(ப-ரை) விரும்பி - (தன்னையே பிரயோஜனமாக) ஆசைப்பட்டு, தொழுவார்க்கு எல்லாம் - ஸேவிக்கிற எல்லாரிடத்திலும், மெய்யனாகும் - உண்மையான ஸ்நேஹமுள்ளவனாயிருப்பன், புறமே-வேறு விஷயங்களுக்காக, தொழுவார்க்கு எல்லாம்-தன்னை ஸேவிக்கிற எல்லாருக்கும், பொய்யன் ஆகும் - தன்னை உள்ளபடி காட்டமாட்டான், செய்யில் - வயல்களில், வாளை - மீன்கள், உகளும்-உயரத்துள்ளும், திருக்கண்ணபுரத்து, ஐயன்-பந்து வானஸர்வேசுவரன், ஆகத்து-தங்கள் மனதில், அணைப்பார்கட்கு-கட்டிக்கொள்ளுபவர்களுக்கு (தன்னைப்பிராப்யமாக எண்ணுகிறவர்களுக்கு), அணியன் - கிட்ட இருக்கிறவன்.

(கருத்து) வேறு பிரயோஜனத்தைத் தேடாமல் தன்னையே பிரயோஜனமாக எண்ணுகிறவர்கள் உயர்ந்தவர்களோ தாழ்ந்தவர்களோ எல்லாருக்கும் தன்னை உள்ளபடி காட்டுகிறான். வேறு பிரயோஜனங்களை ஆசைப்பட்டுத்தன்னை ஆச்ரயிக்கிறவர்களுக்கு அவர்கள் எவ்வளவு உயர்ந்தவர்களானாலும் தன்னை உள்ளபடியே காட்டுகிறதில்லை. தன்னையே வேண்டுகிறவர்கள் ஓர் அஞ்ஜலி மாத்ரம் செய்ய அவன் இப்படி ஸுலபனாக ஆவனோ என்றால், ஜல ஸம்ருத்தியாலே அதிக ஸந்தோஷத்தோடு மீன்கள் வயல்களில் துள்ளுகிற திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற எல்லாருக்

கும் பந்துவான ஸர்வேசுவரன் தன்னையே பிராப்யமாக எவர்கள் மனதாலே எண்ணுகிறார்களோ, அவர்களுக்கு ஸுலபன். இதில் ஸந்தேஹமில்லை. (1)

அவ— கீழ் மூன்று பாட்டுக்களாலே பிரபத்திபண்ணுகிற வனிடத்தில் எம்பெருமான் மிகுந்த பிரீதியைப்பண்ணிச் செய்கிற செயல்களைச் சொன்னார்; பிரபத்தியைப்பண்ணும்படி உபதேசிக்கிறார்:—

அணியனு குந்தன தாளடைந் தார்க்கெல்லாம்
பிணியுஞ் சாராப் பிறவி கெடுத்தாளும்
மணிபொ னேய்ந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமி னாளும் பரமேட்டி தன்பாதமே. (அ)

(ப-ரை) தன தாள் - தன் திருவடிகளை, அடைந்தார்க்கு எல்லாம்-பிராப்யமாகப்பற்றினவர்கள் எல்லாருக்கும், அணியன் ஆகும் - கிட்ட இருக்கிறவனாக ஆவன், பிணியும் - வியாதி முதலானவைகள், சாரா - அவர்களிடம் சேரா, பிறவி - பிறப்பதை, கெடுத்து-நாசம் செய்து, ஆளும் - ரக்ஷிப்பன், மணிபொன் - ரத்னங்களும் தங்கமும், ஏய்ந்த - பொருந்தின, மதிள் சூழ் - திருக்கண்ணபுரம்-அவ்வூரில் எழுந்தருளியிருக்கிற பரமேட்டி தன்-(வைகுந்தமாகிய) உயர்ந்த இடத்திலிருக்கிற எம்பெருமானுடைய, பாதம் - திருவடிகளை, நாளும் - எப்போதும், பணிமின் - நமஸ்காரம் பண்ணுங்கள்.

(கருத்து) தன்னுடைய திருவடிகளையே பிராப்யமாக எண்ணுகிற எல்லாருக்கும் அவன் ஸுலபனாயிருக்கிறான். அவர்களிடத்தில் வியாதிமுதலான துக்கங்கள் வந்துசேரமாட்டா. அவர்களுக்கு மறுபடியும் பிறப்பது என்கிறதில்லாமல் தன் திருவடிகளில் கைங்கரியம் செய்வதாகிய ஸம்பத்தைக் கொடுத்து ரக்ஷிப்பன்; ஆகையால் ரத்னங்களாலும் பொன்னாலும் செய்யப்பட்ட மதிள்களாலே சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தில் உயர்ந்த இடமான வைகுந்தத்தில் போல் பிரீதிபண்ணி எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளில் நமஸ்காரத்தோடு கூடிய பிரபத்தியைச்செய்யுங்கள். யாகம் செய்வதற்கு இன்னகாலம் என்று ஏற்பட்டிருப்பதுபோல் இதற்கு ஒருகால நியமமில்லை. வேண்டினபோது இதைச்செய்யலாம். (8)

பாதநா ளும்பணி யத்தணி யும்பிணி
ஏதஞ்சா ராவெனக் கேலினி யென்குறை
வேதநா வர்விரும் புந்திருக் கண்ணபுரத்து
ஆதியானை யடைந்தார்க் கல்லல் லில்லையே. (கூ)

(ப - ரை) பாதம் - அவன் திருவடிகளை, நாளும் - ஏதோ ஒருநாள், பணிய - பிரபத்தியாலே ஆச்ரயிக்க, பிணி - வியாதி (இதற்குக்காரணமான முன்செய்தபாபங்கள்), தணியும் - குறையும் (போகும்), ஏதம்-(மேல் நினைவில்லாமல்செய்யும்)பாபங்கள், சாரா - சேரமாட்டா, வேதநாவர் - வேதத்தை நாக்கிலேயுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள், விரும்பும் - ஆசைப்படும் இடமான, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற, ஆதியானை - உலகத்துக்குக் காரணமாயிருக்கிற எம்பெருமானை, அடைந்தார்க்கு, அல்லல் - துக்கங்கள் (இவைகளுக்குக் காரணமான பாபங்கள்), இல்லை, எனக்கேல் - எனக்கோ, இனி என் குறை - என்ன குறையிருக்கிறது?

(கருத்து) எம்பெருமானுடைய திருவடிகளை ஏதோ ஒரு காலத்திலே ஆச்ரயித்தவர்களுக்குமுன்செய்தபாபங்கள் பலனைக் கொடுக்கும் சக்தியில்லாதவைகளாகும். அதற்குமேல் அவர்கள் நினைவில்லாமல் செய்யும் பாபங்கள் அவர்களிடத்தில் ஒட்டுகிறவைகள் அல்ல. வேதத்தை எப்போதும் படித்துக்கொண்டும் மற்றவர்களுக்குச் சொல்லிக்கொடுத்துக்கொண்டுமிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆசைப்படும் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் உலகத்துக்குக் காரணமானவனை அடைந்தவர்களுக்கு முன்செய்த பாபங்களும் போகும்; மேல் பாபமென்கிற நினைவில்லாமல் இனி செய்கிறவைகளும் அவர்களிடத்தில் ஒட்டா. இதில் ஸந்தேஹமில்லை. நானோ அவனையே பிராப்யமாகவும் உபாயமாகவும் பற்றிப் பிரபத்திபண்ணினேன். எனக்கு ஒரு குறையுமில்லை.

குறிப்பு- (1) பாட்டில் 'நசிக்கும்'என்று சொல்லாமல் 'தணியும்' என்று சொன்னதின் கருத்து- பிரபத்திபண்ணின உடனே பிரபத்தியைப்பண்ணினவர்களுடைய புண்ணியங்களையும் பாபங்களையும் அவர்களிடத்திலிருந்து பிரித்து அவர்கள் உடம்பை

விட்டுப்போகும்போது அவைகளுக்குச் செலவு செய்கிறான் என்பது.

(2) பாட்டில் 'நாளும்' என்பதற்கு எப்போதும் என்பது பொருள் அல்ல; ஏன் என்றால், பிரபத்தி ஒரே தடவை செய்ய வேண்டியது. ஆகையால், காலம்கிடைத்தபோது என்பது அந்தச் சொல்லுக்குப் பொருள்.

(3) முதல் இரண்டு அடிகளில் சொன்னதையே மறுபடியும் சொன்னது இதில் ஸந்தேஹமில்லையென்று காட்டுவதற்காக.

(4) பிரபத்தி செய்வதைச் சொன்னபோது ஆழ்வாருக்குத் தாம் பண்ணின பிரபத்தி நினைவுக்கு வந்தது. அதை நினைத்து தமக்கு இனி என்ன குறையிருக்கிறது என்று ஸந்தோஷப்படு கிறார்:—

இ—ம் எனில் என்பது ஏல் என்று வந்திருக்கிறது. (9)

---

அவ— ஆழ்வார் ஸந்தோஷத்தினால் தமக்கு ஒருகுறையு மில்லையென்று சொன்னதை மறுபடியும் சொல்லுகிறார்:—

இல்லை யல்லலெனக் கேலினி யென்குறை
அல்லி மாத ரமருந்திரு மார்பினன்
கல்லி லேய்ந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரம்
சொல்ல நாளுந் துயர்பாடு சாராவே. (௰)

(ப -ரை) அல்லல் - துக்கங்கள், இல்லை எனக்கு, இனி, என் குறை - என்னகுறை? அல்லி மாதர் - தாமரைப்பூவிலிருக்கும் பிராட்டி, அமரும் - நிலையாய் வஸிக்கிற, திரு மார்பினன் - திரு மார்பையுடையவனுடைய, கல்லில் - ரத்நங்களால், ஏய் - பொருந் தின - (செய்யப்பட்ட), மதிள்சூழ் திருக்கண்ணபுரம் - திருக்கண் ணபுரத்தை, சொல்ல, நாளும் - ஒருகாலத்திலும், துயர் - துக்கங் கள், பாடு - உங்கள்பக்கத்தை, சாரா - கிட்டா.

(கருத்து) எம்பெருமான் திருவடிகளை ஆச்ரயித்து அடைய வேண்டிய பலனுக்கு விரோதிகள் அதிகமாயிருப்பதையும் பக்தியோகம் என்கிற உபாயத்தைச் செய்வதிலுள்ள கஷ்டத்தை யும் பார்த்து உண்டாகும் துக்கங்கள் எனக்கு இல்லை. இப்படி அவன் திருவடிகளைப் பிராப்யமாக அடைந்திருக்கிற எனக்கு

ஒரு குறைவுமில்லை. அவனே ரக்ஷிக்கிறவன் என்று அவனிடத்தில் உங்களுக்கு நம்பிக்கை உண்டாகாவிட்டாலும் தாமரைப்பூவிலிருக்கும்பிராட்டியைத் திருமார்பில் வைத்துக்கொண்டிருக்கிறவனுடைய ரத்னங்களால் செய்யப்பட்ட மதிள்களால் சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தின் பெயரையாவது சொல்லுங்கள். அதனால் ஒரு கெடுதலும் இல்லை; அதைச்செய்வதில் ப்ரயாஸமுமில்லை. ஒரு நாளும் துக்கங்கள் உங்களிடம் வாரா.

குறிப்பு— எம்பெருமான், தன்னை அடைவதற்குத் தடையாக ஒருவனிடத்திலிருக்கும் ஏதோ ஒரு குற்றத்தைப்பார்த்து, அவனைக் கவனிக்காமலிருப்பன். பிராட்டி ஒரு வியாஜத்தைக்கொண்டு எம்பெருமான் சீற்றத்தை மாற்றி அவனை ரக்ஷிக்கும்படி செய்வள். அப்படிப்பட்ட பிராட்டி எப்போதும் அவனுடன்கூட இருக்கிறாள் என்பது. (10)

---

பாடுசா ராவினை பற்றற வேண்டுவீர்
மாட நீடு குருகூர்ச்சட கோபன்சொல்
பாட லானதமி ழாயிரத்து ளிப்பத்தும்
பாடி யாடிப் பணிமினவன் தாள்களே. (கக)

(ப - ரை) பாடு சாரா-(உடம்புக்கு) வருத்தம் முதலானவை கிட்டாதபடி (ஸுகமாகச் செய்யக்கூடிய உபாயத்தாலே), வினை பற்று - கர்மங்களின் ஸம்பந்தம், அற - அற்றுப்போக, வேண்டு வீர் - வேண்டுகிற ஜனங்களே! மாடம் நீடு - வீடுகள் உயர்ந்திருக்கிற, குருகூர் சடகோபன் சொல், பாடலான - பாட்டுக்களான, ஆயிரத்துள், இ பத்தும் - இந்தப் பத்துப்பாட்டுக்களையும், பாடி, ஆடி - (அதினாலுண்டான ஸந்தோஷத்தாலே ஒரே இடத்தில் நிற்காமல்) அலைந்து, அவன் தாள்கள் - அவனுடைய திருவடிகளை, பணிமின் - நமஸ்காரம் பண்ணுங்கள்.

(கருத்து) ஜநங்களே! உடம்புக்கு வருத்தம் முதலானவைகள் இல்லாமல் லகுவான உபாயத்தாலே உங்களுடைய கர்மங்களோடு ஸம்பந்தம் உங்களைவிட்டு அற்றுப்போக ஆசைப்பட்டால், வீடுகள்உயர்ந்துள்ள குருகூரில் எழுந்தருளியிருக்கும்

ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களையும் பாடி ஆடி அவன் திருவடிகளுக்குப் பிரீதியுடன் நமஸ்காரம் செய்யுங்கள். இப்படிச் செய்தால், உங்களுடைய எல்லாப் பிரதிபந்தகங்களும் போகும். அவனையும் பரிபூர்ணமாக அநுபவிக்கலாம்.

(இ—ம்) சாரா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.(11)

---

ஸர்வஶ்ரேஷ்ட²ஸ் ஸ்வகீயைரவிஜஹத³வநாத³ண்ட³ஷண்டா³
தி⁴பத்யாந் நீளயா ஸ்வாஶ்ரிதபத³விதரணாத் ஸக்தஸந்நி
க்⁴ருஷ்டபா⁴வாத் | தா³ஸாநாம் ஸத்யபா⁴வாத³ப⁴ஜநதயா ஸௌ
ஜந்யதாப்ரணயவதீ ஸ்வாந்தே ஸ்ரீஸாக்ஷாத்ஸம்பந்ந தே
த்ரஸாண் ஸ்ரீஸௌரி: ॥ ॥கக௨॥

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவர்களுடைய ஸம்ஸாரத்தைப்போக்குவதற்கு எப்போது இடம் அகப்படும் என்று பார்த்துக்கொண்டிருக்கிறான் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) எல்லாருக்கும் மேற்பட்டவனாயிருப்பது; (2) தன்னைச் சேர்ந்தவைகளாலே உலகத்தை ரக்ஷிப்பது. (3) அண்டங்களுக்கு ஸ்வாமியாயிருப்பது. (4) நீளைக்கு நாயகனாயிருப்பது. (5) தன் திருவடிகளை அடைந்தவர்களுக்குப் பிறப்பில்லாமையைக் கொடுப்பது. (6) பக்தர்களிடத்தில் மிகுந்த ஸ்நேஹமுள்ளவனாயிருப்பது. (7) தன் தாஸர்களுக்கு உண்மையாயிருப்பது. (8) தன்னைப் பிராப்யமாக எண்ணுகிறவர்களுக்கு மிகவும் ஸுலபனாயிருப்பது. (9) உலகங்கள் உண்டாவதற்கும் காரணமாயிருப்பது. (10) பிராட்டியுடன் கூட இருப்பது. (112)

---

இத்தம் ஸர்வேஷு காலேஷு விரக்தகரணம் ஶ்ரீஸகி
நாம் பதித்வாத்ஸல்யாத் ரக்ஷிதாரம் ஸுமணமரிமேஸம்ஸ்வா
ரஸ்யம் ப்ராஹ நாத: | விஸ்ததாம் பாவ்யஶக்யம் பந்தகேவ
ஸாவிஸ்மரணீயம் ஸாதத்ர்யா மக்ஷ்யாசிஷ்டம் ஸுஸிங்ர்யாநந்த
ஸமயநேநஹ: ப்ரதீக்ஷம் ஸாமித்ரம் ॥ ||௧௧௩||

இந்தப் பத்தில், எம்பெருமான் ஆச்ரிதர்களுக்கு நல்ல மித்ரன் என்பது அவனுடைய பத்து குணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) எல்லார்க்கும் அவனொருவனே பந்துவாயிருப்பது; (2) வெகு காலமாகவே ஆரம்பித்து க்ருபைச் செய்துகொண்டிருப்பது; (3) ஸௌசில்யத்துக்கு ஸமுத்ரமாயிருப்பது; (4) தான் ஸ்வாமியாயிருக்கிற உறவாலேயே ரக்ஷிப்பது; (5) தன் குணங்களின் பெருமையை நன்றாய் நினைக்கும்படி செய்வது; (6) மறக்கமுடியாதபடி இருப்பது; (7) ஆசாரியர்கள் வழியாகத் தன்னை ஆச்ரயிக்கிறவர்களுக்கு நம்பத் தகுந்தவனாயிருப்பது; (8) எல்லாருடைய க்ஷேமத்தை நினைத்துக் கொண்டிருக்கிற பிராட்டியை மஹிஷியாக உடையவனாயிருப்பது; (9) ஆச்ரிதர்களுக்குத் தன்னைக் கொடுப்பதற்குத் தகுந்தகால முள்ளவனாயிருப்பது; (10) அவர்களை ரக்ஷிக்கும் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது. (113)

---

ஶ்ரீமதே வேதாந்த ராமாநுஜ மஹாதேஶிகாய நம: ||
ஜ்ஞாநவைராக்ய நிதயே ஶ்ரீமதே வேதாந்த ராமாநுஜ மஹாதேஶிகாய நம: ||

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.
திருக்குருகைப் பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.
ஒன்பதாம் பத்து முற்றிற்று.

---

ஸ்ரீமதே வேதா3ந்தராமாநுஜமஹாதே3ஶிகாய நம: ||

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

# பத்தாம்பத்து.



உத்3தே3ஶ்யத்வம் நிருபாதி4கஸௌஹார்த3விஸ்பா2ரணேந |
ப்ராதூ3ந்யாஸமூர்ச்சா2தி3ஜநிதவஜதம் நிஜபதே3 |
த்ரைவர்க்3கிகாதிஸீமாந்தரப4வண்ட3மத்3பாத:
ஸஹாயீகாரவர்த்மாணஸ்வபரமபதகே விந்த3தி ஸ்மாமுநி: || ||உக||

இயற்கையாக உள்ள தன்னுடைய கிருபையை வெளிப்படுத்துகிற தன்னுடைய லீலைகளாலே தன் திருவடிகளில் கரைபுரண்ட ஆவலை உண்டுபண்ணின எம்பெருமானை, தர்மம் அர்த்தம் காமம் என்கிற புருஷார்த்தங்களின் அநுபவத்தின் இடமான பிரகிருதிமண்டலத்திற்குமேலே உள்ள நிலையான வைகுந்தமென்கிற பட்டணத்துக்குக் கொண்டுபோய் விடும் ராஜமார்க்கத்துக்கு ஸஹாயமாக வைத்துக்கொண்டு பத்தாம் பத்தில் முனிச்ரேஷ்டரான ஆழ்வார் அவனை அடைகிறார் என்பது பத்தாம்பத்தில் சொல்லப்படுகிறது. (21)

க3திம் வ்யூஹேஶஸூக்தோபேதஸ்ரீக்ஷாவிசாரஸம்
ஸஜ்ஜீஸந்தி2ஸந்நாதம் விவிப4ஜ்ஞநந்திகிர்யதிஹ |
ஸமே தீவ்ரஸ்வாத்மம் ஸ்வவிஷயக்ருதார்த்தாநுரமா
ஹ்ருதந்த்ராதாதிஷ்டம் ஸந்தூரணிமோவாநஜம் தூஸ்யாஜ்ய | ||உஉ||

இந்தப் பத்தில், ஜீவன்கள் பரமபதத்துக்குப் போகிற வழியில் எம்பெருமான் ஸஹாயமாயிருக்கிறான் என்பது அவனுடைய பத்துக் குணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன :— (1) பரமபதத்துக்குப் போகவேண்டுமென்று ஆசைப்பட்டுத் தன்னை அடைந்தவர்களுக்குக் கதி (வழித்துணை) யாயிருப்பது ;

(2) மார்க்கத்திலிருக்கும் கஷ்டத்தைப் போக்குவது ; (3) தகுந்த காரணமில்லாதபோதும் தங்களைவிட்டுப் போவனோ என்று ஆச்ரிதர்கள் ஸந்தேஹப்படும்படி இனியவனுயிருப்பது ; (4) பக்தியோகம் பண்ணுகிறவர்களாலே லகுவாய் அடையும்படி இருப்பது ; (5) பக்தியோகம் பண்ணுவதற்குப் பல வழிகள் உள்ளவனுயிருப்பது ; (6) பலம் கொடுப்பதில் தீவிரமான முயற்சி செய்வது ; (7) தம்மிடத்தில்போல் ஆச்ரிதர்களிடத்திலும் மிகுந்த ப்ரீதியைப் பண்ணுவது ; (8) ஆச்ரிதர்கள் எண்ணுமல் செய்கிற ஸுக்ருதத்தைக்கொண்டே ஸந்தோஷப்படுவது ; (9) அர்ச்சிஸ் என்பது முதலாக ஸுகமாக இருக்கிற வழியில் ஸஹாயனுயிருப்பது ; (10) திரும்பிப் பிறப்பது என்பது இல்லாமையோடு கூடிய மோக்ஷத்தைக் கொடுப்பது. (22)

---

## முதல் திருவாய்மொழி.

---

அவ—கீழ்த் திருவாய்மொழியில் 'மரணமானல் வைகுந்தம் கொடுக்கும் பிரான்' என்கிற எம்பெருமானுடைய திருவுள்ளத்தை அறிந்து ஆழ்வார் சித்தஸமாதானத்தை அடைந்தார். இப்போது அதுக்கு போகும் காலம் கிட்டினதாக அறிந்து, புக்ககத்துக்குப் போகும் பெண் பந்துக்களுடன் சொல்லிக்கொள்ளப் போவதைப்போல், தாம் முன்னல் மங்களாசாஸநம் பண்ணுத திவ்ய தேசங்களுக்குப் போக ஆரம்பித்து, முதலில் திருமோகூருக்குப் போனதை இந்தத் திருவாய்மொழியில் சொல்லுகிருர்.

(2) எம்பெருமானை உபாயமாக ஆச்ரயித்ததை இந்தத் திருவாய்மொழியில் சொல்லவில்லை. தாம் போகும் வழி புதிதாயிருப்பதாலும், வெகுதூரமிருப்பதாலும், பழகின உடம்பையும் பழகின ஜனங்களையும் விட்டுவிட்டுத் தாம் அந்த வழியில் போகும்போது முகம் அறிந்தவர்களில்லாமையாலும் எம்பெருமானே வழித்துணை என்று நிச்சயித்துப் பேசுகிருர் :—

(கலித்துறை.)

தாளதாமரைத் தடமணி வயற்றிரு மோகூர்
நாளு மேவிநன் கமர்ந்துநின் றசுரரைத் தகர்க்கும்
தோளு நான்குடைச் சுரிகுழற் கமலக்கட் கனிவாய்க்
காளமேகத்தை யன்றிமற் றொன்றிலங் கதியே. (க)

(ப - ரை) தாள தாமரை - தண்டையுடைய தாமரைப் பூக்களையுடைய, தடம்-தடாகத்தையும், அணி-அழகான, வயல்-வயல்களையுமுடைய, திருமோகூர் - திருமோகூரில், நாளும் - ஒவ்வொருநாளும், மேவி - (புதிது புதிதாயிருப்பதாக எண்ணி) பிரீதியைப் பண்ணி, நன்கு - நன்றாக, அமர்ந்து - எழுந்தருளி, நின்று - (வைகுந்தத்தில் ருசியில்லாதவனாக) நிலையாயிருக்கிறவனும், அசுரரை, தகர்க்கும் - கண்டிக்கிற, நான்கு, தோளும் உடை - தோள்களையுடையவனும், சுரிகுழல் - சுருண்ட குழல்களையும், தாமரைக்கண்-தாமரைப்பூப்போன்ற திருக்கண்களையும், கனிவாய் - கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தையும் உடையவனும், காளமேகத்தை அன்றி - கீருண்ட மேகம்போலிருப்பவனுமான எம்பெருமானைத்தவிர, மற்று ஒன்று-வேறு ஒரு, கதி இலம் - (வழித்துணையாக) அடையவேண்டிய வஸ்து இல்லாதவர்கள் நாம்.

(கருத்து) பறிக்கப்படாமல் தண்டிலேயே அழகாயிருக்கிற தாமரைப் பூக்களாலே அலங்கரிக்கப்பட்ட தடாகங்களையுடைய, வயல்களால் சூழப்பட்ட, திருமோகூரில் ஒவ்வொருநாளும் அந்த ஊரின் அழகைப் பார்த்து, புதிது புதிதாய் இருப்பதுபோல் எண்ணி, அதிலிருப்பதைத் தமக்கு ஸ்வயம்பிரயோஜனமாக எண்ணி, வைகுந்தத்திலும் ருசியில்லாதவனாய் காளமேகம்போல் இருக்கிற எம்பெருமானை நமக்கு வழித்துணை. அசுரர்களைக் கண்டித்து, அதினால் வீரஸ்ரீ தோன்றும்படியிருக்கிற நான்கு தோள்களுள்ளவனாயிருப்பதாலே வழித்துணையாயிருப்பதற்கு வேண்டிய சக்தி அவனிடமிருக்கிறது. வழியில் நிழலைக்கொடுக்கும் கற்பகச்சோலைபோலிருக்கும் அவன் தோள்கள். அவனுடைய நல்ல வாஸனையுள்ள குளிர்ந்த மிகவும் மிருதுவான சுருண்ட குழல்கள் அவன் பின்னாலேபோகும் நமக்கு வழியில் உண்டாகும்

சிரமத்தைப் போக்கும். பிரீதியினாலே அவன் திருக்கண்கள் திரும்பி நம்மைக் குளிரக் கடாக்ஷிக்கும். அவனுடைய திருப் பவளம் மந்தஹாஸத்துடன் மதுரமாகவும் நம்முடைய ச்ரமத் தை மறக்கும்படியாகவும் பேசும்.

குறிப்பு :—(1) தாமரைபூக்கள் ஆழமான ஜலத்தில் தண்டின் மேலேயேயிருப்பதால், பொன்மலைபோல் விசாலமாயும் உயர்ந்து மிருக்கின்றன. தண்டுகளும், அவைகளின் பாரத்தைத் தாங் கும்படி மரகதமணிகளால் செய்யப்பட்ட தூண்கள்போல் பெரி யவைகளாயிருக்கின்றன என்பது 'தாளதாமரை' என்பதின் கருத்து.

(2) முதல் மூன்று பாட்டுக்களிலுள்ள பன்மைச்சொற்கள் ஆழ்வாரையே சொல்லுகின்றன. இது தனித்தன்மைப் பன் மை என்று சொல்லப்படும். (1)

---

அவ—கீழ்ப்பாட்டில் எம்பெருமான் வைகுந்தத்துக்குப் போகும் வழியில் துணையென்று சொன்னார்; அவனைத்தவிர வேறு துணை ஒருபோதுமில்லை என்கிறார் :—

இலங்கதி மற்றொன் றெம்மைக்கு மீன்தண் டுழாயின்
அலங்க லங்கண்ணி யாயிரம் பேருடை யம்மான்
நலங்கொள் நான்மறை வாணர்கள் வாழ்திரு மோகூர்
நலங்க ழலவ னடிநிழற் றடமன்றி யாமே. (உ)

(ப - ரை) ஈன் - (இன்) இனியதான, தண் - குளிர்ந்த, துழாயின் - துளஸியினுடைய, அலங்கல் - விளங்குகிற (அலங் காரமான), அம் - அழகான, கண்ணி - மாலையையும், ஆயிரம் பேருடை - ஆயிரம் பேர்களையுமுடைய, அம்மான் - ஸ்வாமியும், நலம் கொள் - நல்ல குணங்களைக்கொண்டிருக்கிற, நான் மறை வாணர் - நான்கு வேதங்களுக்கு நிர்வாஹகர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள், வாழ் - வாழுகிற, திருமோகூர் - அவ்வூரிலிருக்கிற வனும், நலம் கழல் - நல்ல குணங்களையுடைய திருவடியையுடை யவனுமான, அவன் - அவனுடைய, அடி நிழல் - திருவடி நிழ லாகிற, தடம் இன்றி - தடாகமில்லாமல், யாம் - நாம், எம்மைக் கும் - எந்தப் பிறப்பிலும், மற்றொன்று - வேறொன்றான, கதியிலம் - கதியில்லாதவர்கள்.

(கருத்து) இனிய குளிர்ந்த துளஸியினுடைய அலங்காரமாயும் அழகாயுமிருக்கிற மாலையைத் தோள்களில் தரிக்கிறவனும், இந்தத் தோளும் மாலையுமான அழகைக்கண்டு பிரீதியினால் பரவசராய் ஸ்தோத்ரம் பண்ணுகிறவர்களுக்கு வேண்டினபடி ஆயிரம் திருநாமங்களையும் அவைகளால் காட்டப்பட்ட ஆயிரம் குணங்களையும் உடையவனும், எல்லாருக்கும் இயற்கையாகவே ஸ்வாமியும், நல்ல குணங்களுள்ள திருவடிகளையுடையவனும், நல்ல குணங்களையுடைய நான்கு வேதங்களுக்கு நிர்வாஹகர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழுகிற திருமோகூரில் எழுந்தருளியிருப்பவனுமான எம்பெருமானுடைய திருவடி நிழலாகிய தடாகம் தவிர, நமக்கு எந்தப் பிறப்பிலும் வேறு துணையில்லை.

குறிப்பு :—(1) 'அம்மான்' என்பதற்கு ஸ்வாமி என்பது பொருள். எம்பெருமான் ஸ்வாமியாயிருப்பது ஒரு காரணத்தால் வந்ததன்று. ஆகையால், அவனை ஸ்தோத்ரம் பண்ணுவது ஆத்மாக்களுக்குத் தகுந்தது. அவனைத்தவிர வேறு ஒருவனை ஸ்தோத்ரம் பண்ணுவது தோஷமுள்ளது என்பது கருத்து.

(2) 'நான்மறைவாணர்கள்' என்பதற்குப் பொருள்— நான்கு வேதங்களின் உட்கருத்தை அறிந்தவர்கள் என்பது. ஆகையால், "ஆச்ரிதர்களை ரக்ஷிப்பது மிகவும் உயர்ந்த தர்மம்" என்று எம்பெருமானுக்குக்கூடச் சொல்லும் திறமையையுடையவர்கள் என்பது கருத்து.

(3) அவர்களுக்கு நலமாவது—எம்பெருமானை ஆச்ரயிக்க வந்தவர்களை இரக்கத்தினால், 'எங்களுக்கு ஸமமாக ஆகட்டும்' என்று சொல்லும் தன்மை.

(4) எம்பெருமான் திருவடிகளுக்கு நன்மையாவது — ஆச்ரயிக்க வந்தவர்களுடைய குணங்களையும் தோஷங்களையும் பாராமலும், ஸுக்ரீவன் விபீஷணன்விஷயத்தில் சொன்னது போல், அவன் பக்கத்தில் இருக்கிறவர்கள் பிரீதியினால் இது தகுந்தது இது தகாதது என்று அறியாதவர்களாய், 'இவர்கள் தகாதவர்கள், இவர்களை விட்டுவிடவேண்டியது' என்று சொன்னாலும் அவர்களை விடாமல் அவர்களுக்கு ஸுலபமாயிருப்பது.

(இ - ம்) ஈன் - இன் : நீட்டல் விகாரம். (2)

அன்றி யாமொரு புகலிட மிலமென்றென் றலற்றி
நின்று நான்முக னரனொடு தேவர்கள் நாட
வென்றிம் மூவுல களித்துழல் வான்திரு மோகூர்
நன்று நாமினி நணுகுதும் நமதிடர் கெடவே. (௩)

(ப - ரை) யாம் - நாங்கள், [உன்னை] அன்றி, ஒரு புகல் இடம் - ஒதுங்கியிருக்குமிடம், இலம் - இல்லாதவர்கள், என்று என்று அலற்றி - என்று எப்போதும் சொல்லிக்கொண்டு, நான்முகன், அரனொடு - பிரம்மாவோடும் சிவனோடும், தேவர்கள், நாட - தேடிக்கொண்டுவந்து ஆச்ரயித்தபோது, வென்று (அவர்கள் விரோதிகளை) ஜயித்து, இ மூவுலகு - இந்த மூன்று உலகங்களையும், அளித்து - ரக்ஷித்து, உழல்வான் - இதுவே பொழுது போக்காகத் திரிகிறவனுடைய, திருமோகூர் - திருமோகூரை, நாம், நமது, இடர் - துக்கம், கெட, நன்று, நணுகுதும் - கிட்டுவோம்.

(கருத்து) "அஸுரர்களைக் கண்டு பயப்படுகிற நாங்கள் உன்னைத்தவிர வேறு ஒதுங்கியிருக்குமிடம் இல்லாதவர்கள்" என்று எப்போதும் சொல்லிக்கொண்டு பிரம்மாவுடனும் சிவனுடனும் கூடி தேவர்கள் தேடிக்கொண்டுவந்து ஆச்ரயிக்கும் போது அவர்கள் விரோதிகளை நாசம்செய்து, இந்த மூன்று உலகங்களையும் ரக்ஷித்துக்கொண்டு இதுவே பொழுதுபோக்காய்த் திரிகிற எம்பெருமான் இப்போது திருமோகூரில் எழுந்தருளியிருக்கிறான். அவனை 'நமக்கு ஆர் துணை' என்று வருத்தப்படுவதாகிய துக்கம் போகும்படி வேறு பிரயோஜனத்தில் ஆசையில்லாதவர்களாய் அநுபவிப்போம். (3)

---

அவ—கீழ்ப்பாட்டில் தாம் எம்பெருமானை அநுபவிக்க ஆரம்பித்ததைச் சொன்னார்; இதில் ஸ்ரீவைஷ்ணவர்களைத் தம்முடன் சேர்ந்து அவனை அநுபவியுங்கள் என்கிறார்:—

இடர்கெட வெம்மைப் போந்தளி யாயென் றென்றேத்திச்
சுடர்கொள் சோதியைத் தேவரும் முனிவரும் தொடரப்
படர்கொள் பாம்பணைப் பள்ளிகொள் வான்திரு மோகூர்
இடர்கெ டவடி பரவுதுந் தொண்டீர் வம்மினே. (௪)

(ப - ரை) இடர் கெட - துக்கங்கள் போகும்படி, எம்மை, போந்து - வந்து, அளியாய் - ரக்ஷிக்கவேண்டும், என்று என்று - என்று இடைவிடாமல், ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி, சுடர் கொள் - காந்தியைக்கொண்ட, சோதியை - ஜ்யோதிர்மயமான தன் திருமேனியை, தேவரும் - பிரம்மா முதலான தேவர்களும், முனிவரும் - ருஷிகளும், தொடர - தன்னிடம் வந்து ஆச்ரயிப்பதற்காக, படர் கொள் - விரிந்திருப்பதைக்கொண்ட, பாம்பு அணை - நாகசயனத்தில், பள்ளிகொள்வான் - படுத்திருக்கிறவனுடைய, திருமோகூர் - திருமோகூரில், அடி - (அவன்) திருவடிகளை, பரவுதும்-ஸ்தோத்ரம் பண்ணுவோம், தொண்டீர்! வம்மின் - வாருங்கள்.

(கருத்து) பிரம்மா முதலான தேவர்களும், ஐசுவரியத்தைத் தேடுகிற ருஷிகளும் 'எங்கள் துக்கங்கள் போகும்படி வந்து ரக்ஷிக்கவேண்டும்' என்று இடைவிடாமல் ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு, அவர்கள் வேண்டினபோது எல்லாம் வந்து காந்தியுள்ள தன்னுடைய அப்ராகிருதமான திருமேனியை ஆச்ரயிப்பதற்காகத் திருப்பாற்கடலில் ஆதிசேஷன்மேல் பள்ளிக்கொண்டிருக்கிற எம்பெருமான் அவர்களைப்போல மனிதர்களும் வந்து ஆச்ரயிப்பதற்காகத் திருமோகூரில் எழுந்தருளியிருக்கிறன். ஏ தொண்டர்களே! நம்முடைய துக்கம் எல்லாம் போகும்படி அவன் திருவடிகளை ஸ்தோத்ரம் பண்ணுவோம். அதற்கு வாருங்கள்.

குறிப்பு:—(1) பிரம்மாவுக்கு இடராவது — தனக்கு உயர்ந்த தனமாயும் வேலை செய்வதற்குக் கண்போல் துணையாயும் இருக்கும் வேதத்தை அஸுரர்கள் கொண்டுபோனது. ருஷிகளுக்கு இடர் தாங்கள் வேண்டினதற்கு இடையூறுகளாயிருக்கும் கர்மங்கள்.

(2) 'சுடர்கொள்' என்பதற்கு இவர்கள் நம்மை வந்து ஆச்ரயிக்கப்பெற்றோமே என்கிற ஸந்தோஷத்தினால், எம்பெருமானுடைய திருமேனிக்கு ஓர் அழகு உண்டாயிருக்கிறது என்பது கருத்து.

(3) ‘படர் கொள்’ என்பதற்கு எம்பெருமான் தன்மேல் படுத்திருப்பதாலே உண்டான ஸந்தோஷத்தாலே ஆதிசேஷனுடைய படங்கள் விரிந்திருக்கின்றன என்பது கருத்து.

(இ - ம்) பரவுதும் - தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று. தும் - காலம் காட்டியது. (4)

---

அவ—கீழ்ப்பாட்டில் எம்பெருமான் திருவடிகளை ஸ்தோத்திரம் பண்ணக் கூப்பிட்டார்; அந்த ஊரை ஆச்ரயிக்கக் கூப்பிடுகிறார் :—

தொண்டீர் வம்மினஞ் சுடரொளி யொருதனி முதல்வன்
அண்ட மூவுல களந்தவ னணிதிரு மோகூர்
எண்டி சையுமீன் கரும்பொடு பெருஞ்செந்நெல் விளைய
கொண்ட கோயிலை வலஞ்செய்திங் காடுதுங் கூத்தே. (ரு)

(ப - ரை) ஒரு-ஒன்றானவனும், (பெயர்களும் உருவங்களும் இல்லாமையால் ஒன்று என்று சொல்லப்பட்டவனும்), தனி - இரண்டாவதில்லாதவனும் (உலகமுண்டாவதற்கு வேறு காரணமில்லாதவனும்), முதல்வன் - உலகத்துக்குக் காரணமானவனும், நம் - நம்மால் அநுபவிக்கவேண்டியவனும், சுடர் ஒளி - பிரபையோடுகூடிய தேஜோமயமான திருமேனியையுடையவனும், அண்டம் மூவுலகு - அண்டத்துக்குள்ளேயிருக்கும் மூன்று உலகங்களை, அளந்தவன் - அளந்தவனுமான எம்பெருமான், எண் திசையும் - எட்டுத் திக்குக்களிலும், ஈன் (இன்) - இனியதான, கரும்பொடு, பெரும் - அதற்கு நிழலைக்கொடுக்கும்படி உயர்ந்திருக்கிற, செந்நெல், விளைய - விளையும்படி, கொண்ட - இருப்பிடமாக எடுத்துக்கொண்ட, கோயிலை - கோயிலான, அணி - பூமிக்கு அலங்காரமான, திருமோகூர் - திருமோகூரை, இங்கு, வலம் செய்து - பிரதக்ஷிணம் செய்து, கூத்து ஆடுதும் - (ஸந்தோஷத்தாலே) கூத்து ஆடுவோம், தொண்டீர்! வம்மின் - வாருங்கள்.

(கருத்து) எம்பெருமான் பெயர்களும் உருவங்களுமில்லாமல் பிரளயகாலத்திலிருந்து, ‘பெயர்களும் உருவங்களுமுள்ள உலகமாக ஆவேன்’ என்று ஸங்கல்பித்து, வேறு உதவியில்லாமல்

இந்த உலகத்தை உண்டுபண்ணி அதற்கு மஹாபலியால் ஆபத்து வந்தகாலத்தில் தன் திருவடிகளால் அண்டத்திலிருக்கும் மூன்று உலகங்களை அளந்து எடுத்துக்கொண்டு அதை ரக்ஷித்தான். அவன் காந்தியுள்ள அப்ராக்ருதமான திருமேனியுள்ளவனுகை யாலே நம்மால் அநுபவிக்கவேண்டியவன். பூமிக்கு அலங்கார மான திருமோகூரைத் தனக்கு இருக்குமிடமாக நினைத்துக் கொண்டு அதில் எழுந்தருளியிருக்கிறான். ஆகையால்தான் அந்த ஊரில் எட்டுத் திக்குக்களிலும் இனிய கரும்பும் அதற்கு நிழல் செய்யும்படி உயர்ந்த செந்நெலும் விளையும்படியான ஸம்ருத்தி உண்டாயிருக்கிறது. ஆகையால், அந்த ஊரை நாம் போய்ப் பிரதக்ஷிணம்செய்து அதை அநுபவிக்கிற ஸந்தோஷத்தாலே கூத்தாடுவோம். தொண்டீர்! வாருங்கள்.

குறிப்பு:—(1) ஒரு மண்கட்டியைக் குடமாகவும் பானை யாகவும் செய்வதற்கு முன்னாலே குடம் பானை என்கிற பேர் களும் அவைகளுக்கு இப்போதுள்ள உருவங்களுமில்லை. அதை ஒரு குயவன் ஒரு சட்டியாகவும் பானையாகவும் செய்கிறான். அதுபோல் பிரளயகாலத்தில் இந்த உலகம் பெயர்களும் உருவங் களுமில்லாமலிருந்தது. அதற்குள் ஆத்மாவாயிருந்த எம்பெரு மான் 'பெயர்களும் உருவங்களுமுள்ள உலகமாகத் தானே ஆவேன்' என்று நினைத்து, அந்த நினைவினாலேயே அந்த உலக மாக ஆனான். இதைக் காண்பிப்பதற்காகப் பாட்டு அவனை 'ஒரு தனி முதல்வன்' என்று சொல்லுகிறது. மண்கட்டியைக் குயவன் சட்டியாகவும் பானையாகவும் செய்வதுபோல், உலகம் உண்டாவதற்கு எம்பெருமானைத் தவிர வேறு காரணமில்லை.

(2) பெற்றதாயே பிள்ளையை ரக்ஷிப்பதுபோல் உலகத்தை உண்டுபண்ணினவனே அதை ஆபத்துக்காலத்தில் ரக்ஷிக்கிறான் என்பது 'அளந்தவன்' என்பதால் காட்டப்படுகிறது.

(3) அவனுடைய திருமேனி ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ளதாய், மூன்று குணமுள்ள பிரகிருதியைக்காட்டிலும் வேறாய், பிரகாசமுள்ளதாய்ச் செய்யப்பட்டு நாலு பக்கங்களிலும் காந்தி வீசுவதால் அதை 'சுடர் ஒளி' என்று சொல்லுகிறார்.

(இ - ம்) ஆடுதும் - தன்மைப்பன்மை எதிர்கால வினை முற்று. தும் - காலம் காட்டும் விகுதி. (5)

அவ—எம்பெருமானை ஸேவிக்கும்படி தொண்டர்களைக் கூப்பிட்டு அவர்களுக்கு அந்த ஸேவையில் ருசியுண்டாவதற்காக அவனுடைய அழகையும் குணங்களையும்சொல்லி, அவன் திருவடிகளைத்தவிர வேறு உபாயமில்லை என்று சொல்லுகிறார் :—

கூத்தன் கோவலன் குதற்று வல்லசுரர்கள் கூற்றம்
ஏத்தும் நங்கட்கு மமரர்க்கும் முனிவர்க்கு மின்பன்
வாய்த்த தண்பணை வளவயல் சூழ்திரு மோகூர்
ஆத்தன் தாமரை யடியன்றி மற்றி லமரணே. (௩)

(ப - ரை) கோவலன் - கோபாலனும், கூத்தன்-கூத்தாடுவதுபோல் மனதையிழுக்கும்படியான லீலைகளைச் செய்தவனும், குதற்று-வழிதப்பி நடப்பதில் (உலகத்திற்குத் துன்பம் செய்வதில்), வல்-பலமுள்ள, அசுரர்கள் - அஸுரர்களுக்கு, கூற்றம்-யமனும், அமரர்க்கும்-(வைகுந்தத்திலிருந்து அவனுக்கு கைங்கரியம் செய்கிற) நித்தியஸூரிகளுக்கும், முனிவர்க்கும் - அவனுடைய குணங்களையே அநுபவித்துக்கொண்டிருக்கிற நித்தியஸூரிகளுக்கும், ஏத்தும்-அவனை ஸ்தோத்ரம் பண்ணுகிற, நங்கட்கும்-நமக்கும், இன்பன் - இனியவனும், வாய்த்த-கிடைத்த (ஸம்ருத்தியுள்ள), தண் பணை - குளிர்ந்த நீர் நிலங்களையுடைய, வளம் வயல் சூழ் - வளப்பமுள்ள வயல்களால் சூழப்பட்ட, திருமோகூர்-திருமோகூரில் எழுந்தருளியிருக்கிற, ஆத்தன்-பந்துவுமான அவனுடைய, தாமரை அடி அன்றி - தாமரைப்பூப்போன்ற திருவடிகளல்லாமல், மற்று-வேறு, அரண் இலம் - துணையில்லாதவர்கள் நாம்.

(கருத்து) ஸம்ருத்தியுள்ள குளிர்ந்த நீர் நிலங்களையுடைய செழுமையுள்ள வயல்களால் சூழப்பட்ட திருமோகூரில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமான் ஆச்ரிதர்களுக்கு ஸுலபனாயிருப்பதற்காகக் கண்ணனாய் அவதாரம் செய்தான். அவன் நம்முடைய மனதை இழுக்கும்படியான குடக்கூத்தாடுவது முதலான பல லீலைகளைச் செய்தான். பிறர்களுக்குத் துன்பம் செய்யும்படி கொழுத்து பலமுள்ளவர்களாயிருந்த அஸுரர்களுக்கு யமனாய் அவர்களை நாசம் செய்தான். வைகுந்தத்தில் அவனுக்குக் கைங்கரியம் செய்துகொண்டும் அவனுடைய

குணங்களை அநுபவித்துக்கொண்டும் இப்படி இருவகையான நித்தியஸூரிகளுக்கும் எப்படி இனியவனுயிருக்கிறானோ, அப்படியே இங்கேயிருந்து அவனை ஸ்தோத்ரம் பண்ணும் நமக்கும் இனியவனுயிருக்கிறான். அவனே நமக்கு பந்து மற்றவர்கள் மரணகாலத்தில் நம்மை விட்டுவிடுவார்கள். அவன் அப்படி அல்லன். அவன் திருவடிகளை தாமரைப்பூக்களைப்போலே மிகவும் அழகாயும் இனியதாயுமிருப்பதால், அவைகளை விடுவோம் என்றாலும், அந்த அழகு நம்மை விடவொட்டாது. ஆகையால், அவனுடைய அந்தத் திருவடிகளே நம்மை ரக்ஷிப்பதற்கு உபாயம். வேறு உபாயமில்லை. அவனை ஸேவிக்க வாருங்கள்.

(இ - ம்) குதற்று - முதல்நிலைதிரிந்த தொழிற்பெயர். (6)

அவ—ஐந்தாம் பாட்டில் உலகத்தை எம்பெருமான் உண்டு பண்ணினான் என்று சொன்னார்; உண்டுபண்ணின விதத்தை விரிவாய்ச் சொல்லுகிறார் :—

மற்றி லமரண் வான்பெரும் பாழ்தனி முதலாச்
சுற்று நீர்படைத் ததன்வழித் தொன்முனி முதலா
முற்றுந் தேவரோ டுலகுசெய் வான்திரு மோகூர்
சுற்றி நாம்வலஞ் செய்யநந் துயர்கெடுங் கடிதே. (எ)

(ப - ரை) வான் - உயர்ந்த, தனி - ஒப்பில்லாத, பெரும் பாழ் - விசாலமான பிரகிருதியை, முதலா - காரணமாக வைத்துக்கொண்டு, சுற்று நீர் - அண்டத்துக்குச் சுற்றிலுமிருக்கிற, ஜலத்தை, படைத்து - உண்டுபண்ணி, அதன்வழி - அதன் வழியாக, தொல் - பழைய (தேவர்களுக்கு முந்தினவனான), முனி முதலா - பிரம்மா முதலாக, தேவரோடு - தேவர்களுடன், உலகம் முற்றும் - உலகம் முழுவதையும், செய்வான் - செய்தவனுடைய, திருமோகூர் - திருமோகூரை, நாம், சுற்றி, வலம் செய்ய - பிரதக்ஷிணம் செய்தால், நம் துயர் - நம்முடைய துக்கங்கள், கடிது - சீக்கிரமாக, கெடும் - நசிக்கும்; (ஆகையால்) மற்று அரண் இலம் - வேறு துணையில்லாதவர்கள் நாம்.

(கருத்து) உயர்ந்த ஒப்பில்லாத விசாலமான பிரகிருதியைக் காரணமாக வைத்துக்கொண்டு நமக்குப் போகமும் மோக்ஷமும்

கிடைப்பதற்காக அதிலிருந்து மஹத்து அஹங்காரம் ஐந்து பூதங்கள் ஆகிய இவைகளை உண்டுபண்ணி, அவைகளை இந்த உலகத்தைச்சுற்றி அகழ்போல் ஆவரணமாகச் செய்து அவைகள் உள்ளுக்குள்ளேயிருக்கும் ஜலத்திலிருந்து இந்த அண்டத்தை உண்டுபண்ணி, அதில் எல்லாருக்கும் முன்னால் பிரம்மாவை ஸிருஷ்டி செய்து, தேவர்கள் முதலான இந்த உலகத்தை உண்டுபண்ணினான். அவன் எழுந்தருளியிருக்கும் திருமோகூரை அடிக்கடி பிரதக்ஷிணம் பண்ணினால் நம்முடைய துக்கம் எல்லாம் உடனே போய்விடும். ஆகையால் இப்படி நம்மை ரக்ஷிக்கிற அவனைத்தவிர நமக்கு வேறு துணையில்லை.

குறிப்பு:—(1) பிரகிருதியிலிருந்து எல்லாம் பிறகு உண்டாகிறபடியால், அதுவே மூலகாரணம். ஆகையால், அதை 'வான்' என்றும், அது நித்தியவிபூதியைத் தொடுகிற விடத்தைத் தவிர மற்ற இடங்களில் முடிவில்லாதபடியால், அதை 'பெரும்' என்றும், அதிலிருந்து கர்மம் செய்தவர்களுக்குப் பலன்களை அநுபவிப்பதாகிய போகமும், எம்பெருமானிடம் போக வேண்டுமென்று ஆசைப்படுகிறவர்களுக்கு மோக்ஷமும் உண்டாகிறபடியால் அதைப் 'பாழ்' என்றும் பாட்டு சொல்லுகிறது. பிரளய காலத்தில் போகத்திற்கும் மோக்ஷத்திற்குமுதவாமையால் அது பாழாயிருந்தது. பிறகு, உலகமாக ஆனபோது பயிர் விளையும் நிலம்போலிருக்கிறது.

(2) தேங்காயில் மேலே தோலும் அதற்குள்ளே நாரும் அதற்குள் ஓடும் அதற்குள்ளே சாப்பிடக்கூடிய வஸ்துவும் இருப்பதுபோல், இந்த அண்டத்தைச்சுற்றி ஏழுவிதமான ஆவரணங்கள் இருக்கின்றன. அவை-முதலில் பிரகிருதி; அதற்குள் மஹத்; அதற்குள் அஹங்காரம்; அதற்குள் ஆகாசம்; அதற்குள் வாயு; அதற்குள் அக்னி; அதற்குள் ஜலம்; என்பன. இவைகள் அண்டத்திலிருக்கிறவைகள்போல் ஒன்றோடொன்று சேர்க்கப்பட்டவைகளல்லாமல் தனித்தனியே இருக்கின்றன. எல்லாவற்றுக்கும் உள்ளே இருக்கிற ஜலத்தைத்தான் ஆவரணஜலம் என்று சொல்லுகிறது.

(இ - ம்) முதலா - முதலாக: கடைக்குறை. (7)

அவ—கீழ்ப்பாட்டுக்களில் எம்பெருமானே நாம் வேண்டினவைகளுக்கு உபாயம் என்று சொல்லி, அவனே பிராப்யம் என்று சொல்லுகிறார் :—

துயர் கெடுங்கடி தடைந்துவந் தடியவர் தொழுமின்
உயர்கொள் சோலையொண் டடமணி யொளிதிரு மோகூர்
பெயர்க ளாயிர முடையவல் லரக்கர்புக் கழுந்தத்
தயரதன் பெற்ற மரகத மணித்தடத் தினையே.   (அ)

(ப - ரை) வல் - பலமுள்ள, அரக்கர் - ராக்ஷஸர்கள், புக்கு - புகுந்து, அழுந்த - அழியும்படி, தயரதன் - தசரதசக்ரவர்த்தி, பெற்ற, பெயர்கள் ஆயிரமுடைய - ஆயிரம் பெயர்களையுடைய, மரகதமணி-மரகத ரத்னம்போலிருக்கிற, தடத்தினை -குளத்தை, உயர்கொள் - உயர்த்தியைக்கொண்டிருக்கிற, சோலை - தோட்டங்களையும், ஒண் தடம் - அழகான குளங்களையும், அணி - அலங்காரமாக உடைய, ஒளி திருமோகூர்-காந்தியுள்ள திருமோகூரிலே, கடிது - சீக்கிரமாக, வந்து அடைந்து, அடியவர்-தாஸர்களே! தொழுமின் - ஸேவியுங்கள், துயர் - துக்கங்கள், கெடும்.

(கருத்து) உயர்ந்த தோட்டங்களையும் அழகான குளங்களையுமுடைய காந்தியுள்ள திருமோகூரில் எழுந்தருளியிருக்கிறவன் தசரத சக்ரவர்த்தி பெற்ற திருமகன். அவன் ஆயிரம் பெயர்களால் காட்டப்பட்ட ஆயிரம் குணங்களையுடையவன். ஆழமான குளத்தில் அதின் ஆழம் தெரியாமல் அதில் புகுந்து அழிகிறவர்கள்போல், பலமுள்ள ராக்ஷஸர்கள் அவனைக் கிட்டி இறந்தார்கள். குளத்தின் ஆழத்தைத் தெரிந்து அதிலிறங்கினவர்களுக்கு அந்தக் குளமே தாபத்தைப் போக்கி ஸுகத்தை உண்டுபண்ணுகிறது. அதுபோல் அவனுடைய குணங்களை அறிந்து விபீஷணனைப்போல் அவனைக் கிட்டினவர்கள் ஸம்ஸார தாபம்போய் ஆனந்தத்தை அடைகிறார்கள். அவன் திருமேனி மரகத ரத்நம்போல் அழகுள்ளதாயிருக்கிறது. ஆகையால், அவனே நமக்குப் பிராப்யன். அவன் எழுந்தருளியிருக்கும்படியான பெருமையையுடைய திருமோகூரை ஸ்ரீவைஷ்ணவர்களே! சீக்கிரமாக வந்து அடைந்து ஸேவியுங்கள். புருஷார்த்தம் கிடைக்கவில்லை என்கிற துக்கம் போய்விடும்.

குறிப்பு :—'காருத்மதம்' என்று சொல்லப்பட்ட ரத்நம் ஒரு வீட்டிலிருந்தால் அதில் பாம்பு வருகிறதில்லை என்று பிரஸித்தம். அதுபோல எம்பெருமானுடைய திருமேனி தானிருக்கிறவிடத்தில் பிரதிகூலர் வரமுடியாமல் செய்து அநுகூலர்களுக்கு மிகுந்த ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறது என்பது 'மரகதமணி' என்பதின் கருத்து. (8)

---

அவ—ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் திருமோகூரை வந்து அநுபவிக்கும்படி உபதேசம் பண்ணுகையில், தாம் பெற்ற அந்த அநுபவம் நினைவுக்குவர, அதை ஸந்தோஷத்துடன் சொல்லுகிறார் :—

மணித்தடத் தடிமலர்க் கண்கள் பவளச் செவ்வாய்
அணிக்கோள் நால்தடந் தோள்தெய்வ மசுரரை யென்றும்
துணிக்கும்வல் லரட்ட னுறை பொழில்திரு மோகூர்
நணித்துநம் முடைநல் லரண் நாமடைந் தனமே. (௯)

(ப - ரை) மணி தடத்து அடி - அழகான (நிர்மலமான) குளம்போலிருக்கும் திருவடிகளையும், மலர் கண்கள் - தாமரைப் பூக்கள்போன்ற திருக்கண்களையும், பவளம் செவ்வாய் - பவளம் போல் சிவந்த திருப்பவளத்தையும், அணிகொள் - ஆபரணங்களைக்கொண்டிருக்கிற, நால் தடம் தோள் - நான்கு விசாலமான தோள்களையும், உடைய, தெய்வம் - தெய்வமான, அசுரரை, என்றும் - எப்போதும், துணிக்கும் - கண்டிக்கிற, வல் - பலமுள்ள, அரட்டன் - மஹா வீரன், உறை - நித்தியவாஸம் பண்ணுகிற, நம்முடை நல் அரண் - நமக்கு நல்ல பிராப்யமுமான, பொழில் திருமோகூர் - சோலைகளால் சூழப்பட்ட திருமோகூர், நணித்து - கிட்ட இருக்கிறது, (அதை) நாம் அடைந்தனம்.

(கருத்து) சோலைகளால் சூழப்பட்ட திருமோகூரில் எழுந்தருளியிருக்கிறவன் நமக்கு வழித்துணையாக இருக்கத் தகுந்தவன்; நிர்மலமான ஒரு குளத்தின் ஜலம் தாபத்தைப் போக்குவதுபோல் வைகுந்தத்துக்குப் போகும் வழியில் நமக்கு உண்டாகும் தாபத்தைப் போக்குவன்; அவன் பின்னால் போகும்

நம்மை தன்னுடைய தாமரைப்பூப்போன்ற திருக்கண்களாலே குளிரக்கடாக்ஷிப்பன்; பவழம்போல் சிவந்திருக்கிற தன் திருப்பவளத்தாலே மந்தஹாஸம்பண்ணி, மதுரமான வார்த்தைகளைப் பேசி நம்முடைய சிரமத்தைப் போக்குவன்; அஸுரர்களாலே எப்போது எப்போது ஆச்ரிதர்களுக்குத் துன்பமுண்டாகுமோ அப்போதப்போதே வந்து அவர்களைத் தன்னுடைய நான்கு தோள்களாலே நாசம் செய்ததுபோல், அந்த வழியில் போகும் நமக்கும் அதிலுண்டாகும் இடையூறுகளைத் தீர்க்கச் சக்தியுள்ளவன்; அப்ராக்ருதமான திருமேனியால் விளங்குகிறவன். நம்மால் கிட்டமுடியாத வைகுந்தத்தைப்போலில்லாமல் கிட்ட இருப்பதான திருமோகூரில் அந்த மஹாவீரன் எழுந்தருளியிருக்கிறான் இந்த ஊரை வழித்துணையை வேண்டுகிற நானும் அடைந்தேன்.

(இ - ம்) நணித்து - ஒன்றன்பால் குறிப்பு வினைமுற்று. (9)

---

அவ—திருமோகூருக்கு வந்து அதைப் பிரதக்ஷிணம் பண்ணி ஸேவியுங்கள் என்று சொன்னார்; இதைச் செய்யமுடியாதவர்களுக்கு அந்த ஊரின் திருநாமத்தைச் சொல்லி ஸ்தோத்ரம் பண்ணுங்கள் என்கிறார் :—

நாம டைந்தநல் லரண்நமக் கென்றுநல் லமரர்
தீமை செய்யும் வல்லசுரரை யஞ்சிச்சென் றடைந்தால்
காம ரூபங்கொண் டெழுந்தளிப் பான்திரு மோகூர்
நாம மேநவின் றெண்ணுமி னேத்துமின் நமர்காள். (௧0)

(ப - ரை) என்றும்-எப்போதும், நமக்கு, நாம் அடைந்த, நல் அரண் - நல்ல பிராப்யமான இடம், (திருமோகூர்); நல் அமரர் - நல்ல (தங்களுடைய ஆபத்துக்கு ரக்ஷகனாக எம்பெருமானை எண்ணுகிற) தேவர்கள், வல் - பலமுள்ள, அசுரரை அஞ்சி - அஸுரர்களைக்கண்டு பயந்து, சென்று-(அவனிருக்குமிடம்)போய், அடைந்தால் - (சரணம்) அடைந்தால், காமரூபம்கொண்டு - அவர்கள் வேண்டும் ரூபத்தையெடுத்துக்கொண்டு, எழுந்து - புறப்பட்டு, அளிப்பான் - ரக்ஷிக்கிறவனுடைய, திருமோகூர் -

திருமோகூருடைய, நாமமே - திருநாமத்தையே, நமர்காள் - நம்மைச் சேர்ந்தவர்களே! நவின்று - சொல்லி, எண்ணுமின் - நினையுங்கள், ஏத்துமின் - ஸ்தோத்ரம் பண்ணுங்கள்.

(கருத்து) திருமோகூரே நாம் பாக்கியம்பண்ணி அடையத் தகுந்த ப்ராப்யபூமி. எம்பெருமானையே தங்களுக்கு எப்போதும் உபாயம் என்று எண்ணிக்கொண்டிருக்கிற தேவர்கள் அஸுரர்களைக் கண்டு பயந்து, அவனிருக்கும் திருப்பாற்கடலுக்குப்போய் அவனைச் சரணமாக அடைந்தால், அவர்கள் வேண்டுகிறபடி ரூபங்களையெடுத்துக்கொண்டு அவன் வந்து அவர்களை ரக்ஷிக்கிறான். அவன் எழுந்தருளியிருக்கிற திருமோகூரின் பெயரை என்னைச் சேர்ந்தவர்களே சொல்லுங்கள், வேறு பேச்சைச்சொல்லவேண்டாம். அதை மனதாலே நினையுங்கள். வாயாலே ஸ்தோத்ரம் பண்ணுங்கள்.

ஏத்து மின்நமர் காளென்று தான்குட மாடு
கூத்த னைக்குரு கூர்ச்சட கோபன் குற்றேவல்கள்
வாய்த்த வாயிரத் துள்ளிவை வண்திரு மோகூர்க்கு
ஈத்த பத்திவை யேத்தவல் லார்க்கிடர் கெடுமே. (கக)

(ப - ரை) நமர்காள் - என்னைச் சேர்ந்தவர்களே! ஏத்துமின் என்று - ஸ்தோத்ரம் பண்ணுங்கள் என்று, தான், குடமாடு கூத்தனை - குடத்தோடு கூத்தாடின, கண்ணனைக்குறித்து, குருகூர்சடகோபன், ஆழ்வாருடைய, குற்றேவல்கள் - அந்தரங்ககைங்கரியங்களாக, வாய்த்த - (ஸ்தோத்ரத்தில் பிரியமுள்ள அவனுக்கு) கிடைத்த, ஆயிரத்துள், இவை - இந்தப் பாட்டுக்கள், வண்-உதாரமான (எல்லாப் பொருள்களுமுண்டாகும் இடமான), திருமோகூர்க்கு, ஈத்த-கொடுக்கப்பட்ட, பத்து-பத்துப் பாட்டுக்கள், இவை ஏத்த வல்லார்க்கு - இவைகளை (பிரீதியுடன்) சொல்லவல்லவர்களுக்கு, இடர் - துக்கம், கெடும்.

(கருத்து) "நம்முடைய லீலைகளை ஸந்தோஷத்துடன் அநுபவிக்கிற அநுகூலஜனங்களே! நான் செய்கிற லீலைகளை ஸ்தோத்ரம் பண்ணுங்கள்" என்று கண்ணனாய் அவதாரம் செய்தகாலத்தில் குடக்கூத்து முதலான வியாபாரங்களைச் செய்தவனைக்

குறித்து குருகூர்ச் சடகோபன் அருளிச்செய்தவையும் ஸ்தோத்ரத்தில் பிரியமுள்ள அவனுக்குக் கிடைத்த அந்தரங்க கைங்கரியமுமான ஆயிரத்துள், இந்தப் பத்துப் பாட்டுக்கள் எல்லாப் பலன்களுமுண்டாகுமிடமான திருமோகூருக்கு ஸமர்ப்பிக்கப் பட்டன. இவைகளைப் பிரீதியுடன் சொல்லுகிறவர்களுக்கு உடம்பைவிட்டுப் போகும் காலத்தில் வழித்துணையில்லாமையாகிய துக்கம் நாசம் அடையும்.

குறிப்பு :—பாட்டில் 'தான்' என்பதற்கு, ஸர்வேசுவரனை தான் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கிற பிரிவில்லாமல் எல்லாரும் ஸுகத்தை அடையவேண்டும்படி பலவிதமான லீலைகளைச் செய்தவன் என்பது கருத்து.

(இ - ம்) நமர்காள் - நமர்கள் என்பதின் விளிவேற்றுமை. கள் - விகுதிமேல் விகுதி. தனித்தன்மைப்பன்மை. ஈந்த - கொடுக்கப்பட்ட : பிறவினைப்பொருள். (11)

---

[illegible] ||௧௦௪||

---

இந்தத் திருவாய்மொழியில் காளமேகப்பெருமாளை வைகுந்தத்திற்குப் போகிறவர்களுக்கு வழித்துணை என்பதை அவனுடைய பத்துக் குணங்களைச் சொல்லிக் காட்டுகிறார். அவைகளாவன :—(1) அஸுரர்களை நாசம்பண்ணுகிறது ; (2) துளஸி மாலையைத் திருமுடியில் தரித்திருப்பது ; (3) ஆச்ரிதர்களின் விரோதிகளை ஜயிக்கும் தன்மை ; (4) திருவனந்தாழ்வான்மேலே படுத்திருப்பது ; (5) அளவில்லாத உயர்ந்த காந்தியையுடையவனாயிருப்பது ; (6) எல்லாருடைய மனதையுமிழுக்கும்படியான குடக்கூத்து முதலான லீலைகளைச் செய்தது ; (7) உலகங்களை ஸிருஷ்டிப்பது ; (8) சக்கிரவர்த்தித் திருமகனாய்ப் பிறந்தது ; (9) வழியிலுண்டாகும் சிரமத்தைப் போக்குவது ; (10) ஆச்ரிதர்கள் வேண்டும் ரூபங்களை எடுத்துக்கொள்வது. (104)

## இரண்டாம் திருவாய்மொழி.

அவ—இப்படித் திருமோகூருக்குப்போய், பிறகு திருவனந்தபுரத்தைக் குறித்துப்போவோம் என்று ஸ்ரீவைஷ்ணவர்களை இந்தத் திருவாய்மொழியில் கூப்பிடுகிறார்.

* (அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

கெடுமிட ராய வெல்லாங் கேசவா வென்ன நாளும்
கொடுவினை செய்யுங் கூற்றின் தமர்களுங் குறுக கில்லார்
விடமுடை யரவில் பள்ளி விரும்பினான் சுரும்ப லற்றும்
தடமுடை வயல னந்தபுர நகர்ப் புகுது மின்றே. (க)

(ப-ரை) கேசவா, என்ன, இடராய எல்லாம் - பிரதிகூலம் என்று பேர் பெற்றவைகள் எல்லாம், கெடும், நாளும் - ஒவ்வொரு நாளும், கொடுவினை - க்ரூரமான கர்மங்களை (அவைகளுக்குத் தகுந்த துன்பங்களை), செய்யும், கூற்றின் தமர்களும் - யமபடர்களும், குறுக கில்லார் - கிட்ட சக்தியற்றவர்கள், விடம் உடை - விஷத்தையுடைய, அரவில் - பாம்பின்மேல், பள்ளி - சயனத்தை, விரும்பினான் - ஆசைப்பட்டவனுடைய, சுரும்பு - வண்டுகள், அலற்றும் - பாடும், தட முடை வயல் - குளங்களை உடையதும் வயல்களால் சூழப்பட்டதுமான, அனந்தபுர நகர் - திருவனந்தபுரம் என்கிற பட்டணத்தை, இன்றே - இன்றைக்கே, புகுதும் - புகுவோம்.

(கருத்து) பிரதிகூலர்கள் கிட்டவாராதபடி விஷத்தைவைத்துக்கொண்டிருக்கிற திருவனந்தாழ்வான்மேலே பிரீதியுடன் பள்ளிகொண்டிருக்கிற எம்பெருமான் வஸிக்கிற, முக்தர்கள் ஸாமகாநம் பண்ணுவதுபோல் வண்டுகள் தேனைக்குடித்து ஸந்தோஷப்பட்டுப் பாடுகிற புஷ்பங்கள் நிறைந்த குளங்களையும் வயல்களையுமுடைய திருவனந்தபுரம் எனகிற ஊருக்கு போவோம்.

---

*கலிவிருத்தம் என்று பல பதிப்புக்களிலிருக்கிறது. அறுசீராசிரிய விருத்தம் என்று கொள்ளுவது நேர். அப்படியே சீர்பிரித்துக் காட்டப்பட்டிருக்கிறது.

நாளைக்கு ஆகட்டும் என்று இருக்காமல் ருசி உண்டானபோது போய்ப் புகுவோம். அங்கே போவதற்கு இடையூறுனவை யெல்லாம் கேசி என்ற அஸுரனைக் கொன்றவனைச் சொல்லும் திருநாமத்தைச் சொல்லவே போகும். பாபம் செய்தவர்களுக்கு அவைகளுக்குத் தகுந்தபடி துன்பங்களைச் செய்யும் யமபடர்கள் கிட்ட வரமாட்டார்கள். ஆகையால், அவன் திருநாமத்தைச் சொல்லிக்கொண்டு போவோம்.

(இ - ம்) புகுதும்-தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று. தும் காலம் காட்டியது. ஆய - இறந்தகாலப் பெயரெச்சம். ஆ+ய்+அ. யகரஒற்று இறந்தகாலம் காட்டியது. கொடுவினை - வினை : ஆகுபெயராய் அதன் காரியமான துன்பத்தைச் சொல்லுகிறது. விரும்பினுன் - வினையால் அணையும் பெயர். (1)

---

அவ—இடையூறுகள் போவதற்கு 'கேசவா' என்கிற ஒரு திருநாமத்தையே சொல்லவேண்டுமென்கிற நிர்ப்பந்தமுண்டோ? என்ன ; பதில் சொல்லுகிறுர் :—

இன்று போய்ப் புகுதி ராகி லெழுமையு மேதஞ் சாராக்
குன்றுநேர் மாட மாடே குருந்துசேர் செருந்தி புன்னை
மன்றலர் பொழில னந்த புரநகர் மாயன் நாமம்
ஒன்று மோரா யிரமா முள்ளுவார்க் கும்ப ரூரே. (உ)

(ப - ரை) குன்று நேர் - மலைகளைப்போலிருக்கிற, மாடம் மாடே - வீடுகளின் பக்கங்களில், குருந்து சேர் - குருந்து என்கிற மரங்களுடன் சேர்ந்த, செருந்தி புன்னை ஆகிய மரங்களையுடைய, மன்று - நல்ல வாஸனை, அலர்-பரவுகிற, பொழில் - தோட்டங்களையுடைய, அனந்தபுர நகர் - திருவனந்தபுரத்திலிருக்கிற, மாயன் - ஆச்சரியமானவனுடைய, நாமம் ஒன்று - ஒரு திருநாமமே, ஓர் ஆயிரமாம் - ஆயிரம் திருநாமங்களாகும், உள்ளுவார்க்கு - அதை நினைக்கிறவர்களுக்கு, உம்பர் ஊரே - மேலே (எல்லா ஊர்களைக்காட்டிலுமுயர்ந்த) அந்த ஊர் ஸுலபமாகும், இன்று - (ஆசைபிறந்த) இப்போதே போய், புகுதிராகில் - புகுவீர்களாகுல், எழுமையும் - ஏழு பிறப்புக்களிலும் (எப்போதும்), ஏதம் - துக்கங்கள், சாரா - சேரா,

(கருத்து) மலைகள்போல் உயர்ந்திருக்கிற வீடுகளின் பக்கங்களில் குருந்து, செருந்தி, புன்னை ஆகிய மரங்கள் சேர்ந்திருக்கிறதும், நல்ல வாஸனையை வீசுகிற தோட்டங்களால் சூழப்பட்டதும் எல்லா ஊர்களைக் காட்டிலும் உயர்ந்ததுமான திருவனந்தபுர நகரில் நம்மைப்போன்றவர்களுக்கு முகம் கொடுக்கத் தகுந்த இடம் என்று வைகுந்தத்தைக் காட்டிலும் அதிகப் பிரீதியுடன் வஸிக்கிற ஆச்சரியமான எம்பெருமானுடைய ஒரே திருநாமத்தைச் சொல்லவே ஆயிரம் திருநாமங்கள்போல் ஆயிரம் விதமாய் நம்மை ரக்ஷிக்கும். அதை நினைக்கிறவர்களுக்கு இடையூறுகள் போகும். அந்த ஊர் லகுவாய் அடையக்கூடியது. இச்சை பிறந்த இப்போதே அதில் புகுந்தால், எந்தக் காலத்திலும் துக்கங்கள் உங்களைத் தொடா. (2)

---

அவ—கீழ்ப் பாட்டில் சொன்னதைக்காட்டிலும் அதிஸுகரமான ஸாதனத்தைச் சொல்லுகிறார் :—

ஊரும் புட்கொடியு மஃதே யுலகெல்லா முண்டு மிழ்ந்தான்
சேருந் தண்ண னந்தபுரஞ் சிக்கெனப் புகுதி ராகில்
தீரும் நோய்வினை களெல்லாந் திண்ணநா மறியச் சொன்னோம்
பேரு மோரா யிரத்து ளொன்றுநீர் பேசு மினே. (௩)

(ப - ரை) புள் - கருட பக்ஷியை, ஊரும் - (வாஹநமாக வைத்துக்கொண்டு) நடத்துகிறான், கொடியும் அஃதே - அவனுக்குத் துவஜமும் அதுவே, உலகு எல்லாம் - உலகம் முழுவதையும், உண்டு, உமிழ்ந்தான் - உமிழ்ந்தவன், சேரும் - சேர்ந்திருக்கிற, தண் - குளிர்ந்த, அனந்தபுரம் - திருவனந்தபுரத்தை, சிக்கென - திடமாக, புகுதிராகில்-புகுவீர்களானால், நோய்-துக்கங்களும், வினைகள் எல்லாம் - (அவைகளுக்குக் காரணமான) எல்லாக் கர்மங்களும், தீரும், திண்ணம் - இது நிச்சயம், அறிய - எல்லாரும் அறியும்படி, நாம் சொன்னோம், பேரும் - சொல்லவேண்டிய திருநாமமும், ஓர் ஆயிரத்துள் - ஒப்பில்லாத ஆயிரத்துள், ஒன்று - ஏதேனுமொரு திருநாமத்தை, நீர் - நீங்கள், பேசுமின் - சொல்லுங்கள்.

(கருத்து) நித்தியஸூரியான கருடனை வாஹநமாயும் த்வஜமாயும் உடையவனும், இந்த லீலாவிபூதியில் பிரளயகாலத்தில் இந்த உலகத்தை வயிற்றில் வைத்துக்கொண்டு ரக்ஷித்து, ஸிருஷ்டி காலத்தில் அதை வெளிப்படுத்தினவனுமான எம்பெருமான் நித்தியமாய் வஸிக்கிற குளிர்ந்த திருவனந்தபுரத்தை ஒரு பிரயோஜனத்தை ஆசைப்பட்டு அது கிடைத்தவுடன் விட்டுவிடுகிறவர்களைப்போல் இல்லாமல், அதையே பிரயோஜநமாக எண்ணிக்கொண்டு அதில் புகுந்தால், உங்களுடைய எல்லாத் துக்கங்களும் அவைகளுக்குக் காரணமான எல்லாப் பாபங்களும் தீரும். இதில் ஸம்சயமில்லை. இது ரஹஸ்யமான அர்த்தம்; இதை எல்லாரும் அறியும்படி நாம் சொன்னோம். இதை அறியாமல் ஸம்ஸாரிகள் துக்கப்படுகிறார்கள். இப்படி அந்த ஊரை அடைவதற்கும், அதற்குண்டான இடையூறுகள் போவதற்கும் சொல்ல வேண்டிய திருநாமம் எல்லாவிதமாயும் ரக்ஷிக்கும்படி ஒப்பில்லாத ஆயிரம் திருநாமங்களில் ஏதாவது ஒன்றுதான். அதை மனதுடன் சொல்ல முடியாவிட்டாலும் வாயாலாவது சொல்லுங்கள்.

குறிப்பு :—கருடனைச் சொன்னதினால் போகத்துக்கு ஸாதனங்களும், உலகத்தை உண்டுபண்ணினதைச் சொன்னதினால் லீலைக்கு ஸாதனங்களும் எம்பெருமானுக்கு இருக்கின்றன என்பது காட்டப்படுகிறது. (3)

---

அவ—எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதில் ருசி உண்டாவதற்காக அவனுக்குக் கைங்கரியம் செய்கிறவர்களைக் கொண்டாடுகிறார் :—

பேசுமின் கூச மின்றிப் பெரியநீர் வேலை சூழ்ந்து
வாசமே கமழுஞ் சோலை வயலணி யனந்தபுரம்
நேசஞ்செய் துறைகின் றானை நெறிமையால் மலர்கள் தூவி
பூசனை செய்கின் றார்கள் புண்ணியஞ் செய்த வாறே. (௪)

(ப - ரை) கூசமின்றி-கூச்சமில்லாமல், பேசுமின்-(அவன் திருநாமங்களைச்) சொல்லுங்கள், பெரியநீர் - விசாலமான ஜலத்

தையுடைய, வேலை சூழ்ந்து - ஸமுத்ரத்தாலே சூழப்பட்டதும், வாசமேகமழும் - வாஸனை எப்போதும் வாஸிக்கிற, சோலை - தோட்டங்களாலும், வயல் - வயல்களாலும், அணி - அலங்காரம் செய்யப்பட்டதுமான, அனந்தபுரம் - திருவனந்தபுரத்தை, நேசம் செய்து - ஸ்நேஹம் பண்ணி, உறைகின்றானை - நித்திய வாஸம் பண்ணுகிற எம்பெருமானை, நெறிமையால் - முறைப்படி, மலர்கள் தூவி - புஷ்பங்களை ஸமர்ப்பித்து, பூசனைசெய்கின்றார்கள் - பூஜை செய்கிறார்கள் (அங்கிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள்). புண்ணியம் செய்த ஆறு ஏ - புண்ணியம் பண்ணின பிரகாரம் என்ன ஆச்சரியம்.

(கருத்து) நாம் அவனுக்குக் கைங்கரியம் செய்யத் தகுந்தவர்கள் அல்ல என்று கூச்சமில்லாமல் அவன் திருநாமங்களைச் சொல்லுங்கள். விசாலமான ஜலத்தையுடைய ஸமுத்திரத்தாலே சூழப்பட்டதும், எப்போதும் வாஸனையை வீசுகிற தோட்டங்களாலும் வயல்களாலும் அலங்கரிக்கப்பட்டதுமான திருவனந்தபுரத்தில் ஸ்னேஹத்தைப்பண்ணி, அதில் நித்தியவாஸம் செய்யும் எம்பெருமானுக்கு அவன் ஸ்வாமியாயும்தாங்கள் தாஸர்களாகவும் இருக்கும் முறை தப்பாமல் வேறு பிரயோஜனத்தில் ஆசையில்லாமல் புஷ்பங்களை ஸமர்ப்பித்து, அந்த ஊரிலிருக்கிற ஸ்ரீ வைஷ்ணவர்கள் கைங்கரியம் செய்கிறார்கள். அவர்கள் இவ்விதமான கைங்கரியம் செய்யும்படி என்ன புண்ணியம் செய்தார்களோ ? ஆச்சரியம்.

குறிப்பு :—(1) 'வேலை சூழ்ந்த' என்பதற்கு, மதில்கள் ஊரை ரக்ஷிப்பதுபோல் ஸமுத்திரமும் அதன் தோட்டங்களில் உள்ள வாஸனையை வெளியில் போகவொட்டாமல் செய்கிறதென்பது கருத்து.

(2) அந்த ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கொண்டாடுவதனால் அடையவேண்டிய கைங்கரியத்தின் பெருமை காட்டப்படுகிறது.

---

அவ—கீழ்ப் பாட்டில் திருவனந்தபுரத்தில் இருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கொண்டாடி, அவர்களைப்போலே நீங்களும்

கைங்கரியங்களைச் செய்யுங்கள் என்று அநுகூலருக்கு உபதேசம் செய்கிறார் :—

புண்ணியஞ் செய்து நல்ல புனலோடு மலர்கள் தூவி
எண்ணுமி னெந்தை நாம மிப்பிறப் பறுக்கு மப்பால்
திண்ண நாமறியச் சொன்னோஞ் செறிபொழி லனந்த புரத்து
அண்ணலார் கமல பாத மணுகுவா ரமர ராவார். (ரு)

(ப - ரை) புண்ணியம் செய்து - புண்ணிய ரூபமான திருநாமத்தைச் சொல்லி, நல்ல புனலோடு - நல்ல தீர்த்தத்தோடு, மலர் - புஷ்பங்களை, தூவி - ஸமர்ப்பித்து, எந்தை நாமம் - ஸ்வாமியினுடைய திருநாமத்தை, எண்ணுமின் - நினையுங்கள், இப்பிறப்பு - இந்தப் பிறப்பை, அறுக்கும், செறி பொழில்-நெருங்கியிருக்கிற தோட்டங்களையுடைய, அனந்தபுரத்து - திருவனந்தபுரத்திலிருக்கிற, அண்ணலார் - ஸ்வாமியினுடைய, கமலபாதம் - தாமரைப்பூவைப்போன்ற திருவடிகளை, அணுகுவார் - கிட்டுகிறவர்கள், அப்பால் - பிறகு, அமரர் ஆவார் - நித்தியஸூரிகளைப்போல் ஆவர்கள், திண்ணம் - திடம், நாம், அறிய - நீங்கள் அறியும்படி, சொன்னோம்.

(கருத்து) புண்ணிய ரூபமான எம்பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லுங்கள்; திருவனந்தபுரத்துக்கு நீங்கள் போவதற்கு இடையூறானவைகள் எல்லாம் போகும்; நல்ல தீர்த்தத்தையும் புஷ்பங்களையும் பக்தியுடன்கொண்டு அவ்வூருக்குப்போய் அவன் திருவடிகளில் சமர்ப்பித்து, அவனுடைய திருநாமங்களைத் தியாநம் செய்யுங்கள். அவன் உங்களுடைய ஸம்ஸாரத்தை அடியோடு போக்குவான். புஷ்பங்களும் பழங்களும் நிறைந்த தோட்டங்களால் சூழப்பட்ட திருவனந்தபுரத்தில் எழுந்தருளியிருக்கிற ஸ்வாமியினுடைய திருவடித்தாமரைகளை ஆச்ரயியுங்கள். அதன் பிறகு, நித்தியஸூரிகளைப்போல் அவனுக்கு எப்போதும் கைங்கரியம் செய்கிறவர்கள் ஆவீர்கள். இதில் ஸந்தேஹமில்லை. இந்த விஷயம் எனக்குத் தெரிந்திருக்கிறபடியால் நீங்களும் அதை அறியும்படி சொன்னேன்.

குறிப்பு :—(1) 'எண்ணுமின்' என்பதற்கு, திருநாமங்களை ஒன்று இரண்டு என்று எண்ணிக்கொண்டு சொல்லுங்கள் என்றும் பொருள் கொள்ளலாம். (5)

அவ—வைகுந்தத்திற்குப்போய்க் கைங்கரியம் செய்வதன்றோ பிராப்யம் என்ன, அதற்குப் பதில் சொல்லுகிறார் :—

அமரராய்த் திரிகின் றார்கட் காதிசே ரனந்த புரத்து
அமரர்கோ னர்ச்சிக் கின்றங் ககப்பணி செய்வர் விண்ணோர்
நமர்களோ சொல்லக் கேண்மின் நாமும்போய் நணுக வேண்டும்
குமரனார் தாதை துன்பம் துடைத்த கோவிந்த னாரே. (௬)

(ப-ரை) அமரராய் திரிகின்றார்கட்கு-தேவர்களாய் திரிகிறவர்கட்கு, ஆதி - காரணமான ஸ்ரீபத்மநாபன், சேர் - வந்து சேர்ந்திருக்கிற, திருவனந்தபுரத்து - திருவனந்தபுரத்திலே, அமரர்கோன்-நித்தியஸூரிகளுக்குத் தலைவனான ஸேனை முதலியார், அர்ச்சிக்கின்று - அர்ச்சனைசெய்கிறான், (அப்போது) விண்ணோர் - வைகுந்தத்திலிருப்பவர்கள், அங்கு-அந்தவூரில், அகப்பணி செய்வார்-அந்தரங்கமான கைங்கரியங்களைப் பண்ணுவர்கள், ஓ நமர்காள் - ஓ என்னைச் சேர்ந்தவர்களே ! சொல்ல கேண்மின்-நான் சொல்லுவதைக் கேளுங்கள், குமரனார் தாதை - ஸுப்பிரமணியனுடைய தகப்பனான ருத்திரனுடைய, துன்பம் - துக்கத்தை, துடைத்த, கோவிந்தனார்-கோவிந்தனை, நாமும் போய், நணுகவேண்டும் - கிட்டவேண்டும்.

(கருத்து) தேவர்கள் மனிதரைக்காட்டிலும் அதிக காலம் உயிரோடு இருப்பதாலே அமரர் என்று பெயர் பெற்று அதனால் ஒருபோதும் மரணமில்லாத நித்தியஸூரிகளாகத் தங்களை நினைத்துக்கொண்டு திரிகிற அவர்களுக்கும் காரணமான ஸ்ரீபத்மநாபன் வந்து நித்தியவாஸம்பண்ணுகிற திருவனந்தபுரத்தில் நித்தியஸூரிகளுக்குத் தலைவனான ஸேனைமுதலியார் அங்கே வந்து அந்த எம்பெருமானுக்கு அர்ச்சனை செய்கிறான். மற்ற நித்தியஸூரிகளும் அவனுக்கு வேண்டிய உபகரணங்களை எடுத்துக்கொடுக்கிறார்கள். ஆகையால், அந்த ஊரில் கைங்கரியம் செய்வதே பிராப்யம். நாமும் அங்கேயே போய்க் கைங்கரியம் செய்ய வேண்டும். என்னைச் சேர்ந்தவர்களே ! ஸுப்ரமண்ணியனுக்குத் தகப்பனான ருத்திரன் பிரம்மாவின் தலையைக் கிள்ளித் துன்பப்பட்டபோது எம்பெருமானே அதைத் தீர்த்தான். அவன் பசுக்களுக்கும் ஸுலபனாயிருந்தான். அப்படியே நமக்கும் ஸுலபனாய் நம்முடைய ஸம்ஸாரத்தையையும் போக்குவன்.

குறிப்பு :—ஸுப்ரமணியன் தேவர்கள் ஸேனைக்கு அதிபதியாய் இருக்கிற பெருமையைக்கொண்டு 'குமரனுர்' என்கிற பன்மைச்சொல்.

(இ - ம்) அர்ச்சிக்கின்று - அர்ச்சிக்கிறுன், திசைச்சொல். மலையாள வழக்கு. (6)

---

துடைத்த கோவிந்த ஞரே யுலகுயிர் தேவும் மற்றும்
படைத்த வெம்பரம மூர்த்தி பாம்பணைப் பள்ளி கொண்டான்
மடைத்தலை வாளை பாயும் வயலணி யனந்த புரம்
கடைத்தலை சீய்க்கப் பெற்ருல் கடுவினை களைய லாமே. (எ)

(ப - ரை) துடைத்த - ஆச்ரிதர்களின் துக்கத்தைத் துடைக்கும் ஸ்வபாவமுள்ள, கோவிந்தனுர்-கோவிந்தன், உலகு - உலகங்களையும், உயிர் - மனிதர் முதலான பிராணிகளையும், தேவும் - தேவர்களையும், மற்றும் - அவைகளைக் காட்டிலும் வேருன மஹத் முதலான அறிவில்லாதவைகளையும், படைத்த - உண்டுபண்ணின, எம் - நம்முடைய (ஆச்ரிதர்கள் சொல்லுவதைச் செய்கிறவனுன), பரமமூர்த்தி - எல்லாருக்கும் மேற்பட்ட ஸ்வாமியான, பாம்பு அணை பள்ளிகொண்டான் - நாகசயநத்தில் படுத்திருக்கிற ஸ்ரீபத்மநாபனுடைய, மடைத்தலை - மடைகளில், வாளை - வாளைமீன்கள், பாயும் - இங்குமங்கு மோடுகிற, வயல் அணி - வயல்கள் அலங்காரமாக உள்ள, அனந்தபுரம் - திருவனந்தபுரத்தில், கடைத்தலை - வெளியில் இருக்கிற முற்றத்திலே, சீய்க்கப் பெற்ருல்-பெருக்குவதாகிய கைங்கரியம் செய்யும்படி கிடைத்தால், கடுவினை - கடுமையான பாபத்தை, களையலாம் -போக்கலாம்.

(கருத்து) எம்பெருமான் ஆச்ரிதர்களுடைய துக்கங்களைத் துடைக்கும் ஸ்வபாவமுள்ளவன். அவர்கள் சொன்னதைச் செய்கிறவன். எல்லாருக்கும் ஸுலபன். கருணையாலே எல்லா உலகங்களையும் மனிதர்கள் முதலான பிராணிகளையும் தேவர்களையும் அசேதனமான மஹத் முதலானவைகளையும் உண்டுபண்ணினவன். ஆச்ரிதர்கள் தன்னிடம் வருவதற்காக மடைகளில் மீன்கள் ஜலஸம்ருத்தியாலே ஸந்தோஷப்பட்டு அங்குமிங்குமோடுகிற

வயல்களை அலங்காரமாகவுடைய திருவனந்தபுரத்தில், ஆதிசேஷன்மேல் பள்ளிகொண்டிருக்கிறான். இந்த எல்லாருக்கும் மேற்பட்ட ஸ்வாமி எழுந்தருளியிருக்கும் கோயிலில் வெளியிலிருக்கும் முற்றத்தில் பெருக்குவது முதலான கைங்கரியங்களைச் செய்யும்படி நமக்குக் கிடைத்தால், அவனை அடையாததினுலுண்டான துக்கம் அடியோடுபோகும். வைகுந்தத்தில் கிடைக்கும் கைங்கரியங்கள் எல்லாம் இங்கே உண்டாகும்.

குறிப்பு :—(1) 'மடை' என்பது வயல்களுக்கு ஜலம் வருகிற வழி. தலை ஏழாம் வேற்றுமையுருபு.

(2) துடைத்த - ஸம்ஹாரம் செய்த என்றும் பொருள் கொள்ளலாம். ஸிருஷ்டிக்குமுன்னுல் பிரளயத்தைச் சொல்லுவது சாஸ்த்ர வழக்கம். 'கோவிந்தனுரே' என்றவிடத்திலுள்ள ஏகாரத்திற்குத் தேற்றமும் பிரிநிலையும் பொருள். (7)

---

அவ — கீழ்ப்பாட்டில் * ஸாத்தியமான பிராப்யத்தைச் சொல்லி, ஸித்தமான ப்ராப்யத்தைச் சொல்லுகிறுர் :—

கடுவினை களைய லாகுங் காமனைப் பயந்த காளை
இடவகை கொண்ட தென்ப ரெழிலணி யனந்த புரம்
படமுடை யரவில் பள்ளி பயின்றவன் பாதங் காண
நடமினோ நமர்க ளுள்ளீர் நாமுமக் கறியச் சொன்னோம். (அ)

(ப - ரை) கடுவினை-கடுமையான துக்கத்தை, களையலாம் - போக்கலாம், காமனை - மன்மதனை, பயந்த - உண்டுபண்ணின, காளை - எப்போதும் யௌவனமுள்ள எம்பெருமான், இடவகை-(ஆச்ரிதர்களுக்கு தன்னைக்) கொடுப்பதற்கு உபாயமாக, கொண்டது - எடுத்துக்கொள்ளப்பட்டதாகிய, எழில் அணி - அழகை அலங்காரமாக உடைய, அனந்தபுரம், என்பர் - என்று சொல்லுவர்கள் (நல்ல அறிவையுடையவர்கள்). படமுடை - படங்களையுடைய, அரவில் - ஆதிசேஷனுகிய பாம்பின்மேலே, பள்ளி - படுக்கையில், பயின்றவன் - இடைவிடாமல் படுத்துக்கொண்டு

---

*பிராப்யமானது ஸாத்யம் என்றும் ஸித்தம் என்றும் இருவகைப்படும். ஸித்தம் என்பது உபாயம் செய்வதற்கு முன்னுலேயேயிருப்பது. ஸாத்தியமென்பது உபாயம் செய்தபிறகு உண்டாவது. ஸித்தப்ராப்யம் எம்பெருமான். ஸாத்தியமான ப்ராப்யம் அவன் கைங்கரியம்.

இருக்கிற ஸ்ரீபத்மநாபனுடைய, பாதம் காண - திருவடிகளைக் கண்டு அநுபவிக்க, நமர்கள் உள்ளீர் - என்னுடையவர்களாக இருக்கிறவர்களே! நடமினோ - நடந்து போகுங்கள், நாம், உமக்கு, அறிய சொன்னோம்.

(கருத்து) என்னைச்சேர்ந்தவர்களாயிருக்கிறவர்களே! எம்பெருமானை அடையாததினால் உண்டான கொடுமையான துக்கத்தை நாம் சொன்னதைக் கேட்டால் அடியோடு போக்கலாம். அது என்ன என்கிறீர்களோ? அழகில்மிகுந்த மன்மதனை உண்டு பண்ணின, எப்போதும் யௌவனமுள்ள அளவில்லாத அழகுக்கு இருப்பிடமான எம்பெருமான், தன்னை ஆச்ரிதர்களுக்கு அநுபவிக்கக்கொடுப்பதற்கு உபாயம் என்று எண்ணி வாஸஸ்தானமாக எடுத்துக்கொண்டிருக்கிற ஊர் அழகையே அலங்காரமாகக்கொண்ட திருவனந்தபுரம் என்று நல்ல அறிவையுடையவர்கள் சொல்லுகிறார்கள். திருவனந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டு எல்லாருக்கும் தன்னைக் கொடுத்துக்கொண்டிருக்கிற அவனுடைய திருவடிகளைக்கண்டு அநுபவிப்பதற்காக, அந்த ஊருக்கு நடந்து போகுங்கள். அவன் பள்ளிகொண்டிருக்கிற அழகை நான் அறிந்திருக்கிறேன். இதை நீங்கள் அறியாமல் இந்த அநுபவத்தை இழக்கக்கூடாது என்று உங்களுக்கு இதைச் சொல்லுகிறேன்.

குறிப்பு :— 'இடமுடைத்து' என்பதற்கு இடமாகக்கொண்டது என்றும் பொருள் கொள்ளலாம்.

(இ - ம்) வினை - ஆகுபெயராய் அதன் காரியமான துக்கத்தைச் சொல்லுகிறது. (8)

அவ—கீழ்ப்பாட்டுக்களில் சொன்ன கைங்கர்யங்களை உடனே போய்ச் செய்யவேண்டும் என்று சொல்லுகிறார் :—

நாமுமக் கறியச் சொன்ன நாள்களும் நணிய வான
சேமநன் குடைத்துக் கண்டீர் செறிபொழி லனந்த புரம்
தூயநல் விரை மலர்கள் துவளற வாய்ந்து கொண்டு
வாமன னடிக்கென் றேத்த மாய்ந்தறும் வினைகள் தாமே. (௯)

(ப - ரை) செறிபொழில் - நெருங்கின தோட்டங்களையுடைய, அனந்தபுரம், சேமம் - க்ஷேமத்தை, நன்கு - நன்றாக, உடைத்து - உடைத்தானது, கண்டீர் - இது நிச்சயம், (ஆகை

யால்) தூபம் - தூபத்தையும், நல்விரை - நல்ல வாஸனையுள்ள, மலர்கள் - புஷ்பங்களையும், துவள் அற - தோஷமில்லாதபடி, ஆய்ந்துகொண்டு, வாமனன் அடிக்கு என்று-இவைகள் வாமநன் திருவடிகளுக்கு என்று தீர்மானித்து, ஏத்த-ஸ்தோத்ரம்பண்ண, வினைகள் - துக்கங்கள், தாமே, மாய்ந்து - நசித்து, அறும் - பாக்கியில்லாமல்போகும், நாம் உமக்கு அறிய சொன்ன நாள்களும் - 'வைத்தநாள்வரை குறுகிச் சென்று' என்று நான் முன்னால் தெரிந்துகொள்ளும்படி சொன்ன நாள்களும், நணிய - கிட்டினவைகளாக, ஆன - ஆய்விட்டன.

(கருத்து) தோட்டங்கள் நெருங்கியிருக்கிற திருவனந்தபுரம் அதை அடைந்தவர்களுக்கு க்ஷேமத்தைச் செய்யுமிடம். ஆகையால், நீங்கள் நல்ல வாஸனையையுடைய புஷ்பங்களை ஸம்பாதித்து, அவைகளிலுள்ள தோஷங்களைப்போக்கி, அவைகளையும் தூபத்தையும், இவைகள் வாமனன் திருவடிகளுக்கு ஸமர்ப்பிக்க வேண்டியவைகள் என்று நினைத்துக்கொண்டு, அவைகளை அவன் ஒப்புக்கொள்ளுவதற்காக, அவனுடைய ஸௌசீல்யம் முதலான குணங்களை ஸ்தோத்ரம் பண்ணுங்கள். இப்படிச் செய்தால் உங்களுடைய துக்கங்கள் உங்களுடைய பிரயத்தினங்கள் இல்லாமல் தாங்களே நாசத்தை அடைந்து அடியோடு போய்விடும். முன்னாலேயே உங்கள் ஆயுஸின் நாள்களின் முடிவு கிட்ட வருகிறது என்று சொன்னேன். அந்த முடிவு கிட்ட வந்திருக்கிறது. கைங்கரியம் செய்வதற்கு ஸாதனமான இந்த உடம்பும் போய்விடும். அதற்கு முன்னாலே சீக்கிரமாக அங்கேபோய்க் கைங்கரியங்களைச் செய்யுங்கள்.

குறிப்பு:—'துவளற' என்கிறவிடத்தில் துவள் என்பது வாடியிருப்பதும், வாஸனையில்லாமையும், புழு முதலானவைகளிருப்பதும். வேறு பிரயோஜநத்தைத்தேடி இந்த ஸமர்ப்பணத்தைச் செய்வதையும் 'துவள்' என்று சொல்லலாம்.

(இ - ம்) நணிய - குறிப்பு வினையால் அணையும் பெயர். கிட்டினவைகள் என்பது பொருள். நணி+ய்+அ; அ - பலவின்பால் விகுதி. ய் - ஸந்தி. ஆன - ஆ+இன்+அ. இன் - என்பதில் இகரம் கெட்டது, முதற்குறை. உடைத்து - குறிப்பு வினைமுற்று. உடைமை+து. மை கெட்டுத் தகரம் இரட்டித்தது. (9)

---

அவ—கீழ்ச்சொன்னவைகள் எல்லாவற்றையும் சேர்த்துக் கொண்டு திருவாய்மொழியை முடிக்கிறார்.

மாய்ந்தறும் வினைகள் தாமே மாதவா வென்ன நாளும்
ஏய்ந்த பொன்மதி ளனந்த புரநக ரெந்தைக் கென்று
சாந்தொடு விளக்கந் தூபந் தாமரை மலர்கள் நல்ல
ஆய்ந்து கொண் டேத்த வல்லா ரந்தமில் புகழினாரே. (௧௦)

(ப - ரை) மாதவா என்ன, வினைகள் - கர்மங்கள், தாமே, மாய்ந்து - நாசத்தையடைந்து, அறும் - அடியோடே போய்விடும், நாளும் - எப்போதும், ஏய்ந்த - தகுந்ததான, பொன்மதிள் - பொன்மதிள்களையுடைய, அனந்தபுர நகர்-திருவனந்தபுரத்தில், எந்தைக்கு என்று - ஸ்வாமிக்கு என்று நினைத்து, சாந்தொடு - சந்தனத்துடன், விளக்கும் - தீபத்தையும், தூபம் - தூபத்தையும், தாமரை மலர்கள் - தாமரைப் புஷ்பங்களையும், நல்ல - நன்றாக (தோஷமில்லாமல்), ஆய்ந்துகொண்டு, ஏத்தவல்லார் - ஸ்தோத்ரம்பண்ணச் சக்தியுள்ளவர்கள், அந்தம் இல்புகழினாரே - முடிவில்லாத கீர்த்தியையுடையவர்கள்.

(கருத்து) எம்பெருமானுடைய திருநாமங்களில் மாதவா என்பது முதலான திருநாமங்களில் ஏதாவதொன்றைச் சொன்னால் கைங்கரியம் செய்வதற்கு இடையூறுகளான எல்லாக் கர்மங்களும் தாங்களே நாசம் அடைந்து அடியோடே போய்விடும். தன் பெருமைக்குத் தகுந்த பொன்மதிள்களையுடைய திருவனந்தபுரம் என்கிற நகரத்தில் எழுந்தருளியிருக்கிற என் ஸ்வாமிக்கு இவைகள் என்று நினைத்து, சந்தனம் தூபம் தீபம் தாமரைப் புஷ்பங்கள் ஆகிய இவைகளை, அவைகளிலுள்ள தோஷங்களைப் போக்கி எடுத்துக்கொண்டு அவனுக்கு ஸமர்ப்பித்து, அவன் அவைகளை ஒப்புக்கொண்டானே என்கிற ஸந்தோஷத்தாலே அவனை ஸ்தோத்ரம் பண்ணுகிற மஹான்கள் ஆரோ; அவர்களுடைய கீர்த்திக்கு ஒருமுடிவுமில்லை. (10)

---

அந்தமில் புகழ னந்த புரநக ராதி தன்னைக்
கொந்தலர் பொழிற் குருகூர் மாறன் சொல்லா யிரத்துள்
ஐந்தினோ டைந்தும் வல்லா ரணைவர் போயம ருலகில்
பைந்தொடி மடந்தை யர்தம் வேய்மரு தோளி ணையே. (கக)

(ப - ரை) அந்தம் இல் புகழ் - முடிவில்லாத நல்ல குணங்களையுடைய, அனந்தபுர நகர்-திருவனந்தபுரத்திலிருக்கிற, ஆதி தன்னை - எல்லாவற்றுக்கும் காரணமான எம்பெருமானைப்பற்றி, கொந்து அலர் - பூக்கொத்துகள் மலருகிற, பொழில் - தோட்டங்களையுடைய, குருகூர் மாறன் சொல் ஆயிரத்துள், ஐந்தினோடு ஐந்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், வல்லார் - படிக்கச் சக்தியுள்ளவர்கள், போய், அமர் உலகில் - நிலையாயிருக்கும் உலகத்தில், பைம் தொடி - அழகான வளைகளையுடைய, மடந்தையர் தம் - ஸ்திரீகளுடைய, வேய்மரு - மூங்கிலினோடு பழகும் (அதைப்போலிருக்கும்), தோள் இணை - இரண்டு தோள்களை, அணைவர் - கட்டிக்கொள்ளுவர்.

(கருத்து) அளவில்லாத நல்ல குணங்களையுடையவனும், எல்லாவற்றையும் உண்டுபண்ணினவனும், திருவனந்தபுரம் என்கிற நகரத்தில் நித்தியவாஸம் செய்கிறவனுமான எம்பெருமானைப் பற்றிக் கொந்தலர் பொழில் குருகூர்மாறன் அருளிச்செய்த ஆயிரத்துள் இந்தப் பத்துப் பாட்டுக்களையும் படிக்கச் சக்தியுள்ளவர்கள், தேவயானம் என்கிற வழியாலேபோய்க் காலத்தாலே வேறுபாட்டை அடையாத வைகுந்தத்தில், நித்தியஸூரிகளுக்கு மிகவும் இனியவர்களாக இருப்பார்கள். எப்படி மிகவும் பிரீதியுள்ள நாயகர்கள் பொன்வளைகளையும் மூங்கில்போல் அழகான தோள்களிரண்டையுமுடைய நாயகிகளுக்கு மிகவும் இனியவர்களாயிருப்பர்களோ, அதுபோல.

குறிப்பு :—(1) 'கொந்தலர்' என்கிற விடத்தில் காலத்தைக் குறிக்காமையால் எப்போதும் பூங்கொத்துகள் மலர்ந்து கொண்டிருக்கின்றன என்பது கருத்து.

(2) இந்தப் பாட்டுக்களைப் படித்தவர்களை நாயகர்களாகவும் நித்தியஸூரிகளை நாயகிகளாகவும் சொன்னதற்கு நாயகிகளுக்கு நாயகர்கள் இனியவர்களாக இருப்பதுபோல் இவர்கள்

அவர்களுக்கு இனியவர்களாயிருப்பர்கள் என்பதுமாத்திரம் கருத்து ; இவர்கள் சேஷிகளாகவும் அவர்கள் சேஷமாகவும் இருப்பர்கள் என்பதும் கருத்து அன்று. (11)

---

[illegible] ॥ ௧0௫

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான், வைகுந்தத்துக்குப் போகிறவர்களுக்கு வழியிலுண்டாகும் க்லேசத்தைப் போக்குகிறவன் என்பது அவனுடைய பத்துக் குணங்களாலும் வியாபாரங்களாலும் சொல்லப்படுகிறது. அவைகளாவன :—(1) கேசியைக் கொன்றதுபோல் விரோதிகளை நாசம் செய்தது ; (2) ஆச்சரியமான வேலைகளைச் செய்வது ; (3) கருடனைக் கொடியாகக் கொண்டிருப்பது ; (4) ஆச்ரிதர்களுக்குக் கிட்ட இருப்பது ; (5) ஸ்வாமியாயிருப்பது ; (6) தேவர்களை உண்டுபண்ணினது ; (7) உலகத்தை உண்டுபண்ணுவது முதலான வியாபாரங்களைச் செய்வது ; (8) ஆதிசேஷன்மேல் படுத்திருப்பது ; (9) வாமனனாய் அவதாரம் செய்தது ; (10) மாதவன் என்கிற திருநாமத்தையுடையவனாயிருப்பது. (105)

---

# மூன்றாம் திருவாய்மொழி.

அவ——இப்படி எம்பெருமானுடன் ஆழ்வார் சேர்ந்திருக்கும்போதே தாம் பிரகிருதியின் காரியமான உடம்புடன் சேர்ந்திருப்பதைப்பார்த்து அந்தக் காரணத்தாலே ஒருவேளை அவன் தம்மை விட்டுவிடுவனே என்று ஸந்தேஹமுண்டாய் வருத்தம் அடைந்து அதை இந்தத் திருவாய்மொழியில் பேசுகிறார்.

(2) இப்படியே கண்ணன் மாடுமேய்க்கப்போகும் காலவேளை வந்தபோது, தங்களை விட்டு அவன் போய்விடுவான் என்று கோபிகைகளுக்கு ஸந்தேஹமுண்டாகி, அவனுடன் சேர்ந்திருக்கையிலேயே அவன் தங்களை விட்டுப்போனதாக நினைத்து, பிரிந்தவர்கள்படும் வருத்தத்தைப்பட்டு அந்த வருத்தத்தையும் அவன் கொடுமையையும் தோழிகளுக்குச் சொல்லுவதுபோல் அவனிடத்திலேயே சொன்னார்கள். அவர்கள் பேச்சால் தம்முடைய வருத்தத்தை ஆழ்வார் வெளியிடுகிறார்.

(3) கீழ்த் திருவாய்மொழியில் சொன்னபடி தம்முடைய உபதேசம்பெற்ற ஸ்ரீ வைஷ்ணவர்களுடன் திருவனந்தபுரத்துக்குப் போக ஆரம்பித்தார். போக முடியவில்லை. அப்போது தாம் உடம்போடு இருப்பது அவருக்குத் தோன்றிற்று. அதனால் எம்பெருமான் இன்னமும் தம்மை உடம்போடு வைத்து விட்டு விடுவனோ என்று ஸந்தேஹம் உண்டாயிற்று.

(எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்-)

வேய்மரு தோளிணை மெலியு மாலோ
மெலிவுமென் தனிமையும் யாதும் நோக்கா
காமரு குயில்களுங் கூவு மாலோ
கணமயி லவைகலந் தாலு மாலோ
ஆமரு வினநிரை மேய்க்க நீபோக்
கொருபக லாயிர மூழி யாலோ
தாமரைக் கண்கள்கோண் டீர்தி யாலோ
தகவிலை தகவிலை யேநீ கண்ணா. (க)

(ப - ரை) வேய் மரு - மூங்கிலைப்போன்ற, தோள் இணை - (என்) இரண்டு தோள்கள், மெலியும் - இளைத்தன, ஆல் ஓ - ஐயோ! என் மெலிவும் - நான் இளைத்ததையும், என் தனிமை யும் - என்னுடைய பிரிவையும், யாதும் - ஒன்றையும், நோக்கா - (குயில்கள்) பார்க்கவில்லை, கா மரு - தோட்டத்திலிருக்கிற குயில்களும், கூவும் - கத்துகின்றன, ஆலோ, கண மயில் அவை - கூட்டமாயிருக்கிற மயில்களானவை, கலந்து - ஒன்றோடொன்று சேர்ந்து, ஆலும் - (ஸந்தோஷத்தாலே) கூத்தாடுகின்றன, மரு இன ஆ நிறை - உன்னிடத்தில் பிரீதியுள்ள கூட்டமாயிருக்கிற பசுக்களின் வரிசையை, மேய்க்க, நீ, போக்கு - போவதாகிய, ஒரு பகல், ஆயிரம் ஊழி - ஆயிரம் கல்பங்களாக ஆகிறது, தாமரைக் கண்கள்கொண்டு, நீ, ஈர்தி - (எங்களைப்) பிளக்கிறாய், தகவிலை - கிருபை இல்லாதவன், கண்ணா! நீயே தகவிலை - நீயே கிருபை இல்லாதவன்.

(கருத்து) உன்னுடன் சேர்ந்திருந்த காலத்தில் மூங்கில் போல் அழகாயிருக்கின்றன என்றும், அவைகள் சேர்க்கையாலே எவ்வளவு அழகாயிருக்கிறது என்றும் நீ கொண்டாடின என்னு டைய இரண்டு தோள்களும் உன்னை விட்டுப் பிரிந்து இப்போது இளைத்துப்போய்விட்டன. தோட்டத்திலிருக்கும் குயில்கள் தோள்கள் இளைத்ததையும் நான் பிரிந்து வருத்தப்படுவதையும் பார்க்கவில்லை. "நம்முடைய சப்தங்கள் இவளை முடித்துவிடும்" என்று ஆலோசிக்காமல் உன்னுடைய திருநாமங்களைக் கத்துகின் றன. என் இருப்பைக்கண்டு இவைகள் வாயைத்திறக்கலாமோ? ஒன்றோடொன்று சேர்ந்து ஸந்தோஷப்பட்டு கூட்டங்கூட்ட மாய் கூடியிருக்கிற மயில்கள் அந்த ஸந்தோஷத்தாலே கூத்தாடு கின்றன. "இவள் இப்படியிருக்க, நாம் ஆணும் பெண்ணுமாய்ச் சேருவதும் நாம் கூத்தாடுவதும் இவளை முடிக்கும்; இவைகள் தகுந்தவைகள் அல்ல. இவைகளால் ஸ்திரீவதம் உண்டாகும்" என்று பார்க்கவில்லையே? "ஒரு பகல் உன்னைவிட்டு நான் பிரிந் தால் இவ்வளவு நீ வருத்தப்படவேண்டுமோ" என்று சொல்லு கிறாயோ? உன்னிடம் ஆசையுள்ள பசுக்கூட்டங்களை மேய்க்கப் போகிற ஒரு பகல் ஆயிரம் கல்பங்கள்போலாகிறதே எனக்கு. இப்படி இருக்கிற பகல் உனக்கு அநுகூலமாக இருக்கிறதே! நீ பசு மேய்க்கப்போனால், உன் தாமரைப் பூக்களைப்போன்ற

உன் கண்களின் அழகை என் மனதில் வைத்துவிட்டுப்போக வேண்டுமோ? அது என்னைப் பிளக்கிறதே! உன்னைப் பிரிந்து நான் இப்படி வருத்தப்படுகையில் என்னைவிட்டுப் பிரிந்து நீ இருக்கச் சக்தியுள்ளவனாயிருப்பதே! உனக்குக் கிருபையில்லை நீ இருக்கிற உலகத்திலும் கிருபையில்லை.

குறிப்பு :—(1) மனவருத்தத்தினாலே கண்ணன் போனதாக எண்ணித் தோழியுடன் பேசவேண்டியவள் அப்படிப் பேசாமல், நீ என்று அவனிடம் சொல்லுவதுபோல் பேசுவது மனதின் வருத்தத்தாலே உண்டான கலக்கத்தைக் காட்டுகிறது.

(2) 'கணமயிலவை' என்றவிடத்தில் மயில்களின் நர்த்தனத்தைப் பார்க்கமுடியாமல் முகத்தைத் திருப்பிக்கொண்டு 'அவை' என்று சொன்னபடி.

(3) "காமரு" என்பதற்கு அழகான என்றும், ஒன்றோடொன்று சேர்ந்து அதினால் ஸந்தோஷத்தையடைந்திருக்கிற என்றும் பொருள் கொள்ளலாம்.

(இ - ம்) நோக்கா - பலவின்பால் எதிர்மறை வினைமுற்று. ஈர்தி-முன்னிலை ஒருமை வினைமுற்று. தகவிலையே நீ-ஏகாரத்தை நீ என்பதுடன் சேர்க்கவேண்டியது. அதற்குப் பிரிநிலைப்பொருள். அவனை மற்றவர்களிடமிருந்து பிரிக்கிறது. (1)

---

அவ—"என்னுடன் சேர்ந்து ஸுகத்தை அநுபவிக்கும்போது இப்படி வருத்தப்படவேண்டுமோ?" என்று அவன் கேட்பதாய் நினைத்துப் பதில் சொல்லுகிறாள் :—

தகவிலை தகவிலை யேநீ கண்ணா
 தடமுலை புணர் தோறும் புணர்ச்சிக்காரா
சுகவெள்ளம் விசும்பிறந் தறிவை மூழ்கச்
 சூழ்ந்தது கனவென நீங்கி யாங்கே
அகவுயி ரகமகந் தோறு முள்புக்
 காவியின் பரமல்ல வேட்கை யந்தோ
மிகமிக வினியுன்னைப் பிரிவை யாமால்
 வீவுனின் பசுநிறை மேய்க்கப் போக்கே. (௨)

(ப - ரை) கண்ணா! நீ தகவிலை - நீ கிருபையில்லாதவன், தகவிலையே - கிருபையில்லாதவனே! தடம் முலை - விசாலங்களான ஸ்தனங்களுடைய, புணர்தோறும் - ஆலிங்கனத்தைச் செய்யும்போது எல்லாம், புணர்ச்சிக்கு - ஆலிங்கனத்துக்கு, ஆரா - அடங்காத, சுகவெள்ளம் - ஸுகஸமுத்திரம், விசும்பு இறந்து - ஆகாசத்தைத் தாண்டிப்போய், அறிவை, மூழ்க்க - முழுகும்படி, சூழ்ந்து - என்னை வியாபித்து, அது - அந்த ஸுகஸமுத்திரம், கனவு என - ஸ்வப்னம் என்று சொல்லும்படி, நீங்கி, ஆங்கே - அந்த இருப்பில், வேட்கை - மென்மேல் சேர்வதில் ஆசையானது, அகம் உயிர் - எனக்குள்ளிருக்கும் பிராணனுடைய, அகம் அகம் தோறும் - உள்ளேயிருக்கும் இடங்கள்தோறும், உள் புக்கு - உள்ளே புகுந்து, ஆவியின் பரம் அல்ல - ஆத்மாவினால் தாங்கும் சுமையாயிருக்கவில்லை, அந்தோ - ஐயோ! இனி, மிக மிக - மேல்மேல், உன்னைப் பிரிவையாம் - உன் பிரிவு உண்டாகும்படி, நின் பசு நிரை மேய்க்கப் போக்கு - நீ பசுக்கூட்டங்களை மேய்க்கப்போவதினால், வீவன் - நான் முடிந்துபோவேன்.

(கருத்து) கண்ணா! நீ பெண்கள் சொன்னதைக் கேட்கிறவன் என்று உனக்கு ஒரு பிரஸித்தி உண்டாயிருக்கிறது. ஆனால், உனக்கு இரக்கமில்லை. நீ இரக்கமில்லாதவன்தான். இதில் ஸந்தேஹமில்லை. நீ என்னுடன் சேர்ந்து என்னுடைய விசாலமான ஸ்தனங்களை ஆலிங்கனம் பண்ணினபோது ஒவ்வொரு க்ஷணத்திலும் எனக்கு உண்டான இன்பமானது அளவில்லாமலிருந்தது. அதோது அந்த க்ஷணத்தில் அடங்காமல் பெரிதாய் இருந்து என்னை அறிவை இழந்து மோஹத்தை அடையும்படி செய்தது. அப்படியிருந்தும், ஸ்வப்னத்தில் கண்ட ஸுகத்தைப்போல் உன்னைப் பிரிந்தவுடன் அவ்வளவு ஸுகமும் போய்விட்டது. உன்னுடன் மேன்மேலும் சேர்ந்திருக்கவேண்டும் என்கிற ஆசையோ பிராணன் ஸஞ்சாரம் செய்கிற என் உடம்பின் எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கிறது. அதை என்னாலே தாங்கமுடியவில்லை. ஐயோ! சேர்ந்த ஸுகம் நம் இருவருக்கும் ஸமமாக இருந்ததே, பிரிந்த துக்கம் எனக்கு மாத்திரம் இருக்கிறதே. நீ மாடு மேய்ப்பதற்காகக் காட்டுக்குப்

போவது எனக்குத் துக்கத்தை உண்டாக்கி என்னை முடித்து விடும். ஆகையால், ஒருபோதும் எனக்கு ஸுகலவமில்லை.

(இ - ம்) புணர் தொறும் - புணர் : புணர்தல். முதனிலைத் தொழிற்பெயர். ஆரா - ஆராத : ஈறுகெட்ட பெயரெச்சம். (2)

---

அவ—கீழ்ப் பாட்டில் உன் பிரிவினுல் நான் முடிவன் என்று சொன்னுள். முடியும் விதத்தை விவரமாய் சொல்லு கிருள் :—

வீவன் நின்பசு நிரைமேய்க்கப் போக்கு
  வெவ்வுயிர்க் கொண்டெனை தாவி வேமால்
யாவருந் துணையில்லை யானி ருந்துன்
  னஞ்சன மேனியை யாட்டங் காணேன்
போவதன் றொருபகல் நீய கன்றால்
  பொருகயற் கண்ணிணை நீரும் நில்லாச்
சாவதிவ் வாய்க்குலத் தாய்ச்சி யோமாய்ப்
  பிறந்தவித் தொழுத்தையோம் தனிமை தானே. (௩)

(ப - ரை) நின் பசு நிரை மேய்க்க போக்கு - உன்னுடைய பசுக்கூட்டங்களை மேய்க்க (வனத்துக்கு)ப் போவதினுல், வீவன்- நான் முடிந்துவிடுவேன், (அஃது எப்படியென்றல்) எனது ஆவி- என் ஆத்மா, வெவ்வுயிர் கொண்டு - உஷ்ணமான மூச்சையுடையதாய், வேம் - வெந்துபோகிறது, ஆல், துணை யாவரும் இல்லை - (இந்தத் தசையில் எனக்குத்) துணையாக ஒருவருமில்லை, யான் இருந்து - நான் பிழைத்திருந்து, உன் அஞ்சன மேனியை - மைபோல் அழகான உன் திருமேனியினுடைய, ஆட்டம் - ஸஞ்சாரத்தை, காணேன், நீ அகன்றால் - நீ என்னைப் பிரிந்து போனுல், ஒரு பகல், போவதன்று - போகத்தக்கதாயிருக்கிறதில்லை, பொரு கயல் - கலஹம் பண்ணுகிற மீன்களைப்போலே சஞ்சலமான, கண் இணை - இரண்டு கண்களுடைய, நீரும், நில்லா - நிற்கவில்லை, இ ஆய்க்குலத்து - இந்தக் கோபர்கள் குலத்தில், ஆய்ச்சியோமாய் - இடைச்சிகளாய், பிறந்த, தொழுத்தையோம் - தாழ்மையையுடைய எங்களுடைய, தனிமைதான் - தனிமையே, சாவது - நசித்துப்போவது ஆகவேண்டும். (மிகவும் பொல்லாதது).

(கருத்து) நீ பசு மேய்க்க வனத்துக்குப்போனால், நான் முடிந்து விடுவேன் என்று சொன்னேனே. அது தெளிவாய்த் தெரியவில்லையா? உன் பிரிவினால் உண்டான உஷ்ணமான மூச்சுக்காற்று என் ஆத்மாவை உலர்த்துகிறது. துக்கமாகிய நெருப்பு அதைக் கொளுத்துகிறது. இந்தத் தசையில் எனக்குத் துணையாயிருக்கிறவர்கள் ஒருவருமில்லை. தோழிமார்களோ என் துக்கத்தைப்பார்த்து எனக்கு முன்னாலே முடிகிறார்கள். நான் வளர்த்த குயில்களும் மயில்களும் வேண்டியவர்கள் போலத் தோன்றி உண்மையில் விரோதிகளாய் இருக்கின்றன. நீ பிரிந்த போது உண்டாகவேண்டிய மரணம் உடனே வரவில்லை. ஏனென்றால், "உன்னை இன்னுமொருதடவை பார்ப்பேனோ?" என்கிற ஆசை மரணத்தைத் தடுக்கிறது. க்ஷணம்தோறும் உன்னைக் காணாமையாலே துக்கமும் பொறுக்க முடிகிறதில்லை. அஞ்சனம்போல் அழகாயிருக்கிற உன் திருமேனியுடன் என்கண்களுக்கு முன்னாலே நீ ஸஞ்சாரம் பண்ணுகிறதுமில்லை. நீ போனபோது ஒரு பகல் முடியாமல் கல்பம்போலிருக்கிறது. ஒன்றோடொன்று சண்டை போட்டு ஜலத்தில் இங்குமங்கும் ஓடுகிற மீன்கள்போல் என் இரண்டு கண்களும் மிகவும் சஞ்சலமாயிருக்கின்றன. ஊற்றிலிருந்து ஜலம் ஊறுவதுபோல், அவைகளிலிருந்து ஜலம் பெருகுகிறது. வனத்துக்குப்போகிற உன்னைத் தடுத்தாலும் தடுக்கலாம்; கண்ணீர் பெருகுவதைத் தடுக்க முடியவில்லை. இந்தக் கோபகுலத்தில் இடைச்சியாய்ப் பிறந்து தாழ்மையாயிருக்கிற என்னுடைய ஆசை மிகவும் பொல்லாதது. என்னைப்போல உனக்கு ஆசையிருந்தால் ஸுகமுண்டாகும். உனக்கோ என்னிடம் ஆசையில்லை. எனக்குமாத்திரம் உன்னிடத்தில் ஆசையிருக்கிறது. அது என்னை முடித்துவிடும்.

குறிப்பு:—தனிமை சாவது - அது மரணம்போலிருக்கிறது என்றும் பொருள்கொள்ளலாம்.

(இ - ம்) வேம் - வேகும்; கு - கெட்டது தொகுத்தல் விகாரம். நில்லா - எதிர்மறை வினைமுற்று. சாவது - வினையாலணையும் பெயர். ஆல் - இடைநிலைச்சொல். இரக்கத்தைக் காட்டியது. (3)

---

அவ—கீழ்ப்பாட்டில் தனக்கு மாத்திரம் அவனிடத்தில் ஆசையிருக்கிறது என்று சொன்னாள்; ஆசையில்லாமல் அவன் உபேக்ஷிக்கிற விதத்தைச் சொல்லுகிறாள் :—

தொழுத்தையோந் தனிமை யுந்துணை பிரிந்தார்
துயரமும் நினைகிலை கோவிந் தாவுன்
தொழுத்த னில்பசுக் களையே விரும்பித்
துறந்தெம்மை யிட்டவை மேய்க்கப் போதி
பழுத்த நல்லமுதி னின்சாற்று வெள்ளம்
பாவியேன் மனமகந் தோறு முள்புக்
கழுத்த நின்செங் கனிவாயின் கள்வப்
பணிமொழி நினை தொறுமாவி வேமால். (௪)

(ப - ரை) தொழுத்தையோம் - தாழ்மையையுடைய எங்களுடைய, தனிமையும் - பிரிந்திருப்பதையும், துணை பிரிந்தார் - துணையாய் இருப்பவனைப் பிரிந்திருக்கிற எங்களுடைய, துயரமும் - துக்கத்தையும், நினைகிலை - நீ நினைக்காதவனாயிருக்கிறாய், கோவிந்தா! தொழுத்தனில் - மாட்டுக் கொட்டிலிலிருக்கிற, உன் - உன்னுடைய பசுக்களையே, விரும்பி - பிரீதி பண்ணி, எம்மை - எங்களை, துறந்து - விட்டுவிட்டு, இட்டு - எறிந்துவிட்டு, அவை - அந்தப் பசுக்களை, மேய்க்க, போதி - போகிறாய், பழுத்த, நல் - தோஷமில்லாத, அமுதின் - அமிருதத்தினுடைய, இன் சாற்று வெள்ளம்-இனிய ஸாரத்தினுடைய பிரவாஹம்போலிருக்கிற, நின் - உன்னுடைய, செம்கனிவாயின்-சிவந்த கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தினுடைய, கள்வம் - வஞ்சகங்களான, பணி மொழி - தாழ்மையைக் காட்டுகிற சொற்களை, பாவியேன் - பாபம் பண்ணின என்னுடைய, மனம் அகம் தோறும் - மனதுக்குள் இருக்கும் இடம் முழுவதும், உள் புக்கு அழுத்த - உள்ளே புகுந்து அழுந்தும்படி பண்ண, நினை தொறும் - நினைக்கும்போதெல்லாம், ஆவி - என் பிராணன், வேம் - வெந்துபோகிறது.

(கருத்து) உன் அழகுக்குத்தோற்று உனக்கு வேலைக்காரியாயிருக்கிற நான் உன்னைப் பிரிந்து தனியாயிருப்பதை நீ நினைக்கிறாயில்லை. எனக்குத் துணையாயிருக்கவேண்டிய உன்னை விட்டுப் பிரிந்து படுகிற துக்கத்தையும் நினைக்கிறாயில்லை. மன்மத

னைப்போல் அழகாயிருக்கிற உன்னோடு சேர்ந்திருப்பதையே ஸ்வபாவமாக உடைய நான் உன்னைப் பிரிந்து ஒருக்ஷணம் பிழைத்திருப்பேனோ? உன்னைவிட்டுப் பிரிந்து படுகிறதுக்கம் இரண்டு விபூதிக்குள் அடங்குமோ? இப்படி நான் துக்கப்படுவதையும், அது உன் பிரிவினால் உண்டாயிருக்கிறதென்பதையும் நீ நினைக்கவில்லையே. நீ கோபர்களையும் பசுக்களையும் ரக்ஷித்து அதினால் கோவிந்தன் என்று திருநாமம் பெற்றவன் அன்றோ? நீ என்னையும் ரக்ஷிக்கவேண்டியதாயிருக்க, பசுக்களைமாத்திரம் ரக்ஷிக்கலாமோ? வெளிப் பிரதேசமான கொட்டிலிலிருந்த மாடுகளைமாத்திரமோ நீ கவனிக்கிறது. உன்னை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டிருந்த என்னைக் கவனிக்க வேண்டாமோ? உன்னைப் பிரிந்து துக்கப்படத் தெரியாத பசுக்களையோ ஆதரிப்பது. உன்னைப் பிரிந்து வருத்தப்படுகிற என்னை ஆதரிக்கலாகாதோ? ஆகையால் என்னை அணைத்துக்கொண்டு இருக்கும்போதும் உன் மனது பசுக்களிடம் அன்றோ இருந்தது. அவைகளிடத்தில் ஆசையாலே என்னிடத்தில் ஆசையைவிட்டு, துரும்பை எறிவதுபோல் எறிந்துவிட்டு பசுமேய்க்கப் போகிறாய். ஆகையால் நான் ஒருதலைக் காமத்தாலே வருந்துகிறேன். "உன் கடாக்ஷமே எனக்குத் தாரகமாக இருக்க உன்னை விட்டு நான் பிரிந்திருப்பது முடியுமோ" என்பதுபோல் விநயத்துடன்கூட அவன் பேச, அதைக் கேட்டுப் பேசுகிறாள். உன்னுடைய கோவைப்பழம் போன்ற திருப்பவளத்தால் விநயத்துடனும் ஆசையுடனும் சில பேச்சுக்களைப் பேசுகிறாய். அவைகள் பரிபூர்ணமான தோஷமில்லாத அமுதத்தின் இனிய ஸாரத்தின் பிரவாஹத்தைப் போல் இனியவைகளாயிருக்கின்றன. அவைகள் என்னிடத்திலுள்ளவைகள் எல்லாவற்றையும் அபஹரிக்கின்றன. நினைக்கும்போதெல்லாம் அவைகள் என் மனதெல்லாம் புகுந்து மறக்க முடியாதபடி நிலையாக இருக்கின்றன. அதனால் என் ஆத்மாவும் வெந்துபோகிறது. இப்படி அமுதமான நீ எனக்கு விஷமாகும்படி நான் பாபம் செய்திருக்கிறேன். அதையன்றோ நான் வெறுக்க வேண்டியது. உன்னை வெறுக்கலாமோ?

(இ - ம்) நினைகிலை - முன்னிலை ஒருமை எதிர்மறை வினைமுற்று. நினை + கு + இல் + ஐ; கு சாரியை; இல் எதிர்மறை இடைநிலை; ஐ விகுதி. தொழுத்தனில் - தொழு + தன் + இல்;

தன் சாரியை. பசுக்களையே - ஏகாரத்துக்குப் பிரிநிலைப்பொருள். பசுக்களைத் தங்களிடமிருந்து பிரிக்கிறது. போதி - முன்னிலை ஒருமை வினைமுற்று. வேம் - வேகும். (4)

---

அவ—"நான் பசு மேய்க்கப் போகவில்லையே, ஏன் இப்பாடு படுகிறாய்" என்று அவன் சொல்ல, பதில் சொல்லிப் பிரார்த்திக்கிறாள் :—

பணிமொழி நினைதொறு மாவி வேமால்
பகல்நிரை மேய்க்கிய போய கண்ணா
பிணியவிழ் மல்லிகை வாடை தூவப்
பெருமத மாலையும் வந்தின் றாலோ
மணிமிகு மார்பினின் முல்லைப் போதென்
வனமுலை கமழ்வித்துன் வாயமுதந் தந்து
அணிமிகு தாமரைக் கையை யந்தோ
அடிச்சியோந் தலைமிசை நீயணியாய். (ரு)

(ப - ரை) பகல் - பகல் எல்லாம், நிரை - பசுக்கூட்டத்தை, மேய்க்கிய - மேய்ப்பதற்காக, போய - போயிருக்கிற, கண்ணா! பணிமொழி - உன்னுடைய விநயத்துடன் கூடிய சொற்களை, நினைதொறும் - நினைக்கும் க்ஷணங்கள்தோறும், ஆவி - என் பிராணன், வேம் - வெந்துபோகிறது, பிணி அவிழ் - கட்டு அவிழ்கிற (மலருகிற), மல்லிகை - மல்லிகையின் வாஸனையை, வாடை - வாடைக்காற்று, தூவ - பரவும்படி செய்ய, பெருமதம்-மிகுந்த மதத்தைக்கொண்ட, மாலையும் - ஸந்தியாகாலமும், வந்தின்று-வந்துவிட்டது, மணிமிகு-கௌஸ்துப ரத்நத்தின் காந்தி எங்கும் பரவியிருக்கிற, மார்பினில் - திருமார்பில், முல்லைபோது-முல்லைப்புஷ்பங்களாலே, என் வன முலை - என்னுடைய அழகான ஸ்தனங்களை, கமழ்வித்து - வாஸனையுள்ளதாகச் செய்து, உன் வாய் அமுதம் - உன் வாயின் அமுதம்போன்ற பேச்சை, தந்து, அணி மிகு - அலங்காரம் அதிகமாயிருக்கிற, தாமரைக் கையை, அடிச்சியோம் - உனக்கு வேலைக்காரிகளாகிய எங்களுடைய, தலைமிசை - தலைமேலே, நீ, அணியாய் அலங்காரம்போல் வைத்து அருளவேண்டும், அந்தோ - ஐயோ!

(கருத்து) நீ பகல் முழுவதும் பசுக்கூட்டங்களை மேய்க்க வனத்துக்குப் போயிருக்கவில்லையோ? கண்ணா! நீ போகும் போது உன்னுடைய விநயத்துடன் கலந்து சொன்ன சொற்களை நினைக்கிற ஒவ்வொரு க்ஷணத்திலும் என் ஆத்மா வெந்து போகிறது. மிகுந்த மதமுடைய யானையைப்போல, கொழுத்திருக்கிற ஸந்தியாகாலம் வந்து என்னைப் பிடிக்கிறது. வாடைக் காற்று மல்லிகைப் புஷ்பங்களின் வாஸனையை முகந்துகொண்டு எங்கும் வீசுகிறது. கௌஸ்துப ரத்நத்தின் காந்தி எங்கும் பரவியிருக்கிற, முல்லைப்புஷ்ப மாலையைத் தரித்திருக்கிற உன் திருமார்பினால் பகலெல்லாம் உன்னைவிட்டுப் பிரிந்து பட்டதுக்கமெல்லாம் தீரும்படி அழகான என் ஸ்தனங்களுக்கு வாஸனையை உண்டுபண்ண வேண்டும். என்னை ஆலிங்கனம் பண்ணிக் கொள்ளவேண்டும். உன் திருப்பவளத்தால் இனியவைகளான வார்த்தைகளைச் சொல்லி என்னை உஜ்ஜீவிப்பிக்கவேண்டும். வளைகளாலும் மோதிரங்களாலும் அலங்காரம் செய்யப்பட்டிருக்கிற உன்னுடைய தாமரைப் பூப்போன்ற திருக்கையை என் தாபம் எல்லாம் தீரும்படி என் தலைமேலே அலங்காரமாக ஒருகால் வைத்தருளவேண்டும். ஏழையாகிய என்னிடத்தில் கிருபை செய்யவேண்டும்.

(இ - ம்) வந்தின்று - வ + த + இன் + று; த இறந்தகால இடைநிலை, இன்சாரியை, று விகுதி. மணி - ஆகுபெயராய் அதின் காந்தியைக் காட்டுகிறது. பணி மொழி - பணிந்த வணங்கின, மொழி - வணக்கத்தைக் காட்டும் சொல். போய: இறந்தகாலப் பெயரெச்சம். யகரம் இடைநிலை. (5)

---

அடிச்சியோந் தலைமிசை நீ யணியா
யாழியங் கண்ணாவுன் கோலப் பாதம்
பிடித்தது நடுவுனக் கரிவையரும் பலரது
நிற்க வெம் பெண்மை யாற்றேம்
வடித்தடங் கண்ணிணை நீரும் நில்லா
மனமு நில்லா வெமக்கது தன்னாலே
வெடிப்புநின் பசுநிரை மேய்க்கப் போக்கு
வேமெம துயிரழல் மெழுகி லுக்கே. (சு)

(ப - ரை) அடிச்சியோம் - உனக்கு வேலைக்காரிகளான எங்களுடைய, தலைமிசை - தலைமேலே, நீ, அணியாய் - (உன் தாமரைக் கையை) அலங்காரமாக வைத்து அருளவேண்டும், ஆழிஅம் கண்ணா! - ஸமுத்ரம்போல் அழகான கண்களையுடையவனே! அது நடுவு - (பசுமேய்க்கிற) அந்த வியாபாரத்தின் நடுவிலே, உன் கோலம் பாதம் - அலங்காரத்தை உடைய உன் திருவடியை, பிடித்து - பிடித்துக்கொண்டிருக்கும், உனக்கு அரிவையரும் - (மனதுக்குப்பிடித்த) ஸ்திரீகள், பலர் - பலபேர் (இருக்கிறார்கள்); அது நிற்க, எம் பெண்மை - எங்களுடைய ஸ்திரீத்வத்தாலே, ஆற்றோம் - பொறுக்க மாட்டோம், வடி - கூர்மையான, தடம் - நீண்ட, கண் இணை - இரண்டு கண்களிலிருந்து, நீரும், நில்லா-நிற்காமல் பெருகுகிறது, மனமும், நில்லா-நிலையாய் நிற்கிறதில்லை, அது தன்னாலே - அதனாலே, நின் பசு மேய்க்கப்போக்கு - நீ மாடுகளை மேய்க்கப்போவது, எமக்கு - எங்களுக்கு, வெடிப்பு - வெடிக்கும்படிசெய்யும், எமது உயிர் - எங்கள் ஆத்மா, அழல் மெழுகில் - நெருப்பில்போட்ட மெழுகுகைக்காட்டிலும், உக்கு - உருகி, வேம் - வெந்துபோகிறது.

(கருத்து) ஸமுத்ரம்போல் கம்பீரமாய் அழகான திருக்கண்களையுடையவனே! உனக்கு வேலைக்காரிகளான எங்கள் தலைமேல் தாமரைப்பூப்போன்ற உன் திருக்கைகளை வைத்து உன் திருக்கண்களால் குளிரப் பார்த்தருளவேண்டும். இப்படிச் சொல்லும்போது, "நீ ஏன் இப்படி வேண்டுகிறாய்? உன்னை விட்டுப்பிரிந்து பசு மேய்க்கப்போவது ஒரு பகல்தானே" என்று அவன் சொல்ல, மேலே சொல்லுகிறாள்:—நீ பசு மேய்க்கப்போவது என்பது ஒரு வியாஜம். உனக்கு மனதுக்குப் பிடித்தவர்களாய் உன்னுடைய அலங்காரமான திருவடிகளை அவலம்பமாக உடைய பல ஸ்திரீகள் இருக்கிறார்கள். அவர்களுடன் சேருவதற்கன்றோ நீ போவது. "இப்படி நீ வருத்தப்பட வேண்டுமோ" என்று நீ சொல்லலாம். ஆனால், அதற்காக நாங்கள் பொறுமைப்படவில்லை. நாங்கள் பெண்ணாய்ப் பிறந்திருப்பதாலே உன்னைவிட்டுப் பிரிந்திருப்பது பொறுக்க முடியவில்லை. "புருஷன் வருகிறவரையில் பொறுத்திருக்க முடியாதோ?" என்று சொல்லுகிறாயோ? எங்களைப் பார். கூர்மையுள்ள நீண்ட எங்கள் இரண்டு கண்களிலிருந்தும் ஜலம் நிற்காமல் பெருகிக்

கொண்டிருக்கிறது. எங்கள் மனது தரிக்கமாட்டாமல் தளருகிறது. இந்தத் தளர்ச்சியினால் நீ பசுக்கூட்டங்களை மேய்க்கப் போவது எங்களுக்குப் பொறுக்கமுடியாமலிருக்கிறது. எங்கள் ஆத்மாக்களும் நெருப்பில்போட்ட மெழுகைக்காட்டிலும் உருகி வெந்துகொண்டிருக்கின்றன.

குறிப்பு :—(1) "ஆழியம் கண்ணா" என்பதற்கு ஸமுத்ரத்தைப்போல் மிகவும் நீண்டதாய் விசாலமாய்க் குளிர்ந்ததாய்க் கம்பீரமாய் அழகான காந்தியுள்ளதாய் இருக்கின்றது திருக்கண் என்பது கருத்து.

(2) "வடித்தடம்" என்பதற்கு நாயகனுடைய ஹிருதயத்தைப் பிளக்கும்படியான தீக்ஷ்ணமான கடாக்ஷத்தையுடையவைகள் கண்கள் என்பது கருத்து. காது வரையில் நீண்டிருக்கின்றன என்றும் கருத்துக் கொள்ளலாம்.

(3) போக்கை வெடிப்பு என்று ஒன்றாய்ச் சொன்னதின் கருத்து—போக்கு - காரணம்; வெடிப்பு - அதினால் உண்டாகும் காரியம். போக்கினால் தப்பாமல் வெடிப்பு உண்டாகும் என்பது.

(இ - ம்) ஆற்றோம் - தன்மைப் பன்மை எதிர்மறை வினைமுற்று; ஆற்று + ஆ + அம். ஆ - எதிர்மறை விகுதி கெட்டிக்கிறது. நில்லா - பலவின்பால் எதிர்மறை வினைமுற்று. நில் + ஆ + ஆ. மெழுகில் - இல் : ஐந்தாம் வேற்றுமை உருபு. இங்கே எல்லைப் பொருள்; மெழுகைக்காட்டிலும் என்றபடி.

---

அவ—கீழ்ப்பாட்டில் தம்முடைய தசையைச் சொன்னார்; அதை அறுவாதம்பண்ணி, பசுமேய்க்கப் போனவிடத்தில் அவனுக்கு என்ன வருமோ என்று பயந்து வருத்தப்படுகிறாள் :—

வேமெம துயிரழல் மெழுகி லுக்கு
  வெள்வளை மேகலை கழன்று வீழ
தூமலர்க் கண்ணிணை முத்தஞ் சோரத்
  துணைமுலை பயந்தென தோள்கள் வாட
மாமணி வண்ணா வுன்செங் கமல
  வண்ணமென் மலரடி நோவ நீபோய்
ஆமகிழ்ந் துகந்தவை மேய்க்கின் றுன்னோ
  டசுரர்கள் தலைப்பெய்யி லெவன்கொ லாங்கே. (எ)

(ப - ரை) எமது - எங்களுடைய, உயிர் - ஆத்மா, அழல் மெழுகில் - அக்கினியில்போட்ட மெழுகைக்காட்டிலும், உக்கு - உருகி, வேம் - (விரகஅக்கினியாலே) வெந்துபோகிறது, வெள் வளை - வெளுத்தவளைகளும், மேகலை - ஒட்டியாணமும், கழன்று - உடம்பைவிட்டுநழுவி, வீழ - விழும்படியும், தூமலர் - நிர்மலங்களான புஷ்பங்களைப்போலிருந்த, கண் இணை - இரண்டு கண்களில் இருந்து, முத்தம் - முத்துப்போன்ற நீர் துளிகள், சோர - விழும்படியும், துணைமுலை - ஒன்றோடொன்று நெருங்கிச் சேர்ந்திருந்த ஸ்தனங்கள், பயந்து - வேறு வர்ணத்தையடைந்தும், என்தோள்கள், வாட - வாடும்படியும், மாமணிவண்ணா - நீலரத்னம்போன்ற திருமேனியையுடையவனே! உன், செம்கமலவண்ணம் - செந்தாமரை வர்ணமுள்ள, மென்மலர் - மிருதுவான புஷ்பத்தைப் போலிருக்கிற, அடி - திருவடிகள், நோவ - நோவும்படியும், நீ, போய், ஆ மகிழ்ந்து - பசுக்களை (மிகவும்) விரும்பி, உகந்து - அதையே உயர்ந்த லாபமாக எண்ணி, அவை மேய்க்கின்று - அவைகளை மேய்க்கிற இடத்தில், உன்னோடு, அசுரர்கள், தலைப்பெய்யில் - (வந்து) சேர்ந்தால், ஆங்கே - அவ்விடத்தில், எவன் கொல் - எவைகள் (என்ன கெடுதல்கள்) உண்டாகுமோ?

(கருத்து) எங்களுடைய ஆத்மா நெருப்பில்போட்ட மெழுகைக்காட்டிலும் அதிகவேகமாயுருகிப் பிரிவினாலுண்டான நெருப்பால் வெந்துபோகும். உடம்பு இளைத்துவிட்டபடியால் கையில் போட்ட வெளுப்பு வளைகளும், இடுப்பிலிருந்த ஒட்டியாணமும் கழன்று விழுகின்றன. உன்னோடு சேர்ந்தபோது அழகான தாமரைப்பூப்போல் இருந்த என் இரண்டு கண்களிலிருந்தும் நீர்த்துளிகள் முத்துப்போல் சொரிகின்றன. உன்னுடன் சேர்ந்திருந்த காலத்தில் ஒன்றோடொன்று நெருங்கி அழகாயிருக்கின்றன என்று நீ கொண்டாடின ஸ்தனங்கள் வெளுத்துப்போயின. என் தோள்கள் வாடிவிட்டன. இது என் தசை. இதின்மேலே நீலரத்னம்போன்ற திருமேனியையுடையவனே! புஷ்பத்தைப்போல் மிருதுவாயும் செந்தாமரைப் பூப்போல் சிவந்துமிருக்கிற உன் திருவடிகள் காட்டில் நடந்தால், நோவாவோ என்று பயப்படுகிறேன். என் தலைமேலே வைக்க வேண்டியவைகளைக் காடுகளில் வைக்கலாமா? அவைகளுக்கு உண்டாகும் நோவு என்பிராணனுக்கு நோவாகுமே. என்னைக்காட்டி

னும் பசுக்களிடத்தில் அதிக ஆசையுள்ளவனும், அதை மேய்ப்பதையே பெரிய லாபமாக எண்ணிக்கொண்டு உன் திருமேனியையும் மறந்து காட்டுக்குப் போயிருக்கிறுயே. உன் ஸ்வாபம் எனக்குத் தெரியாதா? நீ போனவிடங்களில் எல்லாம் சண்டை உண்டாகவில்லையா? சக்கிரவர்த்தித் திருமகனே, உயர்ந்த குணமுள்ளவனுகையால், போனபடிபோய்த் திரும்பி வந்தவன். உன்னிடம் அசுரர்கள் வந்துகிட்டினுல் என்ன கெடுதல்கள் உண்டாகுமோ? அது எங்களால் நினைக்கவும் சொல்லவும் முடியவில்லை.

(இ - ம்) ஆங்கு - அங்கு : நீட்டல் விகாரம். மேய்க்கின்று - வினையெச்சம். மேய் + கு + இன் + று. கு, இன் சாரியைகள். மேய்த்துக்கொண்டு என்பது பொருள். இருக்கையில் என்பது வருவிக்கப்படுகிறது. முத்தம் - ஆகுபெயராய் முத்தைப்போலிருக்கிற நீர்த் துளிகளைச் சொல்லுகிறது. (7)

---

அசுரர்கள் தலைப்பெய்யி லெவன்கொ லாங்கென்
றழுமென் னுருயி ரான்பின் போகேல்
கசிகையும் வேட்கையு முள்க லந்து
கலவியும் நலியு மென்கை கழியேல்
வசிசெயுன் தாமரைக் கண்ணும் வாயும்
கைகளும் பீதக வுடையுங் காட்டி
ஒசிசெய் நுண்ணிடை யிளவாய்ச் சியர்நீ
யுகக்குநல் லவரோடு முழிதந ராயே. (அ)

(ப - ரை) அங்கு - பசுமேய்க்கப்போனவிடத்திலே, அசுரர்கள், தலைப்பெய்யில் - (வந்து) சேர்ந்தால், எவன்கொலென்று - எவைகள் உண்டாகுமோ என்று, ஆர் என் உயிர் - அருமையான (உனக்குப் பிரியமாயிருந்த) என் ஆத்மா, அழும் - (பயஸமுத்திரத்தில்) முழுகும், ஆன் பின் - பசுக்களின் பின்னே, போகேல் - நீ போகாதே. கசிகையும் - ஈரமும் (எனக்கு உன்னிடத்திலுள்ள ஆசையும்), வேட்கையும் - (உன்னைப் பார்க்காவிட்டால் பிராணனைத் தரிக்கமுடியாத) அபிநிவேசமும், உன்

கலந்து - என்மனதில் சேர்ந்து, கலவியும் - உன்னுடன் சேர்ந்திருந்ததும், நலியும் - (என்னைப்) பிடிக்கும், என் கை கழியேல் - என் கையைவிட்டு விலகாதே. (இதைக் கேட்டும் அவன் பேசவில்லை. அவன் பசுமேய்ப்பதை வியாஜமாக வைத்துக்கொண்டு வேறு ஸ்திரீகளுடன் போக யத்னம்செய்கிறான் என்று சொல்லுகிறாள்) வசிசெய் - (பார்ப்பவர்களை) வசப்படுத்துவதைச் செய்கிற, உன், தாமரைக்கண்ணும் - தாமரைக்கண்களையும், வாயும் - திருப்பவளத்தையும், கைகளும் - திருக்கைகளையும், பீதகவுடையும் - பீதாம்பரத்தையும், காட்டி, ஒசிசெய் - துவண்டுபோவதைச் செய்கிற, நுண் இடை - ஸூக்ஷ்மமான இடுப்பையுடைய, இளவாய்ச்சியர் - சிறுவயதுள்ள கோபிகைகள், நீ உகக்கும் - நீ பிரீதி செய்யும், நல்லவரோடும் - குணமுள்ள நாயகிகளோடும், உழிதராய் - ஸஞ்சரிக்கவேண்டும்.

(கருத்து) நீ மாடு மேய்க்கப் போனவிடத்தில் அஸுரர்கள் உன்னைவந்துகிட்டினால், என்ன உண்டாகுமோ என்று உனக்குப் பிரியமாயிருந்த என் ஆத்மா பய ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கிறது. ஆகையால், மாடுகளின்பின்னால் காட்டுக்குப்போகாதே. உன்னிடத்தில் எனக்கு உள்ள ஆசையும், உன்னைவிட்டுப்பிரிந்து தரித்திருக்கவொட்டாமல் செய்கிற அபிநிவேசமும், உன்னுடன் உண்டாயிருந்த சேர்க்கையும் நினைக்கும்போதெல்லாம் என்னைத் துன்பப்படுத்துகின்றன. என் கையை விட்டுப்பிரியாதே என்று சொன்னாள். இதைக்கேட்டும் அவன் பேசவில்லை. அப்போது அவன் பசு மேய்ப்பதை வியாஜமாக வைத்துக்கொண்டு வேறு ஸ்திரீகளுடன் சேருவதற்காகப் போக யத்னம் செய்கிறான் என்று எண்ணிச் சொல்லுகிறாள்—பார்க்கிறவர்களை வசப்படுத்திக்கொள்ளும்படி அபிப்ராயத்துடன் பார்க்கிற தாமரைப்பூப் போன்ற திருக்கண்களையும், அந்த அபிப்ராயத்தை வெளியிடுகிற மந்தஹாஸத்தோடு கூடிய உன் திருப்பவளத்தையும், அந்தக் கடாக்ஷத்தாலும் மந்தஹாஸத்தாலும் எதிரே நிற்கமுடியாமல் லஜ்ஜையுடன் உன் திருவடிகளில் விழுகிற ஸ்திரீகளை அணைத்துக்கொள்ளும் திருக்கைகளையும், அந்தத் திருக்கைகளால் அணைத்தபோது உண்டான ஸௌகவிசேஷத்துக்குத்தோற்று திருவடிகளில் விழ ஆரம்பித்தவர்களை அப்படி விழவொட்டாமல் நடுவே தன்னழகைக் காட்டித் தன்னிடத்தில் இழுத்துக்கொள்ளும்

திருப் பீதாம்பரத்தையும் காட்டி, வசப்படுத்தப்பட்டவர்களாயும், இயற்கையாலும் உன்னுடன் சேர்க்கையாலும் துவண்டிருக்கிற ஸூக்ஷ்மமான இடுப்பையுடையவர்களாயும் உனக்கு வயதாலும் ஜாதியாலும் ஸமமானவர்களாயும், உன் பிரீதிக்கு விஷயமாயிருக்கிறவர்களாயுமிருக்கிற நாயகிகளுடன் உனக்குச் சேரவேண்டுமானால் காட்டுக்குப்போகவேண்டாம். என் கண்வட்டத்திலேயே அவர்களுடன் சேர்ந்திரு. அதினால், எனக்கு ஒரு குறையுமில்லை. நீ காட்டுக்குப் போகாதிருந்தால் போதும்.

குறிப்பு:—கீழ்ப்பாட்டுவரையில் எம்பெருமான் காட்டுக்குப் போனதாகப் பிரமித்துப் பேசினாள். உண்டாயிருந்த கலக்கத்தாலே அவன் போகாதிருப்பதாக எண்ணி, அவனைப்போகவேண்டாம் என்று இதில் தடுக்கிறாள். இவை இரண்டும் பிரமத்தினால் உண்டானபடியால், அவைகளுக்குள்ள விரோதத்தைக் கவனிக்கவேண்டியதில்லை. நல்ல நினைவுள்ளவன் அன்றோ ஒன்றோடொன்று விரோதமில்லாமல் பேசுவது.

(இ - ம்) உழிதராய் - ஒருமை ஏவல் வினைமுற்று. உழிதா + ஆய். தா - துணைவினை. கழியேல் - எதிர்மறை ஏவல் வினைமுற்று. கழி + ஆ + ஏல்; எதிர்மறை விகுதி கெட்டது. (8)

---

உகக்குநல் லவரொடு முழிதந் துன்றன்
திருவுள்ள மிடர்கெடுந் தோறும் நாங்கள்
வியக்கவின் புறுதுமெம் பெண்மை யாற்றோ
மெம்பெரு மான்பசு மேய்க்கப் போகேல்
மிகப்பல வசுரர்கள் வேண்டுருவங்கொண்டு
நின்றுழி தருவர் கஞ்ச னேவ
அகப்படி லவரொடும் நின்னோ டாங்கே
யவத்தங்கள் விளையுமென் சொற்கொ ளந்தோ. (௯)

(ப - ரை) நீ உகக்கும் - நீ பிரீதிபண்ணும், நல்லவரோடும் - அழகான நல்ல குணங்களையுடைய நாயகிகளோடும், உழிதந்து - ஸஞ்சரித்து, உன்தன் திருவுள்ளம் - உன்னுடைய திருவுள்ளமானது, இடர் கெடுந்தோறும் - துக்கம் கெடும்போதெல்லாம், நாங்கள், வியக்க - அதிகமாக, இன்பம் - ஆநந்தத்தை, உறுதும் - அடைவோம், எம் பெண்மை - (இதைப் பொறுக்க

முடியாத) எங்களுடைய ஸ்திரீ ஸ்வபாவத்தை, ஆற்றோம் - பொறுக்கமாட்டோம், எம்பெருமான் - ஸ்வாமியே! நீ பசு மேய்க்க, போகேல் - போகாதே. பல அசுரர்கள், கஞ்சன் ஏவ - கம்ஸனுல் ஏவப்பட்டு, வேண்டு உருவம் கொண்டு - வேண்டின ரூபத்தையெடுத்துக்கொண்டு, நின்று - (இடம் தேடிக் கொண்டு) இருந்து, மிக உழிதருவர் - மிகவும் ஸஞ்சரிப்பர்கள், அகப்படில் - (அவர்கள் கையில்) நீ அகப்பட்டால், ஆங்கே - அங்கே, அவரொடும், நின்னோடு - உன்னோடும், அவத்தங்கள் - அனர்த்தங்கள், விளையும்-(அதிகமாக) உண்டாகும். என் சொல்- என் வார்த்தையை, கொள் - எடுத்துக் கொள், அந்தோ-ஐயோ!

(கருத்து) நீ பிரீதி பண்ணும் நல்ல குணங்களையுடைய ஸ்திரீகளுடன் சேராமலிருப்பதால் உண்டாய் உன் மனதிலிருக்கும் துக்கம் எல்லாம் போய் நீ அவர்களுடன் சேர்ந்து ஸந்தோஷப்படும் போதெல்லாம், நாம் என்னுடன் சேர்ந்திருப்பதைக்காட்டிலும் அதிகமாக ஸந்தோஷப்படுவோம். நீ வேறு நாயகியுடன் சேர்ந்திருப்பதைப் பொறுக்கமுடியாத ஸ்திரீ ஸ்வபாவம் எங்களுக்கு வேண்டாம். ஸ்வாமியே! நீ பசுமேய்க்கப் போகவேண்டாம். காட்டில் கம்ஸனுல் ஏவப்பட்டு அஸுரர்கள் வேண்டிய ரூபங்களை எடுத்துக்கொண்டு திரிந்துகொண்டிருக்கிறார்கள். கம்ஸனுக்குப் பயப்பட்டு எதுவந்தாலும் வரட்டுமென்று துணிந்திருக்கிறார்கள். அவர்கள் கையில் நீ அகப்பட்டால், அவர்களோடு உனக்குச் சண்டையுண்டாகும். அவர்களோ வஜ்ரம்போலே கடினமான சரீரமுடையவர்கள். உன் உடம்போ வெண்ணெய்போல் மிருதுவானது. இப்படியானல் சண்டை என்னவாய் முடியும்? என்றாள். அவன் இதைக்கேட்டும் கௌரவம் பண்ணுதிருப்பதைப்பார்த்து அவனை வேண்டுகிறாள்—"நான் சொன்ன வார்த்தையைக் கேள்; நான் மிருதுவாயிருப்பதை நீ பார்க்காமல் போனபோதிலும், நீ மிருதுவாயிருப்பதைப் பார்க்கவேண்டாமோ?" என்கிறாள்.

(இ - ம்) உறுதும்- தன்மைப்பன்மை எதிர்காலவினைமுற்று. தும் காலம் காட்டும் விகுதி. உள்ளம், இடர் இரண்டும் எழுவாய். சாத்தன் பொன் பெரியன் என்பதுபோல ப்ரயோகம். போகேல்- எதிர்மறை ஏவல் ஒருமை வினைமுற்று. போ + கு + ஆ + ஏல்.

அவத்தங்கள் விளையுமென் சொற்கோ ளந்தோ
அசுரர்கள் வன்கையர் கஞ்ச னேவத்
தவத்தவர் மறுக நின்றுழி தருவர்
தனிமையும் பெரிதுனக் கிராம னையும்
உவத்தலை யுடன்திரி கிலையு மென்றென்
றூடுற வென்னுடை யாவி வேமால்
திவத்திலும் பசுநிரை மேய்ப்பு வத்தி
செங்கனி வாயெங்க ளாயர் தேவே. (க0)

(ப-ரை) அவத்தங்கள் விளையும் - (நீ காட்டுக்குப்போனால்), கெடுதல்கள் உண்டாகும். என் சொல் கொள் - என் வார்த்தையை எடுத்துக்கொள். அந்தோ - ஐயோ! கஞ்சன் - கம்ஸன், ஏவ, வன்கையர் - வலமுள்ள கைகளையுடையவர்களான, அசுரர், தவத்தவர் - தபஸ் செய்கிற ரிஷிகள், மறுக - பரிதபிக்கும்படி, நின்று - (காட்டிலேயேயிருந்து) உழி தருவர் - திரிந்து கொண்டிருப்பார்கள், உனக்கு, தனிமையும் - தனியாகப் போவதும், பெரிது, ராமனையும் - பலராமனையும், (அவனுடன் போவதையும்), உவத்தலை-ஸந்தோஷப்படுகிறவன் அல்லை, உடனும்-அவனுடனும், திரிகிலை - திரிகிறவனாக இருக்கவில்லை, என்று என்று - என்று பலதடவை நினைத்து, என்னுடைய ஆவி - என் ஆத்மா, ஊடு உற - உள்ளேயும் சேரும்படி, வேம் - வெந்து போகிறது. செம் கனிவாய் - சிவந்த கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தை யுடையவனே! எங்கள் ஆயர் தேவே - எங்கள் கோபர்களுக்கு ஸ்வாமியே! திவத்திலும் - வைகுந்தத்தைக்காட்டிலும், பசு நிரை மேய்ப்பு - பசுக்கூட்டத்தை மேய்ப்பதை, உவத்தி - ஸந்தோஷப்படுகிறாய்.

(கருத்து) "நீ காட்டுக்குப்போனால் அநர்த்தங்கள் உண்டாகும். என் வார்த்தையைக்கேளு. நீ ஒன்றும் செய்யவேண்டாம். இதைக் கேட்டால்போதும். கம்ஸனால் ஏவப்பட்டு, பலமுள்ள கைகளுள்ள அஸுரர்கள், தபஸ்செய்கிற ருஷிகள் உனக்கு என்ன வருகிறதோ என்று பரிதாபத்தை அடையும்படி திரிந்து கொண்டிருக்கிறார்கள். உனக்கோ தனியாய்ப் போவது பெரிதாயிருக்கிறது. உன் தமையனான ஸ்ரீபலராமனிடத்திலும் உனக்குக் கௌரவமில்லை. அவன் கிட்ட இருக்கும்போது உன் இஷ்டப்படி கெட்ட வியாபாரங்களைச் செய்ய முடியாதென்று

நினைக்கிறாய். அதனால் ஸ்ரீ பலராமனுடன் கூடப் போகிறதில்லை. உங்களிருவரையும் கண்டால் அஸுரர்கள் பயப்பட்டுக் கிட்டவர மாட்டார்கள். இப்படி எப்போதும் நினைத்து என் ஆத்மா வெந்து கொண்டிருக்கிறது. இது மேல்பாகத்தில் மாத்திரமன்று. அது உள்ளேயும் வெந்துகொண்டிருக்கிறது" என்று இப்படி அவள் சொல்லும்போது, எம்பெருமான் "மாடுமேய்க்கப்போகிற எண்ணமும் எனக்கில்லையே. ஒருகாரணமில்லாமல் இப்படியேன் பாடு படுகிறாய்." என்று குறிப்புத் தோன்ற மந்தஹாஸம்பண்ண, அவனைப்பார்த்து அவன் அழகிலீடுபட்டுப் பேசுகிறாள். சிவந்த கோவைப்பழம் போன்ற திருப்பவள முடையவனே! எங்கள் கோபர்களுக்கு ஸ்வாமியே! வைகுந்தத்தில் எவ்வளவு உனக்குப் பிரீதியிருக்கிறதோ, அதைக்காட்டிலும் மாடு மேய்ப்பதில் அதிகப் பிரீதியிருக்கிறதே. இப்படியிருக்கிற நீ அதிலிருக்கிற ஆசையினால் என்னை உபேக்ஷிக்கிறாய் என்று சொல்லவேணுமோ?

(இ - ம்) உவத்தலை - முன்னிலை ஒருமை எதிர்மறை ஏவல் வினைமுற்று. உவ + அத்து + அல் + ஐ. அத்து - சாரியை. அகரம் கெட்டது. அல்-எதிர்மறை இடைநிலை. ஐ-விகுதி. திரிகிலை- முன்னிலை ஒருமை எதிர்மறை வினைமுற்று. திரி + கு + இல் + ஐ; கு சாரியை, இல் எதிர்மறை இடைநிலை, ஐ விகுதி. திவத்தில்— திவம் + அத்து + இல். மகர ஒற்றும் சாரியைமுதல் அகரமும் கெட்டன. இல் ஐந்தாம் வேற்றுமை உருபு. உம் உயர்வு சிறப்பு. உவத்தி - முன்னிலை ஒருமை வினைமுற்று. உவ + த் + த் + இ. முதல் த் ஸந்தி, இரண்டாவது த் எழுத்துப்பேறு, இகரம் விகுதி, இங்கே நிகழ்காலம் காட்டியது. (10)

---

செங்கனி வாயெங்க ளாயர் தேவத்
திருவடி திருவடி மேல்பொரு நல்
சங்கணி துறைவன் வண்டென் குருகூர்
வண்சட கோபன்சொல் லாயி ரத்துள்
மங்கைய ராய்ச்சிய ராய்ந்த மாலை
யவனொடும் பிரிவதற் கிரங்கித் தையல்
அங்கவன் பசுநிரை மேய்ப்பொ ழிப்பா
னுரைத்தன விவையும்பத் தவற்றின் சார்வே. (கக)

(ப - ரை) செம்கனிவாய், எங்கள், ஆயர்தேவ - கோபாலர்களுக்கு ஸ்வாமியான, திரு அடி - லக்ஷ்மியோடுகூடிய ஸ்வாமியினுடைய, திருவடிமேல் - திருவடிகளைக்குறித்து, பொருநல் - தாம்ரபர்ணியினுடைய, சங்கு அணி-சங்கங்களாலே அலங்காரம் செய்யப்பட்ட, துறைவன் - துறையிலிருக்கிறவரான, வண்-எல்லா ஸம்பத்துக்கள் நிறைந்த, தென் குருகூர் வண் சடகோபன், சொல், ஆயிரத்துள், மங்கையர் ஆய்ச்சியர் - யௌவனமுள்ள இடப்பெண்கள், ஆய்ந்தமாலை - மனதாலே யோசித்து, (தொடுக்கப்பட்ட மாலைபோல் சொன்ன அர்த்தங்கள் அடங்கியவைகளான) அவனொடும் - அந்த கிருஷ்ணனைவிட்டு, பிரிவதற்கு, இரங்கி - நெஞ்சு உருகி, தையல் - அவர்களுக்குள் தலைவியான ஒரு ஸ்திரீயானவள், அங்கு - அவர்களுக்கு நடுவிலே, அவன் பசுநிரை மேய்ப்பு - அவன் பசுக்கூட்டங்களை மேய்ப்பதை, ஒழிப்பான் - விலக்குவதற்காக, உரைத்தன - சொன்னவைகளான, இவைபத்தும் - இந்தப் பத்துப்பாட்டுக்களும், அவைத்தின்சார்வு - அவைகளினால் அந்தக் கோபிகைகள் அடைந்த லாபத்தை உடையவைகள்.

(கருத்து) தன்னுடைய சிவந்த கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தின் அழகைக்காட்டி, அடிமைகொள்ளப்பட்ட கோபிகளுடையவும் கோபாலர்களுடையவும்ஸ்வாமியாய் பிராட்டியுடன் கூடியிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளைக்குறித்து, பொருநல் சங்கு அணிவண் தென்குருகூர் வண்சடகோபன் சொன்ன ஆயிரத்துள், சிறுவயதுள்ள இடப்பெண்கள் மனதாலே விசாரித்துச் சொன்ன அர்த்தங்களைக் காட்டுகிறவைகளும், கண்ணனை விட்டுப் பிரிவதற்கு நெஞ்சு உருகி அவர்களுக்குள் தலைவியான ஒரு பெண் சொன்னதுபோல், அவரால் அருளிச்செய்யப்பட்டவைகளுமான இந்தப் பத்துப் பாட்டுக்கள், கோபிகைகள் அந்த அர்த்தங்களைச் சொல்லி அவனை மாடு மேய்க்கப்போவதைத் தடுத்து அவனுடன் சேர்ந்ததுபோல், இவைகளைப் படிக்கிறவர்களுக்கு அவனுடன் சேருவதை உண்டாக்கும்.

குறிப்பு :—பாட்டில் 'பொருநல் சங்கு அணி' என்பதற்குக் கருத்து—உலகத்தார் அன்னவஸ்திரத்தை தேடிக்கொண்டு எம்பெருமானை நினைக்காமல் பாழும் கிணறுபோலிருக்கிற வீடுகளில் இருக்கிறார்கள். அவர்களை மனதாலும் நினைக்கவொட்டாதபடி

செய்யும் மிகவும் ஏகாந்தமான, சங்கங்களால் அழகான தாம்பிர பர்ணியின் துறையை ராத்திரியும் பகலும் தமக்கு இருப்பிடமாகக் கொண்டவர் என்பது. ஸ்ரீபாகவதத்தில், இந்தக் கலியுகத்தில் நாராயணனையே உயர்ந்த தைவமாக எண்ணுகிறவர்கள் உண்டாவர்கள் என்றும், அவர்கள் பெரும்பாலும் தமிழ் தேசத்திலிருப்பர்கள் என்றும், அவர்கள் அவதாரம் செய்யும் இடங்கள் தாம்ரபர்ணி முதலானவைகள் என்றும் சொல்லியிருக்கிறது. முதல் முதலாகச் சொல்லும்படியான பெருமையையுடைய தாம்ரபர்ணிக்கரையில் அவர் அவதாரம் செய்தாரென்றும் பொருள் கொள்ளலாம்.

(இ - ம்) ஒழிப்பான் - ஒழிக்க : வினையெச்சம். (11)

---

பத்³மாக்ஷத்வாத் யது³குலஜநுஷா ஸாந்த்³ர: ஶ்யா
மத்வாத் கோ³விந்த³த்வாத் ப்ரியவசநதஶ்சக்ரவத்த்வாத³ஜா
யஸ்த்வாத் । ஶ்ரீநீலாஶ்மத்³யுதிமத்தயா மோஹநி
த்வாத் கோ³பாநாம் ஸ்வாமித்வாத் ஸ்வகார்யகரத்வாத் உதி³த: ஶ்ரீபதி:
கார்யஜந ॥ ।௧௦௬।

---

இந்தத் திருவாய்மொழியில் * அதிக ப்ரீதியினால் கலங்கிக் காரணமில்லாமல் எம்பெருமானுக்கு என்ன தீங்கு வருகிறதோ என்று ஆச்ரிதர்கள் ஸந்தேஹப்படும்படி செய்கிற ரஸமுள்ளவன் என்பது அவனுடைய பத்துக் குணங்களாலே காட்டப்படுகிறது. அவைகளாவன :—(1) தாமரைக்கண்ணன் என்கிற பிரஸித்தி; (2) யதுகுலத்தில் அவதாரம் செய்தது; (3) மைபோல் நீலமான திருமேனியையுடையவனாயிருப்பது; (4) கோவிந்தன் என்கிற திருநாமம் பெற்றிருப்பது; (5) பிரியமான வார்த்தைகளைச் சொல்லுவது; (6) திருவாழியை ஆயுதமாக உடையவனாயிருப்பது; (7) நீலரத்னத்தின் காந்தியையுடையவனாயிருப்பது; (8) மிகவும் மனோஹரனாயிருப்பது; (9, 10) கோபர்களுக்கு ஸ்வாமியாயிருந்து அவர்களுடைய வேலைகளைச் செய்துமுடிக்கிறவனாயிருந்தது. (106)

---

* இது ஸ்ரீதேசிகன் திருவுள்ளம். பிள்ளான் திருவுள்ளம்வேறு என்று அவதாரிகையால் ஏற்படுகிறது.

# நான்காம் திருவாய்மொழி.

அவ—கீழ்த்திருவாய்மொழியில் வருத்தப்பட்ட ஆழ்வாரை, எம்பெருமான் "இனி ஒருகாலத்திலும் உம்மை விட்டுப்பிரியேன்" என்று ஸமாதானம் செய்ய, அதினாலே எல்லாத் துக்கமும் போய், அவர் மனது ஸ்வஸ்தமாய்விட்டது. அதினால், முன்பு 'வீடு மின்' (1-2) இலே பக்தியோகம்பண்ணும்படி உலகத்தாருக்கு உபதேசம்பண்ணி, எம்பெருமான் பக்தியோகம் பண்ணத் தகுந்தபடி ஸுலபன் என்று "பத்துடையடியவர்" (1-3)இல் சொன்னார். அது இப்போது அவர் நினைவுக்கு வந்தபடியால், அதை இந்தத் திருவாய்மொழியில் முடிக்கிறார்.

(2) "அஞ்சிறைய மடநாராய்" (1–4) முதல் "வேய்மரு தோளிணை" (10–3) வரையில் சொன்னவைகளுக்கு இதனுடன் நேரே ஸம்பந்தமில்லை. எம்பெருமானுடைய பாஹ்யஸம்ச்லேஷத்தை ஆசைப்பட்டு அது உடனே கிடைக்காமையால் துக்கப்பட்டதையும், எம்பெருமான் வந்து மனதில் தோன்றி அவரை ஸமாதானம்பண்ண, அவர் பட்ட ஸந்தோஷத்தையும் முதல்பத்தில் சொல்லி, மேலே இப்படியே பாஹ்யஸம்ச்லேஷம் கிடைக்காமை முதலான காரணங்களாலே அவர் பட்ட துக்கத்தையும், எம்பெருமானை ஸேவித்துப் பட்ட ஸந்தோஷத்தையும்சொல்லிக் கொண்டுவந்தார். இந்த ஸுக துக்க பரம்பரையின் வர்ணனம் முடிந்தது. ஆகையால், ஆரம்பித்த உபதேசத்தை

(3) "பத்துடையடியவர்" (1-3)இல் எம்பெருமான் பக்தி யோகம் பண்ணத்தகுந்தபடி ஸுலபன் என்றுசொன்னார்; இதில் பக்தி யோகத்தால் அவனை லகுவாக அடையலாம் என்கிறார்:—

(கலிவிருத்தம்.)

சார்வே தவநெறிக்குத் தாமோ தரன்தாள்கள்
கார்மேக வண்ணன் கமல நயனத்தன்
நீர்வானம் மண்ணெரிகா லாய்நின்ற நேமியான்
பேர்வா னவர்கள் பிறற்கும் பெருமையனே. (க)

(ப - ரை) கார் மேக வண்ணன் - மழைகாலத்து மேகத்தின் நிறமுள்ளவனும், கமலநயனத்தன் - தாமரைக்கண்ணனும், நீர் - ஜலம், வானம் - ஆகாசம், மண் - பூமி, எரி - அக்கினி, கால் - வாயு, ஆய்நின்ற - இவைகளாயிருக்கிறவனும், நேமியான்- திருவாழியையுடையவனும், பேர் வானவர்கள் - (பிரம்மா முத

லான தேவர்களைக்காட்டிலும்) அதிகப்பெருமையுள்ள நித்திய ஸூரிகள், பிதற்றும் பெருமையன் - முன்பின்னுமாய்ச்சொல்லி ஸ்தோத்ரம்பண்ணுகிற பெருமையுடையவனுமான, தாமோதரன் தாள்கள் - தாமோதரனுடைய திருவடிகள், தவ நெறிக்கு - பக்தியாகிய உபாயத்துக்கு, சார்வு - பிராப்யம்.

(கருத்து) மழைகாலத்து மேகத்தின் நிறத்தையுடையவனும், வாத்ஸல்யம் தயை ஆச்ரிதர்களின் க்ஷேமத்தையே எண்ணுவது முதலான குணங்களைக் காட்டும், தாமரைப்பூப்போல் அழகான திருக்கண்களையுடையவனும், பஞ்சபூதங்களுக்கு உள்ளே ஆத்மாவாய் இருக்கிறவனும் உலகத்தின் ரக்ஷணத்துக்கு உபயோகமுள்ள திருவாழியை உடையவனும், பிரம்மா முதலான தேவர்களைக்காட்டிலும் எல்லா விதத்தாலும் மிகவுமுயர்ந்த நித்தியஸூரிகள் அவனை அநுபவிக்கிற ஸந்தோஷத்தினால் முன்பின்னுமாய் ஸ்தோத்ரம்பண்ணுகிற பெருமையையுடையவனும், இப்படி அழகாலும் ஐசுவரியத்தாலும், நித்திய விபூதிக்கு ஸ்வாமியாயிருப்பதாலும் பரிபூர்ணனாயிருந்தும் ஆச்ரிதர்களுக்கு ஸுலபமாயிருப்பதற்காகத் திருவாய்ப்பாடியில் கோபர்களில் ஒருவனாய் பிறந்து வயிற்றில் கயிற்றால் கட்டுப்பட்டவனுமான எம்பெருமான் திருவடிகளைப் பக்தியோகத்தாலே அடையவே அடையலாம். இதில் ஸந்தேஹமில்லை.

குறிப்பு :—'கார் மேக வண்ணன்' என்பது "பத்துடையடியவர்" (1 3)இல் சொன்ன "புயற்கருநிறத்தனன்" என்பதையும், "நீர்வானம்" முதலான வாக்கியம், "யாவையும் யாவரும் தானும் அமைவுடை நாரணன்" என்பதையும், "தாமோதரன்" என்பது "எத்திறமுறலினோடு" என்பதையும் நினைவுக்குக் கொண்டுவருகின்றன. ஆகையால், இந்த இரண்டு திருவாய்மொழிகளும் சேர்ந்தவைகள்.

(இ - ம்) சார்வே - ஏகாரத்துக்குத் தேற்றப்பொருள். (1)

---

அவ—பக்தியோகமாகிய வருத்தமான உபாயமில்லாமலேயே தாம் எம்பெருமானை அடைந்ததைக் கொண்டாடுவதனாலே, பக்தியோகம் பண்ணுகிறவர்கள் அவனை அடைவதில் கொஞ்சமும் ஸந்தேஹமில்லையென்று காட்டுகிறார் :—

பெருமையனே வானத் திமையோர்க்கும் காண்டற்
கருமையனே யாகத் தணையாதார்க் கென்றும்
திருமெய் யுறைகின்ற செங்கண்மால் நாளும்
இருமை வினைகடிந்திங் கென்னையாள் கின்றானே. (உ)

(ப - ரை) வானத்து - மேல் உலகத்தில், (இருக்கும்) இமையோர்க்கும் - தேவர்களுக்கும், பெருமையன் - பெரியவனும், ஆகத்து - ஹிருதயத்தில், அணையாதார்க்கு - தன்னைச் சேர்த்துக்கொள்ளாதவர்களுக்கு, காண்டற்கு-பார்ப்பதற்கு, அருமையன்-அருமையானவனும், திரு-பிராட்டி, என்றும்-எப்போதும், மெய் உறைகின்ற - திருமேனியில் நிலையாய் வஸிக்கிறவனும், செம்கண் - சிவந்த கண்களையுடையவனுமான, மால் - ஸர்வேசுவரன், இருமை வினை - இரண்டுவிதமான கர்மங்களை, கடிந்து - நாசம் செய்து, இங்கு - இந்த உலகத்திலேயே, நாளும் - எப்போதும், என்னை, ஆள்கின்றான் - அடிமைகொள்ளுகிறான்.

(கருத்து) மனிதர்களைக்காட்டிலும் உயர்ந்தவர் என்று தோன்றும்படி மேல் உலகங்களில் வஸிக்கிற பிரம்மா முதலான தேவர்களை நியமனம்செய்வது முதலானவைகளாலே அவர்களுக்கும் பெரியவனும், தன்னைப் பிரீதியுடன் மனதிலே நினைக்காதவர்களுக்குப் பார்க்கமுடியாதவனும், பிராட்டி தன் திருமேனியில் எப்போதும் நிலையாயிருக்கும்படியான அழகையுடையவனும், அவளுடன் சேர்ந்த ஸந்தோஷத்தாலே மதுபானம் பண்ணினவர்கள்போல் சிவந்த திருக்கண்களையுடையவனும், அவளுக்கு நாயகனாயிருப்பதினாலே உண்டாகும் உயர்ந்த பெருமையையுடையவனுமான ஸர்வேசுவரன் புண்ணியம் என்றும் பாபம் என்றும் இருவகையான கர்மங்களைப்போக்கி, பரமபதம்போய்க் கிடைக்கவேண்டிய கைங்கரியங்களை இந்த உலகத்திலேயே செய்விக்கிறான். பக்தியோகம் பண்ணாத எனக்கு இவ்விதமான உபகாரத்தைச் செய்தால், பக்தியோகத்தைச்செய்கிறவர்கள் அவனை வருத்தமில்லாமல் அடையலாம் என்பதில் ஸந்தேஹமுண்டோ ?

குறிப்பு :—'இங்கு' என்பதற்கு, வைகுந்தத்துக்குப்போனால் எப்படி இடைவிடாமல் அவனுக்குக் கைங்கரியம் செய்ய முடியுமோ, அப்படியே இங்கேயே என்னை அடிமைசெய்வித்துக் கொள்ளுகிறான் என்பது கருத்து. (2)

அவ—கீழ்ச் சொன்னதையே விரிவாய்ச் சொல்லுகிறார் :—

ஆள்கின்ற ஜாழியா னாரால் குறைவுடையம்
மீள்கின்ற தில்லைப் பிறவித் துயர்கடிந்தோம்
வாள்கெண்டை யொண்கண் மடப்பின்னை தன்கேள்வன்
தாள்கண்டு கொண்டேன் தலைமேற் புனைந்தேனே. (ரு)

(ப - ரை) ஆழியான் - திருவாழியையுடையவன், ஆள்கின்றான் - (என்னை) அடிமைகொள்ளுகிறான்; ஆரால், குறைவுஉடையம்-குறைவு உள்ளவனுயிருக்கிறோம், மீள்கின்றது இல்லை-(இனி ஸம்ஸாரத்துக்குத்) திரும்பிவருகிறதில்லை. பிறவி துயர்-பிறப்பு முதலானவைகளால் உண்டாகும் துக்கத்தை, கடிந்தோம் - போக்கினோம், வாள் - கத்தியைப்போலவும், கெண்டை - மீனைப்போலவும், ஒள் - விளங்குகிற, கண் - கண்களையுடைய, மடப்பின்னை தன் கேள்வன் - மடப்பதையுடைய நப்பின்னைக்கு நாயகனுடைய, தாள் - திருவடிகளை, கண்டுகொண்டு, என் தலைமேல், புனைந்தேன் - சேர்த்துக்கொண்டேன் (தரிக்கப்பெற்றேன்).

(கருத்து) எம்பெருமான் கையும் திருவாழியுமாய் விரோதியைப்போக்கி என்னைத் தனக்கு எல்லாவிதமான கைங்கரியங்களைப் பண்ணும்படி செய்கிறான். இப்படி ஸர்வேசுவரன் என்னை ரக்ஷிக்கும்போது யாரால் என்ன குறை எனக்கு ? இனிமேல் ஸம்ஸாரத்துக்குத் திரும்பி வருகிறதில்லை. 'இதை எப்படி அறிந்துகொண்டீர் ?' என்று கேட்கிறீர்களோ ? சொல்லுகிறேன். பிறப்பு கிழத்தனம் மரணம் முதலானவைகளால் உண்டாகும் துக்கத்தையெல்லாம் போக்கினேன். கத்தியைப் போல் கூர்மையுள்ளவைகளும், நீண்டவைகளும், மீனைப்போல் அழகான அமைப்பாலும் மனதை இழுக்கும்படியான சேஷ்டிதங்களாலும் அழகாயிருக்கிறவைகளுமான கண்களையுடைய நப்பின்னையின் நாயகனின் திருவடிகளை என் தலைமேலே புஷ்பத்தை வைத்துக்கொள்வதுபோல மிகவும் இனியவைகளாய் வைத்துக்கொண்டேன். வெகுநாளாய் ஆசைப்பட்ட புருஷார்த்தத்தை அடைந்தேன். இப்படி அவைகளைப் பிரத்யக்ஷமாய்ப் பார்த்துத் தலையிலே தரிக்கப்பெற்ற நான் ஸம்ஸாரத்துக்குத் திரும்பி வருகிறதில்லையென்பதைச் சொல்லவேண்டுமோ ?

குறிப்பு :—நப்பின்னை ஸந்தோஷப்பட்டுக் கடாக்ஷிப்பதான அமுதவர்ஷத்தைப் பெறுவதற்காக அன்றோ எம்பெருமான்

என்னை ரக்ஷித்தான். என்னை ஸம்ஸாரத்துக்குத் திருப்பி அனுப்பினால், இதை அவன் இழந்துபோகானோ? ஆகையால், என்னை ஸம்ஸாரத்திற்குத் திருப்பி அனுப்ப அவனாலும் முடியுமோ?

---

தலைமேல் புனைந்தேன் சரணங்க ளாலின்
இலைமேல் துயின்றா னிமையோர் வணங்க
மலைமேல்தான் நின்றேன் மனத்து ளிருந்தானை
நிலைபேர்க்க லாகாமை நிச்சித் திருந்தேனே. (௪)

(ப - ரை) சரணங்கள் - அவன் திருவடிகளை, தலைமேல், புனைந்தேன் - சேர்த்து (தரித்து) க்கொண்டேன், ஆலின் இலைமேல், துயின்றான் - கண்வளர்ந்தருளுகிறவனும், இமையோர் - நித்தியஸூரிகள், வணங்க, மலைமேல்- திருமலையில், தான் நின்று, என் மனத்துள் இருந்தானை - என் மனதிலிருக்கிறவனும் ஆனவனை, நிலை பேர்க்கல் ஆகாமை - அதிலிருந்து பிரிக்கமுடியாமலிருப்பதை, நிச்சித்து - நிச்சயம்பண்ணி, இருந்தேன்.

(கருத்து) அவனுடைய திருவடிகளை என் தலைமேல் மிகவும் இனியவைகளாய்த் தரிக்கப்பெற்றேன். இந்த லாபத்தை நான் அடைவதற்கு அவன் என்ன பிரயத்தனம் பண்ணினான் என்று கேட்கிறீர்களோ? பிரளயகாலத்தில் அறிவில்லாதவைகளைப்போலிருந்த நமக்கு உடம்புகளையும் இந்திரியங்களையும் கொடுப்பதற்காகப் பிரளயஜலத்தில் ஒரு ஆலிலையின்மேல் படுத்துக்கொண்டிருந்து வெகுகாலம் தபஸு செய்தான். ஜீவன்களை ரக்ஷிப்பதற்காக அவன் செய்கிற வியாபாரங்களைக்கண்டு நித்தியஸூரிகள் பக்தியினால் பரவசமாய்த் தன்னை வணங்கும்படி திருமலையில் தானாகவே வந்து நின்றுகொண்டு மறுபடியும் தபஸைச் செய்கிறான். இந்தத் தபஸின் பலனைக் கோயிலில் மூலபிம்பம் போல் என் மனதில் அவன் அசையாமலிருக்கிறான். ஆகையால் அவனை ஒருவராலும் என் மனதிலிருந்து பிரிக்கமுடியாது. இதை நன்றாக அறிந்து நான் கிருதகிருத்யனாக ஆகிவிட்டேன்.

---

நிச்சித் திருந்தேனென் நெஞ்சங் கழியாமை
கைச்சக் கரத்தண்ணல் கள்வம் பெரிதுடையன்
மெச்சப் படான்பிறர்க்கு மெய்போலும் பொய்வல்லன்
நச்சப் படும்நமக்கு நாகத் தணையானே. (௫)

(ப - ரை) என் நெஞ்சம் கழியாமை-இவன் என் மனதை விட்டுப்போகாமையை, நிச்சித்திருந்தேன்-நிச்சயித்திருந்தேன், கை சக்கரத்து அண்ணல் - திருக்கையில் சக்கரத்தையுடைய ஸ்வாமியும், பெரிது கள்வம் உடையன் - பெரியவைகளான கள்ள வியாபாரங்களையுடையவனுமான அவன், பிறர்க்கு - மற்றவர்களுக்கு (பிரதிகூலர்களுக்கு), மெச்சப்படான் - கொண்டாடப்படான், மெய்போலும் பொய் வல்லன் - (அவர்களுக்கு) உண்மையான உபகாரங்களைச் செய்வதுபோல் காட்டிப் பொய்யான வியாபாரங்களைச் செய்யச் சக்தியுள்ளவன், நாகத்தணையான் - ஆதிசேஷனாகிய படுக்கையையுடையவன், நமக்கு - (ஆச்ரிதர்களான) நமக்கு, நச்சப்படும் - ஆசைப்படும்படியிருக்கிறான்.

(கருத்து) எம்பெருமான், தபஸ் பண்ணுகிறவன்போல் வெகுகாலம் ஜலத்தில் படுத்திருந்து, மலைமேல்நின்று வெகுகாலம் வருத்தப்பட்டு, என் நெஞ்சிலேயிருக்கப்பெற்று, இந்த லாபத்தை அடைந்தபிறகு ஒருகாலும் இதைவிட்டுப் போகான் என்று நிச்சயித்திருக்கிறேன். கையில் திருவாழியையுடைய ஸ்வாமி அதை விட்டுப் பிரிந்தாலன்றோ என்னைவிட்டுப் பிரிவது. இவ்வளவு தானோ அவன் என் விஷயத்தில் செய்ய நினைத்திருக்கிறான். எனக்குத்தெரியாமல் எவ்வளவோ உபகாரங்களைச்செய்துகொண்டிருக்கிறான். 'இப்படி அவன் எளியவனோ?' என்கிறீர்களோ? அவன் ஆச்ரிதர்களுக்கு எளியவன்தான். பிரதிகூலர்களுக்குத்தான் துர்லபன். அவர்கள் தன் குணங்களையறிந்து கொண்டாடும்படியிருக்கிறதில்லை. அவர்களுக்கு உபகாரம் செய்வதுபோல் காட்டி அபகாரங்களையே செய்யச் சக்தியுள்ளவன். அநுகூலர் விஷயத்திலே அவர்கள் மனதை ஆதிசேஷனைப்போல் எண்ணி அவைகளிலிருந்துகொண்டு அவர்களால் கொண்டாடப்படுகிறான். ஆகையால், அவர்களுக்கு ஸுலபனாயிருப்பதே அவன் ஸ்வபாவம்.

---

நாகத் தணையானை நாடோறும் ஞானத்தால்
ஆகத் தணைப்பார்க் கருள்செய்யு மம்மானை
மாகத் திளமதியம் சேருஞ் சடையானைப்
பாகத்து வைத்தான்றன் பாதம் பணிந்தேனே.

(ப - ரை) மாகத்து - பெரிய ஆகாசத்திலிருக்கிற, இள மதியம் - பாலசந்திரன், சேரும், சடையானை - ஜடையையுடைய சிவனை, பாகத்து - (தன் திருமேனியின் ஒரு) பாகத்திலே, வைத்தான் தன் - வைத்திருக்கிறவனும், நாகத்து அணையான் - ஆதிசேஷனாகிய படுக்கையையுடையவனும், ஞானத்தால் - (பக்தி ரூபமான) நினைவினால், ஆகத்து - (தங்கள்) மனதுக்குள்ளே, அணைப்பார்க்கு - கட்டிக்கொள்ளுகிறவர்களுக்கு (இடைவிடாமல் நினைப்பவர்களுக்கு), நாள்தோறும் - ஒவ்வொருநாளும், அருள் செய்யும் - உபகாரங்களைச் செய்கிறவனுமான, அம்மான் - ஸ்வாமியினுடைய, பாதம் - திருவடிகளை, பணிந்தேன்.

(கருத்து) இந்த உலகங்களுக்குமேலே ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிற இளஞ் சந்திரனை ஜடையில் வைத்துக்கொண்டிருக்கும் ருத்திரனை எம்பெருமான் தன் திருமேனியில் ஒரு பாகத்தில் வைத்துக் கொண்டிருக்கிறான். ஆச்ரிதர்கள் தாழ்ச்சியைப் பாராமல் அவர்களுடன் சேருவது அவனுக்கு ஸ்வபாவமாயிருக்கிறது. எப்போதும் பக்திரூபமான தியானத்தாலே எவர்கள் அவனைப் பிரீதியினால் கட்டிக்கொள்வதைப்போல், இடைவிடாமல் மனதால் தியானம் செய்கிறார்களோ, ஆதிசேஷனிடத்தில் பண்ணும் பிரீதியை அவர்களிடத்தில் பண்ணுகிறான். இதுவும் அவன் ஸ்வபாவம். இப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருவடிகளை நான் ஸேவிக்கப்பெற்றேன்.

குறிப்பு :—(1) சந்திரன் ஆகாசத்திலிருந்து பூமியிலிருக்கும் மனிதர்களுக்கும் ஸ்வர்க்கத்திலிருக்கும் தேவர்களுக்கும் ஓரேவிதமாய் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறான். அவனைத் தனக்கே போகத்தைக்கொடுப்பவனாக வைத்துக்கொண்டிருப்பதாலே ருத்ரன் பிராகிருத விஷயங்களால் உண்டாகும் போகத்தில் மிகுந்த ஆசையையுடையவன் என்றும், தபஸ்செய்கிறவர்களின் வேஷமானஜடை அவன் தலையிலிருப்பதாலே கர்மங்களையே நினைத்துக்கொண்டிருக்கிறவன் என்றும் காட்டப்படுகிறது.

(2) 3-வது பாட்டில் "எம்பெருமான் திருவடிகளை அடைந்தேன்" என்றது, மறுபடியும் ஸம்ஸாரம் உண்டாகிறதில்லை என்பதற்காக. இதில் சொன்னது அதுவே பிரயோஜனம் என்பதற்காக.

(இ - ம்) மதியம் - அம் - சாரியை. (6)

---

பணிநெஞ்சே நாளும் பரமபரம் பரனைப்
பிணியொன்றும் சாரா பிறவிகெடுத் தாளும்
மணிநின்ற சோதி மதுசூதனென் னம்மான்
அணிநின்ற செம்பொ னடலாழி யானே. (எ)

(ப - ரை) நெஞ்சே - என்மனமே, பரமபரம்பரனை - (மனிதர்களைக்காட்டிலும்) உயர்ந்தவர்களான இந்திரன் முதலான தேவர்களுக்கும் உயர்ந்தவனான பிரம்மாவுக்கும் உயர்ந்தவனாயிருக்கிற எம்பெருமானை, நாளும் - ஒவ்வொருநாளும், பணி - நமஸ்காரம்பண்ணு. பிணி - வியாதி (ஸம்ஸாரத்திலுண்டாகும் துக்கங்கள்), ஒன்றும் - கொஞ்சமும், சாரா, மணிநின்ற - நீல ரத்நத்தில் நிலையாயிருக்கிற, சோதி - ஜ்யோதிஸைப் போன்ற ஜ்யோதிஸையுடையவனும், மதுசூதன் மதுஸூதனன் என்று பெயரையுடையவனும், அணிநின்ற - அலங்காரமாக இருக்கிற, செம்பொன் - சிவந்த பொன்போலிருக்கிற, அடலாழியான் - பராக்கிரமமுள்ள திருவாழியையுடையவனுமான, என் அம்மான் - என் ஸ்வாமி, பிறவி - பிறப்பை (ஸம்ஸாரத்தை), கடிந்து - நாசம் செய்து, ஆளும் - நம்மை அடிமைகொண்டருளும்.

(கருத்து) என்மனமே! மனிதர்களுக்கும், அவர்களுக்கு மேற்ப . இந்திரன் முதலான தேவர்களுக்கும், அவர்களுக்கும் மேற்பட்ட பிரம்மாவுக்கும் மேற்பட்டவனான எம்பெருமானை ஒவ்வொருநாளும் இடைவிடாமல் ஸேவித்து அநுபவி. ஸம்ஸாரத்திலுண்டாகும் துக்கங்கள் ஒன்றும் வாரா. நீல ரத்னம் போன்ற காந்தியுள்ளவனும், அதுபோல் ஸுலபனும், மதுவைக் கொன்றதுபோல் ஆச்ரிதர்கள் விரோதிகளை நாசம்செய்யும் ஸ்வபாவமுள்ளவனும், அதற்கு உபகரணமாகவும் அலங்காரமாகவும் திருவாழியை உடையவனுமான என் ஸ்வாமி நம்முடைய எல்லாத் துக்கத்துக்குங் காரணமான ஸம்ஸாரத்தை நாசம்செய்து எப்போதும் தனக்குக் கைங்கரியம்செய்யும்படி கிருபைசெய்வன்.

---

அவ—கீழ்ப்பாட்டில் சொன்னதை உறுதிப்படுத்துகிறார் :-

ஆழியா ழுழி யமரர்க்கு மப்பாலான்
ஊழியா னூழி படைத்தான் நிரைமேய்த்தான்
பாழியந் தோளால் வரையெடுத்தான் பாதங்கள்
வாழியென் னெஞ்சே மறவாது வாழ்கண்டாய். (அ)

(ப - ரை) ஆழியான் - திருவாழி முதலான நித்திய ஸூரிகளுக்கு ஸ்வாமியும், ஆழி - மிகவும் ஆழமான, அமரர்க்கும் - நித்திய ஸூரிகளுக்கும், அப்பாலான் - வெகுதூரத்திலிருப்பவனும், ஊழியான் - கல்பத்தின் முடிவிலுமிருக்கிறவனும், ஊழி - கல்பம் முதலான எல்லா வஸ்துக்களையும், படைத்தான் - உண்டுபண்ணினவனும், நிரைமேய்த்தான் - (கண்ணனாய் அவதாரம்செய்து) பசுக்கூட்டத்தை மேய்த்தவனும், பாழி - விசாலமான, அம் திருத்தோளால், அழகான திருத்தோள்களாலே, வரை எடுத்தான் - மலையை எடுத்துத்தூக்கிப் பிடித்தவனுமான எம்பெருமானுடைய, பாதங்கள் - திருவடிகளை, என் நெஞ்சே - என் மனமே! வாழி-நீ நன்றாயிரு, மறவாது வாழ்கண்டாய்-மறக்காமல் அநுபவித்து வாழு; இதை அவசியம் செய்யவேண்டும்.

(கருத்து) திருவாழி முதலான கம்பீர ஸ்வபாவமுள்ள நித்திய ஸூரிகளுக்கு ஸ்வாமியும், அவர்களைக்காட்டிலும் ஸ்வரூபத்தாலும் குணங்களாலும் விபூதிகளாலும் விலக்ஷணனும், கல்பங்கள் முடிந்தபோதிலும் நிலையாயிருக்கிறவனும், காலம் முதலான எல்லா வஸ்துக்களையுமுண்டுபண்ணினவனும், இப்படி மிகவும் உயர்ந்தவனாயிருந்தபோதிலும் ஆச்ரிதர்கள் வருந்தமில்லாமல் தன்னிடம் வருவதற்காகக் கோபர்களுக்குள் ஒருவனாய் அவதாரம்செய்து அவர்களைப்போல மாடுகளை மேய்த்து, அவர்களுக்கு ஆபத்துவந்தகாலத்தில் எல்லாரும் ஒதுங்கியிருக்கும்படி விசாலமாயும் அழகாயும் இருக்கும் தன் திருத்தோள்களாலே கோவர்த்தனம் என்கிற மலையை எடுத்துத் தூக்கிப்பிடித்து, அவர்களை ரக்ஷித்தவனுமான எம்பெருமானுடைய திருவடிகளை எனக்கு அநுகூலமாயிருக்கிற மனமே! ஒருபோதும் மறவாமலிருந்து அநுபவித்து வாழு. நீ நன்றாயிரு.

குறிப்பு :—மேலே சொல்லும் வார்த்தையை மனது நன்றாய்க் கேட்க " வாழி " என்று நடுவில் ஆசீர்வாதம் பண்ணுகிறார். (8)

அவ—இப்படி இரண்டு பாட்டுக்களாலே நடுவே தம் மனதுடன் பேசி, "பத்துடையடியவர்" இல் "மாளுமோரிடத்திலும் வணக்கொடுமாள் வதுவலம்" என்று பொதுவாய்ச்சொன்ன பிரபத்தியைத் தாம்அநுஷ்டித்துப்பெற்ற லாபத்தைப் பேசுகிறார்:-

கண்டேன் கமல மலர்ப்பாதங் காண்டலுமே
விண்டே யொழிந்த வினையா யினவெல்லாம்
தொண்டே செய்தென்றுந் தொழுது வழியொழுக
பண்டே பரமன் பணித்த பணி வகையே. (க)

(ப - ரை) பண்டே - முன்காலத்தில்தானே, பரமன் - எல்லாருக்கும் உயர்ந்த புருஷனான கண்ணன், பணித்த - அருளிச்செய்த, பணிவகையே - சொல்படியே, தொண்டே செய்து- இடைவிடாமல் பிரீதியைச்செய்து, என்றும் - எப்போதும், தொழுது-எல்லாவிதமான கைங்கரியங்களையும்பண்ணி, வழியொழுக - (அவ்விதமான கைங்கர்யம் செய்யும்) பெரிய வழியில் நடக்கும்படி, கமல மலர் பாதம் - தாமரைப்புஷ்பம் போன்ற திருவடிகளை, கண்டேன், காண்டலுமே - கண்டக்ஷணத்திலேயே, வினையாயின எல்லாம் - புண்ணியபாபரூபமான கர்மங்களெல்லாம், விண்டே ஒழிந்த - விண்டுபோய்விட்டன.

(கருத்து) பரமபுருஷன் முன்காலத்தில் கண்ணனாய் அவதாரம் செய்து அர்ஜுனனுக்கு உபதேசித்த கீதையில் கடைசி சுலோகத்தில் சொன்னபடியே அவனுடைய அநுக்ரஹத்தாலே நான் அவன் திருவடிகளில் பிரபத்தியைச்செய்து, அவன் திருவடிகளில் இடைவிடாமல் பிரீதிபண்ணி, எல்லாவிதமான கைங்கர்யங்களையும்பண்ணி, அதைச் செய்துகொண்டிருப்பதாகிய உயர்ந்த வழியில் மேன்மேலும் நடக்கும்படி தாமரைப்பூப்போன்ற அந்தத் திருவடிகளை வெகுசீக்கிரம் காணப்போகிறேன். உடனே புண்ணிய பாபங்களாகிய எல்லாக் கர்மங்களும் போய்விடும்.

குறிப்பு :—எம்பெருமானுடைய ஸாக்ஷாத்காரம் மிகவும் கிட்டியிருக்கிறபடியால் 'கண்டேன்' என்று போனகாலச்சொல்.

(இ - ம்) ஒழிந்த - பலவின்பால் வினைமுற்று. விண்டே - ஏகாரத்திற்குத் தேற்றப்பொருள். (9)

அவ—2-வது பாட்டுமுதல் ஆழ்வார் தாம் பெற்ற லாபத்தைச்சொல்லி, பக்தியோகத்தினாலே லகுவாக எம்பெருமானை அடையலாம் என்கிறார் :—

வகையால் மனமொன்றி மாதவனை நாளும்
புகையால் விளக்கால் புதுமலரால் நீரால்
திசைதோ றமரர்கள் சென்றிறைஞ்ச நின்ற
தகையான் சரணந் தமர்கட்கோர் பற்றே. (௧0)

(ப - ரை) வகையால் - (சாஸ்திரத்தில் சொன்ன) முறைப்படி, மனம், ஒன்றி - (அவனிடத்திலேயே) சேர்ந்திருந்து, மாதவனை, நாளும் - ஒவ்வொருநாளும், அமரர்கள் - (பிரம்மா முதலான) தேவர்கள், திசைதோறு - திக்குகள்தோறும், (திக்குகளிலுள்ள புண்ணியக்ஷேத்திரங்களுக்கு), சென்று - போய், புகையால் - தூபத்தாலும், விளக்கால் - தீபத்தாலும், புதுமலரால் - புதிய புஷ்பங்களாலும், நீரால் - தீர்த்தத்தாலும், இறைஞ்சநின்றதகையான் - ஆச்ரயிக்கும்படியிருக்கிற ஸ்வாபவத்தையுடைய எம்பெருமானுடைய, சரணம் - திருவடிகள், தமர்கட்கு - தம்மைச்சேர்ந்தவர்களுக்கு, ஓர் பற்று - ஒப்பில்லாத பிடிப்பு.

(கருத்து) பிரம்மா முதலான தேவர்கள், தங்கள் மனதை எம்பெருமானிடத்திலேயே நிறுத்தி ஒவ்வொரு திக்குக்களிலுமுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு உத்ஸவத்துக்குப் போவது போலப் போய், சாஸ்திரத்தில் சொன்னமுறைப்படி தூபத்தையும் தீபத்தையும் புதிய புஷ்பங்களையும் தீர்த்தத்தையும் கொண்டு தங்கள் பிரயோஜனத்துக்காக ஒவ்வொருநாளும் ஸேவிக்கிறார்கள். தன்னுடைய ஸௌசீல்யம் * ஸௌஹார்த்தம் மிகவுமுயர்ந்த ஔதார்யம் முதலான நல்லகுணங்களாலே அவர்கள் இப்படிச் செய்வதைப் பெற்றுக்கொண்டிருக்கிறான். வேறு பிரயோஜனத்தை ஆசைப்படாமல், அவன் கைங்கர்யத்தையே ஆசைப்பட்டு அதற்குஉபாயமாக அவன் திருவடிகளைப்பற்றினவர்களுக்கு அவன் ஸுலபன் என்ன வேண்டுமோ? பக்தியோகத்தால் அவனைப் பிரயாஸமில்லாமல்அடையலாம். இதில் ஸந்தேஹமில்லை.

குறிப்பு :— "மனமொன்றி" என்பதால் பக்தியோகம் சொல்லப்படுகிறது. அதாவது மனதை அவனிடத்திலேயே

* ஒருவனுடைய க்ஷேமத்தையே நினைத்துக்கொண்டிருக்கும் ஸ்வபாவம்.

வைத்து, வேறொன்றின் நினைவு வாராமல், அவனையே தியானம் செய்வது. (10)

---

பற்றென்று பற்றிப் பரமபரம் பரனை
மற்றிண்டோள் மாலை வழுதி வளநாடன்
சொற்றொடை யந்தாதி யோராயிரத்து ளிப்பத்தும்
கற்றார்க்கோர் பற்றாகுங் கண்ணன் கழலிணையே. (கக)

(ப -ரை) பரமபரம்பரனை - இந்திரன் முதலான தேவர்களுக்கு மேற்பட்டவனான பிரம்மாவுக்கும் மேற்பட்டவர்களான நித்திய ஸூரிகளுக்கும் ஈசுவரனும், மல் - மல்லர்களுடன் செய்த சண்டையில், திண்-திடமான, தோள்-தோள்களையுடையவனும், மாலை - (ஆச்ரிதர்களிடத்தில்) ஆசையுள்ளவனுமான கண்ணனை, பற்றுஎன்று பற்றி - பிராப்யம் என்று பிடித்துக்கொண்டு, வழுதி வளநாடன்-ஸம்பத்தையுடைய வழுதி என்கிற தேசத்தில் அவதரித்தவரான ஆழ்வார், சொல்-அருளிச்செய்த, தொடை-தொடுக்கப்பட்ட பாட்டுக்களான, அந்தாதி-அந்தாதியான, ஓர் ஆயிரத்துள், இ பத்தும்-இந்தப் பத்துப்பாட்டுக்களையும், கற்றார்க்கு-படித்தவர்களுக்கு, கண்ணன்கழல் இணை-கண்ணனுடைய இரண்டு திருவடிகளும், ஓர் பற்று ஆகும்-ஒப்பில்லாதபிராப்யமாகும்.

(கருத்து) பரமபரம்பரனும், மல்லர்களுடன் சண்டை செய்து அவர்களை நாசம் செய்யத் தகுந்த திடமான தோள்களையுடையவனும், ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ஆசையுள்ளவனுமான எம்பெருமானைப் பிராப்யமாகப்பற்றின வழுதிவளநாடனாகிய ஆழ்வார் அருளிச்செய்த தொடையந்தாதி ஓர் ஆயிரத்துள் இந்தப் பத்துப்பாட்டுக்களையும் படிக்கிறவர்களுக்குக் கண்ணனுடைய இரண்டு திருவடிகளும் மிகவுமுயர்ந்த ப்ராப்யங்களாகும்.

---

[illegible]

---

(கOஎ)

இந்தத் திருவாய்மொழியில் பக்தியில்லாதவர்களால் அடைய முடியாத எம்பெருமான் பக்தியோகத்தாலே வருத்தமில்லாமல் அடையத் தகுந்தவன் என்பதும், இதில் ஸந்தேஹமில்லை யென்பதும், அவனுடைய எட்டுக் குணங்களால் சொல்லப்படுகின்றன. அவைகளாவன :—(1) இடைச்சியால் வயிற்றில் கயிற்றால் கட்டுப்பட்டிருந்தது ; (2) தேவக்கூட்டத்தாலே கொஞ்சமும் அடைய முடியாதவனாயிருப்பது ; (3) சக்ரங்களுக்குள் பிரதானமான திருவாழியை ஆயுதமாக வைத்திருப்பது ; (4) பிரளயஜலத்தில் ஆலிலேமேல் படுத்திருந்தது ; (5) திருவனந்தாழ்வான்மேல் படுத்திருப்பது ; (6) தங்கள் ஹ்ருதயத்தில் அவனை நினைக்கிறவர்களுக்கு முகம் காட்டுவது ; (7) எல்லாருக்கும் மேற்பட்ட புருஷனாயிருப்பது ; (8, 9, 10) மாதவன் என்கிற திருநாமமுள்ளவனாயிருப்பது முதலானவைகள். (107)

---

# ஐந்தாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில் பக்தியோகத்தாலே எம் பெருமானை லகுவாய் அடையலாம் என்று சொல்லி, இந்தத் திரு வாய்மொழியில் அதைச் செய்யும் விதங்களைக் காட்டுகிறார் :—

(வஞ்சிவிருத்தம்.)

கண்ணன் கழலிணை | எண்ணுந் திருநாமம்
நண்ணும் மனமுடையீர் | திண்ணம் நாரணமே. (க)

(ப - ரை) கண்ணன், கழல் இணை-இரண்டு திருவடிகளையும், நண்ணும்-சேரவேண்டுமென்று, மனமுடையீர் - மனதையுடைய வர்களே! திருநாமம் - (அவனுக்கு முக்கியமான) திருநாமமான, நாரணம் - நாராயணன் என்கிற சொல்லை, எண்ணும் - தியானம் செய்யுங்கள், திண்ணம் - திடம்.

(கருத்து) கண்ணனுடைய இரண்டு திருவடிகளைப் பிராப்ய மாக அடையவேண்டுமென்று எண்ணுகிறவர்களே! அவனுக்கு முக்கியமான நாராயணன்என்கிற திருநாமத்தைத் தியானஞ்செய் யுங்கள், அந்தத்திருவடிகளை அடைவது நிச்சயமாக உண்டாகும்.

குறிப்பு :—'நாரணம்' என்கிற சொல்லுக்கு அந்தச் சொல் லையுடைய மந்திரம் என்றும் பொருளாகும். அந்த மந்திரம் எட்டெழுத்துள்ளது. அதைத் தியானம் செய்தாலும், அதில் முதலிலிருக்கிற பிரணவத்தையும் நமஸ் என்கிற சொல்லையும், கடைசியிலிருக்கிற நான்காம் வேற்றுமை உருபையும் விட்டு அந்தத் திருநாமத்தைமாத்திரம் சொன்னாலும் கிடைக்கும் பல னில் வித்தியாஸமில்லை.

(இ - ம்) எண்ணும்-முன்னிலைப் பன்மை ஏவல் வினைமுற்று.

---

அவ—"திருமந்திரத்தினால் அடையவேண்டியது எம்பெரு மானுடைய பர ரூபம்; கண்ணன் திருவடிகள் எப்படி பிராப்ய மாகக்கூடும்? என்கிற ஸந்தேஹத்தைத் தீர்க்கிறார்:—

நாரண னெம்மான் | வாரணந் தொலைத்து
பாரணங் காளன் | காரணன் றானே.

(ப - ரை) நாரணன் - திருமந்திரத்தாலே சொல்லப்பட்ட வன், எம்மான் - என் ஸ்வாமியும், பார் அணங்கு ஆளன் - பூமி யாகிய தெய்வப் பெண்ணுக்கு நாயகனும், வாரணம் - யானையை,

தொலைத்த - கொன்றவனும், காரணன்தானே - காரணமுமான கண்ணனாய் அவதாரம் செய்தவனே.

(கருத்து) என்னை முதலாக உடைய எல்லாருக்கும் ஈச்வரனும், எல்லா உலகங்களுக்கும் ரக்ஷகனும், எல்லா உலகங்களையு முண்டுபண்ணினவனும், கண்ணனாய் அவதாரம் செய்து குவலயாபீடம் என்கிற யானையைக் கொன்றவனும் ஆனவன்தான் திருமந்திரத்தாலே சொல்லப்பட்ட நாராயணன்.

குறிப்பு :—(1) 'பாரணங்காளன்' என்பதில் பூமி பிராட்டியைச் சொன்னதால் நித்திய விபூதியும், 'எம்மான்' என்பதால் லீலா விபூதியும் சொல்லப்படுகின்றன.

(2) திருமந்திரம் எம்பெருமானுடைய பரரூபத்தைத் தெரிவிப்பது. அது அவனுடைய எல்லா ரூபங்களுக்கும் காரணமாகையால் கண்ணன் என்கிற அவதார ரூபத்தையும் அந்தச் சொல் காட்டும். (2)

---

அவ — நாராயணன் என்கிற சொல் உலகங்களை உண்டுபண்ணி அவைகளை நியமனம் செய்கிறவனையன்றோ சொல்லுகிறது. உலகில் அடங்கின கண்ணன் எப்படி அந்தச் சொல்லுக்குப் பொருளாகும் என்கிற ஸந்தேஹத்தைத் தீர்க்கிறார் :—

தானே யுலகெல்லாம்
தானே படைத்திடந்து
தானே யுண்டுமிழ்ந்து
தானே யாள்வானே. (௩)

(ப - ரை) உலகு எல்லாம் - இந்த உலகங்களெல்லாம், தானே-(கீழ் சொன்ன) கண்ணனே, தானே, படைத்து-(அவைகளை) உண்டுபண்ணி, இடந்து - (பிரளய ஜலத்தில் முழுகியிருந்த பூமியை) மேலே கொண்டுவந்து, தானே, உண்டு, உமிழ்ந்து, ஆள்வான் - ( இன்னும் வேறு வழியாகவும் ) ரக்ஷிக்கிறவன். தானே - அந்த கிருஷ்ணனே.

(கருத்து) எல்லா உலகங்களையும் நியமனம் பண்ணுகிறவனும், அவைகளை சிருஷ்டிகாலத்தில் உண்டுபண்ணினவனும், பிரளயஜலத்தில் முழுகியிருந்த பூமியை மேலே கொண்டுவந்தவனும், பிரளயகாலத்தில் அதைத் தன் வயிற்றில்வைத்து ரக்ஷிக்கிறவனும், சிருஷ்டிகாலத்தில் அதை வெளிப்படுத்துகிறவனும், இவ்விதமாயும் வேறுவிதமாயும் ரக்ஷிக்கிறவனுமான அவனே வாரணம் தொலைத்த கண்ணன்.

குறிப்பு :—(1) எம்பெருமானையும் உலகத்தையும் ஒன்ருய்ச் சொன்னது, அவன் ஆத்மாவாயும் அது அவனுக்கு உடம்பாயும் இருக்கிற உறவை நினைத்து. ஆகையால், இந்த அர்த்தத்தை "எல்லா உலகங்களையும் நியமனம் பண்ணுகிறவனும்" என்று கருத்தில் எழுதியிருக்கிறது.

(2) உலகத்தை உண்டுபண்ணுவதின் பிரயோஜநம்—பிரளய காலத்தில் அறிவில்லாதவைகளைப்போலிருக்கும் ஆத்மாக்களைப் பார்த்து இரக்கப்பட்டு அவர்களுக்குப் போகத்துக்காகவும் மோக்ஷாநுபவத்துக்காகவும், உபாயங்களைச் செய்ய உடம்புகளையும் இந்திரியங்களையும் கொடுத்தது. இதுவும் ரக்ஷிக்கும் விதங்களில் ஒன்று.

(3) அவதாரம் செய்யும்போது தன்னுடைய ஆகாரங்களையொன்றையும் விடாமல் எம்பெருமான் எழுந்தருளுகிறபடியால், திருமந்திரத்தால் சொல்லப்பட்ட எல்லா ஆகாரங்களும் கண்ணனிடமிருந்தன. அவனே அம்மந்திரத்துக்குப் பொருள்.

---

அவ்—பக்தி யோகம் செய்கிறவிதங்களில் சேர்ந்த எம்பெருமானுடைய நாமஸங்கீர்த்தனத்தையும் திருமந்திர ஜபத்தையும் முதல் பாட்டில் சொல்லி, நடுவில் உண்டான ஸந்தேஹங்களை இரண்டு பாட்டுக்களாலே தீர்த்து, பக்தி யோகத்தைச் செய்வதில் வேறு விதத்தைச் சொல்லுகிருர் :—

ஆள்வா னழிநீர் | தாள்வாய் மலரிட்டு
கோள்வா யரவணையான் | நாள்வாய் நாடீரே. (ச)

(ப - ரை) ஆள்வான் - ஆளுவதற்காக (ரக்ஷிப்பதற்காக), ஆழி நீர் - ஸமுத்ர ஜலத்தில், கோள்வாய் - காந்தியுள்ள வாய்களை உடைய, அரவு - ஆதிசேஷனை, அணையான் - படுக்கையாகக் கொண்டவனுடைய, தாள்வாய் - திருவடிகளில், நாள்வாய் - நாள்களிலே (ஒவ்வொருநாளும்), மலர் இட்டு - புஷ்பங்களை ஸமர்ப்பித்து, நாடீர் - அவன் திருவடிகளை அடையப்பாருங்கள்.

(கருத்து) எல்லா உலகங்களையும் ரக்ஷிப்பதற்காகத் திருப்பாற்கடலில், காந்தியுள்ள முகங்களையுடைய ஆதிசேஷன்மேல் பள்ளிகொண்டிருக்கிறவனுடைய திருவடித் தாமரைகளில் ஒவ்வொருநாளும் திருமந்திரத்தைக்கொண்டு புஷ்பங்களை ஸமர்ப்பித்து அவைகளை அடையப்பாருங்கள்.

குறிப்பு :—ஸ்ரீகீதையில் 9-வது அத்தியாயத்தில் கடைசியில் பக்தியைச் செய்யும் விதத்தைச் சொல்லுகையில், 'ஈஜ்யாஜீ' என்பதற்கு இந்தப் பாட்டு வியாக்கியானமாகிறது.

(இ - ம்) ஆள்வான் - ஆள - வினையெச்சம். வாய் - ஏழாம் வேற்றுமை உருபு. (4)

---

அவ — எம்பெருமானுடைய திருவடிகளில் புஷ்பங்களை ஸமர்பிப்பது அவனுக்கு மிகவும் பிரியமானது என்று காட்டுவதற்காக அதையே மறுபடியும் சொல்லுகிறார் :—

நாடீர் நாடோறும் | பாடீ ரவன்நாமம்
வாடா மலர்கொண்டு | வீடே பெறலாமே. (ரு)

(ப - ரை) நாள்தோறும் - ஒவ்வொருநாளும், வாடா மலர் கொண்டு - வாடாத புஷ்பங்களைக்கொண்டு, நாடீர் - அவனை ஆச்ரயியுங்கள், அவன் நாமம், பாடீர் - பாடுங்கள், வீடு - மோக்ஷத்தை, பெறலாம்.

(கருத்து) உலகத்தார் ப்ரீதியினால் ஒவ்வொருநாளும் பாலைச் சாப்பிடுவதுபோல், நீங்களும் மிகுந்த ப்ரீதியுடன் வாடாத புஷ்பங்களைக்கொண்டு அவன் திருவடிகளில் ஸமர்ப்பியுங்கள். முக்தர்கள் வைகுந்தத்தில் ஸாமகானம் பண்ணிக்கொண்டிருப்பதுபோல, நீங்களும் அவன் திருநாமங்களைப் பாடுங்கள். இப்படிச் செய்தால், ஸம்ஸாரம் முழுவதும் கழித்து அவன் திருவடிகளைப் பெறலாம். இதில் ஸந்தேஹமில்லை. (5)

---

அவ—எம்பெருமானைக் கண்களால் பார்த்தால் அன்றோ அவன் திருவடிகளில் அடிமைசெய்வது என்ன, சொல்லுகிறார் :—

மேயான் வேங்கடம் | பேயார் முலையுண்ட
காயா மலர்வண்ணன் | வாயான் மாதவனே. (சு)

(ப - ரை) காயா மலர் வண்ணன் - காயாம்பூப்போன்ற வர்ணமுடையவனும், மாதவன்-பிராட்டிக்கு நாயகனும், பேயார்-பூதனையென்கிற பேய்ச்சியினுடைய, முலையுண்டவாயான் - ஸ்தனத்தைச் சாப்பிட்ட வாயையுடையவனுமான கண்ணன், வேங்கடம் - திருமலையில், மேயான் - ப்ரீதியுடனிருக்கிறான்.

(கருத்து) காயாம்பூவின் வர்ணமுள்ள திருமேனியையுடையவனும் பிராட்டிக்கு நாயகனும் பூதனையென்கிற பேய்ச்சி

யினுடைய விஷம் நிறைந்த முலையுண்டவனுமான கண்ணனே வேங்கடம் என்கிற திருமலையில் எல்லாரும் தன் திருவடிகளில் ஆச்ரயிப்பதற்காகவே மனிதர்கள் கண்களால் பார்க்கும்படியும் எல்லாருக்கும் ஸுலபனாயும் எழுந்தருளியிருக்கிறான். ஆகையால் அவன் திருவடிகளில் அடிமைசெய்யலாம்.

குறிப்பு :—(1) 'மாதவன்' என்பதற்கு, நீலமான எம்பெருமான் திருமேனிக்குப் பொன் வர்ணமுள்ள பிராட்டி ஒருவிலக்ஷணமான சோபையை உண்டுபண்ணுகிறாளென்பது கருத்து.

(2) பூதனை த்ருஷ்டாந்தத்தால் ஆச்ரிதர்களுடைய பக்திக்கு இடையூறான பிரகிருதியானது வீரியத்தை இழக்கும்படி இனிய பேச்சுக்களைப் பேசச் சக்தியுள்ளவன் எம்பெருமான் என்பது காட்டப்படுகிறது.

(இ - ம்) மேயான்-மேவு + ய் + ஆன் ; மேவு என்கிற பகுதி-மே எனத் திரிந்தது. ய் - இறந்தகால இடைநிலை. ஆன் - ஆண்பால் விகுதி. 'மேயாள்' என்று சொல்லாமல், 'மேயார்' என்று பலர்பால் விகுதியைச் சேர்த்தது அவளிடம் இருக்கும் கோபத்தைக் காட்டுவதற்காக. (6)

---

அவ—பரிபூர்ணமாய்ப் பக்தியோகம் செய்யத் தகுதியில்லாதவர்களுக்கு, அதைப் பரிபூர்ணமாய்ச் செய்வதற்கு உபாயத்தை அருளிச்செய்கிறார் :—

மாதவ னென்றென்று | தீதொன்று மடையா
ஓத வல்லீரேல் | ஏதம் சாராவே. (எ)

(ப - ரை) மாதவன் என்று என்று ஓத - மாதவன் என்று இடைவிடாமல் இந்தத் திருநாமத்தையே சொல்லுவதற்கு, வல்லீரேல்-(நீங்கள்) சக்தியுள்ளவர்களானால், தீது-(பக்திக்கு இடையூறுகளான) பாபங்கள், ஒன்றும்-கொஞ்சமும், அடையா-(உங்களை) அடையா, ஏதம் - (மேல்வருங்காலத்தில் இடையூறாகும்) பாபங்களும், சாரா - (உங்களிடத்தில்) சேரமாட்டா.

(கருத்து) பூர்ணமாய்ப் பக்தியோகம் செய்ய உங்களுக்கு அதிகாரமில்லாவிட்டால், மாதவன் என்கிற திருநாமத்தையே இடைவிடாமல் சொல்லுங்கள். நீங்களே பிரீதியால் ஏவப்பட்டுச் சொல்லமுடியாவிட்டாலும் பரிபூர்ணமான பக்தியைச் செய்கிற

வர்கள் அந்தத் திருநாமத்தைச் சொல்லும்போது நீங்களும் அதைக் கேட்டுக்கொண்டு அவர்களுடன்கூட அதைச் சொல்லுங்கள். இப்படிச் செய்ய, உங்களுக்குப் பக்தி வளருவதற்கு இப்போது இடையூறுகளாயுள்ள பாபங்களும்போம், இனிமேல் இடையூறுகளாகும் பாபங்களும் உங்களிடம் வந்து சேரமாட்டா.

குறிப்பு:—'ஓதவல்லீரேல்' என்பதற்கு, சொன்னபடி அர்த்தம் கொள்ளவேண்டும். வேதத்தைப் படிக்கிறவர்கள், ஆசாரியன் முதலில் சொல்ல அதைக்கேட்டுப் பின்னால் சொல்லுகிறார்கள். அதுபோலப் பூர்ணாதிகாரிகள் திருநாமத்தைச்சொல்ல, அதைக் கேட்டுப் பின்னாலே சொல்லவேண்டும் என்பது கருத்து. (7)

---

அவ—'தாழ்ந்தவர்களான நாம் அவன் திருநாமத்தைச்சொல்லத் தகுந்தவர்களோ' என்கிற ஸந்தேஹத்தைத் தீர்க்கிறார்:—

சாரா ஏதங்கள் | பேரா ரோதுவார்
நீரார் முகில்வண்ணன் | ஆரா ரமரரே. (அ)

(ப-ரை) ஆர் - எவர், நீர் ஆர் முகில் வண்ணன் - ஜலம் நிறைந்த மேகத்தினுடைய ஸ்வபாவமுள்ள எம்பெருமானுடைய, பேர் - திருநாமத்தை, ஓதுவார் - சொல்லச் சக்தியுள்ளவர்கள், (அவர்கள்) ஆர் ஆர்-எவர் எவராகிலும், அமரரே-தேவர்கள்தான் (தேவர்களைப்போன்றவர்களே), ஏதங்கள் - தோஷங்கள் (ஒருவித துக்கங்களும்), சாரா - (அவர்களிடம் வந்து) சேரா.

(கருத்து) மழை மேகம் இது நிலம் இது ஜலம் என்று பார்க்காமல் எங்கும் எப்படிப்பெய்கிறதோ, அப்படியே இவர்கள் உயர்ந்தவர்கள் இவர்கள் தாழ்ந்தவர்கள் என்று பாராதவனும், எல்லாராலும் அனுபவிக்கத் தகுந்தவனுமான எம்பெருமானுடைய திருநாமத்தை எவர்கள் மற்றவர்கள் சொல்லுவதைக் கேட்டாகிலும் கூடச்சொல்லச் சக்தியுள்ளவர்களோ, அவர்கள் பிறப்பாலும் செய்கையாலும் எவ்வளவு தாழ்ந்தவர்களானாலும் தேவர்களைப்போலத் திருநாமத்தைச் சொல்லத் தகுந்தவர்கள். அவர்கள் உயர்ந்தவர்களே. ஒருவிதமான துக்கமும் அவர்களிடம்வராது.

இதற்கு வேறுவிதமாயும் அர்த்தம் சொல்லலாம். அப்போது பதவுரை—நீரார் முகில் வண்ணன் பேர் ஓதுவார் ஆர் (அவர்கள்) ஆர் ஆர், அமரர், நித்தியஸூரிகள், (நித்தியஸூரி

களைப்போல் கைங்கரியம் பண்ணப் பெறுவர்கள்) ஏதங்கள் - (கைங்கரியம் பண்ணுவதற்கு) இடையூனறுவைகள். சாரா - அவர்களிடம் கிட்டமாட்டா. (8)

---

அவ — பரிபூர்ணமாய்ப் பக்தியோகம் செய்யமுடியாதவர்களுக்கு எம்பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லுவதைக் காட்டிலும் வேறு உபாயத்தைச் சொல்லுகிறார் :—

அமரர்க் கரியானைத்
தமர்கட் கெளியானை
அமரத் தொழுவார்கட்கு
அமரா வினைகளே. (கூ)

(ப - ரை) அமரர்க்கு - (தன்னை ஆச்ரயிக்காத) தேவர்களுக்கு, அரியானை - அடையமுடியாதவனும், தமர்களுக்கு - தன்னை அடைந்தவர்களுக்கு, எளியானை - ஸுலபனுமானவனை, அமர - நிலையாக, தொழுவார்கட்கு - நமஸ்காரம் பண்ணுவோர்களுக்கு, வினைகள் - கர்மங்கள், அமரா - நிற்கமாட்டா.

(கருத்து) தன்னை ஆச்ரயிக்காத தேவர்கள் எவ்வளவு உயர்ந்தவர்களையாகிலும் அவர்களால் அடையமுடியாதவனும், தன்னை ஆச்ரயித்தவர்கள் எவ்வளவு தாழ்ந்தவர்களானாலும் அவர்களுக்கு ஸுலபனுமான எம்பெருமானை வேறு பிரயோஜனங்களை அவனிடம் பெற்று அவனை விட்டுவிடுகிறவர்களைப் போலல்லாமல், அவனையே பிராப்யமாக எண்ணி அவனுக்கு நமஸ்காரம் செய்தால் பரிபூர்ணமான பக்தியைச் செய்வதற்கு இடையூறுகளான பாபங்களெல்லாம் போய்விடும். அவனுக்குக் கைங்கரியம் பண்ணுவதற்கு இடையூறுகளான பாபங்களெல்லாம் போய்விடும் என்றும் பொருள்கொள்ளலாம்.

குறிப்பு :—வினைகள் - இடையூறான கர்மங்கள், உபாயமான பக்திக்கு இடையூறு என்றும், ப்ராப்யமான கைங்கர்யத்துக்கு இடையூறு என்றும் சொல்லலாம். (9)

---

அவ—பக்தியோகத்தின் உபதேசத்தை முடிக்கிறார் :—

வினைவல் லிருளென்னும்
முனைகள் வெருவிப்போம்
சுனைநன் மலரிட்டு
நினைமின் நெடியானே. (க0)

(ப - ரை) வினை - (புண்ணியங்களாயும் பாபங்களாயுமிருக்கும்) கர்மங்கள், வல் - திடமான, இருள் - இருட்டு, (அஜ்ஞானம்)

என்னும், முனைகள் - கூட்டங்கள், வெருவிப்போம் - பயப்பட்டுப் போய்விடும், சுனை நல் மலர் - குளங்களிலுண்டான நல்ல புஷ்பங்களை, இட்டு - ஸமர்ப்பித்து, நெடியான் - நீண்ட காலம் பந்துவாயிருக்கிற எம்பெருமானை, நினைமின் - (ப்ரீதியுடன்) தியானம் செய்யுங்கள்.

(கருத்து) புண்ணியங்களாயும் பாபங்களாயுமிருக்கிற கர்மங்களும், பலமான அஜ்ஞாநமும் ஆகிய இவைகளின் கூட்டங்கள் பயந்து வேகமாய் ஓடிப்போய்விடும். ஆகையால், நீண்டகாலம் பந்துவாயிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளில், குளங்களிலுண்டான தாமரை முதலான நல்ல வாஸனையுள்ள புஷ்பங்களை ஸமர்ப்பித்து, அவைகளை ப்ரீதியுடன் தியாநம் பண்ணுங்கள்.

குறிப்பு :—(1) இருள்-(அஜ்ஞாநம்) என்பது, அறியாமையும், ஒன்றை அதற்கில்லாத குணமுடையதாக எண்ணுவதும், ஒன்றை வேறு வஸ்துவாக எண்ணுவதும். "வினைவல்லிருள்" என்கிற சொற்கள், உபலக்ஷணமாகவிருந்து கர்மங்களாலுண்டான வாஸனைகளையும், அவைகளாலுண்டான கர்மங்களைச் செய்வதில் ருசியையும் காட்டுகின்றன.

(2) "நெடியானை" என்பதற்குக் கருத்து - எம்பெருமானைத்தவிர மற்றவர்கள் ஒரேபிறப்பில் பந்துக்கள். எம்பெருமானோ அப்படியன்று, நீங்கள் ஒருதடவை அவனை நினைத்தால், அதை ஒருபோதும் மறக்காமல் நினைத்துக்கொண்டே நீங்கள் வேண்டும் பந்துவாயிருந்து எல்லாப் பிறப்புக்களிலும் உபகாரங்களைச் செய்வன். இது அவன் ஸ்வபாவம் என்பது. (10)

---

நெடியா னருள்சூடும் | நொடியா யிரத்திப்பத்து
படியான் சடகோபன் | அடியார்க் கருள்பேறே. (கக)

(ப - ரை) நெடியான்-மிகவுமுயர்ந்த (லக்ஷ்மீபதியினுடைய) அருள் சூடும் படியான் - கிருபையைத் தலையாலே வஹிக்கும் ஸ்வபாவமுள்ள, சடகோபன் - ஆழ்வாருடைய, நொடி - சொற்களான, ஆயிரத்து, இ பத்து, அடியார்க்கு - (இவைகளை அடிக்கடி சொல்லுகிற) ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு, அருள் பேறு - கிருபையினுடைய லாபம் உண்டாகும்.

(கருத்து) மிகவுமுயர்ந்த லக்ஷ்மீபதியினுடைய கிருபை யைப் புஷ்பத்தைத் தலையில்வைத்து அநுபவிப்பதுபோல் அநு பவிக்கிற ஆழ்வாரால் சொல்லப்பட்ட சொற்களாகிய ஆயிரத் துள் இந்தப் பத்துப் பாட்டுக்களை அடிக்கடி படிக்கச் சக்தியுள்ள வர்களுக்கு, அந்த எம்பெருமானுடைய கிருபையின் லாபம் நிச்சயம் வரும்.

குறிப்பு :—பாட்டுக்களைப் படிப்பது காரணம், எம்பெரு மானுடைய கிருபாலாபம் காரியம்; பாட்டில் இவைகளை ஒன் ருகச் சொன்னதின் கருத்து—காரணத்திலிருந்து காரியம் கட்டாயம் கிடைக்கும் என்பது. (11)

---

நாம்நாம் ஸங்கீர்த்தநேந ஸ்வபரிவ்ருடதயாஹ்வாநநாதேதா
ஈநந்த்யேநம் ஸம்ஸ்ம்ருத்யா ப்ரஸூநார்ப்பணாநாந்த்யந நியமநேந:
ஸ்தோத்ர நத்யாதிக்ருத்யை: । யதேதச்ச வர்ணாச்ரமோசிதை
ப்ரஹ்மவித்யஜநவ்ருத்யோ ஸ்தேயமேதாம்: ஸ்ரீசடாரிர்ரயண
ச்ருதிகயபத்விஷ்ட்வாதீவத்தீ: ॥ ॥௧௦௮॥

---

இந்தத் திருவாய்மொழியில் தீர்க்க பந்துவான எம்பெரு மான் ஆச்ரயித்தவர்கள் தன்னிடத்தில் பக்தி செய்வதற்குப் பலவித பிரகாரங்களையுடையவன் என்பது சொல்லப்படுகிறது. அந்தப் பிரகாரங்களாவன :—(1) அவனுடைய திருநாமத்தைச் சொல்லுவது; (2) தியாகம் பண்ணுகிறவன் தனக்கு ஸ்வாமியாகத் தியாகம் பண்ணுவது ; (3) கரை (அளவு) இல்லாமல் ஒவ்வொரு க்ஷணமும் நினைப்பது ; (4) புஷ்பங்களைத் திருவடிகளில் ஸமர்ப் பிப்பது ; (5) திருநாமத்தை மற்றவர்கள் சொல்லும்போது கேட்டுக் கூடச்சொல்லுவது ; (6) பிறர்களுக்குத் திருநாமத் தைச் சொல்லிக்கொடுப்பது ; (7) ஸ்தோத்ரம் பண்ணுவது கூத் தாடுவது பிரதக்ஷிணம்பண்ணுவது முதலானவைகள் ; (8) ஜாதி க்கும் ஆச்ரமத்துக்கும் ஏற்பட்ட கர்மங்களைச்செய்வது. (108)

---

# ஆறும் திருவாய்மொழி

அவ— இப்படி ஆழ்வாருடைய ஹர்ஷசோகங்கள் எல்லாம் நீங்கி, அவர் மனது ஸ்வஸ்தமான பின்பு முதல் முதல் ஆரம்பித்த பக்தியோகத்தின் உபதேசத்தை முடித்துவிட்டார். இனி அவருக்குச் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை. ஆனால் இந்தத் திருவாய்மொழியில் எதைப் பற்றிச் சொல்லுகிறாரென்னில், எம்பெருமான் அவரை வைகுந்தத்துக்கு அழைத்துக் கொண்டுபோகப் பதறுவதையும், ஆனால், அவர் எப்போது அழைத்துக்கொண்டுபோகச் சொல்லுவரோ என்று அவர் சொல்வதை வேலைக்காரன் யஜமானனுடைய ஆஜ்ஞையை எதிர்பார்ப்பதுபோல் எதிர்பார்த்துக்கொண்டிருப்பதையும், தம்முடைய மனதிடம் சொல்லி அநுபவிக்கிறார்:—

(தரவு கொச்சகக்கலிப்பா)

அருள்பெறுவா ரடியார்தம் அடியனேற் காழியான்
அருள்தருவா னமைகின்றா னதுநமது விதிவகையே
இருள்தருமா ஞாலத்து ளினிப்பிறவி யான்வேண்டேன்
மருளொழிநீ மடநெஞ்சே வாட்டாற்றா னடிவணங்கே. (க)

(ப-ரை) அருள் பெறுவார் - எம்பெருமானுடைய கிருபையை அடைவதையே * ஸ்வரூப நிரூபகதர்மமாயுடையவர்களான, அடியார்தம் - தாஸர்களுக்கு, அடியனேற்கு - தாஸனாயிருக்கிற எனக்கு, ஆழியான் - திருவாழியைத் தனக்கு ஸ்வரூப நிரூபக தர்மமாக உடையவன், அருள் தருவான் - உயர்ந்த கிருபையைத் தருவதற்காக, அமைகின்றான் - பழுத்த மனமுடையவனாயிருக்கிறான். அது, நமது விதி வகையே-நம்முடைய கட்டளைப்படியே, இனி, இருள் தரும் - அஜ்ஞானத்தைக் கொடுக்கும், மா - மிகவும் விஸ்தாரமான, ஞாலத்துள் - உலகத்தில், பிறவி, யான், வேண்டேன், மட நெஞ்சே - எனக்கு உட்பட்டு நான் சொன்னபடி செய்கிற மனமே! நீ மருள் ஒழி - நீயும் அஜ்ஞானத்தை

---

* ஒரு வஸ்துவை அறியும்போது அதற்கு ஸ்வபாவமாய் அதற்கேயுள்ளதானகுணத்தைக்கொண்டே அறியவேண்டியது. இந்தக்குணத்தை ஸ்வரூப நிரூபக தர்மம் என்று சொல்லுகிறது.

ஒழித்துவிடு, வாட்டாற்றான் - திருவாட்டாற்றில் எழுந்தருளியி ருக்கிற எம்பெருமானுடைய, அடி - திருவடிகளை, வணங்கு - ஸேவி (ஸேவித்து அநுபவி).

(கருத்து) எம்பெருமானுடைய கிருபையைப் பெறுவதே தங்களுக்கு ஸ்வரூப நிரூபக தர்மமாயிருந்து அவனுக்குச் சேஷ மாயிருப்பதிலேயே ருசியுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தாஸனா யிருக்கிற எனக்குத் திருவாழியைத் தனக்கு ஸ்வரூபநிரூபக தர்ம மாகவுடைய எம்பெருமான், வைகுந்தத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் தன்திருவடிகளை அநுபவிப்பதாகிய உயர்ந்த ஸம்ருத்தியைக் கொடுப்பதற்கு ஸித்தமாயிருக்கிறான். யஜமா னன் வேலைக்காரனை ஏவுவதுபோல், இதைச்செய்ய நான் கட்ட ளையிடுவதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான். அஜ்ஞானத்தை மேன்மேலும் வளர்க்கும் இந்த விஸ்தாரமான உலகத்தில் பிறப் பதை இனி நான் வேண்டேன். எனக்கு உட்பட்டு நான்சொன்ன படி செய்கிற மனமே! நீயும் எம்பெருமானுடைய அர்ச்சாரூபத் தில் பற்றுகிய அஜ்ஞானத்தைவிட்டுவிடு. நம்மைவைகுந்தத்திற்கு அழைத்துக்கொண்டுபோவதற்காகத் திருவாட்டாற்றில் அவன் எழுந்தருளியிருக்கிறான். நீ நினைத்தபடி செய்வதைவிட்டு அவன் அபிப்ராயத்துக்கு ஒத்து, அவன் திருவடிகளை அநுபவிக்கப்பார்.

குறிப்பு — (1) "அருள்பெறுவார் அடியனேற்கு" என்பதற்கு அடியார்க்கு எம்பெருமான்செய்யும் கிருபையானது அவர்களுக்கு அடியரான ஆழ்வார் வரையில் வருகிறதென்பது கருத்து. "அடி யார்" என்கிற பன்மைச் சொல்லாலே, அவர்கள் எல்லாருக்கும் செய்யும் கிருபைகள்எல்லாவற்றையும் சேர்த்து, தமக்கு ஒரு வருக்கே செய்கிறானென்று ஆழ்வார் நினைக்கிறார்.

(2) "ஆழியான்" என்பதற்குத்தனக்கு ஸ்வரூபநிரூபகதர்ம மானதிருவாழியைவிட்டாலன்றோ, ஆச்ரிதர்களைத் தான்விடுவது என்று காட்டுவதற்காகத்தான் திருவாழியும் கையுமாயிருக் கிறான் என்பது கருத்து.

(3) 'சொல்வகையே' என்று சொல்லாமல் 'விதி வகையே' ன்று சொன்னதின் கருத்து— யஜமானன் வேலைக்காரனுக்கிடும் ட்டளையைப்போல், ஆழ்வார் ஆஜ்ஞாபித்தபடியே எம்பெரு

மான் செய்ய நினைக்கிறான் என்பது. விதி என்பது - இதைச் செய் என்று கட்டளையிடுவது.

(4) பாம்பைக்கண்டு ஒருவன் ஒதுங்கியிருப்பதுபோல், கெடுதியைச் செய்கிற இந்த உலகத்துக்குப் பயந்து இடம் தேடியும் அது அகப்படாதபடி விஸ்தாரமாய் எங்குமிருக்கிறது என்பது "மா" என்பதின் கருத்து. அது மேல்மேல் அஜ்ஞானத்தைக் கொடுப்பதால் அதில் பிறவியை வேண்டேன் என்கிறார்.

(5) முன்னாலே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குக் கைங்கரியம் செய்வதற்காக இங்கே இருப்பதை ஆழ்வார் வேண்டினது உண்டு. ஆனால், கைங்கரியம் செய்வதற்கே விரோதியான அஜ்ஞானத்தை அது கொடுப்பதால், அந்த ஆசையையும் விட்டுவிட்டேன் என்று அவர் சொல்லுகிறார்.

இ—ம். தருவான் - தர; வினையெச்சம். (1)

---

அவ— கீழ்ப்பாட்டில் எம்பெருமான் செய்யப்போகிற உபகாரத்தைச் சொன்னார்; ஏற்கனவே செய்திருக்கிற உபகாரங்களைச் சொல்லுகிறார்—

வாட்டாற்ரு னடிவணங்கி மாஞாலப் பிறப்பறுப்பான்
கேட்டாயே மடநேஞ்சே கேசவனெம் பெருமானைப்
பாட்டாய பலபாடிப் பழவினைகள் பற்றறுத்து
நாட்டாரோ டியல்வொழிந்து நாரணனை நண்ணினமே. (உ)

(ப-ரை) வாட்டாற்றான் அடி வணங்கி - திருவாட்டாற்று எம்பெருமானுடைய திருவடிகளை ஸேவித்துக்கொண்டு (அநுபவித்துக்கொண்டு), மா ஞாலம் பிறப்பு - இந்த பெரிய உலகத்தில் பிறப்பை, அறுப்பான் - அறுப்பதற்காக, கேசவன் - கேசியைக் கொன்றவனை, எம்பெருமானை - நம்முடைய ஸ்வாமியை, பாட்டாய் பல பாடி - பாட்டுக்களாகிய பலவற்றைப் பாடி, பழ வினைகள் - அநாதியான கர்மங்களிலிருக்கும், பற்று அறுத்து - ஸம்பந்தத்தை அறுத்து, நாட்டாரோடு - ஊராரோடு, இயல்வு - செய்யும் வியாபாரங்களை, ஒழிந்து - விட்டு விட்டு, நாரணனை நாராயணனை, நண்ணினம் - கிட்டப்பெற்றோம். மடநெஞ்சே கேட்டாயே, (அவன் செய்த உபகாரங்களை) கேட்டாயோ?

(கருத்து) திருவாட்டாற்றில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய திருவடிகளை அநுபவித்து, இந்த ஸம்ஸார மண்டலத்திலிருப்பு வராதிருக்கும்படிசெய்யக் கேசியைக் கொன்றவனான நம்முடைய ஸ்வாமியை பலவிதமான பாட்டுக்களைப் பாடி, நம்மிடத்தில் முகம் காட்டும்படி செய்தேன். அவன் நம்முடைய அநாதியாய்ச் செய்யப்பட்டு வந்த கர்மங்களை வாஸனையுடன் போக்கி, அன்ன வஸ்திரங்களையே தேடிக்கொண்டிருக்கிற ஊராரைப்போலே நாமும் அவைகளுக்கு வேண்டிய வியாபாரங்களைச் செய்யாமலிருக்கும்படியும், முக்தர்களைப்போல நாராயணனாகிய தன்னை அநுபவித்துக்கொண்டிருக்கும்படியும் செய்திருக்கிறான். இந்த உபகாரங்களை எனக்குப் பவ்யமான மனமே பார்த்தாயோ?

குறிப்பு—(I) "பாட்டாயபல" என்பதற்கு, பா, இனம் முதலான பேதங்களாலும், ச்ருங்காரம் முதலான ரஸங்களின் பேதங்களாலும் பாட்டுக்கள் பலவிதங்களாயிருக்கின்றன என்பது கருத்து.

இ—ம், அறுப்பான்-அறுக்க; வினைஎச்சம், ஆய - ஆகிய; பெயரெச்சம். (2)

---

அவ— முதற்பாட்டில் எம்பெருமான் தமக்கு வைகுந்தத்தைக் கொடுக்கப்போகிறான் என்று சொன்னார்; அதைச் செய்வதற்கு அவன் அவஸரப்படுகிறதைப் பார்த்து ஸந்தோஷப்பட்டுச் சொல்லுகிறார்:—

நண்ணினம்நா ராயணனை நாமங்கள் பலசொல்லி
மண்ணுலகில் வளம்மிக்க வாட்டாற்றான் வந்தின்று
விண்ணுலகந் தருவானாய் விரைகின்றான் விதிவகையே
எண்ணினவா றாகாவிக் கருமங்க ளென்னெஞ்சே. (௩)

(ப-ரை) பல நாமங்கள் சொல்லி, நாராயணனை, நண்ணினம்-கிட்டினோம், மண் உலகில் - பூலோகத்தில், வளம் மிக்க - ஸம்பத்துமிகுந்திருக்கிற, வாட்டாற்றான்,வந்து, இன்று-இன்றைக்கு, விண் உலகம் - வைகுந்தத்தை, விதிவகையே - நாம் சொல்லுகிற படியே, தருவானாய், விரைகின்றான் - அவஸரப்படுகிறான், என்

நெஞ்சே! இ கருமங்கள் - இந்தக் காரியங்கள், எண்ணின ஆறு - நாம் எண்ணின விதமாக, ஆகா - ஆகிறவைகள் அல்ல.

(கருத்து) உயர்வு அலைபனுயிருப்பது அழகு கேட்டதைக் கொடுக்கும் தன்மை முதலான எம்பெருமானுடைய குணங்களைக் காட்டுகிற பல திருநாமங்களைச் சொல்லி நாராயணனைக் கிட்டி அநுபவிக்கப்பெற்றோம். இந்தப் பூலோகத்தில் ரக்ஷிக்கவேண்டிய ஜனங்கள் கிடைப்பதாகிய ஸம்பத்து நிறைந்திருக்கிற திருவாட்டாற்றில் எழுந்தருளியிருக்கிற அவன் நாம் கடந்துபோகவேண்டிய தேசமெல்லாம் தானே கடந்து வந்து வருத்தத்துடன் செய்யவேண்டிய உபாயத்தைச் செய்யாமலிருக்கிற நமக்குவைகுந்தத்தை நம் கட்டளையை எதிர்பார்த்துக்கொடுப்பதற்கு அவஸரப்படுகிறான். என் மனமே! நீ எனக்கு அநுகூலமாயிருப்பதாலே இந்த ஸம்ருத்தியெல்லாம் நமக்குக் கிடைத்திருக்கிறது. இப்படி நமக்குக் கிடைக்கப்போகிறதென்று நாம் ஸ்வப்னத்திலாவது எண்ணினோமோ ?

இ—ம். தருவான் - வினையால் அணையும் பெயர். மிக்க - மிகுக்க, பெயரெச்சம். ஆகா - பலவின்பால்-எதிர்மறை வினைமுற்று. (3)

---

அவ— ஸனகர் முதலான பெரிய யோகிகளாலும் மனதாலும் வாக்காலும் எட்டமுடியாத வைகுந்தத்தை நம்முடைய சிறுமையைப் பாராதே நமக்குக் கொடுப்பனோ என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார்:—

என்னெஞ்சத் துள்ளிருந்திங் கிருந்தமிழ்நூ லிவைமொழிந்து
வன்னெஞ்சத் திரணியனை மார்விடந்த வாட்டாற்றான்
மன்னஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க்காய்ப் படைதொட்டான்
நன்னெஞ்சே நம்பெருமான் நமக்கருள்தான் செய்வானே. (ச)

(ப-ரை) என் நெஞ்சத்து - என் மனதினுடைய, உள் - உள்ளுக்குள்ளே, இருந்து - நிலையாயிருந்து, இங்கு - இந்த லோகத்தில், இரும் - (குணங்களால்) பெரிதான, தமிழ் நூல் - தமிழ் சாஸ்திர ரூபமான, இவை - இந்தப் பாட்டுக்களை, மொழிந்து-தான் அருளிச்செய்திருக்கிறவனும், வல் - கடினமான,

நெஞ்சத்து - மனதையுடைய, இரணியனை - ஹிரண்யகசிபுவை, மார்வு இடந்த - மார்பைப் பிளந்தவனும், வாட்டாற்றான் - திருவாட்டாற்றில் எழுந்தருளியிருக்கிறவனும், மன் - எல்லா ராஜாக்களும், அஞ்ச - பயப்படும்படி, பாரதத்து - பாரதச்சண்டையில், பாண்டவர்க்காய் - பாண்டவர்களுக்காக, படை - சக்ராயுதத்தை, தொட்டான் - எடுத்துக்கொண்டவனுமான, நம்பெருமான் - நம்முடைய ஸ்வாமி, நல் நெஞ்சே! நமக்கு, தான் - தானே (நம்மிடத்தில் இவ்வளவு பற்றுள்ளவன்), அருள் செய்வான் - கிருபை செய்வன்.

(கருத்து) கெட்ட குணங்கள் ஆயிரக்கணக்காய் உள்ளவனும் நல்லகுணங்கள் ஒன்றுமில்லாதவனுமானவன் நான். மண்ணையோட்டில் வைக்கப்பட்ட கங்கா ஜலத்தைப்போல், என்னுடன் சேர்க்கையாலே அசுத்தமாய் என் மனது இருக்கிறது. என்னுடைய சேர்க்கையினாலேயே அதினிடத்தில் பிரீதி பண்ணி, விடாய்த்தவன் குளத்தில் மேல் ஜலத்தைத் தள்ளி உள்ளே புகுவது போல், அதில் புகுந்து, நித்ய விபூதியையும் நினையாமல் அதில் நிலையாயிருந்து நித்ய விபூதியிலும் அடங்காதபடி ஏராளமான குணங்களையுடைய இந்தத் தமிழ் சாஸ்திரமான திருவாய்மொழியை, என்னை உபகரணமாக வைத்துக்கொண்டு இந்தப் பூலோகத்தில் தானே சொன்னான். இது மாத்திரமோ? த்வேஷத்தாலும் அவமதிப்பாலும் கர்வத்தாலும் கடினமான மனதையுடைய ஹிரண்யகசிபுவினுடைய மார்பைப் பிளந்ததையும், பாரதச் சண்டையில் ஸிம்மத்தைக்கண்ட நரிகள்போல் ராஜாக்கள் பயந்து ஓடும்படி பாண்டவர்களுக்கு உதவி செய்து, எடுக்கிறதில்லையென்று சொன்ன சக்ராயுதத்தை எடுத்ததையும் எனக்கு இனியவைகளாக இருக்கும்படி செய்தான். ப்ரஹ்லாதனுக்காகத் தூணிலே மறைந்துகொண்டு உதவி செய்தது போலில்லாமல், எல்லாரும் எல்லாக்காலத்திலும் கண்களால் பார்க்கும்படியும், ஆபத் காலத்தில் உதவும்படியும் திருவாட்டாற்றில் எழுந்தருளியிருக்கிறான். பகவத் விஷயத்தில் நன்றாய்ப் படிந்திருக்கிற மனமே! இவ்வளவு நம்மிடத்தில் பிரீதி பண்ணின ஸர்வேச்வரன் வைகுந்தத்தை நமக்குக் கொடுக்காமலிருப்பனோ? என்னைக் கொண்டு திருவாய்மொழியைப் பாடினதைக்காட்டிலும் உயர்ந்ததோ திருநாட்டைக் கொடுப்பது.

குறிப்பு— (1) 'என் னெஞ்சத்துள்ளிருந்து' என்பதற்கு, சந்திரகாந்தம் நீராய் உருகுவதற்கு அதில் சந்த்ரகிரணம் படுவதே காரணம். அதுபோல் எம்பெருமான் ஆழ்வார் மனதிலிருப்பதே திருவாய்மொழி அவர் பாடுவதற்குக் காரணம் என்பது.

(2) 'இங்கு' என்பதற்கு வைகுந்தத்திலுமில்லாத திருவாய்மொழியாகிய ஸம்பத்தை இந்தப் பூலோகத்தில் உண்டு பண்ணினுன் என்பது கருத்து.

(3) 'தமிழ் நூல்' என்பதற்கு வேதத்தின் அர்த்தங்களைத் திருவாய்மொழி பூர்ணமாகச் சொல்லுகிறபடியால், இது வேதம் போல் சாஸ்திரம் என்பது கருத்து. வேதம் ஸம்ஸ்கிருத சாஸ்திரம்; இது தமிழ் சாஸ்திரம். பின்னுல்வரும் கவிகளுக்கும் இது மூலப் பிரமாணமாயிருக்கும் என்று சொல்லலாம்படியிருக்கிறது. இப்படியும் பொருள் கூறலாம்.

(4) தாம் துக்கத்தைப் பொறுக்காமல் சொன்னபாட்டுக்களையே எல்லா லக்ஷணங்களோடு கூடினவைகளாய் எம்பெருமான் செய்தானே என்று ஆழ்வார் ஆச்சரியப்படுகிறுர்.

(5) 'இவை' என்பதற்கு இதுவரையில் பாடின திருவாய்மொழிகள் அளவில்லாதபடி இனியவைகளாய் இருப்பதால், ஆழ்வாருக்கு மேலேபோக முடியவில்லை. அவைகள் இப்படி இருக்கிறதென்று அவராலும் சொல்லவும் முடியவில்லை. ஆகையால் 'இவை' என்று பொதுவாய்ச் சொல்லுகிறுர். (4)

---

அவ— கருடனிடத்தில் எம்பெருமான் பண்ணும் பிரீதியைத் தம்மிடத்தில் பண்ணுகிறுன் என்று ஸந்தோஷப்பட்டுச் சொல்லுகிறுர்:—

வானேற வழிதந்த வாட்டாற்றுன் பணிவகையே
நானேறப் பெறுகின்றேன் நரகத்தை நகுநேஞ்சே
தேனேறு மலர்த்துளவந் திகழ்பாதன் செழும்பறவை
தானேறித் திரிவானத் தாளிணையென் தலைமேலே .(ரு)

(ப-ரை) வான் ஏற - பரமபதத்துக்கு ஏறுவதற்கு, வழி - உபாயங்களை, தந்த - (வேண்டினவர்களுக்கு) கொடுத்த, வாட்

டாற்றான் - திருவாட்டாற்றில் எழுந்தருளியிருக்கிற எம்பெரு மானுடைய, பணி வகையே - சொல்படியே, நான், தேன் ஏறு- தேன் வளருகிற, மலர் துளவம் நிகழ்பாதன் - புஷ்பங்களோடு கூடின துளஸி மாலையாலே விளங்குகிற திருவடிகளையுடையவ வனும், செழும் பறவை - செழுமையை உடைய (குளிர்ந்து அழகான திருமேனியையுடைய), கருடபக்ஷியின் மேலே, தான் ஏறி - தானே ஏறி, திரிவான் - (ஸந்தோஷமாய்த்) திரிகிறவனு மான ஸ்வாமியினுடைய, அ தாள் இணை - அந்த இரண்டு திரு வடிகள், என் தலைமேலே, ஏற பெறுகின்றேன் - ஏறியிருக்கப் பெறுகின்றேன், நெஞ்சே! நரகத்தை - (அவனை விட்டுப் பிரிந் திருக்கையாகிற) நரகத்தை, நகு - நீ பரிஹாஸம் பண்ணு.

(கருத்து) வாட்டாற்றில் எழுந்தருளியிருக்கிற எம்பெரு மான் வைகுந்தத்தை அடையவேணுமென்று ஆசைப்படுகிற எல்லாருக்கும், அதில் ஏறுவதற்கு வேண்டின உபாயமாகப் பக்தியையும் பிரபத்தியையும் கொடுத்திருக்கிறான். தேன் வளரு கிற புஷ்பங்களோடு கூடிய துளஸியாலே அலங்கரிக்கப்பட்ட திருவடிகள் அவன் அநுக்கிரஹத்தால் என் தலையில் ஏறப்பெற் றேன். அவனுடைய திருமேனி ஸ்பர்சத்தாலே குளிர்ந்து அழ கான திருமேனியையுடைய கருடன்மேல் அவன் ஸந்தோஷத் துக்காக அல்லாமல், தனக்குப் போகமுண்டாவதற்காகவே எவ் வளவு பிரீதியுடன் அவன் மேலேறிக்கொண்டு ஸஞ்சாரம் செய் கிறானோ அவ்வளவு பிரீதியை என்னிடத்தில் பண்ணி, அவை களை என் தலைமேல் ஏற்றிவைத்திருக்கிறான். இப்படியான பிற்பாடு, என் மனமே! அவனை விட்டுப் பிரிவதாகிய நரகத்தைப் பார்த்து "இதுவரையில் எங்களைத் துன்பப்படுத்தினாயே, இனி மேல் உன்னால் கிட்ட வரமுடியுமோ?" என்று பரிஹாஸம் செய்து அதை ஜயித்தோம் என்று ஸந்தோஷப்பட்டுக்கொண் டிரு. (5)

---

தலைமேலத் தாளிணைகள் தாமரைக்க ணென்னம்மான்
நிலைபேரா னென்நெஞ்சத் தெப்பொழுது மெம்பெருமான்
மலைமாடத் தரவணைமேல் வாட்டாற்றான் மதமிக்க
கொலையானை மருப்பொசித்தான் குரைகழல்கள் குறுகினமே.

(ப-ரை) அ தாள் இணைகள் - அந்த இரண்டு திருவடிகள், தலைமேல் - என் தலைமேல் (இருக்கின்றன); தாமரைக்கண் - தாமரைக்கண்களையுடைய, என் அம்மான் - என் ஸ்வாமி, என் நெஞ்சத்து - என் மனதிலே, எப்பொழுதும், நிலைபோரான் - இருப்பைப் பிரிக்கமாட்டான், எம்பெருமான், மலை மாடத்து - மலைபோலிருக்கிற கோயிலில், அரவணை மேல் - ஆதிசேஷனாகிய படுக்கைமேலே, வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலிருக்கிற வனை, மதம் மிக்க - மதம் அதிகமாயிருந்த, கொலையானை - கொல்லுவதற்கு ஸித்தமாயிருந்த (குவலயாபீடம் என்கிற) யானையினுடைய, மருப்பு - தந்தங்களை, ஒசித்தான் - முறித்தவனுடைய, குரைகழல்கள் - நூபுரத்தாலே சப்திக்கிற திருவடிகளை, குறுகினம் - கிட்டினோம்.

(கருத்து) அந்த அழகான தன்னுடைய திருவடிகளை நான் வேண்டினபடி என் தலைக்கு அலங்காரமாகச் செய்தருளினான். இப்படிச் செய்ததினாலே உண்டான ஸந்தோஷத்தால் மலர்ந்தவைகளும், செந்தாமரை போலிருப்பவைகளுமான திருக்கண்களின் அழகாலே அடிமையாக்கிக்கொள்ளப்பட்ட என்னைக்குளிரக்கடாக்ஷிக்கிறான். என் மனதிலிருந்து எப்போதும்நிலைபோரான். ஸௌபரி தன்னுடைய ஐம்பது ஸ்திரீகளுக்காக ஐம்பது உருவங்களைக் கொண்டதுபோல், எனக்காகப் பல வடிவுகளைக்கொண்டு என்தலைமேலிருக்கிறான்; திருக்கண்களாலேகடாக்ஷிக்கிறான்; மனதில் நிலையாயிருக்கிறான். என் மனதிலிருக்கப்பெற்ற பெருமையால் எல்லாரைக்காட்டிலுமுயர்ந்தவனான அவன் திருவாட்டாற்றில் மலைபோல் உயர்ந்திருக்கிற கோயிலில் ஆதிசேஷன்மேல் பள்ளிகொண்டிருக்கிறான். மதம் மிகுந்த கொலைசெய்ய ஸித்தமாயிருந்த குவலயாபீடம் என்கிற யானையின் தந்தங்களை முறித்த கண்ணனுடைய குரைகழல்களை நாம் கிட்டினோம்.

குறிப்பு— (1) கோயிலின் அழகையும் அதிலிருக்கும் ஆதிசேஷன் அழகையும் நினைத்து, கோயிலையும் அவனையும் ஊருக்கு முன்னாலே சொல்லுகிறார்.

(2) 'குரைகழல்கள்' என்பதால் கழலினுடைய சப்தத்தை ஆழ்வார் காதாலே கேட்டார் என்பது காட்டப்படுகிறது.

இ—ம். 'குரைகழல்' இதை அன்மொழித் தொகையாய்க் கொண்டு சப்திக்கிற நூபுரத்தையுடையது என்றும் பொருள் கொள்ளலாம். (6)

---

அவ— "நீர் சொல்லுகிறதெல்லாம் மனதின் அனுபவம் தானே, எம்பெருமான் உம்முடைய உடம்பில் வந்திருக்கிறான்" என்று சொல்லக்கூடுமோ என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார்.—

குரைகழல்கள் குறுகினம்நங் கோவிந்தன் குடிகொண்டான்
திரைகுழுவு கடல்புடைசூழ் தென்னாட்டுத் திலதமன்ன
வரைகுழுவு மணிமாட வாட்டாற்றான் மலரடிமேல்
விரைகுழுவு நறுந்துளவம் மெய்ந்நின்று கமழுமே. (7)

(ப-ரை) குரை கழல்கள் - நூபுரம் முதலானவைகளாலே சப்திக்கிற திருவடிகளை, குறுகினம் - கிட்டிவிட்டோம். நம் கோவிந்தன், குடி கொண்டான் - (என் மனதை) தனக்கு இருப்பிடமாக வைத்துக்கொண்டான், திரை குழுவு - அலைகளின் கூட்டத்தை உடைய, கடல் - ஸமுத்ரத்தாலே, சூழ் - சூழப்பட்டு, தென்னாட்டு - தெற்கு தேசத்துக்கு, திலதம் அன்ன - திலகம்போலிருக்கிற, வரை குழுவு மணிமாடம் - மலைக்கூட்டம் போல் உயர்ந்து மணிகள் இழைக்கப்பட்ட வீடுகளையுடைய, வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய, மலர் அடிமேல் - தாமரைப்பூப்போன்ற திருவடிகள்மேலே, விரைகுழுவுநறும் துளபம் - வாஸனை கூட்டமாய்ச் சேர்ந்து வாஸிக்கிற துளஸி, மெய் - என் உடம்பில், நின்று கமழும் - நிலையாயிருந்து வாஸிக்கிறது.

(கருத்து) என் மனமே! நூபுரம் முதலானவைகளாலே சப்திக்கிற எம்பெருமான் திருவடிகளை நாம் அடைந்தோம். இது மனதின் அநுபவம் மாத்திரம் அன்று. உண்மையில் அவன் என் உடம்பில் வந்திருக்கிறான். இது மாத்திரமோ? மஹரிஷிகளுடனும் பரிஜனங்களுடனும் வந்து என் மனதை நிலையான இருப்பிடமாக வைத்துக்கொண்டிருக்கிறான். இப்படி அவன் வந்திருப்பதற்கு என்ன அடையாளம் என்று கேட்கிறாயோ? பிராட்டி கிட்ட இருக்கிற ஸந்தோஷத்தாலே நர்த்தநம்

பண்ணுவதுபோல் ஒன்றின் பின் ஒன்று வந்துகொண்டிருக்கிற அலைகளையுடைய ஸமுத்ரத்தாலே சூழப்பட்டதும் தெற்குதேசத்துக்குத் திலகம்போல் அழகானதும் மலைக்கூட்டங்கள்போல் உயர்ந்து இரத்னங்கள் இழைக்கப்பட்டு இருக்கிற வீடுகளையுடையதுமான திருவாட்டாற்றில் எழுந்தருளி இருக்கிற எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளின்மேல் ஸமர்ப்பிக்கப்பட்ட அதினாலே மிகுந்த வாஸனையையுடைய துளஸியானது என் உடம்பில் வாஸிக்கிறது; பார்; ஆகையால், அவன் என்னிடம் உண்மையாகவே வந்திருக்கிறான்.

குறிப்பு— (1) ஆழ்வார் வெகுநாளாய் ஆசைப்பட்டபடி பாஹ்யஸம்ச்லேஷம் கிடைத்துவிட்டது. கண்ணுக்கு மாத்திரம் தெரியவில்லை.

(2) "குடிகொண்டான்" என்பதற்கு, ஒரு வீட்டிற்குக்குடி போகிறவன் தன் குடும்பத்தோடு போகிறான்; அதுபோல எம்பெருமான் பிராட்டியுடனும் பரிஜனங்களுடனும் ஆழ்வார் மனதில் வந்திருக்கிறான் என்பது கருத்து. (7)

---

அவ- "எம்பெருமான் செய்த ஸம்ருத்திகளுக்குத்தகுந்தபடி என்னிடம் ஒரு காரணத்தையும் காணேன்" என்று சொல்லி, அவைகள் ஸ்லாக்யமாயிருப்பதை அநுபவிக்கிறார்:—

மெய்ந்நின்று கமழ்துளவ விரையேறு திருமுடியன்
கைந்நின்ற சக்கரத்தன் கருதுமிடம் பொருதுபுனல்
மைந்நின்ற வரைபோலுந் திருவுருவ வாட்டாற்கற்கு
எந்நன்றி செய்தேனா வென்னெஞ்சிற் றிகழ்வதுவே. (அ)

(ப-ரை) மெய் - திருமேனியில், நின்று - நிலையாயிருந்து, கமழ் - வாஸிக்கிற, துளவ விரை - துளஸி வாஸனை, ஏறு திருமுடியன் - வளருகிற திருமுடியை யுடையவனும், கருதுமிடம் - தான் நினைக்கிறவிடத்திலேபோய், பொருது - சண்டைசெய்து, (திரும்பிவந்து) கை நின்ற - தன் கையிலிருக்கிற, சக்கரத்தன் - திருவாழியையுடையவனும், புனல் - ஜலம் என்ன, மைநின்ற வரை போலும் - மை நிலையாயிருக்கிற மலை என்ன, இவைகள் போன்ற, திரு உருவ - திருமேனியை யுடையவனுமான

வாட்டாற்றுற்கு, என் நன்றி - என்ன நன்மை (அநுகூலமாயிருப்பதை), செய்தேனே - செய்தேனாக, என் நெஞ்சத்து - என் மனதில், திகழ்வது - (அவன்) விளங்குவது?

(கருத்து) தன் திருமேனியிலிருப்பதினால் துளஸியின் பரிமளம் வளர்ந்துகொண்டிருக்கிற திருமுடியையுடையவனும் தன் ஸங்கல்பப்படி வெளியேபோய் ஆச்ரிதர்கள் விரோதிகளை நாசம் செய்து திரும்பிவந்து தன் திருக்கையில் நிற்கிற திருவாழியையுடையவனும், அலையில்லாத பெரிய ஸமுத்திரத்தைப்போலவும், இந்திர நீலமலைபோலவும் இருக்கிற திருமேனியையுடையவனும், திருவாட்டாற்றில் எழுந்தருளியிருக்கிறவனுமான எம்பெருமான் கிடையாதது கிடைத்தது போல் எண்ணி, என் மனதில் விளங்குகிறான். இப்படி அவன் செய்வதற்குத் தகுந்த காரணமாய் நான் என்ன அநுகூலவிருத்தியைச் செய்தேன். ஜடாயுவைப்போல் உயிரைக்கொடுத்தாவது அடிமை செய்தேனோ? அநுமானைப்போல ஸீதையினிடம்போய் ஸமாசாரம் கொண்டுவந்தேனோ? நான் அப்படிச் செய்ததாய் எனக்கும் ஒன்றும் தோன்றவில்லையே.

குறிப்பு— (1) முதல் அடியில் துளஸியைச் சொன்னது மற்ற போக்கிய வஸ்துக்களுக்கும் உபலக்ஷணம்.

(2) 'கருதுமிடம்' என்பதால் திருவாழியின் பிரவிருத்தி எம்பெருமான் ஸங்கல்பப்படி இருப்பதுபோல், அவனுடைய ஸ்வரூபமும் ஸ்திதியும் எம்பெருமான் ஸங்கல்பத்துக்கு அதீநங்கள் என்பது கருத்து. மூன்றாவது அடியில் திருமேனியின் வர்ணத்தைச் சொன்னது எல்லாவித அழகுக்கும் உபலக்ஷணம்.

இ—ம் செய்தேனே - செய்தேனாக; கடைக்குறை (8)

---

அவ— மிகவுமுயர்ந்த எம்பெருமான் மிகவும் தாழ்ந்த தம்மிடத்தில் இவ்வளவு பிரீதி பண்ணுகிறானேயென்று ஆச்சரியப்படுகிறார்:—

திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை தன்னோடும்
திகழ்கின்ற திருமாலார் சேர்விடந்தண் வாட்டாறு
புகழ்நின்ற புள்ளூர்தி போரரக்கர் குலங்கெடுத்தான்
இகழ்வின்றி யென்னெஞ்சத் தெப்பொழுதும் பிரியானே (கூ)

(ப - ரை) திகழ்கின்ற - விளங்குகிற, திருமார்பில், திரு மங்கை தன்னோடு - பிராட்டியாகிய யுவதியோடு, திகழ் கின்ற - விளங்குகிறவனும், திருமாலார் - அந்தப் பிராட்டியிடத் தில் ஆசையுள்ளவனுமான எம்பெருமான், சேரும் இடம், தண் - குளிர்ந்த, வாட்டாறு - திருவாட்டாறு, புகழ்கின்ற-கீர்த்தி கள் (எல்லாம்) தன்னிடம் விளங்குகிற, புள் ஊர்தி - கருடப் பக்ஷியை நடத்துகிறவனும், போர் அரக்கர் - சண்டையில் (பல முள்ள) ராக்ஷஸர்களுடைய, குலம் - கூட்டத்தை, கெடுத்தான் - நாசம்செய்தவனுமான அவன், இகழ்வு இன்றி - உபேக்ஷையில்லா மல், எப்போதும், என் நெஞ்சத்து பிரியான் - விட்டுப்பிரிகிறு னில்லை.

(கருத்து) எம்பெருமான் தனக்குத் தகுந்த மஹிஷியாக வைத்துக்கொண்டிருக்கிறவள் இயற்கையாய் அழகுள்ள தன் திருமார்பிலிருந்து அதற்கு இன்னும் அழகையுண்டுபண்ணுகிற நித்தியயௌவனமுள்ள பிராட்டி; மஹிஷியினிடத்தில் எவ்வளவு பிரீதியிருக்கிறதோ அவ்வளவு பிரீதிபண்ணிக்கொண்டு அவன் எழுந்தருளியிருக்கிறஇடம்குளிர்ந்த திருவாட்டாறு; அவனுக்குக் கைங்கரியம் செய்கிறவனே அவனுக்கு எல்லாவிதமாயும் அடிமை செய்கிற கீர்த்தியையுடைய கருடபக்ஷி; அவன் செய்கிறவேலையோ கருடன்மேல் ஏறிக்கொண்டு வந்து சண்டைபோடவருகிற பல முள்ள ராக்ஷஸர்களை நாசம் செய்து ஆசிரிதர்களை ரக்ஷிப்பது. இப்படிஎல்லாவிதமாயும் உயர்ந்திருக்கிற அவன்எல்லாவிதமாய்த் தாழ்ந்திருக்கிற என்னை இகழாதே என்னைவிட்டு ஒரு க்ஷணமும் பிரிந்திருக்கமுடியாதவனாய் என்மனதில் வந்திருந்து ஸந்தோஷப் படுகிறானே? இஃது என்ன ஆச்சரியம்! இஃதென்ன உயர்ந்த ஸௌசீல்ய குணம்! (9)

---

அவ— தங்களைச் சேர்ந்தவர்களுக்கு எல்லாஸமிருத்தியை யும் கொடுப்பதே பெரியோர்கள் ஸ்வபாவம் என்கிற அர்த்தத் தை எம்பெருமான்தன்னைச்சேர்ந்தஎனக்குச்செய்துகாட்டினான் என்று சொல்லுகிறார்.—

பிரியாதாட் செய்யென்று பிறப்பறுத்தா ளறக்கொண்டான்
அரியாகி யிரணியனை யாகங்கீண் டானன்று
பெரியார்க்காட் பட்டக்கால் பெறுதபயன் பெறுமாறு
வரிவாள்வா யரவணைமேல் வாட்டாற்றான் காட்டினனே(க0)

(ப - ரை) பிரியாது - பிரியாமல், ஆள் செய் என்று - கைங்கரியத்தைச் செய் என்று சொல்லி, பிறப்பு-பிறப்பை, அறுத்து, (இன்று), அற-மிகவும், ஆள் கொண்டான்-அடிமை கொண்டான், அரியாகி - நரசிங்கரூபமாய், இரணியனை - ஹிரண்யகசிபுவை, ஆகம் கீண்டான் - உடம்பைப்பிளந்தான், அன்று - முன் காலத்திலே; (ஆகையால்) பெரியார்க்கு, ஆட்பட்டக்கால் - சேஷமாக ஆனால், பெறுதபயன் பெறும் ஆறு-அடையமுடியாத லாபத்தை அடையும் வழியை, வரிவாள் வாய் அரவு அணைமேல் - கோடுகளையும் காந்தியையும் வாய்களையுமுடைய ஆதிசேஷனாகிய படுக்கையில், வாட்டாற்றான் - திருவாட்டாற்றில் படுத்திருக்கிறவன், காட்டினான்.

(கருத்து) முன்காலத்தில் எனக்கு இனியதாயிருக்கும்படி நரசிங்கரூபத்தை எடுத்துக்கொண்டு ஹிரண்யகசிபுவின் உடம்பைப் பிளந்தான். இப்போது என்னைவிட்டு ஒரு க்ஷணமும் பிரியாமலிருந்து 'எனக்கே சேஷன்செய்கிறவேலையைச்செய்' என்று சொல்லி ஸம்ஸாரத்தைப் போக்கி "எம்மாவீடு" (2-9) இல் நான் ஆசைப்பட்டபடி, தனக்கே சேஷமாக என்னைப்பண்ணிக்கொண்டான். "தங்களை ஆச்ரயித்தவர்களுக்குத் தாங்கள் செய்யும் ஸம்ருத்தியின் பெருமையையும்அவர்களின் தாழ்மையையும்பாராமல் கிடைக்கமுடியாத லாபத்தைச் செய்வதே பெரியோர்களுக்கு ஸ்வபாவம்" என்று சாஸ்திரம் சொல்லுகிற ஸூக்ஷ்மமான அர்த்தத்தைத் திருவாட்டாற்றில் வரிவாள்வாய் ஆதிசேஷன்மேல் படுத்துக் கொண்டிருக்கிறவன் தெளிவாக எனக்குக் காட்டினான்.

குறிப்பு—(1) பிரஹ்லாதனுக்குச்செய்த உபகாரத்தை தமக்குச்செய்ததாக ஆழ்வார் எண்ணுகிறார். பாகவத ஸம்ருத்தியை ஆசைப்பட்டவரன்றோ அவர்.

(2) பாட்டிலிருக்கும் "அன்று" என்கிற சொல்லுக்குப் பொருந்த "இன்று"என்கிற சொல் உரையில் சேர்க்கப்பட்டது.

காட்டித்தன் கனைகழல்கள் கடுநரகம் புகலொழித்த
வாட்டாற்றெம் பெருமானை வளங்குருகூர்ச் சடகோபன்
பாட்டாய தமிழ்மாலை யாயிரத்து ளிப்பத்தும்
கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே (கக)

(ப - ரை) தன் - தன்னுடைய, கனை-சப்திக்கிற, கழல்கள் - வீரகண்டையையுடைய திருவடிகளை, காட்டி, கடுநரகம்-(விவேகிகளுக்குப் பொறுக்க முடியாத ஸம்ஸாரமாகிய) நரகத்தைத், புகல் - (மறுபடியும்) புகுவதை, ஒழித்த - போக்கின, வாட்டாற்று எம் பெருமானை (குறித்து), வளம் குருகூர் சடகோபன், பாட்டாய - பாட்டுக்களான, தமிழ்மாலை, ஆயிரத்துள், செவிக்கு இனிய - காதுக்கு இனியவைகளும், செம்சொல் - நல்ல சொற்களுமான, இ பத்தும் - இந்தப் பத்துப்பாட்டுக்களையும், வானவர்கள் - நித்ய ஸூரிகள், கேட்டு, ஆரார் - திருப்தியை அடையமாட்டார்கள்.

(கருத்து) நூபுரங்கள் சப்திக்கிற திருவடிகளைக் காட்டி, விவேகிகளுக்குப் பொறுக்கமுடியாமல் நரகம் போலிருக்கும் ஸம்ஸாரத்தை மறுபடியும் அவர்கள் புகாதபடி செய்த திருவாட்டாற்று எம்பெருமானைக் குறித்து வளம் குருகூர்ச்சடகோபன் அருளிச்செய்தவைகளான தமிழ்ப் பாட்டுக்களால் செய்யப்பட்ட மாலையாகிய ஆயிரத்துள் காதுக்கு இனியவைகளும், மூன்று காரணங்களும் ஒத்துச்சொன்னபடியால் ருஜுக்களுமான இந்தப் பத்துப் பாட்டுக்களை நித்தியஸூரிகள் கேட்டால் என்ன பாடுபடுவார்களோ? "இன்னம் சொல்லு இன்னம் சொல்லு" என்று சொல்வார்களேயல்லாமல் அவர்களுக்குத் திருப்தியுண்டாகுமோ? (11)

வக்த்ரத்வாத் கேஶவத்வாதிஹ ஸிரஸி ச ததா ஶ்ரீஸநாராய
ணத்வாத் ஸௌஹார்த்வாத் பாண்டவாநாம் ஹிததநுஜஸ்வீயபூஜ
நீயத்வாத் । கஞ்ஜாக்ஷத்வாச்ச்ரிதே ஷ உத ஸாமயஸ:
ஶ்ரீபதித்வாதிஹைவம் ஶ்ரீஶாங்க்ரிப்ராப்தியோக்யம் ஸ்வயதி
தரணே வக்தி தேநாஸ்யஹாஷி ॥ ||க0க||

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆச்ரயித்தவர்களுக்குத் தன் திருவடிகளைக் கொடுப்பதில் மிகவும் அவஸரப்படுகிறான் என்பது சில காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன:— (1) திருவாழியை உடையவனாயிருப்பது; (2) விரோதிகளை நாசம்செய்வது; (3) ஸ்வாமியாயிருப்பது; (4) லக்ஷ்மீபதியாய் எல்லாருக்கும் ஆதாரமாய் எல்லாரையும் நியமனம்செய்கிறவனாயிருப்பது; (5) பாண்டவர்களிடத்தில் ஸ்நேஹமுள்ளவனாயிருந்தது; (6) தனக்குப் பிடித்த துளஸியாலே பூஜை செய்யத் தகுந்தவனாயிருப்பது; (7) தாமரைக்கண்ணனாயிருப்பது; (8) ஆச்ரிதர்களுக்கு உட்பட்டிருப்பது; (9) நல்ல கீர்த்தியை யுடையவனாயிருப்பது; (10) லக்ஷ்மீபதியாயிருப்பது முதலானவைகள். (109)

# ஏழாம் திருவாய்மொழி.

அவ:—கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமான் தம்முடன் கலந்த பிரகாரங்களை ஆழ்வார் அநுபவித்து, மிகுந்த பிரீதியை அடைந்து, அந்தப் பிரகாரங்களை மற்றவர்களுடன் பேசியல்லது தரிக்கமுடியாதவராய், அதைச் சொல்ல ஆரம்பித்து, "கவிகளே! அவனைப்பற்றிக் கவி பாடுகிற உங்களுடைய ஆத்மாவை ரக்ஷித்துக்கொண்டு கவிபாடுங்கள்" என்று உபதேசம் செய்கிறார்.

(2) முன் திருவாய்மொழியில்போல் இதிலும் எம்பெருமான் தன்னுடன் சேர்ந்ததைச் சொன்னபோதிலும், இரண்டு திருவாய்மொழிகளுக்கும் வித்தியாஸமுண்டு; அதில் அவன் தம்முடன் சேர்ந்ததைத் தம்முடைய லாபமாகப் பேசினார்; இதில் அதை அவன் தன்னுடைய லாபமாக எண்ணுவதாகப் பேசுகிறார்.

(3) எம்பெருமான் ஆழ்வார் திருமேனியில் மிகுந்த பிரீதியைப்பண்ணி, அந்தத்திருமேனியுடன் அவரை வைகுந்தத்துக்கு அழைத்துக்கொண்டுபோக நினைத்து, இதை அவர் அறிந்தால் ஒப்புக்கொள்ளமாட்டார் என்று பார்த்து, திருவாய்மொழியைப் பாடுவிக்கைஎன்கிறவியாஜத்தாலே அவருக்குள்ளேபுகுந்து அவன் படுகிற பாட்டை ஆழ்வார் பார்த்து ஆச்சரியப்படுகிறார்.

(அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.)

செஞ்சொற் கவிகா ளுயிர்காத்தாட் செய்மின் திருமா
[லிருஞ்சோலை
வஞ்சக் கள்வன் மாமாயன் மாயக் கவியாய் வந்தென்
நெஞ்சு முயிரு முள்கலந்து நின்றா ரறியா வண்ணமென்
நெஞ்சு முயிரு மவையுண்டு தானே யாகி நிறைந்தானே (க)

(ப-ரை) செம் சொல் - நல்லசொற்களையுடைய, கவிகாள் - கவிகளே! உயிர் காத்து - (உங்களுடைய) ஆத்மாவை ரக்ஷித்துக்கொண்டு, ஆட் செய்மின் - (கவிபாடுவதான) கைங்கர்யத்தைச் செய்யுங்கள். திருமாலிருஞ்சோலை வஞ்சம் கள்வன் - திருமாலிருஞ்சோலையில் இருக்கும் வஞ்சனை செய்கிற திருடன், மாமாயன் - மிகவும் ஆச்சரியமானவன், மாயம் கவியாய் வந்து - (உம்மை

உபகரணமாக வைத்துக்கொண்டு சில பாட்டுக்களைப் பாடுகிறேன் என்று) மாயாவியான கவியாக என்னிடம் வந்து, என் நெஞ்சும் உள் என் உயிரும் உள் கலந்து - என் மனதினுள்ளும் என் ஆத்மாவினுள்ளும் சேர்ந்து, அவை-அவைகளை, (மனதையும் ஆத்மாவையும்), உண்டு - அநுபவித்து, நின்றார் அறியாவண்ணம் - தன்னிடத்திலிருக்கிறவர்களும் அறியாதவிதமாய், என் நெஞ்சும் உயிரும் தானே ஆகி, நிறைந்தான் - பூர்ணமாக ஆனான்.

(கருத்து) வேறு பிரயோஜனங்களைத் தேடிக்கொண்டு பாடுவதாகிய கோணலில்லாமல் அவனையே பிரயோஜனமாகநினைத்துப் பாடுகிற நல்ல சொற்களையுடைய கவிகளே! உங்களுடைய ஆத்மாக்களை ரக்ஷித்துக்கொண்டு கவிபாடுவதாகிய கைங்கரியத்தைச் செய்யுங்கள். தனக்கு அடிமை செய்கிறவர்களைத் தங்களால்பொறுக்கமுடியாதபடி இவ்வளவென்று சொல்லமுடியாமல் அவன் சேர்ந்து துன்பப்படுத்துவன். அவன் "அவர்களுடைய இஷ்டப்படி அடிமை செய்விக்கிறவன் அல்லவா?" என்று சொல்லுகிறீர்களோ? திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கிறவன் வஞ்சக்கள்வன். ஆச்ரிதர்களுடன் கலந்து அவர்களைத் துன்பப்படுத்துவதே அவன் ஸ்வபாவம். துன்பப்படுத்ாதவன்போல் வந்து துன்பப்படுத்துவன். "இதை எங்கே பார்த்தீர்" என்று கேட்கிறீர்களோ? "உம்மை உபகரணமாகக்கொண்டு கவி பாடுகிறேன்" என்று சொல்லி, தாஹமெடுத்த ஒரு சிறு பிள்ளை தண்ணீர் வேண்டுமென்று சொல்லிக்கொண்டு ஒரு சிறு பெண் இருக்குமிடம் வந்து புகுவதுபோல் என்னிடம் வந்து, என் உடம்பிலும், என் மனதிலும், என் ஆத்மாவிலும் பாலோடு கலந்த நீரைப்போலச் சேர்ந்தான். தன்னுடைய ஸ்வரூபத்தால் இவைகளில் வியாபித்தது மாத்திரம் அன்று. தன்னுடைய திருமேனியுடனும் வந்து சேர்ந்தான். அவனை எப்போதும் அநுபவித்துக்கொண்டிருக்கிற பிராட்டியும் ஆதிசேஷன் முதலான நித்தியஸூரிகளும் இன்னது செய்கிறான் என்று அறிய முடியாதபடி என் உடம்பையும் இந்திரியங்களையும் பிராணனையும் மனதையும் ஆத்மாவையும் தனக்குள்ளே அடக்கிக்கொண்டு ஜலத்தைவிட்டுப் பாலைப் பிரிக்கமுடியாததுபோல், தன்னை விட்டும் அவைகளைப் பிரிக்கமுடியாதபடி ஆகி, இவைகளை அளவில்லாமல் இனியவைகளாக அநுபவித்து, எல்லாவற்றையும் அடைந்

தவனாக எண்ணிக்கொண்டிருக்கிறான். ஆகையால், அவனுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தில் அகப்படாமல் மிகவும் உயர்ந்தவனாயிருக்கிறான் என்கிற குணத்தை மாத்திரம் பாடுங்கள்.

குறிப்பு— "உயிர்காத்து" என்பதற்குக் கருத்து— அவனுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தைப் பார்த்து, அவனுக்குச் சேஷமாய் அடிமை செய்யப்போகையில், அவன் உங்களைச் சேஷிகளாயும் தன்னைச் சேஷமாகவும் பண்ணி, சேஷமாயிருக்கையே ஸ்வபாவமாயுள்ள உங்கள் ஸ்வரூபத்தை அழித்துவிடுவன். ஆகையால், அந்தக்குணத்தில் அகப்படாமல் ஸ்வரூபத்தை ரக்ஷித்துக்கொண்டு - என்பது. இதற்கு வேறு விதமாயும் பொருள் கொள்ளலாம். அது:— அவன் ஸௌசீல்யத்தை நினைக்கிற உங்களிடத்தில் அளவில்லாமல் கலந்து அந்தக் குணத்தை நன்றாகக் காட்டி, உங்களை நீராய் உருக்கி, உங்கள் ஸ்வரூபத்தை அழித்துவிடுவன்-என்பது.

---

தானே யாகி நிறைந்தெல்லா வுலகு முயிருந் தானேயாய்த்
தானே யானென் பானாகித் தன்னைத் தானே துதித்தெனக்குத்
தேனே பாலே கன்னலே யமுதே திருமா லிருஞ்சோலைக்
கோனே யாகி நின்றொழிந்தா னென்னை முற்று முயிருண்டே.

(ப-ரை) என்னை, உயிர் - ஆத்மாவை, முற்றும் - முழுவதும், உண்டு - அநுபவித்து, தானே ஆகி, நிறைந்து - பரிபூர்ணனாய், எல்லா உலகும், உயிரும் - (அதிலிருக்கும்) பிராணிகளும், தானேயாய், யான் என்பான் - நான் என்று சொல்லப்படுகிறவன், தானேயாகி, தன்னை தானே துதித்து - ஸ்தோத்ரம் செய்து, எனக்கு, தேனே - தேனாகவும், பாலே - பாலாகவும், கன்னலே - கருப்பஞ்சாறாகவும், அமுதே - அமிருதமாகவும், (ஆகி), திருமாலிருஞ்சோலை கோனேயாகி - திருமாலிருஞ்சோலைமலைக்கு நாயகனாக ஆகி, நின்றொழிந்தான் - நிலையாக இருந்துவிட்டான்.

(கருத்து) "ஜ்ஞாநீ எனக்கு ஆத்மா"வென்று ஸ்ரீகீதையில் தான்சொன்னபடி தனக்குஆத்மாவாக அவன் எண்ணியிருக்கும் என்னை முழுவதும் அநுபவித்தான். சேர்க்கையானது சேர்ந்த இருவர்களிடத்திலுமிருந்தபோதிலும், இதைத்தானே செய்தநா

யும், தானே இதின் பலனை அநுபவிப்பதாயும் இதனால் எல்லா வற்றையும் அடைந்ததாயும் எண்ணுகிறான். இதினாலே தான் எல்லா உலகங்களுக்கும் அவைகளிலுள்ள எல்லாப் பிராணிகளுக் கும் ஆத்மாவாயிருந்து அவைகளை நியமனம் செய்வதாகிய ஸர் வேசுவரனாயிருப்பதை அடைந்து, நான் என்கிற வஸ்துதானு கவே யாகி, என்னைப் பரிபூர்ணமாய் அநுபவித்தும் திருப்தி அடையவில்லை, உபய விபூதிக்கு ஸ்வாமியான தான், எனக்குள் ஆத்மாவாயிருந்து, என் சொற்களைக்கொண்டு இந்தத் திருவாய் மொழியைச் சொல்லுவித்தான். இதனுடன் அவன் நிற்க வில்லை. ஒருதலை ஸ்நேஹம்போல் விரஸமாகாமல் என்னிடத்தில் அவனுக்குப் பிரீதியுள்ளதுபோல் எனக்கும் அவனிடத்தில் பிரீதி யுண்டாயிருந்தால்தான் ரஸம் என்று எண்ணி, எனக்குத் தேனை யும் பாலையும் கருப்பஞ்சாற்றையும் அமிருதத்தையும்போல் இனியனாகிவிட்டான். திருமாலிருஞ்சோலையிலிருப்பது இப் போதுதான் அவனுக்கு ஸபலமாயிற்று.

குறிப்பு— எம்பெருமான் ஸ்வரூபம் எங்குமிருக்கிறது; ஆழ்வார் அணு; அதை முழுவதும் அனுபவிப்பதாவது— அது மிகவுமினியதாயிருக்கிற விஷயத்தில் அதற்கு அளவில்லையென் றும், அதனால் தன் ஸ்வரூபத்தைக் காட்டிலும் ஆழ்வார் ஸ்வரூ பம் பெரிது என்றும் அவன் எண்ணுகிறான் என்பது 'முற்றும்' என்பதின் கருத்து.

இ—ம். தேனே... அமுதே என்கிறவிடத்தில் ஏகாரத்திற்கு உம்மைப் பொருள். (2)

---

அவ— இப்படித்தம்முடன் சேர்ந்து தம்மைக்கொண்டு கவி பாடியும் திருப்தி அடையாமல் மேல்மேலும் சேரவேண்டு மென்று எம்பெருமான் ஆசைப்படுகிறான் என்று சொல்லு கிறார்:—

என்னை முற்று முயிருண்டேன் மாய வாக்கை யிதனுட்புக்கு
என்னை முற்றுந் தானேயாய் நின்ற மாய வம்மான்சேர்
தென்னன் திருமா லிருஞ்சோலைத் திசைகை கூப்பிச் சேர்ந்தயான்
இன்னம் போவே னேகொலோ வென்கொ லம்மான் திருவருளே.

(ப - ரை) என் - என்னுடைய, மாய - பிரகிருதியிலிருந்து உண்டான, ஆக்கை இதனுள் - இந்த உடம்பில், புக்கு - புகுந்து, என்னைஉயிர்-என் ஆத்மாவை, முற்றும்-முழுவதும்,உண்டு-அநுபவித்து, என்னை முற்றும், (குறித்து), தானேயாய், நின்ற, மாய வம்மான் - ஆச்சரியமான ஸர்வேசுவரன், சேர் - சேர்ந்திருக்கிற, தென் நல் - தெற்குத் தேசத்துக்கு நல்லதான, திருமாலிருஞ்சோலை திசை - திருமாலிருஞ்சோலை மலையினுடைய திக்கைக் குறித்து, கை கூப்பி, சேர்ந்த யான் - அவனைக்கிட்டப்பெற்ற நான், இன்னம் போவேனே கொலோ - (இதனுடன் திருப்தியடையாமல்) இதற்குமேற்பட்ட சேர்க்கையைத் தேடிக்கொண்டு போவேனோ? அம்மான் திரு அருள்-ஸ்வாமியினுடைய கிருபை (ஆசை), என்கொல் - என்னவாயிருக்கிறது ?

(கருத்து) அஜ்ஞானம் முதலானவைகள் உண்டாவதற்குக் காரணமாய் பிரகிருதியிலிருந்து உண்டாய்த் தாழ்ந்த இந்தஉடம்பில் விடாய்த்தவன் தண்ணீரைக்கண்டது போல ஆவலுடன் புகுந்து, தனக்கு மிகுந்த பிரீதிக்கு விஷயமான என்னை முழுவதும் அநுபவித்து, உடம்பு என்னது என்று எண்ணிக்கொண்டிருக்கிற என்னையும், என்னதாக எண்ணப்பட்ட உடம்பு முதலானவைகளையும் ஒன்றாகச் சேர்ந்து அநுபவித்து, தன்னைக்காட்டிலும் அவைகளை வேறாகக் காண முடியாமல் தானே அவைகளாக ஆகிவிடாய் தீர்ந்தவனாக ஆனான். இப்படிச் சேருவதற்கு என்ன காரணம் என்றால், தெற்குத் தேசத்துக்கு அலங்காரமும், ஸர்வேசுவரனுயிருக்கிற அவன் சேர்ந்திருப்பதாகிய ஸம்ருத்தியையுடையதுமான திருமாலிருஞ்சோலைமலையிலிருக்கிற திக்குச்குக் கைகூப்பினேன். இது தவிர வேறொன்றையும் நான் செய்யவில்லை. இப்படி என்னுடன் சேர்ந்திருந்தும் சேராததுபோல் பின்னையும் ஆரம்பம்முதல் சேருவதற்கு பிரயத்நம் பண்ணுகிறான். இதற்கு மேற்பட்ட சேர்க்கை உண்டோ? அவன் திருவுள்ளமென்ன ? நான் இதற்குமேலில்லாதபடியான சேர்க்கையை அடைந்து பரிபூர்ணனாக இருக்கையில் அவன் எதற்காக மேல்மேலும் ஆசைப்படுகிறான்.

இ—ம். போவேனே - ஏகாரத்துக்கு வினைப்பொருள்; இன்மைப்பொருளைக்கொடுத்தது. (3)

*அவ— எம்பெருமான் தம்முடன் சேர்வதற்குத் திருமலை தகுந்த இடம் என்று எண்ணி அதை அவன் விடான் என்கிறார்*

என்கொ லம்மான் திருவருள்க ளுலகு முயிருந் தானேயாய்
நன்கென் னுடலங் கைவிடான் ஞாலத் தூடே நடந்துழக்கித்
தென்கொள் திசைக்குத் திலதமாய் நின்ற திருமா லிருஞ்சோலை
நங்கள் குன்றங் கைவிடான் நண்ணா வசுரர் நலியவே. (௪)

(ப-ரை) உலகும், உயிரும் - அதிலிருக்கும் பிராணிகளும். தானேயாய், நன்கு - (அவன் புத்தியாலே) நல்லதாயிருக்கிற, என் உடலம் - என் உடம்பை, கைவிடான், ஞாலத்தூடே - பூமியின் நடுவில், நடந்து, உழக்கி - எங்கும் மிதித்துப் பார்த்து, தென் கொள் - தெற்காயிருப்பதைக்கொண்ட, திசைக்கு, திலதமாய் நின்ற - திலகம்போல் அலங்காரமாயிருக்கிற, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ் சோலைமலையாகிற, நங்கள் குன்றம் - நம்முடைய மலையை, நண்ணா - கிட்டாத, அசுரர் - பிரதிகூலர்கள், நலிய - நசிக்கும்படி, கைவிடான் கைவிடுகிறதில்லை, அம்மான் - ஸ்வாமியினுடைய, திரு அருள் - (ஸௌசீல்யம் என்கிற) கிருபையானது, என்கொல் - என்னவாயிருக்கிறது?

(கருத்து) ஸர்வேசுவரன் என்னுடைய உடம்பை நல்லதாக எண்ணிக்கொண்டு அதில் புகுந்து அதை அநுபவிக்கான். இது மாத்திரம் அன்று; எல்லா உலகங்களுக்கும் அவைகளிலுள்ளபிராணிகளுக்கும் ஆத்மாவாயிருந்து அந்தந்தப்பிரகாரமாகவும் தோன்றுகிறான். இந்த என் உடம்பையும் ஒருக்ஷணமும் கைவிடுகிறதில்லை. இப்படிஎன்னுடன்சேருவதற்கு எந்த இடம்தகுந்ததென்றுதேடி திரிவிக்கிரமனாய் அவதாரம் பண்ணிப் பூமியை அளந்தபோது தன் திருவடியாலே மிதித்துப்பார்த்து, தெற்குத் தேசத்துக்குத் திலகம்போல் அலங்காரமாயிருக்கிற திருமாலிருஞ்சோலையென்கிற நமதுமலையை அதற்குத்தகுந்த இடம் என்றுநிச்சயித்தான், பிரதிகூலர்கள் பொறுக்கமாட்டாமல் நாசத்தையடையும்படி அதில் இருந்துகொண்டு என் உடம்பை விடாததுபோல், அதையும் ஒரு க்ஷணமும்கூட விடச் சக்தியில்லாதவனாயிருக்கிறான். ஸ்வாமியினுடைய ஸௌசீல்யமாகிற கிருபை என்ன ஆச்சரியமாயிருக்கிறது.

குறிப்பு— (1) 'தானேயாய்' என்கிறவிடத்தில் ஏகாரத்தாலே எல்லாவற்றிலும் அவன் பிரதானனாயிருக்கிறான் என்பதும், அவைகள் அவனுக்குப் பிரகாரங்கள் என்பதும் காட்டப்படுகின்றன.

(2) ஆழ்வாரிடமிருக்கும் பிரீதியினால் அவர் உடம்பை எம்பெருமான் பிராப்யமாக எண்ணி அதை விடுகிறதில்லை. அதை அடைவதற்கு உபாயமாயிருந்தபடியால் திருமலையையும் விடுகிறதில்லை. (5)

---

அவ— தம்முடைய பாட்டைக்கேட்டு அடைந்த ஸந்தோஷத்தாலே எம்பெருமான் பாடுகிறான் என்று ஸந்தோஷப்படுகிறார்:—

நண்ணா வசுரர் நலிவெய்த நல்ல வமரர் பொலிவெய்த
எண்ணா தனக ளெண்ணும்நன் முனிவ ரின்பந் தலைச்சிறப்பப்
பண்ணார் பாட லின்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடித்
தென்னா வென்னு மென்னம்மான் திருமா லிருஞ்சோ லையானே.

(ப-ரை) நண்ணா அசுரர்கள் - (தன்னை) கிட்டாத அஸுர ப்ரகிருதிகள், நலிவு எய்த - நாசத்தை அடையும்படியாகவும், நல்ல அமரர் - அவனிடத்தில் பக்தி பண்ணுவதில் பிடிமானமுள்ளவர்களான தேவப் பிரகிருதிகள், பொலிவு - விருத்தியை, எய்த - அடையும்படியும், எண்ணாதனகள் - (மற்றவர்களாலே) நினைக்கக்கூட முடியாதவைகள், எண்ணும் - (அவனுக்குக்கிடைக்க வேண்டும்) என்று ஆசைப்படுகிற, நல் - நல்ல (வேறு பிரயோஜனத்தைத் தேடாத), முனிவர் - (பிரீதியுடன் அவனுடைய குணங்களைத்) தியானம் பண்ணுகிறவர்கள், இன்பம் - ஆனந்தத்தை, தலைச்சிறப்ப - அடையும்படியாகவும், பண் ஆர் பாடல் - கானம் நிறைந்த பாட்டுக்களாகிய, இன் கவிகள் - இனியவைகளான கவிகளை, யானாய் - என்னையே உடம்பாகவைத்துக்கொண்டு, தன்னை தான் பாடி, திருமாலிருஞ்சோலையான், என் அம்மான் - என் ஸ்வாமி, தென்னா என்னும் - தென்னாதனா என்று பாடிக்கொண்டிருக்கிறான்.

(கருத்து) எம்பெருமான் என்னை உடம்பாக வைத்துக்கொண்டு தானாகவே தன்னைத் திருவாய்மொழியாலே ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டான். இதனால், அவனுக்கு முகம் காட்டாத

அஸுரப்பிரகிருதிகள், அவனுக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் கிடைத்த திருவாய்மொழியாகிய ஸம்ருத்தியைப் பொறுக்க மாட்டாமல் நாசம் அடைந்தார்கள்; அவனுக்குப் பக்தி செய்வதில் பிடிமானமுள்ள தெய்வப் பிரகிருதிகள், ஜ்ஞானம் வைராக்கியம் பக்தி அவன் அநுபவம் அதினாலுண்டான அவன் கைங்கரியம் ஆகிய ஸம்ருத்தியையடைந்தார்கள்; அவனுடைய லீலைக்கும் போகத்துக்கும் உபகரணமாக இப்போதிருப்பதைக் காட்டிலும் அதிகமாக ஸம்ருத்தி உண்டாகவேண்டுமென்று ஆசைப்படுகிறவர்களும், வேறு பிரயோஜனத்தைத் தேடாமல் பிரீதியுடன் அவன் குணங்களைத் தியானம் பண்ணிக்கொண்டிருப்பவர்களுமான யோகிகள் தாங்கள் ஆசைப்பட்டபடி முன்னால் நினைக்கப்படாத திருவாய்மொழியாகிய ஸம்ருத்தி அவனுக்குக்கிடைக்கப் பெற்றோம் என்று மேல் மேல் ஆனந்தத்தையடைந்தார்கள். திருவாய்மொழியைக்கொண்டு தன்னை ஸ்தோத்ரம்பண்ணிக் கொண்ட ஸந்தோஷத்தாலே தேனைக்குடித்துக் களித்துப் பாடுகிற வண்டுகளைப்போல், திருமாலிருஞ்சோலை மலையிலிருந்து கொண்டு அவன் தென்னுதென என்று பாடிக்கொண்டிருக்கிறான்.

குறிப்பு— ஸ்ரீமத் ராமாயணம் உண்டானதுபோல் திருவாய்மொழியாகிய பிரபந்தம் உண்டாயிற்று. எம்பெருமானுக்கு புதியவைகளும் அளவில்லாதவைகளும் மிகவும் உயர்ந்தவைகளுமான குணங்களின் கூட்டத்தையும் விபூதிகளையும் அடைவதாகிய ஸம்ருத்தியைக்காட்டிலும் திருவாய்மொழி அதிகமான மங்களமான ஸம்ருத்தியென்று யோகிகள் ஆனந்தப்படுகிறார்கள் என்பது கருத்து. (5)

---

அவ— எம்பெருமான் தம்முடைய பாட்டைக்கேட்டு ஸந்தோஷப்பட்டதுமல்லாமல் உந்மத்தனாகவும் இருக்கிறான் என்கிறார்:—

திருமா லிருஞ்சோ லையானே யாகிச் செழுமூ வுலகுந்தன்
ஒருமா வயிற்றி னுள்ளேவைத் தூழி யூழி தலையளிக்கும்
திருமா லென்னை யாளுமால் சிவனும் பிரம னுங்காணாது
அருமா லெய்தி யடிபரவ வருளை யீந்த வம்மானே. (௬)

(ப-ரை) செழு-செழுமையுள்ள, மூவுலகும், தன்-தன்னுடைய, ஒரு மா-மிகவும் குறைந்த அளவுள்ள, வயிற்றினுள்ளே, வைத்து - (பிரளயகாலத்தில்) வைத்து, ஊழி ஊழி-ஒவ்வொருகல்பத்திலும், தலை - தலையாக (பூர்ணமாக), அளிக்கும் - ரக்ஷிக்கும், திருமால் - லக்ஷ்மீபதி, பிரமனும் சிவனும், காணாது-பார்க்கமுடியாமல், அருமால்-அருமையான பக்தியை, எய்தி - அடைந்து, அடி - தன் திருவடிகளை, பரவ-ஸ்தோத்ரம்பண்ண, அருளை-கிருபையை, ஈந்த - (அவர்களுக்குக்) கொடுத்த, அம்மான்-ஸ்வாமியான, திருமாலிருஞ்சோலையான், மாலேயாகி - என்னிடத்தில் பித்துப்பிடித்தவனாய், என்னை-(மிகவும் தாழ்ந்த) என்னை, ஆளும்-அடிமைகொள்ளுகிறான்.

(கருத்து) ஆச்சரியமான அமைப்பையுடைய மூன்று உலகங்களையும் ஆலிலையில் படுத்திருக்கும் தன் சிறுவயிற்றில் வைத்துக்கொண்டு ஒவ்வொரு கல்பத்திலும் அவைகளைப் பூர்ணமாக ரக்ஷிக்கிறவனும், லக்ஷ்மீபதியும், பிரம்மாவாலும் ருத்திரனாலும் காண முடியாதவனும், அவர்களாலே மிகுந்த பக்தியுடன் ஸ்தோத்ரம் பண்ணப்படுகிறவனும், அவர்களுக்கு வேண்டியதைக் கொடுக்கிறவனுமான ஸர்வேச்வரன் திருமாலிருஞ்சோலையிலிருந்து கொண்டு என்னிடத்தில் பித்துப்பிடித்தவனாய் மிகவும் தாழ்ந்தவனான என்னைவிட்டுப்பிரியாமல் அடிமை கொள்ளுகிறான்.

குறிப்பு— "ஒருமா" என்கிற சொல்லுக்கு இருபதில் ஒன்று என்பது பொருள். அதுபோல வயிறு சிறியது என்றபடி.

---

அவ— கீழ்ச்சொன்ன ஸம்ருத்திகள் எல்லாம் திருமலையாலே உண்டாயின என்று அதைக் கொண்டாடுகிறார்:—

அருளை யீயென் னம்மானே யென்னும் முக்க ணம்மானும்
தெருள்கொள் பிரம னம்மானுந் தேவர் கோனுந் தேவரும்
இருள்கள் கடியும் முனிவரு மேத்து மம்மான் றிருமலை
மருள்கள் கடியும் மணிமலை திருமா லிருஞ்சோலை மலையே. (எ)

(ப-ரை) என் அம்மானே, அருளை ஈ - கிருபையைத் தந்தருள், என்னும் - என்று சொல்லுகிற, முக்கண் அம்மானும் - மூன்று கண்களையுடைய (எம்பெருமானுடைய அநுக்ரஹத்தாலே உலகத்துக்கு) ஸ்வாமியான ருத்திரனும், தெருள்கொள்-(உயர்ந்த)

ஜ்ஞானத்தைக்கொண்ட, பிரமன் அம்மானும் - ஸ்வாமியான பிரம்மாவும், தேவர்கோனும் - இந்திரனும், தேவரும் - மற்றத் தேவர்களும், இருள்கள்கடியும் - இருட்டை (அஜ்ஞானத்தை) போக்கும், முனிவரும், ஏத்தும் - ஸ்தோத்ரம் பண்ணும், அம்மான் - ஸ்வாமியினுடைய திருமலை, மருள்கள் - மயக்கங்களை, கடியும் - போக்கும்படியான, மணி மலை - அழகான மலை, திருமாலிருஞ்சோலை மலையே!

(கருத்து) "என்னுடைய ஸ்வாமியே! என்னிடத்தில் தேவரீர் கிருபை செய்யவேணு"மென்றுவேண்டுகிற முக்கண் அம்மானான ருத்திரனும், உயர்ந்த ஜ்ஞானமுடைய பிரம்மாவும் இந்திரனும் மற்றத் தேவர்களும், இதிஹாஸங்களாலும் புராணங்களாலும் ஜனங்களுடைய அஜ்ஞானத்தைப்போக்கும் வால்மீகிமுதலான ருஷிகளும் ஸ்தோத்ரம் பண்ணுகிற ஸர்வேசுவரன் விளையாட்டுக்காக எழுந்தருளியிருக்கும் மலையான திருமாலிருஞ்சோலைமலையே அவனை அடைவதற்கு இடையூறுகளான அவித்யை முதலானவைகளைப் போக்குகிறதாயும் மிகவும் இனியதாயுமிருக்கிற மலை. வேறொரு மலைக்கும் இந்தப்பெருமை வராது

குறிப்பு— (1)"தெருள்கொள்" என்பதற்கு,பிரம்மா ருத்திரனுக்கும் மற்றவர்களுக்கும் அந்தந்தக் காலத்தில் ஜ்ஞானத்தை உபதேசிக்கிறான். ருத்திரன் ஒருகாலத்தில் கோபத்தினால் கண் தெரியாமல் எம்பெருமானுடன் சண்டைக்கு வந்தபோது அவனுக்கு அறிவைக்கொடுத்து பிரம்மா அவனை விலக்கினான். இவ்விதமான உயர்ந்த ஜ்ஞானமுள்ளவன் என்பது கருத்து.

(2) 'இருள்கள்' என்பது - எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் ஜீவன் ஸ்வரூபத்தையும் அவன் அடையவேண்டிய புருஷார்த்தத்தையும் அதற்குவேண்டிய உபாயத்தையும் அறியாமையும், இவைகளையுள்ளபடி யறியாமல் வேறாக எண்ணுவதுமாம்.

---

(7)

அவ— ஸமிருத்திகளை இவையென்று காட்டுகிறார்:—

திருமா லிருஞ்சோ லைமலையே திருப்பாற் கடலே யென்றலையே
திருமால் வைகுந் தமேதண் திருவேங் கடமே யெனதுடலே
அருமா மாயத் தெனதுயிரே மனமே வாக்கே கருமமே
ஒருமா நொடியும் பிரியானென் னூழி முதல்வ னொருவனே. (அ)

(ப-ரை) திருமாலிருஞ்சோலைமலையே, திருப்பாற்கடலே - என் தலையே, (இவைகளையும்,) திருநால் வைகுந்தமே - ஸ்ரீயப்பதியினுடைய வைகுந்தமே, தண் - குளிர்ந்த, திருவேங்கடமே, எனது உடலே, (இவைகளையும்) அரு - அருமையான, மா - விசாலமான, மாயத்து - பிரகிருதியில், எனது உயிரே - என் ஆத்மஸ்வரூபம், மனமே, வாக்கே, கருமமே - நான் செய்கிற வேலைகள், (இவைகளையும் விட்டு); ஒரு மா நொடியும் - மிகவும் குறைந்த ஒரு க்ஷணமும், பிரியான், என் ஊழி முதல்வன் - என்னுடையவனாய் கல்பத்தை உண்டுபண்ணினவன், ஒருவன் - ஒப்பில்லாதவன்.

(கருத்து) என்னை அடைவதற்காகக் கல்பத்தை நியமனம் பண்ணுகிற பிரம்மா முதலான எல்லாத் தேவதைகளையுமுண்டு பண்ணின எம்பெருமான், திருமாலிருஞ்சோலை மலையையும் திருப்பாற்கடலையும் விடாததுபோல், என் தலையையும் ஒரு க்ஷணமும் விடுகிறதில்லை. தான் பிராட்டியுடன் எழுந்தருளியிருக்கும் வைகுந்தத்தையும், ஸம்ஸார தாபத்தைப் போக்கும் திருமலையையும் விடாததுபோல் என் உடம்பையும் ஒரு க்ஷணமும் விடுகிறதில்லை. எம்பெருமானுடைய அநுக்கிரஹமில்லாமல் விடமுடியாத மிகவும் விசாலமான பிரகிருதியில் விழுந்து உழன்றுகொண்டிருந்த என் ஆத்மாவையும் மனதையும் வாக்கையும் நான் செய்யும் வேலைகளையும் ஒருக்ஷணமும் விடுகிறதில்லை. என்னிடத்தில் அவனுக்கு என்ன ஆசை. இப்படிப் பட்டதை எங்கேயாவது பார்த்ததுண்டோ?

குறிப்பு— (1) திருமாலிருஞ்சோலைமலையையும் திருப்பாற்கடலையும் சொன்னது உதாரணமாக; அப்படிச் சொல்லாமல் அவைகளையும் தலையையும் சேர்த்துச்சொன்னதின் கருத்து- அவைகளைப்போல் என்று சொன்னால் அவைகளுக்கு ஒரு பெருமையும், தலைக்குக் கொஞ்சம் குறைவும் ஏற்படும். சந்திரனைப்போல் முகம் என்று சொன்னால், சந்திரனுக்கு அதிக அழகும் முகத்துக்குக் குறைந்த அழகும் ஏற்படும். அப்படியில்லாமல் அவைகளில் எவ்வளவு பிரீதி பண்ணுகிறானோ, கொஞ்சமும் குறையாமல் அவ்வளவு பிரீதி என் தலையில் அவன் பண்ணுகிறான் - என்பது.

(2) இரண்டு உபமானங்களைச் சொன்னதின் கருத்து—அவையிரண்டிலும் பண்ணும் ப்ரீதியை என் தலையொன்றிலே அவன் பண்ணுகிறான்— என்பது.

(3) கண்ணன் பதினாறாயிரம் மஹிஷிகளின் வீடுகளில் அவ்வளவு ரூபங்களையெடுத்துக்கொண்டு ஒவ்வொன்றிலுமிருந்து அதையதை விட்டுப் பிரியாமலிருந்ததுபோல், ஆழ்வார் தலையிலும் உடம்பின் மற்ற அவயவங்களிலும் ஆத்மாவிலும் மனதிலும் வாக்கிலும் அத்தனை ரூபம் கொண்டு எம்பெருமான் இருக்கிறானென்பது கருத்து. (8)

---

அவ— கீழ்ப் பாட்டுக்களில் எம்பெருமானுக்குத் தம்முடைய உடம்பிலிருக்கும் ஆசையைச் சொல்லி, அந்த ஆசையினால் அதைத் தம்முடன் திருநாட்டுக்குக் கொண்டுபோவனோ என்று பயந்து, அப்போது தமக்குப் பிரகிருதி ஸம்பந்தம் போகாதென்று நினைத்து, அந்த ஆசையை விடும்படி அவனைப் பிரார்த்திக்கிறார்—

ஊழி முதல்வ னொருவனே யென்னு மொருவ னுலகெல்லாம்
ஊழி தோறும் தன்னுள்ளே படைத்துக் காத்துக் கெடுத்துழலும்
ஆழி வண்ண னென்னம்மா னந்தண் திருமா லிருஞ்சோலை
வாழி மனமே கைவிடே லுடலு முயிரும் மங்கவொட்டே. (௯)

(ப-ரை) ஊழி முதல்வன் - காலம் முதலான எல்லா வஸ்துக்களுக்கும் காரணமானவன், ஒருவனே என்னும்-பிரளயகாலத்தில் ஒருவனாக இருந்தான் என்று சொல்லப்படுகிற, ஒருவன் - ஒப்பில்லாதவனும், உலகு எல்லாம் - எல்லா உலகங்களையும், ஊழிதோறும் - ஒவ்வொரு கல்பத்திலும், தன் உள்ளே - தன் ஸங்கல்பத்தின் ஒரு மூலையிலே, படைத்து - உண்டுபண்ணி, காத்து - ரக்ஷித்து, கெடுத்து - ஸம்ஹாரம் பண்ணி, உழலும் - இதுவே வேலையாக இருக்குமவனும், ஆழிவண்ணன்-ஸமுத்திரம் போல் ஆழமான ஸ்வபாவமுள்ளவனுமான, என் அம்மான் - என் ஸ்வாமியினுடைய, அம் - அழகான, தண் - குளிர்ந்த, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலை என்கிற மலையை, மனமே - மனமே! கைவிடேல் - விட்டுவிடாதே, வாழி-உனக்கு

மங்களம் உண்டாகவேணும், (எம்பெருமானைப் பார்த்து) உட லும் - என் உடம்பையும், உயிர் - பிராணனையும், மங்கவொட்டு- நசிக்கும்படி ஸம்மதி.

(கருத்து) காலம் முதலான எல்லா வஸ்துக்களுக்கும் கா ரணமானவன் முன்னாலே ஒருவனாகவே இருந்தான் என்று வே தத்தினால் சொல்லப்படுகிறவனும், ஒப்பில்லாதவனும் ஒவ் வொரு கல்பத்திலும் எல்லா உலகங்களையும் உண்டுபண்ணி ரக்ஷித் து, கடைசியில் ஸம்ஹாரம் செய்து இதுவே வேலையாக இருக் கிறவனும், ஸமுத்ரம்போல் ஆழமான ஸ்வபாவமுள்ளவனும், என்னோடு இப்படிச் சேர்ந்திருக்கிறவனுமான ஸ்வாமிக்குக்கூடப் பிரியமாய் அழகாய் குளிர்ந்து இருக்கிற திருமாலிருஞ்சோலையை என் மனமே! ஒருநாளும் கைவிடாதே. இந்த ஸம்ருத்தியெல்லாம் அதினாலே நமக்குக் கிடைத்திருக்கிறது. அதை எப்போதும் அநுபவித்துக்கொண்டிரு. இப்படி மனதுடன் சொல்லி எம் பெருமானைப் பார்த்துச் சொல்லுகிறார். இந்த இளப்பமான உடம்பில் நீ இப்படிச் சேர்ந்திருந்தபோதிலும் அதில் இருக்கும் உன்னுடைய ஆசையை விட்டுவிடு. அந்த உடம்புடன் என்னை வைகுந்தத்துக்குக் கொண்டுபோகாதே. அதுவும் பிராணனும் நாசம் அடைவதைத் தடுக்காதே.

குறிப்பு— "ஒருவன்" என்பதற்கு, "எல்லாவற்றையும் தனக்கு அதீனமாக வைத்துக்கொண்டிருக்கிறவனுடைய ஸத்தை இப்போது என்னுடைய அதீனமாக இருக்கிறதே" என்று ஆழ்வார் ஆச்சரியப்படுகிறார் என்பது கருத்து. (9)

---

அவ— தாம் இப்படி வேண்டியும் எம்பெருமான் அதைக் கேளாமலிருக்க, ஆழ்வார் உடம்பினுடைய இளப்பத்தை அவ னுக்குத் தெரிவிக்கிறார்:—

மங்க வொட்டுன் மாமாயை திருமா லிருஞ்சோ லைமேய
நங்கள் கோனே யானேநீ யாகி யென்னை யளித்தானே
பொங்கைம் புலனும் பொறியைந்துங் கருமேந் திரிய மைம்பூதம்
இங்கிவ் வுயிரேய் பிரகிருதி மானாங் கார மனங்களே. (ய)

(ப-ரை) திருமாலிருஞ்சோலை மேய - திருமாலிருஞ்சோலை மலையில் பிரீதியுடன் நித்தியவாஸம் செய்கிற, நங்கள் கோனே - எங்களுடைய ஸ்வாமியே! நீயே யானாகி - என்னை ரக்ஷிக்க நான் செய்யவேண்டியவைகளையெல்லாம் நீயே செய்கிறவனாய், என்னை அளித்தானே - என்னை ரக்ஷித்தவனே! பொங்கு - (தங்களுடைய இருப்பிலேயே மனதைக் கலக்கிக்கொண்டு) மேல் மேலும் விருத்தியடைகிற, ஐம் புலனும் - சப்தம் முதலான ஐந்து விதமான விஷயங்களும், பொறி ஐந்தும் - (அவைகளில் ஒருவனை இழுத்துத் துன்பப்படுத்துகிற) ஐந்து ஜ்ஞானேந்திரியங்களும், கர்மேந்திரியம் - (அந்த விஷயங்களை அடைவதற்காக வேலை செய்கிற) ஐந்து கர்மேந்திரியங்களும், ஐம்பூதம் - பூமி முதலான ஐந்து பூதங்களும், இங்கு - இந்த ஸம்ஸாரத்திலே, இ உயிர் ஏய் – இந்த ஜீவனோடு சேர்ந்த, பிரகிருதி - மூலப் பிரகிருதியும், மான் - மஹத் என்கிற தத்துவமும், ஆங்கார மனங்கள் - அஹங்காரமும் மனதும், உன் மாயை - (ஆகிய இவைகளான) உன்னுடைய மஹா மாயையை, மங்க ஒட்டு - நசிக்கும்படி ஸம்மதி.

(கருத்து) திருமாலிருஞ்சோலைமலையில் பிரீதியுடன் நித்தியவாஸம் செய்கிற எங்களுடைய ஸ்வாமியே! இந்த என்னுடைய உடம்பின் ஸ்வபாவம் உனக்குத் தெரியாதா? பூமி முதலான ஐந்து பூதங்களின் சேர்க்கையால் இந்த உடம்பு உண்டாயிருக்கிறது. அதிலிருக்கும் ஐந்து ஜ்ஞானேந்திரியங்கள் சப்தம் முதலான ஐந்து விஷயங்களில் இந்த உடம்பிலிருக்கும் ஆத்மாவுக்கு ஆசையை உண்டுபண்ணித் துன்பப்படுத்துகின்றன. அந்த விஷயங்களை ஆத்மா அநுபவிப்பதற்குக் கர்மேந்திரியங்கள் வேலைசெய்கின்றன. மஹத் என்கிற தத்துவம் இந்தவிஷயங்களின் ஸுகம் உயர்ந்தது என்று நினைக்கும்படி செய்கிறது. அஹங்காரம் என்கிற தத்துவம் உடம்பில் ஆத்மா என்கிற புத்தியை உண்டு பண்ணுகிறது. மூலப் பிரகிருதியே ஐந்து பூதங்களாகவும் பத்து இந்திரியங்களாகவும் மனதாகவும் மஹத்தாகவும் அஹங்காரமாகவும் இருந்து ஆத்மாவைத் துன்பப்படுத்தும்படி நீ செய்திருக்கிறாய். ஆகையால், இந்த உடம்பில் இவ்வளவு ஆசையை ஏன் பண்ணுகிறாய். அதில் ஆசையை விட்டு விட்டு நாசம் அடைவதற்கு அநுமதியைப் பண்ணு.

இ—ம். மேய - மேவிய, பெயரெச்சம். இடைக்குறை. இதில் 'இ' என்பது இன் என்னும் இடைநிலை. இதில் னகரம் கெட்டது. 'மேய' என்றவிடத்தில், மே - பகுதி; ய் - இடைநிலை, அ - பெயரெச்ச விகுதி என்றும் கொள்ளலாம். (10)

மானுங் கார மனங்கெட ஐவர் வன்கை யர்மங்கத்
தானுங் கார மாய்ப்புக்குத் தானே தானே யானுனைத்
தேனுங் காரப் பொழிற்குருகூர்ச் சடகோ பன்சொல் லாயிரத்துள்
மானுங் காரத் திவைபத்தும் திருமா லிருஞ்சோ லேமலைக்கே (கக)

(ப-ரை) மானுங்காரமனம் - மஹத் அஹங்காரம் மனது, கெட - நசிக்கும்படியும், வன் கையர் - பலமுள்ள கைகளையுடைய, ஐவர் - ஐந்து ஜ்ஞானேந்திரியங்களும், மங்க - நாசமடைய (என்னை விட்டுப்போகும்படி), தான் ஆங்காரமாய் - தான் ஆழ்வார் மனதில் புகப் பெற்றோம் என்று கர்வமுள்ளவனாய், புக்கு, புகுந்து, தானே தானே ஆனானை - மிகுந்தகர்வமுள்ளவனாய் ஆனவனைக் குறித்து, தேன் ஆங்காரம் பொழில் - வண்டுகள் கர்வப்பட்டு ஸஞ்சரிக்கிற சோலைகளையுடைய, குருகூர் சடகோபன் சொல் ஆயிரத்துள், மான் ஆங்காரத்து - அவருடைய மிகுந்த ஸந்தோஷத்தினால் உண்டான, இவை பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களும், திருமாலிருஞ்சோலைமலைக்கே - திருமாலிருஞ் சோலைமலை விஷயமாகச் சொல்லப்பட்டன

(கருத்து) தாம் சொன்னபடி செய்வது எம்பெருமானுக்கு ஸ்வபாவமாயிருப்பதாலே, "இந்த உடம்பில் அபிமானத்தை விட்டுவிடு" என்று ஆழ்வார் அவனை வேண்டினார்- மஹத் அஹங்காரம் மனது முதலான எட்டுத் திரவியங்களாலே உண்டான அவருடைய உடம்பு நாசத்தையடையும்படியும், பலமுள்ள இந்திரியங்கள் அவரை விட்டுப் பிரியும்படியும், எம்பெருமான் அவைகளிலுள்ள ஆசையைவிட்டு, 'அவருடைய மனதில் புகப்பெற்றேன்" என்று கர்வமே ஒரு வடிவுகொண்டாற் போலே அதில் புகுந்து, அவரை அநுபவித்து, அதினால் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தான். அவனைக் குறித்து, தேனைக் குடித்து ஸந்தோஷத்தினால் கர்வத்துடன் பறந்துகொண்டிருக்கிற வண்டுகள் நிறைந்த சோலைகளையுடைய திருக்குருகூரில் எழுந்தருளியி

ருக்கிற சடகோபன் அருளிச்செய்த ஆயிரத்துள் அவருடைய மிகுந்த ஸந்தோஷத்தாலுண்டான இந்தப் பத்துப்பாட்டுக்கள் திருமாலிருஞ்சோலைமலை விஷயமாகச் சொல்லப்பட்டன. ஆதலால், இவைகள் எம்பெருமானுக்கு மிகவும் பிரியமானவைகள். ஆகையால், இவைகளை அடிக்கடி படிக்கவேண்டியது.

குறிப்பு— இந்தத் திருவாய்மொழியில் சொன்ன ஸம்ருத்திகளெல்லாம் எம்பெருமானுக்குத் திருமாலிருஞ்சோலைமலையின் ஸம்பந்தத்தால் உண்டானபடியால், அவைகள் எல்லாம் அந்த மலையைச் சேர்ந்தவைகளே என்பது "திருமாலிருஞ்சோலை மலைக்கே" என்பதின் கருத்து. (11)

---

க்ருத்யாஶ்லேஷ ஸ்வபாவாஸ்வத்ருஶ்யமதயா ஸ்வஸ்தைள வைரா
க்யாஸ் ஸ்வாமிகாஸ் ஸ்வஸம்ஸ்திதானந்தமதயா ஸ்வஸ்த
தள க்ருத்யஹாவாஸ்| ஸ்வஷ்டயோமாத் ஸ்வமிய ஸவிய
ஸ்தானவைத்ந ஜேவஃ ஶ்ரீஶாநத்யாஜ்ஞஃ ஸ்யாஸ் ஸ்வஜநவஶிக
ரேஷ்வித்யோ ஸம்ஜமாஜ ॥ ॥கக0॥

இந்தத் திருவாய்மொழியில், எம்பெருமான் தன்னைச்சேர்ந்தவர்களுடைய உடம்பு முதலான பரிகரங்களில் மிகுந்த ஆசையுள்ளவன் என்பது அவனுடைய வியாபாரங்களாலே சொல்லப் படுகிறது. அவைகளாவன— (1) ஆச்ரிதர்கள் மனதில் புகுந்திருப்பது. (2) தன்னை ஸ்தோத்ரம் பண்ண அவர்களைத் தூண்டுவது (3) எல்லாருக்கும் ஸ்வாமியாயிருப்பது; (4) எல்லாவற்றிலும் ஆத்மாவாக இருப்பது; (5) தன்னை ஸ்தோத்ரம் பண்ணுவதில், தானே ஸ்தோத்ரம் பண்ணுகிறவனாக இருப்பது. (6) ஆபத்காலத்தில் பந்துவாயிருப்பது, (7,8) கிட்ட இருக்கப் பல இடங்கள் உள்ளவனாயிருப்பது. (9,10)வது பாட்டுக்களில் சொல்லப்பட்ட வியாபாரம் தன்னைச் சேர்ந்தவர்களின் உடம்பு முதலான பரிகரங்களில் ஆசைவைப்பது அது இந்த வாக்யத்தின் முதலில் சொல்லப்பட்டது. (110)

# எட்டாம் திருவாய்மொழி.

அவ— கீழ் இரண்டு திருவாய்மொழிகளில் எம்பெருமான் தம்மை வைகுந்தத்துக்கு அழைத்துக்கொண்டுபோக அவஸரப்படுவதையும், அப்படி அவஸரப்பட்டும், தாம் சொல்வதை எதிர்பார்த்திருப்பதையும், தம்முடைய உடம்பில் அவன் செய்கிற வியாபாரங்களையும், அதிலுள்ள ஆசையினால் அதனுடன் தம்மை அழைத்துக்கொண்டுபோக யத்நப்படுகையில், அதைத் தாம் தடுத்ததை ஒப்புக்கொண்டு அதிலிருக்கும் ஆசையை அவன் விட்டு விட்டதையும் சொன்னார். இவ்வளவு அபிநிவேசம் அவன் பண்ணினதைப்பார்த்து, மிகவும் ஆச்சர்யப்பட்டு 'இதற்கு என்ன காரணம்' என்று அவர் நிரூபணம் செய்கையில், அவனையே கேட்டால், அவனாலும் முன்னால் ஏற்படுத்தப்பட்ட காரணங்களுக்குள்ளே இது காரணம் என்று சொல்லமுடியாது. தம்மிடத்தில் இல்லாத காரணத்தை இருந்ததாக எண்ணினானோ என்றால், 'தான் திருமாலிருஞ்சோலைமலை' என்று சொன்னதைத் தவிர, வேறொன்றும் செய்யவில்லையே. 'இதென்ன ஆச்சரியம்' என்று ஆச்சரியப்பட்டு அது உள்ளடங்காமல் இந்தத் திருவாய்மொழியில் பேசுகிறார்.

(2) திருமாலிருஞ்சோலைமலை என்று தாம் சொன்னபோதிலும் எல்லா வியாபாரங்களையும் ஆத்மாவுடன் அவன் கூடவே இருந்து செய்கிறபடியால், நான் சொன்னதும் பிரதானமான அவனுடைய வேலையே, அது எப்படி அவனுக்குட்பட்டவரான தம்முடைய வேலையாகக் கூடும் என்பது ஆழ்வார் கருத்து. இந்த ஒரு வியாஜத்தை வைத்துக்கொண்டு மேல் மேலும் உபகாரங்களைச் செய்து இதுவரையில் தம்மைக் கொண்டுவந்ததைப் பார்த்து, அவர் இப்படி ஆச்சரியப்படுகிறார்.

(கலிவிருத்தம்)

திருமா லிருஞ்சோலை மலையென்றே னென்னத்
திருமால்வந் தென்னெஞ்சு நிறையப் புகுந்தான்
குருமா மணியுந்து புனற்பொன்னித் தென்பால்
திருமால் சென்று சேர்விடந்தென் திருப்பேரே. (க)

(ப-ரை) திருமாலிருஞ்சோலை மலை, என்றேன் - என்று சொன்னேன், என்ன - என்று சொல்லும்போதே, திருமால் - பிராட்டியிடத்தில் ஆசையுள்ளவனான எம்பெருமான், வந்து, என்நெஞ்சு நிறைய-என் மனது நிறையும்படி, புகுந்தான், திருமால், சென்று சேர்வு இடம் - போய் சேர்தலை உடைய இடமானது, குரு - விலையுள்ள, மா - அழகிய, மணி - மாணிக்கங்களை, உந்தும் - கரையில் கொண்டுவந்து தள்ளும், புனல் - ஜலத்தையுடைய, பொன்னி - காவிரியினுடைய, தென்பால் - தெற்கு பாகத்தில் இருக்கும், தென் - அழகிய, திருப்பேர் - திருப்பேர் என்கிற ஊர்.

(கருத்து) திருமாலிருஞ்சோலை மலை என்று எம்பெருமான் நித்தியவாஸம் செய்கிற மலையின் திருநாமம் ஒன்றையுமே சொன்னேன். சொன்னவுடன் பிராட்டியோடே கூடவந்து என் மனதில் நிறையப் புகுந்து என்னுடன் சேர்ந்தான். என்ன அவனுக்கு என்னிடம் ஆசை! பிராட்டியிடம் மிகுந்த ஆசையுள்ள அவன் வந்து சேர்ந்திருக்கிறது விலையுள்ள அழகிய மாணிக்கங்களைக் கரையில் கொண்டுவந்து தள்ளும் காவிரியின் தென்பக்கத்தில் இருக்கிற திருப்பேர் என்கிற அழகான ஊரே.

குறிப்பு— (1) சக்ரவர்த்தித் திருமகன் தண்டகாரண்யத்துக்குப்போய் 'தான் ராமன், இவன் லக்ஷ்மணன், இவள் ஸீதை' என்று சொல்லிக்கொண்டு ருஷிகள் ஆச்ரமத்துக்குப் போனது போல், எம்பெருமானும் பிராட்டியுடன் வந்து ஆழ்வார் மனதில் புகுந்தான் என்பது "புகுந்தான்" என்பதின் கருத்து.

(2) எம்பெருமானுடைய நினைவு கொஞ்சமுமில்லாமல் அநாதிகாலமாகப் பாழாக இருந்த தம் மனதில் அவனும் பிராட்டியும் வந்து தங்கள் அழகால் அதை நிரப்பிப் பாழாயிருப்பதை முழுவதும் போகும்படி செய்தார்கள் என்பது "நிறைய" என்பதின் கருத்து.

(3) "திருமால்" என்று நான்காம் அடியில் மறுபடியும் சொன்னதின் கருத்து— பிராட்டி ஸமுத்ரராஜனுக்குப் பெண். ஆகையால், அவனுக்குப் பத்னியான காவிரிக்கும் அவள் பெண். எம்பெருமான் மாப்பிள்ளை. இருவருக்கும் சீராக மாணிக்கங்

களைக் காவிரி அலைகளாகிற கைகளாலே கொண்டுவந்து கொடுக்கிறுள் என்பது.

(4) அழகான திருப்பேர் தனக்கு இருப்பிடமாக இருக்க, அவன் தம் மனதில் வந்திருப்பதைப் பார்த்து ஆழ்வார் ஆச்சரியப்படுகிறுர்- என்பது மூன்றும் நான்காம் அடிகளின் கருத்து.

(5) குரு - வட சொல். 'குரு' என்பதற்கு நிறம் என்றும், 'மா' என்பதற்கு பெருமை என்றும் பொருளுண்டு. அப்போது "குருமாமணி" என்பதற்கு நல்லநிறமுள்ள பெரிய மணி என்பது பொருள். (1)

அவ— கீழ்ப்பாட்டில் தகுந்த முக்கியமான காரணமில்லாமல் தம் மனதில் எம்பெருமான் வந்து புகுந்தான் என்று சொன்னுர்; இப்படிப் புகுந்ததை அவன் தன் லாபமாக எண்ணுகிறுன் என்று சொல்லுகிறுர்:—

பேரே யுறைகின்ற பிரானின்று வந்து
பேரேனென் றென்னெஞ்சு நிறையப் புகுந்தான்
காரேழ் கடலேழ் மலேயே ழுலகுண்டும்
ஆரா வயிற்றனை யடங்கப் பிடித்தேனே (உ)

(ப-ரை) பேரே உறைகின்ற - (அழகான) திருப்பேரில் நித்தியவாஸம் செய்கிற, பிரான், இன்று - இப்போது, வந்து, பேரேன் - இதைவிட்டுப் பிரியேன் என்று, என் நெஞ்சு நிறைய புகுந்தான், கார் ஏழ் - ஏழு மேகங்களையும், கடல் ஏழ் - ஏழு ஸமுத்ரங்களையும், மலை ஏழ் - ஏழு பெரிய மலைகளையும், உலகு - எல்லா உலகங்களையும், உண்டும் - சாப்பிட்டும், ஆரா வயிற்றனை - நிரம்பாத வயிற்றையுடையவனை (திருப்தியடையாதவனை), அடங்க பிடித்தேன் - அவனுக்குத் திருப்தியுண்டாகும்படி பிடித்துக்கொண்டேன்.

(கருத்து) அழகான திருப்பேரில் நித்தியவாஸம் செய்கிற பிரான் என் மனதில் நிறையப்புகுந்து இதையே தனக்கு லாபமாக எண்ணிக்கொண்டு, 'இதைவிட்டுப் பிரியேன்' என்று அதிலிருக்கிறுன். ஸர்வேச்வரனை அவன் இதற்கு முன்னுல் ஏழு மேகங்களையும் ஏழு ஸமுத்திரங்களையும் ஏழுபெரிய மலைகளையும், எல்லா உலகங்களையும் பிரளய காலத்தில் தன் வயிற்றில்வைத்து

ரக்ஷித்தது முதலான வியாபாரங்களைச் செய்தபோதிலும் அவனுக்குத் திருப்தி வரவில்லை. இப்போது என்மனதில் புகுந்த பிறகுதான் குறைதீர்ந்து பரிபூர்ணனாகி இருக்கிறான். இப்படி ஆகும்படி அவனைப்பிடித்துக்கொண்டிருக்கிறேன்.

குறிப்பு—(1) 'பேரேன்' என்பதற்கு, பிராட்டி "அகலகில்லேன்" என்று எம்பெருமானுடைய திருமார்பில் இருப்பதுபோல் அவனும் 'பேரேன்' என்று ஆழ்வார் மனதிலிருக்கிறான் என்பது கருத்து.

2. 'இன்று' என்பதற்கு, தற்செயலாயுண்டான ஒரு வியாஜம் ஏற்பட்ட பிறகு என்பது பொருள்.

இ—ம். பேரேன் - தன்மையொருமை யெதிர்மறை வினைமுற்று. ஆரா - ஆராத; ஈறுகெட்ட பெயரெச்சம். (2)

---

அவ— எம்பெருமான் ஒரு வியாஜத்தைக்கொண்டு தம் மனதில் புகுந்ததனால் வருத்தமில்லாமல் தாம் வரிசையாய் அடைந்த புருஷார்த்தங்களைச் சொல்லி அநுபவிக்கிறார்:—

பிடித்தேன் பிறவி கெடுத்தேன் பிணிசாரேன்
மடித்தேன் மனைவாழ்க்கையுள் நிற்பதோர் மாயையைக்
கொடிக்கோ புரமாடங் கள்சூழ் திருப்பேரான்
அடிச்சேர் வதெனக் கெளிதா யினவாறே. (௩)

(ப-ரை) பிடித்தேன்-(எம்பெருமானைவிட்டு இனி ஒருபோதும் பிரியாதபடி திடமாகப்) பிடித்துக்கொண்டேன். பிறவி-பிறப்பதை, கெடுத்தேன்-(மறுபடியும் உண்டாகாதபடி) போக்கினேன். பிணி சாரேன் - (உடம்பிலிருப்பதாலுண்டாகும்) வியாதியை இனி அடையேன், மனை வாழ்க்கையுள் - வீட்டில் வாழ்வதில், (போகங்களையனுபவிப்பதில்), நிற்பது - நிற்பதற்குக்காரணமான, ஓர் - ஒப்பில்லாத, மாயையை - மூலப்ரக்ருதியை, மடித்தேன்-(என்னைத்தொடாதபடி) திருப்பிவிட்டேன். கொடி கோபுரம் மாடங்கள் - த்வஜங்களால் விளங்குகிற கோபுரங்களாலும் வீடுகளாலும், சூழ் - சூழப்பட்ட, திருப்பேரான் - திருப்பேரிலிருக்கிற ஸர்வேச்வரனுடைய, அடி சேர்வது - திருவடிகளை அடைவது, எனக்கு எளிதாயின ஆறு - ஸுலபமான விதம்; வ - என்ன ஆச்சரியம்,

(கருத்து) எம்பெருமானைவிட்டு இனி ஒருபோதும் பிரியாதபடி திடமாகப்பிடித்துக்கொண்டேன்; பலவிதமானஉடம்புகளில் புகுவதாகிய பிறப்பை இனியொருபோதும் அடையாதபடி போக்கினேன்; உடம்பில் இருப்பதினால் உண்டாகும் வியாதியும் அதனாலுண்டாகும் எல்லாத்துக்கங்களும் இனி என்னிடம் சேரமாட்டா. பாழும் கிணறுபோலிருக்கிற இவ்வாழ்க்கையிலிருந்து பிள்ளைபெண்டாட்டி முதலானவைகளில் மனதை வைத்து அருவருக்கத்தகுந்த விஷயங்களைப்போகமாக எண்ணிக்கொண்டு அநுபவிக்கும்படிசெய்து, அளவில்லாமல் ஜ்ஞானமாயும் ஆனந்தமாயும் இருக்கும் ஆத்மாவின் ஸ்வரூபத்தை மறைத்து, மோஹம் அடையும்படி செய்து, ஆச்சரியமான வேலைகளைச் செய்கிற மூலப்பிரகிருதியை இதுவரையில் தொடர்ந்து வந்ததுபோல் இனிமேலும் தொடராதபடி திருப்பிவிட்டேன். த்வஜங்களால் அலங்காரம் செய்யப்பட்ட கோபுரங்களாலும் வீடுகளாலும் சூழப்பட்ட திருப்பேரில் எழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரனுடைய திருவடிகளை இப்படி எளிதாகப்பெற்றேனே? இதென்ன ஆச்சரியம்!

குறிப்பு— அனிஷ்டமானவைகளை எம்பெருமான் போக்கியிருக்கையில் "பிடித்தேன், கெடுத்தேன், சாரேன், மடித்தேன்" என்று ஆழ்வார் தம்முடைய செய்கைகளாகச் சொன்னதின் கருத்து:— இப்போது எம்பெருமான் அவர் சொல்லுவதைக் கேட்டுச்செய்கிறவனாயிருக்கிறபடியால், அவர் ஏவுகிறவர்; அவன் ஏவப்பட்டவன்; ஆகையால் தாம் முக்கியமான கர்த்தா என்பது.

---

அவ— கீழ்ப்பாட்டில் அநிஷ்டங்கள் போனதைக் கண்டு ஸந்தோஷப்பட்டவர் இஷ்ட ப்ராப்தி சீக்கிரம் வரப்போகிறதை நினைத்து ஸந்தோஷப்படுகிறார்:—

எளிதா யினவாறென் றென்கண்கள் களிப்பக்
களிதா கியசிந்தைய னாய்க்களிக் கின்றேன்
கிளிதா வியசோலை கள்சூழ் திருப்பேரான்
தெளிதா கியசேண் விசும்பு தருவானே. (ச)

(ப-ரை) எளிதாயின ஆறு என்று - ஸுலபமான விதம் என்று, என் கண்கள், களிப்ப - ஸந்தோஷப்படும்படி, களிதாகிய சிந்தையனாய் - ஸந்தோஷப்பட்ட மனதையுடையவனாய்,

களிக்கின்றேன் - ஸந்தோஷப்படுகிறேன், கிளி தாவிய - கிளிகள் இங்குமங்கும் ஓடுகிற, சோலைகள் சூழ் திருப்பேரான், தெளிதாகிய - (ரஜஸ்ஸும் தமஸ்ஸுமில்லாமல் ஸத்துவம் ஒன்றே இருப்பதாலே) தெளிவையுடையதான, சேண் - தூரத்திலிருக்கிற (எல்லாவற்றுக்கும் மேலான), விசும்பு - ஆகாசத்தை (வைகுந்தத்தை), தருவான்.

(கருத்து) 'முடியானே' (3—8)இல் 'காணக்கருதும் என் கண்ணே' என்று சொன்னபடி விடாய்த்த என் கண்களுடன், 'நெடியானே என்று கிடக்குமென்னெஞ்சமே" என்றுசொன்னபடி விடாய்த்த நான் விடாய் தீர்ந்து அடையமுடியாத எம்பெருமானுடைய திருவடிகளை வருத்தமில்லாமல் அடைந்தேனே என்று ஸந்தோஷப்பட்டேன். கிளிகள் தேன்நிறைந்த புஷ்பங்களைக்கண்டு ஸந்தோஷப்பட்டு இங்கும் அங்கும் கிளைக்குக்கிளை தாவிக்கொண்டிருக்கிற சோலைகளால் சூழப்பட்ட திருப்பேரில் எழுந்தருளியிருக்கிற பரமபுருஷன், இப்படி தான் அந்த ஊரிலிருப்பதைக்காட்டினபிறகு, இந்த உலகத்தில் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் கலந்திருப்பது போலில்லாமல் ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ளதும் ஸ்வயம் பிரகாசமும், அங்கேபோகிற ஆத்மாக்களின் ஜ்ஞானத்தை அளவில்லாமல் எங்கும் பரவும்படிசெய்கிறதும் பிரம்மாவின் ஸ்தானத்துக்கு வெகு தூரத்திலிருப்பதுமான வைகுந்தத்தையும் எனக்குக்கொடுக்கப்போகிறான்.

இ—ம். களிது - களியை - ஸந்தோஷத்தை உடையது. தெளிது - தெளிவையுடையது. (4)

---

அவ—"உமக்கு வைகுந்தத்தைக்கொடுப்பதற்குஇடையூறுகள் இல்லையோ" என்கிற கேள்விக்குப்பதில் சொல்லுகிறார்:—

வானே தருவா னெனக்காயென் னோடொட்டி
ஊனேய் குரம்பை யிதனுட் புகுந்தின்று
தானே தடுமாற்ற வினைகள் தவிர்த்தான்
தேனேய் பொழிற்றென் திருப்பேர் நகரானே. (ரு)

(ப-ரை) தேன் ஏய் - தேன் பொருந்திருக்கிற, பொழில் - தோட்டங்களையுடைய, தென் - அழகான, திருப்பேர் நகரான் - திருப்பேர் நகரத்திலிருக்கிற ஸர்வேச்வரன், எனக்கு, வானை

தருவான் ஆய்-வைகுந்தத்தையே தரப்போகிறவனாய்,என்னோடு, ஒட்டி - ப்ரதிஜ்ஞை பண்ணி, ஊன் ஏய் - மாம்ஸம் பொருந்தின, குரம்பை இதனுள்-கூண்டாகிய இதில் (என் உடம்பில்), இன்று, புகுந்து, தானே தடுமாற்றம் வினைகள் - தடுமாறுவதைச் செய்கிற கர்மங்களை, தவிர்த்தான் - போக்கினான்.

(கருத்து) தேன் நிறைந்த தோட்டங்களால் சூழப்பட்டு அழகான திருப்பேரில் எழுந்தருளியிருக்கும் ஸர்வேசுவரன் மற்றலோகங்களெல்லாம் அவருக்குத்தகுந்தனவல்ல என்று எண்ணி வைகுந்தத்தையே கொடுக்கப்போகிறவனாய் இளப்பமான என் உடம்பில் புகவேண்டாம் என்று நான் தடுத்தாலும் "நான் புகாமல் இருக்கமாட்டேன்" என்று பிரதிஜ்ஞை பண்ணிக்கொண்டு வந்து மாம்ஸம் நிறைந்த கூண்டாகிய இந்த என் உடம்பில் புகுந்து எனக்கு வைகுந்தத்தைக்கொடுப்பதற்கு இடையூறுகளான தன்னைக்காண வொட்டாமல் தடுமாறும்படி செய்துகொண்டிருந்த புண்ணியம் என்றும் பாபம் என்றும் சொல்லப்பட்ட கர்மங்களைத் தானே போக்கினான், இந்த விஷயத்தில் நாம் கவலைப்படவேண்டியது ஒன்றுமில்லை.

குறிப்பு— "வானே" என்பதற்குத் திருவாய்மொழியைப் பாடுவதற்காகப் பூமியில் இதுவரையில் வைத்திருந்ததுபோல் இனிமேலும் வைக்காமலும், பரமபதத்தைப்பார்க்கும்போது இவைகள் நரகங்கள் என்று சொல்லும்படி இருக்கிற பிரம்மலோகம் வரையிலுள்ள உலகங்களைக் கொடுக்காமலும் வைகுந்தத்தையே கொடுக்கப்போகிறான் என்பது கருத்து

இ—ம். வானே - ஏகாரத்துக்குப்பிரிநிலைப் பொருள். (5)

---

அவ— போய்க்கொண்டிருக்கிற ஸிம்மம் திரும்பிப்பார்ப்பதுபோல் முதல் பாட்டில் சொன்னதையே மறுபடியும் நினைத்து ஸந்தோஷப்படுகிறார்:—

திருப்பேர் நகரான் திருமா லிருஞ்சோலைப்
பொருப்பே யுறைகின்ற பிரானின்று வந்து
இருப்பேனென் றென்னெஞ்சு நிறையப் புகுந்தான்
விருப்பேபெற் றமுத முண்டு களித்தேனே. (சு)

(ப-ரை) திருப்பேர் நகரான் - திருப்பேர் நகரத்திலிருக்கிறவனும், திருமாலிருஞ்சோலை பொருப்பே - திருமாலிருஞ்சோலை மலையில், உறைகின்ற-வஸிக்கிறவனுமான, பிரான், இன்று வந்து இருப்பேன் என்று, (யாசித்து)என் நெஞ்சு நிறைய புகுந்தான், விருப்பே பெற்று - அவனுக்கு ஆசைப்படும்படியாயிருப்பதை அடைந்து, அமுதம் உண்டு - (அவனுடைய குணங்களாகிற) அமிருதத்தை, அநுபவித்து, களித்தேன் - ஆனந்திக்கப்பெற்றேன்.

(கருத்து) தனக்கு இருப்பிடமான எல்லாவற்றைக்காட்டிலும் உயர்ந்ததாகத்திருப்பேர் என்கிற ஊரை நினைத்து அதைக் காட்டிலுமுயர்ந்ததாகத் திருமாலிருஞ்சோலை மலையை எண்ணி அதில் நித்தியவாஸம் செய்கிற பிரான் தனக்கு இருப்பிடமில்லாதவன்போல் என்னிடம்வந்து 'உம்முடைய மனதிலிருப்பேன் இடம் கொடுக்கவேண்டும்' என்று யாசித்து அதில் நிறையப் புகுந்தான். ஒருதடவை அநுபவித்த பிறகு ரஸம் குறைந்து போவதுபோலில்லாமல் மேல் மேலும் அவன் என்னை ஆசைப் படும்படியாக இருப்பதை அடைந்து அவனுடைய நல்ல குணங்களாகிய அமிருதத்தைப் பானம்பண்ணும்படியாகப் பெற்றேன். என்னே என்பாக்கியம்!

குறிப்பு— (1) சக்ரவர்த்தி திருமகன் எல்லா இடங்களைக் காட்டிலும் அயோத்தியை உயர்ந்ததாக எண்ணி அதில் அவதாரம் பண்ணி, அதைக்காட்டிலும் உயர்ந்ததாக சித்திரகூடத்தை எண்ணிக்கொண்டு அதற்கு எழுந்தருளினான். அதுபோல் இங்கேயும் திருப்பேரை அயோத்தியைப் போலவும், திருமாலிருஞ்சோலைமலையைச் சித்திரகூடம் போலவும் எம்பெருமான் எண்ணியிருக்கிறான் என்பது கருத்து.

(2) உலகத்தில் இன்பம் என்று எண்ணப்பட்டவைகள் முதலில் இன்பமாக இருந்து பின்புத் துன்பமாக முடிகின்றன. எம்பெருமானுடைய குணங்களின் அநுபவமானது அவைகளைப் போலில்லாமல் எப்போதும் இனியதாயிருக்கிறதென்பது 'அமுதம்' என்பதின் கருத்து.

(3) சக்ரவர்த்தித் திருமகன் ஜடாயுவைக் கண்டபோது "லக்ஷ்மணா நம்முடைய தகப்பனாருடைய திருவடிநிழலின் கீழே

இருக்கப்பெறவில்லை; அந்தத்துக்கம்திரும்படி அவர் தோழனை இவருடைய சிறகின்கீழே இருப்போம்" என்று சொன்னான். அதுபோல, எம்பெருமானும் "ஓ ஆழ்வாரே! உம்முடைய மன தில் இனிமேல் உள்ள நாள்களில் இருக்கவேணும்" என்று யாசித்தான் என்பது "இருப்பேன்" என்பதற்குக் கருத்து.

(4) 'நிறையப்புகுந்தான்' என்பதற்கு வெகுநாளாய்ப் பிள்ளை யில்லாதவனுக்குப் பிள்ளை உண்டானால் எவ்வளவுஸந்தோஷமுண் டாகுமோ அவ்வளவு ஸந்தோஷத்தை அடைந்து எம்பெருமான் ஆழ்வாருடைய மனதில் நிறையப் புகுந்தான் என்பது கருத்து.

---

அவ— தாம் பரிபூர்ணராகிவிட்டபடியால் ஒன்றையும் வேண்டேன் என்கிறார்:—

உண்டு களித்தேற் கும்பரென் குறைமேலைத்
தொண்டுகளித் தந்திதொழுஞ் சொல்லுப் பெற்றேன்
வண்டு களிக்கும் பொழில்சூழ் திருப்பேரான்
கண்டு களிப்பக் கண்ணுள்நின் றகலானே. (எ)

(ப - ரை) மேலை - மேற்பட்ட (மிகுந்த விருத்தியை அடைந்த), தொண்டு - கைங்கரியம் செய்வதில் ரஸமானது, உக ளித்து - உள்ளே அடங்காமல் மேலேவழிந்து, அந்தி - முடிவில், தொழும் சொல்லு - தொழுவதை (கைங்கரியம் செய்வதைச் சொல்லும்)(நம:) என்கிறசொல்லை, பெற்றேன் - அடைந்தேன், வண்டு களிக்கும் - வண்டுகள் ஸந்தோஷப்படும், பொழில் சூழ் - தோட்டங்களாலே சூழப்பட்ட, திருப்பேரான், கண்டு களிப்ப - நான் பார்த்து ஆனந்தப்படும்படி, கண்ணுள்நின்று, அகலான் - (அதைவிட்டு) போகிறதில்லை, உண்டு - (இப்படி அவனை) அநு பவித்து, களித்தேற்கு - ஆனந்தத்தை அடைந்த எனக்கு, உம் பர் - மேலே, என் குறை - என்ன குறை?

(கருத்து) எம்பெருமானுக்குக்கைங்கரியம் செய்வதில்உள்ள ரஸமானது மேல்மேல் வளர்ந்து உள் அடங்காமல் மேலே பொங்கிப்புறப்படும்படி முடிந்தமையால்,கைங்கரியம்செய்வதைச் சொல்லுகிற நம: என்கிற சொல்லைச்சொல்லப் பெற்றேன். வண்டுகள் தேனைக்குடித்து ஸந்தோஷப்படும் தோட்டங்களால்

சூழப்பட்ட திருப்பேரில் எழுந்தருளியிருக்கிறவன், நான் அவனை பார்த்து ஆனந்தத்தை அடையும்படி என் கண்களுக்கு விஷயமாயிருந்து அப்புறம் போகிறதில்லை. இப்படி அவனை அநுபவித்து ஆனந்தத்தை அடைந்த எனக்கு இதுவரையில் அடையப்படாமல் இனிமேல் அடையவேண்டியதாய் என்ன இருக்கிறது?

குறிப்பு—(1) யோகத்தில் அதிருஷ்டத்தால் மனதால் மாத்திரம் எம்பெருமானைப் பார்க்கலாம். யோகத்தை வெகுகாலம் செய்து ஸம்ஸ்காரத்தை அடைந்தால் யோகம் செய்யாத காலத்திலும் அவனை பார்க்கும்படியான சக்தி கண்ணுக்கும் உண்டாகும். ஆகையால், ஆழ்வார் அவனைக் கண்களால் பார்த்து ஸந்தோஷப்படுகிறார்.

(2) "பாட்டில் சொல்லுப் பெற்றேன்" என்று வாக்கால் அடையப்படுகிற புருஷார்த்தமும் "உண்டுகளித்தேற்கு" என்று முதலடியில் மனதினால் அடையப்படும் புருஷார்த்தமும் சொல்லப்பட்டன. மனதால் அடையப்பட்டதுதான் முக்கியமானது. அது உள்ளடங்காமல் வாசிக புருஷார்த்தமாக ஆயிற்று என்பது திருவுள்ளம்.

(3) உடம்பைவிட்டு வைகுந்தத்துக்குப்போய்ப் பரிபூர்ணமாய் எம்பெருமானை அநுபவிப்பது பரமப்ராப்யமாயிருக்க, ஆழ்வார் தமக்குக்கிடைக்கவேண்டியது வேறொன்றுமில்லை என்று சொன்னதற்குத் தமக்கு இப்போது ஒருகுறையுமில்லை என்பதில் கருத்து. (7)

---

அவ— கீழ்ப்பாட்டில் ஆழ்வார் தமக்கு அடையவேண்டியது ஒன்றுமில்லை என்று சொன்னார்; அப்படியிருந்தும் எம்பெருமான் அவரை ரக்ஷிப்பதற்காகப் பண்ணுகிற பரபரப்பை பார்த்து ஸந்தோஷப்படுகிறார்:—

கண்ணுள்நின் றகலான் கருத்தின்கட் பெரியன்
எண்ணில் நுண்பொரு ளேழிசையின் சுவைதானே
வண்ணநன் மணிமாடங் கள்சூழ் திருப்பேரான்
திண்ணமென் மனத்துப் புகுந்தான் செறிந்தின்றே.

(ப-ரை) எண்ணில் - எண்ணப்பார்த்தால், தானே, நுண்பொருள் - ஸூக்ஷ்மமான பொருளானவனும், ஏழு இசை

யின் சுவை - ஏழு ஸ்வரங்களின் ரஸமானவனும், வண்ணம் - பல விதமான வர்ணங்களையுடைய, நல் - சிலாக்கியமான, மணி - ரத்நங்களையுடைய, மாடங்கள் சூழ் - வீடுகளால் சூழப்பட்ட, திருப்பேரான் - திருப்பேரில் எழுந்தருளியிருக்கிறவனுமான பரம புருஷன், கண்ணுள் நின்று அகலான், என் மனத்து-என் மனதில், இன்று, செறிந்து - மிகுந்த விருத்தியையடைந்து, புகுந்தான், கருத்தின் கண் - நினைவுகளிலே (என்னை ரக்ஷிக்கச்செய்யும் ஸங்கல்பங்களில்), பெரியன் - அதிகமானவன்.

(கருத்து) வாக்காலும் மனதாலும் எட்ட முடியாதவனும் ஏழு ஸ்வரங்களும் சேர்ந்து இருப்பதுபோல் மிகவும் இனியவனும் பலவர்ணமுள்ள சிலாக்கியமான ரத்னங்களையுடைய வீடுகளால் சூழப்பட்ட திருப்பேரில் எழுந்தருளியிருக்கிறவனுமான பரம புருஷன் என் கண்களுக்கு விஷயமாயிருந்து ஒரு க்ஷணமும் அப்புறம்போகிறதில்லை. தன்னாலும் என்னைவிடுவது முடியாதபடி என் மனதில் புகுந்து மிகுந்த அழகையும் சாதுர்யத்தையும் அடைந்திருக்கிறான். இப்படி என் விஷயத்தில் எவ்வளவோ ஏற்கனவே செய்திருந்தாலும் என்னை ரக்ஷிப்பதற்காக இப்போது என்ன பரபரப்பு உள்ளவனாயிருக்கிறான். அவனுக்கு என்னிடத்தில் எவ்வளவு ஆசை!

குறிப்பு— (1) 'வாயைத் திறந்துகொண்டு தூங்குகிறான்' என்று சொல்லும்போது முதலில் வாயைத் திறந்துகொண்டு பிறகு தூங்குகிறான் என்பது பொருளன்று. இரண்டு வியாபாரங்களும் சேர்ந்தே நடக்கின்றன என்பதே பொருள். அப்படியே, இங்கு "செறிந்து புகுந்தான்" என்கிறவிடத்திலும் செறிந்ததும் புகுந்ததும் சேர்ந்தே உண்டானவைகள் என்பது கருத்து. (8)

---

அவ— தம்மிடத்தில் இவ்வளவு ஆசையைக் காண்பிக்கிற எம்பெருமான் இதுவரையில் தம்மை உபேக்ஷித்து எப்படித் தரித்திருந்தான் என்று ஆச்சரியப்படுகிறார்—

இன்றென்னைப் பொருளாக்கித் தன்னையென் னுள்வைத்தான்
அன்றென்னைப் புறம்போகப் புணர்த்ததென் செய்வான்
குன்றென்னத் திகழ்மாடங் கள்சூழ் திருப்பேரான்
ஒன்றெனக் கருள்செய்ய வுணர்த்தலுற் றேனே. (௯)

(ப-ரை) குன்று என்ன - மலைகள் என்று சொல்லும்படி, திகழ் - விளங்குகிற, மாடங்கள் சூழ் திருப்பேரான், இன்று-இப்போது, என்னை,பொருளாக்கி-ஒரு வஸ்துவாகச்செய்து, தன்னை, என்னுள் வைத்தான், அன்று - முன்புள்ள அநாதிகாலம் எல்லாம், என்னை, புறம்போக - (தன்னை விட்டு) வேறு விஷயங்களில் போகும்படி,புணர்த்தது-பிரகிருதியோடு சேர்த்துவைத்தது,என் செய்வான் - எதைச் செய்வதற்காக? எனக்கு, ஒன்று அருள் செய்ய - ஒரு பதிலை அருளிச்செய்ய, உணர்த்தல் உற்றேன் - விஜ்ஞாபனம் பண்ணுவதை அடைந்தேன்.

(கருத்து) மலைகள்போல் உயர்ந்திருக்கிற வீடுகளால் சூழப்பட்ட திருப்பேரில் எழுந்தருளியிருக்கிற பரம புருஷன், திருமாலிருஞ் சோலைமலை என்கிற சொல்லை நான் சொன்னதின் பிறகு, தன்னுடைய ஜ்ஞானமில்லாமல் ஸம்ஸாரத்தில் விழுந்து அசேதனத்தைப்போலிருந்த எனக்குத் தன் விஷயமான ஜ்ஞானத்தைக்கொடுத்து, என்னை ஒரு வஸ்துவாகப் பண்ணி, நான் யோகிகள் ப்ரயத்னப்பட்டுச் செய்யும் ப்ரத்யாஹாரம் தாரணை முதலான யோகாங்கங்களைச் செய்யாமலே, தன்னை இடைவிடாமல் தியானம் பண்ணும்படி செய்திருக்கிறான். இதற்கு நான் சொன்ன சொல்லைத்தவிர வேறு காரணம் என்ன? இந்தச்சொல்லைச் சொல்லுவதற்கு முன்னமே அநாதிகாலத்தில் அவனை அறியாமல், பிராகிருத விஷயங்களில் அலைந்துகொண்டிருக்கும்படி பிரகிருதியுடன் என்னைச் சேர்த்து வைத்திருந்தானே? அது எதைச் செய்வதற்காக? இந்த இரண்டு விஷயங்களிலும் காரணங்களை இன்னவைகள் என்று பதில் சொல்லும்படி அவனிடம் விஜ்ஞாபனம் செய்ய ஆரம்பிக்கிறேன். முன் சொன்னதற்குக் காரணம் அவனுடைய கருணை தவிர பிரதான காரணம் வேறு உண்டோ ? பின் சொன்னதற்கு அவன் ஸ்வாதந்திரியம் தவிர வேறு காரணமுண்டோ ? இருந்தால் அவன் சொல்லட்டும். எல்லாம் தெரிந்த அவனாலும் சொல்லமுடியாது.

குறிப்பு—(1) "பொருளாக்கி" என்பதற்கு, எம்பெருமான் விஷயமான ஜ்ஞானமுள்ளவனை இருக்கிறவன் என்றும், அது இல்லாதவனை இல்லாதவன் என்றும் வேதம் சொல்லுகிறது. அதை நினைத்துத்தன்னுடைய அறிவைஎம்பெருமான்கொடுத்து

படியாலே தாம் ஒரு பொருளாக ஆனதாக ஆழ்வார் எண்ணு கிறார் என்பது கருத்து.

(2) பாட்டில், பிரதான காரணம் என்ன என்று சொல்லா விட்டாலும் இந்தத் திருவாய்மொழியின் முதல் பாட்டில் 'திருமாலிருஞ்சோலைமலை' என்று தாம் சொன்னதாக ஆழ்வார் சொன்னபடியால் அதைத்தவிர வேறு காரணம் உண்டோ என்று கேள்விக்குப் பொருள்கொள்ளவேணும். அந்தச் சொல் ஒரு வியாஜமாத்திரம்; பிரதானகாரணமன்று.

(3) முன்னாலே ஆழ்வார் ஸம்ஸாரத்திலிருந்ததற்கு அவர் செய்த கர்மங்களும் பிரதான காரணமன்று. அவைகளுக்கு அறிவில்லை. அவைகளும் நேராகப்பலன்களைக்கொடுக்கவில்லை. எல்லாவற்றிற்கும் பொதுவான காரணமாயிருக்கும் எம்பெருமானை அவைகளைப்பார்த்து, அவைகளுக்குத் தக்கபடி பலன் கொடுக்கிறான். ஆகையால், அவனுடைய ஸ்வாதந்திரியமே பிரதானகாரணம்; அதைத்தவிர வேறுகாரணம் உண்டோ? என்பது கேள்விக்குப் பொருள்.

(4) "புகுந்தான்" என்று சொல்லாமல் 'வைத்தான்' என்று சொன்னதின் கருத்து- ஒரு பெரிய நிதியைக் தகுந்த இடம் பார்த்து வைப்பதுபோல என் நெஞ்சைத் தனக்கு க்ஷேமத்தைச் செய்புமிடமாக எண்ணிக்கொண்டு, தன்னை அதில் வைத்தான் என்பது.

(5) இதற்கு வேறுவிதமாயும் பொருள் கொள்ளலாம்-ஒரு க்ஷணமும் என்னைவிட்டுப்பிரிந்து தரித்திருக்கமாட்டாதபடி என்னிடத்தில் பிராணனை வைத்திருக்கிற நீ உன்னைவிட்டு நான் வெளியே போனகாலமெல்லாம் எப்படிப் பிராணனைத் தரித்திருந்தாய் - என்று. முன்யோஜனையில் "என் செய்வான்" என்பதற்கு என்ன செய்ய என்று பொருளாயிருக்க, அதற்கு என்ன காரணம் என்று பொருள் கொள்ளவேண்டியதாயிருந்தது. அந்த அர்த்தம் லகுவாய்க் கிடைக்காது. இரண்டாவது யோஜனையில் அந்த வருத்தமில்லை. அதில் 'என் செய்வான்' என்பதற்கு, எப்படி ஆத்மதாரணம் பண்ணக்கடவனாய் என்பது அர்த்தம்.

இ—ம். செய்வான் - செய்ய; வினையெச்சம் (9)

அவ— வேறு காரணத்தைப் பார்க்கமுடியாமையால் எம்பெருமான் "நீர் சொன்னபடியே என் ஸ்வாதந்த்ரியமும் கருணையுமே முக்கியமான காரணங்கள்; அந்தவிஷயம் நிற்க, உமக்கு இனிவேண்டுவது என்ன?" என்று கேட்டதாக நினைத்து ஆழ்வார் பதில் சொல்லுகிறார்:—

உற்றே னுகந்து பணிசெய் துனபாதம்
பெற்றேனீ தேயின்னம் வேண்டுவ தெந்தாய்
கற்றார் மறைவாணர் கள்வாழ் திருப்பேராற்கு
அற்று ரடியார் தமக்கல்லல் நில்லாவே (ம)

(ப-ரை) உற்றேன் - (உன் திருவடிகளை) அநுபவிக்கப்பெற்றேன், உகந்து - பிரீதியுடன், பணிசெய்து - (திருவாய்மொழி பாடுவதாகிய) கைங்கரியத்தைச் செய்து, உன பாதம் - உன்னுடைய திருவடிகளை,பெற்றேன், எந்தாய்-என்ஸ்வாமியே! ஈதே - இதுவே(உன் திருவடிகளை அநுபவிப்பதே). இன்னம்-வரப்போகிற எல்லாக் காலத்திலும், வேண்டுவது, (நீர் சொன்னபடியே செய்கிறேன் என்று எம்பெருமான் தெரிவிக்க, ஸந்தோஷப்பட்டு அவனுடைய நல்லகுணங்களைத்தாமே தமக்குள்ளே அநுபவிக்கிறார்) கற்றார் - கற்றவர்களான, மறைவாணர்கள் - வேதத்தை நிர்வாஹம் செய்கிறவர்கள், வாழ் - வாழுகிற, திருப்பேராற்கு, அற்றார் - உண்மையான தீர்மானமுள்ளவர்களான, அடியார் தமக்கு - ஆச்ரிதர்களுக்கு, அல்லல் - துக்கங்கள், நில்லாவே - நிற்கமாட்டாவே.

(கருத்து) ஸ்வாமியே! உன்னுடைய திருவடிகளை அநுபவிக்கப்பெற்றேன். திருவாய்மொழிபாடுவதாகியகைங்கரியத்தைச் செய்து பிரீதியுடன் உன் திருவடிகளை அநுபவிக்கப்பெற்றேன்; இப்படி உன் திருவடிகளை அநுபவிப்பதே வரப்போகிற காலமெல்லாம் நான் வேண்டுவது. "இப்படியே செய்கிறேன்" என்று எம்பெருமான் தெரிவிக்க, ஆழ்வார் பிரீதியையடைந்து அவனுடைய நல்ல குணங்களைத் தாமே தமக்குள்ளே அநுபவிக்கிறார்.) ஆசாரியரிடத்தில் வேதத்தைப் படித்து அதின் அர்த்தங்களைத் தெரிந்து, வேதத்தை ஒப்புக்கொள்ளாதவர்களும் அதை ஒப்புக்கொண்டு அதற்குக் கோணலாய் அர்த்தம் சொல்லுகிறவர்களும் சொல்லும் கெட்ட யுக்திகளால் அதற்குக் கலக்கம் வராதபடி

*செய்கிறவர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் அவனுடைய குணங்களை அநுபவித்துக்கொண்டு வாழுகிற திருப்பேரில் எழுந்தருளியிருக்கும் பரமபுருஷனுக்கே தாங்கள் சேஷம் என்றும், தாங்கள் அவனுடைய ஸொத்து என்றும் நிச்சயமுள்ள ஆச்ரிதர்களுக்கு அவனைப்பிரிந்து துக்கப்படுவது ஒருகாலுமுண்டாகாது. இதில் ஸந்தேஹமில்லை.*

*குறிப்பு— 'உற்றேன்' என்பதை மறுபடியும் 'பெற்றேன்' என்று சொன்னது. திருவடிகளின் அநுபவத்தில் ஆழ்வாருக்கு இருந்த ப்ரீதியைக் காட்டுவதற்காக.* (10)

---

நில்லா வல்லல் நீள்வயல்சூழ் திருப்பேர்மேல்
நல்லார் பலர்வாழ் குருகூர்ச் சடகோபன்
சொல்லார் தமிழா யிரத்துள் ளிப்பத்தும்
வல்லார் தொண்டராள் வதுசூழ் பொன்விசும்பே. (கக)

*(ப-ரை) அல்லல் - துக்கங்கள், நில்லா - நிற்கமாட்டா, நீள் வயல் - நீண்ட வயல்களாலே, சூழ், திருப்பேர் மேல், நல்லார்- நல்ல குணங்கள் நிறைந்த ஸ்ரீவைஷ்ணவர்கள், பலர்வாழ், குருகூர் சடகோபன், சொல் - சொன்னவைகளான, ஆர் - (ரஸம்) நிறைந்த, தமிழ் ஆயிரத்துள் இ பத்தும், வல்லார் - படிக்கச் சக்தியுள்ளவர்களான, தொண்டர்-பாகவதர்கள், ஆள்வது, சூழ்-எங்கும் நிறைந்த, பொன் - பிரகாசிக்கிற, விசும்பு-ஆகாசம் (வைகுந்தம்)*

*(கருத்து) எம்பெருமானுடைய திருவடிகளை ஆச்ரயித்தவர்களுக்கு அவனைப்பிரிந்து படும்துக்கம் ஒரு க்ஷணமும் நிற்கமாட்டாது என்கிற இதைச்சொல்லிப்பல நல்லார்வாழுகிற திருக்குருகூரில் எழுந்தருளியிருந்த சடகோபன் நீண்டவயல்களால் சூழப்பட்டதிருப்பேர் எம்பெருமானைக் குறித்து அருளிச்செய்த இந்தப்பத்துப்பாட்டுக்களையும்படிக்கச்சக்தியுள்ளபாகவதர்கள் இட்ட வழக்காகும் எங்கும் நிறைந்து பிரகாசிக்கிற வைகுந்தமென்கிற உலகம். அவர்கள் இந்தப்பிரகிருதி மண்டலத்தைத் திருணமாக எண்ணிப்பரமபதத்தை ஆளும்படி எம்பெருமானுக்கு அந்தரங்கர்களாய் ஸ்வதந்திரர்களாக இருப்பார்கள்.*

இ—ம். விசும்பே என்கிற விடத்தில் ஏகாரத்துக்குத் தேற்றப்பொருளும் பிரிநிலைப்பொருளும். (11)

---

லக்ஷ்மீகாந்தத்வயோகாதவிபதி ஸஹிதயா திவ்யதேசஸ்தித்யா
மோக்ஷாபேக்ஷாத்ஸமாதௌ க்ருதஸமயதயா ஸம்ஸ்ருத
ஸர்வதாநாத் । த்ருஷ்ட்யந்தஸ்ஸந்நிவாஸாத் அதிமிதரஸத: ஸ்வஸ்வ
பாவப்ரகாசாத் ஸ்வாமித்வாத் ஷஷ்டிகீயம் ஸ்வயமுபநயதி:
ஸ்ரீபதிர்வத்ஸமாயி ॥ ॥௧௧௧॥

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் சேதனர்களுக்கு ஒரு காரணமுமில்லாமல் தானே தன் கிருபையாலே வேண்டியதைச் செய்து ஸந்தோஷப்படுகிறான் என்பது பத்துக்காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன:— (1) பிராட்டிக்கு நாயகனாயிருப்பது, (2) ஆபத்தில் துணையாக இருப்பது, (3) திருப்பேர் என்கிற திவ்யதேசத்தில் எழுந்தருளியிருப்பது, (4) மோக்ஷம்கொடுப்பதற்கு யத்நம் செய்வது, (5) அதற்காகத் தான் பிரதிஜ்ஞை பண்ணுவது, (6) திருப்பேர், திருமாலிருஞ்சோலை, ஆச்ரிதர்களின் மனது இவைகள் எல்லாவற்றிலும் கிட்ட இருப்பது, (7) ஆச்ரிதர்களின் கண்ணுக்குள் இருப்பது, (8) தன்னையே அளவில்லாமல் அநுபவிக்கும்படி கொடுப்பது, (9) தன்னுடைய ஸ்வபாவத்தை அறியும்படி செய்தது, (10) எல்லாருக்கும் ஸ்வாமியாயிருப்பது. (111)

---

## ஒன்பதாம் திருவாய்மொழி.

அ—— ஆழ்வாருக்குப் பலமான ஆவல் உண்டாவதற்காக அர்ச்சிராதி மார்க்கத்தாலே வைகுந்தத்துக்குப் போவதையும் அதில் போகிறவனுக்கு நடக்கும் உபசாரங்களையும் எம்பெருமான் அவருக்குக் காட்ட, அவற்றை ஆழ்வார் பார்த்து, இந்தத் திருவாய்மொழியில் பேசுகிறார்.

(2) சொல்லப்போகிற விஷயங்கள், தமக்கு மாத்திரம் இல்லாமல் முக்தர்களாகப் போகும் எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் உள்ளவைகளாகையால், தாம் அந்த மார்க்கமாய்ப் போவதாயும், தம்மை அங்கிருக்கிறவர்கள் கொண்டாடுவதாயும் சொல்லாமல் 'கேசவன்தமர்' என்று பொதுவாய்ச்சொல்லுகிறார்.

(3) வரப்போகிறவைகளை நடைந்தவைகளாக இந்தத் திருவாய்மொழிப் பாட்டுக்களில் சொல்லுவதற்குக் காரணம்-ஆழ்வார் அவைகளை மிகவும் தெளிவாய்ப் பார்த்து, வேறொன்றின் கலப்பில்லாமல் ஒன்றின்பின் ஒன்று வருவதைக்கண்டு, அவைகளை வந்துவிட்டதாகவே எண்ணினது.

(கலிவிருத்தம்)

சூழ்விசும் பணிமுகில் தூரியம் முழக்கின
ஆழ்கட லலைதிரை கையெடுத் தாடின
ஏழ்பொழி லும்வள மேந்திய வென்னப்பன்
வாழ்புகழ் நாரணன் தமரைக்கண் டுகந்தே. (க)

(ப-ரை) என் அப்பன் - எனக்குப் பரம பந்துவும், வாழ்புகழ் - (ஆச்ரிதர்களை) வாழும்படி செய்யும் குணங்களையுடையவனுமான, நாரணன் - நாராயணனுக்கே, தமரை - தாஸர்களாயிருக்கிறவர்களை, கண்டு, உகந்து - (மிகவும்) ஸந்தோஷப்பட்டு, சூழ் விசும்பு அணி - எங்கும் நிறைந்த ஆகாசத்துக்கு அலங்காரமான, முகில் - மேகங்கள், தூரியம் - வாத்யத்தை, முழக்கின, ஆழ் - ஆழமான, கடல்-ஸமுத்ரங்கள், அலை திரை - அலைந்துகொண்டிருக்கிற அலைகளாகிற, கை எடுத்து - கைகளைத் தூக்கிக்கொண்டு, ஆடின, ஏழ் பொழிலும் - ஏழு தீவுகளும், வளம் - ஸம்பத்தை (உபஹாரமான நல்ல வஸ்துக்களை), ஏந்திய - ஏந்திக்கொண்டு நின்றன.

(கருத்து) எனக்கு ஸ்வாமியும், ஆச்ரிதர்கள் ஆனந்தம் அடையும்படி செய்கிற நல்ல குணங்களையுடையவனுமான நாராயணனுக்கே தாஸர்களாயிருக்கிறவர்கள் வைகுந்தத்துக்குப் போக ஆரம்பிக்கும்போது, எங்கும் நிறைந்த ஆகாயத்துக்கு அலங்காரமான மேகங்கள் மங்கள வாத்யத்தை முழக்கின; ஆழமான ஸமுத்ரங்கள் மேலே கிளம்பி அலைகளாகிய கைகளை மேலே தூக்கிக்கொண்டு நர்த்தனம் பண்ணின; ஏழு தீவுகளில் இருக்கிறவர்களும் உபஹாரமாக நல்ல வஸ்துக்களைக் கையில் ஏந்திக்கொண்டு நின்றார்கள்; "இப்படி நாம் செய்யாவிட்டால் எம்பெருமான் நம்மைத் தண்டிப்பன்" என்று எண்ணி இதைச்செய்ததன்று; இப்படி ஒருவன் வைகுந்தத்துக்குப் போகும்படி நேர்ந்ததே என்று ஸந்தோஷப்பட்டு செய்தது.

குறிப்பு— (1) ராஜகுமாரன் வெளியே புறப்பட்டுப் போனால் ராஜாவைச் சேர்ந்தவர்கள் பிரீதி பண்ணுவதுபோல் எம்பெருமானுக்கு வேண்டியவர் அவனிடம் போகும்போது அவனைச் சேர்ந்தவர்கள் பிரீதி பண்ணுவது தகுந்ததுதானே.

இ—ம். ஏந்திய - பலவின்பால் இறந்தகால வினைமுற்று; இன் என்கிற இடைநிலையில் னகரம் கெட்டது. (1)

---

அவ— கீழ்ப்பாட்டில் பூமியிலுள்ளவைகளின் கொண்டாட்டம் சொல்லப்பட்டது. அந்தரிக்ஷலோகத்தில் உள்ளவைகளின் கொண்டாட்டம் சொல்லப்படுகிறது.

நாரணன் தமரைக்கண் டுகந்துநன் னீர்முகில்
பூரண பொற்குடம் பூரித்த துயர்விண்ணில்
நீரணி கடல்கள்நின் றார்த்தன நெடுவரைத்
தோரணம் நிரைத்தெங்குந் தொழுதன ருலகே (௨)

(ப-ரை) நாரணன் தமரை கண்டு, நல் - நல்ல, நீர்முகில் - நீருண்ட மேகம், உகந்து-(மிகவும்) ஸந்தோஷப்பட்டு, உயர்-உயர்ந்த (மேகங்கள் ஸஞ்சரிக்கிற இடத்திற்கு மேல் இருக்கிற), விண்ணில் - ஆகாசத்தில், பூரண பொன் குடம் - ஜலம் நிறைந்த பொன்னால் செய்யப்பட்ட குடத்தை, பூரித்தது-நிறைப்பித்தது, நீர் அணி - ஜலத்தால் அலங்கரிக்கப்பட்ட, கடல்கள் - ஸமுத்ரங்

கள், நின்று - இடைவிடாமல், ஆர்த்தன . கோஷித்தன, உலகு - உலகங்கள் (அவைகளில் முக்கியரான தேவர்கள்), நெடு வரை தோரணம்-உயர்ந்த மலைபோலிருக்கிற தோரணங்களை, நிரைத்து- வரிசை வரிசையாகக் கட்டி, எங்கும், தொழுதனர் - நமஸ்காரம் பண்ணினார்கள்.

(கருத்து) வைகுந்தத்துக்குப் போகும் கேசவன் தமரைக் கண்டு அழகான நிருண்ட மேகங்கள் ஸந்தோஷப்பட்டுத்தாங்கள் ஸஞ்சரிக்கிற இடத்துக்கு மேலே ஆகாசத்தில் பொன் குடங்களைப் பூரித்தன. ஸந்தோஷத்தாலே கிளம்புகிற அலைகளாலே அலங்காரம் செய்யப்பட்ட ஸமுத்ரங்கள் கோஷித்தன. உயர்ந்த மலைகள்போலிருக்கும் தோரணங்களைத் தேவர்கள் வரிசை வரிசையாகக்கட்டி, எங்கும் நமஸ்காரம் செய்தார்கள். (2)

---

அவ— இதில் *ஆதிவாஹிகர்களின் உலகங்களிலுள்ளவர்கள் செய்யும் உபசாரங்கள் சொல்லப்படுகின்றன :—

தொழுதன ருலகர்கள் தூபநன் மலர்மழை
பொழிவனர் பூமியன் றளந்தவன் தமர்முன்னே
எழுமினென் றிருமருங் கிசைத்தனர் முனிவர்கள்
வழியிது வைகுந்தற் கென்றுவந் தேதிரே. (௩)

(ப-ரை) உலகர்கள்-(ஆதிவாஹிகர்களின்) உலகத்திலிருக்கிற ஜனங்கள், தொழுதனர் - கைகூப்பினார்கள், அன்று - முன் காலத்தில், பூமி - பூமியை, அளந்தவன் - (திரிவிக்ரமனாய்) அளந்தவனுடைய, தமர் முன்னே, தூப நல்மலர் மழை - தூபத்தையும் நல்ல புஷ்பங்களின் வர்ஷத்தையும், பொழிவனர் - வர்ஷிக்கிறவர்களாய், வைகுந்தற்கு - வைகுந்தத்தையுடையவனுக்கு, இது வழி என்று, (எண்ணிக்கொண்டு) எதிரே வந்து, முனிவர்கள் - தியானம்பண்ணிக்கொண்டிருக்கிற ருஷிகள், எழுமின் என்று - இப்படி வரவேணும் என்று, இரு மருங்கு - இரண்டு பக்கங்களிலும், இசைத்தனர் - பாடினார்கள்.

---

* ஆதிவாஹிகர்கள் - வைகுந்தம் போகிறவனை அழைத்துக்கொண்டு போகிறவர்கள்.

(கருத்து) முன் காலத்தில் பூமியை அளந்த எம்பெருமானைச் சேர்ந்தவர்கள் முன்னாலே வந்து ஆதிவாஹிகர்களுடைய உலகத்திலிருக்கிற ஜனங்கள் கைகூப்பினார்கள். தியானம் பண்ணிக்கொண்டிருக்கிற ருஷிகளும் வைகுந்தத்துக்குப் போகும் வழி இது என்று தங்களுக்குள்ளே நிச்சயம் பண்ணிக்கொண்டு "இப்படி எழுந்தருளவேணும்" என்று சொல்லி இரண்டு பக்கங்களிலும் நின்றுகொண்டு தூபத்தை ஸமர்ப்பித்து நல்ல புஷ்பங்களை மழைபோல் வர்ஷித்து, தங்களுடைய மௌன விரதத்தை விட்டு மதுரமான பேச்சுக்களைப் பேசினார்கள்.

குறிப்பு— 'வைகுந்தத்திற்கு' என்பதற்குக் கருத்து— குசலவர்கள் காட்டில் பிறந்து வளர்ந்தபோதிலும் சக்ரவர்த்தித் திருமகனுடன் தங்களுக்கு உண்டான உறவை அறிந்த பிறகு, அவர்களுக்கு முன் இருந்த காடு பரஸ்தலமாயும், திருவயோத்தி ஸ்வதேசமாயும் தோன்றின. அதுபோல, முக்தியையடையப்போகிறவர்களுக்கு அநாதியாக இருப்பிடமாக இருந்த பிரகிருதி மண்டலம் பயங்கரமான காடாய், வைகுந்தமே ஸ்வதேசமாய் ஆயிற்று-என்பது. பிரகிருதி மண்டலம் காடுபோல்; வைகுந்தம் அயோத்திபோல்; எம்பெருமான் சக்ரவர்த்தித் திருமகன்போல்; முக்தியையடையப்போகிறவர்கள் குசலவர்கள் போல.

(3)

---

அவ— இதில் ஆதிவாஹிகர்களை செய்யும் உபசாரங்கள் சொல்லப்படுகின்றன:—

எதிரேதி ரிமையவ ரிருப்பிடம் வகுத்தனர்
கதிரவ ரவரவர் கைந்நிரை காட்டினர்
அதிர்குரல் முரசங்க ளலைகடல் முழக்கொத்த
மதுவிரி துழாய்முடி மாதவன் தமர்க்கே. (௪)

(ப-ரை) மது விரி துழாய் முடி - தேன் மேல் மேல் அதிகமாகிற, துளஸியைத் திருமுடியில் உடையவனை, மாதவன் - லக்ஷ்மீபதியினுடைய, தமர்க்கு, இமையவர் - தேவர்கள், எதிர் எதிர் - இவர்கள் போகும் வழிக்கு முன்னே முன்னே, இருப்பிடம் - இருப்பிடங்களை, வகுத்தனர்-அமைத்தார்கள், கதிரவர் அவர் அவர் - கிரணங்களையுடையவர்கள் (அக்னி, ஸூரியன்,

சந்திரன், மின்னல்), கை நிரை காட்டினர் - கைகளை வரிசை வரிசையாகக் காட்டினார்கள். அதிர் குரல் - அதிர்கிற (கம்பீரமான) குரலையுடைய, முரசங்கள் - முரசு என்கிற வாத்யங்கள், அலை கடல் முழக்கு ஒத்த - அலைகிற ஸமுத்திரத்தின் முழக்கத்தை ஒத்தன.

(கருத்து) மதுவிரிதுழாய் முடிமாதவன் தமர்கள் முன்னாலே எதிரே வந்து, அவர்கள் இங்கே ஒருவேளை இருக்கலாம் என்கிற ஆசையாலே தேவர்கள் இருப்பிடங்களைத் தனித்தனியே அமைத்தார்கள். கிரணங்களையுடைய அக்கினி சூரியன் சந்திரன் மின்னல் முதலான ஆதிவாஹிகர்கள் "இந்த வழி வரவேணும் இந்த வழி வரவேணும்" என்று சொல்லிக் கைகளை வரிசை வரிசையாக நீட்டினார்கள். கம்பீரமான குரலையுடைய முரசங்கள் அலைகிற ஸமுத்ரத்தின் கோஷங்கள்போல் கோஷித்தன.

குறிப்பு — (1) "இமையவர்" என்கிற சொல்லுக்கு கண்கொட்டாதவர் என்பது பொருள். இங்கு அவர்களுக்கு இயற்கையாயுள்ளதைச் சொல்லவந்ததன்று; பிரீதியினால் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்து உபசாரம் செய்தார்கள் என்பது கருத்து.

(2) "மதுவிரி துழாய் முடிமாதவன்" என்பதற்கு, வைகுந்தத்திற்கு வருகிறவர்களை எதிர்கொண்டு அழைப்பதற்காக எம்பெருமான் துளஸிமாலையால் தன்னை அலங்காரம் செய்து கொண்டு பிராட்டியுடன் காத்துக்கொண்டிருக்கிறான் என்பது கருத்து.

இ—ம் இமையவர் - இமைபார் என்கிற வினையாலணையும் பெயர் 'இமையவர்' எனத்திரிந்தது. (4)

---

அவ— மின்னலுக்கு மேல் வருகிற வருணன் இந்திரன், பிரஜாபதி என்கிற ஆதிவாஹிகர்கள் செய்யும் உபசாரங்கள் சொல்லப்படுகின்றன:—

மாதவன் றமரேன்று வாசலில் வானவர்
போதுமீ னெமதிடம் புகுதுக வென்றலும்
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்
வேதநல் வாயவர் வேள்வியுண் மடுத்தே. (௫)

(ப-ரை) வாசலில் - வழியில், வானவர் - தேவர்கள், மாதவன் தமர் என்று, போதுமின் - இங்கே எழுந்தருளவேணும், எமது - எங்களுடைய, இடம் - இடத்தை, புகுதுக - தேவரீர் புகுங்கள், என்றலும் - என்று சொல்லும்போது, வேதநல்வாயர் - வேதத்தைச் சொல்லுவதாலே பரிசுத்தமான வாயையுடையவர்கள், வேள்வி - யாகங்களை, உள் மடுத்து - மனதுடனே ஸமர்ப்பித்து, கின்னரர், கருடர்கள், கீதங்கள் பாடினர் - பாட்டுக்களைப் பாடினார்கள்.

(கருத்து) வைகுந்தம் போகிற வழியில் வருணன் இந்திரன் ப்ரஜாபதி என்கிற ஆதிவாஹிகர்கள் இவர் மாதவன் தமர் என்று பிரீதியுடன் தங்கள் இடங்களையும் ஐசுவரியங்களையும் பெற்றுக் கொள்ளவேணும் என்று ஸமர்ப்பித்தார்கள். வேதத்தைச் சொல்லிக்கொண்டிருப்பதால் பரிசுத்தமான வாயையுடையவர்களாய் ஸ்வர்க்கம் முதலான மேல் உலகங்களிலிருப்பவர்கள் தாங்கள் பலன்களுக்காகச் செய்தயாகங்களால் அடையப்போகிற ஐசுவரியத்தை நீங்கள் பெற்றுக் கொள்ளவேண்டும் என்று மனதுடன் ஸமர்ப்பித்தார்கள். இப்படி இவர்கள் செய்யும்போது கின்னரர்களும் கருடர்களும் கானம் பண்ணினார்கள்.

குறிப்பு— வைகுந்தத்திற்குப் போகிறவர்கள் ஒன்றையும் வேண்டாதவர்களாய் இருந்தபோதிலும் தேவர்களும் மற்றவர்களும் தங்கள் பிரீதியினால் ஸமர்ப்பித்தார்கள் என்பது கருத்து.

---

அவ— ஆதிவாஹிகர்களுடைய ஸ்திரீகளும் உபசாரம் செய்தார்கள் என்று சொல்லுகிறார்:—

வேள்வியுண் மடுத்தலும் விரைகமழ் நறும்புகை
காளங்கள் வலம்புரி கலந்தெங்கு மிசைத்தனர்
ஆள்மின்கள் வானக மாழியான் றமரென்று
வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே. (க)

(ப-ரை) வேள்வி உள் மடுத்தலும் - யாகங்களின் பலன்களை (அவர்கள்) மனதுடன் ஸமர்ப்பிக்கும்போது, விரை கமழ் - வாஸனை வீசுகிற, நறு - வாஸனையுள்ள, புகை - தூபங்களை, (வேறே சிலர் ஸமர்ப்பித்தார்கள்); காளங்கள் - காஹளங்களையும், வலம்புரி - வலம்புரி சங்கங்களையும், கலந்து, எங்கும் - எல்லா

இடங்களிலும், இசைத்தனர் - (சிலர்) ஊதினார்கள், வாள் ஒள் கண்-காந்தியுள்ள அழகான கண்களையுடைய, மடந்தையர் - ஸ்திரீகள், மகிழ்ந்து, ஆழியான் தமர் - சக்ராயுதமுள்ளவனுடைய தமராகிய நீங்கள், வான் அகம் - வைகுந்தமாகிய வீட்டை,ஆள்மின்கள் - ஆளுங்கள் என்று, வாழ்த்தினர் - ஆசீர்வாதம் பண்ணினார்கள்.

(கருத்து) கீழ்ப்பாட்டில் சொன்னவர்கள் தாங்கள் செய்த யாகங்களின் பலன்களை ஸமர்ப்பிக்கும்போது வேறு சிலர் நல்ல வாஸனையுள்ள தூபங்களை ஸமர்ப்பித்தார்கள். மற்றவர்கள் எல்லா விடங்களிலும் காஹளங்களையும் சங்கங்களையும் ஊதினார்கள். காந்தியுள்ள அழகிய கண்களையுடைய ஆதிவாஹிகர்களுடைய ஸ்திரீகளும் வெகு காலம் தேசாந்தரம் போயிருந்து திரும்பி வந்த பிள்ளையைக்கண்ட தாயைப்போல் ஸந்தோஷப்பட்டு, வேறு உயர்ந்த மங்களமில்லாமையாலே "திருவாழியான் தமர்களே! வைகுந்தத்தை வீடுபோல் ஆளுங்கள்" என்று ஆசீர்வாதம் பண்ணினார்கள்.

இ—ம். தமர் - படர்க்கைச்சொல்; விளிவேற்றுமையாகையால் முன்னிலைப்பொருளில் வந்தது. (6)

---

அவ— மருத்துக்களும் வஸுக்களும் தொடர்ந்து வந்து ஸ்தோத்திரம் பண்ணினார்கள் என்று சொல்லுகிறார்:—

மடந்தையர் வாழ்த்தலும் மருதரும் வசுக்களும்
தொடர்ந்தெங்குந் தோத்திரஞ் சொல்லினர் தொடுகடல்
கிடந்த வெங்கேசவன் கிளரொளி மணிமுடி
குடந்தையெங் கோவலன் குடியடி யார்க்கே. (எ)

(ப-ரை) தொடு கடல் - தோண்டப்பட்ட (ஆகையால் ஆழமான) ஸமுத்திரத்திலே, கிடந்த - பள்ளிகொண்டிருந்த, எம் கேசவன், கிளர் ஒளி - விருத்தியடைகிறகாந்தியுள்ள, மணிமுடி - ரத்நகிரீடத்தையுடையவனை, குடந்தை எம் கோவலன் - திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கிற நம்முடைய கோபாலனுக்கு, குடி அடியார்க்கு - குடியாக தாஸர்களாயிருக்கிறவர்களை, மடந்தையர் - தங்களுடைய ஸ்திரீகள், வாழ்த்தலும் - ஆசீர்

வாதம்பண்ண, மருதரும் - (ஏழு) மருத்துக்களும், வசுக்களும் - (எட்டு) வஸுக்களும், எங்கும், தொடர்ந்து, தோத்திரம் சொல்லினர் - ஸ்தோத்ரங்களைச் சொன்னார்கள்.

(கருத்து) ஆழமான திருப்பாற்கடலில் பள்ளிக்கொண்டிருந்து, கேசியை ஸம்ஹரித்து, ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காகத் திருக்குடந்தையில் எழுந்தருளியிருந்து விருத்தியடைகிற காந்தியுள்ள ரத்ன கிரீடத்தைத் தரித்துக்கொண்டிருக்கிற நம்முடைய கோபாலனுக்குக் குடும்பத்தோடு தாஸர்களாக இருக்கிறவர்களை ஏழு மருத்துக்களும் எட்டுவஸுக்களும் தங்களுடைய இருப்பிடத்திலிருந்து ஸ்தோத்ரம்பண்ணினதால் திருப்தியடையாமல் தங்களுடைய எல்லைகளை விட்டு அவர்களிடம் கூடப்போய் ஸ்தோத்ரம் பண்ணினார்கள். அப்போது அவர்களுடைய ஸ்திரீகளும் மங்களாசாஸநம் பண்ணினார்கள்.

குறிப்பு— (1) 'கோவலன்' என்பதற்கு, பசுக்களோடு கூடச்சேர்ந்திருக்கும்படியான ஸௌசீல்யம் என்கிற குணமுள்ளவன் என்பது பொருள்.

(2) 'குடியடியார்' என்பதற்கு, திருப்பாற்கடலில் இருப்பதுடன் திருப்தியடையாமல் எல்லாரும் ஆச்ரயிக்கும்படி திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய ஸௌலப்ய குணத்தைக்கண்டு பரவசராய்ப் பரம்பரையாக அடிமை செய்கிற ஸ்ரீ வைஷ்ணவர்கள் என்பது பொருள். (7)

---

அவ— பிரகிருதி மண்டலத்தைவிட்டு வைகுந்தலோகத்துக்குப் போனபோது நித்தியஸூரிகள் செய்கிற உபசாரங்களையும், வைகுண்ட நகரத்தைக் கிட்டினதையும் சொல்லுகிறார்-

குடியடி யாரிவர் கோவிந்தன் றனக்கென்று
முடியுடை வானவர் முறைமுறை யெதிர்கொள்ளக்
கொடியணி நெடுமதிள் கோபுரங் குறுகினர்
வடிவுடை மாதவன் வைகுந்தம் புகவே. (அ)

(ப-ரை) இவர் - இந்த பாகவதர், கோவிந்தன் தனக்கு - கோவிந்தனுக்கே, குடியடியார் என்று - குடியாகத் தாஸர்கள் என்று ஸந்தோஷப்பட்டு, முடியுடை - கிரீடங்களையுடைய

வானவர் - நித்தியஸூரிகள், முறை முறை - வரிசை வரிசையாக, எதிர்கொள்ள, மாதவன் வைகுந்தம் - மாதவனுடைய வைகுந்தத்தை, புக - புகுவதற்காக, கொடி அணி - த்வஜங்களாலே அலங்காரம் செய்யப்பட்ட, நெடு - மிகவும் உயர்ந்த, மதிள் கோபுரம் - மதிளில் இருக்கும் கோபுரத்தை, குறுகினர் - கிட்டினார்கள்.

(கருத்து) இந்தப் பாகவதர் கோவிந்தனுக்கே குடியாகத் தாஸர் என்று ஸந்தோஷப்பட்டுக் கிரீடத்தையுடைய நித்திய ஸூரிகள் வரிசை வரிசையாக வந்து எதிர்கொண்டு உபசாரம் செய்தார்கள். இவர் வருவதை எதிர்பார்த்து த்வஜங்களால் அலங்காரம் செய்யப்பட்ட உயர்ந்த மதிள்களிலிருக்கும் கோபுரத்தை எம்பெருமானுடைய வைகுந்தத்துக்குள் ப்ரவேசிப்பதற்காக இவர் கிட்டினார்.

குறிப்பு— (1) 'முடியுடை' என்பதற்கு, எம்பெருமானுக்குச் சேஷமாயிருப்பதாகிய ஸாம்ராஜ்யத்தை அடைந்திருப்பதை அவர்கள் முடி (கிரீடம்) காட்டுகிறது என்பது கருத்து.

(2) "வடிவுடை மாதவன்" என்றுசொன்னதற்கு "இவர் வருகிறார்" என்கிற ஸந்தோஷத்தாலே திருமேனியில் அழகுள்ளவனாய் பிராட்டியுடன் எம்பெருமான் எழுந்தருளியிருந்தான் என்பது கருத்து.

(3) நித்யஸூரிகள் செய்த உபசாரமாவது- "ஆழியான் தமரான நீங்கள் வைகுந்தத்தை ஆளுங்கள்" என்று மங்களாசாஸநம் பண்ணினது. வைகுந்தத்தில் புகுவதைக்காட்டிலும் வேறு உயர்ந்த மங்களமில்லையே. (8)

---

அவ— வைகுந்தத்திற்குப் புகும்போது த்வாரபாலகர்களும் மற்றவர்களும் செய்த உபசாரங்களைச்சொல்லுகிறார்:—

வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்
வைகுந்தன் தமரெம ரெமதிடம் புகுதென்று
வைகுந்தத் தமரரும் முனிவரும் வியந்தனர்
வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே. (௯)

(ப-ரை) வைகுந்தம், புகுதலும் - புகுந்த உடனே, வாசலில் வானவர் - கோபுரத்வாரத்தில் இருக்கும் நித்தியஸூரிகள், வைகுந்தன் தமர்-வைகுந்தனுக்குத் தமராயிருப்பவர்கள், எமர்-

எங்களுக்கு ஸ்வாமிகள், எமது இடம் - எங்களுடைய இடத்தை, புகுதல் என்று - பிரவேசிக்கவேண்டும் என்று சொல்லி, வியந்தனர் - ஆச்சரியப்பட்டார்கள், வைகுந்தத்து - வைகுந்தத்தில், அமரரும் - (கைங்கரியம் செய்கிற) நித்தியஸூரியளும், முனிவரும் - (எம்பெருமானுடைய குணங்களை அநுபவித்துக்கொண்டேயிருக்கிற) நித்யஸூரிகளும், மண்ணவர் - பூமியிலிருக்கிறவர்கள், வைகுந்தம் புகுவது, விதி - பாக்கியம் (இது நாம் பண்ணின பாக்கியம் என்று) வியந்தனர் - ஆச்சரியப்பட்டார்கள்.

(கருத்து) வைகுந்த நகரத்தைப் புகுந்த உடனே, கோபுரத்வாரத்தில் அதற்குப் பாலகராயிருக்கிற நித்தியஸூரிகள், "வைகுந்தனைச் சேர்ந்தவர்கள் எங்களுக்கு ஸ்வாமிகள்" என்று சொல்லி, "உள்ளே வரவேண்டும்" என்று வேண்டி, எங்களுடைய கைங்கரிய ரூபமான ஸம்ருத்தியைப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்று ஸமர்ப்பித்து ஆச்சரியப்பட்டார்கள். எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்கிற நித்தியஸூரிகளும், அவன் குணங்களைத் தியானம் பண்ணிக்கொண்டேயிருக்கிற நித்தியஸூரிகளும், "பூமியிலுள்ளவர்கள் இந்த வைகுந்தத்துக்கு வரும்படி நாங்கள் என்ன பாக்கியம் பண்ணினோம்" என்று ஆச்சரியப்பட்டார்கள்.

இ—ம்- புகுது - புகுதுக, வியங்கோள் வினைமுற்று. க, கெட்டது. (9)

அவ— உள்ளே புகுந்து வீதிகள் வழியாகப் போகும்போது நடந்த உபசாரங்களைச் சொல்லுகிறார்—

விதிவகை புகுந்தன ரென்றுநல் வேதியர்
பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்
நிதியுநற் சுண்ணமும் நிறைகுட விளக்கமும்
மதிமுக மடந்தைய ரேந்தினர் வந்தே. (கo)

(ப-ரை) விதிவகை - நம்முடைய பாக்யத்தின் பிரகாரத்தாலே, புகுந்தனர் என்று - (இந்த ஸ்ரீ வைஷ்ணவர்) இங்கே வந்து புகுந்தார் என்று, நல் - நல்லவர்களான (ஞானக்குறைவு ஒருபோதுமில்லாதவர்களான), வேதியர் - வேதத்தாலே கொண்டாடப்பட்ட நித்தியஸூரிகள், பதியினில் - தங்களுடைய வீடுகளில், பாங்கினில் - தகுந்த விதமாய், பாதங்கள் - அவரு

டைய பாதங்களை, கழுவினர், மதி முகம்-சந்திரன் போன்ற முகத்தையுடைய, மடந்தையர் - பிராட்டி முதலான எம்பெருமானுடைய மஹிஷிகள், வந்து - எதிரே வந்து, நிதியும் - நிதியான ஸ்ரீ சடகோபத்தையும், நல் சுண்ணம் - நல்ல ஸ்ரீ சூர்ணத்தையும், நிறைகுட விளக்கமும் - பூர்ண கும்பங்களோடே கூடின தீபங்களையும், ஏந்தினர் - ஏந்தி நின்றார்கள்.

(கருத்து) "நாம் பண்ணின பாக்கியத்தினால் இவர் பூலோகத்திலிருந்து இங்கே வந்து புகுந்தார்" என்று ஸந்தோஷப்பட்டு ஒருபோதும் ஜ்ஞானக்குறைவு இல்லாதவர்களும், வேதத்தினால் கொண்டாடப்பட்டவர்களுமான நித்யஸூரிகள் தங்கள் தங்கள் திருமாளிகைகள் வழியாகப் போகும்போது 'இவர் ஸம்ஸாரியாய்க் கிடந்தவர்; நாமோ அநாதியாக ஸம்ஸாரத்தால் ஒரு க்ஷணமும் தொடப்படாதவர்கள்' என்று இவரைத் தாழ்ந்தவராகவும், தங்களை உயர்ந்தவர்களாகவும் எண்ணாமல், அவரை ஸிம்மாஸனத்தில் உட்கார வைத்து, அவருடைய திருவடிகளை விளக்கினார்கள். சந்திரனைப்போன்ற முகங்களையுடையவர்களான பெரிய பிராட்டியும் பூமிப் பிராட்டியும் நப்பின்னைப் பிராட்டியும் தங்கள்வேலைக்காரிகளுடன்கூட இவருக்கு எதிரே வந்து, வெகுகாலம் தேசாந்தரம்போயிருந்து திரும்பிவந்த பிள்ளையைக்கண்ட தாயைப்போல் ஸந்தோஷப்பட்டு, தமக்கு நிதியான ஸ்ரீ சடகோபத்தையும் எம்பெருமானுடைய திருமேனியின் ஸ்பர்சத்தாலே உயர்ந்ததான ஸ்ரீ சூர்ணத்தையும், பூர்ண கும்பங்களையும், தீபங்களையும் ஏந்திக்கொண்டு எதிர்கொண்டார்கள்.

குறிப்பு— 'மதிமுகம்' என்பதற்கு, இவரைக்கண்ட ஸந்தோஷத்தினால், சரத்காலத்தில் பூர்ணமாயிருக்கிற சந்திரனைப் போல், அவர்கள் திருமுகங்கள் அழகாயிருந்தன என்பது கருத்து.

(10)

---

வந்தவ ரெதிர்கொள்ள மாமணி மண்டபத்து
அந்தமில் பேரின்பத் தடியரோ டிருந்தமை
கொந்தலர் பொழிற்குரு கூர்ச்சட கோபன்சொல்
சந்தங்க ளாயிரத் திவைவல்லார் முனிவரே. (கக)

(ப-ரை) அவர் - கீழே சொல்லப்பட்டவர்கள், வந்து-எதிர் கொள்ள, மா - மிகவும் விசாலமான, மணி மண்டபத்து - திருமா மணி மண்டபத்திலே, அந்தம் இல் - முடிவில்லாத, பேர் இன்பம் - பெரிய ஆனந்தத்தையுடைய, அடியரோடு - தாஸர்களோடு (நித்தியஸூரிகளோடு), இருந்தமை - கூடியிருந்ததை, கொந்து அலர் - பூங்கொத்துக்கள் மலருகிற, பொழில் - தோட்டங்களையுடைய, குருகூர் சடகோபன் சொல், சந்தங்கள் - பாட்டுக்களான, ஆயிரத்து, இவை வல்லார், முனிவர் - (அவனுடைய குணங்களை) அனுபவித்துக்கொண்டேயிருப்பர்கள்.

(கருத்து) ஸர்வேசுவரனும் லக்ஷ்மீபதியுமான எம்பெருமானும் இவரைப் பார்க்கவேண்டும் என்ற ஆசையினாலே பிராட்டிமார்களுடன் கூடவந்து எதிர்கொண்டான். இவர் அளவில்லாமல் விசாலமான திருமாமணி மண்டத்துக்குப்போய், "அடியார்கள் குழாங்களுடன் கூடுவது என்று கொலோ" என்று தாம் ஆசைப்பட்டபடி, நித்தியஸூரிகளுடன்கூட முடிவில்லாத ஆனந்தத்தை அனுபவிக்கும்படியிருந்ததை, கொந்தலர்பொழில் குருகூர்ச் சடகோபன் அருளிச்செய்த இந்தப் பத்துப்பாட்டுக்களையும் படிக்கச் சக்தியுள்ளவர்கள், அவர்களுடன் சேர்ந்து எம்பெருமானுடைய குணங்களை அனுபவித்துக்கொண்டேயிருப்பார்கள். (11)

ஸ்வாமித்வாத் ஶ்ரீஶ நாராயண இதி யஶஸா விக்ராந்திஷ-
ட்வாநாம் ஶ்ரீதத்த்வாச் சக்ரஸத்த்வாஜ் ஜலதிஶயநதாவத் கோவிந்தபா-
வாத்। வைகுண்டஸ்வாமிபாவாதபி ச நிஜஜநாந் அர்சிராத்யேந
மத்யா ஸம்யோகம் ப்ராபயேதீதி கதயாம் ஶ்ரீஶடா-
ரிர்வ்யநக்தி ॥ ||ககஉ||

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னைச்சேர்ந்தவர்களை அர்ச்சிராதி மார்க்கத்தாலே அழைத்துக்கொண்டு போகிறான் என்பது சில காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) எல்லாருக்கும் ஸ்வாமியாயிருப்பது; (2) லக்ஷ்மீபதியென்னும் நாராயணன் என்னும், கீர்த்தியையுடையவனாயிருப்பது; (3) உலகங்களை அளந்தது, (4) மாதவனாயிருப்பது; (5) சக்ராயுதத்தையுடையவனாயிருப்பது; (6) ஸமுத்ரத்தில் படுத்திருப்பது; (7) கோவிந்தனாயிருப்பது; (8-9-10) வைகுந்தத்துக்கு ஸ்வாமியாயிருப்பது. (112)

# பத்தாம் திருவாய்மொழி.

அவ— கீழ்த் திருவாய்மொழியில் அர்ச்சிராதி மார்க்கத்தாலே வைகுந்தத்திற்குப் போகிறவருக்கு நடக்கும் உபசாரங்களையும், அவர் திருமாமணி மண்டபத்தில் புகுந்து நித்தியஸூரிகளுடன் கூடஇருப்பதையும், ஆழ்வார் மிகவும் தெளிவாய்ப் பார்த்து, தாம் இந்த ப்ரகிருதியிலே இருப்பதை மறந்துத் தாம் வைகுந்தத்திலிருப்பதாக எண்ணி, அவர்களைப்போல கைங்கரியம் செய்ய ஆரம்பித்தார். அது முடியவில்லை. அப்போது, தம்முடைய இருப்பு நினைவுக்கு வர, மேருவின் சிகரத்திலிருந்து ஸுகாநுபவம் பண்ணுகிறவனை ஆழமான ஸமுத்ரத்தில் தள்ளினால், அவன் துக்கப்படுவதுபோல், ஆவர் மிகுந்த துக்கத்தை அடைந்து, முன் பல தடவைகளில் வஞ்சித்ததுபோலில்லாமல் தம்மை வைகுந்தத்துக்கு அழைத்துக்கொண்டு போகவேண்டும் என்று வேண்ட, அதைஎம்பெருமான் செய்யாமலிருக்க, அவனுக்கு வைகுந்தத்திலிருப்பு முடியாதபடி மிகுந்த வருத்தத்துடன் அவனைக் கூப்பிடுகிறார்,

(கலித்துறை.)

முனியே நான்முகனே முக்கண் ணப்பா வென்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக் கட்கரு மாணிக்கமே யென்கள்வா
தனியே னாருயி ரேயென் தலைமிசை யாய்வந்திட்டு
இனிநான் போகலொட் டேனென்றும் மாயஞ்செய்
[யேலென்னையே. (க)

(ப-ரை) முனியே - (பிரளயம் முடிந்தவுடன் உலகத்தை முன்போல் உண்டுபண்ண) நினைத்துக்கொண்டிருந்தவனே! நான் முகனே - பிரம்மாவை உடம்பாக உடையவனே! முக்கண்ணப்பா-மூன்று கண்களையுடைய ருத்திரனை உடம்பாக உடையவனாய் உபகாரம் செய்கிறவனே! கனிவாய் - கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தையும்,தாமரைக்கண்-தாமரைப்பூப்போன்ற திருக்கண்களையும் உடைய, பொல்லா என் கருமாணிக்கமே - துளையிடாத - (ஒருவராலும் அனுபவிக்கப்படாத). இந்திர நீல மாணிக்கம் போன்ற திருமேனியையுடையவனே! என் கள்வா - என்னை அபஹரித்தவனே! தனியேன் ஆர் உயிரே-துணையில்லாமல் தனியாயிருக்கிற எனக்குப் பூர்ண பிராணனாயிருக்கிறவனே!

என் தலைமிசையாய் வந்திட்டு - என்னுடைய தலையில் (உன் திருவடிகள் இருக்கும்படி) வந்து, இனி - இதன்மேலே (அர்ச்சிராதி கதியையும் காட்டின பின்பு), நான் போகல் ஒட்டேன் - நினைத்தபடி போவதற்கு இடம் கொடேன்; என்னை ஒன்றும் - சிறிதும், மாயம் செய்யேல் - வஞ்சனை செய்யாதே.

(கருத்து) பிரளயம் முடியுங்காலத்தில் உலகங்களை முன்போல உண்டுபண்ண நினைத்துக்கொண்டிருந்தாயே! ஜ்ஞானம் என்கிற குணம் மிகவும் சுருங்கி அசேதனங்களைப்போல் பிரகிருதியோடு ஒட்டிக்கொண்டிருந்த ஆத்மாக்களைப் பார்த்து, இரக்கப்பட்டன்றோ நீ அதைச்செய்தது. பிறகு, அவர்களுக்கு உடம்புகளையும் இந்திரியங்களையும் கொடுப்பதற்காக அன்று பிரம்மாவுக்கு ஆத்மாவாயிருந்து வியஷ்டிசிருஷ்டியைச் செய்தாய். அவர்களுக்குக் கெட்ட வாஸனைகள் மிகுந்து நல்லது ஒன்றையும் செய்யமுடியாமல் அவர்கள் இருந்தபோது ருத்திரனுக்கு ஆத்மாவாயிருந்து அவர்களுடைய உடம்புகளையும் இந்திரியங்களையும் அழித்துவிட்டாய். கோவைப்பழம் போன்ற திருப்பவளத்தையும் தாமரைப்பூக்களைப்போன்ற திருக்கண்களையும் ஒருவராலும் அநுபவிக்கப்படாத இந்திர நீலரத்நம்போன்ற திருமேனியையுமுடையவனுயிருந்து என் ஆத்மாவை அபஹரித்து என்னை உனக்கு அடிமையாகப்பண்ணிக்கொண்டாய். உன்குணங்களை நினைத்துக்கொண்டு மற்றவர்களுடன் அவைகளை அனுபவிப்பதற்கு வேறு துணையில்லாதிருக்கிறேன். மற்றவர்களுக்குச் சோறும் தண்ணீரும் தாரகமும் போஷகமும்; எனக்கோ நீயே அவைகள். இப்படி ஆத்மாக்களுக்குப் பலவிதமாய் உபகாரம் பண்ணி,எனக்கு இனியவனும், தாரகனும் போஷகனுமாக என் மனதில் நிறைய இருந்து இப்படி என்னை உபேக்ஷிக்கலாமோ? இதனுடன் நிற்காமல் அர்ச்சிராதி மார்க்கத்தையும் காட்டினாய். இனிமேல் நீ என்னைவிட்டுப்போக விடமாட்டேன். நான் உன்னுடைய பாஹ்ய ஸம்ச்லேஷம் கிடைக்கவேணுமென்று ஆசைப்பட்டபோதெல்லாம் உன் குணங்களையோ, நீ செய்த லீலைகளையோ காட்டி, ஆசைப்பட்டதைக்கொடாமல், அந்தக் காலங்களில் அதை மறக்கும்படி செய்து வஞ்சித்தாய். இனி அப்படிச் செய்யக்கூடாது. என்னை அழைத்துக்கொண்டே போகவேணும்.

குறிப்பு— (1) 'கருமாணிக்கமே' என்பதாலே, திரிமூர்த்திகளுக்குள்ளே நடுவிலிருந்து ரக்ஷிக்கிற வியாபாரத்தைச் செய்கிற விஷ்ணு என்கிற அவதார ரூபம் சொல்லப்படுகிறது. அதை நான்முகனுக்கும் முக்கண்ணப்பனுக்கும் நடுவில் சொல்லாததற்குக் காரணம் - அந்த இரண்டு ரூபங்களும் சேதனர்களுடன் சேர்ந்தவைகள். விஷ்ணுவின் ரூபம் அப்படியன்று; அப்ராகிருதமான ரூபம் என்பது.

(2) "என் கருமாணிக்கமே" என்று சொல்லி, "என் நான்முகனே, என் முக்கண்ணப்பா" என்று சொல்லாததற்குக் காரணம்— அந்த ரூபங்கள் ஆழ்வாருக்கு உத்தேச்யங்களல்ல; விஷ்ணுரூபமே மிகவும் உயர்ந்த புருஷார்த்தமாய் உத்தேச்யம் என்பது.

(3) எல்லாம் நிறைந்திருப்பதால், ஒரு விஷயத்திலும் பிரீதி பண்ணுமல் இருக்கிறவன், அநுகூலரைக்கண்டு பிரீதியாலே மந்தஹாஸம் பண்ணுகிற திருப்பவளத்தையும், அளவில்லாத பிரீதியுடனே அவர்களைப் பார்க்கிற திருக்கண்களையும் நினைத்துக்கொண்டு ஆழ்வார் 'கனிவாய்' என்றும் 'தாமரைக்கண்' என்றும் அருளிச் செய்கிறார்.

(4) 'என்கள்வா' என்பதற்கு, என் ஆத்மா கௌஸ்துபம் போல் உனக்குப் பிரியமாயிருக்கிறது. அதை நான் திருடிப் பிரகிருதி என்கிற தண்ணீரில்லாத காட்டில் மறைத்து வைத்திருந்தேன்; நீயோ என்னைக்காட்டிலும் பெரிய திருடனாய், உன்னுடைய திருமேனியின் அழகைக்காட்டி, அதைக் கொண்டுபோய் உனக்கு அடிமையாக்கி விட்டாய் என்பது கருத்து.

(5) 'போகலொட்டேன்' என்பதற்கு உன்னைப் போகமுடியாமல் மறித்துக்கொள்வேன். என்னை மீறிப் போகமுடியுமோ உனக்கு என்பது கருத்து.

இ—ம் பொல்லா - பொல்லாத; ஈறுகெட்ட பெயரெச்சம். செய்யேல் - எதிர்மறை ஏவல் வினைமுற்று. (1)

---

அவ— பிராட்டிமேல் ஆணையிடுகிறார்

மாயஞ்செய் யேலென்னை யுன்றிரு மார்வத்து மாலைநங்கை
வாசஞ்செய் பூங்குழலாள் திருவாணை நின்னாணை கண்டாய்
நேசஞ்செய் துன்னோ டென்னை யுயிர்வேறின்றி யொன்றாகவே
கூசஞ்செய் யாதுகொண் டாயென்னைக் கூவிக்கொள் ளாய்
[வந்தந்தோ. (2)

(ப-ரை) என்னை, மாயம் செய்யேல் - வஞ்சனையைச் செய்யாதே, (இப்படி முன் சொன்னதை மறுபடியும் சொல்லியும் எம்பெருமான் ஒன்றும் செய்யவில்லை. அதின்மேல் ஆணையிடுகிறார்) உன் திரு - உனக்கும்கூட ஸம்பத்தாயிருக்கிற, மார்வத்து மாலை - திருமார்புக்கு மாலை போலிருக்கிற, நங்கை - நல்லகுணங்கள் நிறைந்த, வாசம் செய் - (உன் திருமேனிக்கு) வாஸனையைக் கொடுக்கிற, பூம் - அழகான, குழலாள் - தலைமயிரையுடையவளான, திரு ஆணை - லக்ஷ்மீமேலே ஆணை, நின் ஆணை கண்டாய் - உன்மேலும் ஆணை; (உம்முடைய யோக்கியதையைப் பாராமல் இப்படி ஆணையிடலாமோ என்று எம்பெருமான் கேட்டதாக நினைத்துக்கொண்டு பதில் சொல்லுகிறார்) கூசம் செய்யாது - (என் உடம்பின் இளப்பத்தைப்பார்த்து) அருவருப்புப்படாமல், நேசம் செய்து - பிரீதியைப்பண்ணி, உயிர் வேறு இன்றி - என் ஆத்மாவேறாக எனக்குத்தோன்றாதபடி, உன்னோடு ஒன்றாகவே, என்னை, கொண்டாய் - எடுத்துக்கொண்டாய், அந்தோ - ஐயோ! வந்து (சீக்கிரமாக) வந்து; என்னை, கூவிக்கொள்ளாய் - அழைத்துக்கொள்ளவேணும்.

(கருத்து) நான் ஆசைப்பட்ட பாஹ்ய ஸம்ச்லேஷத்தைக் கொடுக்காமல் ஏதோ ஒரு குணத்தையோ உன் அழகையோ காட்டி ஆசைப்பட்டதை நான்மறக்கும்படி செய்து வஞ்சனை செய்ததுபோல் இனிமேலும் வஞ்சனையைச்செய்யக்கூடாது. இப்படிக் கீழ்ப்பாட்டில் வேண்டினதை மறுபடியும் சொல்லியும் எம்பெருமான் ஒன்றும் செய்யவில்லை. அதின்மேல் ஆணையிடுகிறார். உனக்கும் ஸம்பத்தாயிருக்கிறவளும் உன்னுடைய நீலமான திருமேனிக்குப் பொன்னால் செய்யப்பட்ட மாலைபோல் அழகு செய்கிறவளும், உனக்குத்தகுந்த ஸ்வரூபத்தையும் ரூபங்களையும் குணங்களையும் விபூதிகளையும் உடையவளும், இயற்கையாக உயர்ந்த வாஸனையுள்ள உன்திருமேனிக்கும் தன்னுடைய

அழகான திருக்குழலால் வாஸனையைக் கொடுக்கிறவளுமான பிராட்டியின் மேல் ஆணை; உன்மேலும் ஆணை. "நீர் ஆணையிடுவது தகுந்ததோ" என்று எம்பெருமான் கேட்பதாக நினைத்துப் பதில் சொல்லுகிறார். நீ ஒன்றும் செய்யாதிருந்தால் எனக்கு ஆணையிடபாத்தியமில்லைதான்; நீயோ என் உடம்பின் தாழ்மையை அருவருக்காமல் பிரீதிபண்ணி நான்வேறு நீவேறு என்று எனக்குத்தோன்றாதபடி என்னுடன் ஒன்றாய்ச் சேர்ந்தாய். ஆகையால், எனக்கு ஆணையிடப்பாத்தியமுண்டாயிருக்கிறது. ஐயோ! நீயே செய்யவேண்டிய வியாபாரத்துக்கு நான் ஆணையிடவேண்டியதாயிருக்கிறதே. ஆகையால் உடனேவந்து என்னை வைகுந்தத்துக்கு அழைத்துக்கொண்டுபோ.

இ—ம் கூவிக்கொள்ளாய் - முன்னிலையொருமை ஏவல் வினைமுற்று. (2)

---

அவ— 'ஏன் என் மேல் ஆணையிடுகிறீர்? பிரம்மாவும் ருத்திரனும் இருக்கவில்லையோ ?' என்று எம்பெருமான் கேட்பதாக நினைத்துப் பதில் சொல்லுகிறார்:—

கூவிக்கோள் ளாய்வந்தந் தோவேன்போல் லாக்கரு மாணிக்கமே
ஆவிக்கோர் பற்றுக்கோட்பு நின்னலா லறிகின்றி லேன்யான்
மேவித் தொழும்பிர மன்சிவ னிந்திர னாதிக்கெல்லாம்
நாவிக் கமல முதற்கிழங் கேயும்ப ரந்ததுவே. (3)

(ப-ரை) மேவி - பிரீதியுடன் வந்து கிட்டி, தொழும் - ஸேவிக்கிற, பிரமன் - பிரம்மா, சிவன், இந்திரன், ஆதிக்கு எல்லாம்- இவர்கள் முதலான தேவர்களுக்கெல்லாம், முதல் - முதல்காரணமான, நாவி கமலம் கிழங்கே - நாபீகமலத்துக்குக் கிழங்காயிருப்பவனே! உம்பர்-(பிரம்மா முதலானவர்களுக்கும்மேலேயிருக்கிற) நித்தியஸூரிகளுக்கும், அந்த அதுவே-அந்தக்காரணமானவனே! ஆவிக்கு - ஆத்மாவுக்கு ஓர் பற்று கொம்பு - ஒரு பிடிக்கிற கொம்பை, நின் அலால் - உன்னைத்தவிர, யான் அறிகின்றிலேன் - நான் காண்கிறவனாய் இல்லை, பொல்லா - துளையிடப்படாத (ஒருவனாலும் முன்னால் அனுபவிக்கப்படாத), என் - எனக்கு, கருமாணிக்கமே - நீலரத்னம்போல் போக்யமானவனே; வந்து - நீயேவந்து, கூவிக்கொள்ளாய் - (உன் திருவடிகளுக்கு) அழைத்துக் கொண்டுபோக வேணும், அந்தோ - ஐயோ.

(கருத்து) பிரம்மா சிவன் இந்திரன் முதலான எல்லாத் தேவர்களும் தங்களுடைய ஐசுவரியங்கள் நிலையாயிருப்பதற்காகப் பிரீதியுடன் உன்னிடம் வந்தன்றோ ஸேவிக்கிறார்கள்! உன்னுடைய நாபியில் ஒரு தாமரைப் பூவை உண்டுபண்ணி அதில் பிரம்மா தோன்றும்படி செய்து அவனைக்கொண்டு உலகங்களை உண்டுபண்ணினாய். இப்படி எல்லாருக்கும் முதல் காரணமாயிருந்தவனே! அவைகளுக்கு மேலேயிருக்கிற நித்தியஸூரிகளுடைய ஸத்தைக்கும் ஸ்திதிக்கும் அப்படியே காரணமாயிருப்பவனே! ஒருகொடி ஒரு கொம்பைச்சுற்றிக்கொண்டு ஒருவஸ்துவாக இருப்பதுபோல என் ஆத்மாவுக்கு ஆச்ரயமாக இருந்து அதை உஜ்ஜீவிக்கச் செய்கிறவனே! உன்னைத்தவிர அதுக்கு வேறே ஆச்ரயமில்லையே. ஆகையால் ஒருவனாலும், அநுபவிக்கப்படாத இந்திர நீலரத்னம்போல் எனக்கு இனியவனாயிருக்கிற நீயேவந்து உன் திருவடிகளுக்கு என்னை அழைத்துக்கொண்டு போய் உன் அழகைக்காட்டவேணும். ஐயோ! நீயே செய்யவேண்டியவேலையை நான் சொல்லவேண்டியதாயிருக்கிறதே.

இ—ம் அந்தது - அந்த + அது, நிலைமொழியிற்று அகரம் கெட்டது தொகுத்தல் விகாரம்; வந்த + உழி வந்துழியென்பது போல. (3)

---

அவ— தாம் ஆணையிட்டவுடன் எம்பெருமான் வந்து தம்மை அழைத்துக்கொண்டு போகவில்லை. அதனால் அவன் தம்மை உபேக்ஷித்ததாக நினைத்து முறையிடுகிறார்—

உம்பரந் தண்பா ழேயோ வதனுண்மிசை நீயேயோ
அம்பர நற்சோதி யதனுட் பிரம னரன்நீ
உம்பரும் யாதவரும் படைத்த முனிவ னவன்நீ
எம்பரஞ் சாதிக்கலுற் றென்னைப் போரவிட் டிட்டாயே (௪)

(ப-ரை) உம்பர் - (தன்னிடத்திலிருந்து உண்டாகிற மஹத் அஹங்காரம் முதலியவைகளுக்குக் காரணமாய்) மேலேயிருக்கிற, அம் - அழகிய, தண் - குளிர்ந்த, பாழ் - (பாழாயிருக்கிற நிலம்போன்ற) மூலப்பிரகிருதியும், நீயே, அதனுள் - அதற்குள் இருக்கும், மிசை - அதற்கு மேலானவை (ஆத்மாக்களும்) நீயே, அம்பரம் - ஆகாசமும், நல் சோதி - நல்ல தேஜஸும், நீயே, அதனுள் - (ஐந்து பூதங்களால் உண்டான) அண்டத்துக்

குள் இருக்கிற, பிரமன் - பிரம்மாவும், அரன் - ருத்திரனும், நீ, உம்பரும் - மனிதர்களுக்கு மேற்பட்ட தேவர்களையும், யாதவரும் - மனிதர் முதலான எல்லாச் சேதனர்களையும், படைத்த- உண்டுபண்ணின, முனிவன் அவன் நீ - தியானம்பண்ணினவனாக வேதத்தில் சொல்லுகிறவனும் நீயே. எம் பரம் - என் சுமையை, சாதிக்கல் - நானே தாங்குவதை, உற்று - நினைத்து; என்னை, போர-(இன்னும் ஸம்ஸாரத்தில்) போரும்படி, விட்டிட்டாயே - விட்டு விட்டாயே.

(கருத்து) மூலப்ரகிருதி, அதில் சேர்ந்திருக்கும் ஜீவன்கள் ஆகாசம் தேஜஸ்ஸு முதலானப் பூமியோடு முடிகிற தத்துவங்கள், அவைகளால் ஏற்படும் அண்டத்துக்கு அதிபதியான பிரம்மா, ருத்திரன், தேவர்கள், மனிதர்கள் முதலாய் ஸ்தாவரங்கள் வரையிலுள்ள சேதனர்கள், இப்படி சேதனர்களாயும் அசேதனங்களாயும் இருக்கிறவைகளுடைய ஸ்வரூபமும் ஸ்திதியும் பிரவிருத்திகளும் உனக்கு அதீனங்களாயிருக்கின்றன. அவைகளுக்குச் செய்யவேண்டியவைகளெல்லாம் நீயே செய்கிறாய், நான் மாத்திரமோ என்னை ரக்ஷித்துக்கொள்ளுகிற சுமையைத் தாங்குவது? இப்படி நீ நினைத்திருந்தால், நான் ஸம்ஸாரத்திலேயே கிடக்கும்படி நீ என்னைக்கைவிட்டதாக ஆகும்.

குறிப்பு — (1) "மூலப்ரகிருதிக்கு அழகாவது - எம்பெருமானுடைய லீலைக்கு உபகரணமாய் ஆச்சரியமாய் மாறிமாறிக்கொண்டிருப்பது. அதற்குக் குளிமையாவது - அந்த அவஸ்தையில் அதினுடைய ஸத்துவம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற குணங்கள் ஸமமாயிருப்பதினாலே ஆத்மாக்களுக்குத் தாபத்தை உண்டுபண்ணாமை. ஸ்ருஷ்டி காலத்தில்தான் அவைகளில் ஒன்று மேல்பட்டு மற்றவைகள் அடங்கி அவர்களுக்குத் தாபத்தை உண்டுபண்ணுவது.

(2) 'பாழ்' என்று மூலப்ரகிருதியைச் சொல்லுவதற்குக் காரணம்— அந்த அவஸ்தையில் ஆத்மாக்களுக்குப் போகமும் மோக்ஷமும் கிடைக்காமலிருப்பது. அது உலகமாக மாறின போதுதான் இந்திரியங்களால் அநுபவிக்கக்கூடிய வஸ்துக்களாக ஆகிப் போகத்தைக் கொடுக்கிறது. உடம்புகளாகவும் இந்திரியங்

களாகவும் இருந்து மோக்ஷத்துக்கு வேண்டிய உபாயங்களைச் செய்ய உதவுகிறது. பிரளயகாலத்தில் பயிரிடாத நிலம்போலிருக்கிறது.

(3) அதனுள்மிசை - மூலப்ரகிருதியில் ஆத்மாக்கள் எள்ளில் எண்ணெயைப்போலவும், விறகில் நெருப்புப்போலவும் பிரித்து அறியமுடியாமல் உள்ளடங்கியிருக்கிறார்கள் என்பதும், ஆத்மாக்களுக்கு அறியவும் பிரயத்னம் பண்ணவும் போகத்தை அனுபவிக்கவும் சக்தியிருப்பதனால் பிரகிருதியைக் காட்டிலும் அவர்கள் மேலானவர்கள் என்பதும் கருத்து.

(4) பாட்டில் 'அம்பரம்' என்று ஆகாசத்தையும், 'நற்சோதி' என்று தேஜஸையும் சொன்னதற்குக் கருத்து— தைத்திரீய உபநிஷத்தில் சிருஷ்டியைச் சொல்லுகிறவிடத்தில், ஆகாசத்தின் சிருஷ்டி முதலிலும் சாந்தோக்ய உபநிஷத்தில் அதே இடத்தில் முதலில் தேஜஸையும் சொல்லியிருப்பதால் அவைகள் முக்கியமானவைகள் என்பது. ஆகாசம் எல்லாவற்றுக்கும் இடம் கொடுக்கிறது; தேஜஸ் இருட்டைப் போக்கி உபகாரம் செய்கிறது.

(5) "பிரளயகாலத்தில் ஒன்றாக இருந்த நான் பல ரூபங்களும் பல பெயர்களும் உள்ள உலகமாக ஆவேன்," என்று ஸங்கல்பித்து எம்பெருமான் தபஸ் செய்தான் என்றும், தபஸ் செய்து அதை உண்டுபண்ணினான் என்றும் சொல்லியிருக்கிறது. தபஸ் என்பது தியானம் செய்வது. இதைக்காட்டுவதற்காக 'முனிவன்' என்று அவனைச் சொல்லியிருக்கிறது.

(6) அசேதனங்களை உண்டுபண்ணுவது-வெவ்வேறு ரூபங்களையும் வெவ்வேறு பெயர்களையும் உள்ளவைகளாய்ச் செய்வது. ஆத்மாக்களை உண்டுபண்ணுவது - வெவ்வேறு உடம்புகளுடன் அவர்களைச் சேர்ப்பது.

(7) இந்தப் பாட்டில், அறிவில்லாதவைகளையும் இந்திரன் முதலான எல்லா ஆத்மாக்களையும் எம்பெருமானுடன் ஒன்றாகச் சொன்னதுபோல, பிரம்மாவையும் ருத்திரனையும் ஒன்றாகச் சொல்லியிருக்கிறது; அவைகளும் அவர்களும் எப்படி அவனுக்கு உட்பட்டவைகளோ, அப்படியே பிரம்மாவும் ருத்திரனும் அவனுக்கு உட்பட்டவர்கள் என்று ஏற்படுகிறது. ஆகையால், அவர்கள் பரதேவதைகள் அன்று. (4)

அவ— "உம்முடைய சுமையை நீரே சுமக்கவேண்டும்" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்துப் பதில் சொல்லுகிறார்:—

போரவிட் டிட்டென்னை நீபுறம் போக்கலுற் றல்பின்னையான்
ஆரைக்கொண் டெத்தையந் தோவென தென்பதென் யானென்
[பதென்
தீர விரும்புண்ட நீரது போலவென் னாருயிரை
ஆரப் பருக வெனக்கா ராவமு தானாயே. (ரு)

(ப-ரை) நீ என்னை, போரவிட்டிட்டு-போகவிட்டு (துரும்பைப் போல் தள்ளிவிட்டு), புறம் போக்கல் - (வெளியில் இருக்கும் விஷயங்களில் நான்) போகும்படி செய்வதை, உற்றால் - அடைந்தால், பின்னை - பிறகு, யான் - நான், ஆரைக்கொண்டு - எந்த உபாயத்தைக்கொண்டு, எத்தை - எந்த புருஷார்த்தத்தை (ஸாதிப்பது), யான் என்பது என் - நான் என்பது என்ன, எனது என்பது என் - என்னுடையது என்பதென்ன?, தீர - (நெருப்பினால் உண்டானசூடு) போகும்படி, இருப்பு உண்ட-இரும்பாலே குடிக்கப்பட்ட, நீரதுபோல-ஜலத்தைப்போல, என் ஆர் உயிர் - என்னுடைய ஸிலாக்யமான ஆத்மாவானது, ஆர - நிரம்ப, பருக-குடிக்கும்படி (அநுபவிக்கும்படி), எனக்கு, ஆரா - திருப்தி வாராத, அமுது - அமிருதமாக, ஆனாய் - ஆனவனே!

(கருத்து) நீ என்னைத் துரும்புபோல் உபேக்ஷித்து உன்னைத்தவிர வேறு விஷயங்களில் போகும்படி செய்ய நினைத்தால், இப்படி நீ அலக்ஷ்யம் செய்தபிறகு நான் எந்த உபாயத்தைக் கொண்டு எந்தப் புருஷார்த்தத்தை அடையச்சக்தியுள்ளவன்; நான் என்று ஒருவஸ்து உண்டோ? என்னுடையது என்று ஒரு பொருள் உண்டோ? ஆகையால், நீ கைவிட்டால் நான் முடிந்தே போகவேண்டும். நெருப்பில்போட்ட இரும்பின்சூடு தண்ணீரால் தணிவதுபோல், உன்னைப்பிரிந்து நான் படுகிற துக்கம் எல்லாம் போகும்படி என்னை உன்னிடம் அழைத்துக்கொள்ளவேணும். உன்னைத்தவிர வேறு எது எனக்கு போக்யமாயிருக்கிறது. உன்னை எத்தனைகாலம் அநுபவித்தாலும் எனக்கு ஒருபோதும் திருப்திவருகிறதில்லையே. ஆகையால், யாத்ருச்சிகமான ஸுக்ரு

தம் உண்டானது முதல் நீ உபகாரம் செய்துகொண்டிருந்து எனக்கு இனியனானதுபோல, இனிமேலும் மீதியிருப்பதையும் செய்யவேண்டும்.

குறிப்பு:—(1) 'யாரைக்கொண்டு' என்பது எந்த உபாயத்தைக்கொண்டு என்று சொன்னபடி. முன்பாட்டில் பிரம்மா முதலான ஒரு சேதனனும் உபாயமன்று என்று சொல்லியாய்விட்டது. உபாயத்தை "ஆரை" என்று சேதனனைப்போல் சொன்னதின்கருத்து— எல்லாருக்கும் மேற்பட்ட அறிவுள்ளவனாயிருக்கிற எம்பெருமானுக்குப் பதிலாக உபாயம் இருக்கக்கூடுமோ? என்பது.

(2) 'ஆரைக்கொண்டு எத்தை' என்று சொல்லித் துக்கத்தினால் மேலே சொல்ல முடியாமல் நிறுத்திவிட்டார். வாக்யத்தைப் பூர்ணம் பண்ணுவதற்காக உரையில் "ஸாதிப்பது" என்று சேர்க்கப்பட்டது. (5)

---

அவ— முன்னாலே என்னை அநுபவித்து இப்போது உபேக்ஷிப்பது தகுமோ என்று சொல்லுகிறார்:—

எனக்கா ராவமு தாயென தாவியை யின்னுயிரை
மனக்கா ராமைமன் னியுண்டிட் டாயினி யுண்டொழியாய்
புனக்கா யாநிறத் தபுண்ட ரீகக்கட் செங்கனிவாய்
உனக்கேற்கும் கோல மலர்ப்பாவைக் கன்பாவேன் னன்பேயோ.

(ப-ரை) புனம் காயா - தன் நிலத்திலிருக்கும் காயாம் பூவினுடைய, நிறத்த - நிறத்தையுடைய, புண்டரீகம் கண் - தாமரைப்பூப்போன்ற திருக்கண்களையும் - செங்கனிவாய் - சிவந்த கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தையுமுடைய, உனக்கு, ஏற்கும் - தகுந்தவளாயிருக்கிற, கோலம் - அழகே வடிவுகொண்டதுபோலிருக்கும், மலர்ப்பாவைக்கு - தாமரைப்பூவிலிருக்கும் பிராட்டிக்கு, அன்பா - அன்பனாயிருக்கிறவனே! என் அன்பே - என்னிடத்தில் அன்பாயேயிருக்கிறவனே! எனக்கு ஆரா அமுதாய்-எனக்குத் திருப்திவராத அமிருதமாய், எனது ஆவியை - என் பிராணனையும், இன் உயிரை - உனக்கு போக்கியமாக எண்ணியிருந்த என் ஆத்மாவையும், மனக்கு - மனதுக்கு, ஆராமை-

திருப்தி வராமல், மன்னி - நிலையாயிருந்து,உண்டிட்டாய் - அனுபவித்தாய், இனி - இனிமேலும், உண்டொழியாய் - நீ அனுபவிக்கவேணும்.

(கருத்து) தன் இடத்திலிருக்கும் காயாம்பூவின் நிறமுள்ள திருமேனியையும், தாமரைப்பூப்போன்ற திருக்கண்களையும், சிவந்த கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தையும் உடையவனே! உனக்குத் தகுந்தவளும் அழகே வடிவுகொண்டது போன்றவளும் உனக்கு உட்பட்டவளும் தாமரைப்பூவிலிருக்கிறவளுமான பிராட்டிக்கு நீ எப்படி அன்பனாயிருக்கிறாயோ, அப்படியே இராமல் எனக்கு அன்பாயேயிருக்கிறவனே! எவ்வளவு அனுபவித்தாலும் எனக்குத்திருப்திவராத அமிருதமே! என்னுடைய பிராணனையும் உடம்பையும் இந்திரியங்களையும், நீ போக்கியமாக எண்ணியிருந்த என் ஆத்மாவையும் உனக்கு மனதுக்குத் திருப்திவராமல் நிலையாயிருந்து அனுபவித்தாய்; இனிமேலும் என்னை வைகுந்தத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் என்னை அனுபவிக்கவேணும். பிரானே! என்னை அனுபவிக்கத்தொடங்கின நீ அனுபவித்துக்கொண்டேயிருக்க வேண்டும். நடுவில் விட்டுவிடாதே.

குறிப்பு— "பாவை" என்பது பொம்மை. அது எப்படி சொந்தக்காரனுக்கு உட்பட்டிருக்குமோ, அப்படிப் பிராட்டியும் எம்பெருமானுக்கு உட்பட்டிருக்கிறாள் என்பது கருத்து. (6)

---

அவ— கீழ்ப்பாட்டில் தம்மை உபேக்ஷிக்காமல் உடனே அழைத்துக்கொண்டு போகவேணுமென்று சொன்னதை எம்பெருமான் உடனே செய்யவில்லை. மிகுந்த துக்கத்துடன் ப்ரலாபம் பண்ணுகிறார்:—

கோல மலர்ப்பாவைக் கன்பாகிய வென்னன் பேயோ
நீல வரையிரண்டு பிறைகவ்வி நிமிர்ந்த தொப்பக்
கோல வராக மொன்றாய் நிலங்கோட்டிடைக் கொண்டவெந்தாய்
நீலக் கடல்கடைந் தாயுன்னைப் பெற்றினிப் போக்குவனே. (எ)

(ப-ரை) நீலம் கடல் - நீலமான ஸமுத்ரத்தை, கடைந்தாய் - கடைந்தவனே! நீல வரை - இந்திர நீலமலை, இரண்டுபிறை - இரண்டு சந்திரகலைகளை, கவ்வி - (வாயாலே) கவ்விக்கொண்டு,

நிமிர்ந்தது - எழுந்திருந்தது, ஒப்ப - ஒத்திருக்க, கோலம் - அழகையுடைய, வராகம் ஒன்றாய் - ஒரு வராஹமாய், (அவதரித்து), நிலம் - பூமியை, கோட்டு இடை - தெத்துப்பல்லில், கொண்ட - எடுத்துக்கொண்ட, எந்தாய் - என் ஸ்வாமியே! கோல - அழகையுடைய, மலர்ப்பாவைக்கு - தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கும் பிராட்டியிடத்தில், அன்பாகிய - ஸ்னேஹமுள்ள, என் அன்பே! உன்னை, பெற்று - அடைந்து, இனி, போக்குவனோ - நான் போகும்படி விடுவேனோ?

(கருத்து) நீலமான திருப்பாற்கடலைப் பிராட்டியை அடைவதற்காகக் கடைந்தவனே! ஒரு இந்திர நீலமலை ஒவ்வொரு கடைவாயில் ஒரு சந்திரகலையைக் கவ்விக்கொண்டு எழுந்தது போல் அழகான வராஹரூபத்துடன் பூமியை ஒரு தெத்துப்பல்லில் எடுத்துக்கொண்டு பிரளயஜலத்திலிருந்து மேலேவந்தவனே! அளவில்லாத அழகையுடைய தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கும் பிராட்டியினிடத்தில் நீ அன்பு செய்கிறதுபோல் என்னிடத்திலும் அன்புள்ளவனாய் அன்பே வடிவுகொண்டாற் போலிருக்கிறவனே! இப்படிப் பிராட்டியிடத்திலிருக்கும் அதிகப்பிரீதியால் அவள் கடாக்ஷத்திற்குப் பாத்ரனான என்னிடத்திலும் அன்பு செய்த உன்னை அடைந்து பாஹ்யஸம்ச்லேஷமில்லாமல் உன்னை இழந்துபோவேனோ?

குறிப்பு— "நீலக்கடல்" என்பதற்குக் கருத்து— எம்பெருமான் தானே இரண்டு திருக்கைகளாலே வெண்ணிறமான திருப்பாற்கடலைக்கடைந்தபோது திருமேனியின் காந்தி அதில்பட்டு அந்தக்காலத்தில் அது நீலமாய்த்தோன்றிற்று என்பது. இந்திரநீலரத்னங்கள் நிறைந்திருக்கிறபடியால் நீலக்கடல் என்றும் சொல்லலாம். (7)

---

அவ— கீழ்ச் சொன்னதையே விரிவாய்ச் சொல்கிறார்:—

பெற்றினிப் போக்குவ னோவுன்னை யென்றனிப் பேருயிரை
உற்ற விருவினை யாயுயி ராய்ப்பய னாயவையாய்
முற்றவிம் மூவுலகும் பெருந்தூறாய்த் தூற்றில் புக்கு
முற்றக் கரந்தொளித் தாயென் முதற்றனி வித்தேயோ (அ)

(ப-ரை) உற்ற-(ஆத்மாக்களை) விடாமல் பிடித்துக்கொண்டிருக்கிற, இரு - இரண்டுவிதமான, வினையாய் - கர்மங்களாய், உயிராய்-(அவைகளின் பலன்களை அநுபவிக்கிற)ஆத்மாக்களாய், பயனாய் அவையாய் - (அந்தக் கர்மங்களின்) பலன்களான எல்லாமாய், முற்ற - எல்லா வஸ்துக்களுமான, இ மூ உலகும் - இந்த மூன்று உலகங்களுமான, பெரும் தூறாய் - பெரிய புதராய், தூற்றில் - அந்தப்புதரில், புக்கு - புகுந்து, முற்ற - எல்லாவிதத்தாலும், கரந்து - பார்க்க முடியாமல், ஒளித்தாய் - ஒளிந்திருக்கிறவனே! என் - என்னுடைய, முதல் - பிரதானமான, தனி-ஒப்பில்லாத, வித்தே - உலகத்துக்குக்காரணமானவனே! என் - எனக்கு, தனி-ஒப்பில்லாத, பேர் உயிரை - பெரிய ஆத்மாவாக இருக்கிற உன்னை, பெற்று - அடைந்து, இனி போக்குவனோ?

(கருத்து) ஆத்மாக்களைவிடாமல் பிடித்துக்கொண்டு புண்ணியம் என்றும் பாபம் என்றும் இரண்டு வகையாய் இருக்கிற கர்மங்களும் அவைகளை அநுபவிக்கிற ஆத்மாக்களும், அந்தக்கர்மங்களுடைய பலன்களான ஸுகங்களும் துக்கங்களுமாகிய எல்லாம் உனக்கு ஆதீனங்கள். தூறுபோல ஆத்மாக்களைப் பிரிக்க முடியாமல் பிடித்துக்கொண்டு எல்லா வஸ்துக்களாயிருக்கிற மூன்றுஉலகங்களும் அப்படியே உனக்கு அதீனங்கள். அவைகளில் புகுந்து பார்க்கமுடியாதவனாய் ஒளிந்துகொண்டிருக்கிறாய். இப்படி இருப்பதை எனக்குக்காட்டினாய்;உன்னை மனதாலே எல்லாவிதத்தாலும் அநுபவித்திருக்கும்படி செய்தாய். பாஹ்யஸம்ச்லேஷம் மாத்திரம் கிடைக்காவிட்டால் உன்னைப்போக விடுவேனோ ! உலகத்துக்கு ஒப்பில்லாத காரணமானவனே ! எனக்குத் தாரகமானவனே !

(8)

---

அவ— "நான் ஜகத்காரணமாயிருப்பதை நீர்பார்த்ததாகச் சொல்லுகிறீரே; உமக்கு வேறுஎன்னவேண்டுவது?" என்று எம்பெருமான் கேட்பதாக நினைத்துப் பதில் சொல்லுகிறார்:—

முதற்றனி வித்தேயோ முழுமூ வுலகா திக்கெல்லாம்
முதற்றனி யுன்னையுன் னையெனை நாள்வந்து கூடுவன்நான்
முதற்றனி யங்குமிங் கும்முழு முற்றுறு வாழ்பாழாய்
முதற்றனி சூழ்ந்த கன்றாழ்ந் துயர்ந்த முடிவிலீயோ. (கூ)

(ப-ரை) முழு - முழுவதுமான. மூ உலகாதிக்கு எல்லாம்- மூன்று உலகங்கள் முதலான எல்லாவஸ்துக்களுக்கும், முதல் - முக்கியமான காரணமும் (நிமித்த காரணமும்) தனி - இரண்டாவது இல்லாதவனும் (ஸஹகாரியைத் தேடாதவனும்), வித்தே - உபாதாநகாரணமும் ஆனவனே! அங்கும் - அண்டத்துக்கு வெளியிலும், இங்கும் - அதற்குள்ளும், முழுமுற்று - முழுவதுமான எல்லாவஸ்துக்களையும், உறு - தொடுகிற (வியாபித்திருக்கிற),முதல் - முக்கியமான,தனி - ஒப்பில்லாத, வாழ் - (ஆத்மாக்களை) வாழும்படி செய்கிற,பாழாய் - மூலப்ரக்ருதியாய், முதல் - முக்கியமான, தனி - ஒப்பில்லாத,சூழ்ந்து-வியாபித்து, அகன்று- குறுக்கே படர்ந்து, ஆழ்ந்து-கீழே வியாபித்து, உயர்ந்து-மேலே வியாபித்து, முடிவில் - முடிவில்லாத வஸ்துக்களாயிருப்பவனே! முதல் - (இப்படி) முக்கியமான, தனி - ஒப்பில்லாத உன்னை, உன்னை - நீயாயிருக்கிற உன்னை, நான், எனைநாள் - எந்த நாளில், வந்து - (வைகுந்தத்துக்கு) வந்து,கூடுவன் - கிட்டி அனுபவிப்பேன்.

(கருத்து) இந்த மூன்று உலகங்கள் முதலானவைகளில் ஒன்றையும்விடாமல் அவைகள் எல்லாவற்றுக்கும் நிமித்தகாரணமும் உபாதாநகாரணமுமாய் ஸஹகாரியைத் தேடாதவனுமிருக்கிறவனே! இந்த அண்டத்துக்கு உள்ளும் அதற்கு வெளியிலுமிருக்கிற எல்லாவஸ்துக்களையும் வியாபித்துக்கொண்டு, எல்லா ஆத்மாக்களும் போகங்களையும் மோக்ஷத்தையும் அடையும்படி காரியமான அவஸ்தையில் உபகாரம் செய்கிற பிரக்ருதியாயும், அறிவுள்ளவர்களாய் இருப்பதால் அதைக்காட்டிலும் உயர்ந்தவர்களும் தங்களுடைய குணமான ஜ்ஞானத்தாலே எல்லாவற்றையும் மேலும் கீழும் எல்லாப்பக்கங்களிலும் வியாபித்துக்கொண்டு முடிவில்லாதவர்களுமான ஆத்மாக்களாயுமிருக்கிறாய். இப்படி உலகங்களுக்குக்காரணமாயும் அவைகளுக்கு ஆத்மாவாயுமிருந்து அவைகளாயும் தோன்றுகிற உன்னுடைய ஆகாரத்தையும்பார்த்தேன். அதுஎனக்குப் போதாது.இந்த ஆகாரத்தைத்தவிர வேறாய், வைகுந்தத்தில் மஹிஷிகளுடனும் திருவாபரணங்களுடனும் ஆயுதங்களுடனும் பரிஜனங்களுடனும் கூடினதாய், அப்ராக்ருதமாயிருக்கிற திவ்யரூபத்தை நான்வைகுந்தத்துக்குவந்து சேர்ந்து அனுப

விக்கவேணும். இதுதான் நான் வேண்டுவது. இது எந்த நாளில் கிடைக்குமோ? (9)

---

அவ—இப்படி மறுக்கவொண்ணுதபடி ஆணையிட்டு மிகுந்த வருத்தத்துடன் ஆழ்வார் கூப்பிடும்போது, தாம் ஆசைப்பட்ட படியே தம்மை அழைத்துக்கொண்டுபோக எம்பெருமான் எழுந்தருள, அவனைக்கண்டு பிரீதியடைந்து பேசுகிறார்:—

சூழ்ந்த கன்ருழ்ந் துயர்ந்த முடிவில்பெரும் பாழேயோ
சூழ்ந்த தனிற்பெ ரியபர நன்மலர்ச் சோதீயோ
சூழ்ந்த தனிற்பெ ரியசுடர் ஞான வின்பமேயோ
சூழ்ந்த தனிற்பெரி யவென்ன வாவறச் சூழ்ந்தாயே. (ம)

(ப-ரை) சூழ்ந்து - (தன்னுடைய காரியங்களை) வியாபித்து, அகன்று - நாலு பக்கங்களிலும் வியாபித்து, ஆழ்ந்து - கீழே வியாபித்து, உயர்ந்த - மேலேயும் வியாபித்த, முடிவில்-முடிவில்லாத, பெரும் - அளவில்லாத, பாழே - மூலப்ரகிருதியாயிருக்கிறவனே! சூழ்ந்து-(அந்தப்ரகிருதியையும் தங்களுடைய ஜ்ஞானம் என்கிற குணத்தால்) வியாபித்து,அதனில்-அந்தப்பிரகிருதியைக்காட்டிலும், பெரிய-பெரியவைகளான, பர - உயர்ந்த, நல் - நல்ல, மலர்சோதி-எங்கும் விளங்குகிற ஜ்ஞானம் என்கிற பிரபையையுடையவர்களாய் இருக்கிற முக்தாத்மாக்களாயிருக்கிறவனே! சூழ்ந்து - அந்த (முக்தாத்மாக்களையும்) வியாபித்துக்கொண்டு, அதனில்பெரிய - அவர்களைக்காட்டிலும் பெரிய, சுடர்-பிரபாரூபமான, ஞானம் இன்பமே-ஆனந்தமான ஜ்ஞானமானவனே! சூழ்ந்து-(உன்னுடைய ஜ்ஞானம் என்கிறகுணத்தையும்) வியாபித்து, அதனில்பெரிய - அதைக்காட்டிலும் பெரிதான, என் அவா - (உன்னைச்சேரவேணும் என்கிற) என் ஆசையானது, அற-தீரும்படி, சூழ்ந்தாயே - என்னுடன் சேர்ந்துவிட்டாய்.

(கருத்து) தன்னிடத்தில் உண்டான மஹத் அஹங்காரம் முதலான எல்லா வஸ்துக்களையும் மேலும் கீழும் நாலு பக்கங்களிலும் வியாபித்துக்கொண்டு ஸ்வரூபநாசமில்லாமல் அளவில்லாமல் இருக்கிற மூல ப்ரகிருதியையும், அதைச் சுற்றி எங்கும் ஜ்ஞானம் என்கிற குணத்தால் வியாபித்துக்கொண்டு அறிவுள்

ளவர்களாகையால் அதைக் காட்டிலுமுயர்ந்தவர்களும், ஜ்ஞாநத்தையும் ஆனந்தத்தையும், ஸ்வரூபமாகவுடையவர்களும், எங்கும் பிரகாசிக்கிற ஜ்ஞாநம் என்கிற தேஜஸைக் குணமாக உடையவர்களுமாக இருக்கிற முக்தாத்மாக்களையும், அவர்களை வியாபித்துக்கொண்டு அவர்களுக்கு வேண்டியதைச் செய்வதால் அவர்களைக்காட்டிலும் உயர்ந்ததாய், பிரபாரூபமாய் ஆனந்தமாயிருக்கிற ஸங்கல்பமாகிய ஜ்ஞானத்தையும் எப்போதும் விடாமல் சேர்ந்திருக்கிற விசேஷணங்களாக உடையவனே! அந்த ஸங்கல்ப ஜ்ஞானத்தையும் வியாபித்துக்கொண்டு பெரிதானஉன்னைப் பார்க்கவேணுமென்கிற என்னுடைய ஆசையானது முழுவதும் தீரும்படி என்னைச் சூழ்ந்தாய். அமிருத ஸமுத்ரத்தில் ஒரு தேன்துளி விழுந்திருப்பதுபோல், அளவில்லாத ஆனந்தரூபமான உனக்குள்ளே நான் அடங்கும்படி அளவில்லாமல் உயர்ந்ததான விபூதிகளாலே அலங்கரிக்கப்பட்ட உன்னை மிகவும் தெளிவாக எனக்குக் காட்டி என்னுடன் சேர்ந்துவிட்டாய்.

குறிப்பு— பிரகிருதிக்கு மேல் அளவில்லை என்று சொன்னது சுத்த ஸத்துவம் என்கிற த்ரவியத்துடன் சேருமிடத்தில் அன்று. அங்கே அளவுள்ளதுதான். மற்ற இடங்களில் அளவில்லை.

இ—ம். அதனில் - என்கிற மூன்று சொற்களில் இல் ஐந்தாம் வேற்றுமை யுருபு. அதைக்காட்டிலும் என்பது பொருள்.

---

அவாவறச்சூ ழரியை யயனை யரனை யலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோ பன்சொன்ன
அவாவி லந்தாதி களாலிவை யாயிர மும்முடிந்த
அவாவிலந் தாதியிப் பத்தறிந் தார்பிறந் தாருயர்ந்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

(ப-ரை) அயனை - பிரம்மாவை உடம்பாக உடையவனும், அரனை - ருத்திரனை உடம்பாக உடையவனும், அவா - ஆசையானது, அற - தீரும்படி, சூழ்-ஆச்ரிதர்களோடு சேரும் ஸ்வபாவமுள்ளவனுமான, அரியை, அலற்றி - இடைவிடாமல் கூப்பிட்டு, அவா அற்று-ஆசை தீர்ந்து,வீடு-மோக்ஷத்தை, பெற்ற-அடைந்த,

குருகூர் சடகோபன் சொன்ன, இவையாயிரமும்-இந்தப்பாட்டுக் களாயிரமும், அவாவில் - (எம்பெருமானிடத்தில் உள்ள) ஆசையினால், அந்தாதிகள் - அந்தாதி ரூபமாய் பிறந்தவை. முடிந்த அவாவில் - முடிந்த ஆசையால், (உண்டான), அந்தாதி- அந்தாதியான, இ பத்து - இந்தப் பத்துப்பாட்டுக்களை, அறிந்தார்-அறிந்தவர்கள், உயர்ந்தே பிறந்தார் - உயர்ந்தே பிறந்தவர்கள்.

(கருத்து) பிரம்மா ருத்திரன் முதலான பிரகிருதி மண்டலத்திலிருக்கிற எல்லாவற்றுக்கும் ஆத்மாவும், ஆச்ரிதர்களுடைய ஆசைதீரும்படி அவர்களுடன் சேரும் ஸ்வபாவத்தையுடையவனும், எல்லாவிதமான தோஷங்களுக்கும் விரோதியாய் அளவில்லாமலும் கணக்கில்லாமலும் இருக்கிற நல்ல குணங்களுக்கு இருப்பிடமாய் அப்ராகிருதமான தனக்கேயுள்ள திருமேனியையும் திருவாபரணங்களையும், திவ்யாயுதங்களையும், மஹிஷிகளையும், பரிஜனங்களையும், வைகுந்தமென்கிற இடத்தையுமுடையவனுமான எம்பெருமானைக் கூப்பிட்டு தன் ஆசை முழுவதும்தீரும்படி இடைவிடாமல் எல்லாவித இடையூறுகளும்போய் அளவில்லாத ஆனந்தமாகிய மோக்ஷத்தை அடைந்த குருகூர்ச் சடகோபன் அருளிச்செய்த அந்தாதிரூபங்களான ஆயிரம் பாட்டுக்களும் எம்பெருமானை அனுபவித்துப்பிரீதி உள்ளடங்காமல் பிறந்தவைகள். எம்பெருமானிடம் சேர்ந்து முடிவைஅடைந்த ஆசையினால்சொல்லப்பட்ட இந்தப்பத்துப்பாட்டுக்களையும் அர்த்தத்துடன் அறிந்தவர்கள் நித்தியஸூரிகளைக்காட்டிலும்அதிகப் பெருமையுடன் பிறந்தவர்கள்.

குறிப்பு— பிறந்து சிலநாள் கழித்துப் பிறகு பெருமையுண்டாவது உலகவழக்கம். கீழே சொன்னவர்கள் விஷயத்தில் அப்படியன்று; அவர்கள் பெருமையுடனேயே பிறந்திருக்கிறார்கள்.

இ—ம். அவாவில் - இல் என்கிற ஐந்தாம்வேற்றுமை உருபுக்கு மூன்றாம் வேற்றுமைப்பொருள். ஆல் - அசைநிலை. (11)

---

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஜ்ஞாநாநந்தமயோதேவோ ஹயக்ரீவ

ஸ்ரீமதே வேதாந்தாசார்யாய நம: ||

ப்ரஹ்மேஶாந்த꞉ ப்ரவேஶாஜ்ஜலதிஸுதயா ஸந்நிரோதா-
த்யாவாபூம்யோ꞉ ஶ்ரீவிஹாரஸ்வாதுத்வாதந்ததயா த்ருடவீர்யா-
த்விஷஹாதாச꞉ । பத்மாபத்யாஶ்ரயஶ்ரீக்ருத்வாத்ரணகரணத꞉ பா-
ணிபாதேபவித்ருத்வாத் க்ஷேத்ரதாநா ஸாத்யா ஹரி-
ரிதி ஶம்ஜீவநயந்த்ருகீர்த்த꞉ ॥ ॥ககங॥

இந்தத்திருவாய்மொழியில் எம்பெருமான் தானே மோக்ஷத்தைக்கொடுக்கிறவன் என்பது பத்துக்காரணங்களாலே சொல்லப்படுகிறது. இப்படிச்சொல்லி, ஆழ்வார் மோக்ஷத்தை அடைந்தார். அவைகளாவன— (1) பிரம்மாவுக்கும் ருத்திரனுக்கும் உள்ளே புகுந்திருப்பது; (2) பிராட்டிமேலும் தன்மேலும் ஆணையிடும்படி இருப்பது, (3) விலக்ஷணமான நீல ரத்னம்போன்ற திருமேனியையுடையவனாயிருப்பது, (4) எல்லாவற்றையும் உடம்பாக உடையவனாயிருப்பது. (5) ஆச்ரிதர்களுக்குத் திருப்திவாராத அமுதமாயிருப்பது, (6) பிராட்டிக்கு நாயகனாயிருப்பது (7) பூமியைப் பிரளயஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்தது, (8-9) புண்ணியங்களையும் பாபங்களையும் அவைகளின் பலன்களையும் அவைகளை அனுபவிக்கிறவர்களையும் நியமனம் செய்வது, (10) மோக்ஷத்தைக் கொடுப்பது. (113)

ஸ்வம் ஸ்வாநாம் கதிம் வ்யுஜ்ஜயபீதஸஹாயாஸநஶக்த-
ஸம்ராகம் ஸ்வஸ்த்ராவம் ஹத்மஹாஜாம் பஹுவிதஸஜநக்ரு-
யம் ஶ்ரீஶம்பி꞉ । தீவ்ராஜ்ஞாகம் ஸ்வஜாதே ஸ்வஜநதந-
க்ருதாத்யாஶ்ரம் ப்ராஹவாஜே ஸ்வஸ்தாதஷ்டம் ஸ்வாவாஸி-
கீர்வஸாரணிஸ்வம் மோக்ஷதம் ஶாக்ஷதோமாஹ்வ॥ ।ககச॥

இந்தப் பத்தில், எம்பெருமான் மோக்ஷத்துக்குப் போகும் வழியில் துணையாயிருக்கிறவன் என்பது பத்துக்காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன — (1) ஆச்ரிதர்களுக்கு வழித்துணையாயிருப்பது, (2) அந்த வழியில் உண்டாகும் வருத்தத்தைப் போக்குவது; (3) காரணமில்லாமல் ஆச்ரிதனை விட்டுவிடுவனோ என்று ஸந்தேஹப்படும்படியான ஆசைக்கு விஷயமாயிருப்பது; (4) பக்தி செய்கிறவர்களாலே லகுவாய் அடையப்படுவது, (5) பலவிதமாய் பக்தி பண்ணும்படி இருப்பது; (6)

தன்னைக்கொடுப்பதற்கு மிகவும் அவஸரப்படுவது. (7) தன்னைச் சேர்ந்தவர்களுடைய உடம்பில் மிகுந்த ப்ரீதியைப் பண்ணுவது. (8) அவர்களுடைய இச்சையைக்கண்டு ஸந்தோஷப்படுவது. (9) அர்ச்சிராதி மார்க்கத்தில் துணையாயிருப்பது. (10) மோக்ஷத்தைக் கொடுப்பதும், அதை அடைந்தவர்களுக்கு போக்கியமாயிருப்பதும். (114)

ஐகும் ஸெவ்யம் ஸாஹொஹ்யம் ஶாஹஸாஹஹதநாம் ஸ
வஷஹொஹ்யஷ்க்ஷுஷ்டம் ஷ்ரயஸ்தெஐதாஹஷிதம் ஷுஷெநஸா
ஶஹம் ஷ்வாஶ்ரிதாநிஷ்டஜிஷ்ணாஷ | ஹகஅஷுஹாநாராகதும் நிராவ
யிஸாஹூஜும் ஸத்ஷவ்யாம் ஸஹாயம் ஶ்ரீஶம் ஷ்ராஹ ஷ்வஷி
ஜெஃ ஷ்வயகிஹ காரணம் ஷ்வஷ்பவெஸ ஶடாரிஃ || ||கக௫||

இந்தத் திருவாய்மொழியாகிய ப்ரபந்தத்தில் எம்பெருமானே தன்னை அடைவதற்குக் காரணம் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன— (1) ஸேவிக்கத் தகுந்தவனாயிருப்பது. (2) மிகவும் போக்கியமாயிருப்பது; (3) சுபமாயும் அழகாயும் இருக்கிற திருமேனியையுடையவனாய் இருப்பது; (4) எல்லாப் போக்கியவஸ்துக்களுக்கும் மேற்பட்டுப் போக்யனாயிருப்பது; (5) மிகவும் உயர்ந்த புருஷார்த்தத்தையும், அதின் உபாயங்களையுமுண்டுபண்ணுவது; (6) பிரபத்தியினால் லகுவாய் அடையப்படுவது; (7) ஆச்ரிதர்களுடைய அநிஷ்டங்களைப் போக்குவது. (8) பக்தர்களுடைய அபிப்ராயப்படி நடப்பது; (9) ஒரு காரணமுமில்லாமல் இயற்கையாகவே எல்லாருடைய க்ஷேமத்தையும் எண்ணுவது; (10)மோக்ஷமார்க்கத்தில் துணையாயிருப்பது. (115)

ஶ்ரெஷ்யா ஷ்வீயஷ்பவெஸ ஶடஜிதஹிதயெ ஸஂஸ்ஷ்ரிதெதஷ
ஸ்ஹகும் ஜெதீயிகெ ஷ்வரஷிவாஷ்யவிஶஉஶ்ஹரோாஙஷிஜ
ஷஷ்தஷஷ்ட்ஷ| தாதீஷயிகெ ஷ்வகீயாம் ஹஹவதநாஹவெ ஷொ
ராயாஉாஸ தீஷ்ா உாஶாம் தாயெஷ யஶெஷ்டம் ஹஹவதநாஹ
வாதாவ உாக்திம் ஶடாரிஃ || ||ககசா

ஆழ்வார் தம்முடைய முதல் பிரபந்தமான திருவிருத்தத்தில் ஸம்ஸாரம் மிகவும் பொறுக்கமுடியாதது என்பதையும், இரண்டாவது பிரபந்தமான திருவாசிரியத்தில் அவனுடைய ஸ்வரூபம் முதலானவைகளை நேரில் பார்த்ததுபோல் அனுபவித்ததையும், மூன்றாவது பிரபந்தமாகிய பெரிய திருவந்தாதியில், அவனுடைய அனுபவத்தில் தமக்கு இருந்த கடுமையான ஆசையையும், கடைசி பிரபந்தமாகிய இந்தத் திருவாய்மொழியில் அவனைத் தன் இஷ்டப்படிப் பூர்ணமாக அநுபவித்ததையும் சொல்லி முக்தியை அடைந்தார். (116)

श्रीशे सीमातिवृत्तस्थिरकरुणसुसर्वज्ञसर्वस्वशक्तौ
स्वामी सर्वस्य जन्तोः स्ववरणविधये स्वीकृतास्मद्भराश्चेत्।
किं नः कृत्यं स्वसिद्ध्यै किमिह न सुलभं का
विपत्तिः कस्यानृण्यं प्रयाम इति विदुषां
माहात्म्यमन्त्ये ॥ ॥११७॥

“பிராட்டியோடு கூடினவனும் அளவில்லாமல் நிலையாயிருக்கும் கருணையும், எல்லா விஷயமான ஜ்ஞானமும், எதுவும் செய்ய சக்தியும் ஆகிய இந்த குணங்களையுடையவனும், எல்லா ஜந்துக்களுக்கும்ஸ்வாமியுமான எம்பெருமான்நம்மைரக்ஷிக்கிறசுமையை தன்னுடைய இரண்டு திருவடிகளாலே வாங்கிக்கொண்டுவிட்டால்,நம்மை ரக்ஷிப்பதற்காக இனி நாம்செய்யவேண்டியதென்ன இருக்கிறது ? நமக்கு இனி எதுதான் ஸுலபமன்று. என்ன ஆபத்து வரும்? அவனைத்தவிர வேறு எவர்களுக்கு நாம் கடன் பட்டவர்கள்? ”என்று இப்படி அறிந்தவர்களுடைய பெருமை கடைசி ப்ரபந்தத்தில் சொல்லப்படுகிறது. (117)

शास्त्रे देहातिरिक्तात्मनि तदुपिवतश्चाप्रवृत्ता
ध्याये तस्मिन्नैःश्रेयसार्थं तदुपवरणतोऽनु-
ष्ठातव्यादिवादे । तन्नन्नाचं व्याख्यो तदुपवसन्
तं स्वाङ्गाद्यशेषाकारं वेद्यं स्वविधे सक
मधुरयशान्ताकमशौरिः ॥ ॥११८॥

உடம்பைக்காட்டிலும் ஆத்மா வேறு என்பதும், அவனுக்கு எம்பெருமான் ஸ்வாமீ என்பதும், அவனுடைய அநுக்கிரஹம் முதலானவைகளைப் பெறுவதற்கு அவனே உபாயமென்பதும், அதனால் மிகுந்த புருஷார்த்தத்தை அடையவேண்டியதும், அவனிடத்தில் அபசாரம் செய்வதால் அளவில்லாமல் தாபத்தை அடைவதும், அவனிடத்தில் பக்தியுள்ளவர்களின் பெருமையும், அவர்களைக் கிட்டுவதாலே மனதின் கலக்கங்கள் தீருவதும் ஆகிய இவைகள் வேதமாகிய சாஸ்திரத்தாலே முக்கியமாய் அறியவேண்டிய விஷயங்கள் என்று மிகுந்த கருணையுள்ளவரான ஆழ்வார் தம்முடைய ப்ரபந்தத்தில் அருளிச் செய்திருக்கிறார். (118)

இத்தம் ஸம்ப்ரதாயசுத்தஸம்யமதாமேஷவண்ட்ராஹஂ
வேத ஶ்ரீஸாஸ்தாஸயாநாவேவபயத்ரவம் கதாக்ஷம் வேதக்
டிஶ: ஸத்வேக்ஷ தஸ்வ ஸாக்ஷாதம்ரிபெ்ராயவா ஸவஂஸா
க்ஷீ ஸ ஸாக்ஷீ ஸாவத்ரகேஷவி வேஸாம் ப்ரஹவதி ஹஜ
தாவேப்ரக்ஷவத்ராநாக்ஷவ: ॥ ॥௧௧௮॥

நல்ல ஸம்பிரதாயத்தாலே வந்ததும், எல்லா ஜாதிகளுக்கும் தகுந்ததுமான தமிழ் வேதமாகிய திருவாய்மொழியில் ருசியுள்ளவர்களும் அதினால் பரிசுத்தமான மனதையுடையவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இப்படி ஸ்ரீ வேங்கடநாதன் அளவில்லாத ஸந்தோஷத்தை உண்டுபண்ணினார். தம்முடைய இந்த பிரபந்தத்தின் வியாக்கியானம் நன்றாயிருப்பதற்கு எம்பெருமானிடம் மயர்வறமதி நலம்பெற்ற ஆழ்வாரே ஸாக்ஷி. அல்லது அவருக்கு இதைக்கொடுத்த ஸர்வஜ்ஞனான எம்பெருமானே ஸாக்ஷி. இதில் ஏதாவது குறையிருந்தால் தன்னை அடைந்தவர்கள் விஷயத்தில் ஒருவராலும் அசைக்கமுடியாத கிருபையையுடைய எம்பெருமான் பொறுத்துக்கொள்ளுவன். (119)

ஶ்லோக: ஶ்லோகவத்ராமதஜதிநயதஶூஜவொயா
ணட்ராவொத்ரஞாநாகமொநாயாநஹவரஸவரீவா ஹதஃ
ஶ்ராவ்ய வேதாக | வேதாந்தாசாயகஶ்ரீ வஹவதவஹவி
வேஶகடிஶோஜ்யதயம் ரத்ரா தாத்யரத்ரவஸிரநவ
மணா ரக்ஷநீ ரஜூஹதந: ॥ ॥௧௨௰॥

வேடனால் அடிக்கப்பட்ட க்ரௌஞ்ச பக்ஷியைப் பார்த்து வால்மீகிக்கு உண்டான சோகமானது ச்லோகமாக மாறினது போல், ஆழ்வாருடைய மயர்வறு மதியாகிற ஸமுத்ரத்தில் அலைகள்போல் உண்டான எம்பெருமானுடைய அநுபவங்களின் ஆனந்த பிரவாஹம் பொங்கி மேலே வழிந்ததான திருவாய் மொழியாகிய செவிக்கு இனிய வேதத்திலிருந்து, வேதாந்தாசாரியர் என்கிற ஸம்பத்தை உடையவராக எல்லாராலும் கொண்டாடப்பட்டவரும், எல்லாம் அறிந்தவருமான ஸ்ரீ வேங்கடேசனால் கடைந்து எடுக்கப்பட்டதும், அழகானதும், ஒருவித தோஷமும் இல்லாமல் எல்லா குணங்களும் நிறைந்ததுமான தாத்பர்ய ரத்நாவளி என்கிற கிரந்தமானது ஸ்ரீ ரங்கநாதனுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும். (120)

த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி முற்றிற்று.

---

ஸாரம் ப்ராப்யம் ஸம்ப்ரத்யுபநிஷதுத்த்ருத்ய நிர்ணீய
ஸம்ஸ்தாநாகாரஜாதம் ப்ரவதநஸுலபம் பாவநீயம் ।
க்ஷிப்த்வா ப்ராப்யம் ஸ்வப்ரதிஷ்டாம் நிஜாநாம் ச கஶ்ய
த்ருஷ்ட்வா ஸாஹித்ய ஹே ஹே ஶாந்திமாப: ॥

ஸர்வேச்வரனையே ஒருவன் அடையவேண்டிய புருஷார்த்தமாகப் பார்த்து, அவனுடைய கைங்கரியம் கிடைப்பதற்கு அவனே உபாயம் என்று நினைத்து, 'என்னையே உபாயமாக அடை' என்று சரமச்லோகத்தில் சொன்ன அவன் ஆஜ்ஞையைத் தன் அநுஷ்டானத்தினால் வெளியிடுகிறவரும், வேறு உபாயமில்லாதவரும் முநிச்ரேஷ்டருமான ஆழ்வார் அவனையே சரணமாக அடைந்து, ஆச்ரிதர்களுடைய அநிஷ்டங்களைப் போக்குவது முதலானவைகளுக்குக் காரணத்தை அடிக்கடி சொல்லிவிட்டு, லக்ஷ்மியோடுகூடிய எம்பெருமானை அடைந்தார். (23)

ஸா யா ஶோக: ஶ்லோகோऽபவதிதி நயாதித்வம் ஸ்ப்ருஷ்டா
நூநம் தேஷாம் ஶ்லோகாத்மஜநி ஸாரஸேத்தும் ஸரிணதி: ।
ஶ்ரோத்ரஹ்ருத்யம் ஹாஸம் ஹரிபரணரஸஜ்ஞாநஸ்கா
தீக்ஷேத்யாதீ யஸ்த நாதாந்தாகாரா த்ரவிடஸம: ॥ ॥உச॥

எவர் தன்னுடைய ஸ்வபாவத்தைப் போக்கி, ஹரியினுடைய திருவடிகளாகிற, கல்பவிருக்ஷத்திற்கு மொட்டுப்போல அலங்காரமான ரூபத்தில் குறைவில்லாத கருணைக்கு உட்பட்டவராய் பிரவேசித்தாரோ, அதுபோல் உபநிஷத்தும் தன் ரூபத்தை மாற்றிக்கொண்டு அந்த புண்யகீர்த்தியை உடைய ஆழ்வாருடைய பரபக்தியின் பரிணமமாக ஆயிற்று. முன் காலத்தில் வால்மீகி ரிஷியினுடைய சோகமானது ச்லோகமாக ஆனதுபோல். (24)

ஸதாம்ப்ரீத்யை ஸாரம் த்ராமிடநிகமஸ்யாஸ்ய க்ருதவாந்
பஹூநாம் வித்யாநாம் பஹுமதிபதம் வேங்கடபதி: |
திஶாஸௌதஶ்ரேணீத்ருடகடிதஜைத்ரத்வஜபடீ
பராமர்ஶோத்ப்ரஶ்யத்ப்ரதிதநிராபாயநிகம: ‖ ‖உ௫‖

பல வித்யைகள் பஹுமானம்பண்ணித் தங்களுக்கு இருப்பிடமாகக் கொண்டிருக்கிறவராய், திக்குக்களாகிய உப்பரிகைகளின் வரிசைகளில் உறுதியாகக் கட்டப்பட்ட ஜயஸூசகமான த்வஜத்தின் வஸ்திரங்களின் அசைதலால் இதர மதங்கள் நழுவி ஓடும்படியும் வேதத்துக்கு இடஞ்சல் இல்லாமல் போகும்படியும் செய்தவருமான வெங்கடேசன் என்னும் கவி, தமிழ் வேதத்தின் ஸாரத்தை இப்படி ஸத்துக்களின் ஸந்தோஷத்துக்காக அருளிச்செய்தார். (25)

ச்லோகத்தில் த்வஜபடீ என்று இருக்கிறது. இது ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த கிரந்தங்களைக் காட்டுகிறது. அவைகள் எல்லா இடங்களிலுமிருந்து இதர மதங்களைக் கண்டித்து, வேதத்தை உள்ளபடி அறியும்படி செய்தன. உப்பரிகையில் கட்டப்பட்ட துவஜங்களின்வஸ்திரங்கள் அசைந்து அதினாலுண்டாகும் காற்றினால் நல்ல மார்க்கத்தை மறைத்துக்கொண்டிருக்கும் பஞ்சுக்குவியலைப் பறக்கடித்து அந்த மார்க்கத்தை எல்லாரும் அறியும்படி செய்வதுபோல். (25)

உதந்வத்வ்யாஸக்த்யா வேதஸபரிஷத்ஹம்ஸக்ஷ்விதியம்
ஸுதாஸிக்தா ஸூக்தி: ஸ்வயமுதயமிச்சதி ஜநே |
நிரத்யூஹ: கோ வித்யாவலிகடஸந்த்யாநடஜடா
பரிஷ்காரோ வஜ்ராபர்வஸி யதி மஞ்ஜா நிவததி ‖உ௬‖

மநு, வியாஸர், வால்மீகி முதலான பெரியோர்களின் கூட்டத்துக்குத் தகுந்ததான, அம்ருதத்தோடு கலந்த இந்த ஸூக்தியானது ஒருவனிடத்தில் தானாகவே தோன்றுவதை ஆசைப்பட்டால், எவர்கள் அதைத் தடுக்கமுடியும்? விந்தியம் என்கிற மலையின் விசாலமான இடத்தில் ஸந்தியாகாலத்தில் கூத்தாடின ருத்ரனுடைய ஜடையில் சுழன்றுகொண்டிருந்த கங்கையானது ஒரு நொண்டியின்மேல் விழுந்தால் அதை எவர் தடுக்கமுடியும்? அது போல. (26)

த்ரமிடோபனிஷத்ஸாரம் முற்றிற்று.

கவிதார்க்கிகஸிம்ஹாய கல்யாணகுணஶாலிநே ।
ஸ்ரீமதே வேங்கடேஶாய வேதாந்தகுரவே நம: ॥

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜ மஹாதேஶிகாய நம: ॥

---



# 3-வது ஸம்புடத்தின் பாட்டுக்களின் அகராதி.

---

# அநுபந்தம் -1

ஸ்ரீ மதுரகவிகள் அருளிச்செய்த
## க ண் ணி னு ண் சி று த் தா ம் பு.

**தனியன்கள்.**

அவிதித விஷயாந்தரஶ்ஶடாரே: உபநிஷதாமுபகாநமாத்ர போக: । அபி ச குணவஶாத் ததேக ஶேஷீ மதுரகவி: ஹ்ருதயே மமாவிரஸ்து ॥

*சடகோபனைக் காட்டிலும் வேறு விஷயத்தை அறியாதவராய், அவருடைய உபநிஷத்தாகிய திருவாய்மொழியைப் பாடுவது ஒன்றாலேயே இன்பத்தை அடைந்தவராய், அவருடைய குணங்களைக்கண்டு அவர் ஒருவரையே சேஷியாக எண்ணியிருந்த மதுரகவிகள் என்னுடைய ஹ்ருதயத்தில் தோன்றவேண்டும்.*

வேறொன்றும் நானறியேன் வேதந் தமிழ்செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர் — ஏறெங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவி யாரெம்மை
யாள்வா ரவரே யரண்.

*நான் வேறொன்றையும் அறியேன்; வேதத்தின் அர்த்தத்தைத் தமிழில் வெளியிட்டவராய், சடகோபன் என்னும் மாறனென்னும் திருநாமங்களையுடைய குருகூரில் எழுந்தருளிருந்த (விருஷபம்) உயர்ந்தவரே எங்களுடைய வாழ்வுக்கு ஸாதநம் என்றுஸ்தோத்ரம் பண்ணின மதுரகவிகள் எங்களுக்கு ஸ்வாமி. அவரே நமக்கு ரக்ஷகர்.*

---

## கண்ணிநுண்சிறுத்தாம்பு.

**(கலி விருத்தம்)**

கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெரு மாயனென் னப்பனில்
நண்ணித் தென்குரு கூர்நம்பி யென்றக்கா
லண்ணிக்கு மமுதூறு மென்னா வுக்கே. (க)

(பொழிப்புரை)உடம்பில்பட்டால் உறுத்தும்படி முடிச்சுக்களை உடையதாய்,ஸூக்ஷ்மமாய் சிறியதாயிருந்தகயிற்றினால்,யசோதை தன்னைக் கட்டும்படி பண்ணுவித்துக்கொண்ட -மிகவும் ஆச்சரியமான - எனக்கு ஸ்வாமியான கண்ணன் இனியவனாயிருந்த போதிலும், அவனை விட்டு ஆழ்வாரைக் கிட்டி தென் தேசத்திலிருக்கும் 'குருகூர் நம்பி' என்று அவர் திருநாமத்தைச் சொல்லவே,கண்ணனை அனுபவிப்பதைக்காட்டிலும் அதிகமாக எனக்கு இன்பமுண்டாகும். என் நாக்குக்கே அமிருதம் ஊறும்.

நாவினால் நவிற்றி யின்ப மெய்தினேன்
மேவி னேனவன் பொன்னடி மெய்ம்மையே
தேவு மற்றறி யேன்குரு கூர்நம்பி
பாவி னின்னிசை பாடித் திரிவனே. (உ)

வாக்கினால் அவரை ஸ்தோத்ரம் பண்ணி இன்பத்தை அடைந்தேன். அவருடைய அழகான திருவடிகளை உண்மையிலே ஆச்ரயிக்கப் பெற்றேன். அவரைத் தவிர வேறு தெய்வத்தை நான் அறியவில்லை. குருகூர் நம்பி அருளிச்செய்த பாட்டுக்களின் இனிய கானத்தைப் பாடிக்கொண்டு திரிவேன்.

திரிதந் தாகிலுந் தேவபி ரானுடைக்
கரிய கோலத் திருவுருக் காண்பனான்
பெரிய வண்குரு கூர்நகர் நம்பிக்கா
ளுரிய னாயடி யேன்பெற்ற நன்மையே. (௩)

நித்தியஸூரிகளுக்குத் தலைவனான எம்பெருமானை விட்டு ஆழ்வாரிடம் நான் போயிருந்தபோதிலும், அவனுடைய கறுத்த அழகான பிராட்டியோடு கூடிய திவ்யரூபத்தை நான் ஸேவிப்பேன். மஹோதாரனான குருகூர் நம்பிக்கே சேஷனாய் அவருடைய அபிப்ராயத்தை அநுஸரித்து, இது நான் பெற்ற நன்மை.

நன்மையால் மிக்க நான்மறை யாளர்கள்
புன்மை யாகக் கருது வராதலி
லன்னையா யத்த னாயென்னை யாண்டிடுந்
தன்மை யான்சட கோபனென் நம்பியே. (௪)

நல்ல குணங்களால் உயர்ந்த நான்கு வேதங்களுக்கு நிர்வாஹகர் என்னைத் தோஷமுள்ளவன் என்று எண்ணுவர்கள். இதையே காரணமாக வைத்துக்கொண்டு என்னை விடாமல் எனக்குத்

தாயாகவும் தகப்பனாகவும் இருந்து சடகோபநம்பி என்னை அடிமையாகப் பண்ணிக்கொண்டார். இது அவருடைய உயர்ந்த ஸ்வபாவம்.

நம்பி னேன்பிறர் நன்பொரு டன்னையும்
நம்பி னேன்மட வாரையும் முன்னெலாஞ்
செம்பொன் மாடத் திருக்குரு கூர்நம்பிக்
கன்ப னாயடி யேன்சதிர்த் தேனின்றே. (ரு)

நான் ஆழ்வாரை ஆச்ரயிப்பதற்கு முன்னாலே பிறருடைய நல்ல பொருளை ஆசைப்பட்டுக்கொண்டிருந்தேன். இளமைப் பருவமுள்ள ஸ்திரீகளை இன்பத்தைக் கொடுக்கிறவர்களாக எண்ணியிருந்தேன். செம்பொன்னால் செய்யப்பட்ட வீடுகளை யுடைய திருக்குருகூரில் எழுந்தருளியிருந்த ஆழ்வார் இப் போது இவைகளையெல்லாம் மாற்றிவிட்டார். அவர் திருவடி களில் பக்தியுள்ளவனாகவும் ஆனேன். அவரை ஆச்ரயித்து இந்த ஸாமர்த்தியத்தை அடைந்தேன்.

'நன்பொருள் தன்னையும் நம்பினேன்' என்பதற்கு எம்பெரு மானுக்குச் சொந்தமான என் ஆத்மஸ்வரூபத்தை என்னதாக எண்ணியிருந்தேன் என்று கருத்து.

இன்று தொட்டு மெழுமையு மெம்பிரா
னின்று தன்புக ழேத்த வருளினான்
குன்ற மாடத் திருக்குரு கூர்நம்பி
யென்று மென்னை யிகழ்விலன் காண்மினே. (சு)

இதுமுதல் வருங்காலமெல்லாம் நிலையாயிருந்து எனக்கு உபகாரம் செய்த ஆழ்வார் தன்னுடைய நல்ல குணங்களை நான் ஸ்தோத்ரம் பண்ணும்படி என்னைத் தன்னுடைய தாஸ னாகப் பண்ணிக்கொண்டார். மலைபோல் உயர்ந்த வீடுகளையுடைய திருக்குருகூரிலிருக்கும் அவர் இனிமேலும்ஒருபோதும் என்னை கைவிடார். இதைப் பாருங்கள்.

கண்டு கொண்டென்னைக் காரிமா றப்பிரான்
பண்டை வல்வினை மாற்றி யருளினா
னெண்டி சையு மறிய வியம்புகே
னொண்ட மிழ்ச்சட கோப னருளையே. (எ)

காரியார் குமாரராய், மாறன் என்னும், சடகோபன் என்னும் திருநாமமுடையவராய் எனக்கு உபகாரம் செய்த ஆழ்வார் என்னைக் கடாக்ஷித்து, நான் முன் செய்த கர்மங்களை ஓடிப் போகும்படி செய்தருளினார். அழகிய தமிழ்ப் பாட்டுக்களை அருளிச்செய்த அவருடைய கிருபையையே எட்டு திக்கிலுள்ளவர்களும் அறியும்படி சொல்லுவேன்.

அருள்கொண் டாடு மடியவ ரின்புற
வருளி னானவ் வருமறை யின்பொரு
ளருள்கொண் டாயிர மின்றமிழ் பாடினா
னருள்கண் டீர்இவ் வுலகினில் மிக்கதே. (அ)

எம்பெருமானுடைய கிருபையைக் கொண்டாடும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆநந்தத்தையடையும்படி அறியமுடியாத வேதங்களின் உட்கருத்தை ஆழ்வார் தம் கிருபையினால் ஆயிரம் தமிழ் பாட்டுக்களால் அருளிச்செய்தார். அவருடைய கிருபை ஒன்றே எம்பெருமானுடைய கிருபையைக் காட்டிலும் இந்த உலகத்தில் உயர்ந்தது. இதைப் பாருங்கள்.

மிக்க வேதியர் வேதத்தி னுட்பொரு
ணிற்கப் பாடியென் னெஞ்சு ணிறுத்தினான்
தக்க சீர்ச்சட கோபனென் னம்பிக்காட்
புக்க காத லடிமைப்ப யனன்றே. (கூ)

ஆழ்வார் உயர்ந்த வேதமறிந்தவர்கள் படிக்கிற வேதத்தினுடைய ஸூக்ஷ்மமான அர்த்தங்கள் என் மனதில் நிலையாயிருக்கும்படி அவைகளை வைத்தார். தமக்கே தகுந்த நல்ல குணங்களையுடைய சடகோபன் என்கிற ஸ்வாமிக்குத் தாஸனாக ஆவதற்கு வேண்டிய பக்தியானது எனக்கு அப்போதே பலனைக் கொடுத்துவிட்டது.

பயனன் றாகிலும் பாங்கல ராகிலுஞ்
செயனன் றாகத் திருத்திப் பணிகொள்வான்
குயினின் றார்பொழில் சூழ்குரு கூர்நம்பி
முயல்கின் றேனுன்றன் மொய்கழற் கன்பையே. (ய)

பிறரைத் திருத்துவதினால் தமக்குப் பிரயோஜநமில்லாவிட்டாலும், அவர் அதற்குத் தகுதியில்லாதவராயிருந்தாலும்

அவர்களுடைய செய்கைகள் நன்றாக ஆகும்படி அவர்களைச் சிக்ஷித்து அவர்களிடமிருந்து கைங்கரியத்தைப் பெற்றுக்கொள்ளுவதற்காக குயில்கள் நின்று கூவுகிற தோட்டங்களையுடைய குருகூரில் எழுந்தருளியிருக்கும் என் ஸ்வாமியே! உம்முடைய திருவடிகளில் எனது பக்தி வளருவதற்காக முயற்சிசெய்கிறேன்.

அன்பன் றன்னை யடைந்தவர் கட்கெல்லா
மன்பன் தென்குரு கூர்நகர் நம்பிக்
கன்ப னய்மது ரகவி சொன்னசொ
னம்பு வார்பதி வைகுந்தங் காண்மினே. (கக)

ஆச்ரிதர்களிடத்தில் ஆசையுள்ள எம்பெருமானையடைந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லாரிடத்திலும் ஆசையுள்ள தென்குருகூர்நகர்நம்பியினிடத்தில் பக்தியுள்ளவரான மதுரகவிகள் அருளிச்செய்த இந்தப் பிரபந்தத்தை நம்புகிறவர்கள் அடையுமிடம் வைகுந்தமே. இது நிச்சயம்.

கண்ணிநுண் சிறுத்தாம்பு முற்றிற்று.

மதுரகவிகள் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ தேசிகன் அதிகாரஸங்க்ரஹத்தில்
கண்ணிநுண்சிறுத்தாம்பின் அர்த்தத்தைச் சுருக்கமாய்
அருளிச்செய்த பாசுரம்.

இன்பத்தி லிறைஞ்சுதலி லிசையும் பேற்றி
லிகழாத பல்லுறவி லிராக மாற்றில்
தன்பற்றில் வினைவிலக்கிற் றகவோக் கத்திற்
றத்துவத்தை யுணர்த்துதலிற் றன்மை யாக்கி
லன்பர்க்கே யவதரிக்கு மாய னிற்க
வருமறைக டமிழ்செய்தான் றுளே கொண்டு
துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டுந்
தொல்வழியே நல்வழிக டுணிவார் கட்கே.

---

" தேறியமா ஞானமுடன் றிருக்கோ ளூரில்
சித்திரையிற் சித்திரைநாள் வந்து தோன்றி
யாறியநல் லன்புடனே குருகூர் நம்பிக்
கனவரத மந்தரங்க வடிமை செய்து
மாறனையல் லாலென்று மறந்துந் தேவு
மற்றறியே னெனுமதுர கவியே நீமுன்
கூறியகண் ணிநுண்சிறுத்தாம் பதனிற் பாட்டுக்
குலவுபதி னென்று மெனக்குதவு நீயே. "

பிரபந்தஸாரம்.

# அநுபந்தம் II

## தமிழ் இலக்கணம்.

### 1. புணர்ச்சி விதி.

1. இரண்டு சொற்கள் சேரும்போது கீழ்ச் சொல்லின் கடைசியிலும் மேல் சொல்லின் முதலிலும் சில வேறுபாடுகள் வரும். இப்படிச் சேருவதற்குத் தமிழில் புணர்ச்சி என்றும், வடமொழியில் ஸந்தி என்றும் பெயர். கீழ்ச் சொல்லுக்கு நிலை மொழி என்றும், மேற்ச் சொல்லுக்கு வருமொழி என்றும் பெயர்.

2. நிலை மொழியின் கடைசி எழுத்தும் வருமொழியின் முதல் எழுத்தும் உயிர் எழுத்தாயிருந்தால்:—

I

(i) நிலை மொழியின் கடைசி எழுத்து இ. ஈ. ஐ - ஆயிருந்தால், நடுவில் யகரம் தோன்றும்.

(ii) அது ஏ-ஆக இருந்தால் யகரமாவது வகரமாவது தோன்றும்.

(iii) வேறு எழுத்தாயிருந்தால் வகரம் தோன்றும்.

உதாரணம்—

அஞ்சிறை + அ = அஞ்சிறைய.
விதிவழி + அடைய = விதிவழியடைய.
நுவலாதே + இருந்து = நுவலாதேயிருந்து.
உயர்வற + உயர் = உயர்வறவுயர்.

3. கு, சு, டு, து, பு, று, இவைகளுக்குக் கீழே நெட்டெழுத்தாவது, உயிர் மெய்யாவது, ஆய்தம், வல்லினம், மெல்லினம், இடையினம் இவைகளில் ஒன்றாவது வந்தால், அந்த உகரத்திற்குக் குற்றியலுகரம் என்று பெயர். அந்த உகரம், மேல் உயிர்எழுத்து வந்தால் கெடும்.

உ—ம்:— தொழுது + எழு = தொழுதெழு.
நாடு + அன் = நாடன்

குறிப்பு— ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. இவைகள் நெட்டெழுத்துக்கள். மெய்யெழுத்துக்களின் மேல் வரும் உயிர் எழுத்துக்கள் உயிர் மெய். உதாரணத்தில் 'ழு' என்பது உயிர் மெய். அஃது என்பதில் மூன்று புள்ளி உள்ளது ஆய்தம். க, ச, ட, த, ப, ற, என்ற ஆறு மெய் எழுத்தும் வல்லினம். ங, ஞ, ண, ந, ம, ன, என்ற ஆறும் மெல்லினம். ய, ர, ல, வ, ழ, ள, என்ற ஆறும் இடையினம்.

4. குற்றியலுகாரத்திற்கு மேலே யகரம் வந்தால், அந்த உகரம் இகரமாகும்.

சரணம்புக்கு + யாம் = சரணம்புக்கியாம்.

5. குற்றியலுகாரமல்லாத உகரத்துக்கு முற்று உகரம் என்று பெயர். அது சில இடங்களில் கெடும்.

உ—ம்:— உயர்வு + அற = உயர்வற.
எழு + என் மனனே = எழென்மனனே.

6. அ, இ, உ, எ, (வினா) இந்த நான்கு எழுத்துக்களின் மேல் உயிரெழுத்து வந்தால் வகரம் தோன்றும்.

உ—ம்:— எ + உயிர் = எவ்வுயிர்.

குறிப்பு:— இந்த விதிப்படி வகரம் தோன்ற, எவ் உயிர் என்று ஆயிற்று. (7)-ii விதிப்படி வகரம் இரட்டித்தது.

II

7. நிலைமொழியின் கடைசியில் உயிரும் வருமொழி முதலில் மெய்யும் இருந்தால்:—

(i) அ, இ, உ, எ, (வினா) எழுத்துக்கு மேல் யகரம் வந்தால், வகரம் வரும்.

(ii) வேறு மெய் எழுத்து வந்தால் அது இரட்டிக்கும்.

உ—ம்:— எ + யானை = எவ்யானை
அ + கலம் = அக்கலம்
எ + பால் = எப்பால்
இ + நேர் = இந்நேர்.

குறிப்பு— ஒரு சொல்லுக்கு முதலில் வருகிற மெய்யெழுத்துக்கள்— க, ச, த, ப, ஞ, ஞ, ந, ம, ய, வ, ஆகிய பத்து.

8. நிலைமொழியின் கடைசி எழுத்து உயிராயும், வருமொழியின் முதலில் க, ச, த, ப, எழுத்துக்கள் வந்தால், அது பெரும்பாலும் இரட்டிக்கும்.

உ—ம்:— அடங்க + கண்டு = அடங்கக்கண்டு
அறுவகை + சமயம் = அறுவகைச்சமயம்
பிறவி + துயர் = பிறவித்துயர்.
ஈசனை + பாடி = ஈசனைப்பாடி

III

9. நிலைமொழியின் கடைசி எழுத்து மெய் எழுத்தாயும் வருமொழியின் முதல் எழுத்து உயிர் எழுத்தாயுமிருந்தால்:—

(i) உயிர் மெய் எழுத்தின்மேல் ஏறிவரும்.

உ—ம்:— உயர்நலம் + உடையவன் = உயர்நலமுடையவன்

(ii) தனிக் குறில்மேல் இருக்கும் மெய்யெழுத்து இரட்டிக்கும்.

உ—ம்:— மன் + உயிர் = மன்னுயிர்
இல் + அது = இல்லது
தண் + அந்துழாய் = தண்ணந்துழாய்.

குறிப்பு— (1) சொல்லின் கடைசியில் வரும் மெய்யெழுத்துக்கள்— ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள,

(2) அ, இ, உ, எ, ஒ, இவ்வைந்தும் குறில்.

IV

10. நிலைமொழியின் கடைசியிலும், வருமொழியின் முதலிலும் மெய் எழுத்து இருந்தால்:—

நிலைமொழியின் கடைசியெழுத்து, யகரம் தவிர, வேறு மெய் எழுத்தாயிருந்தால் வருமொழி முதல் யகரமாயிருந்தால் நடுவில் இகரம் தோன்றும்.

உ—ம்:— வேள் + யாவன் = வேளியாவன்.
மண் + யாப்பு = மண்ணியாப்பு.

11. (i) நிலைமொழியின் கடைசி எழுத்து மகரமாயிருந்தால், மகரம்போய் அந்தச் சொல் உயிரெழுத்தைக் கடைசியிலுள்ள சொல்லைப்போல் புணரும்.

உ—ம்:— நீயும் + நின் = நீயுநின்
ஞானம் + சுடர் = ஞானச்சுடர்
மாயம் + பிரான் = மாயப்பிரான்.

இங்கே மகரம்போய் 8-வது விதிப்படி சகரமும் பகரமும் இரட்டித்தது

(ii) மகரத்தின்மேல் வல்லினம் வந்தால், மகரம் கெடாமல் வல்லினத்துக்கு இனமான மெய் எழுத்தாகும்.

உ—ம்:— அம் + சிறைய = அஞ்சிறைய

(iii) மகரத்தின்மேல் உயிர் எழுத்து வந்தால் மகரம் போய் விடும்.

உ—ம்:— வட்டம் + ஆழி = வட்டவாழி

12. நிலைமொழியின் கடைசி எழுத்து ணகரமும் னகரமும் ஆனால், வேற்றுமைப்புணர்ச்சியில், க, ச, த, ப வருமொழியின் முதலில் வந்தால், அவைகள் முறையே டகரமாயும், றகரமாயும் ஆகும். வேறு புணர்ச்சியில் மாறுதல் இல்லை.

உ—ம்:— தாமரைக்கண் + பிரான் = தாமரைக்கட்பிரான்.
இங்கே தாமரைக்கண்ணையுடைய பிரான் என்று பொருள்.
பொன் + குடம் = பொற்குடம்.
இங்கே பொன்னால் செய்யப்பட்ட குடம் என்று பொருள்.

13. நிலைமொழியின் கடைசியில் ணகரமும், னகரமும் இருந்து, அவைகள் தனிக்குறிலுக்குமேல் வராதிருந்தால், வருமொழி முதலில் வரும் நகரம் திரிந்தபின் அவைகள் கெடும்.

உ—ம்:— தூண் + நன்று = தூணன்று.
எம்மான் + நிகரில் = எம்மானிகரில்
நாரணன் + நான்முகன் = நாரணனான்முகன்.

14. நிலைமொழியின் கடைசியில் ல, ள வந்து வருமொழி முதலில் க, ச, த, ப வந்தால் வேற்றுமைப்புணர்ச்சியில் அவைகள் றகரமாகவும், டகரமாகவும் ஆகும். வேறு புணர்ச்சியில் இப்படித் திரிந்தும், திரியாமலும் வரும். மெல்லினம் வந்தால் னகரமும் ணகரமும் ஆகும். இடையினம் வந்தால் வேறுபாடில்லை.

உ—ம்:— நாள் + கடலை = நாட்கடலை
நாள் + மலர் = நாண்மலர்

மலராள் + மைந்தன் = மலராண்மைந்தன்
புனல் + படப்பை = புனற்படப்பை

15. நிலைமொழியின் கடைசி எழுத்து ல, ள ஆகவிருந்து, அவைகள் தனிக்குறிலுக்குமேல் வராதிருந்தால், வருமொழியின் முதல் தகரமும், நகரமும் திரிந்தபின் அவைகள் கெடும்.

உ—ம்:— எழில் + நாரணன் = எழிறுாரணன்
வடிவினுள் + நின்ற = வடிவினுணின்ற
நாள் + தோறும் = நாடோறும்
தோன்றல் + தீயன் = தோன்றறீயன்

16. (i) நிலைமொழியின் கடைசியில் ய, ர, ழ வந்து, வருமொழிமுதலில் க,ச, த, ப வந்தால், வேற்றுமைப் புணர்ச்சி அல்லாத இடங்களில் சில வேளை வருமொழி முதல் எழுத்து இரட்டிக்கும். வேற்றுமைப்புணர்ச்சியில் இரட்டிக்கலாம். அல்லது க, ச, த, ப வைச்சேர்ந்த மெல்லினம் தோன்றும்.

உ—ம்:— மெய் + கீர்த்தி = மெய்க்கீர்த்தி
குருகூர் + சடகோபன்=குருகூர்ச்சடகோபன்
யாழ் + கருவி = யாழ்க்கருவி
வேய் + குழல் = வேய்க்குழல், வேய்ங்குழல்

(ii) நிலைமொழியின் கடைசியில் வரும் யகரம் தனிக்குற்றெழுத்தின்மேல் வந்தால், வருமொழி முதலில் வருகிற ஞ,ந,ம இரட்டிக்கும்.

உ—ம்;— மெய் + ஞானம் = மெய்ஞ்ஞானம்
மெய் + நீண்டது = மெய்ந்நீண்டது
மெய் + மாண்டது — மெய்ம்மாண்டது

17. வருமொழியின் முதலில் வருகிற தகரம், நிலைமொழியின் கடைசியில் ன, ல, க்குமேல் வந்தால் றகரமாகவும், ணகரத்திற்கும், ளகரத்திற்கும் மேல் வந்தால் டகரமாகவும் ஆகும்.

உ—ம்:— நாரணன் + தன் = நாரணன்றன்.
நால் + தடந்தோள் = நாற்றடந்தோள்.
அவர்கண் + தங்காது = அவர்கண்டங்காது.
முள் + தீது = முட்டீது.

18. வருமொழியின் முதலில் வருகிற நகரமானது நிலைமொழியின் கடைசியில் வருகிற னகரத்திற்கும் லகரத்திற்கும் மேலே வந்தால் னகரமாகவும், ணகரத்திற்கும் ளகரத்திற்கும் மேல் வந்தால் ணகரமாகவும் ஆகும்.

உ—ம்:— என் + நீர்மை = என்னீர்மை.
உண்டைவில் + நிறத்தில் = உண்டைவின் னிறத்தில்.
நுண் + நேரிடை = நுண்ணேரிடை.
முள் + நன்று = முண்ணன்று.

குறிப்பு:— (i) இந்த விதிகள் பொதுவான விதிகள். சில விடங்களில் வேறு விதமாயும் புணர்ச்சி இருக்கும். அவைகளை அங்கங்கே கண்டுகொள்ளவும்.

(ii) பெயர்ச்சொற்கள் வேற்றுமை உருபுகளோடும், பகுதிகள், விகுதிகளோடும் சேரும்போது கீழ்ச்சொன்ன படியே வேறுபாடுகள் வரும்.

19. (i) மையோடு முடிகிற பண்புச்சொற்களில் ஈறு கெடும்
உ—ம்;— சிறுமை + அன் = சிறுவன்.

(ii) நடுவிலிருக்கும் உகரம் இகரமாகும்.
உ—ம்:— சிறுமை + அன் = சிறியன்.

(iii) முதலிலிருக்கும் குறில் நீளும்.
உ—ம்:— முதுமை + ஊர் = மூதூர்.

(iv) முதலில் இருக்கும் அகரம், ஐகாரமாகும்.
உ—ம்:— பசுமை + தார் = பைந்தார்.
இதில் நடுவிலிருக்கும் சுவும் கெட்டது.

(v) சொல்லில் இருக்கும் மெய் எழுத்து இரட்டிக்கும்.
உ—ம்:— நடுமை + ஆறு = நட்டாறு.

(vi) சொல்லில் இருக்கும் மெய் எழுத்து திரியும்.
உ—ம்:— வெம்மை + உயிர் = வெவ்வுயிர்.

(vii) வருகிற வல்லெழுத்துக்கு இன எழுத்து மிகும்.
உ—ம்:— பசுமை + தார் = பைந்தார்.

(viii) இவைபோல் வேறு விகாரங்களும் வரும்.

உ—ம்:— கருமை + மேனி = கார்மேனி.
இனிமை + சொல் = இன்சொல்;
உடமை + அன் = உடையவன்;
தூய்மை + மலர் = தூமலர்;
தூய்மை + அ = தூய்ய.

---

## 2. பகுபதம்.

20. பொருள், இடம், காலம், உறுப்பு (அவயவம்) குணம், தொழில், ஆகிய இவைகளின்மேல் விகுதிகள் வந்தால் வேறு பெயர்ச்சொற்களாகும்.

உ—ம்.— பொன் + அன் = பொன்னன், பொன்னை யுடையவன்.
தாமரை + ஆள் = தாமரையாள், தாமரை யிலிருப்பவள்.
வானம் + அர் = வானவர், வானத்திலிருப் பவர்கள்.
திருவோணம் + ஆன் = திருவோணத்தான் திருவோணத்தில் பிறந்தவன்.
கோவைவாய் + ஆள் = கோவைவாயாள், கோவைவாயையுடையவள்.
கொடுமை + அன் = கொடியவன்.
குடக்கூத்து + அன் = குடக்கூத்தன்.

குறிப்பு:— இவ்விதமான சொற்கள் விகுதிகளோடு சேரும்போது, அத்து, அ முதலான அர்த்தமில்லாத சில சொற்கள் நடுவில்வரும். அவைகளுக்குச் சாரியை என்று பெயர். (39-வது பாராவைப் பார்க்க.) மற்ற விகாரங்கள் புணர்ச்சி விதி களால் வருகின்றன.

21. இவைகளோடு சேரும் விகுதிகளாவன:—

| | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| தன்மை— | என், ஏன், அல், அன் | அம், ஆம், எம், ஏம், ஓம். |
| முன்னிலை— | ஐ, ஆய், இ. | மின், இர், ஈர் |

| | | ஒருமை | பன்மை. |
|---|---|---|---|
| படர்க்கை | ஆண்பால் | அன், ஆன். | |
| | பெண்பால் | அள், ஆள். | |
| | பலர் பால் | | அர், ஆர், ப, மார். |
| | ஒன்றன்பால் | டு, து, று. | |
| | பலவின் பால் | | அ, ஆ. |

முறையே உதாரணங்கள்:— கரியன், கரியான்; கரியம், கரியாம், கரியெம், கரியேம், கரியோம்; இவைகள் தன்மைப் பெயர்ச் சொற்கள். கரியை, கரியாய், வில்லி; கரியிர், கரியீர், இவைகள் முன்னிலைப் பெயர்ச்சொற்கள். கரியன், கரியான், கரியள், கரியாள்; கரியர், கரியார், தாட்டு; கரியன, இவைகள் படர்க்கைப் பெயர்ச் சொற்கள்.

இவைகள் கருமை, வில் என்கிற சொற்களோடு சேர்ந்து வருகின்றன.

22. வினைப்பகுதிகள் மேல் இந்த விகுதிகளைச் சேர்த்தால், வினைச்சொற்களாகும். முறையே உதாரணங்கள்:— நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பன்; நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம். இவைகள் தன்மை வினைச் சொற்கள். நடந்தனை, நடந்தாய், சேறி; நடமின், நடந்தனிர், நடந்தீர், இவைகள் முன்னிலை வினைச்சொற்கள். நடந்தனன் நடந்தான், நடந்தனள், நடந்தாள்; நடந்தனர், நடந்தார், நடப்ப, நடந்தது, போயிற்று, நடமார், நடந்தன, நடவா. இவைகள் படர்க்கை வினைச்சொற்கள்.

குறிப்பு:— தன்னைச் சொல்லுகிற சொல் தன்மை. எதிரில் நிற்கிறவர்களைச் சொல்லுவது முன்னிலை. மற்றவைகளைச் சொல்வது படர்க்கை. ஆணைச்சொல்வது ஆண்பால். பெண்ணைச்சொல்லுவது பெண்பால். இவர்களில் பலரைச்சொல்லுவது பலர்பால். அறிவில்லாத ஒன்றைச் சொல்லுவது ஒன்றன்பால். அவைகளில் பலவற்றைச் சொல்லுவது பலவின்பால். ஒருமையென்பது ஒன்றைச் சொல்வது. பலவற்றைச் சொல்வது பன்மை.

23. வினைச்சொற்களில் பகுதிக்கும் விகுதிக்கும் நடுவில் வரும் காலத்தைக் காட்டும் எழுத்துக்களுக்கு வினை இடைநிலை என்று பெயர். அவைகளாவன:—

போனகாலம்— த, ட, ற, என்கிற மெய்களும் இன் என்பதும், யகரமும்.

நிகழ்காலம்—ஆநின்று, கின்று, கிறு, ஆகிடந்து, ஆவிருந்து

வருங்காலம்— ப, வ, என்கிற மெய்கள். ககரம்.

முறையே உதாரணங்கள்- நடந்தான், உண்டான், சென்றான். சொல்லியது, சொன்னது. போயது. இவைகள் போனகாலச் சொற்கள் இவைகளில், இன் என்பது இ- என்றும், இ இல்லாமல் ன- என்றும் வரும். நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறான். உண்ணாகிடந்தான், உண்ணாவிருந்தான், என்பவைகள் நிகழ்காலச்சொற்கள். நடப்பான், வருவான், செய்கேன், இவைகள் வருங்காலச்சொற்கள்.

24. சில இடங்களில் இடைநிலை இல்லாமல் விகுதிகளே காலம் காட்டும். அவைகளாவன— று, றும் இரண்டும் போனகாலத்தையும் வருங்காலத்தையும்; து, தும், இரண்டும் போனகாலத்தையும், வருங்காலத்தையும்; டு, டும்- இரண்டும் போனகாலத்தையும்; கு, கும்- எதிர்காலத்தையும் காட்டும். இவைகள் தன்மையிலேயே வரும். மின் விகுதியும், இகர விகுதியும், மார் விகுதியும் வரும் காலத்தையும்; ப என்பது, போனகாலத்தையும், வருங்காலத்தையும்; செய்யும் என்பதுபோன்ற சொற்கள், நிகழ்காலத்தையும், வருங்காலத்தையும்; எதிர்மறை ஆகார விகுதி மூன்று காலங்களையும் காட்டும். முறையே. உதாரணங்கள்:—சென்று (சென்றேன்) சென்றும்(சென்றோம்) போனகாலம். சேறு (செல்வேன்) சேறும் (செல்வோம்) வந்து (வந்தேன்) வந்தும் (வந்தோம்) வருது (வருவேன்) வருதும் (வருவோம்) உண்டு (உண்டேன்) உண்டும் (உண்டோம்) உண்டு (உண்பேன்) உண்கும் (உண்போம்.) சேறி (செல்வாய்) உண்மார் (உண்பார்) உண்ப (உண்டார்) உண்ப (உண்பார்) உண்ணும். எதிர்மறை உண்ணா (சாப்பிடவில்லை, சாப்பிடுகிறதில்லை, சாப்பிடுவதில்லை.)

## 3. பெயர்ச்சொற்கள்.

25. ஆண்பாலும் பெண்பாலும் ஒருமைச் சொற்கள். பலர்பால் இவைகளின் பன்மைச்சொல். அது ரகாத்துடனும்,

கள் என்பதுடனும் முடியும். உதாரணங்கள்:—அவர், தேவிமார், தோழிகள். ஒன்றன்பால் து- என்னும் விகுதியோடு முடியும். இது ஒருமைச்சொல். இதன் பன்மைக்குப் பலவின்பால் என்று பெயர். அது வை,அ,கள், இவைகளைக்கொண்டு முடியும். உதாரணங்கள்.— அது, அவை, கரியன, யானைகள்.

26. தன்மை, முன்னிலை, படர்க்கை- என்று பெயர்ச்சொற்கள் மூன்று வகைப்படும், அவைகளில் யான், நான், யாம், நாம் இவைகள் தன்மைச் சொற்கள். நீ, நீர், நீவிர், நீயிர், எல்லீர்- இவைகள் முன்னிலைச் சொற்கள். மற்றவைகள் படர்க்கைச்சொற்கள். தொழிற்பெயர்கள் படர்க்கைச்சொற்களாகவே இருக்கும். வினையாலணையும் பெயர் மூன்று இடங்களிலும் வரும். உதாரணங்கள்.-வருகை, மறதி-இவைகள் தொழிற்பெயர்கள், உண்டேனை- தன்மை. உண்டாய்க்கு- முன்னிலை (உண்ட உனக்கு) உண்டானது (உண்டவனுடைய) படர்க்கை. தொழிற்பெயர் என்பது வினையைக்காட்டும் சொல். வினையால் அணையும் பெயர் என்பது வினைமுற்றே பெயர்ச்சொல்லாய் வருவது.

27. "முன்காலத்தில் நரசிங்கன், தூணிலிருந்துவந்து ப்ரஹ்லாதனுக்காக இரணியனுடைய மார்பை நகங்களால் பிளந்தான்" என்கிற வாக்கியத்தில்- நரசிங்கன் என்பது முக்கியமான சொல். அதற்கு எழுவாய் என்றும் வடமொழியில் கர்த்தா என்றும் பெயர். அவன் செய்த வேலை பிளந்தது. பிளந்தான் என்கிற சொல்லுக்குப் பயனிலை என்றும் வடமொழியில் கிரியை என்றும் பெயர். மார்பை என்பது இரண்டாம் வேற்றுமை; நகங்களால் என்பது மூன்றும் வேற்றுமை; பிரஹ்லாதனுக்கு என்பது நான்காம் வேற்றுமை; தூணிலிருந்து என்பது ஐந்தாம் வேற்றுமை; இரணியனுடைய என்பது ஆறும் வேற்றுமை; முன்காலத்தில் என்பது ஏழாம் வேற்றுமை — என்று சொல்லப்படுகின்றன. அவைகளுக்கு உருபுகளாவன—

2-வது வேற்றுமைக்கு ஐ.
3- ,, ஆல், ஆன், ஒடு, ஓடு.
உ—ம்:— மகனோடு தந்தை வந்தான்.
4- ,, கு.

5-வது வேற்றுமைக்கு இல், இன்.
6- ,, அது, ஆது, அ.
உ—ம்:— நின கைகள்.
7- ,, கண், கால், கடை, இடை, தலை, வாய், திசை, வயின், முன், சார், வலம், இடம், மேல், கீழ், புடை, முதல், பின், பாடு, அளை, தேம், உழை, வழி, உழி, உளி, உள், அகம், புறம், இல்.

ஒருவனைக் கூப்பிடும்போது எட்டாவது அல்லது விளி வேற்றுமை வரும். உ—ம்:— நாரை, நாராய்; அளியத்தாள்—அளியத்தாய்; இறைவன்—இறைவ; குருகு-குருகே; தோழி—தோழீ; அன்னங்கள்- அன்னங்காள்; மதுசூதன்- மதுசூதா.

28. வேற்றுமை உருபுகளைப் பெறும்போது யான் என் என்றும், நாம், நம் என்றும், யாம், எம், என்றும், நீ நின் உன் என்றும், நீர் நும் என்றும் மாறும்.

நான், நீயிர், நீவிர் முதல் வேற்றுமையாகவே வரும்.

## 4. வினைச்சொற்கள்.

29. வினைச் சொற்கள் வினைமுற்று என்றும், பெயரெச்சம் என்றும், வினையெச்சம் என்றும் மூன்று வகைப்படும். இவைகளில் வினைமுற்றானது நட, வா, முதலான பகுதிகளுடன் 21வ–து பாராவில் சொல்லப்பட்ட விகுதிகளையும் காலம் காட்டுவதாக 23–வது பாராவில் சொன்ன இடைநிலைகளையும் சேர்த்து உண்டாகும் சொற்கள். இவைகளுக்கு உ–ம்:— 23–வது பாரா வில் காட்டப்பட்டது. இவைகள் காலத்தை வெளிப்படையாகக் காட்டுவதால் தெரிநிலைவினைமுற்று என்று சொல்லப்படும். காலத்தைக் குறிப்பாகக்காட்டுவதற்குக் குறிப்பு வினைமுற்று என்று பெயர்.

உ—ம்:— தாயன், உளன், உளது, உள.

வேறு, உண்டு, இல்லை என்கிற குறிப்பு வினைமுற்றுக்கள் ஐந்து பால்களுக்கும் மூன்று இடங்களுக்கும் பொது.

30. ஒருவனை ஒரு வேலைசெய்யும்படி ஏவும்போது சொல்லுகிற சொல்லுக்கு ஏவல் வினைமுற்று என்று பெயர். உ—ம்:— உண், உண்ணாய், இவைகள் ஒருமைச்சொற்கள். எதிர்மறை, உண்ணல், உண்ணேல், மருல், உண்மின், உண்ணீர், உண்ணும். இவைகள் பன்மை ஏவற் சொற்கள்

31. மரியாதையாய் பிரார்த்திக்கும்போது சொல்லும் சொற்கள் வியங்கோள் வினைகள். இவைகளுக்கு விகுதிகள், க, இய, இயர். உதாரணம்— வாழ்க, வாழிய, வாழியர்.

ஏவற் சொற்களும், வியங்கோள் சொற்களும் வருங்காலத்தையே காட்டும்.

(32) எதிர்மறை விகுதி ஆ.

உ—ம்:— செய்யான், செய்யாள், செய்யார், செய்யாது, செய்யா.

## பெயரேச்சம்.

33. பெயர்ச்சொல்லைக்கொண்டு முடிகிற வினைச்சொற்கள் பெயரெச்சம்,

விகுதிகள் அ, உம். உ—ம்:— போனகாலம்—செய்த; நிகழ்காலம்—செய்கிற; வருங்காலம்—செய்யும். ஆகும் என்பது ஆம் என்றும் வரும்.

குறிப்பு— உள்ள, பெரிய, புதிய, இலைய, முகத்த.

எதிர்மறை— உண்ணாத, செய்யாத, இல்லாத, அல்லாத. இவைகள் ஈறு கெட்டும் வரும். உ—ம்:— உண்ணா, செய்யா, இல்லா, அல்லா.

## வினையேச்சம்.

34. வினைச்சொற்களைக்கொண்டு முடியும் வினைச்சொற்கள் வினையெச்சம்.

போனகாலவிகுதிகள்:— உ, இ, ய், பு, ஆ, ஊ, என;

உ—ம்:— நடந்து, ஓடி, போய், உண்குபு (உண்டு) உண்ணா, (உண்டு) உண்டென, (உண்டதால்)

நிகழ்கால விகுதி— அ. உ—ம்:— நடக்க.

வருங்கால விகுதிகள்— இன், ஆல், கால், கு, இய, இயர், வான், பான், பாக்கு, கடை, கண், வழி, இடத்து, உம்.

உதாரணங்கள்:— உண்ணின், உண்டால், உண்டாக்கால், உணற்கு: உண்ணிய, உண்ணியர், வருவான், உண்பான், உண்பாக்கு, செய்தக்கடை, செய்தக்கண், செய்தவழி,செய்தவிடத்து, காண்டலும்,

குறிப்புவினையெச்ச விகுதிகள்— அ, றி, து, அல், மல், கால், கடை, வழி, இடத்து,

உதாரணங்கள்:— மெல்ல, அன்றி, அல்லது, அல்லால், அல்லாமல், அல்லாக்கால், அல்லாக்கடை, அல்லாவழி, அல்லாவிடத்து.

எதிர்மறை வினையெச்ச விகுதிகள்— மல், மை, மே,

உ—ம்:— உண்ணுமல், உண்ணுமை, உண்ணுமே.

35. (i) தொழிற்பெயர். விகுதிகள்— தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, அரவு, ஆனை, மை, து, ஆல், இல்.

உ—ம்:— நடத்தல், ஆடல், வாட்டம், கொலை, நடக்கை, பார்வை, போக்கு, நடப்பு, வரவு, மறதி, உணர்ச்சி, கல்வி, விக்குள், (விக்கல்) சாக்காடு (சாதல்) கோட்பாடு (கொள்கை) தேற்றரவு (தேற்றுதல்) வாரானை(வருதல்) நடவாமை, பாய்த்து (பாய்தல்) தழால் (தழுவல்) எழில் (எழுதல்)

(ii) சில பகுதிகளே தொழிற்பெயர்களாகும்.

உ—ம்:— அடி, அறி, உரை, கெடு.

பகுதி திரிந்துவருகிறவைகள்,— கோள், கேடு, இடையீடு.

36. பண்புப்பெயர் விகுதிகள்— மை, ஐ, சி, பு, உ, கு, றி, று, அம், நர், பம்.

உ—ம்:— நன்மை, தொல்லை, மாட்சி, மாண்பு, மழவு, நன்கு, நன்றி, கன்று, நலம், நன்னர், திட்பம்.

37. வேறு விகுதிகள்— இ.

உ—ம்.— அலரி-அலர்வது (புஷ்பம்)

ஐ: பறவை. பறப்பது, பக்ஷி.

அம்: எச்சம்—எஞ்சுவது எச்சம், சந்ததி

இ. ஊருணி—ஊரரரால் நீருண்ணப்படுவது. (குளம்)

ஐ. தொடை—தொடுக்கப்படுவது, மாலை.

அம். நீத்தம்—நீந்தப்படுவது நீத்தம், (வெள்ளம்)

இ. மண்வெட்டி — மண்ணை வெட்டும் கருவி.
ஐ. பார்வை — பார்ப்பதற்குக்கருவி, கண்.
அம். நோக்கம்—நோக்குவதற்குக் கருவி, கண்.

38. விடு, ஒழி, இவைகளுக்குப் பொருள் துணிவு.
உ—ம்:— செய்துவிட்டான், விட்டொழிந்தான்.

படு. —பொருள் தற்செயல். உ—ம்:— அடித்துக்கொண்டான். கொள் உண்—செய்ப்பாட்டுவினை, உ—ம்:— கட்டப்பட்டான், கட்டுண்டான்.

இரு, இடு, உறு, இவைகளுக்குப் பகுதியின் அர்த்தமே பொருள். வேறு அர்த்தமில்லை.

உ—ம்:— எழுந்திருக்கிறான் (எழுந்தான்) உரைத்திடுகின்றான் (உரைக்கின்றான்.) சொல்லுறுகின்றான் (சொல்கிறான்.)

## 4. இடைச்சொல், உரிச்சொல்.

39. பெயர்ச்சொல்லுடனும், வினைச்சொல்லுடனும் சேர்ந்தே வருமவைகள் இடைச்சொற்கள். அவைகள் எட்டு வகையாகும்.

(i) ஐ முதலான வேற்றுமை உருபுகள். 27 பாராவைப் பார்க்க.

(ii) விகுதிகள் 21 பாராவை பார்க்க.

(iii) சாரியை— இரண்டு சொற்கள் சேரும்போதும், வேற்றுமை உருபுகள் பெயர்ச்சொற்களோடு சேரும் போதும், விகுதிகள் பகுதிகளோடு சேரும்போதும் வருகிற எழுத்துக்களும் சொற்களும்.

உ—ம்:— அந்தாமம் + அன்பு = அந்தாமத்தன்பு;
மரம் + ஐ = மரத்தை;
செய் + த் + அன் + அன் = செய்தனன்.
இவைகளில், அத்து, அன், சாரியை.

சாரியைகள்— அ, அம், அத்து, அல், அற்று, அன், ஆன், இற்று, இன், உ, ஏ, ஐ, கு, தம், நம், நும், ன.

(iv) உவம உருபுகள்— போல, முதலியன.

(v) குறிப்பாலே பொருளைக்காட்டுகிறவைகள்.
ஒல்லென, தென்றென.

(vi) ஏ, ஓ, உம், என, என்று, மற்ற, மற்றை.
(vii) இசைநிறை. பாட்டில் ஓசையை நிறைப்பது.

உ—ம்:— "இனணில னெனவுயிர் மிகுநரை யிலனே."

இதில் கடைச்சீரில் ஏகாரத்தைச் சேர்க்காவிட்டால், இலன் என்று ஓர் அசைச்சீராயிருக்கும். இது கலிவிருத்தத்துக்குக் கூடாது. ஆகையால் அதைச் சேர்த்தால் ஈரசைச்சீராகும்.

(viii) அசைநிலை. வேறு பொருளில்லாமல் சேர்க்கப்பட்ட எழுத்துக்கள்.

40. ஏ என்பதின் பொருள்கள்:— பிரிநிலை உ—ம்:— இவனே கொண்டான். ஒரு கூட்டத்திலிருந்து ஒருவனைப் பிரிக்கிறது. வினா (கேள்வி) நீயே (நீயா) கொண்டாய். எண். நிலமே நீரே தீயே.(நிலமும் நீரும் தீயும்). தேற்றம் (ஸந்தேஹமில்லாமை) எதிர்மறை. நானே கொண்டேன் (நான் கொள்ளவில்லை) என்று பொருள்.

41. ஓ—ஒழியிசை— படித்தற்கோவந்தான், படிக்கவல்லை விளையாட வந்தான்.

வினா— குற்றியோ ? மகனோ ?

சிறப்பு— ஓ ஓ பெரியவன். இது உயர்வைக் காட்டுகிறது.
ஓ ஓ கொடியவன். இது இழிவைக்காட்டுகிறது.

எதிர்மறை— அவனோ கொண்டான் (அவன் கொள்ள—வில்லை)

தெரிநிலை — அலியை நோக்கி "ஆணோ அதுவும் அன்று, பெண்ணோ அதுவும் அன்று" என்று அத்தன்மையில்லாததைத் தெரிவிக்கிறது.

கழிவு— ஓ ஓ தமக்கு நன்மை உணரார். (இவர்களைப் பற்றி இரக்கப்படுவது.)

பிரிநிலை— அவர்களுள் இவனோ கொண்டான் ?

42. உம்:— எதிர்மறை— சாத்தன் வருவதற்கும் உரியன். (வாராமைக்கும் உரியன் என்று பொருள்)

சிறப்பு— குறவரும் அஞ்சும் குன்று, (உயர்வு)
புலையனும் விரும்பாத யாக்கை (இழிவு)

ஐயம் (ஸந்தேஹம்) பத்தாயினும் எட்டாயினும் கொடு.

எச்சம்— சாத்தனும் வந்தான். முன் கொற்றன் வந்தான் என்றும், கொற்றனும் வருவான் என்றும் பொருளாகும்.

முற்று— தமிழ்நாட்டு மூவரசரும் வந்தார்.

எண்— சோழனும், பாண்டியனும்.

தெரிநிலை— ஆணுமன்று பெண்ணுமன்று.

ஆக்கம்— பாலும் ஆயிற்று. மருந்தும் ஆயிற்று என்று பொருள்.

43. குணங்களுடையவும் தொழில்களுடையவும் பண்பைக்காட்டுகிறவைகள் உரிச்சொற்கள். இவைகள் பாட்டிலே வரும். உ—ம்:— சால, உறு, தவ, நனி, கூர், கழி.

44. பல சொற்கள் சேர்ந்து ஒரே சொல்லாக வருவது தொகைநிலைத் தொடர் மொழிகள். இவைகள் ஆறுவகைப்படும்.

(i) வேற்றுமைத்தொகை உ—ம்:— அடிதொழுது—அடியைத்தொழுது. சுடரடி—சுடரையுடைய அடி. இவைகளில் ஐ என்கிற வேற்றுமை உருபு தொக்கியிருக்கிறது. கானல் மாடநாராய்—கானலிலிருக்கும் மடநாராய். இதில் ஏழாம் வேற்றுமை உருபு தொக்கியிருக்கிறது.

(ii) வினைத்தொகை— கடை வெண்ணெய், இது கடையப்பட்ட வெண்ணெய், கடையப்படுகிற வெண்ணெய், கடையும்வெண்ணெய் என்றும் பொருளாகும். இதைக் காலங்கரந்த பெயரெச்சம் என்று சொல்லுவதுண்டு.

(iii) பண்புத்தொகை— செந்நெல், செம்மையையுடைய நெல் என்று பொருள்.

(iv) உவமைத் தொகை— கோவை வாய், கோவை போன்ற வாய்.

(v) உம்மைத்தொகை— மதிநலமருளினன், மதியையும் நலத்தையும் அருளினவன் என்று பொருள்.

## 7. ஆகுபெயர்.

45. ஒரு சொல் தன் பொருளைவிட்டு அத்துடன் ஸம்பந்தப்பட்ட பொருளைச் சொல்லும்போது அதற்கு ஆகு பெயர்

என்று பெயர். உ—ம்:— 'ஆயும் அமருலகும்' என்கிறவிடத்தில், உலகும் என்பதற்கு உலகத்திலிருப்பவர்கள் என்று பொருள். இடத்தைச் சொல்லுகிற சொல் அதிலிருக்கிறவர்களைச் சொல்லுகிறது,

'வண்புகழ் நாரணன்'— புகழ் என்பது புகழுக்குக் காரணமான குணங்களைச் சொல்லுகிறது. காரியத்தைச் சொல்லுகிற சொல் காரணத்தைச் சொல்லுகிறது. வினையோன் என்பது வினையின் காரியமான துக்கத்தைச் சொல்லுகிறது.

46. செய்யுள் விகாரம். செய்யுளில் சொற்கள் தனியாயிருக்கும் போதும் சிலவிகாரங்கள் உண்டு. 1. மெல் எழுத்து வல்லெழுத்தாவது.2. வல்லெழுத்து மெல்லெழுத்தாவது. 3. குற்றெழுத்து நெட்டெழுத்தாவது.4.நெட்டெழுத்துக்குற்றெழுத்தாவது.5.இல்லாத எழுத்து வருவது. 6. உள்ள எழுத்து நீங்குதல். இவைகளில் கடைசியில் சொன்னது சொல்லின் முதலிலும், நடுவிலும் கடைசியிலும் வரும். உ—ம்:— விடுமின்—வீடுமின்; பத்து—உடைய—பத்துடைய; உதர—இடை = உரவிடை; அமர—உலகில்=அமருலகில்.

47. போலி— ஒரு சொல்லின் பொருள் வேறு படாமல் அதில் ஒரு எழுத்துக்கு வேறு எழுத்து வருவது போலி; கடைசி எழுத்துக்கு வேறு எழுத்துவருவது இறுதிப்போலி. உ—ம்:— நிலம்—நிலன்; மனம்—மனன்; திண்ணம்—திண்ணன்; வண்டு-வண்டர்; பந்தல்—பந்தர்; திறம்—திறல்; பக்கம்—பக்கல்; மதில்—மதிள்.

---

# தமிழிலக்கணம்.

# அட்டவணை.

## புணர்ச்சிவிதி.

பாரா. பக்கம்.



## 2. பகுபதம்.

# அனுபந்தம் III

## யாப்பிலக்கணச் சுருக்கம்.

தமிழ்ப்பாட்டுக்களுக்கு ஐந்து உறுப்புகள் இருக்கின்றன— அசை, சீர், தளை, அடி, தொடை-என்று. அவைகளில் அசை என்பது இரண்டு வகைப்படும்; நேர் அசை என்றும் நிரைஅசை என்றும். ஒரு குறில் அல்லது நெடில் தனித்தாவது, மெய்யெழுத்துடன் சேர்ந்தாவது வந்தால் நேரசை. இரண்டு குறில் அல்லது ஒரு குறிலும் ஒரு நெடிலும் தனித்தாவது மெய் எழுத்துடன் சேர்ந்தாவது வந்தால் நிரைஅசை.

உதாரணம். அம் சிறை ய மட நா ராய்
அம் சிறைப் புள்ளுயர்த் தார்க் கு

இவைகளில் ய நா அம் ராய் புள் தார்க் கு— நேரசைகள். மட சிறை ளுயர்த் சிறைப்— நிரைஅசைகள்.

2. சீர். ஒரு அசையே சீராய் வெண்பாவின் கடைசிச் சீராய் வரும். அப்பொழுது நாள்போலவும் மலர்போலவும் அது இருக்கும்.

இரண்டு அசைகள் சேர்ந்தது இயற்சீர் என்றும் அகவற்சீர் என்றும், மூன்று அசைகள் சேர்ந்தது வெண்சீர் என்றும் உரிச்சீர் என்றும், நான்கு அசைகள் சேர்ந்தது பொதுச்சீர் என்றும் பெயருள்ளவைகளாய் வரும்.

உதாரணம் ஈரசைச்சீருக்கு

| | | | |
|---|---|---|---|
| நேர் | நேர் | தேமா | மாச்சீர். |
| நிரை | நேர் | புளிமா | |
| நேர் | நிரை | கூவிளம் | விளச்சீர். |
| நிரை | நிரை | கருவிளம் | |

மூவசைச்சீருக்கு

| | | | |
|---|---|---|---|
| நேர் | நேர் | நேர் | தேமாங்காய் |
| நிரை | நேர் | நேர் | புளிமாங்காய் |
| நேர் | நிரை | நேர் | கூவிளங்காய் |
| நிரை | நிரை | நேர் | கருவிளங்காய் |

இவைகளுக்கு காய்ச்சீர் என்றும் வெண்சீர் என்றும் பெயர்.

| | | | |
|---|---|---|---|
| நேர் | நேர் | நிரை | தேமாங்கனி |
| நிரை | நேர் | நிரை | புளிமாங்கனி |
| நேர் | நிரை | நிரை | கூவிளங்கனி |
| நிரை | நிரை | நிரை | கருவிளங்கனி |

இவைகளுக்குக் கனிச்சீர் என்றும் பெயர்

நாலசைச் சீருக்கு, ஈரசைச்சீர் நாலுக்குமேல் ஒவ்வொன்றோடும் தண்பூ நறும்பூ என்பவைகளைச் சேர்த்தால் 8 பூச்சீர்கள் ஆகும். தண்ணிழல், நறுநிழல் என்பவைகளைச் சேர்த்தால் 8 நிழல் சீர்கள் ஆகும்.

குறிப்பு:—(i) மாச்சீர் இரண்டும் கலிப்பாவில் வருகிறதில்லை.

(ii) விளங்கனிச் சீர்கள் இரண்டும் ஆசிரியப்பாவிலும் கலிப்பாவிலும் வருகிறதில்லை.

(iii) கனிச்சீர்கள் நாலும் வெண்பாவில் வருகிறதில்லை.

(iv) பூச்சீர்கள் எட்டும் வெண்பாவில் வருகிறதில்லை. ஆசிரியப்பாவிலும் கலிப்பாவிலும் சிறுபான்மை வரும். அப்போது அவைகள் குற்றியலுகரத்தில் முடியும்.

(v) நிழல் சீர் எட்டும் வஞ்சிப்பாவிலேயே வரும்.

3. தளை. இரண்டு சீர்கள் சேரும்போது முதல் சீரின் கடைசி அசையும், மற்றொரு சீரின் முதல் அசையும் சேர்வது தளை.

இது நான்குவகைப்படும்:— அவைகளில் மாச்சீர்கள் மேல் நிரை வருவதும், விளச்சீர்கள் மேல் நேர் வருவதும், காய்ச்சீர்களுக்கும் பூச்சீர்களுக்கும் மேல் நேர் வருவதும் வெண்டளை.

மாச்சீர்கள்மேல் நேரும் விளச்சீர்கள்மேல் நிரையும் வருவது ஆசிரியத்தளை.

காய்ச்சீர்களுக்கும் பூச்சீர்களுக்கும்மேல் நிரை வருவது கலித்தளை.

காய்ச்சீர்களுக்கும் நிழல் சீர்களுக்கும்மேல் நேர் வருவதும் நிரை வருவதும் வஞ்சித்தளை.

குறிப்பு:— (i) ஈரசைச் சீரில் வருகிற வெண்டளைக்கு இயற்சீர் வெண்டளை என்றும், மூவசைச் சீரிலும் நாலசைச் சீர்களி

லும் வருகிற வெண்டளைக்கு வெண்சீர் வெண்டளை என்றும் பெயர்.

(ii) மாச்சீர்களுக்குமேல் நேர் வருவது நேர் ஒன்றிய ஆசிரியத் தளை; விளச்சீர்மேல் நிரை வருவது நிரை ஒன்றிய ஆசிரியத் தளை.

(iii) கனிச்சீர்கள் மேலும், நிழல் சீர்கள்மேலும் நேர் வருவது ஒன்றாவஞ்சித்தளை. அவைகளுக்குமேல் நிரை வருவது ஒன்றிய வஞ்சித்தளை.

(iv) அடி. இரண்டு சீர்கள் முதலாகக் கொண்டது அடி. இரண்டு சீர்கள் கொண்டது குறளடி; மூன்று சீர்கள்கொண்டது சிந்தடி; நாலு சீர்கள் கொண்டது அளவடி; ஐந்து சீர்கள்கொண்டது நெடிலடி; ஆறு சீர்கள் முதலாகக்கொண்டது கழிநெடிலடி.

உதாரணம்.

வீடுமின் முற்றவும் I-2-1 குறளடி.
பரிவதி லீசனைப் பாடி I-6-1 சிந்தடி.
உயர்வற வுயர்நல முடையவ னெவனவன் I-1-1 அளவடி.
பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய I-3-1 நெடிலடி
வளவேழ் உலகின் முதலாய வானோ ரிறையை யருவினையேன்
I—5—1 கழிநெடிலடி

5. தொடை. எதுகை, மோனை, அந்தாதி- ஆகிய இவை தொடைகள்.

எதுகை எல்லா அடிகளிலும் முதலெழுத்துக்கள் ஒரே மாத்திரை உடையவைகளாய் அதாவது குறிலாகவோ நெடிலாகவோ இருந்து இரண்டாவது முதலான எழுத்துக்கள் ஒரே எழுத்தாயிருந்தால் எதுகையாம்.

உயர்வற [I—1—1] என்கிற பாட்டில் முதல் சீர்கள் உயர்வற, மயர்வற, அயர் வறும், துயரறு இவைகளில் முதலெழுத்துக்கள் எல்லாம் ஒரே மாத்திரை உள்ளவைகள். இரண்டாவது எழுத்து ஒரே எழுத்து. மூன்றாவது எழுத்தும் அப்படியே. சில இடங்களில் இன எழுத்துக்கள் வந்தாலும் எதுகையாம்.

சில எதுகைச் சொற்களின் முதலெழுத்துக்கும் இரண்டாமெழுத்துக்கும் நடுவில் வேறு மெய் எழுத்து வந்தாலும் எதுகையே.

உதாரணம். ஆவேறு, பால்வேறு என்கிற இடத்தில் லகரம் முதல் இரண்டெழுத்துக்கு நடுவே வந்திருக்கிறது. காய்மாண்ட பூமாண்ட என்கிறவிடத்தில் யகரம் வந்திருக்கிறது.

குறிப்பு. எல்லா அடிகளிலும் ஒரே எதுகை இருந்தால் அதற்கு ஒரு விகற்பம் என்றும், முதல் இரண்டடிகளுக்கு ஒரு எதுகையும் மற்ற அடிகளுக்கு வேறொரு எதுகையும் இருந்தால் அதற்கு இரு விகற்பம் என்றும், பாட்டில் பல பல எதுகைகள் இருந்தால் அதற்குப் பல விகற்பமென்றும் பெயர்.

6. மோனை. அடிகளின் முதலெழுத்துக்கள் முதலடியில் முதலெழுத்தைப்போல் இருந்தால் அது அடிமோனை. ஒரே அடியில் சீர்களின் முதலெழுத்துக்கள் முதல் சீரின் முதல் எழுத்தைப்போல் இருந்தால் சீர்மோனை.

உதாரணம். வீடுமின் (I—2—1) என்கிற பாட்டில் அடிகளின் முதல் சீர்கள் வீடுமின், வீடு செய்து, வீடுடை, வீடிசை இவைகளில் முதலெழுத்துஒன்றாயிருப்பதால் அது அடிமோனை.

உயர்வற - (I—1—1) என்கிற பாட்டில் சீர்கள் உயர்வற உயர் நலம், உடையவன், யவனவன் இவைகளில் மூன்று சீர்களில் முதலெழுத்து ஒன்றாயிருப்பதால் இது சீர் மோனை. இரண்டாவது அடியில் முதல் இரண்டு சீர்கள் மயறவற, மதிநலம் இவைகளில் முதலெழுத்து ஒன்றாயிருப்பதால் இதுவும் சீர் மோனை. சிலவிடங்களில் இனவெழுத்துகளும் மோனையாகவரும்.

இனவெழுத்துக்கள்:—

அ, ஆ, ஐ, ஔ;
இ ஈ, எ, ஏ, யா;
உ ஊ ஒ, ஓ;
ஞ, ந;
ச த;
ம வ;
இவைகள் ஒன்றுக்கொன்று இனவெழுத்துக்கள்.

உதாரணம். மனனக (I—1—2) என்கிற பாட்டில் மூன்றாவது அடியில் சீர்கள் இனனுணர், முழுநலம், எதிர்நிகழ், கழிவினும்— இவைகளில் முதலாவது மூன்றாவது சீர்களில் முதலெ

ழுத்து இகரமும், எகரமும் இனவெழுத்துக்களாகையால் இவையும் சீர்மோனை.

7. அந்தாதி. ஒரு பாட்டில் கடைசி எழுத்து, அசை, சீர் அல்லது அடி, அடுத்த பாட்டில் முதலாகப் பாடுவது அந்தாதி. இதைத் திருவாய்மொழியில் எந்த இரண்டு பாட்டுக்களிலும் பார்க்கலாம்.

8 பா. இது வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்று நாலு வகைப்படும். இவைகளில் வெண்பாவில்

(i) இயற்சீர் நாலும், காய்ச்சீர் நாலும் வரும். வேறு சீர் வருகிறதில்லை.

(ii) வெண்டளை ஒன்றுமே வரும்.

(iii) இரண்டு முதல் பல அடிகள் வரும். அவைகளில் கடைசி அடி மூன்று சீர்கள் உள்ளது. மற்றவைகள் நாலு சீர்கள் உள்ளவைகள்.

(iv) கடைசி அடியில் கடைசிச் சீரானது ஓரசையாகவிருந்தால் நாள், மலர்போலவும் ஈரசைச்சீராகவிருந்தால் காசு, பிறப்பு போலவும் வரும்.

(v) ஒரு விகற்பத்தாலும் இரு விகற்பத்தாலும் வரும்.

9. ஆசிரியப்பா. (i) விளங்கனிச் சீர் இரண்டும் வருகிறதில்லை. இயற் சீர்கள் அதிகமாயும் மற்றைச் சீர்கள் குறைந்தும் வரும்.

(ii) ஆசிரியத்தளை அதிகமாயும் பிற தளைகள் குறைந்தும் வரும்.

(iii) மூன்று அடிகள்முதல் பல நான்குசீர் உள்ள(அளவடி) அடிகள் உள்ளது. இதற்கு அகவற்பாவென்றும் பெயர்.

10. கலிப்பா. (i) காய்ச்சீர் அதிகமாயும் பிற சீர்கள் கொஞ்சம் கலந்தும் வரும். மாச்சீர்கள் இரண்டும், விளங்கனிச் சீர் இரண்டும் வருகிறதில்லை.

(ii) கலித்தளையும் பிற தளைகளும் உள்ளது.

(iii) அடிகள் நாற்சீர் உள்ளவைகள்.

(iv) தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்கிற ஆறு உறுப்புக்களில் ஏற்றவைபெற்று வரும். ஓரே தரவு வருவது தரவு கொச்சகக்கலிப்பா.

11. வஞ்சிப்பா. (i) எல்லாச் சீர்களும் வரும்.

(ii) வஞ்சித்தளைமிகுந்து பிற தளைகள் குறைந்துவரும்.

(iii) அடிகள் இரண்டு சீர்கள் உள்ளவைகளாகவும் அல்லது மூன்று சீர்கள் உள்ளவைகளாகவும் இருக்கும். அவைகள் மூன்று முதல் பல அடிகள் உள்ளன. கடைசியில் தனிச்சொல் பெற்று ஆசிரிய சுரிதகத்தால் முடியும்.

12. பாவினங்கள். கீழ்ச்சொன்ன பாவின் இலக்கணங்கள் குறைந்துவருகிற பாட்டுக்களுக்குப் பாவினங்கள் என்று பெயர். அவைகள் தாழிசை, துறை, விருத்தம் என்று மூன்று வகைப்படும்.

13. 1. ஆசிரியத்துறை (i) அடிகள் நான்கு கொண்டது.

(ii) எவ்வளவு சீர்களும் இருக்கலாம்.

(iii) மூன்றுவது அடியில் சீர் குறைந்திருக்கும். முன்னடியிலுள்ள சொற்களே பின் அடிகளில் திரும்பிவரலாம். முதலடியிலும் மூன்றுமடியிலுமாவது, இரண்டாமடியிலும் நான்காமடியிலுமாவது சீர் குறைந்து வரலாம்.

2. கலித்துறை. ஐந்து சீர்கள் உள்ள நான்கு அடிகள் உள்ளது.

3. வஞ்சித்துறை. இரு சீர்கொண்ட நான்கு அடிகள் உள்ளது.

14. விருத்தம். (i) ஆசிரிய விருத்தம், அளவொத்த கழிநெடிலடி நான்கு உள்ளது.

(ii) கலி விருத்தம். நாலு சீர்கொண்ட நான்கு அடிகள் உள்ளது.

(iii) வஞ்சி விருத்தம். மூன்று சீர்கொண்ட நான்கு அடிகள் உள்ளது.

15. திருவாய்மொழியில் வருகிற பாக்களும், பாவினங்களும் கீழே எழுதப்படுகின்றன.

தரவு கோச்சகக் கலிப்பா.

1—4; 2—1; 3—1; 4—8; 4—9; 9—7 ஆக 6.

---

இரண்டாம்பத்து முதல் திருவாய்மொழியின் முதலில் கலி விருத்தம் என்பதற்குப் பதிலாக தரவு கொச்சகக்கலிப்பா என்று படிக்கவும்.

ஆசிரியத்துறை

2—6; 5—7; 5—10; 6—2; 7—1; ஆக 5.

கலித்துறை

1—3; 2—7; 3—7; 3—9; 4—1;
4—5; 4—6. 5—1; 5—9; 6—1;
6—3; 6—7; 6—8; 6—9; 7—6;
7—7; 8—3; 9—5; 10—1; 10—10; ஆக 20.

வஞ்சித்துறை.

1—2; 1—8; 10—5; ஆக 3.

ஆசிரிய விருத்தம்.

அறுசீர்

1—5; 1—9; 3—4; 3—5; 3—10; 4—3;
4—4; 4—7; 4—10; 5—2; 5—5; 5—8;
6—4; 6—10; 7—10; 8—5; 8—8; 8—9;
8—10; 9—1; 10—7; ஆக 21.

எழுசீர்.

3—6; 6—5; 7—2; 8—1; 8—4; 9—2; ஆக 6.

எண்சீர்.

5—6; 7—3; 8—2; 9—9; 10—3; ஆக 5.

கலிவிருத்தம்.

1—1; 1—7; 1—10; 2—2; 2—3; 2—5;
2—8; 2—9; 2—10; 3—2; 3—3; 3—8;
4—2; 5—3; 5—4; 6—6; 7—4 7—5;
7—8; 7—9; 8—6; 8—7; 9—3; 9—4;
9—6; 9—8; 9—10; 10—2; 10—4; 10—6;
10—8; 10—9; ஆக 32.

வஞ்சி விருத்தம்.

1—6; 2—4; ஆக 2.

16. ஒவ்வொருவகையில் ஒவ்வொரு பாட்டு சீர் பிரித்து, தளையுடன் அடியில் காட்டப்படுகிறது.

1. தரவு கொச்சகக் கலிப்பா. 1—4

அஞ்சிறைய மடநாரா யளியத்தாய் நீயுநின்
கூவிளங்காய் புளிமாங்காய் புளிமாங்காய் தேமாங்காய்
கலித்தளை கலித்தளை வெண்சீர் வெண்டளை

னஞ்சிறைய சேவலுமா யாவாவென் றெனக்கருளி
கூவிளங்காய் கூவிளங்காய் தேமாங்காய் கருவிளங்காய்
வெ—சீர் வெண்டளை வெ-வெண்டளை கலித்தளை

வெஞ்சிறைப்பு ளுயர்த்தார்க்கென் விடுதூதாய்ச் சென்றக்கால்
கூவிளங்காய் புளிமாங்காய் புளிமாங்காய் தேமாங்காய்
கலித்தளை கலித்தளை வெ-வெண்டளை

வன்சிறையி லவன்வைக்கில் வைப்புண்டா லென்செய்யுமே.
கூவிளங்காய் புளிமாங்காய் தேமாங்காய் தேமாங்கனி
கலித்தளை வெ-வெண்டளை வெ-வெண்டளை

---

தரவுகொச்சகக்கலிப்பா. (9—7)

எங்கான லகங்கழிவா யிரைதேர்ந்திங் கினிதமருஞ்
தேமாங்காய் கருவிளங்காய் புளிமாங்காய் கருவிளங்காய்
கலித்தளை கலித்தளை கலித்தளை

செங்கால மடநாராய் திருமூழிக் களத்துறையுங்
தேமாங்காய் புளிமாங்காய் புளிமாங்காய் கருவிளங்காய்
கலித்தளை கலித்தளை கலித்தளை

கொங்கார்பூந் துழாய்முடியெங் குடக்கூத்தர்க் கென்தூதாய்
தேமாங்காய் கருவிளங்காய் புளிமாங்காய் தேமாங்காய்
கலித்தளை கலித்தளை வெ-வெண்டளை

நுங்கால்க ளென்தலைமேல் கெழுமீரோ நுமரோடே,
தேமாங்காய் கூவிளங்காய் புளிமாங்காய் புளிமாங்காய்
வெ-வெண்டளை கலித்தளை கலித்தளை

(2) ஆசிரியத்துறை 2—6.

வைகுந் தாமணி வண்ணனே யென்பொல்லாத் திருக்குறளா யென்னுள் மன்னி
தேமா கூவிளம் கூவிளம் தேமாங்காய் கருவிளங்காய் தேமா தேமா
ஆசிரியத்தளை இயற்சீர்வெண்டளை இ-வெண்டளை கலித்தளை வெ-வெண்டளை ஆசிரியத்தளை

வைகும் வைகல் தோறு மமுதாய வானேறே
தேமா தேமா தேமா புளிமாங்காய் தேமாங்காய்
ஆசிரியத்தளை ஆசிரியத்தளை இ-வெண்டளை வெ-வெண்டளை

செய்குந் தாவரும் தீமை யுன்னடியார்க் குத்தீர்த்த சுரர்க்குத் தீமைகள்
தேமா கூவிளம் தேமா கூவிளங்காய் தேமாங்காய் புளிமா தேமாங்காய்
ஆசிரியத்தளை இ-வெண்டளை ஆசிரியத்தளை வெ-வெண்டளை கலித்தளை ஆசிரியத்தளை

செய்குந்தா வுன்னைநான் பிடித்தேன் கொள்சிக் கெனவே.
தேமாங்காய் தேமாங்காய் புளிமா தேமா புளிமா
வெ-வெண்டளை கலித்தளை ஆசிரியத்தளை இ-வெண்டளை

செய்குந்தா வுன்னை நான்பிடித் தேன்கொள் சிக்கெனவே - என்றும் பிரிக்கலாம்.

(3) கலித்துறை 1—3.

பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய
கூவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் புளிமா
ஆசிரியத்தளை ஆசிரியத்தளை ஆசிரியத்தளை ஆசிரியத்தளை

வித்தகன் மலர்மகள் விரும்புந மரும்பெற லடிகள்
கூவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் புளிமா
ஆசிரியத்தளை ஆசிரியத்தளை ஆசிரியத்தளை ஆசிரியத்தளை

மத்துறு கடைவெண்ணெய் களவினி லுரவிடை யாப்புண்டு
கூவிளம் புளிமாங்காய் கருவிளம் கருவிளம் தேமாங்காய்
ஆசிரியத்தளை கலித்தளை ஆசிரியத்தளை வெண்டளை

எத்திற முரலினோ டிணைந்திருந் தேங்கிய வெளிமே.
கூவிளம் கருவிளம் கருவிளம் கூவிளம் புளிமா
ஆசிரியத்தளை ஆசிரியத்தளை வெண்டளை ஆசிரியத்தளை

(4) வஞ்சித்துறை. 1-2

வீடுமின் முற்றவும்
கூவிளம் கூவிளம்
வெண்டளை

வீடுசெய் தும்முயிர்
கூவிளம் கூவிளம்
வெண்டளை

வீடுடை யானிடை
கூவிளம் கூவிளம்
வெண்டளை

வீடி சைமனே
தேமா கூவிளம்
ஆசிரியத்தளை

(5) ஆசிரியவிருத்தம்.

(1) அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். 1-5

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வளவே | முலகின் | முதலாய | வானோ | ரிறையை | யருவினையேன் |
| புளிமா | புளிமா | புளிமாங்காய் | தேமா | புளிமா | கருவிளங்காய் |
| வெண்டளை | வெண்டளை | வெண்டளை | வெண்டளை | வெண்டளை | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| களவேழ் | வெண்ணெய் | தொடுவுண்ட | கள்வா | வென்பன் | பின்னையும் |
| புளிமா | தேமா | புளிமாங்காய் | தேமா | தேமா | தேமாங்காய் |
| ஆசிரியத்தளை | வெண்டளை | வெண்டளை | ஆசிரியத்தளை | ஆசிரியத்தளை | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தளவேழ் | முறுவற் | பின்னைக்காய் | வல்லா | னயர் | தலைவனாய் |
| புளிமா | புளிமா | தேமாங்காய் | தேமா | தேமா | கருவிளம் |
| வெண்டளை | ஆசிரியத்தளை | வெண்டளை | ஆசிரியத்தளை | வெண்டளை | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இளவே | றேழுந் | தழுவிய | வெந்தா | வென்ப | னினைந்துநைந்தே |
| புளிமா | தேமா | [illegible] | தேமா | [illegible] | கருவிளங்காய் |
| ஆசிரியத்தளை | வெண்டளை | வெண்டளை | ஆசிரியத்தளை | வெண்டளை | |

(2) எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். 3-6

செய்ய தாமரைக் கண்ண னேயுல கேழு முண்ட வவன்கண்டீர்
தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமா தேமா புளிமாங்காய்
ஆசிரியத்தளை வெண்டளை ஆசிரியத்தளை வெ-ளை ஆசிரியத்தளை வெ-ளை

வையம் வானம் மனிசர் தெய்வம் மற் றும்மற்று மற்றும் முற்றுமாய்
தேமா தேமா புளிமா தேமாங்காய் தேமாங்காய் தேமா கூவிளம்
ஆசிரியத்தளை வெண்டளை ஆசிரியத்தளை வெண்டளை வெண்டளை ஆசிரியத்தளை

செய்ய சூழ்சுடர் ஞான மாய்வெளிப் பட்டி வைபடைத் தான்பின்னும்
தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமாங்காய்
ஆசிரியத்தளை வெண்டளை ஆசிரியத்தளை வெண்டளை ஆசிரியத்தளை வெண்டளை

மெய்கொள் சோதியா டாயி னொரு மூவ ராகிய மூர்த்தியே
தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமா கூவிளம் கூவிளம்
ஆசிரியத்தளை வெண்டளை ஆசிரியத்தளை வெண்டளை ஆசிரியத்தளை வெண்டளை

(3) எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். 5-6.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கடல்ஞாலம் | செய்தேனும் | யானே | யென்னும் | கடல்ஞால | மாவேனும் | யானே | யென்னும் |
| புளிமாங்காய் | தேமாங்காய் | தேமா | தேமா | புளிமாங்காய் | தேமாங்காய் | தேமா | தேமா |
| வெ-வெ-ளை | வெ-வெ-ளை | ஆசிரியத்தளை | வெ-வெ-ளை | வெ-வெ-ளை | வெ-வெண்டளை | ஆ-தளை | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கடல்ஞாலம் | கொண்டேனும் | யானே | யென்னும் | கடல்ஞாலம் | கீண்டேனும் | யானே | யென்னும் |
| புளிமாங்காய் | தேமாங்காய் | தேமா | தேமா | புளிமாங்காய் | தேமாங்காய் | தேமா | தேமா |
| வெ-வெண்டளை | வெ-வெண்டளை | ஆசிரியத்தளை | வெ-வெண்டளை | வெ-வெ+ளை | வெ-வெ+ளை | ஆசிரியத்தளை | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கடல்ஞால | முண்டேனும் | யானே | யென்னும் | கடல்ஞாலத் | தீசன்வந் | தேறக் | கொல்லோ |
| புளிமாங்காய் | தேமாங்காய் | தேமா | தேமா | புளிமாங்காய் | தேமாங்காய் | தேமா | தேமா |
| வெ-வெண்டளை | வெ-வெண்டளை | ஆசிரியத்தளை | வெ-வெண்டளை | வெ-வெண்டளை | வெ-வெண்டளை | ஆசிரியத்தளை | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கடல்ஞாலத் | தீர்க்கி | வையென் | சொல்லுகேன் | கடல்ஞாலத் | தென்ம | கள்கற் | கின்றவே |
| புளிமாங்காய் | தேமா | தேமா | கூவிளம் | புளிமாங்காய் | தேமா | தேமா | கூவிளம் |
| வெ-வெ+ளை | ஆ-ளை | ஆ-தளை | ஆ-ளை | வெண்டளை | ஆசிரியத்தளை | ஆ-தளை | |

(8) கலி விருத்தம். 1—7.

| | | | |
|---|---|---|---|
| பிறவித் | துயரற | ஞானத்து | ணின்று |
| புளிமா | கருவிளம் | தேமாங்காய் | தேமா |
| இ-வெண்டளை | இ-வெண்டளை | வெ-வெண்டளை | |
| துறவிச் | சுடர்விளக் | கந்தலைப் | பெய்வார் |
| புளிமா | கருவிளம் | கூவிளம் | தேமா |
| இ-வெண்டளை | இ-வெண்டளை | இ-வெண்டளை | |
| அறவனை | யாழிப் | படையந் | தணனை |
| கருவிளம் | தேமா | புளிமா | புளிமா |
| இ-வெண்டளை | இ-வெண்டளை | இ-வெண்டளை | |
| மறவியை | யின்றி | மனத்துவைப் | பாரே. |
| கருவிளம் | தேமா | கருவிளம் | தேமா |
| இ-வெண்டளை | இ-வெண்டளை | இ-வெண்டளை | |

(9) வஞ்சி விருத்தம். 1—6

| | | |
|---|---|---|
| பரிவதி | லீசனைப் | பாடி |
| கருவிளம் | கூவிளம் | தேமா |
| இ-வெண்டளை | இ-வெண்டளை | |
| விரிவது | மேவ | லுறுவீர் |
| கருவிளம் | தேமா | புளிமா |
| இ-வெண்டளை | இ-வெண்டளை | |
| பிரிவகை | யின்றிநன் | னீர்தூய் |
| கருவிளம் | கூவிளம் | தேமா |
| இ-வெண்டளை | இ-வெண்டளை | |
| புரிவது | வும்புகை | பூவே. |
| கருவிளம் | கூவிளம் | தேமா |
| இ-வெண்டளை | இ-வெண்டளை | |

## யாப்பிலக்கணத்தின் பிழைதிருத்தம்.

குறிப்பு:— (1) இதில் திருவாய்மொழியின் பாடல்களுக்கு வேண்டிய அளவே யாப்பிலக்கணம் எழுதியிருக்கிறது.

(2) யாப்புக்கு உள்ள ஆறு உறுப்புகளில் எழுத்திலக்கணத்தை இங்கே சொல்லவில்லை. அதை 2.வது அநுபந்தத்தில் பார்க்க.

(3) திருவாய்மொழிப் பாட்டுக்களில் சில விடங்களில் ஓரசைச்சீரும், சில விடங்களிலும் நாலசைச்சீரும் கொள்ளும்படியிருக்கிறது. வேறு சிலவிடங்களில் சீர் பிரிப்பது ஒத்து வரவில்லை. திருவாய்மொழி ஆர்ஷமாகையால் இவைகளைப்பற்றி விசாரம் செய்யக்கூடாது. பெரியோர்களின் முறையே முறை.

| | | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 26 | 16 | வென்சீர் | வெண்சீர் |
| ,, | 29 | இவைகளுக்கு காய் | இவைகளுக்குக் காய் |
| ,, | ,, | வெண்சீர் என்றும் பெயர். | வெண்சீர் என்றும், வெண்பா உரிச்சீர் என்றும், பெயர். |
| 27 | 5 | கனிச்சீர் என்றும் | கனிச்சீர் என்றும், வஞ்சி உரிச்சீர் என்றும், |
| ,, | 28 | காய்ச்சீர் | கனிச்சீர். |
| 30 | 24 | மூன்றடிகள் உள்ளது | நாற்சீரடிகள் மூன்றடிகள் முதல் பலஅடிகள் உள்ளது. |



அநுபந்தம் IV.

# திருவாய்மொழியின் அரும்பத விளக்கம்.

இதில் நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழியிலிருக்கும் அரும்பதங்களுக்குப் பொருள், வியாக்கியானத்தையும், லெக்ஸிகனையும் அநுஸரித்து எழுதியிருக்கிறது. வினைச்சொற்களின் பகுதியை வளைவுகளுக்குள் சேர்த்திருக்கிறது. மிகவும் அபூர்வமான சொற்கள் வருகிற பாட்டுக்களையும் அந்தந்த விடங்களில் காட்டியிருக்கிறது. அரும்பதங்களுக்குத் திருவாய்மொழியில் வரும் பொருளையே பெரும்பாலும் எழுதியிருக்கிறது.

அ - அந்த, பிரஸித்தமான.
அக்காரம் - சர்க்கரை, வெல்லம்.
அகம் - மனது (2-4-1), இடம்.
அங்கி - அக்கினி (3-10-4).
அசைவு - சோர்வு (8-3-5).
அட்டுதல் (அட்டு) - வார்த்தல் (4-7-9).
அடர்த்தல் (அடர்) - பீடித்தல் (3-5-4).
அடல் (அடு) - பராக்கிரமம், வலிமை, வெற்றி.
அடி, அடிகள் - ஸ்வாமி.
அடுதல் (அடு) - கொல்லுதல் (2-10-9).
அடை - இலை, (8-5-1).
அண்டல் (அண்டு) - கிட்டுதல்.
அண்ணல் - ஸ்வாமி, பெருமை, அரசன்.
அணங்கு - தெய்வப்பெண்.
அணவுதல் (அணவு) - புணர்தல், கிட்டுதல்.
அணி - அடுக்கு, வரிசை (5-9-4).
அணுகல் (அணுகு) - கிட்டல்.
அணை - படுக்கை.
அணைதல் (அணை) - சேர்தல்.
அத்தன் - தகப்பன், (ஆப்தன், வேண்டியவன், பூர்வர்கள்).

அந்தணன் - அந்தத்தை - வேதாந்தத்தை அணவுகிறவன் = பிராம ணன்; அழகிய தண்மையுடையவன், அதாவது - ஜீவகா ருண்யமுள்ளவன்.
அம்பரம் - ஆகாசம் (வடமொழி).
அமர் - யுத்தம். (ஸமரம் வடசொல்).
அமைத்தல் (அமை) - செய்தல்.
அமைதல் (அமை) - நிறைதல், அமைவு, நிறைவு.
அயர்வு
அயர்ப்பு } (அயர்) - மறதி, அஞ்ஞானம் = அறிவுமழுங்குதல் (7-8-6)
அயர - மோஹம் அடைய (3-6-8).
அயன் - பிரம்மா (வடமொழி அஜன்).
அரட்டன் - வீரன் (10-1-9).
அரண் - காவல், மதிள், சரணம்.
அரவு [அரா] - பாம்பு. அராவு - நீட்டல் விகாரம்.
அரன் - ருத்திரன் (வடமொழி ஹரன்).
அரி - திருமால் (ஹரி = பாபங்களைப்போக்குபவன்), சிங்கம்
அரிதல் (அரி) - அறுத்தல்.
அரிவை - இளம்பெண்.
அரு - ரூபமில்லாதது.
அருகல் (அருகு) - ஸமீபம், குறைவு.
அருந்துதல் (அருந்து) - உண்ணுதல், குடித்தல்.
அல் - ராத்திரி.
அல்குல் - நிதம்பம்.
அல்லல் - துக்கம்.
அல்லி - பூவில் உள் இருக்கும் இதழ், அடுக்கடுக்காயிருக்கும் இதழ் களையுடைய பூவகை.
அலகு - எண், பக்ஷியின்மூக்கு
அலங்கல் - மாலை.
அலமருதல் (அலமா) - கலங்கல், அலமந்து - வினையெச்சம்.
அலம்பல்
அலம்புதல் } (அலம்பு) - சப்தித்தல், அலைதல், கழுவுதல்.
அலர் - பழி, புஷ்பம்.

அலர்தல் - மலர்தல்.

அலவலை } -அதிகப்பேச்சுப்பேசுகிறவள்-
அலவை }

அலி - ஆணும் பெண்ணுமல்லாதது.

அலைப்பூண் - (அலைப்பு + ஊண்) வருத்தத்தை அநுபவிப்பது.

அவம் - குற்றம்.

அவனி - பூமி. (அரசரால் ரக்ஷிக்கப்படுவது, அவ பகுதி).

அவா - ஆசை.

அவித்தல் (அவி) - நாசம்செய்தல்.

அவிவு - நாசம்.

அவை - ஸபை. (இது ஸபா என்னும் வடசொல்லின் திரிபு).

அழன் - பிசாசு.

அழும்ப (அழும்பு) - நெருங்கிக்கலக்க (1-7-9)

அளாவுதல் (அளாவு) - வியாபித்தல்.

அளி - வண்டு, கிருபை, குளிர்ச்சி.

அளித்தல் - ரக்ஷித்தல்.

அற்கம் - அடக்கம்.

அறவன் - அறத்தை = தர்மத்தை உடையவன்.

அறுதி - முடிவு.

அறைதல் (அறை) - சப்தித்தல்.

அன்ன - உவமையுருபு இடைச்சொல்.

அனந்தன் - ஆதிசேஷன்.

அனலல் (அனல்) - எரிதல்.

அஃகல் (அஃகு) - குறைதல்.

(ஆ)

ஆக்கம் - ஸம்பத்து.

ஆக்கை - உடம்பு.

ஆகம் - உடம்பு, மார்பு.

ஆசு - குற்றம்.

ஆடுதல் (ஆடு) - முழுகி ஸ்நாநம்பண்ணுதல், சேர்தல் (ஆகுபெயர்).

ஆடை - வஸ்திரம்.

ஆண்டு - வருஷம்.

ஆணி - மேன்மை (4-7-4).
ஆணை - ஆஜ்ஞை.
ஆய் - தாய், தோழி.
ஆர்த்தல் - ஸந்தோஷத்தால் கத்துவது.
ஆர்தல் - நிறைதல், பொருந்தல், குடித்தல், திருப்தி அடைதல்.
 ஆர - வினையெச்சம். ஆரா - எதிர்மறைப்பெயரெச்சம்.
ஆர்வம் } -அபிநிவேசம்.
ஆர்வு }
ஆல் - ஜலம் (9-10-1) (ஆலங்கட்டி=ஜலத்தின் கட்டி).
ஆலுதல் (ஆல்) - ஆடுதல், ஒலித்தல்.
ஆலை - தேன்.
ஆழாத்தல் (ஆழா) - தளைப்படுதல், ஈடுபடுதல். ஆழாந்து - வினையெச்சம் (2-1-8).
ஆழி - ஸமுத்திரம், சக்ரம்.
ஆற்றல் - பொறுமை, வலிமை.
ஆற்றுமை - பொறுமை.
ஆறுதல் - அடங்குதல், தணிதல்.

(இ)

இகல் - விரோதம் (6-4-6), சண்டை, (9-9-2).
இகுள் - தோழி, வளர்த்த தாயார். (6-3-9)
இசை - ராகம்.
இசைதல் - ஒப்புக்கொள்ளுதல்.
இடத்தல் (இட) - பெயர்த்தெடுத்தல், இடந்திடும் (2-8-7) பெயரெச்சம்.
இடர் - துக்கம், ஆபத்து, துன்பம்.
இடை - இடம், அதாவது - ஸம்பந்தம் (8-2-8).
இண்டை - மாலைவகை, அதிகமான என்று பூர்வர்கள். (இண்டைச் சடைமுடி 7-5-7).
இணங்குதல் (இணங்கு) - பொருந்தல்.
இணை - ஒப்பு.
இயத்தல் (இய) - கொடுத்தல் - கடத்தல், (இயந்து 1-1-8).
இயம்புதல் (இயம்பு) - சொல்லுதல், சப்தித்தல்(4-1-3).

இயல் - தன்மை, வியாபாரம் (4-5-4).

இயல்தல் (இயல்) - பொருந்தல் (3-4-2), செய்தல் - (இயற்றி, வினையெச்சம், இயற்று - பகுதி, 7-6-10), தாண்டுதல், அதிக்ரமித்தல்(அளவியன்ற1-4-11),(இயன்றாய் 3-1-5).

இயல்பு - இயற்கை, ஸ்வபாவம்.

இரங்குதல் (இரங்கு) - கத்துதல் (இரங்குதி 2-1-2).

இரிதல் - (இரி) - கோலாஹலம் செய்தல் என்று பூர்வர்கள் (இரிய - வினையெச்சம்5-2-3)

இரை - உணவு.

இலங்குதல் (இலங்கு) - விளங்குதல்.

இழை - ஆபரணம்.

இழைத்தல் (இழை) - செய்தல், (பூமியில் இடுகை 4-6-4).

இறங்குதல் (இறங்கு) - கீழ்ப்படிதல், தாழ்வடைதல்.

இறுகல் - சுருங்கல்.

இறுத்தல் (இறு) - முறித்தல், ஒடித்தல், கடையாகக்கொடுத்தல், (இறுமின் 5-2.7).

இறுதல் (இறு) - அறுதல், ஒடிதல்.

இறை - கொஞ்சம், ஈசுவரன், கடையாகக் கொடுக்கப்பட்டது; தொழிலாகுபெயர்.

இறைச்சி - மாம்ஸம்.

இறைஞ்சுதல் (இறைஞ்சு) - வணங்குதல்.

இனம் - கூட்டம், உபமானம்.

(ஈ)

ஈ - நாசம். (ஈபாவம் - 2-2-2).

ஈட்டம் - கூட்டம்.

ஈட்டல் (ஈட்டு) - தொகுத்தல், ஒன்றாய்ச்சேர்த்தல் (ஈட்டி - வினையெச்சம் 4-9-8)

ஈடு - தகுதி, ஒப்பு (1-6-2), இடுவது.

ஈண்டுதல் (ஈண்டு) - சேருதல், ஈண்டு - இப்போது, இவ்விடம் (8-2-2).

ஈதல் (ஈ) - கொடுத்தல்.

ஈர்தல் (ஈர்) - பிளத்தல், அறுத்தல்.

ஈரம் - அன்பு.
ஈறு - முடிவு.
ஈற்று - ஈனுகை, பெறுகை (ஈற்றிளம்பிள்ளை 7-6-10).

(உ)

உகட்டுண்டு - மேலே கிளம்புதலை அடைந்து - (3-5-4).
உகளுதல் (உகள்) - தாவுதல், மேலே கிளம்புதல், உகட்டுதல் பிறவினை, மேலே கிளம்பும்படி செய்தல்.
உகிர் - நகம்.
உகுதல் (உகு) - உருகுதல், சிந்தல் - சொரிதல்.
உசாவல் - (உசா) ஆராய்தல், யோஜனைகேட்டல்.
(உசாகோ - 7-3-4).
உட்கு - வலிமை.
உடுக்கை - அரையில் உடுக்கப்பட்டது - வஸ்திரம்.
உடை - வஸ்திரம். (இடுப்பு, உடுக்குமிடம், (3-7-4) பூர்வர்கள்.)
உணங்குதல் (உணங்கு) - உலர்தல், வாடுதல்.
உந்தி - நாபி.
உந்துதல் (உந்து) - மேலேதள்ளுதல்.
உம்பர் - மேலே.
உய்தல் (உய்) - பிழைத்தல்.
உய்த்தல் (உய்) - செலுத்தல்.
உரு - ரூபமுள்ள வஸ்து.
உருவுதல் (உருவு) - உள்ளேபுகுந்து ஓடுதல் (உருவ - வினையெச்சம் 2-6-9).
உலத்தல் (உல) - ஒழிதல்; (உலக்க - முடிய, வினையெச்சம் - 3-1-5) உலப்பு - முடிவு; தொழிற்பெயர் (2-6-5).
உலாவுதல் (உலாவு) - மெல்லநடத்தல்.
உவத்தல் (உவ) - மகிழ்தல், விரும்பல்.
உவலை - இழிவு, இளப்பம்.
உழக்கல் (உழ) - மிதித்தல்.
உழல்தல் (உழல்) - அலைதல், மனம் சுழல்தல்.
உழலை - இரும்புத்தடி.
உழிதால் (உழிதரு) - திரிதல்.

உள்ளுதல் (உள்) - நினைத்தல். (2-6-3)
உறல் - ஸ்பரிசம்.
உறைத்தல் (உறை) - அழுந்தல்.
உன்னுதல் (உன்) - நினைத்தல்; (உன்னித்து - வினை யெச்சம் - 4-6-10).
*உரு - (இடிபோல் பயங்கரமான த்வனியையுடைய வஸ்து என்று பூர்வர்கள் 7-2-9).

(ஊ)

ஊண் - உண்ணப்படுவது; ஆஹாரம்.
ஊர் - வாஹநம் (ஊர்வதற்கு ஸாதநம்).
ஊர்தல் (ஊர்) - நடத்தல்.
ஊழ் - குணம், ஸ்வபாவம்.
ஊழ்மை - முறைமை.
ஊழி - கல்பம், பிரம்மாவின் பகல்.
ஊளி - பசி, உறுஞ்சுகிற சப்தம் (7-4-4).
ஊன் - மாம்ஸம்.
ஊனம் - குறைவு (வடமொழி).

எ

எஞ்சல் (எஞ்சு) - குறைதல்.
எய்த்தல் (எய்) - இளைத்தல்; (எய்யா - எதிர்மறைவினை யெச்சம் 2-9-3).
எய்தல் (எய்து + அல்) - அடைதல்.
எய்தல் (எய்) - பாணமிடுதல் (1-5-6).
எயில் - மதிள்.
எயிறு - பல்.
எரி - நெருப்பு.
எரித்தல் - எரியும்படி செய்தல்.
எருக்கம் - பிடரி.
எல்லி - ராத்திரி.
எல்லே - தோழியைக் கூப்பிடும்போது சொல்லும் சொல்.
எழில் - அழகு.
எள்கல் - கடுபடுகை (2-6-4), உபேக்ஷை - (1-6-5.)

எற்றுதல் (எற்று) - கொல்லல், உதைத்தல், அடித்தல், மோதுதல்.
என்பு - எலும்பு.

(ஏ)

ஏங்கல் - (ஏங்கு) அஞ்சல், அழுதல், இரங்குதல், துக்கத்தினால் கத்துதல், மனம் வாடுதல்.
ஏசுதல் (ஏசு) - இகழ்தல்.
ஏதம் - குற்றம்.
ஏதலர் - அயலார், ஏது + அல் + அர்; ஒரு ஸம்பந்தமுமில்லாதவர்.
ஏய்தல் (ஏய்) - சேரல், பொருந்தல்.
ஏர் - அழகு, ஒப்பு, உழவுமாடு(5-1-11) (உழவுத்தொழில், கலப்பை.)
ஏர்வு - தகுதி, ஒப்பு.
ஏலம் - மயிர்ச்சாந்து, அதாவது - ஸ்திரீகள் கூந்தலுக்கு அணியும் வாஸனைச் சாந்து. (6-6-1)
ஏலுதல் (ஏல்) - தகுதி, பொருந்தல்-(4-3-5.)
ஏழை - சபலன்.
ஏறு - காளைமாடு, சில மிருகங்களின் ஆண்.
ஏனம் - வராஹம்.

(ஐ)

ஐ - ச்லேஷ்மம், கோழை (2-9-3).
ஐயம் - ஸந்தேஹம்.

(ஒ)

ஒக்கலை - இடுப்பு.
ஒசித்தல் (ஒசி) - ஒடித்தல், முறித்தல்.
ஒசிதல் (ஒசி) - துவள்தல்; (ஒசிசெய்-10-3-8) பகுதியே தொழிற்பெயராய் வந்தது.
ஒட்டுதல் - பொருந்துதல், பிரதிஜ்ஞைசெய்தல்.
ஒடுங்கல் (ஒடுங்கு) - அடங்கல், ஒடுக்கல் - ஒடுங்கும்படி செய்தல்.
ஒருங்கு - ஒரேவிதம் (3-1-5), ஒன்றாய்ச் சேர்த்து (4-6-4, ஒருங்காகவே).
ஒருத்தன் - ஒருவழி.
ஒருவு (ஒரு) - நீங்கல், தவிர்தல், விலகல் (2-5-2).
ஒல்குதல் - (ஒல்கு) - தளர்தல்,

ஒல்லை - சீக்கிரம்.
ஒற்கம் - குறைவு, தளர்ச்சி.
ஒன்றுதல் (ஒன்று) - பொருந்துதல், ஐக்கியப்படுதல்.

(ஓ)

ஓத்து (ஓதல்) - வேதம் - ஓதப்படுவது.
ஓதம் - ஸமுத்திரம், அலை.
ஓர்தல் (ஓர்) - ஊஹித்தல், ஆராய்ந்தறிதல், ஓர்ப்பு - தொழிற்பெயர் (ஓர்ப்பால்-4-6-1).
ஓலமிடுதல் - (ஓலமிடு) கதறிக் கூப்பிடுதல்.
ஓவுதல் (ஓவு) - ஒழிதல், நீங்குதல் (ஓவா - எதிர்மறைப் பெயரெச்சம் 4-4-8.)

(க)

கங்கு - எல்லை, (கங்கு இருள் - இதற்கு மேற்பட்டு இல்லாத இருள் - 5-4-7).
கங்குல் - இராத்திரி.
கசிதல் (கசி) - ஜலம் ஊறுதல், கசிந்த - ஈரமுள்ள, பெயரெச்சம் (6-7-8).
கட்டுரைத்தல் (கட்டுரை) - நிரூபணம் செய்தல், (கட்டுரைக்கில் - வினையெச்சம் (3-1-2).
கட்டுவிச்சி - குறி சொல்லுகிறவள்.
கடத்தல் (கட) - அளத்தல், தாண்டல் (கடந்த - பெயரெச்சம் - 1-3-10).
கடவுதல், கடாவுதல் (கடவு, கடாவு) - நடத்துதல், செலுத்துதல்.
கடா - மதஜலம்.
கடி - வாஸனை, (தேன் என்று பூர்வர்கள்,) புதுமை - (கடி சேர் -8-8-2).
கடி - சீக்கிரம், கடியமாயன் - கடியமைமாயன்.
கடிதல் (கடி) - அழித்தல், (கடிந்து - வினையெச்சம் 2-3-8) கடிந்த - பெயரெச்சம்-2-9-1) துரத்துதல், (9-7-1).
கடியன் - கடுமையுள்ளவன், துர்தன் என்று பூர்வர்கள் (5-3-1), சீக்கிரம் வேலைசெய்கிறவன்.
கடுத்தல் (கடு) - இளைய எடுத்தல் என்று பூர்வர்கள், (கடுத்த - பெயரெச்சம் 8-1-3).

கடுதல் (கடு) - பறித்தல், (களைகட்டு - வினையெச்சம், 1-3-5).
கடையா - பால் கறக்கிற மூங்கில் பாத்திரம்-(4-8-4).
கண்ணி - மாலை.
கணை - பாணம்.
கதிர் - ஸூரியன்.
கம் - ஆகாசம் (வடசொல்).
கயவர் - கீழ்மக்கள்.
கரம் - கை, உறுதியானது - கரன் என்று போலி(1-1-10.)
கரவு (கரா) - முதலை.
கரி - ஸாக்ஷி, யானை (வடசொல்).
கலன் - ஆபரணம்.
கலாய் (கலாவு) - கலந்து, வினையெச்சம்.
கலி - ஒலி, (ஸந்தோஷத்தினால் உண்டாகும் சப்தம்என்று பூர்வர்.)
கலுழ்தல் (கலுழ்) - சொரிதல், கலங்கல்.
கலை - வஸ்திரம்.
கவ்வை - பழிச்சொல், ஒலி, கோலாஹலம் (9-2-7).
கவர்தல் (கவர்) - ஆசைப்படுதல், தொழிற்பெயர், ஆசை, நெருக்கமாயிருப்பது.
களை - காரியம்.
கழகம் - கோஷ்டி.
கழல் - திருவடி, வீரகண்டை.
கழறுதல்(கழறு) - கடுஞ்சொல் சொல்லுதல். (ஏய்ப்புவார்த்தைத சொல்லுதல் என்று பூர்வர்கள், 6-2-5)
கழனி - வயல்.
கழி - உப்பளறு.
கழிகோல் - கன்றின் வாய்ப்பூட்டு, (மாட்டை நடத்தும் கோல் என்று பூர்வர்கள் 4-8-4).
கள் - தேன்.
கள்ளுதல் (கள்) - களவு செய்தல், (கள்கின்ற - பெயரெச்சம் 7-7-9).
களம் - இடம் (களன் - போலி).
களி - தேன்.

களிறு - யானை.
களைகண் - ஆதாரம், ரக்ஷகன், புகல், உதவி.
கற்பு (கல்) - படித்தல், அதினாலுண்டான அறிவு.
கற்றை - கூட்டம்.
கறங்கல் (கறங்கு) - சுழலல்.
கன் - திருடமாயிருப்பது, செம்பு.
கன்னல் - கருப்பஞ்சாறு.
கனலுதல் (கனல்) - எரிதல், காய்தல்.
கனைத்தல் (கனை) - சப்தித்தல்.
கா - தோட்டம்.
காதல் - ஆசை.
காம்பு - மூங்கில்.
காமுறுதல் (காமுறு) - ஆசைப்படுதல்.
காய்தல் (காய்) - கோபித்தல்.
காயம் - உடம்பு.
காயா - காசாம்பூ.
காரிகை - பெண்.
கார் - மேகம்.
கால் - காற்று.
காலி - பசுக்கூட்டம்.
காவு - தோட்டம்.
கான்
கானகம் } - காடு.
கானம்
கானல் - உப்புக்கழி, கடல்கரை.
கிடக்கை
கிடத்தல் } (கிட) - படுத்தல், படுக்கை.
கிதி (கிருதி) - கிரியை.
கிளர்தல் (கிளர்) - விருத்தியடைதல், விளங்குதல்.
கிளை - உறவினர் (பக்ஷியின் சப்தம் என்று பூர்வர்கள் 9-5-1).
கிறி - வழி, உபாயம்.
கீண்டல் (கீள்) - கிழித்தல்.

குஞ்சி - ஆண் தலைமயிர்.
குடுமி - மலையின் சிகரம்.
குதற்றுதல் (குதற்று) - நெறிதவறுதல் (துன்பத்தைதயுண்டுபல்லை வளர்தல் என்று பூர்வர்கள் 10-1-6.)
குதிரி - அடங்காப்பெண்.
குமுறுதல் (குமுறு) - வெளியே தோன்றாமல் உள்ளுக்குள்ளே கொதித்தல், கலந்து ஒலித்தல்.
குமை - துன்பம்.
குமைத்தல் (குமை) - அழித்தல், குழையப்பண்ணுதல்.
குரம்பை - பறவைக்கூடு.
குரவை - ராஸக்ரீடை.
குரை - ஒலி.
குவடு - மலைச்சிகரம்.
குழகன் - அழகன், பவியன் - ஒருவனுக்கு உட்பட்டவன்.
குழகு - அழகு.
குழகுதல் (குழகு) - கொஞ்சி விளையாடல், வசீகரித்தல்.
குழமணன் - மரப்பாச்சி (குழந்தைகள் விளையாடும் பொம்மைகள்).
குழவி - குழந்தை.
குழறுதல் (குழறு) - நன்றாக இல்லாமல் பேசுதல்.
குழாம் - கூட்டம்.
குழு - கூட்டம்.
குழுமுதல் (குழுமு) - கூடுதல்.
குழுவு - வரிசை, கூட்டம் (10-6-7).
குழுவுதல் - (குழுவு) கூடுதல்.
குழைத்தல் (குழை) - ஒன்றாய்க் கலத்தல் (குழைந்து - வினையெச்சம்).
குற்றேவல் - அடித்தொண்டு, அந்தரங்க கைங்கரியம்.
குறள் (குறுமை) - ஈரடி உயரமுள்ள குள்ளன்.
குறி - குறிப்பு, கவனம், எண்ணம்.
குன்றம் - மலை.
குனித்தல் (குனி) - வளைத்தல்; கூத்தாடல்.
கூதை - காதை மூளியாக்குதல்.
கூர்தல் (கூர்) - மிகுதல்.

கூழ்த்தல் (கூழ்) - ஸம்சயப்படுதல், கூழ்ப்பு - ஸம்சயம், தொழிற் பெயர் (8-2-6).

கூற்றம் - யமன்.

கெழுமுதல் (கெழுமு) - பொருந்துதல், சேர்தல்,(கெழுமிய - பெயரெச்சம் 3-6-7).

கேழ் - ஒப்பு.

கேழ்த்த - விருத்தியடைந்த (3-1-7).

கேழல் - வராஹம்.

கேள் - ஒப்பு.

கேள்வன் - தலைவன், கணவன். (மனைவியின் ஸுகதுக்கத்தை கேட்பவன்.)

கைத்தல் (கை) - கோபித்தல், (துரத்தல் என்று பூர்வர்கள் 2-7-4).

கைதவம் - கபடத்தன்மை, (வடசொல்).

கைம்மாறு - பதில் உபகாரம்.

கைம்மை - பொய்.

கொங்கு - தேன், வாஸனை.

கொண்டல் (கொள்) - மேகம். - கடல்நீரை முகந்து கொள்வது.

கொத்து - பூங்கொத்து.

கொப்பூழ் - நாபி.

கொல்லை (கொல்) - ஏற்பட்ட வரம்பை கொன்றவள் = அழித்தவள். (6-7-4)

கொல்லைமை - வரம்புகடந்த செயல் (4-2-2).

கொழுநன் - நாயகன். (கொடிக்கு ஆதாரமான கொம்பு. அது போல மனைவிக்கு ஆதாரமாயிருப்பவன்).

கோகனகம் - தாமரை.

கோது - மரியாதை மீறுதல் (3-5-4).

கோட்டிய - வளைக்கப்பட்ட, பிறவினைப் பெயரெச்சம்.

கோட்டுதல்(கோட்டு) - வளைத்தல்,(கோட்டு அங்கை-வினைத்தொகை; அல்லது தொழிற்பெயராகவும் கொள்ளலாம்; வளைத்தலை யுடையது).

கோடல் (கோடு) - வளைதல்.

கோணை - வக்ரம்.

கோத்தல் (கோ) - தொகுத்துவைத்தல். (கோமின் - ஏவல் வினை முற்று (4-1-7).
கோது - தோஷம்.
கோதை - மாலை.
கோலம் - அழகு, வேஷம் (5-6-10), அலங்காரமான வஸ்திரம், மாலை, ஆபணரம், ஒருப்பாடு (5-6-9).
கோவை - கோத்தமாலை.
கோள் - வலிமை, காந்தி, அநுபவம் (9-6-7).

(ச)

சங்கு - வளை, ஆசை, பற்று (ஸங்கம் வடமொழி).
சதிர் - சாதுர்யம்.
சமயம் - அவஸ்தை, மதம் (வடமொழி).
சமர் - யுத்தம் (வடமொழி - ஸமர).
சரணம் - கால் (வடமொழி).
சலிப்பு - சலநம், விட்டுவிலகுதல்.
சவி - காந்தி (வடமொழி).
சறை - இடையர்கள் இடுப்பில் கட்டும் மணி. (4-8-4).
சாடுதல் (சாடு) - அசைதல், அடித்தல்.
சாதித்தல் (சாதி) - வெல்லுதல்.
சாயல் - அழகு, மேன்மை, நிலம்.
சிதைதல் (சிதை) - அழிதல், கெடுதல்.
சில்லை - பழிச்சொல் சொல்லுதல். சிலுகு - சண்டை (6-7-1)
சிறை - சிறகு, சிறைச்சாலை.
சினை - கிளை.
சீய்க்கை (சீய்) - பெருக்குவது? திருவலகிடுதல் (10-2-7).
சீர் - நல்ல குணம்.
சீற்றம் - கோபம்.
சுகிர்தல் (சுகிர்) - எஃகுதல் (7-7-9).
சுணங்கை - மயிர்க்கூச்சல், கையைத்தட்டிக்கொண்டு கூத்தாடுதல். (4-6-7)
சுண்டாயம் - தன் பிரயோஜனத்துக்காக வேலை செய்வது. (6-2-1)
சுரன் - தேவன் (வடமொழி).

சுருதி - வேதம் (வடமொழி).

சுரும்பு - வண்டு.

சுலாவுதல் (சுலாவு) - சுழலுதல், சுற்றுதல்; சுலாய் - சுலாவி, வினையெச்சம் (7-4-2)

சுவடு - அடையாளம்.

சுவைத்தல்(சுவை) - உண்டல்,இன்பம்தரல், ருசித்தல்,ருசிபார்த்தல்.

சூது - உபாயம் (2-10-9).

சூழ்ச்சி (சூழ்) - உபாயம் (தொழிற்பெயர்); சூழ்தல் - நினைத்தல்.

சூழல் (சூழ்) - சுற்றியிருக்குமிடம், உபாயம்.

செகுத்தல் (செகு) - அழித்தல். கோபம் (செக்கம் - தொழிற்பெயர் 1-9-5)

செப்பம் - செவ்வை.

செய் - வயல்.

செரு - சண்டை.

செற்றல் (செறு) - கொல்லுதல்.

செறிதல் (செறி) - நெருங்குதல்.

செறு - சிறுவயல், வயல். (4-10-10)

சென்னி - தலை.

சேண் - உயரம், தூரம் (சேட்பட்ட - நீண்ட).

சேயோன் - தூரத்திலிருப்பவன், சேய்மை - தூரம்.

சேர்தல் (சேர்) - படுத்தல், சேரா து - எதிர்மறை வினையெச்சம்.

சேவகம் - பராக்கிரமம்.

சேவல் - ஆண்பக்ஷி.

சோர்தல் (சோர்) - தளர விடுதல் (2-1-10).

சோர்வு - குறைவு, தவறுதல் (1-5-8).

சிற்றுதல் (சற்று?) - சஞ்சலப்படுதல் (9.1-7).

ஞ

ஞாலம் - உலகம்.

ஞான்று - காலம்.

த

தகர்த்தல் (தகர்) - உடைத்தல், அழித்தல், (தகர்ப்பு - தொழிற்பெயர்-4-9-5).

தகவு - கிருபை.

தகை<br>தகைமை } - தகுதி, ஸ்வபாவம்.

தஞ்சம் - ரக்ஷகன்.

தடம் - குளம்.

தடிதல் (தடி) - கொல்லுதல், தடிந்து - வினையெச்சம் (3-5-2) தடிந்திட்டு (7-5-2).

தடுகுட்டம் - தலை தடுமாற்றம் (3-5-3).

தண்ணுத்தல் (தண்ணு) - தாமதித்தல், (தண்ணுவாது - தாமதியாமல் 4-9-1).

தண்மை - குளிர்ச்சி.

தணிவு (தணி) - குறைவு.

ததர்த்தல் (ததர்) - நெருங்குதல், (ததர்ந்த வொலி - 7-4-5).

தமியேன் - தனித்தநான், தன்மைச்சொல்.

தயங்கல் (தயங்கு) - அசைதல், (தயங்க - வினையெச்சம் 9-2-5).

தரணி - பூமி (வடமொழி).

தரம் - தன்மை.

தலைப்பெய்தல் (தலைப்பெய்) - ஒன்றாய்க் கூடுதல், சேருதல்.

தவர்தல் (தவர்) - துளைத்தல் (தவரும் 9-9-1).

தவிர்வு (தவிர்) - நடுவில் விட்டுப்போவது, தவிவு - இடைக்குறை (3-4-4).

தழை - கூட்டம் (7-7-9).

தளவு - முல்லை.

தாமம் - மாலை, இடம்.

தாயவன் - தாவியளந்தவன். இது தாயான் என்று ஆகி, செய்யுளில் தாயோன் என்று ஆகியிருக்கிறது(1-5-3).

தார் - மாலை.

தாரகை - நக்ஷத்திரம் (வடமொழி).

தாவுதல் (தாவு) - தாண்டுதல், நீட்டல், பரப்பல். (தாவிய - பெயரெச்சம்).

தாழ்தல் (தாழ்) - தாமதித்தல்; (தாழப்படாமல் - தாமதிக்காமல் 7-5-5).

தாள் - திருவடி.

திங்கள் - மாதம், சந்திரன்.
திசைத்தல் (திசை) - பிரமித்தல் (4-6-2).
திண்மை - உறுதி, வலிமை.
திணர்த்தல் (திணர்) - நெருங்குதல், கனமாயிருப்பது, திணர்த்த - பெயரெச்சம் (6-1-5).
திணி - நெருங்கி நிறைந்திருத்தல். (ஸாரம் என்று பூர்வர்கள் 2-1-8).
திமிர் - விறைப்பு (6-5-2).
திருந்துதல் (திருந்து) - செவ்வைப்படுதல், திருந்து வேதம் - வினைத்தொகை (6-5-8).
திரை - அலை
திவளுதல் (திவள்) - கிடந்து அசைதல்; (நிலையாயிருப்பது என்று பூர்வர்கள் 2-4-5).
திறம் - தன்மை.
திறம்புதல் - மாறுபடுதல், தப்புதல், (5-6-5).
திறல் - வலிமை, தேஜஸ்.
திறை - கப்பம்.
தீது - குற்றம்.
துகள் - தூளி.
துகில் - வஸ்திரம்.
துஞ்சுதல் (துஞ்சு) - தூங்குதல், இறத்தல்.
துடை - ஜங்கை.
துதி - ஸ்தோத்ரம்.
துப்பரவு - ஸாமர்த்தியம்.
துப்பன் - ஸாமர்த்தியமுடையவன், துப்பு - ஸாமர்த்தியம்.
துயக்கு - ஸம்சயம், மோஹம் (1-3-9).
துயிலல் (துயில்) - நித்திரை செய்தல்.
துரங்கம் - குதிரை (வடமொழி).
துரிசு - குற்றம்.
துவர்தல் (துவர்) - உலருதல். (4-7-5).
துவள் - குற்றம்.
துவளுதல் (துவள்) - வாடுதல்.
துழதி - துக்கம் (2-7-8).

துழாவுதல் (துழாவு) - தடவுதல் (துழாய், துழாவி - வினையெச்சம் 2-1-4, 4-6-1); புக்கு அநுபவித்தல் (துழாவி - புகுந்து அநுபவித்து 1-7-9).

துளக்கம் } - (துளங்கு) அசைவு
துளக்கு }

துளங்கல் (துளங்கு) - அச்சப்படுதல், மனங்கலங்கல் (துளங்கு சோதி 8-5-5) ஒளிசெய்தல், (துளங்க 5-1-9).

துளும்பல் (துளும்பு) - அலைதல், துளும்ப - வினையெச்சம் (4-4-10) (6-7-8).

துறவி (துற) - துறத்தல், நீக்கல்.

துறுதல் (துறு) - புஜித்தல் (துற்று - வினையெச்சம்; துற்று தொழிற்பெயர் - கபளம், 4-1-7)

துன்னுதல் (துன்) - நிறைதல், நெருங்குதல்.

துனி - புலவிநீட்டம், ப்ரணயகலஹம், கோபம் (9-9-3)

தூர்த்தல் (தூர்) - நிரப்புதல்.

தூவி - சிறகு.

தூறு - புதர்.

தெப்பர் - அல்பர் (வடமொழி ...)

தெருள் - தெளிவு, நல்ல ஜ்ஞாநம்.

தெவ்வம் - சத்ருக்கூட்டம், தெவ்வர் - சத்ரு, தெவ்வத்துவராய் (5-7-5) அத்து சாரியை.

தெழித்தல் (தெழி) - முழங்குதல் (தெழிகுரல் - வினைத்தொகை 3-3-1).

தெறித்தல் (தெறி) - நிமிர்த்தல் என்று பூர்வர்கள் (1-5-5).

தென் - அழகு, தெற்கு.

தேம்பல் (தேம்பு) - குறைபடுதல், வாட்டமடைதல் (2-1-6).

தேர்தல் (தேர்) - ஆராய்தல், தேடல்.

தேறல் - தேன்.

தேறல் (தேறு) - தெளிதல், நம்புதல்.

தேன் - வண்டு.

தையல் - ஸ்திரீ.

தொகுதல் (தொகு) - சேர்தல், (தொக்கு - வினையெச்சம் (7-6-11)

தொங்கல் - மாலை.
தொடி - கைவளை.
தொடுதல் (தொடு) - தோண்டுதல் (தொடுகடல் (10-9-7).
தொடுவு - திருட்டு, (தொடுவுண்ட 1-5-1).
தொடை - மாலை (தொடுக்கப்பட்டது).
தொண்டை - கோவைப்பழம்.
தொல் - பழைய, அநாதி, தொல்லை - பழமை.
தொலைவு (தொலை) - நாசமடைதல்.
தொழு - மாட்டுக்கொட்டில் (10-3-4).
தொழுத்தை - அடிமைப்பெண், வேலைக்காரி (10-3-4).
தொழும்பு - அடிமை (தொழும்பாயார்க்கு 3-1-9).
தோய்வு (தோய்) - சேர்க்கை (தோய்விலன் 3-4-10)
தோற்றம் - ரூபம் (3-6-6).
தௌவ்வை - மூதேவி (6-3-6).

ந

நக்கன் - சிவன், இடுப்பில் ஆடையில்லாதவன் (வடமொழி நக்நன்).
நகுதல் (நகு) - சிரித்தல், பரிகசித்தல்.
நச்சுதல் (நச்சு) - ஆசைப்படுதல், நச்சு - முதனிலைத்தொழிற்பெயர்,
நச்சப்படுதல் - விரும்பப்படுதல்.
நசை - ஆசை.
நஞ்சு - விஷம்.
நட்டம் - கூத்து.
நடை - ஸ்வபாவம்.
நண்ணல் (நண்ணு) - கிட்டுதல் (நண்ணி - கிட்டி, வினையெச்சம் 10-1-9).
நணுகுதல் (நணுகு) - கிட்டல்.
நந்துதல் (நந்து) - நாசம் அடைதல், (நந்தாவிளக்கமே 2-1-9) மிகு தல்.
நமன்று - நமஸ்காரம்செய்து, வினையெச்சம்; நமன் - வடமொழி நமஸ் (3-3-7).
நமுகுதல் (நமுகு) - குறைதல் (9-9-3).
நயத்தல் (நய) - விரும்புதல் (நயந்து - வினையெச்சம்).

நல்குதல் (நல்கு) - கொடுத்தல் (6-8-6), விரும்பல் (1-4-4).
நல்குரவு - ஏழைத்தனம்.
நலிதல் (நலி) - ஹிம்ஸித்தல்.
நவில் - சப்தம்.
நவிலல் (நவில்) - சொல்லுதல்.
நவை - குற்றம் (நவையில் 9-8-3).
நள் - மிகுதிப்பொருளைக் காட்டும் இடைச்சொல்.
நள்ளி - பெண்நண்டு.
நளிர் - குளிர்.
நறு (நறுமை) - வாஸனை, நன்மை.
நன்றி - நல்லது, பண்புப்பெயர்.
நாகு - கிடாரி.
நாடுதல் (நாடு) - தேடுதல், நாடி - வினையெச்சம் (2-4-1).
நாண் - வெட்கம்.
நாயிறு - ஸூரியன்.
நாலுதல் (நாலு) - தொங்குதல், நால - வினையெச்சம் (4-1-5).
நாவாய் - கப்பல்.
நாழ்மை - இல்லாத பெருமையைச் சொல்லுகை (4-6-9).
நாற்றம் - (நாறு) வாஸனை.
நான்று - நாள் (ஞான்று என்பதின் போலி).
நானம் - கூந்தலுக்கு வாஸனையை உண்டுபண்ணும் வஸ்து (7-3-2).
நிகர் - ஸமம்.
நிகழ்தல் (நிகழ்) - இருத்தல்.
நிமிதல் (நிமி) - வாய் நெளிதல், (நிமியும் - வினைமுற்று 6-5-2).
நிரை - பசு, பசுக்கூட்டம், கூட்டம்.
நிலாவுதல் (நிலாவு) - விளங்குதல் (நிலாவிய - பெயரெச்சம், 7-1-1) (நிலாவ - வினையெச்சம் 3-9-3).
நிழறுதல்(நிழறு) - காந்தியை வீசுதல்; (நிழறுகொல்படை - வினைத்தொகை 6-2-5).
நிறம் - மார்பு, (நிறந்தனூடு 5-10-1).
நீத்தல் (நீ) - துறத்தல், விட்டுவிடுதல் (நீத்த எம் காரிகை 6-7-8).
நீர்மை - தாக்ஷிண்யம் (நீர்மையில் 3-5-7), நிலைமை (1-4-4).

நுகர்தல் (நுகர்) - உண்ணல், அநுபவித்தல், நுகர - வினையெச்சம் (6-4-3).

நுடங்குதல் (நுடங்கு) - மோஹத்தை உண்டுபண்ணுதல், அதாவது கேட்கும்போதே மனதைக்கவர்தல் (நுடங்கு கேள்வி - அன்மொழித்தொகை. 3-4-6); அசைதல், நுடங்க - வினையெச்சம் (6-7-4).

நுணுக்கம் - ஸூக்ஷ்மம்.

நுதல் - நெற்றி.

நுதி - முனை.

நுவல்தல் (நுவல்) - சொல்லுதல், (நுவல் என்ன நுவலாதே 1-4-8)

நூற்றல் (நூல்) - நூல்நூற்பது, செய்வது, (ஆகநூற்றவைத்தூதி - 5-10-11).

நெகிழ்தல் (நெகிழ்) - உருகுதல், நெகிழ்கின்ற - பெயரெச்சம் (2-1-5) பிரிதல், நழுவல், (நெகிழ்க்கவே - வினையெச்சம்)(1.7-7).

நெகுதல் (நெகு) - உருகுதல் (நெக்கு - வினையெச்சம் 5-10-8).

நெறி - உபாயம்.

நேமி - சக்ரம்.

நேர் - உவமை.

நேர்தல் (நேர்) - ஸம்பவித்தல், மெலிதல், நேர்ப்பம் - ஸூக்ஷ்மமான வஸ்து (8-1-6).

நைவு (நை) - நைதல், (நைவாய - 2-1-5).

நொடித்தல் (நொடி) - சொல்லுதல், (நொடி - முதனிலைத்தொழிற் பெயர்).

நொந்து - வருத்தப்படுதல் (நொந்தாய் - வினைமுற்று 2-1-8).

நோற்றல் (நோல்) - தவஞ்செய்தல்; (நோற்ற - பெயரெச்சம்).

பகர்
பகல் } - காந்தி, (பகர்க்கதிர் - பகலையுடைய கதிர் 5-7-8).

படப்பை - தோட்டம் (1-4-5).

படர் - கொடி, படர்கிறது என்பது பொருள், முதனிலைத் தொழிலாகு பெயர்.

படி - பூமி (4-1-9), ஸ்வபாவம் - (3-1-1), உபமானம் (3-1-3, 2-3-9).

படை - ஆயுதம், ஸேனை.
பண் - ராகம், இசைப்பாட்டு.
பண்பு - விதம் (2-5-6).
பணித்தல் (பணி) - சொல்லுதல் (வடமொழி - ஭ண).
பணிதல் (பணி) - வணங்குதல் (பணியாவமரர் 8-3-6) பணிவு - தொழிற்பெயர்.
பணை - மரத்தின் பருங்கிளை, மூங்கில், நீர்நிலம் (தண்பணையுள் 7-3-2); வயல்.
பதவு - மெதுவாயிருப்பது, (பதவிய - மிருதுவாயிருக்கிற, பெயரெச்சம் 7-9-10).
பதி - உறைவிடம், வீடு.
பதித்தல் (பதி) - வைத்தல் (பதித்தவுடம்பாய் 6-3-7).
பயத்தல் (பய) - கொடுத்தல், (பயந்தாய் - வினைமுற்று 2-7-8); (பயக்க - வினையெச்சம் 7-10-1).
பயப்பு - பசலை, நிறம் வேறுபடுதல்.
பயலைமை - வெளுத்த உடம்பின் நிறம் (2-1-1).
பயிலுதல் (பயில்) - அப்யாசம் செய்தல், கூடுதல் (பயின்று - வினையெச்சம் 9-5-10).
பாண் - மஞ்சம்.
பரத்தல் (பர) - வியாபித்தல் (பரந்த - பெயரெச்சம் 1-1-3).
பரவுதல் (பரவு) - ஸ்தோத்ரம் பண்ணுதல்.
பரவை - ஸமுத்திரம்.
பராவுதல் (பராவு) - ஸ்தோத்ரம் பண்ணுதல்.
பரி - குதிரை.
பரிசு - தன்மை, விதம்.
பரிதி - ஸூர்யன்.
பரிப்பு - துக்கம்.
பரிவது - கெடுதல்.
பரிவு - துக்கம், நோவு.
பருகுதல்(பருகு) - குடித்தல், பருகி - வினையெச்சம்.
பவர் - விஸ்தாரம் - (2-2-6).
பழனம் - வயல்.

பளிங்கு - ஸ்படிகம்.
பற்பு - தாமரை.
பற்றை - தூறு, அதைப்போலிருக்கும் அதமன் (3-9-7).
பறைதல் (பறை) - சொல்லுதல், (பறைந்து வினையெச்சம் 4-6-8).
பன்னுதல் (பன்) - ஆராய்தல், பேசுதல், தேர்தல் (பன்னினர் 7-10-3).
பனி - ஜலம், (கண்கள் பனிமல்க 6-7-6) குளிர்.
பா - பரப்பு, (பதார்த்தங்கள் என்று பூர்வர்கள் 7-6-1).
பாகு - அணிவகுத்தல், நிர்வாஹம் செய்கிறவன் திறம் (4-6-1).
பாங்கு - தகுதி.
பாசம் - ஆசை (வடமொழி).
பாசறவு - துக்கம் (6-8-7).
பாசு - பசுமை, பசுமையின் விகாரம்.
பாடு - வருத்தம், இடம்.
பாதல் (பா) - பரவுதல், (பாவின்ற தொல்புகழ் 2-6-10).
பார் - பூமி.
பாரித்தல் (பாரி) - மிகுந்த பரப்பை அடைதல், (பாரித்து - வினை யெச்சம்-9-6-10).
பால் - இடம், ஸ்வபாவம் - (செம்பால-2-8-8).
பாவனை - நிர்மாணம் (3-4-10).
பாவித்தல் (பாவி) - இடைவிடாமல் நினைத்தல், (பாவித்து - வினை யெச்சம்-3-8-5).
பாவுதல் (பாவு) - பரவுதல்.
பாவை - ஸ்திரீ.
பாழி - அகலம்.
பாழிமை - பலம்.
பாறுதல் (பாறு) - ஓடுதல், பாற (2-7-4); பாறி (2-6-8) வினை யெச்சங்கள்.
பான்மை - ஸ்வபாவம்,
பிணக்குதல் (பிணக்கு) - சேர்த்தல் (பிணக்கி - வினையெச்சம் 6-2-8).
பிணங்கல் (பிணங்கு) - விவாதப்படுதல், (பிணங்கி - வினையெச்சம் 1-6-4) பிணக்கு - விவாதம்; தொழிற்பெயர் (1-3-4).

பிணி - வியாதி, கட்டு, (பிணியவிழ் மல்லிகை 10-3-5).
பிணை - பெண்மான்.
பிணைதல் (பிணை) - தொடுத்தல்.
பிழைத்தல் (பிழை) - தவிர்தல், பிழைக்கின்றது (9-4-3).
பிளிறல் (பிளிறு) - ஒலித்தல், பிளிறி - வினையெச்சம் (7-4-10).
பிறங்கல் (பிறங்கு) - விளங்குதல், செறிதல் (பிறங்கிருங்கூந்தல் 6-6-3).
பிறழ்தல் (பிறழ்) - விளங்குதல் (பிறழ - வினையெச்சம் 4-7-4).
பீடு - பெருமை.
பீர் - பரமாணு, வடமொழி பீலுவின் திரிபு.
புகர் - காந்தி, அழகு.
புடைத்தல் (புடை) - அடித்தல் (புடைப்ப - வினையெச்சம் 2-8-9).
புணர்ப்பு (புணர்) - சேர்த்தல் - ஸ்ருஷ்டி, ஆத்மாவை உடம்போடு சேர்ப்பதால்.
புணை - தெப்பம்.
புதைதல் (புதை) - மறைதல், (கண் புதையமூடிற்றால் 5-4-6).
புய்த்தல் - (புய்) வெளிப்படுதல் (புய - வினையெச்சம் -புயக்கற்றது- 9-5-10).
புயல் - நீர், மேகம்.
புரிவது (புரி) - செய்தல், ஸமர்ப்பித்தல்.
புரை - உவமை, இடைச்சொல் - (வெள்ளமே புரைநின்-2-6-4), ஓட்டை, (புண்புரைவேல்-9-5-9); அதிகமான, மண்புரை வையம்-6-6-5).
புரைப்பு - பேதம் (குற்றம் என்று பூர்வர்கள் 4-3-9).
புல்குதல் (புல்கு) - கட்டிக்கொள்ளுதல்.
புலப்படுதல் (புலப்படு) - விளங்குதல்.
புலப்பம் - விளக்கம், புல - விளங்குகிற, (புலவாநிரை, 4-4-9).
புலன் - இந்திரியம், விஷயம்.
புள் - பக்ஷி.
புள்ளுவம் - கள்ளவார்த்தை.
புற்கு - தாழ்வு.
புறம் - விளைபூமி (க்ஷேத்திரம்), மலைச்சார்பான கொல்லை.

புனல் - ஜலம்.
புனைதல் (புனை) - அலங்கரித்தல், கட்டுதல்.
பூசல் - பேரொலி, சண்டை.
பூசலிடுதல் (பூசலிடு) - ஒலிசெய்தல், சண்டை செய்தல்.
பூசனை - ஆராதநம் (வடமொழி).
பூண் - ஆபரணம்.
பூவை - காயாம்பூ (4-3-1) நாகணவாய்ப்புள், அதாவது - நாணத்தான் (8-2-8)
பெடை - பெண்பக்ஷி.
பெம்மான் - பெருமான்.
பெய்தல் (பெய்) - சொரிதல்.
பெயர்த்தல் (பெயர்) - கிளப்புதல், (பெயர்த்திடும் 5-2-5).
பெற்றம் - பசு.
பேணுதல் (பேண்) - ஆதரித்தல், (பேணுங்கால் பேணும்-2-5-10) முன்னது பெயரெச்சம்; பின்னது வினைமுற்று.
பேது - மோஹம், பேதைமை, அறிவின்மை.
பேர்தல் (பேர்) - பெயர்தல், விட்டுப்பிரிதல்.
பை - பாம்பின்படம்.
பைத்தல் (பை) - பாம்புப்படம் விரித்தல். பைத்த - பெயரெச்சம் (பைத்த பாம்பணையான்-3-3-10).
பைய - மெல்ல.
பொய்கை - குளம்.
பொரு - ஒப்பு, (பொருவில்சீர் 3-4-1).
பொருதல் (பொரு) - சண்டை போடுதல். பொருத - பெயரெச்சம் (3-10-1).
பொருப்பு - மலை.
பொருவு - ஒப்பு, தடை (1-7-10 பொருவல்லன்).
பொல் - கெட்ட (பொன்னிறமாய் 8-2-1).
பொல்லுதல் (பொல்) - துளைத்தல், (என் பெல்லா மணியே-5-1-2).
பொழில் - தோட்டம், உலகம்.
பொற்பு - அழகு.
பொறி - இந்திரியம்.

பொறை - பொறுமை, சுமை, தூக்குதல்.
போது - புஷ்பம்.
போற்றுதல் (போற்று) - ஸ்தோத்ரம் பண்ணுதல்.
போனகம் - போஜநம.
பௌவம் - ஸமுத்திரம்.

ம.

மங்குதல் (மங்கு) - நாசமடைதல், மங்க-வினையெச்சம் (3-6-10.)
மட்டு - தேன்.
மடங்குதல் (மடங்கு) - சுருண்டு விழுதல் (மடங்குமால் 4-2-7).
மடந்தை - யௌவனமுள்ள பெண்
மடப்பம் }
மடம் } - மடமை, ஸ்திரீகளின் குணங்கள் நான்கில் ஒன்று. பவ்யதை-புருஷனுக்கு உட்பட்டிருப்பது, இளமை.
மடவரல் - இளம்பெண்.
மடிதல் (மடி) - மடங்குதல், திரும்புதல், மடியாது - எதிர் மறை வினையெச்சம் (8-3-5).
மடுத்தல் (மடு) - எதிர்த்துப்போதல், (மடிப்புதல் செய்தல் என்று பூர்வர்கள்) ஆறுமடுத்து-7-4-7, நிறைத்தல், ஸமர்ப்பித்தல், (வேள்வியுள்மடுத்த-8-4-5).
மணத்தல் (மண) - கமழ்தல், கூடுதல்.
மணாளன் - நாயகன், மணம் - கலவி, அதையுடையவன் மணாளன்.
மதி - சந்திரன், ஞானம்.
மந்தம் - செருக்கமாகக் கோர்த்தது, செவ்வியழியாமை (9-9-8).
மந்திரம் - வீடு (வடமொழி).
மயர்வு - அஜ்ஞானம்.
**மயல்** - மோஹம்.
மருங்கு - பக்கம்.
மருப்பு - யானையின் தந்தம், விலங்கின் கொம்பு.
மருவுதல் (மருவு) - கிட்டல், பொருந்தல், மருவி - வினையெச்சம்.
மருள் - அஜ்ஞாநம், மோஹம், மயக்கம்.
மருளல் (மருள்) - மயங்கல் (மருடியேலும் 2-7-10) மருள்+த்+இ=மருடி.

மலேதல் (மலே) - விருத்தியாதல் என்று பூர்வர்கள் (மலேந்து -வினையெச்சம் 3-5-2.)
மல்குதல்(மல்கு) - விருத்தி அடைதல், (நீர்மல்கு கண்ணினர்3-5-7).
மல்லல் - மிகுதி, வலிமை, பெருமை.
மல்லே - வளப்பம் (8-9-8) பெருமை (மல்லே ஞாலம்-8-5-5).
மலங்குதல் (மலங்கு) - கலங்குதல், மலங்க - வினையெச்சம் (2-4-4).
மழ - இளமை.
மழலே - இளமை, (மழலேதீரவல்லார்-5-8-11).
மழறுதல் (மழறு) - முடிவுபெருத மெல்லிய பேச்சுப் பேசுதல், (மழறு தேன்மொழியார்கள் 6-2-5).
மழை - மேகம்.
மறி - சில மிருகங்களின் குட்டி.
மறு - களங்கம்.
மறுகல் (மறுகு) - மனங்குழம்பல், சுழலுதல், மறுக்கேல் - பிறவினை ஏவல் எதிர்மறைவினை மற்று; மறுகு மறுக்கு என்ருனது (4-9-5); மறுகல் இல் - (4-1-10) ஆகுபெயராய் மனக் குழப்பத்தைச் செய்யும் மரணத்தைச் சொல்லுகிறது.
மன் - அரசன், நிலேயாயிருப்பது (மன்னுறில் 1-2-5).
மன்னுதல் (மன்) - நிலேயாயிருத்தல்; (மன்னு முழுவேழு-2-5-3) (மன்னப்படுதல் - அப்யாஸம் செய்தல் - மன்னப்படும் மறை-4-6-10. என்று பூர்வர்கள்).
மன்று - வாஸனே (மன்றலர்-10-2-2).
மா - லக்ஷ்மீ, குதிரை, மிருகம், நீலவர்ணம்-2-9-1.
மாசு - குற்றம், அழுக்கு.
மாசூணுதல் (மாசூண்) - மழுங்குதல்; மாசு+உண்.
மாடு - பக்கம், இடம்.
மாண்
மாணி, } - பிரம்மசாரி (வடமொழி மாணவகன்).
மாண்பு - அழகு; அழகையுடைய ரூபம்.
மாது - ஸ்த்ரீ.
மாமை - நிறம், காந்தி, அழகு.
மாய்தல் (மாய்) - நாசமடைதல்.
மாய்த்தல் (மாய்) - நாசம் அடையும்படி செய்தல்.

மாயம் - ஆச்சரியம், பிரகிருதி - (மாயமணிசரை 3-9-8).
மார்வம் - மார்பு.
மாரி - மழை.
மால் - ஸர்வேசுவரன், மிகுந்தஆசை,பெருமை (மால்விடை 3-5-4), மோஹம்.
மாலுதல் (மால்) - மிகவும் ஆசைப்படுதல்- (மாலும், வினைமுற்று 4-2-1).
மாலை - இராத்திரி (9-9-10), ஸந்த்யை,
மாழாத்தல் (மாழா) - மழுங்குதல், (மாழாந்து-வினையெச்சம் 2-1-6).
மாழை - அழகு.
மாளல் (மாள்) - சாதல்.
மாற்றம் - சொல்.
மாற்றுண்மை - விரோதச்செய்கை (2-1-7).
மாறு - எதிர்.
மானம் - கர்வம், அளவு, பெருமை (அணிமானத்தடவரை- 4-8-2).
மிகுநர் - மேற்பட்டவன். (1-1-2)
மிசை - மேல்.
மிடைதல் (மிடை) - நெருங்கல், (மிடைந்த - நெருங்கும்படி செய்த, பெயரெச்சம் 1-7-11).
மிழற்றல் (மிழற்று) - ஆசையால் தழுதழுத்துப் பாதிவார்த்தை சொல் [லுதல்.
மிறை - வருத்தம் (7-5-8), கொடுமை, ஹிம்ஸை.
மீ - மேல்.
மீட்சி (மீள்) - திரும்புதல், தொழிற்பெயர்; மீள்வது - தொழிற் பெயர்.
மீளி - யமன் (7-6-8), வீரன்.
முட்டு - இடையூறு.
முயங்கல் (முயங்கு) - தழுவுதல் (முயங்க - வினையெச்சம்-8-8-8)
முரல்தல் (முரல்) - சப்தித்தல் (முரல் திருவேங்கடத்து - வினைத் தொகை 3-9-1).
முருடு - கோணலாய் மேடுபள்ளமான ஸாரமில்லாதகட்டை (2-7-10).
முறுவல் - பல், சிரிப்பு, முறுவலித்தல் - சிரித்தல், (முறுவலிப்ப- வினையெச்சம்-4-9-1).

முனிதல் (முனி) - கோபித்தல், முனிவு - தொழிற்பெயர்.
முனை - கூட்டம்.
முனைவன் - முனையை உடையவன், முனை - முதன்மை (8-9-5).
மூப்பு (மூ) - கிழத்தனம்.
மூவாமை - கிழத்தனத்தை, அடையாமை,(மூவா முதல்வா 2-1-10).
மெச்சுதல் (மெச்சு) - கொண்டாடுதல்.
மேவல் (மேவு) - ஆசைப்படுதல், மேவி - வினையெச்சம், ஆசைப் படத்தகுந்தது ஸம்பத்து, (மேவலுறுவீர் 1-6-1), சேர்தல் (மேவிய-பெயரெச்சம் 9-3-5).
மையல் - மயக்கம்.
மையாத்தல் (மையா) - மயங்குதல், (மையாக்கும் 4-4-6).
மொக்குள் - நீர்க்குமிழி.
மொய் - பெருமை.
மொய்த்தல் (மொய்) - நெருங்கியிருத்தல்.
மொய்ம்பு - வலிமை, தோள்.
மோடு - தோள் (மோடுபருப்ப 3-5-7).
மோதல் (மோது) - அடித்தல், இடித்தல்.
மோழை - குமிழி (7-4-1).

(ய)

யாழ் - வீணை.
யோநி - காரணம்.

(வ)

வசி - வசப்படுத்தல், (வசிசெய்-10-3-8) வசி-முதனிலைத் தொழிற் பெயர்.
வட்கு - வெட்கம்.
வட்டம் - மண்டலம்.
வடி - கூர்மை.
வடிவு - அழகு, உடம்பு.
வண்ணம் - வர்ணம், குணம்.
வதுவை - விவாஹம்.
வம்பர் - துஷ்டர், வம்பு - புதுமை, அதையுடையவர் வம்பர் - புதியவர் என்று பூர்வர்கள்.
வரன் - உயர்வு (வடமொழி வரம்) மகரத்துக்கு நகரப்போலி.

வரம்பு - எல்லை, ஒழுங்கு.
வரிதல் (வரி) - மூடுதல் (வரிந்து - வினையெச்சம் - 5-1-5)
வழிபடுதல் (வழிபடு) - வணங்கல், ஆராதித்தல், கீழ்ப்படிதல்.
வழுவுதல் (வழுவு) - தவறுதல் - (வழுவாத- 4-6-11).
வள்ளல் - உதாரம்.
வளாவல் (வளாவு) - வளைத்தல்- (வளாய்-வளாவி, வினையெச்சம் 8 7-7).
வளி - காற்று.
வனம் - அழகு.
வாடை - வடக்கிலிருந்து வரும் காற்று.
வாய் - இடம்.
வாய்த்தல் - கிடைத்தல், தானாக வருவது.
வாய்வெருவுதல் (வாய்வெருவு) - அவசமாய் பிரலாபித்தல் (வாய் வெரீஇ - வினையெச்சம்-2-4-5).
வாரணம் - யானை.
வாரி - கடல்.
வாள் - காந்தி.
வாளி - பாணம்.
வானம் - மேகம்.
விகிருதம் - விளையாட்டு, (வடமொழி விக்ருதம்.)
விசும்பு - ஆகாசம்.
விடன் (வடமொழி) - அவன் செய்யும் வேலை, (விடவே செய்து 1-7-5)
விடை - எருது.
விண் - ஆகாசம்.
வித்தகன் - சதுரன், கெட்டிக்காரன், ஆச்சரியமானவன்.
வியத்தல் (விய) - ஆச்சரியப்படுதல், வியப்பு, வியவு - தொழிற்பெயர் - ஆச்சரியம்.
வியந்த - வேறுபட்ட, பெயரெச்சம் (உருவியந்த 1-3-6).
வியல் - பெருமை, விசாலம்.
வியன் - விசாலம், வியல் என்பதில் லகரம் னகரமானது.
விராய் - வாஸனை (1-7-6).

விரை - வாஸனை.
விழவு, } விழா } - உத்ஸவம்.
விழுமம் - சிறப்பு, (விழுமிய - சிறந்த, குறிப்புப் பெயரெச்சம் 3-6-7).
விள்ளல் (விள்) - பிரிதல்; வேறுபடுதல்.
விறல் - பராக்கிரமம்.
வீ - புஷ்பம்.
வீடு - விடுதல், மோக்ஷம்.
வீதல் (வீ) - நாசமடைதல், வீய - வினையெச்சம், வீவு - தொழிற் பெயர். வீம் - வீயும், பெயரெச்ச; ஈற்று உயிர்மெய் கெட்டது (1-1-4).
வீழ்தல் (வீழ்) - ஆசைப்படுதல்.
வெருவுதல் (வெருவு) - பயப்படுதல்.
வெள்ளம் - கடல், மிகுதி.
வெற்பு - மலை.
வெறி - வாஸனை.
வெறி - கலக்கம், வெறிவிலக்கு - கலக்கத்தைத் தீர்ப்பது.
வேட்கை - ஆசை.
வேதித்தல் - துளைத்தல்.
வேய் - மூங்கில்.
வேய்தல் (வேய்) - சூடுதல், அலங்கரித்தல்.
வேலை - ஸமுத்திரம்.
வேள் - மன்மதன்.
வேற்ளுேர் - விரோதிகள்.
வை - கூர்மை.
வைகல் - காலம்.
வைகல் (வைகு) - கழித்தல். (வைக - வினையெச்சம்-6-4-3).
வைப்பு - நிதி.
வையம் - பூமி.

---

# அநுபந்தம்-V.

## அந்நியாபதேசத் திருவாய்மொழிகள்.

### 1. நாயகிபாசுரங்கள்.

| | பத்து. திருவாய். | | பத்து. திருவாய். |
|---|---|---|---|
| வாயும் திரை | 2—1 | வெள்ளைச்சுரிசங்கு | 7—3 |
| ஏறாளும் | 4—8 | ஏழையராவி | 7—7 |
| மாசறு சோதி | 5—3 | நங்கள் வரிவளை | 8—2 |
| ஊரெல்லாம் | 5—4 | இன்னுயிர்ச்சேவல் | 9—5 |
| எங்ஙனேயோ | 5—5 | மல்லிகை | 9—9 |
| மானேய்நோக்கு | 5—9 | வேய்மருதோள் | 10—3 |
| மின்னிடை மடவார் | 6—2 | | |

### 2. திருத்தாயார் பாசுரங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஆடியாடி | 2—4 | மாலுக்கு | 6—6 |
| பாலனாய் | 4—2 | உண்ணும் சோறும் | 6—7 |
| மண்ணையிருந்து | 4—4 | கங்குலும் பகலும் | 7—2 |
| கடல் ஞாலம் | 5—6 | | |

### 3. தோழிபாசுரங்கள்.

| | | | |
|---|---|---|---|
| தீர்ப்பாரை | 4—6 | கருமாணிக்கமலை | 8—9 |
| துவளில் | 6—5 | | |

### 4. தூதுவிடுதல்.

| | | | |
|---|---|---|---|
| அஞ்சிறைய | 1—4 | பொன்னுலகு | 6—8 |
| வைகல் பூங்கழிவாய் | 6—1 | எங்கானல் | 9—7 |

# அநுபந்தம்-VI.

## எம்பெருமான் விபவ-அவதார கதைகளின் சுருக்கம்.

### 1-மத்ஸ்ய அவதாரம்.

மீனோடு (1-8-8); மீனாகி (2-8-5).

1. சென்ற கல்பத்தின் முடிவில் எம்பெருமான் ஸத்யவ்ரதன் என்கிற ராஜாவுக்கு சிறு மீனாய்த்தோன்றி, வரவர வளர, அதைக்கண்டு ஆச்சரியப்பட்ட ராஜாவுக்கு "உனக்கு அநுக்ரஹம்பண்ண இப்படிவந்தேன். இன்று முதல் ஏழாவது நாளில் பிரளயஜலத்தாலே உலகம் மூன்றும் முழுகிவிடும். அப்போது ஒரு கப்பல் வரும். அதில் நீயும் ஸப்தருஷிகளும் எல்லாப் பிராணிகளிலும் எல்லாஸ்தாவரங்களிலும் ஒவ்வொன்றுடனும் ஏறிக்கொள்ள வேண்டும். கப்பல் ஸமுத்திரத்தில் மிதந்துகொண்டியிருக்கையில் நான் கொம்புள்ள ஒரு பெரியமீனாய் வருவேன். அந்தக் கொம்பில் வாஸுகி என்கிற பாம்பினால் அந்தகப்பலைக்கட்டிவிடு. நான் அந்தக் கப்பலை இழுத்துக்கொண்டு பிரளய ஜலத்தில் விளையாடப்போகிறேன்" என்று அருளிச்செய்தான். பிரளயமும் வந்தது. ராஜாவும் சொன்னபடி செய்தான். கப்பலிலிருக்கும் ராஜாவுக்கும் ஸப்தருஷிகளுக்கும் எம்பெருமான் ஆத்மதத்துவத்தை உபதேசம் செய்தான். அந்த உபதேசமே மாத்ஸ்ய புராணம். பிரளயம் முடியும்போது பிரம்மாவினிடமிருந்து வேதத்தை அபஹரித்துக்கொண்டு போன அசுரனை எம்பெருமான் மீன் உருவத்துடன் தேடி அவனைக் கொன்று, வேதத்தைப்பிரம்மாவுக்குத் திருப்பிக்கொடுத்தான். அந்த அஸுரன் பெயரை ஹயக்ரீவன் என்று ஸ்ரீபாகவதமும், மது வென்று வேறு புராணங்களும் சொல்லுகின்றன. ஸத்யவ்ரதன் என்கிற ராஜா விவஸ்வானுக்குப் பிள்ளையாகப் பிறந்து இந்த மந்வந்தரத்தில் வைவஸ்தமநுவாயிருக்கிறான்.

### 2. கூர்மாவதாரம்.

ஆமையாய், (2-8-5); அன்று தேவரசுரர்வாங்க அலைகடலரவமளாவி ஓர் குன்றம் வைத்த வெந்தாய் (7-1-7); அமுதமமரர்கட்கீந்த (1-6-6).

2. ஒரு நாள் தேவேந்த்ரன் யானையின் மேல் இருக்கும் போது துர்வாஸஸ் என்கிற ருஷி பிராட்டி சாத்திக்கொண்டிருந்த மாலையை அவனுக்குக்கொடுத்தார். அவன் அதை யானையின்மேல் வைக்க, அது மாலையைக் கீழே தள்ளிக் காலாலே மிதித்தது. அதை க்கண்டு துர்வாஸஸ் கோபித்துக்கொண்டு "ஸ்ரீ உன்னைவிட்டுப் போகவேண்டும்" என்று சபித்தார். ஸ்ரீ அவனைவிட்டு விலக, தேவர்களுக்குப் பலம் குறைந்து, அஸுரர்களாலே பிடிக்கப்பட் டார்கள். தேவர்களும் இந்திரனும் பிரம்மாவும் திருப்பார்கடலுக் குப் போய் எம்பெருமானிடம் முறையிட்டார்கள். அவன் கொஞ் சம் விளையாடவேண்டும் என்கிற எண்ணத்துடன் தேவர்களைப் பார்த்து "அஸுரர்களுடன் ஸ்நேஹம் பண்ணிக்கொண்டு மந்தரம் என்கிற மலையைத் திருப்பாற்கடலில் மத்தாகவைத்து, வாஸுகி என்கிற பாம்பை அதில் கயிறாகச் சுற்றி அஸுரர்களுடன் அதைக் கடையுங்கள். நான் உங்களுக்கு வேண்டிய உதவிசெய்கிறேன்" என்று சொன்னான். தேவர்கள் சொன்னபடி செய்தார்கள். தேவர்களும் அஸுரர்களும் ஸமுத்திரத்தைக் கடையும்போது மலை கீழே அழுந்த எம்பெருமான் பெரிய ஆமைரூபத்தை எடுத் துக்கொண்டு அதைக் கீழே தாங்கினான். மலை மேலே ஆடாதபடி அதை வேறுரூபத்துடன் பிடித்துக்கொண்டான். தேவர்களும் அஸுரர்களும் கடலைக்கடைந்து களைத்தபோது, எம்பெருமான் வேறுரூபத்தை எடுத்துக்கொண்டு இரண்டு திருக்கைகளால் பாம் பின் தலையையும் மற்ற இரண்டு திருக்கைகளாலே அதின் வாலையும் பிடித்துக்கொண்டு தானே கடைந்தான்.

3. இப்படித் திருப்பாற்கடலைக் கடையும்போது ஹாலாஹலம் என்கிற விஷம் முதலான அநேகபதார்த்தங்கள் அதிலிருந்து உண் டாயின. ஸ்ரீலக்ஷ்மியும் அதிலிருந்து தோன்றினாள். அவளை எம்பெரு மான் தன்மார்பில் வைத்துக்கொண்டான். அவள் அந்த இடத்தி லிருந்து, தன்குழந்தைகளாகிய தேவர்களைக்கடாக்ஷிக்க, அவர்களுக் குப் போயிருந்த ஐசுவரியம் திரும்பிவந்தது. ஸமுத்திரத்திலிருந்து உண்டான வேறொரு பதார்த்தம் அம்ருதம். அதைக் கொண்டுவந்த தன்வந்திரியிடமிருந்து அஸுரத்தலைவர் பலாத்காரமாய் அதைப்பிடுங் கிக்கொண்டார்கள். அதனால் கலஹமுண்டாயிற்று, அப்போது எம்

பெருமான் மறைந்திருந்து மிகவும் அழகான ஸ்திரீரூபத்துடன் தோன்றினான். அவனுடைய அழகைக்கண்டு அஸுரர்கள் மயங்கி அமிருதத்தை அவனிடம் கொடுத்து, "பக்ஷபாதமில்லாமல் அதை எல்லோருக்கும் கொடுக்கவேண்டும்" என்று சொன்னார்கள். எம்பெருமான் அஸுரர்களை ஒரு பக்கத்திலும், தேவர்களை ஒரு பக்கத்திலும் உட்காரவைத்து, அவர்களுக்கு நடுவே இங்குமங்கும்போய், அஸுரர்களுக்கு அமிருதத்தைக் கொடுக்காமல் கொடுப்பதுபோல் பாவனைசெய்து, தேவர்களுக்கு மாத்திரம் அதைக்கொடுத்து மீதியிருந்ததை இந்திரனிடம் கொடுத்துவைத்து வைக்கச்சொல்லித் தன் ஸ்வரூபத்துடன் தோன்றினார்.

4. அஸுரர்கள் தங்களுக்கில்லாமல் தேவர்களுக்கு மாத்திரம் அம்ருதம் கிடைத்ததைப் பொறுக்காமல் அவர்களுடன் சண்டைபோட ஆரம்பித்தார்கள். அந்தச் சண்டையில் எம்பெருமான் கருடன்மேல் ஏறிக்கொண்டு வந்து, காலநேமி, மாலி, ஸுமாலி முதலான அஸுரர்களைச் சக்ராயுதத்தால் ஸம்ஹாரம் செய்தான். இது பாகவத்தில் சொன்னபடி. ஆழ்வார் மாலி ஸுமாலிகளை அரக்கர்களாகவும், அவர்களை லங்கையில் கொன்றதாகவும் (7-6-7)இல் சொல்லுகிறார். இது ராமாயண உத்தரகாண்டப்படி.

## 3. வராஹாவதாரம்.

ஏனமும் (1—8—8) கேழலாய்க் கீழ்ப்புக்கிடந்திடும் (2—8—7).

5. முதல் மநுவைப்பார்த்து பிரம்மா "பிரஜாவிருத்தியைப் பண்ணு; பூமியை நன்றாக ஆளு; எம்பெருமானை நன்றாக ஆராதநம் செய்" என்று சொல்ல, பூமி பிரளயஜலத்தில் மூழ்கியிருக்கிறதே என்றுமநுசொன்னான். பிரம்மாபூமியைமேலே கொண்டுவருவதற்கு என்னசெய்கிறது என்று ஆலோசிக்கையில், எம்பெருமான் ஒரு கட்டைவிரல் அளவுள்ள ஒரு வராஹக்குட்டியாய் அவன் மூக்கிலிருந்து வெளியே வந்தான். உடனே, யானைபோல் பருத்துக் கர்ஜித்து ஸமுத்திரத்தில் மூழ்கிப் பூமி எங்கு இருக்கிறது என்று தன் மூக்கால் தேடினான். பூமியைக்கண்டுபிடித்து தன்னுடைய ஒரு தெற்றிப்பல்லின் நுனியாலே அதை எடுத்துக்கொண்டு மேலே வந்த அதை இருக்கவேண்டிய இடத்தில் வைத்து மறுபடியும் மூழ்காமல் செய்தான்.

## 4. நரஸிம்மாவதாரம்.

"இரணியன் அகல்மார்வம் கீண்ட என் முன்னைக் கோளரியே" (உ–6–6) "சீற்றத்தோடு அருள்பெற்றவன் அடிக்கீழ்ப் புகநின்ற செங்கண்மால் (3–6–6).

6. ஹிரண்யகசிபு என்கிற ஒரு பெரிய அஸுர ராஜா, தன் ஸஹோதரனுகிய ஹிரண்யாக்ஷன் எம்பெருமானுல் கொல்லப்பட்டதைக் கேட்டு மிகுந்த கோபமுடையவனுய், அஸுரத் தலைவர்களைக் கூப்பிட்டு, "தபஸு, யாகங்கள், வ்ரதங்கள், வேதாத்யயநம் தாநம் இவைகளைச் செய்கிற ப்ராமணர்களைப் - பூலோகத்திற்குப் போய்க் கொல்லுங்கள். அப்போது அவைகளால் பிழைத்திருக்கும் ஹரியும் இறந்துபோவான்" என்று கட்டளையிட்டான். அவர்கள் அப்படியே செய்தார்கள். அவர்கள் படுத்தின பாட்டைப் பொறுக்காமல் தேவர்கள் திருப்பாற்கடலுக்குப் போய் எம்பெருமானிடம் முறையிட்டார்கள். எம்பெருமான், "அவனுக்குப் பரமபாகவதனுன ஒரு பிள்ளை பிறக்கப் போகிறுன். அந்தப்பிள்ளைக்கு அவன் ஹிம்ஸை செய்யும்போது நான் வந்து அவனை ஸம்ஹாரம் செய்கிறேன்" என்று சொல்லி அவர்களை ஸமாதானப்படுத்தினுன். சொன்னபடி ப்ரஹ்லாதன் என்கிற பிள்ளைபிறந்து எம்பெருமானிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவனுயிருந்தான். அவனுக்குப் படிப்புச்சொல்லிக்கொடுப்பதற்காக அவனை ஆசாரியர்களிடம் அனுப்பிக்கொஞ்சகாலமான பிறகு அவனை வரவழைத்து, "நீ கற்றுக்கொண்டதில் எது நல்லது என்றுதோன்றுகிறதோ, அதைச் சொல்லு" என்று கேட்டான். ப்ரஹ்லாதனும், "ஸம்ஸாரிகள் வீட்டைவிட்டு காட்டுக்குப் போய்ப் பகவானைத் தியானிக்கவேண்டியது. இதுதான் நல்லது" என்று சொன்னுன். ஹிரண்யகசிபு சிரித்து, "இந்தக்குழந்தையின் மனதை யாரோகெடுத்து விட்டார்கள். இதை மாற்றுங்கள்" என்று சொல்லிக் குழந்தையை ஆசாரியனிடம் திருப்பி அனுப்பினுன். மறுபடி குழந்தை எல்லாவற்றையும் அறிந்துகொண்டான் என்பதைக் கேட்டு, அவனை மறுபடியும் வரவழைத்து முன்போலக் கேட்டான். ப்ரஹ்லாதனும் "விஷ்ணுவினுடைய குணங்களைக் காதாலே கேட்பது, வாயாலே அவன் திருநாமங்களைச் சொல்வது, மனதாலே

அவனைத்தியானம் பண்ணுவது, உடம்பாலே திருவடிகளில் நமஸ்காரம் செய்வது, அவைகளில் புஷ்பங்களை ஸமர்ப்பிப்பது, அவனுடைய கைங்கரியத்தைச் செய்வது, அவனிடத்தில் பக்தி பண்ணுவது, தன்னை அவனிடம் கொடுப்பது இப்படி ஒருவன் தெரிந்து கொண்டால், அதுதான் அறியவேண்டியவைகளில் மிகவுமுயர்ந்தது" என்று பதில்சொன்னான். இதைக் கேட்ட ஹிரண்யகசிபு மிகுந்த கோபத்தையடைந்து அவனை எப்படியாவது கொல்லும்படி வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்டான். அவர்கள் பலவிதமாய் ப்ரயத்நம் பண்ணியும் அவனைக் கொல்ல முடியவில்லை. ஹிரண்யகசிபு இனி என்ன பண்ணுகிறது என்று நினைக்கையில், ஆசாரியர் குழந்தையை எங்கள் தகப்பனாரிடம் அனுப்பினால் எல்லாம் ஸரியாய்ப்போய்விடும் என்று சொன்னார்கள். அவனும் அப்படியே செய்தான். ஆசாரியன் வேறு வேலையாயிருக்கும்போது, ப்ரஹ்லாதன் தன்னைப்போன்ற சிறுவர்களைக்கூப்பிட்டு, எம்பெருமானை உபாஸிக்கும்படி அவர்களுக்கு உபதேசம் செய்தான். இதைக் கண்டு பயப்பட்டு பரபரப்புடன் இதை ஹிரண்யகசிபுவினிடம் அவர்கள் தெரிவித்தார்கள். அவன் ப்ரஹ்லாதனை வரவழைத்து, மிகுந்த கோபத்துடன் "என்னுடைய கட்டளையை மீறி நடந்தாய்? யாருடைய பலத்தால் நீ இப்படிச்செய்கிறாய்?" என்று கேட்டான். அவன்— "எனக்குப் பலம் பகவான்; அவன்தான் உனக்கும் மற்றெல்லாருக்கும் பலம்" என்று சொல்ல, ஹிரண்யகசிபு— "அந்தப் பகவான் எங்கே இருக்கிறான்? அவன் எங்கேயும் இருந்தால், இந்தத்தூணிலே ஏன் காணப்படவில்லை. நான் உன்னை வெட்டி விடுகிறேன். கூடுமானால், ஹரி உன்னை ரக்ஷிக்கட்டும்" என்று சொல்லி, ஸிம்ஹாஸநத்திலிருந்து குதித்து, தூணைத் தனக்குள்ள எல்லாப் பலத்துடன் அடித்தான். உடனே, மிக்வும் பயங்கரமான சப்தம் அதில் உண்டாயிற்று. எம்பெருமான் தான் அங்குமிருப்பதை வெளியிடுவதற்காகத் தூணைப்பிளந்துகொண்டு நரசிங்கரூபத்துடன் வெளியே வந்தான். கதையுடன் ஹிரண்யகசிபு அவனை எதிர்த்தான். இருவருக்கும் சண்டை நடந்தது. எம்பெருமான் ஸந்தியாகாலத்தில் அரண்மனையின் வாசற்படியில் உட்கார்ந்து கொண்டு அஸுரனைத் தன்மடியில் தள்ளி, அவன் மார்பைத் தன்

நகங்களாலே பிளந்து அவனைக்கொன்றான். அவனுடைய கோபம் அளவில்லாமல் இருந்ததால் ஒருவரும் அவனைக்கிட்ட முடியவில்லை. ப்ரஹ்மாவினால் ஏவப்பட்டு ப்ரஹ்லாதன் எம்பெருமானிடம்போய் அவனை ஸ்தோத்ரம் பண்ணினான். அதைக்கேட்டு எம்பெருமான் கோபத்தை விட்டு ப்ரஸாதமுள்ளவனானான்.

## 5. வாமநாவதாரம்.

மதியினால் குறள் மாணாயுலகிரந்த கள்வர்க்கு(1—4—3), உலகேழும் ஓர் மூவடிகொண்டானை (1—10—5).

7. திருப்பாற்கடலைக் கடந்தகாலத்தில் தோல்வியையடைந்த பலி, ஒரு யாகத்தைச் செய்து, மிகுந்த பலத்தையடைந்து இந்திரனிடமிருந்து மூன்று உலகங்களைக் கவர்ந்துகொண்டான். இந்திரனும் தேவர்களும் வேறு வேஷங்களை எடுத்துக்கொண்டு பல இடங்களிலும் திரிந்தார்கள். இந்திரன் தாயாரான அதிதி மிகுந்த வருத்தத்தை அடைந்து, தன் புருஷனாலே உபதேசிக்கப்பட்ட பயோவ்ரதத்தைச் செய்து முடித்தாள். பகவான் ப்ரத்யக்ஷமாகி, அவளுக்குப் பிள்ளையாகவும் பிறந்து, 'அவள் இஷ்டத்தை முடித்துவைக்கிறேன்' என்று சொல்லி, அவள் வயிற்றிலிருந்து வாமநனாக அவதாரம் செய்தான். உபநயநமானபிறகு, வாமநன், பலி அச்வமேதயாகம் செய்துகொண்டிருப்பதைக் கேட்டு, பிரம்மசாரி வேஷத்துடன் அவனிடம்போய், தன்னுடைய தேஜஸால் எல்லார் தேஜஸ்ஸையும் அபஹரித்தான். பலி தகுந்த உபசாரங்களைச் செய்து, 'என்னவேண்டும்? வேண்டியதைக் கொடுக்கிறேன்' என்று சொல்ல, வாமநன் "என்னுடைய மூன்று அடிகளாலே அளக்கக்கூடிய கொஞ்சம் நிலத்தை வேண்டுகிறேன். எனக்கு வேறொன்றும் வேண்டியதில்லை." என்று சொன்னான். பலி அவன் கேட்டதைக் கொடுக்கத் தீர்த்தத்தை எடுக்கையில், அவன் ஆசார்யரான சுக்ராசாரியர் "இவன் விஷ்ணு; உன்னை வஞ்சித்து, உன்னுடைய உலகங்களை உன்னிடமிருந்து பிடுங்கிக் கொண்டு இந்திரனுக்குக் கொடுக்கப்போகிறான். உனக்குவேண்டியதை வைத்துக்கொண்டு மற்றதைக்கொடு" என்று சொல்லித் தடுத்தார். பலி, ப்ரஹ்லாதன் பேரனான தான் எப்படி ஒரு பிராம

னை மோசம் செய்வது என்று சொல்லி, ஆசாரியரின் தடையை மீறி வாமனன் கேட்டதைக் கொடுத்துவிட்டான். பலி மஹாபாகவதனாயிருந்ததால் ராவணனை ஸம்ஹாரம் பண்ணினதுபோல் ஸம்ஹாரம் பண்ணாமல், இந்த வழியாய், இந்திரனுக்கு வேண்டியதைச் செய்து முடித்தான்.

## 6. த்ரிவிக்ரமாவதாரம்:

திசைகளெல்லாம் திருவடியால் தாயோன் (1—5—3),
மண்ணும் விண்ணும் கொண்ட மாயவம்மானே (6—9—2).

8. உடனே வாமநன் விச்வரூபத்தை எடுத்துக்கொண்டு, பூமியை ஒரு திருவடியாலும், மற்றொரு திருவடியால் மேல் உலகங்களையும் அளந்தான். மேலே போன திருவடிக்கு ப்ரம்மா திருமஞ்சனம் செய்தான். கருடன் வாமநனுடைய அபிப்ராயத்தை அறிந்து பலியைக் கயிற்றால் கட்டினான். வாமநன் தன் முன் ரூபத்தை எடுத்துக்கொண்டு, "நான் இரண்டு அடிகளாலே எல்லாவற்றையும் அளந்துவிட்டேன். மூன்றாவது அடிக்கு இடம் எங்கே? கொடுப்பதாய்ச் சொன்னதைக் கொடாதவனுக்கு நரகத்தில் தான் வாஸம்" என்று சொல்ல, பலி, "நான் உன்னை மோசம் பண்ணவில்லை. மூன்றாவது அடிக்காக உன்னுடைய திருவடியை என் தலைமேல் வை" என்றுசொன்னான். இதைக்கேட்டு அவன் மனைவி விந்த்யாவளி, 'இவன் அறியாமல் சொல்லுகிறான். அவனாதாக ஒன்றுமில்லை. எல்லாம் உம்முடையது' என்று சொன்னாள். அப்போது அங்கே வந்திருந்த ப்ரஹ்லாதனும் தன்பேரனுடைய ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டு, அவன் கர்வத்தைப் போக்கினதற்காக வாமநனைக் கொண்டாடினான். வாமநனும், "எவனுக்கு நான் அநுக்கிரஹம் செய்யப்போகிறேனோ, அவனுடைய ஸொத்தை நான் பிடுங்கிவிடுகிறேன். பலியிடமிருந்து அவன் ஸொத்தெல்லாவற்றையும் பிடுங்கிக்கொண்டேன். அவன் ஆசாரியனும் அவனைச் சபித்தான். அவனைக்கட்டிவைத்தேன்; கோபித்துக்கொண்டேன். இவ்வளவு செய்தும் அவன் ஸத்தியத்திலிருந்து விலகவில்லை. அவனுக்குக் கடைசியில் என் உலகத்தை கொடுக்கப்போகிறேன். அடுத்த மந்வந்தரத்தில் அவனை இந்திரனாகப் பண்

னுகிறேன். அது வரையில் ஸுதலம் என்கிற உலகத்திற்குப் போய் அங்கு ஸுகமாக இருக்கட்டும். அங்கே தேவர்களும் ஆசைப்படக்கூடிய எல்லாப்போகங்களும் இருக்கின்றன. நானும் அங்கு ப்ரத்யக்ஷமாக இருந்து அவனை ரக்ஷிக்கிறேன்'' என்று சொல்லிப் பலியைக்கட்டிலிருந்து விடுவித்து, ப்ரஹ்லாதனுடன் அவனை ஸுதல லோகத்திற்கு அனுப்பினான்.

## 7. ராமாவதாரம்.

சினையேய் தழைய மராமரங்கள் ஏழும் எய்தாய் (1—5—6) இலங்கைக்கோன் தோள்கள் தலைதுணி செய்தான் (1–6–7) தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே (3–6–8) புற்பா முதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே நற்பாலுக்குய்த்தனன் (7—5—1).

9. லங்கைக்கு இராஜாவான ராவணன் என்கிற ராக்ஷஸ னால் பிடிக்கப்பட்ட தேவர்களாலே வேண்டப்பட்டு, எம்பெருமான் அயோத்தியில் தசரதசக்ரவர்த்திக்குத் திருமகனாய் அவதாரம் செய்தான். அவன் தன்னுடைய அழகாலும் நல்லகுணங்களா லும் எல்லாருடைய மனதையும் இழுத்துக்கொண்டிருந்தான். 16-வயது பூர்ணமாவதற்கு முன்னாலே தம்பியான லக்ஷ்ம ணனுடன் விச்வாமித்ரருடைய ஆச்ரமத்துக்குப்போய், மாரீசன் என்கிற ராக்ஷஸனைப் பாணத்தால் ஸமுத்திரத்தில் தள்ளி, ஸுபாஹு முதலான ராக்ஷஸர்களைக் கொன்று ரிஷியின் யாகத்தை முடித்துவைத்தான். பிறகு, அவருடன் மிதிலைக்குப்போய் ஸீதை யின் ஸ்வயம்வரத்திற்காக வைக்கப்பட்டு, ஒருவராலும் தூக்கி நாணேற்ற முடியாமலிருந்த சிவதனுஸ்ஸை விளையாட்டாக எடுத்து நாணேற்ற, அது முறிந்துவிட்டது. மிதிலையின் ராஜாவான ஜந கன் ஸந்தோஷப்பட்டு ஸீதையை ராமனுக்குக் கன்னிகாதானம் செய்தான். அங்கிருந்து அயோத்திக்குத் திரும்பிவந்து ஸீதை யுடன் பன்னிரண்டுவருஷம் ஸுகமாக இருந்தான். பிறகு அவனை யுவராஜாவாகப்பண்ணுவதற்கு ராஜா எல்லா ஏற்பாடுகளையும் செய்ய, கூனியால் ஏவப்பட்டுக் கைகேயி தனக்கு ராஜா கொடுப் பதாக முன்னால் வாக்களித்த இரண்டு வரன்களைக் கேட்டாள்.

ராஜா கொடுப்பதாக ஒப்புக்கொண்டான். ஒரு வரத்தால் ராமன் காட்டுக்குப்போய் பதினாலுவருஷம் இருக்கவேணும் என்பதையும், மற்றொரு வரத்தால் தன்பிள்ளையாகிய பரதனை யுவராஜாவாகச் செய்யவேணும் என்பதையும் கேட்டாள். இராஜாவுக்கு ராமனைக் காட்டுக்கு அனுப்ப மனம் இல்லை. சொன்னதையும் மீறமுடிய வில்லை. தகப்பனுடைய வார்த்தையைப் பரிபாலநம் பண்ணுவதற் காக ராமன் லக்ஷ்மணனுடனும் ஸீதையுடனும் காட்டுக்குப்போ னான். அப்போது தசரதனும் பிள்ளையை விட்டுப் பிரிந்த வருத்தத் தினால் மரணம் அடைந்தான். அப்போது அம்மான் வீட்டுக்குப் போயிருந்த பரதன் திரும்பி வந்து, ராஜ்யத்தை வெறுத்து, ராமனை அழைத்துவரக் காட்டுக்குப்போனான். ராமன் பதினாலு வருஷங் கழிந்த பிறகு திரும்பி வருவதாகச் சொல்லி, தன் பாதுகைகளைக் கொடுத்து அவனைத் திருப்பி அனுப்பிவிட்டான். பரதன் திரும்பிப் போய் நந்திக் கிராமத்தில் இருந்துகொண்டு பாதுகைகளுக்கு வேலைக்காரனாய் இருந்து ராஜ்யத்தைப் பரிபாலநம் பண்ணிக்கொண் டிருந்தான்.

10. தண்டகாரண்யத்தில் வஸித்த ரிஷிகள் ராக்ஷஸர்க ளாலே தங்களுக்கு உண்டான துன்பங்களை ராமனிடம் சொல்லி முறையிட்டார்கள். அவர்களுக்கு அபயப்ரதாநம் செய்து, அவர் களுடைய ஆச்ரமத்துக்குப்போய்க்கொண்டிருந்து, பதினான்காவது வருஷத்தில் கோதாவரி நதிக்கரையில் பஞ்சவடீ என்கிற இடத்தில் வஸித்துக்கொண்டிருந்தான். அப்போது ராவணன் தங்கையான சூர்ப்பணகை வந்து ராமன் அழகில் ஈடுபட்டுத் தன்னைக்கலியாணம் பண்ணிக்கொள்ளும்படி ராமனைக் கேட்டுக்கொண்டாள். அவன் ஸம்மதிக்கவில்லை. ஸீதையிருப்பது தன் இஷ்டத்துக்கு இடைஞ்சல் என்று எண்ணி, அவளை எடுத்துக்கொண்டுபோக ஆரம்பிக்கையில், ராமன் கட்டளையினால் லக்ஷ்மணன் அவள் மூக்கையும் காது களையும் அறுத்துவிட்டான். அவள் ஜநஸ்தாநத்திலிருந்த கரன் தூஷணன் த்ரிசிரஸ் என்கிற ராக்ஷஸர்களிடத்தில்போய் முறையிட, அவர்கள் பெரிய ஸேனையுடன் ராமனை எதிர்த்துவர, அவன் ஒருவ னாகவே எல்லா ராக்ஷஸர்களையும் ஸம்ஹாரம் பண்ணினான். பிறகு,

சூர்ப்பணகை ராவணனிடம்போய் "ராமனிடம் ஒரு அழகான பெண் இருக்கிருள். அவளை உனக்காக எடுத்துவர முயற்சி செய்கையில், அவன் என்னை விரூபமாகச் செய்தான்" என்று சொன்னுள். இதைக்கேட்ட இராவணன், ஸீதையிடம் ஆசையுள்ளவனுய் மாரீசனைக் கூப்பிட்டு, "நீ வஞ்சனையால் ராமனையும் லக்ஷ்மணனையும் அப்புறப்படுத்து; நான் ஸீதையை அபஹரித்துவிடுகிறேன்" என்று சொல்ல, மாரீசன் ஓர் ஆச்சரியமான மான் வேஷத்தை எடுத்துக்கொண்டு, ராமன் ஆச்ரமத்தின் பக்கத்தில் திரிந்துகொண்டிருந்தான். ஸீதையின் வேண்டுகோளினுல் அதைப்பிடிக்கப்போன ராமனை வெகுதூரம் இழுத்துக் கொண்டுபோய், கடைசியில் ராமனுல் அடிக்கப்பட்டு "ஹா ஸீதை! ஹா லக்ஷ்மணு" என்று கத்திக்கொண்டு இறந்தான். அந்தக் குரலைக்கேட்ட ஸீதையால் ஏவப்பட்டு லக்ஷ்மணன் ராமனைப்பார்க்கப் போகையில், ராவணன் ஸந்யாஸி வேஷத்துடன் ஆச்ரமத்துக்கு வந்து ஸீதையை எடுத்து தன் ரதத்தில் வைத்துக்கொண்டு போகையில், வழியில் தடுத்த ஜடாயுவை அடித்துத்தள்ளிவிட்டு லங்கைக்குப்போய் அசோகவநத்தில் ஒரு மரத்தடியில் ராக்ஷஸிகளின் நடுவில் வைத்து அவளைத் தன் வசமாகும்படி செய்யக் கட்டளையிட்டுப் போய்விட்டான்.

11. இராமன் திரும்பிவந்து ஸீதையைக் காணுமல் அவளைத் தேடிக்கொண்டு போகையில், ஜடாயுவைக்கொண்டு, நடந்த விஷயங்களைத் தெரிந்துகொண்டு கிஷ்கிந்தைக்கு வந்து சேர்ந்தான். அங்கே ஸுக்கிரீவன் என்கிற வாநரம் தன் தமையனை வாலியிடம் பயந்து மதங்க ஆச்ரமத்தில் வஸித்துக்கொண்டிருந்தான். அவனுடைய மந்திரியான ஹநுமானுல் ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் ஸக்யமுண்டாயிற்று. ஸுக்ரீவன் வாலியிடமிருந்து என்னை ரக்ஷிக்கவேண்டும் என்று ராமனிடம் சரணுகதி பண்ணினுன். அவனுக்கு நம்பிக்கைவரத் தழைத்த ஏழு மராமரங்களைத் துளைத்து, வாலியை ஸம்ஹாரம் செய்து ஸுக்ரீவனை வாநரராஜாவாகப் பட்டாபிஷேகம் பண்ணிவைத்தான். மழைக்காலம் கழிந்தபிறகு, ஸுக்கிரீவன் ஸீதையிருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க வாநரர்களை நாலுதிக்குக்களிலும் அனுப்பினுன். தெற்கேபோனவர்கள் ஜடாயுவின் தமைய

ஞான ஸம்பாதியிடமிருந்து ஸீதை அசோகவநத்திலிருப்பதை அறிந்து தெற்கு ஸமுத்திரக்கரைக்குப்போனார்கள். அங்கு மற்றவர்களால் வேண்டப்பட்டு ஹநுமான் ஸமுத்திரத்தைத்தாண்டி, இலங்கைக்குப்போய் ஸீதையைக்கண்டு ராமனுடைய அங்குளீயகத்தை அவளிடம் கொடுத்து, அவளிடமிருந்து சூடாமணியை வாங்கிக்கொண்டு, அசோகவனத்தை அழித்து, சண்டைக்கு வந்த ராவணன் பிள்ளையான அக்ஷனைக்கொன்று, இலங்கையைக் கொளுத்திவிட்டுத் திரும்பி வந்து ஸீதையின் இருப்பை ராமனுக்கு அறிவித்தான். ராமனும் ஸுக்கிரீவனும் பெரிய வாநரஸேனைகளுடன் தெற்கு ஸமுத்திரக்கரைக்குப்போய் அங்கு வருணன் வரவை எதிர்பார்த்துக்கொண்டு மூன்றுநாள் படுத்துக்கொண்டிருந்தான். பிறகு, வருணன் சொன்னபடி ஸமுத்திரத்தில் அணையைக்கட்டி, அதின் வழியாய் லங்கைக்குப்போய், பிள்ளைகள், மந்திரிகள், தம்பியான கும்பகர்ணன், ஸேனைகள் ஆகிய எல்லாருடனும் ராவணனைக்கொன்று, தன்னிடம் முன்பு சரணாகதிபண்ணின விபீஷணனை ராஜாவாகச் செய்துவிட்டு, ஸீதையுடன் திரும்பினான். மார்க்கத்தில் பரத்வாஜர் ஆச்ரமத்தில் தங்கி, தான் வந்த ஸமாசாரத்தைப் பரதனுக்கு ஹநுமான் வழியாய் அறிவித்து, பிறகு, அயோத்திக்குப்போய் ஸீதையுடன் பட்டாபிஷேகம் செய்துகொண்டான். பிறகு, பதினோராயிரம் வருஷம் ராஜ்யத்தை நன்றாய்ப் பரிபாலநம்செய்து, தாம் காட்டுக்குப் போகும்போது வருத்தப்பட்ட ஜனங்களின் துக்கம் தீரும்படி வெகுகாலம் அவர்களுடன் இருந்து, பிறகு அவர்களுடன்கூடத் தன் லோகத்திற்குப் போய்ச்சேர்ந்தான்.

## 8. கிருஷ்ணாவதாரம்.

### பிறந்தவாறும் வளர்ந்தவறும் (5—10—1).

12. பூமிதேவி அஸுரஸ்வபாவமுள்ள கணக்கில்லாத ராஜாக்களின் பாரத்தைச் சுமக்கமுடியாமல் பிரம்மாவினிடம் போய் முறையிட, அவன் அவளுடனும் தேவர்களுடனும் திருப்பாற்கடலின் கரைக்குப்போய் எம்பெருமானை ஸ்தோத்திரம் பண்ணினான். எம்பெருமான் "பூமியில் யாதவகுலத்தில் வஸுதேவர் திருமகனாய்

அவதாரம் செய்து பூமியின் வருத்தத்தைப் போக்குவேன்'' என்று சொல்லிப் பூமிக்கு ஸமாதானம் பண்ணி அவர்களை அனுப்பிவிட்டான். வஸுதேவன் தேவகியைக் கலியாணஞ்செய்துகொண்டு ரதத்தில் ஏற்றிக்கொண்டு திரும்பி வருகையில், தேவகியின் பெரிய தகப்பனின் மகனான கம்ஸன் தங்கையினிடத்தில் பிரீதியினால் ரதத்தை ஓட்டிக்கொண்டு வந்தான். நடுவழியில் ஆகாசவாணி, "முட்டாளே! எவளை ரதத்தில் ஏற்றிக்கொண்டு போகிறாயோ, அவளுடைய எட்டாவது பிள்ளை உன்னைக் கொல்லப்போகிறது'' என்று சொல்லிற்று. உடனே, கம்ஸன் கத்தியை எடுத்துக்கொண்டு அவளைக் கொல்லப்போனான். வஸுதேவன் புத்தி சாதுர்யத்தாலே "இவளுக்குப் பிறக்கப்போகிற குழந்தைகளைப் பிறக்கப் பிறக்க உன்னிடம் கொடுத்துவிடுகிறேன். இவளை விட்டுவிடு; இவளாலே உனக்குப் பயமில்லையே'' என்று சொல்லி, வந்த ஆபத்தை விலக்கினான். ஆறு குழந்தைகளைப் பிறந்தவுடன் வஸுதேவன் கம்ஸனிடம் கொடுக்க, அவைகளை அவன் கொன்றுவிட்டான். தேவகியின் ஏழாவது கர்ப்பம் வஸுதேவருடைய மற்றொரு பத்னியான ரோஹிணி வயிற்றில் கொண்டுபோய் வைக்கப்பட்டு பலராமனாகப் பிறந்தது. எம்பெருமான் எட்டாவது குழந்தையாகத் தேவகி வயிற்றிலிருந்து சதுர்புஜங்களுடனும் மற்றும் தன்னுடைய அடையாளங்களுடனும் பிறந்தான். கம்ஸனால் குழந்தைக்கு என்ன கெடுதி வருமோ என்று தேவகி பயப்பட, எம்பெருமான் தன்னுடைய இரண்டு கைகளை மறைத்துக்கொண்டு தன்னைக் கோகுலத்தில் கொண்டுபோய் யசோதையிடம் விட்டு, அப்போது அவளுக்குப் பிறந்த பெண் குழந்தையை எடுத்துக்கொண்டு வரும்படி சொன்னான். அவன் சொன்னபடியே வஸுதேவர் செய்தார். அப்போது வஸுதேவரும் தேவகியும் சிறைச்சாலையில் இருந்தார்கள். அவருக்கு எல்லாம் அநுகூலமாயிருந்தது. சிறைச்சாலைக்கதவுகள் தானே திறந்தன. காவலாளிகளும் ஊரில் இருக்கிறவர்களும் தூங்கினார்கள். யமுனை கோகுலம்போக இடம் கொடுத்தது. வஸுதேவர் திரும்பி வந்த பிறகு கதவுகள் மூடிக்கொண்டன. காவலாளிகளும் விழித்துக்கொண்டார்கள். அழுத பெண் குழந்தையின் குரலைக்கேட்டு, காவலாளிகள் குழந்தை பிறந்ததைக் கம்ஸனுக்குத் தெரிவிக்க, அவன் வந்து

குழந்தையைத் தேவகியினிடமிருந்து பிடுங்கிக்கொண்டு அதை ஒரு பாறையில் மோதினான். அது பிரகிருதியின் அபிமானியான தேவதை. அது அவன் கையிலிருந்து தப்பி ஆகாசத்துக்குப்போய், "மூடனே! என்னைக்கொல்வதால் உனக்கு என்ன பிரயோஜனம்? உன்னைக் கொல்லப்போகிற உன்னுடைய பழைய விரோதி எங்கேயோ பிறந்திருக்கிறான்" என்று சொல்லிற்று.

"தூயகுழவியாய்விடப் பாலமுதாவமுது செய்திட்ட (1–5–9).

13. மறுநாள் காலையில் கம்ஸன் மந்திரிகளுடன் ஆலோசனை செய்து, பிறந்து பத்துநாளாகாத குழந்தைகளையும் மற்றுமுள்ள குழந்தைகளையும் எங்கிருந்தாலும் கொல்லும்படி கட்டளையிட்டான். நந்தனுக்கு ஆண்குழந்தை பிறந்ததாகத் தெரிந்தவுடன் ஆய்ப்பாடியில் அளவில்லாத ஸந்தோஷமுண்டாயிற்று. அன்றுமுதல் அந்த ஊரில் செல்வம் வளர்ந்தது. லக்ஷ்மியும் அங்கே வஸிப்பதற்கு வந்து சேர்ந்தாள். கண்ணன் குழந்தையாயிருக்கும்போது சில அஸுரர்களைக் கொன்றான். ஒருநாள் பூதனை என்கிற பேய்ச்சி மிகுந்த அழகுள்ள ரூபத்தை எடுத்துக்கொண்டு கோகுலத்துக்கு வந்து, நந்தன் வீட்டில் புகுந்து, கண்ணனைத் தன் மடியில் வைத்துக் கொண்டாள். அவள் அழகைக்கண்டு மயங்கி யசோதையும் ரோஹிணியும் அவளைத் தடுக்கவில்லை. அவள் விஷம் கலந்த தன் ஸ்தனத்தைக் குழந்தைக்கு கொடுத்தாள். கண்ணன் இரண்டு கைகளாலும் அதைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு அவளுடைய விஷப்பாலுடன் அவள் உயிரையும் குடித்துவிட்டான். அவள் விடு விடு என்று சொல்லிக் கொண்டு கீழே விழுந்து இறந்தாள். குழந்தைக்கு ஒரு கெடுதியும் உண்டாகவில்லை. அவனுக்கு வேண்டிய ரக்ஷையைச் செய்தார்கள்.

சகடவசுரருடல் வேறுப்பிளந்து வீயத்திருக்காலாண்ட பெருமானே (6—9—4).

14. கண்ணனை வெளியே கொண்டுபோகும் காலம் வந்து, அதுவும் அவன் பிறந்த நாளாயிருந்தபோது, அவனுக்குத் திருமஞ்ஜனம்செய்து, பிராம்மணர்களைக்கொண்டு ஆசீர்வாதம் செய்வித்து, அவனுக்குப் பாலைக்கொடுத்து யசோதை அவனைத் தொட்டிலில்

தூங்கவைத்தாள். அந்த உத்ஸவத்திற்காக வந்தவர்களை அவள் உபசரித்துக்கொண்டிருக்கும்போது, கண்ணன் தொட்டிலுக்கு மேலேயிருந்து மெல்ல இறங்கிவந்த சகடாஸுரனைப் பசித்து பாலுக்கு அழுகிற வியாஜத்தாலே திருவடியால் உதைத்துத் தூள் தூளாய்ப் பண்ணிவிட்டான். அவைகள் கீழே விழுந்த சப்தத்தைக் கேட்டு நந்தனும் மற்றவர்களும் வந்து பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். இது கண்ணன் வேலையென்று அங்கிருந்த குழந்தைகள் சொன்னதை அவர்கள் நம்பவில்லை.

புணரேய் நின்ற மரமிரண்டின் நடுவேபோன முதல்வாவோ (6—10—5).

15. ஒருநாள் யசோதை தயிர் கடையும்போது, பசித்து அழுத கண்ணனை மடியில்வைத்துக்கொண்டு ஸ்தன்யம் கொடுத்துக் கொண்டிருந்தாள். அப்போது அடுப்பில் வைத்திருந்த பால் பொங்குவதைப் பார்த்துக்குழந்தையைக் கீழேவிட்டுவிட்டுப்பாலை இறக்கப் போனாள். கண்ணன் கோபமுள்ளவன் போலத் தயிர்ப் பானையை உடைத்து, அதிலிருந்த வெண்ணெயை எடுத்துக்கொண்டு ஓர் உள்ளுக்குப்போய் அதைத்தான் சாப்பிட்டு ஒரு குரங்குக்கும் கொடுத்துக்கொண்டிருந்தான். யசோதை வந்து பானைஉடைந்திருப்பதைப் பார்த்துச் சிரித்து ஒருகோலை எடுத்துக்கொண்டு அவனிடம் போனாள். அவன் பயந்து ஓடுவதுபோலப் பாவனைபண்ணினான். அவள் கோலை எறிந்துவிட்டு, அவனை ஓர் உரலோடே கட்டிவைத்துவிட்டுத் தன் வேலையைச் செய்யப் போனாள். கண்ணன், உரலோடு தவழ்ந்து போய் இரட்டையான மருதமரங்களின் நடுவே போனான். உரல் மரங்களின் பின்னால் சிக்கிக் கொண்டது, அதைக் கண்ணன் பலத்துடன் இழுக்கையில் இரண்டு மரங்களும் பெரிய சப்தத்துடன் வேருடன் கீழே விழுந்தன. அவைகளிருந்து இரண்டு அழகான யக்ஷர்கள் வெளியே வந்து, நாரதர் சாபத்தாலே தாங்கள் மரங்களாக ஆனதைச் சொல்லி, கண்ணனை வணங்கி ஸ்தோத்ரம்பண்ணி, அவன் அநுமதியின்மேல் தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். இது ஸ்ரீ பாகவதத்தில் சொன்னபடி. இரண்டு மரங்களும் இரண்டு அஸுரர்கள் என்றும் அவர்கள் கண்ணனை நசுக்கப் பார்த்

தார்கள் என்றும், அவன் அதைத் தப்பிப் போனான் என்றும் திருவாய்மொழி வியாக்யானம் சொல்லுகிறது.

களவேழ்வெண்ணெய்தொடுவுண்டகள்வா—(1–5–1)

16. கொஞ்சம் வயதான பிறகு கண்ணன் ஆய்ப் பாடிப் பிள்ளைகளைச் சேர்த்துக்கொண்டு வெண்ணெய் திருடுவது முதலான லீலைகளைச் செய்ய ஆரம்பித்தான். அவைகளைக் கோபிகைகள் "பாலையும் வெண்ணெயையும் திருடிச் சாப்பிடுகிறான்; நல்லவைகளையே தேடுகிறான். பானையில் வெண்ணெய் இல்லாமல் போனால் அதை உடைக்கிறான். கையால் எடுக்க முடியாமல் போனால் உரலையாவது நாற்காலியையாவது போட்டுக்கொண்டு பானைகளிலிருந்து வெண்ணெயை எடுக்கிறான். இருட்டுள்ளே வெண்ணெயை வைத்தால், தன் நகைகளின் காந்தியால் இருட்டைப்போக்கி வேண்டியதை எடுத்துக் கொள்ளுகிறான். அவனை நாங்கள் திருடன் என்று சொன்னால், அவன் நான் தான் வீட்டுக்காரன் என்று சொல்லுகிறான். இவ்வளவும் செய்து விட்டு நல்லபிள்ளைபோல் உன்பக்கத்தில் இருக்கிறானே" என்று யசோதையிடம் சொல்லுவார்கள். யசோதை இதைக்கேட்டுச் சிரிப்பள். குழந்தையினிடம் இருந்த ஆசையால்

'ஆநிரை மேய்த்து' (7–6–2)புள்ளின்வாய் பிளந்து (5–3–8)
கனிந்த விளவுக்குக் கன்றெறிந்த (7–3–5)

17. இதுவரையில் கண்ணன் பிருஹத் வனம் என்கிற இடத்தில் இருந்தான். அங்கே அநேக ஆபத்துக்கள் வந்ததைப் பார்த்து நந்தன் முதலானவர்கள் பிருந்தாவனத்துக்குப் போய் அங்கேயே வஸித்து வந்தார்கள். கண்ணன் பதினோராவது வயதில் மதுரைக்குத் திரும்பிவருகிறவரையில் அங்கேயே இருந்து முதலில் கன்றுகளை மேய்த்துக் கொண்டும், பிறகு மாடுகளை மேய்த்துக் கொண்டும் விளையாடிக்கொண்டிருந்தான். கன்றுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்போது, ஒரு அஸுரன் கன்று ரூபமாய் வந்து கன்றுகளுக்குள்ளே ஒன்றாயிருந்தான். கண்ணன் தெரியாதவன்போல் அவனிடம் போய் அவனுடைய பின் கால்களையும் வாலையும் பிடித்துக் கொண்டு

அவனைப் பல தடவை சுழற்றி ஒரு விளாமரத்தின்மேல் எறிந்தான். அந்த அஸுரன் தன் பெரிய உருவத்தை எடுத்துக்கொண்டு கீழே விழுந்து இறந்தான். மற்றொரு நாள் கண்ணனும் அவன் தோழர்களும் யமுனையில் கன்றுகளுக்குத் தண்ணீர் காட்டப் போனபோது அதின் கரையில் மலைபோலிருந்த கொக்கு ரூபமான ஓர் அஸுரனைக் கண்டார்கள். அவன் கண்ணனிடம் வந்து அவனை விழுங்கினான். கண்ணன் நெருப்பைப்போல் அவன் வாயில் சுட்டபடியால் அவன் கண்ணனை உமிழ்ந்துவிட்டான். அவனுக்கு ஒருகெடுதலும் உண்டாகாததைப்பார்த்து அது தன் மூக்காலே கொல்லவந்தது. கண்ணன் அதன் மூக்கைப் பிடித்து ஒரு பாதியை ஒரு கையிலும், மற்றொரு பாதியை மற்றொரு கையிலும் வைத்துக்கொண்டு ஒரு கோரைப் புல்லை இரண்டாகக் கிழிப்பதுபோல் கிழித்துக் கொன்றுவிட்டான்.

வெம்மா வாய்கீண்ட (1—8—2)

18. கம்ஸன் கண்ணன்தான் தன்னைக் கொல்லப்போகிற தேவகியின் எட்டாவது பிள்ளை என்பதை நாரதரிடமிருந்து அறிந்து அவனைக் கொல்லுவதற்காக, கேசி என்கிற அஸுரனைப் பிருந்தாவனத்துக்கு அனுப்பினான். அவன் மிகவும் பயங்கரமான பெரிய குதிரை ரூபத்தை எடுத்துக் கொண்டு வந்து கண்ணனைத் தேடிக் கண்டு பிடித்து, அவனை முன்கால்களாலே எதிர்த்தான். அவை கள் மேலே படாமல் கண்ணன் தப்பிப்போய், அவனைப் பிடித்துக் கொண்டு அவனை வெகுதூரம் பின்னாலே தள்ளினான். அவன் கீழே விழுந்து உடம்பெல்லாம் வியர்த்து, எழுந்திருந்து மறுபடியும் முன்னாலே வாயைத் திறந்துகொண்டு வந்தான். கண்ணன் அவன் வாயில் தன் இடது கையைச் செலுத்தி, அதைப் பருத்ததாகப் பண்ணினான். அஸுரன் மூச்சுவிட முடியாமல் இறந்தான். இது ஸ்ரீ பாகவதம் சொன்னபடி. ஆழ்வார் "வெம்மாவாய் பிளந்த" என்று சொல்லுகிறார்.

உரவுநீர்ப் பொய்கை நாகம் காய்ந்ததும் (6—4—1)

19. ஒரு நாள் வழக்கம்போல் மாடுகளை மேய்க்கக் காட்டுக்குப் போனபோது, வெய்யிலால் தவிக்கப்பட்டு கோபர்கள் தங்கள் மாடுகளுக்கு யமுனையில் தண்ணீர்காட்டி, தாங்களும் அதின் ஜலத்தைக் குடித்தார்கள். அந்த ஜலமானது காளியன் என்கிற பாம்

பின் விஷத்துடன் கலந்திருந்ததாலே அவர்கள் மூர்ச்சையை அடைந்து கீழே விழுந்தார்கள். கண்ணன் அவர்களைக்குளிரக் கடாக்ஷிக்க அவர்களுக்கு நினைவு திரும்பி வந்தது காளியனை யமுனையிலிருந்து விரட்டுவதற்காக, அதின் கரையிலிருந்த ஒரு கதம்பமரத்தில் கண்ணன் ஏறி அதிலிருந்து காளியன் இருக்கிற மடுவில் வேகமாய்க் குதித்து ஜலத்தைக் கையால் அடித்துக் கொண்டிருந்தான். தன் இருப்பிடத்தைக் கண்ணன் இப்படிக் கலக்குவதைப் பொறுக்காமல் காளியன் கோபித்து மேலே வந்து கண்ணனை மர்மமான இடத்தில் கடித்து அவனைச் சுற்றிக் கொண்டான். அப்போது ஆய்ப்பாடியில் அபசகுனங்கள் காணப்பட்டன. அவைகளைக்கண்டு நந்தன் முதலானவர்கள் பயந்து கண்ணனைத் தேடிக்கொண்டு யமுனைக்கரைக்கு வந்து நடந்ததைப் பார்த்துத் துக்கப்பட்டார்கள். கண்ணன் அதைக் கண்டு தன் உடம்பைப் பெரிதாகப் பண்ணிக்கொண்டு வெளியே வந்துவிட்டான். பிறகு, காளியன் தன் படங்களைத் தூக்கிக்கொண்டு கண்ணனைப் பார்த்துக் கொண்டிருந்தான். கண்ணனும் அவனைச் சுற்றிவர அவனும் தலையினால் அவனுடன் கூடக்கூடப் போனான். இதினால் அவன் களைத்தபோது அவன் படத்தின்மேல் கண்ணன் ஏறிக் கூத்தாட ஆரம்பித்தான். அவனுடைய பாரம் பொறுக்கமுடியாமல் ஒரு படத்தைக் கீழே போட்டு இன்னொரு படத்தை மேலே தூக்கின போது, கண்ணன் அதின்மேல் குதித்தான். இப்படி ஒரு படத்திலிருந்து மற்றொரு படத்தில் குதித்து விளையாடினான். கடைசியில் காளியனுக்குப் பலம் குறைந்து, வாயாலும் மூக்காலும் ரத்தத்தை கக்கிக்கொண்டு முடிந்துபோகும் ஸமயத்தை அடைந்தான். அப்போது அவன் பத்னிகள் குழந்தைகளுடன் மேலேவந்து, கண்ணனை ஸ்தோத்ரம்செய்து காளியனை ரக்ஷிக்கும்படி வேண்டினார்கள். கண்ணனும் அப்படியே செய்து, ரம்யகம் என்கிற தீவிற்குக் காளியன் தன்னைச்சேர்ந்தவர்களுடன் போகவேண்டுமென்று கட்டளையிட்டான். அது முதல் யமுனையின் ஜலம் சுத்தமாய் எல்லாருக்கும் குடிக்கத் தகுந்ததாகிவிட்டது.

குன்றமேந்திக்குளிர் மழை காத்தவன் (3—3—8)

20. கோபர்கள் ஒவ்வொரு வருஷமும் இந்திரனுக்குப் பூஜை

செய்வது வழக்கம். அவன் கர்வத்தைப் போக்குவதற்காகக் கண்ணன் அந்தப்பூஜையைத் தடுத்து கோவர்த்தனம் என்கிற மலைக்கு அந்தப்பூஜையைச் செய்யும்படி செய்தான். இந்திரன் கோபித்துக்கொண்டு மேகங்களை கல்மாரி பொழியும்படி செய்தான். கோபர்களும் மாடுகளும் மிகுந்த கஷ்டத்தை அடையும்போது, கண்ணன் அவர்களிடத்திலிருந்த ப்ரீதியாலும் கருணையாலும் கோவர்த்தனம் என்கிற மலையைத் தூக்கிக் குடைபோலப் பிடித்து அவர்கள் மேல் ஒருசொட்டு மழைஜலமும் விடாதபடி, அவர்களை ரக்ஷித்துக்கொண்டு ஏழுநாள் இருந்தவிடம்விட்டு அசையாமல் இருந்தான். இதைப்பார்த்து இந்திரனும் ஆச்சரியப்பட்டு, கண்ணனின் மஹிமையைத் தெரிந்துகொண்டு அவன் திருவடிகளில் விழுந்து மன்னிப்புக்கேட்டுக்கொண்டான். காமதேனு தன்வம்சத்தில் பிறந்த மாடுகளை கண்ணன் இரக்ஷித்தற்காக ஸந்தோஷப்பட்டு தன்பாலாலே அவனுக்குத் திருமஞ்ஜநம் செய்து, கோவிந்தன் என்கிற திருநாமத்தைச் சாத்திற்று. இந்திரனும் இதைக் கூட இருந்து செய்தான்.

இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவே செய்து விழிக்கும் பிரான் (1—7—5)

21. கண்ணன் கோபாலர்களுடன் விளையாடினதுபோல் கோபிகைகளுடனும் விளையாடினான். கோபிகைகள் கண்ணன் தங்களுக்கு நாயகனாகவேண்டும் என்று ஆசைப்பட்டு, அவர்கள் சேர்ந்து மார்கழிமாதத்தில் ஒரு வ்ரதம் செய்தார்கள். ஒவ்வொரு நாளும் ஸூர்யோதயத்திற்கு முன்னாலே எழுந்து ஒருவரை ஒருவர் எழுப்பி கையைப்பிடித்துக்கொண்டு கண்ணனைப் பற்றிக் கானம்செய்துகொண்டு யமுனைக்குப்போய் அதில் ஸ்நாநம் செய்து காத்யாயநிக்குப் பூஜைசெய்து "நந்தன் குமாரன் எனக்குக் கணவனாகவேண்டும்" என்று ப்ரார்த்தித்தார்கள். இப்படி ஒரு மாதம் நடந்தது. ஒருநாள் கண்ணன் தன்தோழர்களுடன் அந்த இடத்துக்குப்போய் கரையில் வைத்திருந்த பெண்களின் வஸ்திரங்களையெடுத்துக்கொண்டு ஒரு கதம்ப மரத்தின்மேல் ஏறி உட்கார்ந்துகொண்டான். பெண்கள், "எங்கள் வஸ்திரங்களைக்கொடு, நாங்கள் உன்னுடைய வேலைக்காரிகள்" என்று சொன்னார்கள். கண்

ணன், "நீங்கள் என் வேலைக்காரிகளாயிருந்தால் நான் சொன்னபடி செய்யுங்கள். ஒவ்வொருத்தியாய் என்னிடம் வந்து வஸ்திரத்தை வாங்கிக்கொள்ளுங்கள்" என்று சொன்னான். அவர்கள் பெண் குறியை இரண்டு கைகளாலும் மூடிக்கொண்டுவர, வஸ்திரமில்லாமல் ஸ்நாநம்பண்ணின குற்றத்தைப்போக்க அஞ்ஜலி பண்ணவேண்டும் என்று சொல்ல, அவர்கள் ஒருகையாலே பெண்குறியை மறைத்துக்கொண்டு ஒருகையால் அஞ்ஜலிபண்ண, "அதுவும் கூடாது, இரண்டுகைகளாலும் அஞ்ஜலிபண்ணவேண்டும்" என்று சொல்ல, அவர்களும் அப்படியேசெய்து வஸ்திரங்களைப் பெற்றுக்கொண்டார்கள். அவர்கள் போகாமல் அங்கேயே நிற்கையில், கண்ணன் "நீங்கள் ஆசைப்படுவது எனக்குத்தெரியும். வரப்போகிற ராத்ரிகளில் உங்கள் இஷ்டத்தை நிறைவேற்றுகிறேன்" என்று சொல்லி, அவர்களை அனுப்பிவிட்டான்.

கேயத்தீங்குழலூதிற்றும் (6—4—2)
குரவையாய்ச்சியரோடு கோத்ததும் (6—4—1)

22. கண்ணன் மாடுமேய்க்கும் பருவத்தில், மாடுகளை மேய்த்துக்கொண்டிருக்கையில், தோழர்களுடன்விளையாடி வேணுகாநம் பண்ணுவன். அதைக்கேட்ட கோபிகைகளின் மனது அவனிடம் போய்ப்படிந்து, அவன் வேணுகாநம் பண்ணினதாலே எல்லாருடைய மனதையும் இழுப்பதை ஒருவருக்கு ஒருவர் சொல்லிக்கொண்டு பகலைப் போக்குவார்கள். மழைகாலம்போனபிறகு இராத்திரியில் சந்திரன் உதயமானபோது காட்டில் கண்ணன் வேணுகாநம் பண்ணினான். அதைக்கேட்டு கோபிகைகள், அவரவர்கள் செய்துகொண்டிருந்த வேலைகளை அவைகள் முடிவதற்கு முன்னால் விட்டுவிட்டு, தங்களைச் சேர்ந்தவர்கள் தடுத்ததையும் மீறித் தனித்தனியே காட்டிற்குக் கண்ணனிருக்குமிடம் போனார்கள். கண்ணன் வந்த கோபிகைகளைப்பார்த்து "காட்டின் அழகைப்பார்க்க வந்தீர்களா? அதைப்பார்த்தாய்விட்டதா. ராத்திரியில் காட்டில் இருப்பது தகுந்தது அன்று. உங்களைச்சேர்ந்தவர்கள் உங்களைப்பற்றி விசாரப்படுவார்கள். ஆகையால், திரும்பிப்போங்கள்" என்று சொன்னான். கோபிகைகள் திரும்பிப்போகாமல் மிகுந்த வருத்தத்துடன் கண்ணனுக்குப் பதில் சொன்னார்கள். அவன் அவர்களை அங்கீகரித்து ஸந்தோஷப்படுத்தினான்.

23. கோபிகைகளுக்குக் கண்ணனிடமிருந்த ஆசையும் அவனிடம் செல்லப் பரபரப்பும் சொல்லப்பட்டன. அவனைவிட்டுப் பிரிந்தகாலத்தில் அவர்களுக்கு உண்டான துக்கத்திற்கு அளவில்லை. கோபிகளுக்குக் கண்ணன் தங்களிடம் காட்டும் பிரீதியைப்பார்த்து,உலகத்திலுள்ள ஸ்திரீகளைக்காட்டிலும் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று கர்வமுண்டாயிருந்தது. அதைப்போக்க, ஒரு ராத்திரியில் அவர்களுடன் விளையாடுகையில் கண்ணன் திடீரென்று மறைந்து விட்டான். அவர்கள் துக்கஸமுத்திரத்தில் மூழ்கி, வீட்டுக்குத் திரும்பிப்போகவேணுமென்கிற எண்ணமில்லாமல் அவனைத்தேடி அவனைக்காணாமல், தங்களைக் கண்ணனாக பாவித்துக்கொண்டு அவன் செய்த லீலைகளை அநுகாரம் பண்ணினார்கள். மறுபடியும் தேடிச் சந்திரன் அஸ்தமித்தபிறகு ஒரு மணற்குன்றுக்கு எல்லாரும் போய், கண்ணன் வரவை ஆசைப்பட்டு கானம் பண்ணினார்கள். இது கோபிகாகீதை என்று சொல்லப்படுகிறது. அவர்கள் துக்கத்தைப்பார்த்துக் கண்ணன் மந்தஹாஸத்துடன் வந்து அவர்களை ஸமாதானம் பண்ணினான்.

24. இப்படிக் கண்ணன் கோபிகைகளுடன் ராத்திரிகாலங்களில் விளையாடுகையில் ராஸக்ரீடை என்பதையும் செய்தான். அதாவது கோபிகைகள் ஒருமண்டலமாயிருந்து நர்த்தனம்செய்தார்கள். கண்ணன் இரண்டு இரண்டு கோபிகைகளுக்கு நடுவில் இருந்து தன்பக்கத்திலிருந்த கோபிகையின் கழுத்தைக் கட்டிக்கொண்டு அவர்களுடன்கூட நர்த்தனம் பண்ணினான். இதற்காக எத்தனை கோபிகைகள் இருந்தார்களோ, அத்தனை ரூபங்களை எடுத்துக்கொண்டான். ஸர்வேசுவரனான கண்ணன் மிகவும் தாழ்ந்த கோபிகைகளுடன் நர்த்தனம் பண்ணுவதைப் பார்த்து ஆச்சரியப்பட்டு ஆகாசத்தில் தேவர்கள் கூட்டமாய்வந்து துந்துபிவாத்யம் அடித்தார்கள். புஷ்பங்களை வர்ஷித்தார்கள். கந்தர்வர்கள் தங்கள் மனைவிகளுடன் கண்ணனுடைய ஸ்தோத்ரங்களைக் கானம் செய்தார்கள். இவ்விதமாகக் கண்ணன் ஆச்ரிதர்களை ஸந்தோஷப்படுத்தினான்.

மதியிலேன் வல்வினையே மாளாதோ என்று (1—4—3)

25. கோபிகைகள் கண்ணனிடம் போகும்போது, ஒருகோ

பன் தன் மனைவியை வெளியில் போகாதபடி உள்ளேப்பூட்டிவிட்டான். அவள் கண்ணனையே நினைத்துக்கொண்டு பிராணனைவிட்டு நல்ல கதியை அடைந்தாள்- கண்ணனைவிட்டுப் பிரிந்திருப்பதினால் அவளுக்கு உண்டான துக்கத்தினால் அவள் முன்செய்த பாபங்கள் பொசுக்கப்பட்டன. கண்ணனை மனதாலே கட்டிக்கொண்டு அநுபவித்ததாலே அவள் செய்த புண்யங்களின் பலனும் அநுபவித்தாய்விட்டது. இப்படி இரண்டுவிதமான கர்மங்களும் போய்விட்டபடியால் அவளுக்கு நல்லகதி கிடைத்தது தகுந்ததுதான்.

## கூனே சிதையவுண்டைவில் நிறத்தில் தெறித்தாய் (1-5-5)
## வாரணத்தை மருப்போசித்த பிரான் (2—7—2)

26. கண்ணன் மதுரைக்குத் திரும்பி போகும்காலம் வந்துவிட்டது. அவன் அபிப்ராயத்தை அறிந்த நாரதர், 'ராமனும் கண்ணனும் வஸுதேவரின் பிள்ளைகள். அவர்களைக் காப்பாற்றுவதற்காக வஸுதேவன் தன் ஸ்நேஹிதனை நந்தனிடம் அவர்களை வைத்திருந்தான். கண்ணன்தான் தேவகியின் எட்டாவது பிள்ளை' என்று கம்ஸனுக்குச் சொன்னார். கம்ஸன் மிகுந்த கோபம் கொண்டு வஸுதேவனையும் தேவகியையும் சிறையில் வைத்தான். மல்லயுத்தத்தைப் பார்ப்பது என்கிற வியாஜத்தினால், நந்தனையும் ராமனையும் கிருஷ்ணனையும் வரவழைத்து, யுத்தம் நடக்கும் ஸபைக்குப்போகும் வழியில் குவலயாபீடம் என்கிற யானையை வைத்து அதினால் ராமனையும் கிருஷ்ணனையும் கொல்லவேண்டுமென்றும், அது தப்பினால் சாணூரன் முஷ்டிகன் என்கிற மல்லர்களால் மல்லயுத்தத்தில் அவர்களை முடிக்கவேண்டும் என்றும் ஏற்பாடுசெய்து, அக்ரூரனைக்கொண்டு ராமனையும் கிருஷ்ணனையும் வரவழைத்தான். அவர்கள் ஸாயங்காலத்தில் மதுரைக்கு வந்தார்கள். பட்டணத்தைப்பார்க்க கண்ணன் ராமனுடனும் சில தோழன்களுடனும் அதற்குள் போய்கொண்டிருக்கையில், கம்ஸனுக்குச் சந்தனம் கொண்டு போய்க்கொண்டிருந்த கூனியான ஒரு ஸ்திரீயைக்கண்டு கண்ணன் சந்தனம் கேட்டான். அவள் கண்ணன் அழகைப்பார்த்து ஸந்தோஷத்துடன் சந்தனத்தைக் கொடுத்தாள். கண்ணன் அவள் கால்களைத் தன்திருவடியால் மிதித்துக்கொண்டு இரண்டுவிரலை அவள் மோவாய்க்கட்டையின் கீழ்வைத்து அவள் கூனல் போகும்

படி அவளை நிமிர்த்துவிட்டான். அவள் மிகுந்த அழகுள்ள ஸ்திரீயாளுள். கண்ணன் ஒருமாலாகாரனால் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டு, ஒருபெரிய வில்லை வைத்திருந்த இடத்துக்குப் போய், அதை எடுத்து வளைத்து முறித்துவிட்டுத் தன்னை எதிர்த்து வந்த ஸேனையை நாசம்பண்ணி, அஸ்தமனஸமயத்தில் பட்டணத்திற்கு வெளியேபோய் கோபர்களுடன் சேர்ந்து நன்ருய் தூங்கினான்.

27. மறுநாள் காலையில், மல்லர்கள் சண்டை செய்யும் இடத்திற்குப்போகக் கண்ணனும் ராமனும் வந்து அதின் வாசல்படியில் நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீடம் என்கிற யானையின் பாகனைப் பார்த்து, "யானையை அப்புறப்படுத்து" என்று சொல்ல, இதை அவன் செய்யாமல் கண்ணன்மேல் போய் விழும்படி யானையை நடத்தினான். கண்ணனும் ராமனும் அந்த யானையிடம் கொஞ்சகாலம் விளையாடின பிறகு, கண்ணன் அதைக் கீழே தள்ளித் தன் திருவடியால் மிதித்துக்கொண்டு அதின் தந்தத்தைப் பிடுங்கிக்கொண்டு அதினாலே அந்த யானையையும் அதின்பாகனையும் கொன்ருன். பிறகு, ஒருதந்தத்தைத் தோளிலும், ஒன்றைக்கையிலும் வைத்துக்கொண்டு உள்ளே போனான்.

நிகரில் மல்லரைச் செற்றதும் (6—4—3) சாதுசனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு (3—5—5)

28. உள்ளேபோனவுடன், சாணூரன் கண்ணனைச் சண்டைக்குக் கூப்பிட, கண்ணன் "நாங்கள் சிறுபிள்ளைகள், எங்களுக்குச் ஸமானமான பலமுள்ளவர்களுடன் சண்டைபோடுகிறோம். இதை "ராஜா பார்க்கலாம்" என்று வணக்கமாய் சொல்ல, சாணூரன் "விளையாட்டாக யானையைக்கொன்ற நீ சிறுபிள்ளையா? எங்களுடன் சண்டை போடுவதில் ஓர் அநீதியுமில்லை" என்று சொன்னான். கண்ணன் சாணூரனுடனும் இராமன் முஷ்டிகனுடனும் சண்டைபோட்டார்கள். கண்ணன் கொஞ்சநாழிகை சாணூரனுடன் சண்டைபோட்டு அவனைப் பிடித்து அநேக பிரகாரம் சுழற்றிப் பூமியில் அரைந்துக் கொன்ருன். அதேகாலத்தில், ராமனாலே முஷ்டிகனுக்கும் அதே கதி உண்டாயிற்று. சலனும் தோசலனும் கண்ணனையும், கூடன் இராமனையும் எதிர்த்தார்கள். அவர்

களுக்கும் அதேகதி ஏற்பட, மீதியிருந்த மல்லர்கள் ஓடிவிட்டார்கள். கம்ஸன், "இந்தப் பிள்ளைகளை ஊரைவிட்டு வெளியே துரத்துங்கள். வஸுதேவனையும் என் தகப்பனை உக்ரஸேநனையும் கொல்லுங்கள்" என்று கட்டளையிட்டான். இதைக் கேட்டவுடன், கண்ணன், கம்ஸன் ஸிம்மாஸநத்தில் பாய்ந்து ஏறினான். கம்ஸன் அதை விட்டு ஆகாசத்தில் பருந்தைப்போல் சுற்றினான். கண்ணன், அவன் தலைமயிரைப்பிடித்து இழுத்து அவனைக் கீழேதள்ளி ஸிம்மாஸனத்திலிருந்து தான் அவன்மேலே விழுந்து தன் பாரத்தால் அவனைச் சாகும்படி செய்தான். கம்ஸனுடைய எட்டுத் தம்பிகள் எதிர்த்தார்கள். அவர்களை ராமன் தன் கதையால் முடித்துவிட்டான். கண்ணன் தேவகியையும் வஸுதேவனையும் சிறையிலிருந்து விடுவித்து, மாதாமஹனை உக்ரஸேனனை ராஜாவாகப்பண்ணி, கம்ஸனிடத்தில் பயந்து ஓடிப்போயிருந்த யாதவர்களை வரவழைத்து அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தான். நந்தனை உபசாரம் சொல்லித் திருப்பி அனுப்பிவிட்டான். கண்ணனுக்கும் ராமனுக்கும் உபநயநம் நடந்தது. பிறகு, அவ் விருவர்களும் அவந்தியில் வஸித்த ஸாந்தீபநி என்கிற குருவினிடம் வேதத்தையும் அதின் அங்கங்களையும் அறுபத்துநாலு கலைகளையும் படித்தார்கள். குரு தக்ஷிணையாக ப்ரபாஸ தீர்த்தத்தில் முழுகிப்போன குருவின் பிள்ளையை மீட்டுக்கொண்டு வந்து அவரிடம் கொடுத்தான்.

29. கம்ஸன்மனைவிகளில் இருவர் மகததேசத்து ராஜாவான ஜராஸந்தன் பெண்கள். அவன் பூமியில் யாதவப்பூண்டு இல்லாமல் செய்கிறேன் என்று சொல்லிக்கொண்டு, பெரியஸேனையுடன் மதுரையை எதிர்த்தான். கண்ணனும் ராமனும் அவன் ஸேனையை நாசம் செய்து அவனை ஒருவனாகத் திரும்பிப் போகும்படி செய்தார்கள். மறுபடியும் மறுபடியும் ஜராஸந்தன் பெரிய ஸேனைகளுடன் வந்து மதுரையை எதிர்த்து இப்படியே தோல்வி அடைந்தான். பதினேழாவது தடவை அவன் சண்டைக்கு வருவதற்கு முன்னாலே காலயவனன் என்பவன் சண்டைக்கு வந்தான். கண்ணன், "இங்கே இருந்தால் ஜனங்களுக்குக் அடிக்கடி துன்பம் நேரிடும். இப்போது காலயவனன் வந்திருக்கிறான். நாளைக்கு ஜராஸந்தன் வருவன். ஆகையால், வேறிடத்தை ஏற்பாடு

செய்யவேண்டும்" என்று தீர்மானம் செய்து, மேற்கு ஸமுத்திரத்தின் ஒரு தீவில், த்வஷ்டா என்னும் தேவனால் துவாரகை என்கிற நகரத்தை நிர்மாணம் செய்து, தன் ஸங்கல்பத்தினாலேயே மதுரையிலிருந்தவர்களைத் துவாரகைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தான். இது முடிந்தபின், இக்ஷ்வாகு வம்சத்து ராஜாவான முசுகுந்தனைக் கொண்டு யவனனைச் சாம்பலாகப் பண்ணுவித்து, அவனது ஸேனைகளைக் கலைத்துத் துரத்திவிட்டான். உடனே, ஜராஸந்தன் வர, கண்ணனும் ராமனும் அவனுடன் சண்டை போடாமல் ஓடிப்போய்க் கோமந்தமலையில் ஏறிக்கொள்ள, ஜராஸந்தன் மலையைச் சுற்றிலும் விறகைப் போட்டு அதில் நெருப்பை வைத்து அவர்கள் இறந்து போவார்கள் என்று போய்விட்டான். கண்ணனும் ராமனும் துவாரகைக்கு வந்து சேர்ந்தார்கள். பிறகு, தர்மபுத்ரரின் ராஜஸூய யாகஸமயத்தில் ஜராஸந்தன் பீமஸேனனால் த்வந்த யுத்தத்தில் கொல்லப்பட்டான்.

உருப்பிணி நங்கையணி நெடுந்தோள் புணர்ந்தான் (7—10—6)

30. விதர்ப்பதேசத்தின் ராஜாவின் பெண்ணான ருக்மிணியைச் சிசுபாலனுக்குக் கல்யாணம் செய்துகொடுப்பதாக, அவள் தமையன் ஏற்பாடு செய்து தான் கல்யாணஸந்நாஹம் செய்தான். ருக்மிணிக்கு அதில் இஷ்டம் இல்லை. கண்ணன் வந்து தன்னைப்பாணிக்கிரஹணம் பண்ணவேண்டும் என்று ப்ரார்த்தித்து ஒரு பத்திரிகை எழுதி ஒரு ப்ராம்மணனிடம்கொடுத்து அவனைத் துவாரகைக்கு அனுப்பினாள். கண்ணனும் உடனே அவ்விடம் வந்தான். முஹூர்த்தம் நடக்கவேண்டியநாளுக்கு முதல் நாள் ருக்மிணி அம்பிகையின் கோயிலுக்குப் பூஜைசெய்யப் போய்த் திரும்பிவருகையில் கண்ணன் அவளைத்தூக்கித் தன் ரதத்தில் வைத்துக்கொண்டு தன் ஊருக்குப் புறப்பட்டான். சிசுபாலனுக்கு வேண்டிய அரசர்கள் சண்டைக்கு வர, பின்னாலே வந்த இராமன் அவர்களை அடித்துத் துரத்திவிட்டான். கண்ணன் தன்னைக்கொல்லவந்த ருக்மிணியின் தமையனான ருக்மியைத் தோல்வியை அடைவித்து, துவாரகைக்கு வந்து கிரமமாக ருக்மிணியைக் கல்யாணம் செய்துகொண்டான்.

தளவேழ்முறுவற்பின்னைக்காய் வல்லானாயர் தலைவனாய்
இளவேறேழும் தழுவிய (1—5—1)

31. கோஸலதேசத்து ராஜாவுக்கு ஒரு அழகான பெண் இருந்தாள். அவளுக்கு சூரனான கணவன் வேண்டுமென்று, கொழுத்த ஏழு காளைமாடுகளை எவன் அடக்குகிறானோ, அவனுக்கு இந்தப் பெண்ணைக் கொடுக்கிறது என்று ராஜா விளம்பரம் செய்திருந்தான். கண்ணன் இதைக் கேட்டு அவனிடம் போனான். அந்தப் பெண் கண்ணனைப் பார்த்து அவனை ஆசைப்பட்டாள். கண்ணன் ஏழு ரூபங்களை எடுத்துக்கொண்டு ஏழு காளைமாடுகளையும் அடக்கி, குழந்தை ஒரு பொம்மையை இழுத்துக்கொண்டு வருவது போல அவைகளை இழுத்துக்கொண்டு வந்தான். இராஜா ஸந்தோஷப்பட்டுத் தன் பெண்ணைக் கண்ணனுக்குக் கலியாணம் செய்து கொடுத்தான். இந்தப் பெண்ணை ஆசைப்பட்டு, காளைமாடுகளை அடக்க முடியாமல் தோற்றுப்போன ராஜாக்கள் கண்ணன் ஜயத்தை ஸஹிக்க முடியாமல், அவனோடு சண்டைக்கு வர, கூட இருந்த அர்ஜுனன் அவர்களைத் துரத்திவிட்டான். இந்தப் பெண் நக்னஜித்தின் பெண் ஆனதினால், அவளுக்கு நாக்னஜிதி என்று பெயர். ஆழ்வார் நப்பின்னை என்று அருளிச் செய்கிறார்.

வாணனை ஆயிரம் தோள் துணித்தான் (7—10—7) பரிவின்றி
வாணனைக் காத்துமென்றன்று படையொடும் வந்தெதிர்ந்த திரிபு
ரம் செற்றவனும் மகனும் பின்னு மங்கியும் போர்தொலைய
(3—10—4)

32. பாணாஸுரனுடைய பெண்ணான உஷா என்பவள், தூக்கத்தில் ஒரு மாயாபுருஷன் தன்னுடன் சேர்ந்திருந்ததாக ஸ்வப்நம் கண்டு, கண்விழித்தபிறகு, அவனைக் காணாமல் வருத்தப்பட்டாள். அவள் தோழியான சித்ரலேகை எல்லா ராஜகுமாரர்களுடைய படங்களையும் எழுதிக் காண்பிக்க, கண்ணன் பேரனான அநிருத்தன் படத்தை உஷை பார்த்தபோது, வெட்கத்தாலே தலை குனிந்து அவன்தான் என்று சொன்னாள். சித்ரலேகை அவனை உஷையின் அரண்மனைக்குக் கொண்டுவந்து சேர்த்தாள். அவனுடன் உஷை ஸுகமாய் விளையாடிக்கொண்டிருக்கையில், காவலாளிகளாலே அந்யபுருஷன் தன்பெண்ணின் அந்தப்புரத்தில்வந்திருப்பதைப் பாணன்

அறிந்து, அவனைக் கட்டிச் சிறையில் வைத்தான். இந்த விஷயத்தைக் கண்ணன் நாரதரால் தெரிந்து கொண்டு, பெரிய ஸேனையுடன் பாணனது நகரத்திற்குப் போனான். சண்டை நடந்தது. அதில் கண்ணன் பாணனுக்குத் துணையாகவந்த ருத்திரனுடனும், கிருஷ்ணன்பிள்ளை ப்ரத்யும்நன் ஸுப்பிரமணியனுடனும், ராமன் பாணனின் மந்திரிகளுடனும், ஸாத்யகி பாணனுடனும் சண்டை போட்டார்கள். ருத்ரன் தோல்வி அடைந்து தலை குனிந்து போய்விட்டான். ஸுப்ரமணியன் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு போர்க்களத்திலிருந்து ஓடிப்போனான். பாணன் ஸாத்யகியை விட்டு விட்டு கிருஷ்ணனை எதிர்த்தான். கண்ணன் அவனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் கொன்று, ரதத்தையும் உடைத்தான். பாணன் திரும்பித் தன் பட்டணத்துக்கு ஓடிப்போய் திரும்பிவந்து கண்ணனை எதிர்த்தான். ருத்திரனால் வேண்டப்பட்டுக் கண்ணன் பாணனைக் கொல்லாமல் அவனுடைய ஆயிரம் தோள்களில் நாலைவைத்துவிட்டு மற்றவைகளைத் துணித்துவிட்டான். கண்ணன் அநிருத்தனையும் உஷாவையும் அழைத்துக் கொண்டு துவாரகைக்கு வந்துவிட்டான்.

கேட்பார் செவிசுடு கீழ்மை வசைவுகளே வையும் சேட்பாற் பழம்
பகைவன் சிசுபாலன் திருவடிதாட் பாலடைந்த (7—5—3)

33. தர்மபுத்திரனுடைய ராஜஸூய யாகம் முடிந்த பிறகு, எவருக்கு அக்ரபூஜை செய்கிறது என்று விசாரிக்கப்பட்டது. பீஷ்மர் கண்ணனுக்குத்தான் அதைச் செய்ய வேண்டியது என்று சொல்லி அவனை ஸ்தோத்திரம் பண்ணினார். அப்படியே அவனுக்கு அக்ரபூஜை செய்யப்பட்டது. அதைப் பொறுக்காமல் சிசுபாலன் கண்ணனையும் பீஷ்மரையும் கேட்பவர்கள் காது சுடும்படி வைதான். கண்ணன் பேசவே இல்லை. பாண்டவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் சிசுபாலனைக் கொல்ல ஆயுதங்களை எடுத்துக் கொண்டு கிளம்பினார்கள். சிசுபாலனும் கத்தியையும் கேடகத்தையும் எடுத்துக்கொண்டு அவர்களைப் பயமுறுத்தினான். கண்ணன் பாண்டவர்களைத் தடுத்து தனது சக்ராயுதத்தால் சிசபாலன் தலையை அறுத்துவிட்டான். அவன் உடம்பிலிருந்து ஒரு தீப்பொறி கிளம்பிக் கண்ணன் திருமேனியில் புகுந்தது. சிசுபாலனே முன்னாலே ஹிரண்யகசிபுவாயும் ராவணனாயும் பிறந்து எம்பெருமானால் கொல்

லப்பட்டான். ஆகையால், அவனைப் பழம் பகைவன் என்று பாட்டு சொல்லுகிறது.

தாயஞ் செறு மொருநூற்றுவர் மங்கவோரை வர்க்காய்த் தேச
மறியவோர் சாரதியாய்ச் சென்று சேனையை நாசம் செய்திட்டு
(7—5—9)

34. பாண்டவர்கள் தங்கள் தகப்பன் இறந்த பிறகு காட்டிலிருந்து ஹஸ்திநாபுரிக்கு வந்தார்கள். அவர்கள் பெரிய தகப்பன் மகனான துர்யோதனன் அவர்களைக் கொல்லப் பலவிதமாய் முயற்சி செய்தும் அவர்களுக்கு ஒன்றும் செய்யமுடியவில்லை. பிறகு அவர்களுக்குப் பெரிய தகப்பன் ராஜ்யத்தில் ஒரு பாகத்தைக் கொடுக்க, கண்ணன் உதவியின் மேலே இந்த்ரப்ரஸ்தம் என்கிற நகரத்தை உண்டுபண்ணிக்கொண்டு அதில் ஸுகமாக வஸித்து வந்தார்கள். அவர்களில் மூத்தவனான தர்மபுத்திரன் ராஜஸூயம் என்கிற யாகத்தை நன்றாய்ச் செய்தான். அவர்கள் செல்வத்தைப் பார்த்து துர்யோதனன் பொறாமையுள்ளவனாய்த் தர்மபுத்திரனைச் சூதாட்டத்திற்குக் கூப்பிட்டுத் தன் அம்மானான சகுனியாலே அவனை மோசம் செய்து அவனுடையராஜ்யத்தை அபஹரித்துக்கொண்டான். அவன் பன்னிரண்டு வருஷகாலம் காட்டிலிருந்து ஒருவருஷம் ஒருவருக்கும் தெரியாமல் தம்பிகளுடன் இருந்து, திரும்பிவந்த பிறகு ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுப்பதாகத் துர்யோதனன் ஒப்புக்கொண்டான். அந்தப்படி அவன் நடக்கவில்லை. கண்ணன் தூதுபோயும் அவன் சொன்னதைத் துர்யோதனன் கேட்கவில்லை. இரண்டு கக்ஷிக்காரர்களும் குருக்ஷேத்திரத்துக்குப் போய்ச் சண்டை செய்தார்கள். அப்பொழுது இந்தக் தேசத்திலிருந்த எல்லா ராஜாக்களும் துர்யோதனனுக்கோ, அல்லது தர்மபுத்திரனுக்கோ துணையாகத் தங்கள் தங்கள் சேனைகளுடன் வந்திருந்தார்கள். கண்ணன் பாண்டவர்கள் பக்கத்திலிருந்து அர்ஜுனன் ரதத்தை நடத்திக்கொண்டிருந்தான். அவனுக்குக் குதிரையை ஓட்டுகிற கோல் தவிர வேறு ஆயுதமில்லை. ஆனாலும் தன் ஸங்கல்பத்தாலே பாண்டவர்களையும் வேறு சிலரையும் தவிர மற்ற எல்லாரும் நாசம் அடையும்படி செய்தான்.

35. *இந்தச் சண்டையில், ஒருநாள் அர்ஜுனன் ஜயத்ரதன் என்கிற ராஜாவை ஸூர்யாஸ்தமனத்துக்கு முன்னாலே கொல்லுவதாக ப்ரதிஜ்ஞை பண்ணினான். ஜயத்ரதனைச் சேர்ந்தவர்கள் அவனை மறைத்து வைத்திருந்தார்கள். கண்ணன் தன்னுடைய சக்ரத்தாலே ஸூரியனை மறைத்துவிட, ஜயத்ரதன் அர்ஜுனன் ப்ரதிஜ்ஞை தவறினதாகவும், தான் பிழைத்ததாயும் எண்ணிக்கொண்டு வெளியே வந்தான். அப்போது கண்ணன் சக்ரத்தை எடுத்துவிட்டான். அர்ஜுனன் ஜயத்ரதனைக் கொன்று தன் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றினான். அர்ஜுனனுக்கும் பீஷ்மருக்கும் கடுமையான சண்டை நடக்கையில், பீஷ்மரால் அர்ஜுனன் ஸேனை அடிபட்டு நாலு பக்கமும் ஓடுவதையும் அர்ஜுனன் மெதுவாய்ச்சண்டை செய்வதையும் பார்த்துக் கண்ணன், "பீஷ்மரைக் கொன்று அர்ஜுனனுக்கு ஜயத்தை உண்டுபண்ணுகிறேன்" என்றுசொல்லி, தன் சக்ரத்தை நினைத்தான். உடனே, அது அவன்கையில் வந்துசேர்ந்தது. அதை எடுத்துக்கொண்டு ரதத்தை விட்டுக் கீழே குதித்துப் பீஷ்மரிடம் ஓடினான். அப்போது, அர்ஜுனன் வந்து அவனைத் தடுத்துப் பீஷ்மரைத் தான்கொல்லுவதாக ப்ரதிஜ்ஞை செய்திருந்ததை நிறைவேற்றுவிக்கவேண்டும் என்று ப்ரார்த்தித்தான். கண்ணனும் திரும்பிவிட்டான். இப்படி சக்ரம் எடுக்கிறதில்லை என்று சொன்ன கண்ணனை அதை எடுக்கும்படி பீஷ்மர் செய்தார்.*

*இந்தப்பாரா மஹாபாரதத்தைப் பார்த்து எழுதப்பட்டது. இதில் சொன்ன விஷயங்களை நினைத்து இந்தச் சண்டையை "மாயப்போர்" என்று ஆழ்வார் அருளிச்செய்கிறார்.*

படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனுமுடனேறத் திண்தேர்கடவிச்
சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன்
பிள்ளைகளை உடலோடும் கொண்டு கொடுத்தவனைப்பற்றி
(3—10—5)

36. *த்வாரகையிலிருந்த ஒரு வைதிகப்ராம்மணனுக்குப் பிள்ளைகள் பிறக்கப் பிறக்க இறந்தன. அவன் பிணத்தை எடுத்துக் கொண்டு ராஜாவின் அரண்மனை வாசலில் வந்திருந்து "ராஜாவின் குற்றத்தினால் என் குழந்தை இறந்தது" என்று சொல்லி முறையி*

டுக்கொண்டு வந்தான். கடைசித் தடவையில் அங்கேஇருந்த அர்ஜுநன் பிராம்மணன் முறையிட்டதைக் கேட்டு "அடுத்த பிரஸவ காலத்தில் உன் பிள்ளையை நான் ரக்ஷிக்கிறேன். இல்லாவிட்டால் நான் அக்நிப்ரவேசம் பண்ணுகிறேன்." என்றுசொல்லி அந்த ப்ராம்மணனைத் தேற்றினன். அடுத்த பிரஸவகாலம் கிட்டினபோது, அர்ஜுனன் பாணத்தினால் ஒருவரும் உள்ளே நுழையாதபடி பிரஸவ அறையைச்சுற்றி ஒரு கூடு கட்டினன். பிறந்தகுழந்தை உடனே இறந்தது. முன் தடவைகளில் பிணமாவது இருக்கும். இந்தத் தடயில் அதுவுமில்லை. அர்ஜுனன் எல்லா உலகங்களுக்கும் போய்ப்பிள்ளையைக் காணமல் அக்னிப்ரவேசம் செய்ய யத்தனிக்கையில், கண்ணன் அவனைத் தடுத்து, அவனைத் தன் ரதத்தில் ஏற்றிகொண்டு கிழக்கே போய் ஏழு த்வீபங்களையும் ஏழு ஸமுத்திரங்களையும் லோகாலோக பர்வதத்தையும் தாண்டினன். அதற்கு அப்புறம் ஸூரியனில்லாமையால் இருந்த இருட்டை தன் சக்கரத்தாலே போக்கி, தன்னுடைய லோகத்தை அடைந்து அதிலிருந்த வைதிக பிராம்மணன் பிள்ளைகளைக் கொண்டுவந்து கொடுத்தான். இது பாகவதத்தில் சொன்னபடி. ஆழ்வார் வைதிக ப்ராம்மணனும் கண்ணனுடன் போனதாகவும் போனவிடம் தன்னுடைச் சோதி என்றும் அருளிச்செய்கிறார். தன்னுடைச் சோதி என்பது ஸ்ரீ வைகுண்டம்.

சாயக்குருந்தம் ஒசித்த தமியற்கு (6—6—8)

37. கம்ஸனுல் ஏவப்பட்ட ஓர் அஸுரன் ஒரு குருந்த மரத்தில் ப்ரவேசித்திருந்து, 'கண்ணன் இதில் புஷ்பங்களைப் பறிக்க வருவன், அப்பொழுது நான் முறிந்து கீழே விழுந்து அவனைக் கொல்லுவேன்'' என்று தீர்மானம் செய்துகொண்டிருந்தான். இதையறிந்த கண்ணன் மரத்தை முறித்து அஸுரனைக் கொன்றுவிட்டான். (இது சடகோபராமாநுஜாசார்யாருடைய அஷ்டப்ரபந்த உரையிலிருந்து எழுதப்பட்டது.)

விண்மிசைத் தன தாமமே புக (6—4—10)

38. பாண்டவர்களின் கோபத்தை வியாஜமாக வைத்துக் கொண்டு கண்ணன் பூமியிலுள்ள எல்லா அஸுர ராஜாக்களையும் ஒரே இடத்தில் சேர்த்துப் பாரதயுத்தத்தில் அவர்களை நாசம் செய்வித

தான். யாதவர்கள் மீதியிருந்தார்கள். "என் பலமிருக்கிற வரையில் வேறொருவரும் இவர்களை நாசம் செய்யச் சக்தியிராது. அவர்களுக்குள்ளே கலஹத்தை உண்டுபண்ணி நாசம் செய்விக்கிறேன்" என்று ஸங்கல்பம் செய்தான். ஒரு பிராம்மணனைக் கொண்டு யாதவகுலத்துக்கு ஒருசாபத்தை உண்டுபண்ணி, அதினால் உண்டான உத்பாதங்களைக்கண்டு பயந்த யாதவர்களை ப்ரபாஸ தீர்த்தத்திற்கு அழைத்துக்கொண்டு போய் ஸ்நானத்தையும் தானங்களையும் அவர்கள் செய்யும்படி செய்தான். அவர்கள் போஜனம் செய்து மத்யத்தைப் பானம் பண்ணினார்கள். அவர்களுக்குள். ஒரு கலஹமுண்டாயிற்று. குடிமயக்கத்தாலே ஒருவரையொருவர் இன்னாரென்று அறியாமல் தங்கள் ஆயுதங்களாலும் ஐரிகமென்கிற நாணல்களாலும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு, அநிருத்தன் பிள்ளையான வஜ்ரன் தவிர எல்லாரும் இறந்தார்கள். ராமனும் தன் மனிதஉருவத்தை விட்டுவிட்டான். கண்ணன் ஒரு அரசமரத்தடியில் உட்கார்ந்திருந்து தன்னுடைய ஸ்ரீ வைகுண்டத்துக்குப்போய்த் தன் திருமேனியைப் பரரூபத்துடன் சேர்த்துக் கொண்டான்.

## "வேதமுன் விரித்தான்" (2—10—10)

39. குருக்ஷேத்திரத்திரத்தில் இரண்டு ஸேனைகளும் சண்டைக்கு ஸந்நத்தமாயிருக்கையில் அர்ஜுனன் தன் ரதத்தை நடத்தின கண்ணனைப்பார்த்து "நான் யாருடன் சண்டை போடவேண்டியது என்று பார்க்கவேண்டும். ரதத்தை இரண்டு ஸேனைகளின் நடுவே கொண்டுபோய் நிறுத்து" என்று சொன்னான். கண்ணனும் அப்படியே செய்தான். அர்ஜுனன் கண்ணன் தனக்குத் துணையாயிருப்பதாலே எதிரிகள் நாசம் அடைவது நிச்சயம் என்று எண்ணி, அவர்களில் அநேக பந்துக்கள் இருப்பதைப் பார்த்து அவர்களிடமுள்ள ஸ்நேஹத்தாலும் கருணையாலும் தர்மயுத்தத்தில் எதிரிகளைக் கொல்லுவது தர்மமாயிருப்பது அதர்மம் என்கிற எண்ணத்தாலும் நான் சண்டை போடுகிறதில்லை என்று உட்கார்ந்து கொண்டான்; கண்ணன் திருவடிகளில் ப்ரபத்தி பண்ணினான். அவனை வியாஜமாக வைத்துக்கொண்டு கண்ணன் உலகத்தில் மறைந்துபோயிருந்த

மோக்ஷமார்க்கமான பக்தி யோகத்தையும் அதற்கு வேண்டிய வைகளையும் ஸ்ரீ கீதையில் உபதேசம் செய்தான். (இது கீதா பாஷ்யத்திலிருந்து எழுதப்பட்டது.)

மழுங்காத வைந்நுதிய சக்கர நல்வலத்தையாய்த் தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே (3—1—9)

40. திருப்பாற்கடலால் சூழப்பட்ட த்ரிகூடம் என்கிற மலையிலிருந்து ஒரு யானை தன் தாஹத்தைத் தீர்ப்பதற்காக ஒரு குளத்திற்குப் போய்த் தாஹத்தைத் தீர்த்துக்கொண்டு அதில் மூழ்கித் தன் சிரமத்தையும் போக்கிப் பெண்யானைகளையும் யானைக்குட்டிகளையும் கழுவிக்கொண்டிருந்தது. அப்போது அந்தக் குளத்திலிருந்த ஒரு முதலையானது அதன் காலைப் பிடித்துக்கொண்டது. முதலை யானையைத் தண்ணீருக்குள் இழுக்க, யானை அதைக் கரையில் இழுக்க, இப்படி இரண்டும் ஓர் ஆயிரம் வருஷம் சண்டை போட்டுக்கொண்டிருந்தன. கடைசியில் யானைக்குப் பலம் குறைந்து, தன்னைத் தானுக ரக்ஷித்துக்கொள்ள முடியாது என்று தீர்மானம் பண்ணி, புண்யத்தினால் எம்பெருமானைத் தவிர வேறு ரக்ஷகன் இல்லை என்கிற அறிவு வந்து, முன் பிறப்பில் தான் கற்றிருந்த ஒரு மந்திரத்தை ஜபித்து, எம்பெருமானை உரத்த குரலால் கூப்பிட்டது. அவனும் கருடன் மேல் ஏறிக்கொண்டு வந்து யானையைக் கரையில் இழுத்துத் தன் சக்ரத்தினால் முதலையின் தலையை அறுத்து யானையை விடுவித்தான்.

"இருபத்தோர் காலரசுகளைகட்ட" (6—2—10)

41. இதுவரையில் எம்பெருமானே தானே அவதாரம் செய்துபண்ணின வியாபாரங்கள் சொல்லப்பட்டன. முன்னாலே பிறந்திருக்கிற ஜீவன்களுக்குள்ளே பிரவேசித்து அவர்களைக் கொண்டு தன் இஷ்டத்தை அவன் முடித்துக் கொள்வதுமுண்டு. இப்படி பரசுராமனுக்குள்ளே அநுப்ரவேசித்து, அஸுரராஜாக்களை இருபத்தொரு தடவை ஸம்ஹாரம் செய்தான். இதற்குக் காரணம் ஒருநாள் கார்த்தவீர்யார்ஜுனன் என்கிற ராஜா வேட்டையாடப் போய்ப் பரசுராமன் தகப்பனான ஜமதக்நி என்கிற ருஷியின் ஆச்ரமத்திற்கு வந்தான். ஒரு பசுவின் உதவியைக் கொண்டு அவனுக்கு அவர் விருந்து அளித்தார். ராஜா அந்தப் பசுவை ஆசைப்பட்டு ருஷியின் பெ

ருமையை அறியாமல் அதைப் பலாத்காரமாகத் தன்பட்டணத்துக்குக்கொண்டு போனான். அப்போது பரசுராமன் அவ்விடமில்லை. அவன் ஆச்ரமத்துக்கு வந்து ராஜா செய்ததை அறிந்து, அவன் நகரத்துக்குப்போய் அவன் அனுப்பிய பதினேழு அக்ஷௌஹிணி ஸேனையையும் அவனையும் கொன்று பசுவைத் திருப்பிக்கொண்டு வந்தான். அவன் செய்த வேலையை அவன் தகப்பனார் ஒப்புக்கொள்ளவில்லை. ராஜாவைக் கொன்ற தோஷத்துக்காக ஒரு வருஷம் தீர்த்தயாத்திரை போகச் சொன்னார். பரசுராமன் அதை அப்படியே செய்தான். பிறகு, பரசுராமன் ஆச்ரமத்திலில்லாத காலத்தில் கார்த்தவீர்யார்ஜுனன் பிள்ளைகள் ஆச்ரமத்துக்கு வந்து ஜமதக்நியைக் கொன்றுவிட்டார்கள் அவருடைய பத்நியின் அழுகைக் குரலைக் கேட்டு, பரசுராமன் அவர்களைக் கொன்று அதனுடன் கோபம் அடங்காமல் ராஜாக்களை இருபத்தொரு தடவை ஸம்ஹாரம் செய்தான்.

கள்ளவேடத்தைக் கொண்டுபோய்ப்புரம்புக்கவாறும் கலந்த சுரரை
உள்ளம் பேதம் செய்திட்டுயிருண்ட உபாயங்களும் (5—10—4)

42. எம்பெருமான் புத்தனாக அவதாரம் செய்து அஸுரர்கடைய திரிபுரத்தில் புகுந்து அவர்களுடன் சேர்ந்து வேதத்தில் அவர்களுக்குச் சிரத்தை யில்லாமல் பண்ணி அவர்களை நாசம் செய்தான்.

கடலாழி நீர் தோற்றி அதனுள்ளேகண்வளரும் (1—4—10)

43. எம்பெருமான் ஸமஷ்டி ஸ்ருஷ்டியைச் செய்த பிறகு பஞ்சபூதங்களை ஒவ்வொன்றில் மற்றவைகளைச் சேர்த்து, ஜலமான ஆவரணத்தில் ஓர் ஆலிலையில் படுத்துக்கொண்டிருந்தான். சேர்க்கப்பட்ட தத்துவங்கள் அவனுடைய நாபியில் தாமரை மொட்டின் ஆகாரமுள்ளதாய் தோன்றிற்று. அது பெரிதாவதற்கு ஆயிரம் வருஷங்கள் ஆயின. அதில் பிரம்மா தோன்றினான்.

தேவர்கள் வந்து தங்கள் குறைகளைச் சொல்லிக் கொள்ளும்படி திருப்பாற்கடலில் ஆதிசேஷன் மேல் படுத்திருப்பது "எம் ஆழியம்பள்ளியாரே" (2-2-6.) என்று இவை முதலான இடங்களில் சொல்லப்படுகிறது.

அடுத்த கீழே சொன்ன இரண்டு அவதாரங்களும் வ்யூஹ அவதாரங்கள். மற்றவை விபவாவதாரங்கள்.

புரமேகாருமூன்றேரித்து (1—1—8)

44. தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் சண்டையுண்டான காலத்தில் அஸுரர்கள் இரும்பினால் ஒரு கோட்டையையும், வெள்ளியால் ஒரு கோட்டையையும், தங்கத்தால் ஒரு கோட்டையையும் கட்டிக்கொண்டார்கள். அவர்களைத் தேவர்கள் ஜயிக்க முடியவில்லை. ஆகையால், கோட்டைகளைச் சுற்றிலும் வெகுகாலம் உட்கார்ந்துகொண்டு ஆஹாரம் கோட்டைக்குள் போகாதபடி செய்ய, அஸுரர்கள் பசியினால் கஷ்டப்படும்போது, தேவர்கள் அக்நி ஸோமன் விஷ்ணு என்னும் தேவதைகளை ஒரு பாணமாக்கி, அதை ருத்ரன் என்கிற தேவதையைக் கோட்டையின் மேல் போடும்படி செய்தார்கள். இதனால் கோட்டைகள் உடைக்கப்பட்டன. அஸுரர்கள் அதிலிருந்து துரத்தப்பட்டார்கள். (இது வேதத்தில் சொன்னபடி.) ஸ்ரீ பாகவதத்தில் இதை வேறுவிதமாய்ச் சொல்லியிருக்கிறது. தேவர்களால் தோற்கடிக்கப்பட்டு, அஸுரர்கள் மயனை வேண்டிக்கொண்டார்கள். அவன் தங்கத்தாலே ஒரு கோட்டையையும், வெள்ளியால் ஒரு கோட்டையையும், இரும்பால் ஒரு கோட்டையையும், அவர்களுக்குச் செய்து கொடுத்தான். இந்தக் கோட்டைகள் ஸஞ்சரிக்கும்படியானவைகள். அஸுரர்கள் வருவதையும் போவதையும் ஒருவருக்கும் அறியமுடியவில்லை. அவைகளிலிருந்து அஸுரர்கள் மூன்று உலகங்களையும் ஹிம்ஸை செய்தார்கள். தேவர்களின் வேண்டுகோளின்படி ருத்திரன் அந்தப் பட்டணங்களுக்குப் போய்ப் பாணங்களை வர்ஷித்து, அஸுரர்களை ப்ரஜ்ஞையில்லாமல் கீழே விழும்படி செய்தான். மயன் ம்ருதஸஞ்ஜீவினி (செத்தவனைப் பிழைப்பு மூட்டுவதான) ஒரு கிணற்றில் போட்டு அவர்களைப் பிழைப்பித்தான். ருத்ரன் தன் ப்ரயத்னம் வீணாய்ப் போனதைப்பார்த்து வருத்தப்பட்டான். எம்பெருமான் ஒரு பசு ரூபமாகவும் பிரம்மா அதின் கன்று ரூபமாகவும் கிணற்றுக்குப் போய் அதின் ஜலத்தை ஒரு சொட்டுமில்லாமல் குடித்து விட்டார்கள். பிறகு, எம்பெருமான் ருத்திரனுக்கு ஜயத்துக்கு வேண்டிய ஸாமக்ரிகளைக் கொடுத்தான். ரதம், ஸாரதி, குதிரைகள், யானைகள், வில், கவசம், பாணம் இவைகளைக்கொண்டு ருத்திரன் அபிஜித் என்கிற முஹூர்த்தத்தில் அந்தப் பட்டணங்களைக் கொளுத்திவிட்டான்.

மாபாவம்விட அரற்குப் பிச்சைபெய் கோபால கோளரியேறு
(2—2—2)

45, ஒரு காலத்தில் ருத்திரன் தன்னைப்போல பிரம்மாவும் ஐந்து தலைகளுள்ளவனுயிருப்பதைப் பார்த்து, அவனுடைய ஒரு தலையைக் கிள்ளியெடுத்துவிட அந்தக் கபாலம் ருத்திரன் கையில் ஒட்டிக்கொண்டது. இந்தப் பாபம் தொலைய பிச்சையெடுக்க வேண்டுமென்று தேவர்களும் முனிவர்களும் சொன்னூர்கள். ருத்திரன் அதைச் செய்தும், கபாலம் அவன் கையை விடவில்லை. பிறகு பதிரியிலிருக்கும் எம்பெருமானிடம் போய்ச் பிச்சை கேட்டான். அவனும் அக்ஷயம் என்று பிக்ஷையிடக்கபாலம் நிறைந்து கீழே விழுந்துவிட்டது. எம்பெருமான் தன் வியர்வையால் அந்தக் கபாலத்தை நிறைத்ததாகச் சிலரும், ரக்தத்தால் நிறைத்ததாக வேறு சிலரும் சொல்லுகிறூர்கள். (இது சடகோபராமாநுஜாசாரியருடைய அஷ்டப்ரபந்த உரையிலிருந்து எழுதப்பட்டது.)

---

# அனுபந்தம் VII

## ஆழ்வார் மங்களா சாஸனம் பண்ணின திவ்யதேசங்கள்.

| | | பத்து. | திருவாய்மொழி. |
|---|---|---|---|
| **மலைநாடு** | | | |
| திருவாட்டாறு | அருள்பெறுவார் | 10 | 6 |
| திருவனந்தபுரம் | கெடுமிடர் | 10 | 2 |
| திருச்செங்குன்றூர் | வார்கடா | 8 | 4 |
| திருப்புலியூர் | கருமாணிக்கமலை | 8 | 9 |
| திருவாறன்விளை | இன்பம் பயக்க | 7 | 10 |
| திருவண் வண்டூர் | வைகல் பூங்கழிவாய் | 6 | 1 |
| திருவல்லவாழ் | மானேய் நோக்கு | 5 | 9 |
| திருகடித்தானம் | எல்லியும் | 8 | 6 |
| திருக்காட்கரை | உருகுமால் நெஞ்சம் | 9 | 6 |
| திருமூழிக்களம் | எங்கானல் | 9 | 7 |
| திருநாவாய் | அறுக்கும் | 9 | 8 |
| **திருநெல்வேலி** | | | |
| ஸ்ரீவரமங்கல நகர் | நோற்ற நோன்பு | 5 | 7 |
| திருக்குறுங்குடி | எங்ஙனேயோ | 5 | 5 |
| திருநகரி | ஒன்றும் தேவும் | 4 | 10 |
| திருப்புளிங்குடி | பண்டைநாளாலே | 9 | 2 |
| தென்திருப்பேரை | வெள்ளைச்சுரிசங்கு | 7 | 3 |
| திருக்கோளூர் | உண்ணுஞ் சோறும் | 6 | 7 |
| தொலைவில்லி மங்கலம் | துவளில் | 6 | 5 |
| **மதுரை** | | | |
| திருமாலிருஞ்சோலை | கிளரொளி | 2 | 10 |
| ,, | செஞ்சொற் கவிகாள் | 10 | 7 |
| திருமோகூர் | தாளாமரை | 10 | 1 |

| | | | |
|---|---|---|---|
| | திருச்சிறுப்பள்ளி | | |
| திருவரங்கம் | கங்குலும் பகலும் | 7 | 2 |
| | தஞ்சாவூர் | | |
| திருப்பேர்(அப்பக் குடத்தான்) | திருமாலிருஞ்சோலைமலை | 10 | 8 |
| திருக்குடந்தை | ஆராவமுதே | 5 | 8 |
| திருவிண்ணகரம் | நல்குரவும் | 6 | 3 |
| திருக்கண்ணபுரம் | மாலை நண்ணி | 9 | 10 |
| | சித்தூர் | | |
| திருமலை | ஒழிவில்காலம் | 3 | 3 |
| ௸ | உலகமுண்ட | 6 | 10 |

குறிப்பு. (1) ஸ்ரீ வைகுந்தமும் வரகுணமங்கையும் திருப்புளிங்குடித் திருவாய்மொழியில் 4வது பாட்டில் மாத்திரம் சொல்லப்படுகின்றன.

(2) பெருங்குளம் (குளந்தை) 8ம் பத்து 2ம் திருவாய் 4ம் பாட்டில் மாத்திரம் சொல்லப்படுகிறது.

(3) திருமலையை, கண்ணார்வேங்கட (1–8–3); தன் திருவேங்கடத்துனின்றாய் (2–6–9); தண் வேகங்டமென்கிறாய் (2–6–10); வட திருவேங்கடத்தெந்தை. (3–5–8); வண்டுமுரல் திருவேங்கடத்து (3–9–1); வேங்கடவாணனை (8–2–1); நல்வேங்கடவாணனை (6–6–11) நின்ற வேங்கடம் (9–3–8) என்று பல தடவை ஆழ்வார் அனுஸந்தானம் பண்ணுகிறார்.

(4) திருக்குடந்தையை "வல்லிவளவயல் சூழ்குடந்தை மாமலர்க்கண்வளர்கின்றமாலே" (8–2–6). குடிந்தையெங்கோவலன் (10–9–7) என்றும், திருக்குறுங்குடியை நம்பியைத், தென் குறுங்குடி நின்ற (1-10-9) என்றும், கண்ணன்குறுங்குடிமெய்ம்மையே (3–9–2) என்றும் அனுஸந்தானம் பண்ணுகிறார்.

(5) திருக்கோளூரையும், புளிங்குடியையும் 8–3–5ல் 'கொடியார்மாடக்கோளூரகத்தும் புளிங்குடியும்' என்று மறுபடியும் சொல்கிறார்.

(6) திருவண்பரிசாரத்தை 'அங்குமிங்கும்'' (8–3)என்கிற திருவாய்மொழியில் 7-வது பாட்டில் அநுஸந்தானம் பண்ணுகிறார்.

